# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

ஒன்பதாம் மடலம் - முதற் பாகம்

[இணைப்பு மடலம்]

(அ-கௌ)

## A Comprehensive Etymological Dictionary of the Tamil Language

[Supplementary Volume]

Volume IX - Part-I

முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு
2010

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

ஒன்பதாம் மடலம் – முதற் பாகம்
[இணைப்பு மடலம்]

(அ–கௌ)

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language
[Supplementary Volume]
Volume IX - Part-I

முனைவர் இரா. மதிவாணன்
மதிப்புறு இயக்குநர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட
இயக்கக வெளியீடு
தமிழ்நாடு அரசு
2010

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 29.

முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு 2041 ஆடவை (ஆனி) (June 2010)

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. IX, Part-I



விலை : உருபா 400/–

Price : Rs. 400/-

குறியீட்டெண் : Colon No.P J1-J, 314"K.M4

வெளியிட்டோர் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
அண்ணாநகர், சென்னை–600 040.

Published by :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

அச்சீடு :

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Printed at :

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

நூல் கிடைக்குமிடங்கள் :

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்,
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்,
அண்ணாநகர், சென்னை–600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை–600 113.

Copies available at :

Directorate of Tamil Etymological Dictionary Project,
C- 48, Ist Floor, T.N.H.B.,
IInd Avenue, Anna Nagar,
Chennai - 40.

International Institute of Tamil Studies,
Tharamani, Chennai - 113

மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

# கலைஞர் மு.கருணாநிதி



செம்மொழிச் செம்மல் கலைஞர் பெருந்தகையே
செம்மாந்த செந்தமிழர் பாவாணர் நுண்ணோக்கில்
சீர்கொள் அகரமுதலி வெளியிட்டுப்
பேர்கொண்டீர் வாழ்க நெடிது!

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 26.5.2010

## வாழ்த்துரை

செந்தமிழ் மொழியின் வேர்ச்சொல் வித்தகர் மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, 1974ஆம் ஆண்டில், அன்றைய திராவிட முன்னேற்றக் கழக அரசு காலத்தில் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியை 12 மடலங்களில் 31 தொகுதிகளாகக் கலைக்களஞ்சிய அமைப்பில் விரிவாக உருவாக்கி வெளியிடத் திட்டமிட்டது. அதன்படி, இதுவரை, 11 மடலங்களில் 28 தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. இந்த நூல் தொகுதிகளில் விடுபட்ட சொற்கள் தொகுக்கப்பட்டு, ஒன்பதாம் மடலத்தின் இணைப்பாக இரண்டு பாகங்கள் 29, 30 ஆகிய இரு தொகுதிகளாக உருவாக்கப்பட்டுள்ளன. இந்த இரு நூல்களும் கோவை மாநகரில் நடைபெறும் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் வெளியிடப்படுவது மிகுந்த பாராட்டுக்குரியது.

இதனைத் தொடர்ந்து, 12வது மடலமாக, அதாவது, 31ஆம் தொகுதியாகச் 'சொற்பிறப்பு நெறிமுறைகள்' என்னும் பெயரில் இறுதித் தொகுதி விரைவில் வெளியிடப்படவுள்ளது.

கழக அரசு அமையும் காலங்களில் மட்டுமே கனிவோடு கவனம் செலுத்தப்பட்டு, கடந்த 36 ஆண்டுகளாக நடைபெற்று வரும் செந்தமிழ்ச் சொற்பிறப்புப் பேரகரமுதலி திட்டத்தின் நூல்கள் அனைத்தும் அன்னைத் தமிழின் அரிய அணிகலனாகவும், ஆராய்ச்சியாளர்களுக்கு ஏற்றதோர் கருவூலமாகவும் திகழும் என உறுதியாக நம்புகிறேன். இப்பணியில் ஈடுபட்ட தமிழறிஞர் பெருமக்கள் அனைவரையும் உளமாரப் பாராட்டி வாழ்த்துகிறேன்.

(மு.கருணாநிதி)

# மொழிஞாயிறு
# ஞா.தேவநேயப்பாவாணர்



ஞால முதன்மொழி எந்தமிழே என்றென்று
சால நிறுவிய பாவாணச் செம்மலே
நின்று நிலவும் சொற்பிறப்பு காட்டியதால்
பொன்றாது நின்றதும் பேர்!

க. முத்துசாமி, இ.ஆ.ப.,
அரசு முதன்மைச் செயலாளர்.

தமிழ் வளர்ச்சி,அறநிலையங்கள் (ம)
செய்தித் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை—600 009.

நாள்: 02-06-2010

# அணிந்துரை

"நன்று தமிழ் வளர்க ! – தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க! – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

என்று பாவேந்தர் பாரதிதாசன் பாடியதைப்போன்று எல்லாக் கலைகளும் செம்மொழித் தமிழில் சிறப்புற வளர்ந்தோங்கும் காலம் தமிழ்நாட்டில் வந்தாயிற்று. **மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர்** அவர்களின் சீரிய முயற்சியினால் 'தமிழ்' இன்று செம்மாந்த நிலையை அடைந்திருக்கின்றது.

நம் செம்மொழித் தமிழுக்கு மேலும் சிறப்பு சேர்க்கும் வண்ணம் தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையான பணிகளில் அகரமுதலி உருவாக்குவதும் தலைசிறந்த தமிழ்ப்பணியாகப் போற்றப்படுகிறது. தனித்தமிழ் காத்த மொழிநூலறிஞர் ஞா. தேவநேயப் பாவாணரின் சொற்பிறப்பு ஆராய்ச்சி அவரது 'ஞாலமுதன்மொழிக் கொள்கை' என்னும் அடிப்படையில் அமைந்தது. இக்கொள்கைக்கு அண்மைக் காலத்தில் உலக மொழியியல் அறிஞர்களிடையில் ஊக்கம் தருவோர் எண்ணிக்கை விரைவாகப் பெருகி வருகிறது. அத்தகு பெருமைக்குரிய பாவாணர் செய்த அரிய ஆராய்ச்சியின் அடிப்படையில்தான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் **மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர்** அவர்களால் உருவாக்கப்பெற்று, அவர்கள் வழி நடத்தியவண்ணம் அகரமுதலியின் பன்மடலங்களாகப் பாவாணர் கருதியவண்ணமே வெளிவந்துள்ளன. அத்தகைய தொடர்முயற்சியில் இவ்வியக்ககத்தின் வாயிலாக வெளிவந்த அகரமுதலித் தொகுதிகளில் விடுபட்டவையெல்லாம் தொகுக்கப்பெற்று இப்போது இரண்டு தொகுதிகள் கொண்ட இணைப்பு மடலமாக வெளிவந்துள்ளது. அவற்றை **மாண்புமிகு முதலமைச்சர் கலைஞர்** அவர்கள் உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாட்டில் தம் பொற்கரங்களால் வெளியிட இருக்கின்றார்கள் என்பது நமக்குப் பெருமகிழ்ச்சியளிக்கின்றது. என்றென்றும் பீடு பெற பாடாற்றித் தமிழுக்குச் செம்மொழி அரியணை தந்த **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்கள் ஊட்டிய ஊக்கம் அகரமுதலி **30** தொகுதிகளாக மலர்ந்துள்ளது.

இணைப்பு மடலங்களுக்குப் பின்னர் வெளிவரவேண்டிய சொற்பிறப்பு நெறிமுறை மடலத்தையும் விரைந்து முடித்து வெளியிடும் பணி நடைபெற்று வருகிறது. இத்தகைய சீரிய முயற்சியில் ஈடுபட்டுள்ள செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் மதிப்புறு இயக்குநரையும் மற்றும் பதிப்பாசிரியர்கள், சிறப்புநிலைத் தொகுப்பாளர்கள், அனைத்துப் பணியாளர்களையும் சிறப்பாகப் பாராட்டுகிறேன்.

(க. முத்துசாமி)

# பதிப்புரை

செம்மொழித் தமிழின் சீரார்ந்த முன்மைக்கும் தொன்மைக்கும் அடிப்படைக் கருவி நூலாக இருப்பது செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி. உலகில் இதுவரை வெளிவந்துள்ள சொற்பிறப்பியல் அகரமுதலிகள் அனைத்தினும் மேம்பட்டதாகத் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி விளங்க வேண்டும் எனப் பேராசான் மொழிஞாயிறு ஞா.தேவநேயப்பாவாணர் கனவு கண்டார். அதனை அரசின் திட்டமாக்கிப் பாவாணருக்கென்றே தனித்த ஓர் இயக்ககத்தை உருவாக்கிய **மாண்புமிகு தமிழக முதலமைச்சர் முத்தமிழ்க் கலைஞர்** அவர்கள் பாவாணரின் நெட்ட நெடுங்கனவை நீடு நிலைத்த நனவாக்கியதை அகரமுதலி தொகுப்புப் பணி நிறைவுற்று வெளிவந்துள்ள 30 தொகுதிகளில் இன்று காண்கிறோம். இறுதித் தொகுதியான சொற்பிறப்பு நெறிமுறைகள் 31 ஆம் தொகுதியாக விரைவில் வெளிவரவுள்ளது.

உலக மொழிகளில் ஆங்கிலம், பிரஞ்சு, செருமானியம், உருசியம், சீனம், இலத்தீனம், சமற்கிருதம் ஆகியவற்றில் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளிவந்துள்ளன. இந்திய மொழிகளில் தெலுங்கு, நேப்பாள மொழிகளில் வெளிவந்தவை சிறப்பாக அமையவில்லை. குடும்ப மொழிகளுக்காக வெளிவந்த பரோஎமனோவரின் Dravidian Etymological Dictionary (DED). அல்தாய்க்கு மொழிகளுக்காக வெளிவந்த Etymological Dictionary of Altaic languages (EDAL). பின்லாந்து பேராசிரியர் அன்னு பனு அகோலா வெளியிட்ட SUDURALJAN (சுமேரியன் திரவிடம் ஊரல் மொழிகள் சப்பானியம் ஆண்டியன் இன்கா மொழி) அகரமுதலி ஆகியவை ஒப்பீட்டு அகரமுதலிகளாக (Comparative Dictionary) உள்ளன. இவற்றில் சொற்பிறப்பின் மூலத்தைத் தேடும் முயற்சி முழுமையாக எடுக்கப்படவில்லை.

12000 பக்கங்களில் இரண்டு இலக்கம் சொற்களை உள்ளடக்கி அனைத்துச் சொல்லாட்சிகளுக்கும் வேர்மூலமுட இனச்சொல்வகைப்பாடும் காட்டும் முயற்சியில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி வீறார்ந்த வெற்றி நடை பயின்றுள்ளது. பல்வேறு காரணங்களால் அகரமுதலிப் பணி தொடர்ந்த இடர்ப்பாடுகளுக்கு உள்ளாகியது. திட்டமிட்ட கால வரம்புக்குள் நிறைவுறுத்த இயலாமல் வேறுவழியின்றி காலநீட்டிப்பை எதிர்கொள்ள நேர்ந்தது வருந்தத்தக்கதாயிற்று. நெடுங்காலமாகப் புலமை நலம் பொதுளிய திறப்பாடு மிகுந்த இயக்குநர் பணியிடம் நிரப்பப்படவில்லை. அரசு செயலாளரே கூடுதல்

பொறுப்பு இயக்குநராக நீடிக்க நேர்ந்ததாலும் புலமை சான்ற இயக்குநரின் ஒரு சீரான மேற்பார்ப்பு இல்லாத நிலையிலும் அகரமுதலிச் சொற்பதிவுகளிலும் சீரான பதிப்புப் பணியிலும் குறைபாடுகள் காணப்படுகின்றன என்பது உண்மையே. இக்குறைபாடுகளைக் களைந்து ஆக்சுபோர்டு ஆங்கில அகரமுதலி போல் பன்னிரு பெருந்தொகுதிகளில் திருந்திய பதிப்பு Revised edition of (TED) Tamil Etymological Dictionary வெளியிட அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.

"வினைச் சொற்களின் பெருக்கம் செம்மொழிச் சிறப்பை நிலைநாட்டும். அத்தகைய வினைச்சொல் பெருவளத்தை தமிழில் நான் காண்கிறேன்" என 'அருள்மிகு வினோபா அடிகள் குறிப்பிட்டார். அது உலக மொழிகளில் வேர்வீழ்த்து ஐரோப்பிய மொழிகளில் விழுதூன்றியதைக் கால்டுவெல் பெருமகனாரும் யாழ்ப்பாணத்து நல்லூர் ஞானப்பிரகாச அடிகளாரும் வலியுறுத்தினர். பாவாணர் அதனை மெய்ப்பித்துக் காட்டினார். அகரமுதலியில் செம்மொழித் தமிழின் வேர்வளம் விளக்கப்பட்டுள்ளது.

திராவிடமொழிகளிலும் ஏனைய உலகமொழிகளிலும் இனச்சொல் காட்டியிருப்பது, படவிளக்கம் தந்திருப்பது, இன்றியமையாத சொற்களுக்கு விரிவான விளக்கம் தந்திருப்பது, பிற அகரமுதலிகளில் காணப்படும் பிழைபாடுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தியிருப்பது, புதிய கலைச் சொற்களைப் படைத்திருப்பது, வடமொழிச் சொல்லாட்சிகளுக்கு நிகரான தமிழ்ச் சொற்கள் தந்திருப்பது, தமிழில் புகுந்துள்ள வேற்று மொழிச் சொற்களைத் தனியாகப் பிரித்து முத்தொகுதி அயற்சொல் மடலமாக வெளியிட்டிருப்பது, ஏட்டில் பயிலாத நாட்டுப்புறத்துத் தமிழ்ச் சொல்லாட்சிகளைத் தேடித் தொகுத்திருப்பது இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் தந்திருப்பது ஆகியவை இந்த அகரமுதலியின் சிறப்புக் கூறுகள் எனலாம்.

எல்லாவற்றுக்கும் மேலாகப் பாவாணர் எண்ணிய வண்ணம் இதுவரை வெளிவந்துள்ள உலகச் சொற்பிறப்பு அகரமுதலிகளில் காணப்படாத சிறப்புக்கூறுகள் பெருமளவில் இந்த அகரமுதலித் தொகுப்புகளில் இடம் பெற்றிருப்பது இத்திட்டப் பணியின் தனிச்சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. இப்பணியில் எங்களை ஈடுபடுத்திய **மாண்புமிகு முதலமைச்சருக்கும்**, தமிழ் வளர்ச்சி அரசு செயலாளருக்கும் என்றும் பொன்றா நன்றியுடையோம். இப்பணியில் அயராது உழைத்த திட்டப்பணி தமிழறிஞர்கள் அனைவருக்கும் நன்றி உரியது.

**இரா. மதிவாணன்**

**மதிப்புறு இயக்குநர்**

# பதிப்புக்குழு

முனைவர் **இரா. மதிவாணன்**, மதிப்புறு இயக்குநர்
தலைவர்–பதிப்புக்குழு

முனைவர் **மு.கண்ணன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **ச. செந்திலாண்டவன்**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

முனைவர் **இரா.கு.ஆல்துரை**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**கா. இளமுருகு**, சிறப்புநிலைத் தொகுப்பாளர்

திரு.**ச.கி. கணேசன்**, சிறப்பு நிலை ஓவியர் – முதனிலை

திரு. **மா. பூங்குன்றன்**, பதிப்பாசிரியர்

திரு.**க.கணேசன்**, பதிப்பாசிரியர்

திரு.**சு.வீரவேலு**, பதிப்பாசிரியர்

திருவாட்டி.**வே.உமாராணி**, உதவிப் பதிப்பாசிரியர்

# அ

**அஃகாக்காலை** *akkākālai,* பெ.எ. (adj.) அளவு குறையாதாயின்; if not diminished. *"ஆய்தம் அஃகாக் காலையான"* (தொல். 2:7).

[அஃகு→அஃகா+காலை]

**அஃகாமை,** *akkāmai,* பெ.(n.) குறையாமை; undiminished. *"அஃகாமை செல்வத்திற்கு யாதெனின்"* (குறள்.178).

[அஃகு+ஆ+மை]

**அஃகி[1]** *akki,* வி.எ. (adj.) அருகி; seldom *"குறித்து எதிர் மொழிதல் அஃகித் தோன்றும்"* (தொல். 22:42).

[அல்கு → அஃகு → அஃகி]

**அஃகி[2]** *akki,* பெ. (n.) ஊற்றுநீர், spring water. *"மேலிடா அஃகி ஊறும் பைம்புனல்"* (நி.க.சூ.5:27).

[அல்கு–அஃகு+அஃகி]

[அஃகம் – நீரூற்று. அஃகு → அஃகம் → அஃகி. அல்கு–அஃகு–அஃகி. ஊற்று நீர்: பார்க்க]

**அஃகியநுட்பம்** *akkiya-nuttpam,* பெ. (n.) குறை அறிவு; shallow knowledge; *"உயர்ந்த கட்டிலு ரும்பில் சுற்றத்து அகன்ற தாயத்து அஃகிய நுட்பத்து"* (மலை. 550–1).

[அஃகி+நுட்பம்]

**அஃகியோன்** *akkiyōn,* பெ.(n.) குறைவுற்றோன்; not well. *"சொல்லவும் ஆகாது அஃகியோனே"* (குறு. 346 :8).

[அஃகு → அஃகியோன்]

**அஃகு–தல்** *akku-,* செ.குன்றாவி. (v.t.) மெல்லுதல், உண்ணுதல்; to chew, eat.

க அகி.

[அல்கு–அஃகு]

**அஃதை** *akdai,* (பெ.) (n.) சோழ மன்னன் மகளின் பெயர்; name of the daughter of a chola king.

து அக்கு.

[அஃகு – அஃதை]

[அஃகுதல் = சிறிதாதல். அஃதை = இளையவள், சிறியவள். மகளிர்க்கு இளமைப்பெயர் இயற்பெயராதல் உண்டு]

**அஃறிணை** *akrinai,* பெ. (n.) உயர்வு அல்லாதது ஆகிய உயிரின வகைமை (சாதி); neuter gender. *"புகர் அறக் கிளந்த அஃறிணை மேன"* (தொல். 2 :49).

*[அல் + திணை]*

**அஃறிணைஇயற்பெயர்** *akrinai-iyarpeyar* பெ. (n.) ஆன்றோரால் இடப்பட்டு இயல்பாக வழங்கும் பெயர்;neuter noun; *தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்"* (தொல். 14 :17).

*[அல்திணை + அஃறிணை + இயற்பெயர்]*

**அஃறிணைக்கிளவி** *akkirinai-kilavi,* பெ. (n.) அஃறிணைப் பொருளைக் குறிக்கும் சொல்; word denoting neuter gender, *"அஃறிணைக் கிளவி என்று எண் ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்"* (தொல். 10 :43).

[அல் + திணை →அஃறிணை+கிளவி]

**அஃறிணைப்பெயர்** *akrinai-p-peyar* பெ. (n ) அஃறிணைப் பொருளைக் குறிக்கும் பெயர்ச் சொல்;noun denoting neuter gender, *"உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயர் என்று"* (தொல். 4 :15).

[அஃறிணை+பெயர்]

**அஃறிணைவிரவுப்பெயர்** *akrinai-viravu-p-peyar,* பெ. (n.) உயர்திணையிலும் அஃறிணை யிலும் கலத்தலையுடைய பொதுப் பெயர்ச் சொல்; common noun. *"அஃறிணை விரவுப் பெயர் இயல்புமார் உளவே"* (தொல். 5 :13).

[அஃதிணை + விரவு + பெயர்]

**அக்கசாலை** *akkasālai,* (பெ.) (n.) கொற்கை மூதூர்க்கு அருகே அமைந்த ஊர்; a name of a village near korkai.

[அக்க(ம்)+சாலை]

அக்கசாலை: காசு அடிக்கும் இடம், அக்கசாலையை உடைய ஊரும் அக்கசாலை என்று பெயர்பெற்றது.

**அக்கசாலைப்பெரும்பள்ளி** *akkasālai-p-perumpalli,* (பெ.) (n.) ஆழ்வார் பேரில்

உண்டாக்கப்பட்ட புத்த மதப்பள்ளி; "அக்க சாலைப் பெரும்பள்ளி ஆழ்வார் கோயிலுக்குத் திருவுத்சவம்" (4VNM 3. P 47.)

[அக்கசாலை+பெரும்+பள்ளி]

**அக்கட்டாஎன** *akkadā-ena*,(இடை)(int.) சும்மாஇருத்தல் (இடை)(int.) to keep quiet. Expression of repose (கொ.வ.வ.சொ.).

[அக்கடா(ஒலிக்குறிப்பு)+என]

**அக்கட்டை** *akkaddai*, (பெ.) (n.) அந்தப்பக்கம் (கொ.வ.வ.) that side.

[அ+கடை−அக்கடை−அக்காட்டை]

**அக்கடா** *akkdḍā*, பெ.(n.) மண்ணெண்ணெய்த் திரியடுப்பைப் பற்ற வைக்க உதவும் நுனியில் தக்கை பொருத்திய கம்பி; a wire device to lit the kerosine stove. (வ.சொ.அக.)

**அக்கதம்** *akkadam*, பெ.(n.) மங்கல அரிசி; unbroken grains of rice mixed with turmeric or saffron used in benediction or worship. "அறுகு வெள்ளரிசி கட்டி அக்கதம் என்றாகும்"

[அக்கம் (தவசம்)→அக்கதம்]

**அக்கநீர்** *akkanīr*, பெ. (n.) புறத்தே புலப்படாமல் அகத்தே இருக்கும் நீர்; the fluid found inside green vegetation.

*[அக்க(ம்) + நீர்]*

**அக்கப்படம்** *akkappadam*, பெ. (n.) அடியார் அணியும் ஆடை ; a cloth piece of a saint. *"அக்கப்படம் கோவணம் நெய்து"*(நம். 3 :80).

[அக்கம் + படம். அக்கம்−செம்மை, படம் = அணியும் சீலை]

**அக்கம்** *akkam*, பெ. (n.) மிகுதி; excess. [அஃகம்−தவசம். அஃகம்−அக்கம். தவச விளைச்சல் போன்ற மிகு பெருக்கம். ஏராளம்.]

**அக்கமாலை** *akkamālai*, (பெ.) (n.) நான்முகனின் பிரம்மாவின் சிற்பத்தில் வலது மேற்கை ஏந்தியிருக்கும் மாலை.string of beads in the hands of Brahma.

[அக்கம் +மாலை]

**அக்கரக்காலம்** *akkarakkālam*,பெ.(n.) எழுத்தை (அட்சரத்தை) ஒலிக்கும் காலயளவு; time measure for an alphabet.

[அக்கரம் +காலம்]

**அக்கராப்பாளையம்** *akkarāppāḷayam*, பெ. (n.) வேலூர் மாவட்டம் ஆரணிக்கு அருகில் உளள ஓர் ஊர். name of the village in the Vellore District near the Aarani.

[அக்காரம்−அக்கரம் +பாளையம்]

**அக்கரைதேசிகள்** *akkaraitesigaḷ*, (பெ.) (n.) ஓர் இனப் பிரிவு; a kind of race. "மலைமண்டலத்து அக்கரை தேசிகளில் கிட்டிணன் நாறணநம்பி" (KANOT. 19681134). (கல். அக.).

[அக்கரை+தேசிகள்]

**அக்கழித்தல்** *akkaḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) வேருடன் அழித்தல்; ruin.

[அக்கு+அழி−த்தல்]

**அக்கழி** *akkaḷi*,பெ.(n.) தாழ்ப்பாள்; latch.

மறுவ. அகக்கழி

[அகம்+கழி]

**அக்காமக்காஞ்சீமை** *akkamakāñcīmai*, பெ. (n.) சேய்மையில் இருக்கும் ஊர், இடம்; a distant place.*(இ.வ.)*.

[அக்கா+அக்காம்+சீமை]

**அக்காரக் கனி** *akkārak-kani*,பெ. (n.) இனிய சுவை மிகு பழம் பொருள்; *"கடிகைத் தடங்குன்றின் மிசை இருந்த அக்காரக் கனியை (மங்:8:9:4).*

[அக்காரம்+கனி]

**அக்காரடிசில்** *akkāraḍcil*, பெ.(n.) சருக்கரைப் பொங்கல்; rice boiled in milk with ghee and sugar. *"நூறு தடா நிறை அக்காரடிசில்". (திவ்.திருப்ப. 9:6)*

[அக்காரம் − சருக்கரை. அடுதல் → அடிசில். அக்காரம் + அடிசில்]

**அக்கால்** *akkāl*, இடை .(int.) அப்போது, then "அக்கால் வருவார் எங்காதலோரே" (குறுந். 277 : 8.)

[அ+கால்]

**அக்கி** *akki*,பெ.(n.) 1. தீ; fire."அக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே"(*திருமந்.370.*) 2. கண், eye "நயனம் நேத்திரமே அக்கம் .... அக்கி .... கண் ஆம்"(சூடா.2:96)

[அஃகு→அக்கு→அக்கி]

**அக்கு** *akku,* பெ. (n.) 1. அன்பு; affectionï love 2. பரிவு; special care. 3. பற்று; innate desire.

[அல் – நெருக்கம், அன்பு. அல் + கு – அஃகு – அக்கு]

**அக்குத்தாப்பாபேசு–தல்** *akkuttappāpēsu-,* செ.கு.வி. (v.i) முறைகேடாகப் பேசுதல்; to speak indecently. (வ.சொ.அக.)

[எக்குத்தப்பாகப்பேசு →அக்குத்தப்பாகப் பேசு]

**அக்குத்தொக்கு இல்லாதவன்** *akkuttokku illādavan,* பெ. (n.) orphan. *'பாசத்தைப் பெறவோ செலுத்தவோ யாரும் இல்லாதவன்;* one who has none to be affectionate *அவனுக்கு அக்குதொக்கு இல்லை'.* (வ.சொ.அக.).

*[அக்கு + தொக்கு + இல்லாதவன்]*

**அக்குரன்** *akkuran,*பெ. (n.) இடையெழு வள்ளல்களுள் ஒருவன்; one of the seven beneficient chieftains in ancient Tamil nadu. *"அக்குரன் அனையை. (பதிற்றுப்).*

*மறுவ. அக்குமாரன்.*

*தெ.அக்குட(ஆற்றல்சான்றமறவன்)*

*க.அக்காடு–முடிவுக்கு கொண்டுவா.*

*[அக்கு –பணியச்செய்,அடக்கியாள்]*

**அகச்சிறுமுழா** *agaccirumuḷa* பெ.(n.) ஒருகண் பறை; a drum has one centre head where it is tapped. 35:3

[அகம்+சிறு+முழா]

**அகச்சுவை** *agaccuvai* பெ. (n.) இசை யோசையில் உள்ள ஒரு சுவை; an intrinsic musical note.

[அகம்+சுவை]

**அகஞ்சேரல்** *agancēral,* பெ. (n.) வீடு சென்று சேர்தல் to reach house. (கொ.வ. வ.சொ.)

*[அகம் + சேரல்]*

**அகட்டு**(பெ.)(n.)நன்றாக விரித்தல்;to wide open. (கொ.வ.வ.சொ.).

[அகற்று – அகட்டு(கொ.வ.)]

**அகடு** *agaḍu* பெ. (n.) யாழின் உறுப்புகளாகிய பத்தர் உச்சி வறுவாய் ஆகியனவற்றைக் குறிக்குஞ்சொல்;a term referring to certain parts of the har-pyāl.35:3.

*[அகு – அகடு]*

**அகடுறல்** *agaḍuṟal,*வி.எ. (adv.) நடுவு நிலைமை அடைதல்; neutral position, impartiality. *"அகடுற யார் மாட்டும் நில்லாது செல்வம்.." (நாலடி: 2).*

[அகடு + உறல் ]

**அகணிநாடு** *agaṇi-nāḍu,*பெ. (n.) மருதநாடு; agriculatural tract of land. *"அசற அப்புலத்து அகணி நாடு ஒரீஇ"*

[அகணி+நாடு]

**அகணிநார்** *agaṇinār,* பெ.(n.) மரப்பட்டையின் உட்பக்கத்து நார்; fibre in the inner side of the bark.

[அகணி+நார்]

**அகணிமுறம்** *aganimuṟam,*பெ.(n.) தென்னை பனைகளின் மட்டை நாரினைக் கொண்டு இரண்டடைப் பின்னல்களுடன் அழகாக உறுதியாக முடையப்பட்ட, விலையும் அதிகமுள்ள முறம். (இ.வ.) ; winnow plaitted with upper rind of the stem of the coconut and palmayra frond.

[அகணி + முறம்.]

**அகத்தரையர்** *agattaraiyar,*பெ.(n.) சிவன்; மாதொருபாகன்;god siva. *"இமவான் பெற்ற பெண்ணகத் தரையர்" (நாவு : 1: 64 : 6).*

[அகத்து – அகத்து+அரையர்]

**அகத்தியல்** *agattiyal,*பெ. (n.) மனநிலை; disposition of the mind. *"அகத்து இயல் முகத்துக் காட்ட".*

[அகம்+அத்து+இயல்]

**அகத்திருள்** *agattiruḷ,* பெ. (n.) அறியாமை; ignorance said to be the darkness of mind *"அகத்திருளும் நிறைகங்குல் புறத்திருளும் (பெரிய. 1338).*

[அகம்+அத்து+இன்+அள்]

**அகத்தினள்** *agattinaḷ,* பெ. (n.) மனத்தில் உள்ளவள்;. one who is seated in mind. *"அரிமலர்க் கண்ணி நின் அகத்தினள் ஆக". ( பெருங். 74 : 45).*

**அகத்துக் கூன்** *agattu-kūṉ,* பெ. (n.) உவளக (அந்தப்புரத்து)க் கூனி ; disabled servant maid in the royal quarters of the queen. *"புறத்து அமைச்சின் நன்றகத்துக் கூன்" ( பழ. 295).*

[அகம் + கூன்]

**அகத்துண்டம்** *agattuṇḍam,* (பெ.) (n.) குறைபடும் தொகை;deficit amount. "குடிமகன் ஊணொபாதி படகிடந்த சிகை அகத் துண்டம் காட்டாதொழிய" (SII, viii, 25.)

[அகம் + துண்டம்]

**அகத்துளை** *agattuḷai,* பெ. (n.) உள் துளை; hollow space. *"அறைகண் மருங்கின் அகத்துளை இன்றி". ( பெருங். 76 : 19).*

*[அகம் + துளை.]*

**அகத்தூண்** *agattūṇ,* பெ. (n.) வண்டியின் ஒருறுப்பு; part of cart. *"அகத்தூண் அமைதி". (பெருங். 58 : 54).*



**அகத்தெழு வளியிசை** *agatteḻuvaḷiuiśai ,* பெ. (n.) அடிவயிற்றிலிருந்து உந்தப்படுகின்ற காற்றினால் எழும் ஓசை; the distinct sound produced by rising air from the navel.

*[அகம் +அத்து+எழு+வளி+ஓசை]*

**அகத்தெழுவளி** *agatteḻu-vaḷi,* பெ. (n.) அடிவயிற்றில் (மூலாதாரத்தில்) எழுகின்ற காற்று; the air rising from the navel. *"அகத்து எழு வளி இசை அரில்தப நாடி" (தொல். 3 : 20).*

*[அகம் +அத்து+எழு+வளி]*

**அகத்தோன் செல்வம்** *agathoṉselvam,* பெ. (n.) மதிலின் உள்ளிடத்தில் உள்ளவனது செல்வ மிகுதி; wealth in the fort of a king. *"அகத்தோன் செல்வமும் ............ புறத்தோன் அணங்கிய பக்கமும்." ( தொல். 20 : 10).*

[அகம்+அத்து+(ஆன்)ஓன்+செல்வம்]

**அகநகர்ச்சுற்றம்** *aga-nagar-c-cuṟṟam,* பெ. (n.) அரசனின் உடன் சுற்றம் (பரிசனங்கள்); official staff of the king. *"அரசும் உரிமையும் அகநகர்ச் சுற்றமும் ஒரு மதில் எல்லைக்காத்தல் நின் கடன்" (மணி. 25 : 122 : 23).*

[அகம் +நகர்+சுற்றம்]

**அகநிலை** (பெ.) (n.) பரதக்கலையில் கையாளும் ஒரு முத்திரை நிலை. an hand posture in Bharathanatyam.

*[அகம் +நிலை]*

**அகநிலைக் கோவை** *aga-nilai-kōvai,* பெ. (n.) அக ஒழுக்கம் பற்றிய தொகுப்பு; a collection of works on love themes. *"ஐந்திணை தழுவிய அகநிலைக் கோவை" (ப.பா. 341.).*

[அகம்+நிலை+கோவை]

**அகமேனி** *agamēṉi,* பெ. (n.) உள்நிலை; intention. *"மிகமேனி மெலிவு எய்தி மேகலையும் ஈடு அழுந்து என் அகமேனி ஒழியாமே"* (சட. 9 : 7 : 10)

*[அகம் + மேனி]*

**அகரமுதலான்** *agara-mudalāṉ,* பெ. (n.) சிவபெருமான்; Śivaṉ. *"அகர முதலானை அணி ஆப்பனூரானை" (தேவா.சம். 1:88 –5).*

*[அகம்+முதலான்]*

**அகரத்தன்** *agarattan,* பெ. (n.) அகரமாகிய திருமால்; God Thirumal. *"எட்டெழுத்துள் ஓது அகரத்தனை"* (அட. 7 :95).

[அகரம்+அத்து+அன்]

**அகராதி[2]** *agarādi* பெ. (n.) அதிகம் படித்தவர்களை அழைக்கும் கிண்டற் சொல்; a metaphorical term to represent an erudite scholar. அவன் ஒரு அகராதி (இ.வ.)

[அகம்+அறுதி]

**அகரு** *agaru,* பெ. (n.) **அகில்** பார்க்க; see agil. *"அகரு வாழை எமை ஆரம் இணைய"(பரி. 12:5)*

*[அகில் + அகரு]*

**அகப்படை** *agappaḍai,* பெ. (n.) கமுக்க (அந்தரங்க)ப் படை; confidentials militory force *"உறுதியில் பொரு தமது அகப்படை" (வி.பா. 28 : 47.).*

[அகம் + படை]

**அகப்பாகுடி** *agappākuḍi,* பெ. (n.) சேர நாட்டு உம்பர்க்காட்டுப் பகுதியில் மலையிடையிருந்த குறுநாட்டுப் பகுதி;a region in *umbarkadu* area in the western range forest of Kerala.

மறுவ. அகப்பா. **க.** பாகுடி.

[அகழ்ப்பு (அகழி)– அகழ்ப்பா– அகழிசூழ்ந்த கோட்டை(அகழ்ப்பா–குடி– அகழிப்பாகுடி (அகழ்ப்பா நகர் குடியிருப்பு) அகழ்ப்பா என்னும் சொல்லே சிந்து வெளியில் அரப்பா எனத் திரிந்திருக்கக்கூடும்.]

**அகப்புரை** *aga-p-purai,* பெ. (n.) தாழ்வாரம்; verandah.

[அகம்+புரை]

**அகப்புரை** *aga-p-purai,* பெ. (n.) நுழை வாயிலைத்தாண்டிப் பக்கவாட்டில் அமைந்த அறை; front room adjacent to the entrance.

[அக்க(ம்)+சாலை]

**அகப்பைநோய்** *agappainōy,* பெ. (n.) உணவு இல்லாமல் மெலிந்து நோயாளியைப் போல் காணப்படுதல்;the unfed and underfed looking like a patient, due to the scarcity of food. (வ.சொ.அக.).

*[அகப்பை + நோய்]*

**அகம்** *agam,* பெ. (n.) திமிர், செருக்கு; haughtiness pride (இ.வ.)

*[அகு(அகை)–அகம்]*

**அகங்காரம்** *agangāram,* பெ. (n.) செருக்கு; conceit, arrogance.

[அகம் + காரம் = அகங்காரம் > அகம்.]

**அகம்படி** *agambaḍi,* பெ. (n.) 1. குடும்பம்; family. (தெ.கோ.சா.3 : 2).

*[அகம் + படி]*

**அகம்படிமறமுதலி** *agampaḍimaṛamudali,* (பெ.) (n.) அகம்படி மறவர் என்ற வீரர்களுக்குத் தலைவன்; Captain of the soldiers known an agambadi maravar *"குலோத்துங்க சோழக் கடம்பராயந் அகம்படி மறமுதலிகளில்"* (IPS, 181.)

*[அகம்படி+ மறம்+முதலி]*

**அகம்படிமுதலிகள்** *agambaḍimudaligaḷ,* பெ. (n.) அந்தப்புரத்து அதிகாரிகள்; (தெ.கோ.சா.3 : 2); Officers of the royal chamber meant for queen.

*[அகம் + படி + முதலிகள்]*

**அகம்பரன்** *agambaran,* பெ. (n.) நானே கடவுள் எனும் கோட்பாடு;a doctrine imagining self as god. *"அகம்பரன் என்னாது அரங்கனை நாடில்" (அட். 3 : 88).*

[அகம்+பரன்]

**அகம்பன்** *agamban,* பெ. (n.) அசைவு இல்லாதவன்; (ஓர் அரக்கன்) a dare devil, name of a giant; *"அவ்வுரை கேட்டு வந்தான் அகம்பன் என்று அமைந்த கல்விச் செவ்வியான் ஒருவன்". (ஆர. 77: 68).*

*[அகம்பு+ அன்]*

**அகம்பால்** *agampāl,* பெ. (n.) உள்ளே, in, innermost part.; *"யாதும் யாவரும் இன்றி நின் அகம் பால் ஒடுங்கி". (சட. 1: 4).*

[அகம்+பால் அகம் = உள்ளே. இடம். அகம்பால் =உள்ளிடம் உள்ளே.]

**அகம்பிரமம்** *agampiramam*, பெ. (n.) யானே முழுமுதற் பொருள் the doctrine imagining self as god; *"அல்லிறந்து பகலிறந்து அகம்பிரமம் இறந்து போய்"(சிவ 200).*

[அகம்+பிரமம்]

**அகம்வறியோன்** *agam-variyōn*, பெ.(n.) முழுமகன் (அறிவிலி);fool. *"அகம் வறியோன் நண்ணல் நல் கூர்ந்தன்று". (முது. 9 : 8).*

[அகம்+வறியோன்]

**அகம்படி வேளான்** *agmbadi-vēlan*, பெ. (n.) வீரபாண்டியனின் நான்காம் ஆட்சியாண்டில் கி.பி. 1301 இல் இருந்த அரண்மை உவளகக் (அந்தப்புர)க் காவலர். name of the palace guard during the period of Veerappandiayan during 1012 A.D.

[அகம்படி+வேள்+ஆன்]

**அகமகிழ்வு** *aga-magilvu*, பெ. (n.) அகமகிழ்ச்சி பார்க்க; see agamagilcci *"அழகு தன் அக மகிழ்வுற". (சூளா. 437.).*

[அகம்+மகிழ்வு]

**அகமண்டலம்** *aga-mandalam*, பெ. (n.) உள்வட்டம்; inner circle. *"மலை ஆறும் ஏழு கடலும் பாதமலர் சூழ் குளம்பின் அக மண்டலத்தின் ஒரு பால் ஒருங்க". (மங். 11: 4-3).*

[அகம்+மண்டலம்]

**அகமருடணம்** *aga-marudanam*, பெ. (n.) மறை மந்திரச் சிறப்பு; speciality of sacred hymns; *"அன்றியும் விசேட மிக்க அகமருண்டணங்களாவன"(தி.தி. 48: 10).*

*[அகம் + மருடணம்]*

**அகமலர்** *aga-malar*, பெ. (n.) நெஞ்சக் கமலம் heart respresented as lotus; *"அக மலர் மேல் மன்னும்"(சிலப் 12:3:3).*

[அகம்+மலர்]

**அகமலை** *agamalai*, (பெ.) (n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

[அகம்+மலை]

**அகமணை** *aga-manai*, பெ. (n.) ஓடத்தின் உட்கட்டை; wooden piece on a boat; *"துறை படி அம்பி அகமணை ஈறும்". (ஐங். 17 : 8).*

[அகம்+மணை]

**அகமனை** *aga-manai*, பெ. (n.) உள்வீடு inner appartment; *"அனைய வேலை அகமனை எய்தினன்"(அயோ. 4 : 223).*

[அகம்+மனை]

**அகமார்க்கம்[1]** *aga-markkam*, பெ. (n.) அருளியல்பு. kind approach *"வாதனையைச் சொல்லும் அக மார்க்கத் தால் அவர்கள் மாற்றினர்காண்" (சை : சா : 2 : 50).*

[அகம்+மார்கம்]

**அகமார்க்கம்[2]** *agamārkkam*, பெ. (n.) 1. மெய்க்கூத்து; நாட்டியவகை; a kind of dance. (தெ.கோ.சா.3 : 2).

*[அகம் + மார்க்கம்]*

**அகமிடறு** *aga-midaru*, பெ. (n.) குரல்வளை; larynx. *"ஐத்தானத்து அகமிடறு சுற்றி" (நாவி. 6 : 93-2).*

[அகம்+இடறு]

**அகயாறு** *agayāru*, (பெ.) (n.) ஆற்றோரத்தின் உள் நிலப்பகுதி; protruding bank towards the stream. *"நிலத்திலும் அகயாற்றுப் படுகையிலும்"* (SII, xvii, 604.).

[அகம்+ஆறு]

**அகரக்கிளவி** *agara-r-kilavi*, பெ. (n.) அகரஎழுத்து; the letter a.

[ அகரம்+ கிளவி]

**அகரந்தென்** *agaranten*, (பெ.) (n.) சைதாப் பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Saidapet Taluk.

[ஒருகா. தென் அகரம்>அகரந்தென்.]

**அகரப்பயிற்சி** *agarapayirci* பெ. (n.) அகரத்தை அளபெடையாக நீள ஒலித்தும், சுரத் தானங்களில் ஒலித்தும் பழகும் முறை; a

musical practice of signing allowing extra vowellength.

[அகரம்+பயிற்சி]

**அகரம்தூளி** *agaramthūḷi,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in chengalpattu taluk.

[அகரம்+தூளி]

**அகராதி பிடித்தவன்** (பெ.) (n.) எதற்கும் ஒத்து வராதவன்; unadjustable person.

[அகராதி+பிடித்தவன்]

**அகவனசம்** *agavaṉašam,* பெ. (n.) மனமாகிய தாமரை; as mind compared to lotus. *"அகவனசம் முகவனசம் அவை மலர்" ( ஒட். 5:92). அகத்தாமரை பார்க்க.*see agattamarai.

[அகம் + வனசம்]

**அகவையாள்** *agavaiyāḷ,* பெ. (n.) உடல் வளர் நிறைவுக்கு உட்பட்ட பருவத்தாள்;age bound prescribed. *"ஈர் ஆறு ஆண்டு அகவையாள்" (சிலப். 11: 24.)*

[அகவை +ஆள்]

**அகழ் எலி** *agaḻ-eli,* பெ. (n.) ஒரு வகை எலி; a kind of a rate. *"இரும்பல் அகழ் எலி" (நிக. 8: 224).*

[அகழ்+எலி]

**அகம்பன்மாலாதனார்** *agambanamaālā danār,* பெ. (n.) கடைக்கழகப் புலவரின் பெயர்; name of a sangam poet.

[அகம்பன் (சமணரின் இயற்பெயர்)+ மால் (அருகன்) + ஆதன்.]
பாண்டி நாட்டு அகமலை ஊரினராகிய சேரர் குடியினர்.

**அகவிரை** *agaviṟai,* பெ. (n.) உள்ளிடத் திருக்கும் (கபோதகத்தலை என்னும்) வீட்டின் உறுப்பு; a small plank on the inner pillar. *"நல் இல் அகவிரை உறையும் வண்ணப் புறவின்" (நற். 71: 7–8.).*

[அகவு= அறை. இறை–இரை. (கொ.வ.)]

**அகலக்கரை** *agala-k-karai,* பெ. (n.) அகலமுள்ள பெரிய சரிகைக் கரை ( ம.வ.கொ. 67); broad border of a cloth.

[அகலம் + கரை]

**அகலக்கவி** *agala-k-kavi,* பெ. (n.) விரித் துரைக்கும் பாடல்; (வித்தாரக் கவி) descriptive poem. *"இவ்வகையே காட்டும் அகலக் கவிக்கு" (வெ. பா. 22.)*

[அகலம்+கவி]

**அகலகோட்டா** *agalakōṭṭa,* (பெ.) (n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Husur Taluk.

[ஒருகா. அகழி+கோட்டை]

**அகலத்தவன்** *agalattavaṉ,* (பெ.) (n.) பெருமையுடையோன்; honourable person *"ஆளியைச்சேர்ந்த அகலத்தவனுக்கிளைய"* (SII, vi,167.).

[அகலம்+அத்து+அவன்]

**அகலந்தோன்** *agalantoṉ,* பெ. (n.) அகலமான மார்பை உடையவன்; a man of broad chest. *"மான்மதச் சாந்து ஆர் அகலந்தோன் வரைபோலும் தோற்றம்" (பரி. 16:44–6).*

[அகலம் (மார்பு)+அத்து+அவன்]

**அகலநீக்கு–தல்** *agalanīkku-,* செ.கு.வி. (v.i.) அழித்துவிடுதல்; to destroy. *"அதிராஜரை அகலநீக்கி"* (E1, xvii,16.).

[அகல+நீக்கு]

**அகலப்பா** *agalappā,* பெ. (n.) **அகலக்கவி** பார்க்க; see agala-k-kvi. *"ஈங்கு அகலப் பாக்கள் இரண்டு" (வெ.பா.: 27.)*

[அகலம்+பா]

**அகலம்** *agalam* (பெ.) (n.) யாழின் ஓர் உறுப்பு. (12 : 38.);a part of harp.

[அகல்+அம்]

**அகலமணி** *agalamaṇi,* பெ. (n.) ஒருவகை அணிகலன்; a kind of ornament. *"ஆணி 49 அகலமணி 101ம்"* (SII, viii, 329.).

[அகலம்+மணி]

**அகலாப்பிணி** *agalāppiṇi,* பெ. (n.) தீராத நோய். prolonging desease; *"அகலாப் பிணி இல்லோர்." (வெ.பா. 78.)*

[அகலாத+பிணி]

**அகலிடத்தவர்** *agaliḍattavar,* (பெ.) (n.) உலகத்தவர்.people; *"அன்றுவந்தெனை அகலிடத்தவர் முன்னே ஆளதாக என்று ஆவணங் காட்டி."* *(வன். 7 : 62–5.).*

[அகலிடம்(உலகம்)+அத்து+அவர்]

**அகலிடப்பாரம்** *agaliḍa-p-pāram,* (பெ.) (n.)நாடாளும் பெரிய பொறுப்பு; நிலத்தைத் தாங்கும் சுமை.the responsibility on the person who is ruling the country; withstand the weight of the land.; *"அகலிடப்பாரம் அகல நீக்கி."* *(சிலப். 30 : 180.)*

[அகலிடம்+பாரம்]

**அகலியா** *agaliyā,* பெ.எ., (adj.) பெருகாத; not increasing; *"உகலி ஆழ்கடல் ஓங்குபார் உளீர் அகலியா வினை அல்லல் போய் அறும்."* *(சம். 2 : 25 : 1.).*

[அகல்+இஆ]

**அகலியான்** *agaliyāṉ,* (பெ.) (n.) கடவுள்; அகன்றவன்; god; *"ஆழாதே ஆழ்ந்தான் அகலாது அகலியான்."* *(சேர. 3 : 3.).*

[அகலி+ஆன்]

**அகலோகம்** *agalōgam,*பெ.(n.)சூழிடம். surrounding *"அகலோகம் எல்லாம் அடியவர்கள் தற்சூழ"* *(பூந் : 2 : 6.)*

[அகல்+உலகம்]

**அகவடித்தட்டு–தல்** *agavaḍittaṭṭu-,*செ. குன்றாவி. (v.t.) நடனம் ஆடுகையில் காலின் பாதத்தால் தரையைத் தட்டுவது;tap the floor with soul of the feet. (35 : 11.).

[அகம்+அடி+தட்டு]

**அகவயம்** *agavayam,* பெ. (n.) மனவயம் (சங்கற்பம்).intension; *"தன் அக வசத்து வருவு தங்க"* *(யுத். 36 : 3).*

[அகம்+வயம்]

**அகவயல்** *agavayal,* பெ. (n.) மருதநிலம் wet land; *"அகவயல் இளநெல் லரிகால் சூடு"* *(பரி. 7 : 27).*

[அகம் + வயல்]

**அகவர்**[1] *agavar,* பெ. (n.) நாட்டில் வாழ்பவர். local people; *"அகவர் நீனிற முல்லைப்பஃறிணை நுவல"* *( பொரு. 220 – 21.).*

[அகம்+அவர்]

**அகவர்**[2] பெ. (n.) பாட்டுப்பாடும் பாணருள் ஒரு வகையினர்.bards who sing lyrics.( 35:11.)

[அகவு+அக்]

**அகவரை** *agavarai,* பெ. (n.) உள்ளிடம். upto inner place ; *"ஆழித்தாழி அகவரைத் திரிவோர்."* *( மணி. 6 : 173.)*

[அகம்+வரை]

**அகவல்விருத்தம்** *agaval-viruttam,* பெ. (n.) ஆசிரிய விருத்தம்; a metre in prosody *"அகவல் விருத்தம் கட்டளை யொலியும் கலியின் விருத்தமும் கவின் பெறு பாவே".* *( ப.பா. : 189)*

[அகவு – அகவல்+விருத்தம்]

**அகவலம்** *agavalam,* (பெ.) (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in arakkoṇam Taluk.

[அகம்+ வலம்]

**அகவலன்** *agavalaṉ,* பெ. (n.) அழைத்துப் புகழும் பாணன்.a bard addresses while singing; *"கண்டி நுண்கோல் கொண்டு களம் வாழ்த்தும் அகலவன் பெறுக மாவே."* *(பமி. 43 : 27 :8).*

[அகவு–அகவல்+அன்]

**அகவலை** *agavalai,* பெ. (n.) நெடுவலை. long net.; *"தடம் கண் விழிகளின் அகவலைப் படுப்பான்."* *(சட. 6 : 2 : 9).*

[அகம்(உள்ளாழ்ந்த– நீண்ட) +வலை]

**அகவாய்** *agavāy,* பெ. (n.) உள் கால்வாய்; internal canal. *"இவ்வூர் அகவாயின் வெங்கூர் நாலாங் கண்ணாற்று"* (SII, xiii, 287.).

*[அகம் + வாய்]*

**அகவான்** *agavāṉ,*அகழ்வான் பார்க்க அகழ்வான்;see *agaḻvāṉ*

**அகவிதழ்** *agavidal,* (பெ.) (n.) மலர்களின் உள் இதழ்;inner petal 5. *"அம்முகை மிசை அம்மலர் அகவிதழ்த் தண் பனி உறைத்தரும்." (கலி. 77:6–7.).*

[அகழ்+இதழ்]

**அகவினை** *agavinai,* பெ. (n.) 1. இடையூறு; கீழறுப்பு; disturb. (தெ.கோ.சா.3 : 2).

*[அகம் + வினை]*

**அகவுநர்** பெ. (n.) கிணைப் பறையை முழக்கிக் கொண்டு பாடுபவர்; bards who sings with beating kiṇai-p-paṟai.

*[அகவு + அகவுநர்]*

**அகவுயிர்** *agavuyir,* பெ.(n.) ஆதன், (ஆன்மா); soul.

*[அகம் + உயிர்]*

**அகழ்ந்தோர்** *agalndōr,* தோண்டினவர்; sdiggers. "ஆர்கலி அகழ்ந்தோர் கங்கை அவனியில் கொணர்ந்தோர்."

[அகழ்வான்–அகவான்]

**அகழ்வான்** *agalvāṉ,* பெ. (n.) வயல் வரம்புகளிலும் நிலத்திலும் நிறைய வளைகளைத்தோண்டியபின் பாதுகாப்பிற்காக வளைகளின் முகப்புகளில் மண் தள்ளி அடைத்து விட்டு ஏதாவது ஒரு வளையில் மட்டும் பாதுகாப்பாக இருக்கும் ஒருவகை யெலி. (இ.வ.);a rate which lives in a particular hole after digging many holes and sealing them.

[அகழ்–அகழ்வான் அகவான் = நிலத்தை அகழ்ந்து வளை தோண்டுவது]

வரப்புகளிலும் நிலத்திலும் நிறைய வளைகளைத் தோண்டிவிட்டு தோண்டிய வளைகளின் முகப்புகளில் மண்ணைத் தள்ளி அடைத்து விட்டு ஏதாவது ஒரு வளையின் உள்ளே இருக்கும் எலி வகை.

**அகழ்வினையாளர்** *agalvinaiyālar,* பெ. (n.) தோண்டும் தொழிலைச் செய்பவர்;diggers. *"அகழ்வினையாளரை அவ்வயின் தரீஇ" (பெருங். 90 : 78.).*

[அகழ்+வினை+ஆளர்]

**அகழ்வோன்** *agalvōṉ,* பெ.(n.) தோண்டுபவன்; diggers. *"நீர்திகழ் சிலம்பின் நன் பொன் அகழ்வோன்" (அக. 282 : 4).*

[அகழ்+(ஆன்)ஓன்]

**அகழுநன்** *agalunaṉ,* பெ. (n.) **அகழ்வோன்** பார்க்க; see agalvōṉ. *"பொருள் உடையார் பொருள் கொள்வான் அகழுநன் போன்று இலையோ" (நீல. 5 : 32.).*

[அகழ்+உ+நன்]

**அகளங்கமூர்த்தி** *agalanga-mūrti,* பெ. (n.) புத்தன்; Buddha. *"சுதன் அகளங்கமூர்த்தி ........பூமிசை நடந்தோன் புத்தன்" (நிக. 1: 26.) இலையோ" (நீல. 5 : 32.).*

[அல்+களங்கம்+மூர்த்தி]

**அகளசகளத்தார்** *agalasagalattār,* பெ. (n.) அருவுருவர்; visible and non-visible god. (சகளவடிவினர்) *"ஆன நடம் ஐந்து அகள சகளத்தர்" (மூல. 2727).*

[அகளம்+சகளம்+அத்து+ஆர்]

**அகளத்தி** *agalatti,* (பெ.) (n.) ஆளத்தி என்பதன் முதல் வடிவம்; correct form of the word *ālatti*

[அகல்–ஆல்–கள்+அத்தி]

**அகன்கூனை** *agaṉ-kūṉai,* பெ. (n.) கருப்பஞ் சாறு காய்ச்சும் கொப்பரை; a broad vessel. *"எந்திரத்து ஒழுகு சாறு அகன் கூனையின் ஊழ் முறை முழுசி" (சிட். 15 : 48.).*

[அகல்+கூனை]



**அகன்பதி** *agan-p-pati,* (பெ.) (n.) பேரூர்;a big town. *"பங்கியப் பாசடைத் தடம் சூழ்*

*பழனநாட்டு அகன் பதிகள் பலவும் நண்ணி." (பெரிய.2357.).*

[அகல் +பதி]

**அகன்மணி** *agan-mani,* (பெ.) (n.) மாணிக்கம்;diamond. *"அரதனம் சலாகை அகன்மணி." (நிக.தி. 6-7.).*

[அகல்+மணி]

**அகன்றார்** *aganrar,* பெ. (n.) செல்வசெழிப்பு உடையவர்; well to do people. *"அழுக்கற்று அகன்றாரும் இல்லை" (குறள். 17 : 10.).*

[அகல்+அகன்றார்]

**அகன்றான்** *agalnrān,* பெ. (n.) நீங்கினவன்; sage. *"மூப்பின் கண்நன்மைக்கு அகன்றானும்" (திரி. 17 : 1).*

[அகன்று–அகன்றான்]

**அகன்றிசினோர்** *aganrcivnār,* பெ. (n.) அன்புடையவர்; beloved people. *"கள்வர் போல்வர் நீ அகன்றிசினோர்க்கே" (குறு. 127 : 6).*

[அகன்று+இசின்+(ஆர்)ஓர்]

**அகன்றிடல்** *aganridal,* தொ.பெ.(vbl.n.) நீங்குதல்;relief. *"வயிறு உற்ற அடு சூலை மறப்பிணி தான் அந்நின்ற நிலைக்கண் அகன்றிடலும்" (பெரிய. 1341.).*

[அகன்று+இடல்]

**அகன்றிலர்** *agantrilar,* பெ. (n.) நெருங்கினர்; close friendly people *"அழுத்தினர் அழுந்திலர் அகன்றிலர் அகன்றார்." (யுத். 12 : 16.).*

[அகன்று+இல்+அர்]

**அகனும் புறனும்** *aganum-puranum,* பெ. (n.) உள்ளும் புறமும்;in and out *"இழுக்கா யாப்பின் அகனும் புறனும்" (சில. 8).*

[அகம்–அகன்+உம்+புறன்+உம்]

**அகாலகாலன்** *agālakālan,* பெ. (n.) எமன் போன்றவன்; one who is like yamā. *"அகங்க்ய விக்ரமந் அகாலகாலன்"* (SII, iii, 2066.).

[அகாலம்+காலன்]

**அகியம்** *agiyam,* பெ. (n.) இரும்பு; iron. *"கருங்கொல்அகியம் கருந்தாது அயிலும் இரும்பின் பெயரே" (நிக.பி. 6 : 141.).*

[எஃகு–அஃகு–அகியம்]

**அகில்குடம்** *agilkudam,* பெ. (n.) நறும்புகைக் குடம்; fragrant smoke pot. *"தாழ நாற்றுமின் தாமங்கள் அகில்குடம் பரப்பி" (சீவ. 12 : 12.).*

[அகில்+குடம்]

**அகில்கூட்டு** *agilkūttu,* பெ. (n.) ஒரு வகை மண (வாசனைக்) கலவை; fragrant paste of sandal wood. *"வந்து சந்தனம் கர்ப்பூரம் உடன்னரிகாசு செந்தேன் அந்த ஏலங்கள் என்ப அகில் கூட்டு ஓர் ஐந்தும் தாமே" (நிக. 12 : 37.).*

[அகில் +கூட்டு]

**அகிலகலாவல்லி** *akilakalāvalli,* பெ. (n.) கலைமகள்; Godess of learning *"என்று சொல்லி அகிலா கலா வல்லி இறைஞ்சி இருத்தலுமே" (ஒட். 5 : 220).*

[அகிலம்+கலை+வல்லி]

**அகிளி** *a gili ,* (பெ.)(n.) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurantakam Taluk.

[ஒருகா.அருள்–அகுனி–அகிளி]

**அகினி** (பெ.) (n.) பனை மட்டையிலிருந்து உரித்தெடுக்கப்பட்ட நார்; palmyra fibre.

[அகணி–அகினி) (கொ.வ.)]

கூடை பின்னலில் பயன்படும் அழுத்தமான பட்டை. (ம.வ.சொ.67)

**அகிற்குறை** *akirkurai,* பெ. (n.) அகில் மரக் கட்டை; agil wood piece *"பரிய அகிற்குறை பிளந்து புகைப்பார்கள் பாங்கு எல்லாம்" (பெரிய. 2235.)*

[அகில்+குறை]

**அகுதை** *agudai,* பெ. (n.) குறுநில மன்னன் பெயர்; name of a chieftain. *"வயங்கு பெருந்தானை அகுதை" (அகம்112.)*

*க. அகுந்தலெ (உயர்வு–மேன்மை)*

[ஆகு–ஆகுந்தி–அகுந்தி–(பெருக்கம், மிகுதி, உயர்வு, தலைமை)]

**அகை–த்தல்** *agai-,* செ.கு.வி. (v.i.) வருந்துதல்; feeling. *"கழுப்பல ஏற்றி அகைப்பர்" (சூளா. 1939).*

[அகு–அகை]

**அகோ** *ako,* இடை (part) இகழ்ச்சிக் குறிப்பு இடைச்சொல்; onomo. expression. *"அரசனின் அகத்து மாட்சி அகோ பெரிது" (யசோ. 1: 64.).*

[அஃதோ +அதே+அகோ]

**அங்கக்களரி** *anga-k-kaḷari,* பெ. (n.) ஒரு மதிப்புரவுச் சின்னம்; an honorary symbol offered by a king. *"நமக்கு உண்டான வரிசை: பாவாடை, சேமயிர் அடக்கம், நாடகசாலை, பகல்விளக்கு, ஏறச்சங்கு, இறங்கு சங்கு, அங்கச்களரி, புலித்தண்டை"* (IPS, 715.).

[அங்கம் +களரி]

**அங்கலி** *angali;*பெ. (n. பசி;hunger.

தெ. ஆங்கிலி.

[அங்கல்–வயிறு சுருங்கல், பசி.
அங்கல்–அங்கலி]

**அங்கி காரியம்** *angikāriyam,*பெ. (n.) தீயில் செய்யப்படும் வேள்வி முதலியன; sacrificial ceremonies. *"அர்த்தயாமத்துக்குச செந்நெலரிசி குறுணியிரு நாழியும் அங்கி கார்யத்துக்கும் கூழாகும்."* (SIII,xix 322.).

[அங்கி +காரியம்]

**அங்கக்கிரியை** *angākriyai,* பெ. (n.) தாளம் போடும் போது கையாற் செய்யும் வினைகள்; counting poses of hand. நடனத்தின் போது உடல் உறுப்புக்களால் செய்யும் வினைகள்; poses of body and movements while dancing.

[அங்கம்+ skt. கிரியை]

**அங்கணநீர்** *angaṇanīr,* பெ. (n.) சாய்க்கடை நீர்; drainage water. *"ஊர் அங்கணநீர் உரவு நீர்ச் சேர்ந்தக் கால்" (நால. 18 : 5.).*

[அங்கணம்+நீர்]

**அங்கணம்** திறந்தவெளிக் குளிப்பிடம்; open bathing place. *'இப்படி அங்கணமா இருந்தா எப்படிக் குளிக்கிறது?'* (வ.சொ.அக.).

2. வீட்டினுள் அங்கணம் போன்று அமைத்த கழுதை கட்டுமிடம்; stable of ass. (வ.சொ.அக.).

[அங்கு+அணம்]

**அங்கணர்தம்பாணி** பெ. (n.) ஆறு நரம்புகளை யுடைய பண்; tune from six stringed musical instrument.

[அங்கணி+தம்+பாணி]

**அங்கணாரிட்டு** *angaṇāriṭṭu,* வி.எ. (adv.) புருவநெறித்து; shrinking the brow. *"சொக்கனும் அங்கணாரிட்டுத் துடை தட்டிச் சிரித்தருளி" (தி.தி. 52 : 8.).*

[அம்+கண்+(ஏறிட்டு)ஆரிட்டு(சொ.வ.]

**அங்கணாளர்** *angaṇāḷar,* பெ. (n.) சிவன்; Siva *"அங்கணாளர் தம் அபி முகத்தினில் அடி உறைப் போல்" (பெரிய. 2986).*

[அம்+கண்+(அறிட்டு) ஆரிட்டு] (சொ.வ.)

**அங்கத்தன்** *angattan,*பெ. (n.) அகன்ற மார்பை உடையவன்;a person who is having broad chest. *"அப்பனே அலர்மேல் மங்கை அங்கத்தனே" (அட. 6 : 30.).*

[அங்கம்+அத்து+அன்]

**அங்கத்தார்** *angattār,* பெ. (n.) அங்க நாட்டு மக்கள்; people belonging to Anga land. *"அந்தமில் சீர் அங்கத்தார்" (பெ.பா. 3 : 183.).*

[அங்கம்+அத்து+ஆர்]

**அங்கத்தார்கோ** *angattārkō,* பெ. (n.) கன்னன்;karnan(Mahabharat). *"அந்தமில் சீர் அங்கத்தார் கோவே" (பெ.பா. 3 : 183.).*

[அங்கம்+அத்து+ஆர்+கோ]

**அங்கத்தாளம்** *angattālam* பெ. (n.) தாளத்தின் உறுப்புகளின் வழியாக அமைந்த எண்ணிக்கைத் தாளம்.

[அங்கம்+தாளம்]

**அங்கம்** *angam,* பெ.(n.) வயிறு; stomach.அங்கம் காயுது.(இ.வ.).

[அங்கு+(வளைவு)+அம்]

**அங்கம்ஐந்து** *angamaindu,* பெ.(n.) ஐந்தியம்,பஞ்சாங்கம்; Astrlogical calendar.

*"திதியே வாரம் நாள் யோகம் கரணம் எனப் பகரும் சோதிப் பஞ்சாங்கம் ஆகும்." (நிக.தி. 12:63.).*

[அங்கம்+ஐந்து]

**அங்கம்நான்கு** *angamnāngu,* பெ.(n.) நாற்படை, சதுரங்கம்; four frontier in the militiary. *"சதுரங்கம் யானை, தேர், குதிரை, காலாள்." (நிக.தி. 12:38.).*

[அங்கம்+நான்கு]

**அங்கம்பத்து** *angampattu,* பெ. (n.) பத்து உறுப்பு,தசாங்கம்;a country consisting of ten parts. *"ஆறும் மலையும் யானையும் குதிரையும் நாடும் ஊரும் கொடியும் முரசும் தாரும் தேரும் தசாங்க எனப்படும்.". (நிக.தி. 12 : 154.).*

[அங்கம்+பத்து]

**அங்கமணி** (பெ.) (n.) சிற்பங்களிற் காணலாகும் ஓர் மார்பணி;chest cover seen in statues. (5 : 71.).

[அங்கம்+மணி]

**அங்கமாலை** *angamālai,* பெ. (n.) நாவுக்கரசர் இயற்றிய பதிகங்களுள் ஒன்று;One of the poetic composition of Appar. *"செல்கதி காட்டிடப் போற்றும் திரு அங்க மாலையும்" (பெரிய. 1660.).*

[அங்கம்+மாலை]

**அங்கராக்கு** *angarākku* (பெ.) (n.) சட்டை (கொ.வ.வ.சொ.);shirt.

[அங்னம்+அரக்கு]

**அங்குஅட்டை** *angattai* பெ. (n.) சரிகை போடப் பயன்படும் சுங்குவிற்கு இணையாகப் பயன்படுத்தப்பெறும் சாகாடு தறிக்குரிய துளைகள் உடைய அட்டை; A plate containing holes used in parity with a border of cloth. (நெ. தொ. சொ. 51.).

[அங்கு+அட்டை]

**அங்குத்தறி** *anguttary* பெ. (n.) சுங்கின் உதவியால் சரிகை வடிவங்களை மாற்றி அமைத்தற்குரிய தறி வகை; the loom that change its designs.

[அங்கு+தறி]

**அங்குறளி** *ankurali* பெ. (n.) கோள்மூட்டுபவர்; backbitter

[அம்+குறளி]

**அங்குவள்ளி** *anguvalli,* (பெ.) (n.) பெரியகுளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Periyakulam Taluk.

[அங்கு+(பள்ளி) வள்ளி]

**அங்கணம்** *anganam* (பெ.) (n.) வீட்டின் அளவினைக் குறிக்கப் பயன்படும் சொல்; anganam a tamil word used to measure house area.

[(அங்கணம்) முற்றத்தைக் குறித்த சொல். நீட்டலளவுகுறித்த அங்கணமாயிற்று)]

**அச்சஞ்சு** *accanju,* பெ. (n.) ஐந்தைந்து வீதம்;each of five. *"இந்நிலக் கடமையில் அச்சஞ்சு பழங்காசு வெவ்வேற்று வகை இரட்டி"* (SII, xiv, 41.).

[(ஐந்து)அஞ்சு+ஆஞ்சு]

**அச்சானியம்** *accāniyam,* பெ. (n.) தீக்குறி; bad omen. *'எப்போதும் அச்சானியம் பேசாதே?'* (வ.சொ.அக.).

[அழிச்சல்–அழிச்சாலியம்–அழிச்சானியம் (கொ.வ.)]

**அச்சாரம்** *accāram* பெ. (n.) ஒரு பொருளை வாங்குவதற்கு அடையாளமாக முன்பணம் தந்து உறுதிப்படுத்திக் கொள்ளுதல்; a token advance to purchase a thing. *'அச்சாரம் போட்ட பின்னே என்னடா பேச்சு மாத்தற?'* (வ.சொ.அக.).

*[அச்சு + ஆரம்]*

**அச்சாளத்தி** *accālatti* பெ. (n.) ஆளத்தி பாடுதலில் ஒரு வகை; a type of song in tamil. 35:21

[அச்சு+ஆளத்தி]

**அச்சி** *acci,* (பெ.) (n.) கட்டை வண்டியின் அச்சாணி; wooden cart wheel pivotal nail. (கொ.வ.வ.சொ.).

[அச்சாணி– அச்சு– அச்சி(கொ.வ.)]

**அச்சிபிச்சலாம்** *accipiccalām,* பெ. (n.) உடல் குடல் எல்லாம்; that means all the parts of the body.

[அச்சு+பிச்சு+எல்லாம்]

**அச்சி மரக்கயிறு** *accimarakkayiru,* பெ. (n.) மாட்டுக்கயிறு ;a rope.

[அச்சு+மரம்+கயிறு]

**அச்சிமரக்குண்டு** *accimarakundu,* பெ. (n.) அச்சுமரக்குழி; a mould.

[அச்சு+மரம்+குண்டு(குழி)]

**அச்சிமுட்டி** *accimutti,* பெ. (n.) அச்சு நூலும் துணி நூலும் சேரும் இடம். a device in loom.

[அச்சு(அச்சி)+முட்டி]

**அச்சு** *accu,* பெ. (n.) மட்பாண்டத் திரிகை சுழலும் நடுவ (மைய) இரும்புக் கம்பி. (ம.வ.சொ. 67.);pinholdofpotter'swheel.



**அச்சுக்கட்டு** *accukkattu,* (பெ.) (n.) காஞ்சிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

[அச்சு+கட்டு]

**அச்சுக்கட்டை** *accukkāttai,* பெ. (n.) மட்பாண்டங்களில் முத்திரையிடும் கட்டை. (ம.வ.சொ. 67.). block of wood having design for sealing pottary.

*[அச்சு+கட்டை]*

**அச்சுக்கோ–த்தல்** *accu-kō* செ.குன்றாவி. (v.t.) நூலைத் தறியில் இணைத்தல். (ம.வ.சொ. 67.).; to set up thread in weavers loom.2.நெய்து முடிந்த பின் மீண்டும் புதிய பாவு நூலைத் தறியில் இணைத்தல். (நெ.தொ.க.51.) connectin new thread pan.

*[அச்சு + கோ–]*

**அச்சுக்கோல்[1]** *accu-k-kōl,* பெ. (n.) நூலை இழுத்துக் கட்டும் நீண்ட வடிவ குச்சி. (நெ.தொ. க.( 51.).a length stick used in loom.

*[அச்சு + கோல்]*

**அச்சுக்கோல்[2]** *accu-k-kōl,* பெ. (n.) வடி நூலின் மேலும் கீழுமாக உள்ள சிறிய நீள உருளைக் குச்சி. (நெ.தொ. க. 51.);a stick used in loom.

*[அச்சு + கோல்]*

**அச்சுச்சட்டி** பெ. (n.) முத்திரையிடப்பட்ட சட்டி. (ம.வ.சொ. 67.).; sealed pot.

*[அச்சு + சட்டி]*

**அச்சுத்தொழில்** *accu-t-tolil,* பெ. (n.) நூல் செய்தித்தாள் போன்றன அச்சிடும் பணி; the profession of printing.

*[அச்சு + தொழில்]*

**அச்சுப்பலகை** *accu-p-palagai,* பெ. (n.)அச்சு வெல்லம் வார்க்கப் பயன்படும் பலகை; jaggery mould.

[அச்சு + பலகை]



**அச்சுப்பானை** பெ. (n.) **அச்சுச்சட்டி** பார்க்க; (ம.வ.சொ. 67.); see accu-c-catti

*[அச்சு + பானை]*

**அச்சுபிணை–த்தல்** *accupiṇai-* செ.குன்றாவி. (v.t.) (n.) பிணைத்தல், பாவினைப் பண்ணையிலுள்ள இழைகளுடன் தறிக்கு வெளியே பண்ணையைக் கொண்டு இணைத்தல். (நெ. சொ. க. 52.);connecting device in loom.

*[அச்சு+பிணை]*

**அச்சுமரம்** பெ. (n.) அச்சு இணைந்த ஆளுயர நீள் சதுரமான கருவி. (நெ. சொ. க. 52.);device in loom.

**அச்சுவெல்லம்** *accuvellam,* பெ. (n.) கருப்பஞ்சாற்றுக்கட்டி; jaggery moulded in the shape of a cone with the top flattened.

*[அச்சு + வெல்லம் அச்சில் (கட்டளையில்) வார்த்தெடுத்த வெல்லம்]*



**அச்செடு–த்தல்** *acceḍu-,* செ.கு.வி. (v.t.) திரிகையில் வைத்து வேண்டிய வடிவம் செய்தல். (ம.வ.சொ. 67.); the control pin of a potter's wheel.

[அச்சு+எடு]

**அசடை** *aśaḍai,* பெ. (n.) மிகச் சிறிய மீன்வகை; a kind small fish. (இ.வ.).

[அசரை–அசடை]

**அசதி** *aśadi* பெ. (n.) சோர்வு, அயர்வு. (நெ. வ.வ.சொ. 35.).tiredness.

[அயர்தி+அயதி+ அசதி]

**அசப்பு** *aśsappu,* பெ. (n.) ஒரு கோணம் ஒப்புமை; resemblence. *'ஒரு அசப்புல அவள் பார்க்க நன்றாக இருப்பாள்.'* (வ.சொ.அக.).

[அயப்பு–அசப்பு]

**அசமணிப்பலகை** *asamaṇi-p-palagai,* பெ. (n.) மணவிழவில் மங்கலப் பொருள்கள் வைக்கும் பலகைத் தட்டு; a wooden plate used to keep auspicious things in marriage ceremony.

[அசமணி+பலகை]

கசவர் பழங்குடிகளின் சொல்லாட்சி.

**அசமந்தம்** *aśamandam,* பெ. (n.) அறிவு மழுங்கல், சோம்பல்; stupidity laziness. *'அவன் ரொம்ப அசமந்தம்வே.'* (வ.சொ.அக.).

[அயர் > அசர் > அச + மந்தம்]

**அசல்** *aśal,* பெ. (n.) துணி காயப் போட உதவும் மூங்கிற் கழி, கயிறு முதலியன; a cloths line, rope, etc. (வ.சொ.அக.).

[அயல்–அசல்]

**அசனம்** *asanam,* பெ. (n.) கோழி அறுத்து பொங்கலிட்டு அன்னதானம் செய்தல். (நெ.வ.வ.சொ. 26.) a village festival.

[ஆச்சி–அசி+காடு]

**அசி** *asi,* பெ. (n.) அரசமரம்; pipal tree.

மறுவ. அசாகம்

[அரசு – அசு – அசி]

**அசிக்காடு** *asikkāḍu,* பெ. (n.) மயிலாடுதுறையிலிருந்து 15 கி.மீ. தொலைவிலுள்ள ஓர் ஊர். nameofavillage15k.m.from mayiladuturai.

*[அசி (அரசமரம்) + காடு]*

**அசுகுசு** *aśukuśu,* பெ. (n.) மிகவும் அருவருப்பானது; most disgust, loathing. (இ.வ.)

[அசு+குசு]

**அசும்பு** *aśumbu,* பெ. (n.) நெல்வயலில் நெருக்கமாக முளைக்கத் தொடங்கியிருக்கும் களைகள்; a kind of weed in paddy field. (இ.வ.).

[அசு+அசும்பு]

**அசுரதாரு** *asuratāru,* பெ. (n.) மரச் சிற்பங்களைச் செய்யவுதவும் மரவகைகள்; kind of woods used to make wooden icon statues. 5:21.

**அசேகம்** *asēgam,* பெ. (n.) முழுவதும் அவ்வளவும்; whole, entire. *'அந்த விழாவுக்கு ஊரு அசேகமும் வந்து விட்டது.'* (வ.சொ.அக.).

[ஒருகா.அச்சு–அசேகம்]

**அசை** *aśai,* பெ. (n.) படுக்கை தலையணைகளை வைக்கவுதவும் மரத்தினாலான சட்டக்கோவைத் தொங்கல்; swinging wooden stand for the bed and pillows. (வ.சொ.அக.).

[அசு–அசை]

**அசைசிமிழ்** *aśaisimil,* பெ. (n.) மாட்டின் அசையும் திமில் குறையுடையது என்றும் குடும்பத்திற்கு ஆகாது என்றும் கருதப்படுவது; moving hump on a bullock's back; it is considered as a bad omen. (வ.சொ.அக.).

[அலை–அயை–அசை+சிமிழ்]

**அசையாப்பிடாரி** *asaiyā-p-piḍāri,* பெ. (n.) அடங்காதவள்; uncontrollable woman. (கொங்கு.வ.).

<u>மறுவ</u>. அடங்காப்பிடாரி

[அசையாத+பிடாரி]

**அசையெழுத்து** *asai-ys-eluttu,* பெ. (n.) மெய் உயிரொலியுடன் கூடியிருப்பதை அடையாளப்படுத்தும் எழுத்து;syllabic letter.

[அசை+எழுத்து]

தமிழில் க,கா,கி,கீ, என்பன போன்று வரும் உயிர்மெய் எழுத்துகள் அசையெழுத்துகளாம்.

**அறிவியம்** *arviayam,* (பெ.) (n.) இயல்உலகு, இயற்கை நெறிகள் ஆகியவற்றைக் குறித்த ஆய்வும் அறிவும்; science.

<u>மறுவ</u>.அறிவியல்.

[அறிவு+இயம்]

**அஞ்சல்** *añjal,* பெ. (n.) வேகம்; speed. *'போய்விட்டு இப்போ ஒரு அஞ்சல்ல திரும்பிடுவேன்.'* (வ.சொ.அக.).

[அச்சல்+அஞ்சல்]

**அஞ்சலகுஞ்சம்** *anjalakunjam* (பெ.) (n.) கோலிகுண்டு; play ball of glass. 'அஞ்சல குஞ்சம்'.

**அஞ்சலி** *anjali* (பெ.) (n.) இரட்டைக் கை முத்திரைகளில் ஒன்று; one of the two hand impression.

**அஞ்சலித்தட்டு** *anjali-t-tattu* (பெ.) (n.) கும்மி நடனத்தில் கைகளைத் தட்டும் முறை. (2 : 107); method of clapping in the *kummi* dance.

[அஞ்சலி+தட்டு]

**அஞ்சலிஅத்தம்** *anjaliattam* பெ. (n.) சிற்பங்களில் காணப்பெறும் ஒரு வகையான திருக்கரம்; a type of hand seen in the icon statues.

[அஞ்சலி+அத்தம்]

**அஞ்சலிஅத்தமுத்திரை** *anjaliattamuttirai* (பெ.) (n.) திருமலை நாயக்கர் உருவம் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ள முத்திரை, சிற்ப முத்திரைகளில் ஒன்று; one of the icon statues with impression of Thirumalainayakker.

[அஞ்சலி+அத்தம்+முத்திரை]

**அஞ்சனம்** *añjanam,* பெ. (n.) ஒரு வகை நெல்; a kind of paddy.

[அஞ்சு–அஞ்சனம்]

**அஞ்சாங்கல்** *anjaankal,* (பெ.) (n.) சிறுவர் விளையாடும் ஒரு வகை விளையாட்டு; a type of game played by children. (கொ.வ.வ.சொ.).

[ஐந்து–அஞ்சு+அம்+கல்]

**அஞ்சாடுதல்** *añjadu-* (பெ.) (n.) கருவுற்ற பெண்ணுக்கு 5ஆவது மாதத்தில் நடைபெறும் சீர்; presentation given to pregnant lady in the fifth month of her pregnancy. (கொ.வ.வ.சொ.3).

[ஐந்து–அஞ்சு+ஆடு]

**அஞ்சாமடை** *añjāmadai,* பெ. (n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramagudi Taluk.

[ஐந்தாம்–அஞ்சாம்+மடை]

**அஞ்சியத்தைமகள்நாகையார்,** *añji-yattai-magal-nāgaiyār,* பெ. (n.) பெண்பாலார் புலவர்; woman poet.

[அஞ்சி+அத்தை+மகள்+நாகையார்]

நாகை என்பது இவளுடைய பெயர். தகடூர் அதிகமான் அரசர்களில் அஞ்சி என்னும்அரசன் ஒருவனின் அத்தை மகள்.

**அஞ்சுகுளம்பாய்** *anjukuḷampāi* பெ. (n.) வடிவம் பொறித்த பாய்; (ம.வ.தொ. 67.). a mat with design.

[அஞ்சுகுளம் + பாய்]

**அஞ்சாலி** *añjāli,* பெ. (n.) எழுத்து மூலமான ஒப்புதல்; a written agreement. *"பொறியாரையும் ஊராரையும் வளைச்சு அஞ்சாலி எழுதிப் படிப்பிச்சுக் கடமையுங் கொண்டு"* (TAS, iii, p. 59-63.).

[அஞ்சல்–அஞ்சாலி ]

**அஞ்சி** *anji* பெ. (n.) 1. குறுநில மன்னனைக் குறித்த பெயர்; name of a chieftain. 2. அதியமான் மரபினன்; name of Adiyaman clan of chera dynasty.

ம.அஞ்சி–படைத் தலைவன்.க.அன்சு (அஞ்சு) பங்கு, பிரிவு.

[அஞ்சல்– பிரிப்பு. அஞ்சி–குறு நிலப் பகுதிக்கு (தன் பங்குக்கு) த்தலைவன்.]

இராவணன் தம்பி வீடணனின் பெயரும் அஞ்சி என்பர். அஞ்சுபவன் எனத்தவறாகப் பொருள் கொண்டதால் வடமொழியில் வீபிஷணன் எனப்பெயரிடடனர்.

**அஞ்சிஅஃதைமகள் நாகையார்** *anjiakdai magalnāgayār.* பெ. (n.) பெண்பாற் புலவரின் பெயர்; name of a Tamil poetess.

ம. அஞ்சி. க. அன்சு. (அஞ்சு) பங்கு, பிரிவு.

[அஞ்சி (குறுநிலத்தலைவன்) – அஃதை+மகள்+நாகை+ஆர்]

அஞ்சு எனும் சொல் பங்கு எனப் பொருள்படுதலால் தனக்குத் தரப்பட்ட பங்காகிய நிலப்பகுதியின் குறுநிலமன்னன் எனப்பொருள் படுகிறது.

**அஞ்சிதம்** *anjiṭṭam* பெ.) (n.) தெருக்கூத்தில் கதை மாந்தர்களாய் பிரிந்து ஒதுங்கி நிற்கும் நிலை; allotted position of characters in street drama.

[அஞ்சு–அஞ்சிதம்]

**அஞ்சுகட்டிப்பூ** *añjukaṭṭi-p-pū,* பெ. (n.) ஒரு வகை அணிகலன்; a kind of ornament. *"அஞ்சுகட்டிப்பூப்பன்னிரண்டில்"* (SII, ii, 51.).

[அந்த+கட்டி+பூ]

**அஞ்சுபுல்** *ancu-p-pul,* பெ. (n.) பழங்குடி மக்கள் கூரை வேயப்பயன்படுத்தும் புல்; a grass variety used by tribes for thatching roof.

[அஞ்சு+புல்]

**அஞ்சுவண்ணப்பேறு** *añjuvaṇṇap-pēṟu,* பெ. (n.) ஒரு வகை மதிப்புரவு; an hounour. *"ஈஸ்ளீப்பு இருப்பானுக்கு அஞ்சு வண்ணமுபெடியாலும் வாயனத்தாலும் பாகுடமும் அஞ்சுவண்ணப் பேறும் பகல் விளக்கும்"* (EI, iii, 11.).

[ஐந்து+வண்ணம்+பேறு ]

**அஞ்செட்டி** *anceṭṭy,* (பெ.) (n.) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

[அஞ்சன்+செட்டி]

**அட்டகம்** *aṭṭagam,* பெ. (n.) எட்டு பாகம் கொண்ட நிலக்கூறு; *"திருவடி சோமாசியார் அட்டகத்துக்கு மேக்கும்."* (SII, xiv, 19.).

[எட்டு–எட்டகம்–அட்டகம்]

**அட்டணக்கால்** *attana-kal* (பெ.) (n.) ஒரு கால் மேல் மற்றொரு காலைப் போடுதல். (கொ.வ.வ.சொ.36). **அட்டணைக்கால் பார்க்க;**see *aṭṭanam-k.kāl,*

[அட்டனை–அட்டணம்+கால்]



**அட்டலங்காய்புட்டலங்காய்** *aṭṭalangkāyputta lankāy*,(பெ.)(n.) குழந்தைகள் காலினை நீட்டி ஆடும் விளையாட்டு. (14-7).a play of childrens leg.

*[அட்டலம்+காய்+புட்டலம்+காய்]*

**அட்டமாணியம்** *aṭṭamaṇiyam*, பெ. (n.) ஊதியம் வாங்காமல் செய்யும் அதிகாரம்; non salaried people's prerogative. *'ஏலே, என்ன ரொம்பத்தான் அட்டமணியம் பண்ணிக்கிட்டு அலையுதே?'* (வ.சொ.அக.).

*[அட்டம்(குறுக்கு)+மணியம்]*

**அட்டளைக்கல்** *aṭṭalaikkal*,பெ. (n.) தரையில் அடுக்கும் நெல் மூட்டைகளுக்குக் கீழே போடப்படும் கல்; a stand like stones applied in the bottom of rice bags, to prevent moisture. *'மூட்டைக்குக் கீழே அட்டளைக்கல் போடுதே, இல்லாட்டி ஈரம் படிக்கும்.'* (வ.சொ.அக.).

*[அட்டாலை → அட்டளை + கல்]*

**அட்டாலி** *aṭṭali* (பெ.) (n.) வீட்டின் மேல் பகுதியில் உள்ள பரண். (கொ.வ.வ.சொ.3).a shelf in the roof of a house.

*[அட்டாளி – அட்டாலி ]*

**அட்டாதுட்டி** *aṭṭātuṭṭi*, பெ.) (n.) தாறுமாறு; disorder,improper, rough behaviour.

*[அட்டம் +(துட்டம்) துட்டி]*

**அட்டாளப்பலகை** *aṭṭāla-p-palakai*, பெ. (n.) சுவரில் பொருத்தப்பட்டிருக்கும் பொருள்கள் வைக்கும் பலகை; a wooden loft. (வ.சொ.அக.).

த.வ. அட்டாளம்.

*[அட்டாலை → அட்டாளை + பலகை]*

**அட்டாளி** *aṭṭāḷi*, பெ. (n.) **அட்டாளப்பலகை** பார்க்க; see aṭṭāḷa-p-palagai.

*[அட்டாலி → அட்டாளி]*

**அட்டான்** *aṭṭan*, பெ. (n.) கொன்றவன்; a killer *"கடந்து அட்டான் கேழ் இருங் குன்று"* *(பரி. 2:47:6.).*

*[அடு–அட்டான்]*

**அட்டி** *aṭṭi*, பெ. (n.) வரிசை; row. *'மூட்டை எத்தனை அட்டி வைத்தாய்'*.

*[அள்–அட்டு–அட்டி]*

**அட்டிட்டல்** *aṭṭi-*, பெ.(n.) சமைத்துப் படைத்தல்; to cook and serve. *"அட்டிட்டல் காணாது போதியோ பூம் பாவாய்" (சம். 2:47:6.).*

**அட்டிப்பேறு** *aṭṭiperu*, பெ. (n.) நீர் வார்த்துக் கொடுத்து ஒப்படைத்தல்; to made gifts by pouring water on the right hand of the donee. (தெ.கோ.சா.3 : 2).

*[அட்டு + இ + பேறு]*

**அட்டியல் போடுதல்** *aṭṭiyalpōdu-*, செ.கு.வி. (v.i.) மூட்டைகளை ஒன்றின் மேல் ஒன்றாகச் சேர்த்து அடுக்குதல்; an arrangement of bags in order, to hold each other. *'மூட்டைகளை அட்டியல் போடு.'* (வ.சொ.அக.). படைத்தல்; (மாகேசுவர பூசை);offering.

*[கட்டியில்+போடு]*

**அட்டில்பள்ளியார்** *aṭṭilpaḷḷiyār*, பெ. (n.) மடைப்பள்ளியில் உள்ளவர்; cusinary staff. *"ஆராட்டும் பணையமாகக் கொள்வது அட்டில் பள்ளியார் பணிக்குரியார்."* (EI. xxxiii, 33.).

*[அட்டியல்+பள்ளி+ஆர்]*

**அட்டிற்று** *aṭṭirrru*, பெ. (n.) சமையல் அறையிலுள்ள உணவு; feast. *"அட்டிற்றுத் தின்பவர் ஆயிரவர் ஆபவே". (படி. 59:2.).*

*[அட்டு + இட்டு]*

**அட்டு-தல்** *aṭṭu-*, செ.குன்றாவி.(v.t.) உண்பித்தல்; to hoast *"பாசம் தீக் கட்டுப்பலி அட்டினார்கள்". (மூல. 150).*

*[ஆடு–அட்டு]*

**அட்டுக்குஞ்சு** (பெ.) (n.) பிறந்து ஓரிரு நாள்களே ஆன பறவைக் குஞ்சு. (கொ.வ.வ.சொ.3); a newly born bird.



*[அடு(அடை)-அட்டு+குஞ்சி]*

**அட்டுக்குட்டி** (பெ.) (n.) பிறந்து ஓரிரு நாள்களே ஆன குட்டி. (கொ.வ.வ.சொ.3).

*[அடு(அடை)-அட்டு+குட்டி]*



**அட்டு-தல்** *attu-,* செ.குன்றா.வி. (v.i.) செலுத்துதல்; to remit. *"இப்படி வழுவாமேய் அட்டுக."* (SII, xiii, 44.).

*[அடு-அட்டு]*

**அட்டுப்பால்** (பெ.) (n.) தாயினை இழந்த குட்டிகளுக்கு வளரும் வரை புட்டிலில் பால் கொடுத்தல் to feed with feeding bottle. (கொ.வ.வ.சொ.3).

*[அடு+பால்]*

**அட்டுவார்** *attuvār-,* பெ. (n.) கோவில்களில் சமைப்பவர்; temple cook. *"திருமடைப்பள்ளி அட்டுவார் இருவற்கும்"* (EI, xxviii, 47.).

*[அடு-அட்டு+ஆர்]*

**அட்டுவி-த்தல்** *attuvitt-,* செ.குன்றாவி. (v.i.) அமைப்பித்தல்; to construct. *"கரையட்டுவிச்சு காரும் வெட்டுவிச்சு"* (SII, v, 727.).

*[அட்டு-அட்டுவி]*

**அட்டூண்** *attoon,* (பெ.). (n.) சமைத்த உணவு; cooked food. *"முட்டாது நடா அம் அட்டு ஊண் கம்பலும்". (பெருங். 60: 87).*

[அட்டு+ஊண்]

**அட்டை எழுத்து** *attaieluttu,* பெ. (n.) அ முதல் னகரம் வரையுள்ள எழுத்துகள் அடங்கிய அரிச்சுவடிப் பொத்தகம்.

*[அட்டை+எழுத்து]*

**அடக்கம்** பெ. (n.) பழம்பெரு தோற்கருவியினுள் ஒரு வகை. a kind of drum.

*[அடக்கு-அடக்க]*

**அடக்கற்பாலு-தல்** *adakkarpalu-,* (பெ.). (n.) ஈமக் கடனைச் செய்ய இயலுதல்;capability of burrying the deceased. *"நடுக்கம் இல் நாமும் முன் நின்று அடக்கற் பாலம் என்று". (பெருங். 105 : 187 – 8).*

*[அடக்கல்-(புதைத்தல்)+பாலு]*

**அடக்கினார்கொளல்** *adakkinārkolal,* (பெ.) (n.) அடக்கிக் கொள்ளல்.;to control himself. *"அத்தகு மரபின் அடக்கினார் கொளலே" (ப.பா. 58.).*

*[அடக்கு-அடக்கினார்+ கொளல்]*

**அடக்குதல்** (பெ.). (n.) அவியச்செய்தல்; to reduce stiffness. *"கொண்டடி மகளிரைப் பான்மையின் பிணித்துப் படிற்றுரை அடக்குதல்" (மணி. 18:109-10.).*

*[அடங்கு-அடக்கு]*

**அடக்குவி-த்தால்** *adakkuvi-,* (பி.வி.). (v.caus.) அமைந்திருக்கச் செய்த; to subdue. *"அடக்குவித்தால் ஆர் ஒருவர் அடங்காதாரே." (நாவு. 6:95-3.).*

**அடக்குவி-த்தல்** *adakkuvi-,* செயப்.வி (caus.v) ஈமக்கடன்களைச் செய்வித்தல்; to perform last rites. *"அமார் புகழுத்தமனின் அடக்குவித்து ஈமம் ஏற்றி". (பெருங். 105 : 189-90.).*

*[அடக்கு+வி]*

**அடங்கலும்** *aḍangalum,* இடை.(part) முழுதும்;entire. *"பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும் பசியும் பிணியும் பகையும் நீங்கி". (சிலப்.5 : 11–2).*

*[அடங்கல்+உம்]*

**அடங்காஒழுக்கம்** *aḍangāoḷukkam,* (பெ.). (n.) ஐம்பொறிகள் அடங்காமல் பரத்தையரிடம் செல்லும் புறத்து ஒழுக்கம்;immoral sexual contact as a result of incapability of controlling senses.; *"அடங்கா ஒழுகத்து அவன்வயின் அழிந்தோளை" (தொல். 22:9).*

*[அடங்கா+ஒழுக்கம்]*

**அடங்காக் கம்பலை** *aḍangākkambalai,* (பெ.). (n.) கட்டுப்பாடற்ற பேரோசை;uproar. *"நால்வகை வருணத்து அடங்காக் கம்பலை உடங்கு இயைத்து ஒலிப்ப." (சிலப். 6:164–5).*

*[அடங்காத+கம்பலை]*

**அடங்காக்கால்** *aḍangākkāl,* (வி.எ.). (adv.) அங்காவிடில்;if not suibmissive. *"ஏற்பானும் தானும் அடங்காக்கால்." (அற. 84.).*

*[அடங்காத+ கால்]*

**அடங்காதோர்** *aḍangādōr,* (பெ.). (n.) பகைவர்;enemies. *"அடி புறந்தருகுவர் அடங்காதோரே" (புற. 35 : 34.).*

*[அடங்கு+ஆ–(தவர்)தோர்]*

**அடங்கானாய்** *aḍangānay,* (வி.எ.). (adv.) தணியானாகி; crossing the limit of self control. *"இடங்கழி காமமொடு அடங்கானாய்" (மணி. 10 : 22.).*

*[அடங்கான்+ஆய்]*

**அடங்கியகற்பு** *aḍangiyakarppu,* (பெ.). (n.) கற்பு;chastity of compassionate attitude. (அமைதி நிலையில் வெளிப்படும் கற்பு) *"அடங்கிய கற்பின் நலங்கேழ் அரிவை." (குற. 339 : 1:8.)*

*[அடங்கி+அ+கற்பு]*

**அடங்கியசாயல்** *aḍangiyacāyal,* (பெ.) (n.) மென்மைத் தன்மை; soft behaviour. *"ஆறிய கற்பின் அடங்கிய சாயல்" (பதி. 16 : 10.)*

*[அடங்கு+அ+சாயல்]*

**அடங்கியான்** *aḍangiyāṉ,* (பெ.) (n.) மனம் மொழி மெய்கள் தீயவழியில் செல்லப் பெறாதவன்;a man of self control. *"நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்." (குறள். 13 : 4.).*

*[அடங்குபவன்–அடங்கியான்]*

**அடங்கினர்** *aḍanginar,* (பெ.) (n.) 1. பணிவு உடையவர்; one who is submissive. *"நல் தவ முனிவரும் கற்று அடங்கினரும்". (மணி.26:74).* 2. உறவினர்; relations. *"சொல் அவிந்து இனிது அடங்கினரே மாக்கள்" (குறு. 6 1 2).*

*[அடங்கு–அடங்கினர்]*

**அடங்கினார்** *aḍanginār,* (பெ.) (n.) விதித்தன செய்து விலக்கிய ஒழிவார்; *"அடங்காது அடங்கினார்க்கு ஈதல் இடையே". (அற. 84.).*

**அடங்குழி** *aḍankuḷi,* (வி.எ.) (adv.) உறங்கும் பொழுது: while sleeping. *"விழித்துழி விழித்தும் அடங்குழி அடங்கியும்". (கல். 7 :3).*

*[அடங்கு+உழி]*

**அடசல்** *aḍasal,* (பெ.) (n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[அடைசல்–அடசல்]*

**அடசல்** *adasal,* (பெ.) (n.) இட்டிலியை வேக வைத்து எடுக்கும் அளவு;number of set while cooking of steamed cake (*iddly*) at steamed point. (கொ.வ.வ.சொ.3).

*[அடைசல்–அடசல்]*

**அடறவிளை** *adaṟaviḷai,* (பெ.) (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ளள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[அடறு+விளை–மிளை–விளை]*

**அடசுவயல்** *adaśuvayal,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[அடை–அடைசு–அடசு+வயல்]*

**அடந்தை** *adandai,* (பெ.) (n.) தொண்டரடிப் பொடியாழ்வாரது திருவரங்கத்து வனங்கள்;

flower garden. "அடந்தை நடந்தை வனஞ்சூழ் அரங்கத்து அரவனை" (அட். 2 : 20.).

[அடு–அடைந்தை]

**அடப்பு** (பெ.) (n.) 1.மூடி;lid. 2.குடுவை; mug.(கொ.வ.வ.சொ.37).

[அடைப்பு–அடப்பு]

**அடம்** *aḍam*, பெ. (n.) திடம், அழுத்தம்; strength, power. 'மாடு நல்ல அடமா இருக்கு' (வ.சொ.அக.).

[அடு–அடம்]

**அடர்த்தல்** *adar-*,(தொ.பெ.)(v.n.) உதைத்தல்; kicking "அல்லாத காலனை முன் அடர்த்தல் தோன்றும்" (நாவு. 6 : 18 : 3.).

[அடு–அடர்]

**அடர்த்தருளி** *adarttaruḷi*, வி.எ. (adv.) பிளந்து; to cut into two. "அன்று இருகூறாய் அடர்த்தருளி" (ஒட். பா. 1).

[அடு–அடர்த்து+அருள்]

**அடர்த்தவர்** *aḍarttavar*,(பெ.) (n.) அழுத்தியவர்; "இலங்கைக் குரிசிலைக் குலவரைக் கீழ் உற அடர்த்தவர்" (சம். 3 93 – 8).

[அடு–அடர்த்ததவர்]

**அடர்த்தல்** *aḍarttal*, (தொ.பெ.) (vbl.n.) மெலிவித்தல்; to weaken "எடுப்பன் என்று இலங்கைக் கோன் வந்து எடுத்தலும் இருபது தோள் அடர்த்தனே ஆலவாயில் அப்பனே." (நாவு. 4 : 62 10.).

[அடர்–அடர்த்தல்]

**அடர்த்தோன்** *aḍarttōṉ*,(பெ.)(n.) தழுவினவன்; one who subdued the bull. "வனம் தலை ஏறு அடர்த்தோன்". (நம். 2 :56).

[அடு–அடர்]

**அடர்ந்தவர்** *aḍarndavar*, (பெ.) (n.) போர் செய்தவர்; fighters. "அங்கு அடர்ந்தவர் தம்மை அடர்ந்து" (தி.தி. 14 :10 ).

[அடு–அவர்]

**அடர்ந்தேற்றம்** *aḍarndēṟṟam*, பெ. (n.) மொத்தமாக வரையறுக்கப்பட்ட வரி; totally defined tax. (தெ.கோ.சா.3 : 2).

[அடர்ந்து + ஏற்றம்]

**அடர்வான்** *aḍarvāṉ*, (பெ.) (n.) போர் செய்பவன்;warrior. "வாளால் மடிவித்து வலித்து அடர்வான்" (யுத். 20 : 82.).

[அடர்–அடர்வான்]

**அடர்வித்தல்** *aḍarvittal*,தொ.பெ. (vbl.n.) வருந்தச் செய்தல்; to annoy. "செறிகழல் சேர் திருவடியின் விரலால் அடர்வித்தான் இடம் விரி நீர் வியலூரே." (சம். 1: 13 : 8.).

[அடர்–அடர்வி]

**அடர்வு** *aḍarvu*, (பெ.) (n.) நெருக்கம்; very close. "உரம் நெரிதர வரை அடர்வு செய்தவன்." (சம். 11: 125 : 8.).

[அடர்+அடர்வு]

**அடரப்பட்டான்** *aḍarappaṭṭāṉ*, (பெ.) (n.) அடக்கப்பட்டவன்; one subdued. "அரக்கன் ஆண்மை அடரப்பட்டான் இறை." (சம்.1:57 : 9.).

[அடர+பட்டான்]

**அடலோர்** *aḍalōr*, (பெ.) (n.) வலிமை உள்ளோர்; strong warrior. "அடலோர் பயிற்றும் நின் சுடர் மொழி ஆண்மையும்" (இலா. 15 : 2)

[அடல்+(ஆர்)ஓர்]

**அடவி** *aḍavi*, பெ. (n.) 1. போர்ப்படை; army. (தெ.கோ.சா.3 : 2).

[அடர் + வி]

**அடவிப்புடவி** *aḍavippuḍavi*, (பெ.) (n.) காட்டை அடுத்துள்ள நிலம்;proximity of forest area. "விந்தாடவிப் புடவி போய்" (ஒட். 4: 13).

[அடவி+புடவி]

**அடவிளாகம்** *aḍaviḷāgam*, பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்தில்உள்ள ஓர் ஊர்; name of the village in Chengalpattu.

[அடர்+விளாகம்]

**அடாஅது** *aḍaadu*, வி.எ. (adv.) சமைக்காமல்; without cooking. "அடா அது அட்ட அமுதம் வாய்மடுத்து" (சேர. 2 : 28.).

[அடு–அடாது]

**அடாக்களியவர்** *adakkaliyavar,* (பெ.) (n.) ஒழுக்கக்கேடு பண்ணாத களிப்பையுடையவர்; merry men with decency. *"சீவகன் அடாக்களியவர் தொழில் காண ஏகினான்." (சீவ. 4 : 66.).*

*[அடாத+களி+அவர்]*

**அடாதான்** *adādān,* (பெ.) (n.) பொருந்தாதவன்; enemy. *"அடாதான்பால், ஈரடியான் மூவுலகும் கொண்டானை" (ஒட். 1:215:16.).*

*[அடாதவன்–அடாதான்]*

**அடி** *adi,* பெ. (n.) கூடைகளுக்கு முதலில் போடும் குச்சியால் ஆன பின்னல். (ம.வ.தொ. 68.) ; bottom plait. 2. கட்ட விளையாட்டில் காய் களை நகர்த்தி, வெற்றி பாதை அடி எனப்படும். to make the items in such a way to gain success.3.ஒயிலாட்டத்தின் வகை; stylish step in oyllāttam.

*[அடு–அடி]*

**அடி அற்று** *adiyarru,* வி.எ. (adv.) கட்டுக் குலைந்து; to disunite. *"யோசனை ஐ இரண்டின் அளவு அடி அற்று உக" (கிட். 11 : 36.).*

*[அடி+(அறு)அற்று]*

**அடிக்க** *adikka,* (வி.எ.) (adv.) வீச; to below as wind. *"மாரியது கூந்தல் மறித்து அடிக்க" (பெ.பொ. 9:519.).*

*[அடி–அடிக்க]*

**அடிக்கடி** *adikkadi,* இடை.(part) அடுத்தடுத்தது; successively, often. *"அலக்கு உக அலக்கு உக அடிக்கடி சிரித்தன" (கலிங். 9 : 18.).*

**அடிக்கருத்து** *adikkaruttu,* பெ. (n.) ஓர் உரை, ஒரு கட்டுரை அல்லது கலைப் படைப்பின் உட் பொருள்; theme.

*[அடி+கருத்து]*

**அடிக்கள்** *adikkal,* (பெ.)(n.) பாதங்கள்;feet. *"காட்டீர் ஆணீர் நும்தம் அடிக்கள்" (மங்.4:9: 7.).*

*[அடி+கள்–அடிகள்(அடிக்கள்–வழுவமைதி)]*

**அடிக்காறை** *adikkārai,* பெ. (n.) காலில் அணியும் ஒருவகையணிகலன்; a kind of ornament which is worn an anklet.

*[அடி–காறை]*

**அடிக்கிண்டிவிடுதல்** *adi-k-kindividu,* செ.குன்றாவி. (v.t.) கீழுள்ள வைக்கோலை மேலே உதறுதல். (வ.வ.வே.க. 10.).to take and spread the hay from beneath.

*[அடி+கிண்டி+விடு]*

**அடிக்கில்** *adikkil,* வி.எ. (adv.) வீசினால்; if blown. *"மாருதம் சண்டம் அடிக்கில் என்" (மூல. 2850).*

*[அடி–அடிக்கில்]*

**அடிக்குருகு** *adikkurugu,* (பெ.) (n.) அடிக் குருத்து; sprout at the base. *"செம்பொடிப் புரத்திக் கயங்களைக் கொம்பு ஒடித்து அடிக் குருகு துற்றியே" (ஒட். 5 :496.)*

*[அடி+குருகு]*

**அடிகள்மார்** (பெ.) (n.) கோயிலில் நடனத்தைப் பேணிய மகளிர். (8:71);dancers in temple.

*[அடி+கள்+மார்]*

**அடிகளார்** *adigalār,* (பெ.) (n.) இறைவயன் அடியவர்; *"பரமர் எம் அடிகளார்" (சம். 1:75 :2).*

*[அடிகள்+கள்+ஆர்]*

**அடிகளேம்** *adigalēm,* (பெ.) (n.) அடியேங்கள்; respected persons. *"இந்த அடிகளேம் பணி நடத்த விரைவொடு வருவான் ஏக வேண்டும்." (கோ.பு. 5:108.).*

*[அடிகள்+(யாம்)ஏம்]*

**அடிகிட்டி** (பெ.) (n.) கிட்டிப்புள் குச்சியைப் பலவாறு அடித்து விளையாடல். (ம.வி. 41.).the way of playing kittipul game.

*[அடி+கிட்டி]*

**அடிகுடிமை** *adikudimai,* பெ. (n.) ஊழியம் செய்யும் குடிகள்; labourers working place or land. *"மக்கள் மருமக்களை யடிகுடிமை வடக்கிலறையறூந்நாரான மேலைக்கோட்டை பெரும்புலியூர்"* (IPS. 683.).

*[அடி+குடிமை]*

**அடிகேள்** *adigēl,* (பெ.) (n.) அடிகள் என்பதன் விளி; elongation of vocative form. *"மால்விடை மேல் வருவீர் அடிகேள் சொலீர்." (சம். 2:1:8.).*

*[அடிகள்–அடிகேள்]*

**அடிச்சுதளி** *aḍiccutaḷi,* பெ. (n.) பெருக்கி நீர்தெளித்துத் தூய்மை செய்தல்; cleaning. *"மாமண்டபமும் திருமடப்பள்ளியும் அடிச்சுதளியும்"*(TAS. iv. 148 - 50.).

*[அடித்து(+அடிச்சு)+(தெளி)தளி]*

**அடிச்சேடம்** *aḍiccēḍam,* (பெ.) (n.) அடியை அருச்சித்த மலர்; *"திருவடிச் சேடமும் திகழச் சூடினான்." (சூளா. 217.).*

*[அடி+சேடம்]*

**அடிச்சோறு** *aḍiccōṟu,* (பெ.) (n.) பாத்திர அடியில் ஒட்டியுள்ள சோறு. (கொ.வ.வ.சொ.4.). rice sticken at the bottom of the vessel.

*[அடி+சோறு]*

**அடிசில்கலம்** *aḍisilkalam,* (பெ.) (n.) அடிசில் ஆக்கும் கலம்; (சோறு சமைக்கும் பாத்திரம்); cooking vessel. *"அடிசில் கலம் கழீஇக் கருணை ஆர்ந்த இள வாளை" (சீவ. 13 :3.).*

*[அடிசில்+கலம்]*

**அடிசில்குழிசி** (பெ.) (n.) *aḍisilkuḻisi,* சோற்றுப் பானை; *cooking vessel. "குன்றா அடிசில் குழிசி காணினும்" (பெருங். 37 :253.).*

*[அடிசில்+குழிசி]*

**அடிசில்நூல்** *aḍisilnūl,* (பெ.) (n.) சமைக்கும் முறை பற்றிக் கூறும் நூல்; a treatise on cookery. *"ஐவருள் ஒருவன் அன்ன அடிசில் நூல் மடையன்" (சீவ. 13 : 137.).*

*[அடிசில்+நூல்]*

**அடிசூடு–தல்** *aḍisūḍu-,* செ.குன்றா.வி. (v.t.) வணங்குதல்; to pay obeyance. *"எழுந்து துள்ளினான் வீழ்ந்து இணை அடி சூடினான்." (வி.பா. 27 :77.).*

*[அடி + சூடு]*

**அடிசேர்–தல்** *aḍisēr-,* செகுன்றாவி. (v.t.) வீழ்ந்து வணங்குதல்; to prostrate. *"தப்பினேன் என்று அடி சேர்தலும் உண்டு." (கலி.89 :15.).*

*[அடி+சேர்]*

**அடித்தடி** *aḍittaḍi,* (பெ.) (n.) அடிக்கும் தடி;attacking stick. *"அடல் நாக எலும்பு எடுத்து நரம்பில் கட்டி அடித் தடியும் பிடித்து" (கலிங். 7 :4.).*

*[அடி+தடி]*

**அடித்தமை** *aḍittamai,* (பெ.) (n.) அடித்த செயல்; *"பொன் புரையும் மேனியில் அடித்தமை பொறாது" (வி.பா. 12 :109.).*

*[அடித்தல்–அடித்தமை]*

**அடித்தளை** *aḍittaḷai,* (பெ.) (n.) காலில் உள்ள விலங்கு;chain placed around a prisoner's ankles. *"கூடா மன்னர் அடித்தளை நீக்க அருள் சிறந்து ஒரு பால்" (சில. 5:182:3.).*

*[அடி+தளை]*

**அடித்திசை** *aḍittisai,* (பெ.) (n.) அடியிருக்கும் திசை; direction of the feet. *"தடக்கை கூப்பி நின் அடித் திசைக்கு இறைஞ்ச" (பெருங். 47 : 96.).*

*[அடி+திசை]*

**அடித்தொண்டன்** *aḍittoṇḍaṉ,* (பெ.) (n.) மெய்யுணர்வு செய்யும் பணியினன்; an ardent devotee. *"ஆரூர் நறுமலர் நாதன் அடித் தொண்டன்" (நாவு. 4 : 102 : 3.).*

*[அடி+தொண்டன்]*

**அடித்தொழிலாட்டி** *aḍittoḻilāṭṭi,* (பெ.) (n.) குற்றவேல் செய்பவள்; a maid servant. *"ஐயை காணீர் அடித் தொழிலாட்டி" (சில. 16 : 12.).*

*[அடி+தொழில்+ஆட்டி]*

**அடித்தொழும்பன்** *aḍitoḻumbaṉ,* (பெ.) (n.) திருவடித் தொண்டு செய்பவன்; a sincere servant. *"உம் அடித் தொழும்பனேனைப் பயங்கெடுத்து" (பெரிய. 3516.).*

*[அடி+தொழும்பு+அன்+ஏன்]*

**அடிதண்டம்** *aḍitaṇḍam,* பெ. (n.) செய்யாத குற்றத்திற்கு இடப்பட்ட கட்டாய ஒறுப்புக் கட்டணம்; compulsory fine levied for a crime or fault actually not committed. (வ.சொ.அக.).

*[அடி+தண்டம்]*

**அடிதாள்** பெ. (n.) அறுவடையில் தண்டு விட்டு அறுக்கப்பட்ட நெல்தாள்.paddy stalk cut leaving the stem.

*[அடி+தாள்]*

அறுத்துக்கட்டிய நெற்பயிர் அரிதாள் எனவும் அறுத்தப்பின் எஞ்சிநின்ற அடிக் கட்டைத் தாள் அடித்தாள் எனவும் வழங்கப் பெறும். இத்தாளிலிருந்து வளர்ந்த நெற்பயிர் தாளடிப் பயிர் எனப்படும்.

**அடிதுடி** (பெ.) (n.) சண்டை; quarrel. (கொ.வ.வ.சொ.4.).

*[அடி+தடி–அடிதடி–அடிதுடி]* [கொ.வ.]

**அடிதொடல்** *aḍitoḍal,*(பெ.) (n.) அடியைத் தொட்டு ஆணையிடுதல்; to take oath touching the feet. *"தன் பரங்குன்றத்து அடிதொட்டேன் என்பாய்" (பரி. 8 : 62.).*

*[அடி+தொடு+ அல்]*

**அடிதொடர்** *aḍitoḍar-,* (பெ.) (n.) அடியோடு தொடர்பு பட்டு;connected with *"அடி தொடர்ந்து ஈர்ந்து நிலம் தோயும் இரும் பிடித் தடக்கையின்" (சிறு.18 : 9.).*

*[அடி+தொடர்]*

**அடிதொடு கடன்** *aḍitoḍukaḍan,* (பெ.) (n.) சூளுற்ற கடன்;ceremony regarding oath taken. *"நின் அடி தொடு கடன் இது மிடறு உகுகுருதி" (சில.12 : 17.).*

*[அடி+தொடு+கடன்]*

**அடிதொடு குன்று** *aḍittoḍukunṟu,* (பெ.) (n.) வணங்கப்படும் குன்று; the hill worshiped *"ஐய சூளின் அடி தொடு குன்று" (பரி.8 : 70.).*

*[அடி+தொடு+குன்று]*

**அடிதோய்–தல்** *aḍitōy-,* (செ.கு.வி.) (v.i.) காலால் தீண்டல்; to touch with leg. *"கை வைக்கவும் அடி தோயவும் உடன் நின்று கலிக்கும் தொய்வக்க கொடி திசை தைவர நிற்பீர்" (ஒட். 5 : 11.).*

*[அடி+தோய்]*

**அடி நடத்து–தல்** *aḍi-naḍattu-,*செ.கு.வி. (v.i.) திருடியவனின் கால் தடத்தை வைத்து திருட்டைக் கண்டு பிடித்தல்; to find out the theft by tracing the foot print of the thief.

*[அடி+நடத்து]*

**அடிநிமிர்கிளவி** *aḍinimirkiḷavi,* (பெ.) (n.) பெருகி வரும் பண்ணத்தி; extending line of a stanza. *"அடி நிமிர் கிளவி ஈர் ஆறு ஆகும்." (தொல். 26 : 175.).*

*[அடி+நிமிர்+கிளவி]*

**அடிநிமிர்வு** *aḍinimirvu,* (பெ.) (n.) அடிகள் மிக்கு வருதல்; lines increasing. *"அம்மை தானே அடி நிமிர்வு இன்றே" (தொல். 26 : 227.).*

*[அடி+நிமிர்வு]*

**அடிநிழல்** *aḍiniḻal,* (பெ.) (n.) அருள்; compassion. *அடி நிழல்வட்டம் அடையத் தரூஉம்" (பெருங். 47 : 78.).*

*[அடி+நிழல்]*

**அடிநீர்** *aḍinīr,* (பெ.) (n.) கால் கழுவு நீர்; water treatment for washing the feet. *"காதலன் அடிநீர், சுடுமண் மண்டையில் தொழுதனள் மாற்றி" (சில. 16 : 38 – 9.).*

*[அடி+நீர்]*

**அடிப்பார்** *aḍippār,* (பெ.) (n.) உழவர்; farmer *"ஏர் அடிப்பார் கோல் எடுப்ப" (ந.வெ. 3 : 41.).*

*[அடி+ப்+ப்+ஆர்]*

**அடிப்பது** *aḍippadu,* (பெ.) (n.) வீசுவது; that which blows. *"கொம்புக்கும் அப்பால்அடிப்பது ஓர் காற்று உண்டு" (மூல. 2928).*

*[அ+அடிப்பது]*

**அடிப்பாணர்** *aḍippāṇar,*(பெ.) (n.) அடிமையாகிய பாணர்; *slave pāṇar "அடிப்பாணர் எனப் பிழைத்தார் அநேகர் ஆங்கே" (கலிங்.11 : 158.).*

*[அ+பாணர்]*

**அடிப்பலகை** *aḍippalagai* பெ. (n.) திருவையில் மண்ணை உருட்டி வைக்கும் பலகை. (ம.வ.தொ. 68.);a wooden plank used by the potters.

[அடி+பலகை]

**அடிப்பான்** *attippān* (பெ.) (n.) விளையாடுபவன் வைத்திருக்கும் குண்டு, எறிகுண்டு, தெல்லு; rural play or strike stone ball.

[அடி+ப்+ப்+ஆன்]

**அடிப்பான்காய்** *aḍippānkāy,* பெ. (n.) எதிர் கட்சிக்காரர் குறிப்பிட்டுச் சொன்ன காயினை அடித்தல். (எறிகாய் விளையாட்டு); to hit the aimed one.

[அடிப்பான்+காய்]

**அடிப்புறம்** *aḍippuram,* (பெ.) (n.) குதிக்கால்; hind leg. *"ஓர் காலனைக் கருத்து அடிப்புறத்தினால் நிறத்து உதைத்த" (சம்.2 : 98 : 2.).*

[அடி+புறம்]

**அடிப்பொடி**[1] *aḍippoḍi,* (பெ.) (n.) பாதத்தூசுக்கு நிகரான அடியார்; devotee. *"தொண்டர் அடிப்பொடி ஆழ்வார்" (தேசி. 12 : 16.).*

[அடி+பொடி]

**அடிப்பொடி**[2] *aḍippoḍi,* பெ. (n.) கால் தூசி; dust on the foot. *"அடிப்பொடி என் தலைமேலும்"* (SII. xii. 54.).

[அடி+பொடி]

**அடிபோடு–தல்** *aḍipōḍu-* செ.கு.வி.(v.i.) நின்ற நிலையில் ஆடும் கும்மியாட்டம். (2:92.). kummi play in standing position.

[அடி+போடு]



**அடிப்போடுதல்** *aḍi-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கூடை பின்னுவதற்கு முதல் முதலில் அடிப்போடுதல்; knitting the base for basket.

[அடி+போடு]

**அடிபடாதவர்** *aḍipaḍādavar,* (பெ.) (n.) அடிக்கப்படாதவர்; not beaten *"விண்ணில் உறை வானவரில் யார் அடிபடாதவர் விரிஞ்சன் அரியே முதலினோர்." (வி.பா. 12 : 107.).*

[அடி+படாதவர்]

**அடிபந்து** *aḍipandu* பெ. (n.) எறியும் பந்து; playball.

[அடி+பந்து]

**அடிபறி–த்தல்** *aḍi-paṟi-,* செ.கு.வி.(v.t.) சூழ்ச்சி செய்தல்; to plot, conspire.

[அடி+பறி]

**அடிபிடிதாங்கி** *aḍipiḍitāngi,* (பெ.) (n.) முதுகுளத்தூர்வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

[அடி+பிடி+தாங்கி]

**அடிபுதைதொடுதோல்** *aḍipuḍaitoḍutōl,* (பெ.) (n.) செருப்பு; sandal,shoe. *"நிரை புறத்து அடிபுதை தொடு தோல் பறைய ஏகி." (அக. 101 : 9.).*

[அடி+புதை+தொடு+தோல்]

**அடிபெயர்த்தாடு–தல்** *aḍipayar-t-tāḍu-* செ.கு.வி. (v.i.) அடைவுகள் இட ஆடுதல்; to step and dance.

[அடி+பெயர்த்து+ஆடு]

**அடிபெயர்த்திடுவான்** *aḍipeyar-t-tiḍuvā-n,* (பெ.) (n.) நடந்து செல்பவன்; one who walks. *"வெள்ளிடை வெயிலில் புள்ளி வெயர்பொடிப்ப அடி பெயர்த்திடுவான் ஒருவன்." (ப.பி. 3 : 16 : 42.)*

[அடி+பெயர்த்து+இடுவான்]

**அடிமடி** *aḍimaḍi* பெ. (n.) ஆடையினுள் மடிப்பு (நெ.தொ.சொ. 52); inner fold of dress.

[அடி+மடி]

**அடிமயக்கு** *aḍimayakku,* (பெ.) (n.) சித்திர கவி வகை; a kind of picture poetry in prosody. *"சொற்றிடும் மாலை மாற்றே சூழிகுளம்*

*அடிமயக்கு .............. சருப்பதோபத்திரங்கள் .............. சித்திர கவி என்றாமே" (நிக.க. 12 : 26 : 27 – 28).*

*[அடி+மயக்கு]*

**அடிமாட்டுவிலை,** *adi-māttuvilai,* பெ. (n.) குறைவான விலை; lowest rate of a thing.

[அடிமாடு+விலை]

அடிமாடு= கறிசமைக்கக் கொல்வதற்குரிய மாடு. இதன் விலை வேறு பணிகளுக்காக வாங்கும் மாட்டின் விலையைக் காட்டிலும் குறைவாகவே இருக்கும். அடித்தல் = கொல்லுதல்.

ஒ.நோ. கோழியடித்தல்.

**அடிமாடு** *adi-mādu,* (பெ.) (n.) இறைச் சிக்காகக் கொல்லப்படும் மாடு. (கொ.வ. வ.சொ.4.) cow or bull to be killed for meat.

*[அடி+மாடு]*

**அடிமுறை** *adi-murai,* (பெ.) (n.) தற்காப்பு விளையாட்டுகளில் ஒன்று அடவு (14–8); one of the methods of self protection.

*[அடி+முறை]*

**அடிமைத்தனம்** *adimai-t-tanam,* (பெ.) (n.) பிறருக்குக்கட்டாயத்தொண்டு செய்யும் நிலைமை; compulsory slavery system.

*[அடிமை+தனம்]*

**அடிமைத் தொழில்** *adimaittolil,* (பெ.) (n.) திருப்பணி; voluntary service. *"மால் குறள் ஆன அந்தணர்க்கு அடிமைத் தொழில் பூண்டாயே." (மங். 2 : 1 – 1.).*

*[அடிமை+தொழில்]*

**அடிமைப்பணி** *adimaippani,* (பெ.) (n.) தொண்டு; service of an ardent devotee. *"மீளா அடிமைப்பணி செய்யப் புகுந்தேன்: (சட. 9 : 8 : 4.)*

*[அடிமை+பணி]*

**அடிமைபுகு—தல்** *adimaipugu-,* (பெ.) (n.) ஆட்படுவது; entrusting one self for voluntary service. *"ஆடு புள் கொடி ஆதி மூர்த்திக்கு அடிமை புகுவதுவே." (சட. 4 : 10 – 7.).*

*[அடிமை+புகு]*

**அடிமொழி** *adimoli,* (பெ.) (n.) அடிமொழி மாற்று என்னும் பொருள்கோள்; a constructing method of a poem. *"அடிமொழி சுண்ணம் ....... பொருளொடு ஒன்பான்." (நேமி. செ. 67.).*

*[அடிமை+மொழி]*

**அடியகம்** *adiyagam,* (பெ.) (n.) பாதச் சுவட்டின் இடம்; the place of foot print. *"பெருங்களிறு மித்தஅடியகத்து." (அக. 155 : 11.).*

*[அடி+அகம்]*

**அடியவள்** *adiyaval,* (பெ.) (n.) பத்திமை கொண்டவள் (பக்தை); devotee. *"ஆங்கு அது தன்னில் அடியவட்கு ஆகம் பாங்காய் மண் சுமந்து அருளிய பரிசும்." (வாச. 2 : 46.).*

*[அடி+skt. antaram]*

**அடியன்தரம்** *adiyantaram,* பெ. (n.) இடையூறு; disturbance. *"இப்பூமி பாட்டமாண்டு முட்டிரட்டியும் அடியன்தரமும் தீர்த்து"* (TAS. iii. 169 - 71.).

*[அடி+அன்தரம்]*

**அடியான்** *adiyān,* பெ. (n.) ஏசுதற்சொல்; an abusive term, scolding word. (வ.சொ.அக.).

*[அடி+ஆன்]*

**அடியிசை** *adiisai,* (பெ.) (n.) அடி ஓசை; sound of step. *"அடியிசை கேட்கும் எல்லை அகன்று" (பெருங். 47 : 36– 7.).*

*[அடி+இசை]*

**அடியிடல்** *adiidal,* (பெ.) (n.) 1.அடி வைத்தல்; to step. *"தச்சு விடுத்தலும் தாம் அடியிடலும்" (வாச. 296.).* 2.தொடக்கம் செய்தல்; to inaugurate. *"பிறர் கொள்ளும் ஆர்வத்துக்கு அன்றே அடியிட்டாள்." (ஒட். 6 : 133.).*

*[அடி+இடல்]*

**அடியிணை** *adiinai,* (பெ.) (n.) இரண்டு பாதங்கள்; feet. *"ஐவரை வென்றோன் அடியிணை அல்லது." (சில. 10 : 198.).*

*[அடி+இணை]*

**அடியில்** *adiyil,* (பெ.) (n.) கீழ்ப்பகுதியில்; below, bottom. *"பல்லோர் காணும் பருஉத்திரள் அடியில். (பெருங். 60 : 119.).*

*[அடி+இல்]*

**அடியில்தொடுவன** *adiyiltoduvana,* (பெ.) (n.) மிதியடி; shoe. *"அடியில் தொடுவன பாதுகை, மிதியடி" (நிக.தி. 7 : 247.).*

*[அடியில்+தொவன்]*

**அடியுறை மகளிர்** *adiyuraimagalir,* (பெ.) (n.) இறைவன் கோயிலில் உறைந்து கூத்தாடும் மகளிர்;dancers in the temple. *"அடியுறை மகளிர் ஆடும்தோளே" (பரி. 14 : 5).*

*[அடி+உறை+மகளிர்]*

**அடியுண்டவன்** *adiyundavan,* (பெ.) (n.) அடிப்பட்டவன்; wounded person. "அடியுண்டவன் ஆவி குலைந்து அயரார்"(யுத்.20:90).

*[அடி+உண்டவன்]*

**அடிவட்டணை** *adivattanai,* (பெ.) (n.) பாதங்களால் இயற்றும் நாட்டிய வகை; step-dance. *"அடிவட்டணைகள் கட்ட நடம் அடி' (சம். 3 : 75 – 4.).*

*[அடி+வட்டணை]*

**அடிவண்டல்** *adivandal,* பெ.(n.) குடும்பத்தின் கடைசிக் குழந்தை, கடைக்குட்டி; the last child in a family.

*[அடி+வண்டல்]*

**அடிவம்பு** *adivambu,* (பெ.) (n.) அடியின் விளிம்பு;the brim of the foot. *"சற்று அடி வம்பு அசைந்துச் சடைமுடி இலங்கும் தூது மற்றும் ஓர் கங்கை என்ன வருபவன்'''(திதி. 28 : 9.).*

*[அடி+(வடிம்பு)வம்பு]*

**அடிவலம்கொள்ளல்** *adivalamkollal,* (பெ.) (n.) விடைபெறுதல்; taking leave of. *"ஏதம் இல் புகழினால் யான் அடிவலம் கொள்ளல் என்னா" (சூளா. 570.).*

*[அடி+வலம்+கொள்ளல்]*

**அடிவழி** *adivali,* (பெ.) (n.) அடியினது வழி; track of the step. *"அடிவழிப் படூஉம் உரிமையுள் கம்மியன்" (பெருங். 47 : 31).*

*[அடி+வழி]*

**அடிவாளி** *adivali,* (பெ.) (n.) காமனின் முதல் அம்பாகிய தாமரை; lotus the first arrow of the god, *kāman "அடிவாளி விள்ளும் பகற்காலம்" (ஒட். 3 : 275.).*

*[அடி+வாளி]*

**அடிவினைக்காரன்** *adivinai-k-kāran,* (பெ.) (n.) மிகவும் கொடியவன், கீழறுப்பவன், cut throat. 2.காட்டிக் கொடுப்பவன்; traitor. *(மீனவ).)*

*[அடி+வினை+காரன்]*

**அடுக்கம்** *adukkam,* (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thirukkoyilur Taluk.

*[அடுக்கு+அம்]*

**அடுக்கம்பாறை** *adukkampārai,* (பெ.) (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in vellore Taluk.

*[அடுக்கம்+பாறை]*

**அடுக்களைக்காணி** *adukkalai-k-kāni,* பெ. (n.) கோயில் மடைப்பள்ளிச் செலவுக்கு விடப்படும் நிலம்; the land donated to meet the expenses cookery. *"சந்திரப் பிரவேசமே அடுக்களக் காணியா ஸ்ரீதுல்யம் சார்த்திப் பட்டயம் கொடுக்கையில்"* (TAS. viii. P. 7-8.).

*[அடுக்களை+காணி]*

**அடுக்கிய கோடி** *adukkiyakōdi,* (பெ.) (n.) பல்கோடி; multi crore. *"அடுக்கிய கோடி பெறினும் குடிப் பிறந்தார் குன்றுவ செய்தல் இலர்." (குறள். 96 : 4.).*

*[அடுக்கிய+கோடி]*

**அடுக்குந** *adukkuna,* (பெ.) (n.) பலவாகத் தொடர்ந்து வருவன; that which continues in multiples *"வினை எஞ்சு கிளவி சொல் முறை முடியாது அடுக்குந வரினும்" (தொல். 15 : 36.).*

*[அடுக்கு+ந]*

**அடுகாடு** *adukādu,* (பெ.) (n.) சுடலை (சுடுகாடு); burial ground. *"அடுகாடு சேர அறமனார்" (பர. 90).*

*மறுவ இடுகாடு.*

*[அடு+காடு]*

**அடுகிற்பார்** *aḍukiṟpār,* (பெ.) (n.) கொல்ல வல்லார்; the killers. *"வென்று அடுகிற்பாரை வேர்ப்பித்து." (படி. 65 : 1).*

*[அடுக்கி+பார்]*

**அடுகுரல்** *aḍukural,* (பெ.) (n.) கொல்லும் குரல் ஓசை; roar of a lion. *"அடு குரல் அரச சீயம் அதனை" (சூளா. 1143.).*

*[அடு+குரல்]*

**அடுகை** *aḍukai,* (பெ.) (n.) சமைத்தல்; cooking. *"சோறு அடுகை கற்கைக்கு" (ஒட். 6 : 119.).*

க.அடிகெ.

*[அடு+கை+]*

**அடுங்கரை** *aḍuṅkarai,* (பெ.) (n.) இடிகரை; eroded bank. *"உரவுத் திரை அடுங்கரை வாழையின் நடுங்க" (குறி. 178 – 79.).*

*[அடும்+கரை]*

**அடுங்கால்** *aḍuṅkāl,* பெ.எ. (adj.) துன்பம் நேரும் பொழுது;at the time of difficulty. *"இன்பம் கடல் மற்று காமம், அஃது அடுங்கால் துன்பம் அதனின் பெரிது." (குறள். 117 – 6.).*

*[அடும்+கால்]*

**அடுத்தது** *aḍuttadu,* (பெ.) (n.) அருகில் உள்ள பொருள்; thing adjaceut. *"அடுத்தது காட்டும் பளிங்கு போல்" (குறள். 7 1– 6.).*

*[அடு+த்+த்த+து]*

**அடுத்தல்செல்** *aḍuttalsel,* செ.குன்றாவி. (v.t.) சேர்ப்பித்தல்;to entrust. *"உடைத்த பின்றை அல்லது நங்கையை அடுத்தல் செல்லான் அரசன்" (பெருங். 95 : 86 – 7.).*

*[அடுத்தல்+செல்லான்]*

**அடுத்தவர்** *aḍuttavar,* (பெ.) (n.) அடைக்கலம் அடைந்தவர்; refugee *"அடாத மன்னரை அடர்ந்து அடுத்தவரை அஞ்சல் என்று" (வி.பா. 10 : 50.).*

*[அடுத்த+அவர்]*

**அடுத்ததாட்டி** *aḍuttadāṭṭi,* அடுத்தமுறை; again next time. (கொ.வ.வ.சொ.4.).

*[அடுத்த+(தடவை) தாட்டி]*

**அடுத்துள்ளோர்** *aḍuttuḷōr,* (பெ.) (n.) சுற்றத்தார்; relation. *"அத்தலை தம்பிமாரும் தாயரும் அடுத்துளோடும்" (யுத். 26 : 16.).*

*[அடுத்து+உள்ளோர்]*

**அடுத்தூண்** *aḍuttūṇ,* பெ.(n.)மாதச் செலவுக்கு வேண்டிய பணம்; money needed for monthly expenses. (தெ.கோ.சா.3 : 2).

*[அடுத்து + ஊண்]*

**அடுதொறும்** *aḍutoṟum,* (பெ.) (n.) போர்புரியும் போதெல்லாம், பொருந்தோறும்; through out the war period. *"அட்டு ஆனானே குட்டுவன் அடுதொறும் பெற்று ஆனாரே பரிசிலர் களிறே" (பதி. 41 : 1–2.).*

*[அடு+தொறும்]*

**அடுப்பாம்மூலை** *aḍuppāṉmūlai* (பெ.) (n.) தென்கிழக்கு மூலை (அக்கினி மூலை); (கொ.வ.வ.சொ.4.).south east corner of the house.

*[அடுப்பு+ஆம்+மூலை]*

**அடுப்புக்குட்டு** (பெ.) (n.) அடுப்பின் ஓரத்தில் இருக்கும் உருண்டை வடிவத் திட்டு. (கொ.வ.வ.சொ.4.).; earthen oven with three protruding knobs.

*[அடுப்பு+குட்டு]*



**அடுபவர்** *aḍubavar,* (பெ.) (n.) வருந்துபவர்; those who suffer. *"படு பொருள் இன்றி நெல்லிற் பதடிபோல் உள்ளிலர் மெய் அடுபவர்" (பெரிய. 2717.).*

*[அடு+ப்+அவர்]*

**அடுபாக்கு** *adupākku*, வி.எ. (adv.) கெடுப்பதற்கு; to destroy. *"நலிந்து ஒருவர் நாறும் அடுபாக்குப் புக்கால்." (பழ. 354.).*

*[அடு+பாக்கு]*

**அடுபால்** *adupāl*, (பெ.) (n.) கொதிக்கும் பால்; boiling milk. *"அடு பால் அன்ன என் பசலை மெய்யே" (நற். 175 : 9).*

*[அடு+பால்]*

**அடுபிணம்** *adupiṇam*, (பெ.) (n.) கொலையுண்ட பிணம்; body killed. *"கொன்று ஆற்றுத் துறந்த மாக்களின் அடு பிணம்." (நற். 329 : 2.).*

*[அடு+பிணம்]*

**அடுபுகை** *adupugai*, (பெ.) (n.) ஊர் சுடு புகை; blazing fire and smoke coming from settlements during war. *"அடா அ அடு புகை அட்டு மலர் மார்பன்." (பதி. 20 : 1.).*

*[அடு+புகை]*

**அடுமகள்** *adumagaḷ*, (பெ.) (n.) சமைப்பவள்; cooking woman. *"அடு மகள் முகந்த அளவா வெண்ணெல்." (புற. 399 : 1.).*

*[அடு+மகள்]*

**அடுமடா** *adumaḍā* (பெ.)(n.) சமைக்கும் பானை; cooking pot. *"எடு மடா நமக்கு என்று சென்று புக்கு அடு மடா எலாம் அற அருந்தியே" (ஒட். 5 : 508.).*

*[அடு+(மிடா)மடா]*

**அடுவது** *aduvadu*, (பெ.)(n.) காய்ச்சப்படுவது; to be boiled. *"உலைப் பெய்து அடுவது போலும் துயர்." (நால். 12 : 4.).*

*[அடு+வ்+அது]*

**அடுவல்போடு—தல்** *aduval-pōḍu-*, செ.கு.வி. (v.i.) மா, வெள்ளரி, வாழை போன்றவற்றின் காய்களைக் குழி தோண்டிப் புதைத்துப் பழுக்க வைத்தல்; to ripe the unripened fruits by putting in a pit.

*[அடுவல்+போடுதல்]*

**அடுவான்** *aduvāṉ*, பெ. (n.) சமையற்காரன்; temple cook *"நந்தவனக் குடிகள் மூவர் சாலைக்கு அடுவான் ஒருத்தன்"* (SII. v. 625.).

*[அடு+வ்+ஆன்]*

**அடுவி** *aduvi*, (பெ.) (n.) பொருந்துபவள்; one who fits in. *"உவர் நீங்கு கற்பின் எம் உயிர் உடம்பு அடுவி." (அக. 136 : 19.).*

*[அடு+இ]*

**அடைக்கல்** *adaikkal*, (பெ.) (n.) தூர்த்தல்; *அடைத்தல்;* to stop, curb. *"குரங்குகள் மலையை தூக்கக் களித்துத் தாம் புரண்டிட்டு ஓடித் தரங்க நீர் அடைக்கல் உற்ற கலம் இலா அணிலும் போலேன்." (தொண்: 27.).*

*[அடை—அடைக்கல் (அடைத்தல்)]*

**அடைக்கல அத்தம்** *adaikkala-a-ttam* பெ.(n.) சிற்பங்களில் காணப்பெறும் திருக்கரத்தின் வகை. 5:55.:25.; an hand pose in sculpture.

*[அடைக்கலம்+அத்தம்]*

**அடைக்கலக்கை** *adaikkalakkai*, (பெ.) (n.) இரு கைகளையும் நெஞ்சுற நோக்கி நெகிழ்ந்து நிற்பது; state of worshiping by folding palms towards bosom.

*[அடைக்கலம்+ கை]*

**அடைக்கலக்காதை** *adaikkālakadai*, (பெ.) (n.) சிலப்பதிகாரக்காதையின் உட்பிரிவுகளுள் ஒன்று; one of the cantos in cilappathigaram. *"அடைக்கலக் காதையும் கொனலக்களக் காதையும்." (சில: ப : 76.).*

*[அடைக்கலம்+காதை]*

**அடைக்கலப்பத்து** *adaikkalppattu*, (பெ.)(n.) திருவாசகத்தில் உள்ள ஒரு பதிகம்; a chapter in Thiruvacagam. *"அங்கணன்தனை நினைத்து அங்கு அடைக்கலப் பத்து முன்னாத் தூங்க வாசகங்கள் ஓதத் தொடங்கினார் வடக்கு நோக்கி." (தி.தி. 28 : 24.).*

*[அடைக்கலம் + பத்து]*

**அடைக்காயமுது** *adai-k-kāyamdu*, பெ.(n.) பாக்கு; betel nut/areca-nut. *'நெல்லு உமியும் அடைக்காயமுது பாக்கு பத்துக்கும்'* (தெ.கோ. சா.3 : 2).

*[அடைகாய் + அமுது]*

**அடைக்குழி** *adai-k-kuḻi*, (பெ.) (n.) பல்லாங் குழியில் நிரப்ப இயலாத வெற்றுக்குழி (நெ.வ.).empty pit in play board.

*[அடை+குழி]*

**அடைகில்லார்** *aḍaikilār*, (பெ.)(n.) பெறாதவர்; non-receivers. *"ஒப்பு அடைகில்லார் எல்லாம் உலந்தனர்." (சுற். 11 : 16.).*

*[அடை+அடைகு]*

**அடைகுளிர்** *aḍaikuḷir*, (பெ.) (n.) பெரும் பனி; severe cold. *"ஆரப் பொதும்பனி அடைகுளிர் சாரல்." (கல். 84 : 29.).*

*[அடை+குளிர்]*

**அடைகுறடு** *aḍaikuraḍu*, (பெ.) (n.) பட்டடை; anivil. *"பட்டடை அடை குறடே." (நிக.தி. 7 : 214.).*

*[அடை+குறடு]*

**அடைகொடாதான்** *aḍaikoḍān*, (பெ.) (n.) நிறைத்து வையாதவன்; one who has not stored. *"அருளினை நெஞ்சத்து அடை கொடாதானும்." (திரி. 89.).*

*[அடை+கொடா+ஆன்]*

**அடைச்சல்** *aḍaiccal*, (பெ.) (n.) செருகுதல்; insert *"அடைச்சல் சருகுதல் ஆம் செருகுதற்கே." (நிக.தி. 9:14.).*

*[அடை+அடைத்தல்]*

**அடைத்தட்டி** *aḍai-t-taṭṭi*, பெ. (n.) கட்டை வண்டியில் ஏற்றப்படும் எரு, மண் போன்ற பொருள்கள் முன் பகுதியில் சிந்தாதவாறு பொருத்தப்படும் மூங்கில் பட்டைகளினால் (பிளாச்சு) ஆன தட்டி, படல் முதலியன (இ.வ.).side screw used to support in a loaded cart.

*[அடை+தட்டி]*



**அடைத்தான்** *aḍaittāṉ*, (பெ.) (n.) தாங்கி நின்றான்; one who buttressed. *"அடைத் தானாம் சூலம் மழு." (நாவு. 6 : 15 : 5.).*

*[அடை+த்+த்+ஆன்]*

**அடைத்திட்டவன்** *aḍaittiṭṭavaṉ*, வி.எ.(adv.) அடைந்தவன்; one who reached *கடலை அடைத்திட்டவன் காண்மின்." (மங். 10 : 6 – 7.).*

*[அடைத்து+இட்டவன்]*

**அடைதரும் தோறும்** *aḍaitarum-tōṟum*, வி.எ. (adv.) வரும் பொழுது எல்லாம்; whenever he comes. *"கிளையொடு மகிழும் குன்ற நாடன் அடைதரும் தோறும் அருமை தனக்கு உரைப்ப." (நற். 165 : 5 – 6.).*

*[அடை+தரும்+தோறும்]*

**அடைதட்டி** *aḍai-taṭṭi*, பெ. (n.) அடைத்தட்டி பார்க்க; see *aḍaittaṭṭi*

[அடை + தட்டி]

**அடைநீர்** *aḍainīr*, (பெ.) (n.) சேர்ந்த தண்ணீர்; stored water. *"குடை அடை நீரின் மடையினள் எடுத்த." (அக. 275 : 2.).*

*[அடை+நீர்]*

**அடைப்பு** *aḍaippu*, பெ. (n.) விலங்குகளின் பக்கவயிறு, விலாப்புறம்; the rib-side of animals. 'என்னடா மேய்த்தாய் மாடு அடைப்பு நிரம்பவில்லை.' (வ.சொ.அக.).

*[அடை–அடைப்பு]*

**அடைப்பது** *aḍaippadu*, (பெ.) (n.) தடுப்பது; stopping. *"நரைத் தலை முதியோள் இடித்து அடு கூலி கொண்டு அடைப்பது போல உடைப்பது நோக்கி." (கல். 49 : 24–5.).*

*[அடை–அடைப்பது]*

**அடைபலகை** *aḍaipalagai*, பெ. (n.) கட்டை வண்டியில் மேல்பாகத்தில் நெடுக்கு வாட்டத்தில் பொருத்தப்படும் இரு நீளமான பலகைகள்; two planks fixed in a cart.



[அடை+பலகை]

**அடைமூக்கு** (பெ.) (n.) மூக்கில் சளி அடைப்பு. (கொ.வ.சொ.5.); severe cold.

*[அடை+மூக்கு]*

**அடைமுட்டுப் பலகை** *adai-muttu-p-palagai* பெ. (n.) பனை, தென்னை போன்ற மரமேறுபவர்களின் கத்தி முதலான பொருள்களை வைத்து இடுப்பில் கட்டிக் கொள்ளும் பெட்டிப் பலகை; basket made of spathe of palm, used by the people who climb palmtrees.

[அடை +முட்டு+பலகை]



**அடையாதவர்** *adaiyādavar,* (பெ.) (n.) சேராதவர்; those who not reach. "*நெய்த்தானம் அடையாதவர் என்றும் அமர் உலகம் அடையாரே.*" *(சம். 1: 15 : 6.).*

*[அடை+ஆ+த்+அவர்]*

**அடையாமல்** *adaiyāmal,* வி.எ. (adv.) மூடாமல்; not closed. "*அடைவோம் நாம் போய்ச் சிவபுரத்து உள் அணியார் கதவு அடையாமே*" *(வாச. 607.).*

*[அடை-அடையாமல்]*

**அடையாமை** *adaiyāmai,* (பெ.) (n.) அடையா வண்ணம்; not touched "*அவலம் வந்து அடையாமை*" *(சம். 1: 118 : 8.).*

*[அடை+ஆ+மை]*

**அடையார்முந்தி** *adaiyār-mundi,* பெ. (n.) சேலையின் தலைப்பு முந்தி அல்லது மேல் முந்தி வகை; a kind of outer end of a saree or cloth.

[அடையார்+முந்தி. முந்தானை→ முந்தி.]

**அடையாறு** *adaiyāru-,* (பெ.) (n.) 1.செங்கற் பட்டிலுள்ள செம்பரம்பாக்கத்து ஏரியினின்று புறப்பட்டுச் சென்னை வழியாகக் கடலோடு கலக்கும் ஓர் யாறு; a river in Chennai. 2.அடையாறு கடலில் கலக்கும் பகுதி (பாக்கம்); the place where the river *adaiyār* joins Bay of Bengal Sea.

*[அடை+ஆறு]*

**அடையாவண்ணம்** *adaiyāvannam,* (பெ.) (n.) குறுகாதவாறு; "*காப்பார் காலன் அடையா வண்ணம்.*" *(சம். 1: 12 : 6.).*

*[அடை+ஆ+வண்ணம்]*

**அடையாளஅட்டை** *ādaiyāla-attai,* பெ. (n.) ஒருவருடைய அடையாளத்தை உறுதிப் படுத்தும் வகையில் அவர் தம் நிழற்படம் பெயர், முகவரி முதலிய குறிப்படங்கிய அட்டை; identity card.

*[அடையாளம் + அட்டை]*

**அடையாளக்குறிப்பு** *adaiyāla-k-kurippu,* (பெ.) (n.) சிறிதளவான ஒன்றன் அடையாளம்; a small sign.

*மறுவ. அறிகுறி.*

*[அடையாளம்+குறிப்பு]*

**அடையுழவு** *adaiyulavu,* பெ. (n.) குத்தகையுழவு; lease cultivation. "*பொருள் கவருவும் அடையுழவும் பாட்டமாளவும் குடியிருக்கவும்*" (SII. v. 772.).

*[அடை+உழவு]*

**அடையோடு** *adai-y-ōdu*, பெ.(n.) அடைகாக்க மணல், பரப்பி முட்டைகளை வைக்கும் கூடைபோன்ற ஓடு. shells used to keep sand for hatching.

[அடை + ஓடு]

**அடைவு** *aḍaivu* (பெ.) (n.) ஒன்றிலிருந்து மற்றொன்றை அடைவது, நெருங்கிச் சேர்வது. (14 :236.); one adhering to another.

*[அடை+அடைவு]*

**அடைவைத்தபெட்டை** *adaivaittapeṭṭai*, பெ. (n.) அடைகாத்துக் கொண்டிருக்கும் கோழி; brooding hen. *"அடைவைத்த பெட்டையாட்டம் எதற்கு வீட்டிலேயே அடைந்து கிடக்கிறாய்?"* (இ.வ.).

*[அடை+வைத்த+பெட்டி]*

**அண்டக்கிடாரம்** *aṇḍakkiḍāram*, பெ. (n.) அளவில்லாதது; that which is immeasurable. 'அவனுக்குச் சினம் அண்டகிடாரம் முட்டிப் போயிற்று' (வ.சொ.அக.).

*[அண்டம்+கிடாரம்]*

**அண்டங்கரி** *aṇḍaṅkari*, பெ. (n.) அண்டங் காக்கையின் நிறம் போன்ற அடர்த்தியான நிறம்; utter black, that which is compared with jungle crow. (வ.சொ.அக.).

*[அண்டம்+கரி]*

**அண்டப்புளுகன்** *aṇḍappluɡan*, பெ. (n.) மிகப்பெரிய பொய் பேசுகிறவன்; monstrous liar. 'அவன் அண்டப் புளுகனாயிற்றே?' (வ.சொ.அக.).

*[அண்டம்+புளுகு+அன்]*

**அண்டப்புளுகு** *aṇḍa-p-puḷugu*, பெ. (n.) மிகப்பெரிய பொய்; monstrous lie. 'அவன் அண்டப் புளுகு ஆகாசப்புளுகு பேசுகின்ற ஆள்' (வ.சொ.அக.).

*[அண்ட+புளுகு]*

**அண்டர்** *aṇḍar*, (பெ.) (n.) 1. குன்று மலை போன்றவற்றின் மேலே வாழ்பவர்; hill dwellers. 2. ஆடு மாடுகளை மேய்ப்போர்; cattle raisers. 3. மீனவர்; fishermen.

ம. அண்டிலர். அண்டத்தி (ஓடக்காரி).

*[அண்(மேல்) – அண்டர்]*

**அண்டரி** *aṇḍari*, (பெ.) (n.) திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vriddhachalam Taluk.

*[அண்டர்–அண்டரி]*

**அண்டல்** *aṇḍal*, தொ. பெ. (vbl.n.) ஈடு செய்தல்; satisfy, by way of compensating something else. 'அது அதற்கு ஒரு மாதிரியா அண்டல் பண்ணி வைத்திருக்கிறது.' (வ.சொ.அக.).

*[அண்டு+அல்]*

**அண்டலி** *aṇḍali*, பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் கோவிலூர்க்கு அருகே உள்ள ஓர் ஊர்; name of the village in Kanchipuram near gthe kovilur.

*[அண்டல்–அண்டலி]*

**அண்டலை** *aṇḍalai*, (பெ.) (n.) நெருங்குதல்; coming in close contact. *"கண்டு உணராமை கடு மாப் புலி ஒன்று அண்டலை முதலிய கண்டும் அறியாமை" (மணி. 27 : 69 – 70.).*

*[அண்டல்+ஐ]*

**அண்டாபானை** *aṇḍāpāṉai*, பெ. (n.) நெல் அவிக்கவும், விழாக்காலங்களில் சோறு சமைக்கவும் பயன்படுத்தும் பித்தளையால் ஆன பெரிய ஏனம். (இ.வ.); a large vessel for cooking.

*[அண்டா+பானை]*



**அண்டிப் பருப்பு** *aṇḍi-p-paruppu*, பெ. (n.) அண்டிக் கொட்டை பார்க்க; see *aṇḍi-k-koṭṭai* (வ.சொ.அக.).

*[அண்டி+பருப்பு]*

**அண்டிப்பருவம்** *aṇḍi-p-paruvam*, பெ. (n.) புறாக்குஞ்சின் இறக்கை முளைக்காத இளம் பருவம்; early stage of dove. (வ.சொ.அக.).

*[அண்டி+பருவம்]*

**அண்டு** *aṇḍu-* , செ.கு.வி.(v.i.) சிதைந்து கிடத்தல்; piling up of waste. 'குப்பை யெல்லாம் அண்டு கிடக்கிறது.' (வ.சொ.அக.).

*[அண்டு+து–அண்டு]*

**அண்டு–தல்** *aṇḍu-* , செ.கு.வி. (v.i.) நெருங்குதல்; to be close together. 'ஏன் இப்படி அண்டுகிறாய்? தள்ளி உட்கார்.' (வ.சொ.அக.).

*[அள்→அண்→அண்டு]*

**அண்ண** *aṇṇa*, வி.எ. (adv.) இயைய; according to. *"சார்பின் தோன்றித் தத்தமில் மீட்கும் இலக்கு அண்ணத் தொடர்தலின்." (மணி. 30 : 17 –8.).*

*[அண்+அ]*

**அண்ணமுண்டி** *aṇṇamuṇḍi-*,பெ.(n.) அண்ணன் மனைவி, அண்ணி; wife of one's elder brother. (வ.சொ.அக.).

*[அண்ணன்+(பெண்டு) முண்டி(கொ.வ.)]*

**அண்ணாத்து–தல்** *aṇṇāttu-*, செ.கு.வி. (v.i.) ஏனத்தில் உள்ள கூழ் போன்றவற்றை மேலே தூக்கி ஒரே மூச்சில் குடித்தல்;to drink at a stretch.

*[அண்ணா–அண்ணாத்து]*



**அண்ணாவி** *aṇṇavi*, பெ. (n.) வில்லுப் பாட்டினைக் கற்று தரும் ஆசிரியர்; folk song teacher

*[அண்ணன்–அண்ணாவி]*

**அண்ணியர்** *aṇṇiyar*, (பெ.) (n.) அடுத்து உள்ளவர்; close friends. *"அண்ணியர் அகன்றவர் திறத்தும் ஆணையான்." (சூளா. 52.).*

*[அண்ணு+இ+அர்]*

**அண்ணுக்குத்திஉழவு** *aṇṇukuttiuḷavu*, பெ. (n.) நன்கு சரிவர உழப்படாத நிலப்பதம்; பெரும்பாலும் அன்றே உழுது விதைக்கும் படியான நிலப்பதம் (இ.வ.); make shift cultivation.

*[அண்ணா+குத்து+உழவு]*

**அண்மு–தல்** *aṇmu-* செ.கு.வி. (v.t.) நெருங்குதல்; to come close. *"அம் கண் நாயகற் காண வந்து அண்மினார்." (அயோ. 7–10.).*

*[அன்–அண்மு]*

**அணக்கம்** *aṇakkam*, பெ. (n.) அறிகுறி; indication, symptom. 'அவர் வீட்டில்தான் இருக்கிறாரா? அணக்கமே இல்லையே.' (வ.சொ.அக.).

*[அணங்கு–அணக்கு+அம்]*

**அணக்குடி** *aṇakkuḍi*, (பெ.) (n.) கும்பகோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kumbakkaaaam Taluk.

*[அணை+குடி]*

**அண–த்தல்** *aṇai*,செ.குன்றா.வி (v.t.) தலை தூக்கிப் பார்த்தல்; to raise head and see. *"மலை உறை பகைத்து வான் உறைக்கு அணக்கும்." (கல். 253 : 20.).*

*[அண் – அண]*

**அணங்குஆட்டுமுதியோள்** *aṇaṅguāṭṭu mudiyōl*, (பெ.) (n.) குறிசொல்பவள்; foreteller woman. *"அணங்கு ஆட்டு முதியோள் முறம் கொள் நெல் எடுக்க". (கல். 17 : 24.).*

*[அணங்கு+ஆட்டு+முதியோர்]*

**அணங்குற்றோர்** *aṉaṅguṟṟōr,* (பெ.) (n.) நோய் உற்றோர்; those afflicted. *"பின்னிருங் கூந்தல் அணங்குற்றோரே." (ஐங். 173:4.).*

*[அணங்கு+உற்றோர்]*

**அணங்கொடி** *aṇaṅkoḍi,* (பெ.) (n.) அணுகு கின்ற அழகிய கொடி; visible flag. *"அணங்கொடி மாடவீதி ஆரூர் எம் அடிகளாரே." (நாவு. 4 53 – 8.).*

*[அணங்கு+கொடி]*

**அணந்தல்** *aṇandal,*(பெ.)(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[ஒருகா. அண்ணன்+ஏந்தல்.]*

**அணப்பு** *aṇappu,* (பெ.) (n.) விளை வயலின் ஒரு பகுதி (கொ.வ.வ.சொ.5.);a small division in field.

*[அண–அணைப்பு]*

**அணிஅளகு** *aṇiaḷagu,* பெ. (n.) புணிக் கோலுடன் உள்ள புணையல் அளவு (நெ.கொ.க. 52.); a measure in handloom work.

*[அணி+அலகு]*

**அணிக்கடவு** *aṇikaḍavu,*(பெ.) (n.) உடுமலைப் பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Udumalipet Taluk.

*[அணி+கடவு]*

**அணிகள்** *aṇṇgaḷ,* (பெ.) (n.) படை வகுப்புகள்; cadre of army. *"அணிகள் ஒரு முகமாக உந்தின." (கலிங். 11 : 134.).*

*[அணி+கள்]*

**அணிகிலாதவர்** *aṇigilādavar,* (பெ.) (n.) பூசாதவர்; one who has not smeared vibuti on the forehead. *"வெண்ணீறு அணி கிலாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே." (வாச. 518.).*

*[அணிக்கு+இயலாதவர்]*

**அணிகிற்பார்** *aṇigiṟpār,* (பெ.) (n.) சூடிக் கொள்வோர்; one who wears. *"இத்தலத்தினில் இம் மலர்ப் பரிமளம் இல்லை என்று அணிகிற்பார்." (வி.பா. 42 : 69.).*

*[அணி+அணிகிற்பார்]*

**அணிகோல்** *aṇikōl,* பெ. (n.) அணி தெரி வதற்காக இழைகள் அணி மாறி வரும் இடங்களில் பயன்படுத்தும் கோல். (நெ.கொ.க. 52.); an implement in loom.

*[அணி+கோல்]*

**அணித்தக** *aṇitaga,* வி.எ. (adv.) அழகு பொருந்த;fitting *"அணித்தகப் பல் பூங் கானல் அல்கிலம் வருதல்." (அக. 20 : 9–10.).*

*[அணி+தக]*

**அணித்தகு** *aṇittagu,* பெ.எ. (adj.) அணிபெற வுகுக்கத்தக்க; appropriate. *"அணித்தகு புரி குழல் ஆயிழை தன்னொடும்" (சில. 15 : 99.).*

*[அணி+தகு]*

**அணித்தகை** *aṇittagai,* (பெ.) (n.) பேரழகன்; a smart person. *"பணித்த மாற்றம் அணித் தகைக்கு உரைப்ப." (பெருங். 36 : 354.).*

*[அணி+தகை]*

**அணிதா** *aṇitā-,* செ.கு.வி. (v.t.) அழகு செய்; adding smartness. *"ஆடியும் ஆடையும் அணிதரு கலன்களும்." (சில. 28 : 63.).*

*[அணி+தரு]*

**அணிதைவரல்** *aṇitaivaral,* தொ.பெ.(abln.n.) அணிவகைளைச் செறித்தலும் திருத்தலும்; adjust ornaments and reset dress. *"ஊழ் அணிதைவரல் உடை பெயர்த்து உடுத்தலொடு." (தொல். 24 : 14.).*

*[அணி+தைவரல்]*

**அணிந்தருளி** *aṇindaruḷi,* வி.எ. (adv.) அணிந்து கொண்டு; clad with jwellery. *"அழகின் மேல் அழகுற அணி அனைத்தும் அணிந்தருளி." (கலிங். 10–49.).*

*[அணிந்து+அருளி]*

**அணி–தல்** *aṇi-,* செ.குன்றாவி. (n.) தடவுதல்; smear. *"அரை விளை கலை நல்லார் அறுகின் நெய் அணிந்தனரே." (சீவ. 12 : 53 .).* 2. தாங்குதல்; to wear *"சடை மேல் இள மதியோடு ஆறு அணிந்தார்." (சம். 3 : 65 : 3 .).*

3. உடுத்தல்; to dress. *"கருமானின் உரி ஆடை மீது இலங்க அணிந்தான் இடையோர் தொடி" (சம். 1 : 2 : 2.).*

*[அண்+அணி]*

**அணி நகை** *aṇinagai,* (பெ.) (n.) ஒளி பொருந்தியஅணிகள்; glittering jewellery. *"அணிநகை இடை இட்ட ஈகையம் கண்ணிபோல்." (கலி. 32 : 4.).*

*[அண்+நகை]*

**அணிமா** *aṇimā,* (பெ.) (n.) அட்டமாசித்திகளின் சிற்ப வடிவங்களில் ஒன்று ( 5 :117.); a feature in sculpture.

*[அண்–அணி+மா]*

**அணிமாவலி** *aṇimāvali,* (பெ.) (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[அணி + மாவலி]*

**அணிமாறுதல்** *aṇimāṟudal,* பெ. (n.) இழை தன் அணியில் செல்லாமல் வேறொரு அணியுடன் சேர்ந்திருத்தல். (நெ.கொ.க. 52.). changing of thread line in handloom operation.

*[அணி+மாறுதல்]*

**அணியாதோர்** *aṇiyātōr,*(பெ.) (n.) அணிகலன் பூணாதவர். those who are not wearing ornaments. *"இறை கொண்டோருள் அணியாதோரை ஆராய்ந்து வழி தரும்." (பெருங். 40 : 42 – 3.).*

*[அணி+ஆ+த்+(ஆர்)ஓர்]*

**அணியாவயல்** *aṇiyāvayal,* (பெ.) (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[அணியா+வயல்]*

**அணில் வால் பூண்டு** *aṇilvālpūṇḍu,* பெ. (n.) வயல்களில் வளரும் களைச்செடி. (வ.வ.வே.க.10); a weed.



*[அணில்+வால்+பூண்டு]*

**அணிலாடி** *aṇilāḍi,* (பெ.) (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[அணில்+ஆடி]*

**அணிவி–த்தல்** *aṇivi-,* செயப்.வி. (v.caus.) எழுதச் செய்தல்; to make to write. *"அங்கு அதன் பாகத்து ஈரத்து அருகுகலாம் அணிவித்திட்டான்." (சூளா. 930.).*

*[அணி–அணிவி]*

**அணிவீதி** *aṇivīdi,* (பெ.) (n.) மடவளாகம்; mutt complex *"அண்ணலவன் கண் எதிரே அணி வீதி மடி விடை மேல்." (பெரிய. 130.).*

*[அணி+வீதி]*

**அணிற்காலன்** *aṇiṟkālaṉ,* (பெ.) (n.) மாடு வகை;species of cow.

*[அணில்+காலன்]*

**அணிற்பிள்ளை**[1] (பெ.) (n.) நான்கு கட்டத்திற்குள் சிறு கல்லினை எடுத்து ஆடல்;a children's play.

*[அணில்+பிள்ளை]*

**அணிற்பிள்ளை**[2] (பெ.) (n.) காக்கைக்குஞ்சு விளையாட்டில் மற்றொரு பெயர்.; name of a game.

*[அணில்+பிள்ளை]*

**அணிந்தவை** *aṇidavai,* (பெ.) (n.) ஒப்பனை செய்யப்பட்டவை; decorated. *"கோல யானை நால் இரண்டு மிகையா ஆயிரம் அணிந்தவை." (பெருங். 60 : 203 – 4.).*

*[அணி–அணிந்தவை]*

**அணிந்திடு–தல்** *anindidu-,* செ.குன்றா.வி. (v.t.) நிறுத்தி விடுதல்;to stop. *"அப்பெருஞ் சேனையில் அவனை உள்ளறத் துப்பு உற அணிந்திடின் துன்னல் ஆகுமோ." (வி.பா. 41: 187.).*

*[அணிந்து+இடு]*

**அணு ஆர் அணி** *anu-ār-ani,* (பெ.) (n.) உயிர்க்கு உயிராகிய திருவருள்; blessing that thrills the innermost soul. *"ஆயும் அளிவும் கடந்து அணு ஆர் அணி." (மூல. 1239.).*

*[அணு+ஆர்+அணி]*

**அணுகஒட்டு–தல்** *anugaottu-,* செகுன்றா.வி. (v.t.) சேரவிடல்; allow to join. *"அவனுடன் அணுக ஒட்டேன்." (வி.பா. 27 : 156.).*

*[அணுக+ஒட்டு]*

**அணுக்க சேவகம்** *anukkasēvagam,* (பெ.) (n.) அருகில் இருந்து செய்யும் தொண்டு;to be near and serve always. *"ஓவா அணுக்கச் சேவகத்தில் உள்ளோர்." (பெரிய. 13491.).*

*[அணுக்கம்+சேவகம்]*

**அணுக்கர்** *anukkar,* (பெ.) (n.) அகத் தொண்டர்; close devotees. *"அணுக்கருக்கு அணிய செம்பொன் அம்பலத்தாடி." (மாளி. 4 : 4).*

*[அண்+அணுக்கர்]*

**அணுக்கள்** *anukkal,* (பெ.) (n.) ஐம் பூதங்களுக்குக் காரணமான மூலப் பொருள்கள்; source particles to the five elements of the nature. *"நிறைந்த இவ்வணுக்கள்ள பூதமாய் நிகழின்." (மணி. 27 : 138).*

*[அணு+கள்]*

**அணுக்கிமார்** *anukkimār,* (பெ.) (n.) அருகிலிருந்து ஏவல் செய்யும் பெண்டிர்; close maid servents. *"அரம்பையார் ஒத்துள அணுக்கிமாரும் அநேகர் இருக்கவே." (கலிங். 11 : 10.).*

*[அணுக்கம்+அணுக்கி+மார்]*

**அணுகா அணிமை** *anugāanmai,* (பெ.) (n.) உடனாந்தன்மை; inseparable union. *"அவ்வினைப் பயன் நீ அணுகா அணிமை." (ப.பி. 5 : 5 –6.).*

*[அணுகா+அணிமை]*

**அணுகா முன்னம்** *anugāmunnam,* (பெ.)(n.) சேர்வதற்கு முன்னம்;before reaching *"அற்றவன் தலை மீது ஓங்கி அண்டம் உற்று அணுகா முன்னம்." (யுத். 28 : 53.).*

*[அணுகாத+முன்னம்]*

**அணுகியான்** *anugiyān,*(பெ.) (n.) நெருங்கிய வன்; close person. *"யாதும்அணுகாது அணுகியான்." (சே.3 – 4.).*

*[அணுகியவன்–அணுகியான்]*

**அணுகிற்றல்** *anukirral,* தொ.பெ. (vbl.n.) கிட்டுவேன்; meeting. *"யான் உன்னை எங்கு வந்து அணுகிற்றனே." (சட.3 :2–5.).*

*[அணுகு+நிற்றல்–அணுகிற்றல்]*

**அணுகுபு** *anugubu,* வி.எ. (adv.) அண்ணிதாக; closely. *"தாள் நிழல் மருங்கின் அணுகுபு குறுகி." (பொரு.149.).*

*[அணுகு+பு]*

**அணுகுறு–தல்** *anuguru-,*செ.குன்றாவி. (v.t.) நெருங்குதல்;nearing. *"அண்டர் தானவர் அரக்கரும் அணுகுறா வனத்தில்." (வி.பா. 14 : 25.).*

*[அணுகு+தல்]*

**அணுவில்அணு** *anuvilanu,*(பெ.) (n.) உயிர்க்கு உயிர்; inner most soul. *"அணுவில்அணுவின் பெருமையில் நேர்மை." (மூல. 668.).*

*[அணு+இல்+அணு]*

**அணைக்காடு** *annai-k-kādu,*(பெ.) (n.) 1.அணை நீர்ப்பாசனவயல்; fertile land of dam irrigation. 2.மிக அதிக விளைச்சல்; excessive production of food grains.இந்தத் தடவை அணைக்காடாக விளைச்சல் கண்டிருக்கிறது.(இ.வ..).

*[அணை+காடு]*

**அணைகிலார்** *anaigilār,*(பெ.) (n.) சேராதவர்; those who not approached. *"ஆனைக்*

*காவில் அம்மானை அணைகிலார்." (நாவு. 15: 31 : 1.).*

*[அணுகு+இல்+ஆர்]*

**அணைகு-தல்** *aṇaigu-*,செ.குன்றாவி.(v.t.) சேருதல்; joining. *"அறிவர் மா அணிண அரங்கின் மீது தூங்கு மலர்த் தாம வாசங் கொண்டு அணைகுவீரே." (கலம். 70.).*

*[அணை+கு]*

**அணை-த்தல்** *aṇai-*,2.செ.கு.வி.(v.i.) உதைகொடுத்தல்; to give a good thrash. 'அவனை இரண்டு அணை அணைத்தால் தான் சும்மா இருப்பான்.' (வ.சொ.அக.).

*[அண்-அணை]*

**அணைசு** *aṇaiśu*,பெ. (n.)ஒன்றனுக்குப் பக்கத் துணையாயிருப்பது,காப்பு;support.

[அணை → அணைசு - அணைந்து இருப்பது]

**அணைசுப்பலகை** *aṇaiśu-p-palagai,* பெ. (n.) பூ வேலைப்பாடுகள்அமைந்த கதவுகளின் பின்புறம் வலிமைக்காகவும் காப்பிற்காகவும் இணைக்கப்படும் பலகை;the plank which supports the engraved front side of a door.

மறுவ.தாங்கு பலகை

[அணைசு+பலகை]



**அணைசுவர்** *aṇaisuvar,* பெ. (n.) சுவருக்கு முட்டாகக் கட்டும் சுவர்; supporting wall.



மறுவ.உதைசுவர், முட்டுச்சுவர்

**அணைத்தவன்** *aṇaittavan*, (பெ.) (n.) தடுத்தவன்; *one who checked. "வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து." (பால. 13 : 30.).*

*[அண்-அணை]*

**அணைந்தவன்** *aṇaindavan,* (பெ.) (n.) செய்பவன்; performer. *"மயேந்திரப் பள்ளியுள் ளோடு அணைந்தவன் கழல் உணர்ந்து உய்ம்மினே." (சம். 3 : 31-9.).*

*[அணை-அணைத்தவன்]*

**அணைந்துள்ளோர்** *aṇaindu!!ōr,* (பெ.) (n.) உடன்இருந்தோர்; those who accompanied. *"சீர் பெருகு நில நக்கர் ...........மற்று எனையோர் அணைந்துள்ளோர்." (பெரிய.3153.).*

*[அணைத்து+உள்ளோர்]*

**அணைப்பார்** *aṇaippār,* (பெ.) (n.) நினைப்பவர்; those who remember. *"ஆகத்து அணைப்பார் அணைவதே ஆயிர வாய் நாகத்து அணையாள் நகர்." (பொ. 32.).*

*[அணை-அணைப்பார்]*

**அணைப்பிடி-த்தல்** *aṇṇaippiḍi-*, 2.செ.கு.வி. (v.i) வெயிலில் அலைதல், தொடர்ந்து அனலில் இருத்தல் போன்றவற்றால் சிறுநீர் வலியுடன் சொட்டுச் சொட்டாக வெளியேறுதல் (இ.வ.); urinary trouble.

*[அணை(தடை)+பிடி]*

**அணைப்புச்சக்கை** *aṇaippu-c-cakkai,* பெ. (n.)வாசற்காலின் மேற்புறத்தில் வெளிப்புறமாக

ஓவிய வேலைப்பாடுகளைக் கொண்ட பலகையை அணைத்துப் பிடிக்குமாறு பக்கவாட்டில் பொருத்தப்படும் அகலமான சட்டம்.broad wooden plank fixed to the side frames of the door to hold sculptured figurines.

*[அணைப்பு+சக்கை]*

**அணைமுதல்** *anaimudal*, (பெ.)(n.) தறி;loom. *"பணை நிலைப் புரவியின் அணை முதல் பிணியிக்கும் கழி சூழ் படப்பை." (பட். 312.).*

*[அணை+முதல்]*

**அணையாத அன்பு** *anaiyāda anbu*, (பெ.) (n.) நிலையான அன்பு; standard love. *"அணையாத அன்பே உடைய அனலாடி." (மூல. 2576.).*

*[அணையாத+அன்பு]*

**அணைவுக்கை** *anaivukkai* (பெ.) (n.) பிணையலின் ஒரு பிரிவு; a hand pose in dance.

*[அணைவு+கை]*

**அத்தக்கூலி** *attakkūli*, (பெ.) (n.) வேலை இருந்தால் மட்டுமே கூலி வாங்கும் தொழிலாளி. (கொ.வ.வ.சொ.5.). labourer who gets daily wage.

*[அற்றை–அத்தை–அத்த+கூலி]*

**அத்தளி புத்தளி** *attaliputtali*, (பெ.) (n.) சிறு குழந்தைகள் கையினைத் தரையில் ஊன்றி விளையாடல் (14–9); children play.

*[அத்தளி+புத்தளி]* (ஒலிக்குறிப்பு)

**அத்தாச்சோடு** *attāccōḍu*,(பெ.)(n.) அவ்வளவு பெரியது; thing such a big. (கொ.வ.வ.சொ.5.).

*[அத்தனை+(சுவடு) சோடு]*

**அத்தாணி** *attāni*, (பெ.) (n.) பவானி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Bhavani Taluk.

*[ஒருகா. ஆற்று+அணி–ஆற்றணி–அத்தாணி.]*

**அத்தாளத்திருவமுது** *attālat-tiruvamudu*, பெ. (n.) இராச் சாப்பாடு; dinner. *"இரா அத்தாளத் திருஅமிர்தத்தின்னு அரி அஞ்ஞாழியும் கூடே"* (TAS. v. P 63 - 83.).

*[அத்தாளம்+திரு+அமுது]*

**அத்தாழம்** *attālam*, பெ. (n.) மாலைக்காலம்; evening time. *"அத்தாழத் திருவமிர்தினும் அந்தியின் முன்னை அரி அளக்கக் கடவிர்"* (TAS. iii. 8, 189 - 91.).

*[எல்(கதிரவன்)–அல் (தாழ்) தாழம்]*

**அத்தாளம்** *attālam*, பெ. (n.) இரவு உணவு; supper.

*[அல்+தாளம்]*

**அத்திந்தல்** *attindal*, பெ. (n.)விழுப்புரத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர். Name of the village near *viluppuram.*

*[ஒருகா. அத்தன்+ஏந்தல்]*

**அத்திப்பற்று** *atti-p-parru*, பெ. (n.) செய்யாறு வட்டத்தில் உள்ள ஓர் ஊர்.Name of the village in Syarue.

[அத்தி+ பற்று.]

திருவோத்தூர்கல்வெட்டிலும்வல்லம் கல்வெட்டிலும் அத்திபற்று என்னும் பெயர் காணப்படுகிறது.

**அத்திமல்லன்** *atti-mallan*, பெ. (n.) ஓர் இயர்பெயர்;a proper name.

*[அத்தி+மல்லன்]*

செய்யாறு திருப்போத்தூர் இறைவனுக்கு சந்தனப் பூச்சுக்கும் கற்பூரத்திற்கும் பிறவற் றிற்குமாக 12000 காசுகளை முதலீடாக அத்திமல்லன் சம்புவராயன் ஈன்ற எதிரிலிச் சோழசம்புவராயன் தானம் புரிந்துள்ளான்.

**அத்தியாண்டான்** *attiyāndān*, பெ. (n.) ஓர் இயர்பெயர்; a proper name.

[அத்தி+ ஆண்டான்.]

இரண்டாம் இராசராசனுடைய ஆட்சி யாண்டில் திருவோத்தூர் கோயில் விளக்கு வைக்க வேண்டி 30 பசுகளை தானமாக வழங்கினான். இவனுடைய காலம் 1167 கோப்பெருஞ்சிங்கன் பாடல் கல்வெட்டு களைக் கொண்ட அத்தியை இவன் ஆண்டவன்.

**அத்திகோசத்தார்** *attikōsattār,* (பெ.) (n.) வணிகச் சாத்துக்சகுத் துணையாகச் சென்ற யானைப் படை மறவர்; escorting soldiers for elephant wing of the army.

*[அத்தி+கோசத்தார்]*

**அத்திமூர்** *attimūr,* (பெ.) (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk.

*ஒருகா.[அத்திமரம்+ஊர்]*

**அத்தியந்தல்** *attiyandal,* (பெ.) (n.) திருவண்ணாமலை வடத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[அத்தி+ஏந்தல் (ஏரி)]*

**அத்தினாபுரம்** *attiṇāpuram,* (பெ.) (n.) அத்தி என்பவனால் வடநாட்டில் பாரத காலத்தில் நிறுவப்பட்ட நகரம்; capital city of pandavas named by the king *atti* being the master mind of the construction of the city.(பாரத.குரு.68)

*[அத்தியின்+புரம்–அத்தினாபுரம்]*

வடமொழியில் இது Hastinapuri *எனத்திரிந்தது.*

**அத்துபடி** *aṭṭupaḍi,* (பெ.) (n.) முழுமையான அறிவு (கொ.வ.வ.சொ.6.);thoroughly well known.

*[அற்று+படி]*

**அத்துபோ–தல்** *attu-pō,* செ.கு.வி. (v.i.) அறுந்து விடுதல்; to be cut off. (கொ.வ.வ.சொ.6.).

*[அற்று+போ]*

**அத்துமீறு–தல்** *attumīṟu-,* செ.கு.வி. (v.i.) வரம்பு கடத்தல்; to cross the limit, trespass.

*[அத்து+மீறு]*

**அதக்கு** (பெ.) (n.) வாயில் ஏதாவது ஒன்றைப் போட்டுமெல்லுதல்(கொ.வ.வ.சொ.6.);chewing something.

*[அதை-அதைக்கு]*

**அதகப்பாடி** *adakappāḍi,* (பெ.) (n.) தர்மபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[அதிகன்+பாடி]*

**அதப்பித்தாள்** *adappu-t-tāḷ,* பெ. (n.) நிழல் பகுதியில் கதிர் வளர்ச்சியடைந்து காணப்படும் நெற்பயிர்; fertile paddy growth in the shaddy area.

*[அதைப்பு+தாள்]*

**அதமன்கோட்டை** *adamankōṭṭai,* பெ. (n.) அதியமான் கோட்டை, தகடூர் நாட்டு வள்ளல் அதியமான் வாழ்ந்ததும் தருமபுரிக்கு அருகில் 5 கல் தொலைவில் உள்ளதும் ஆகிய ஊர். Name of the village 5 k.m. from Dharmapuri.

[அதியமான்→அதமன்+கோட்டை.]

**அதருண்டாதல்** *adaruṇḍādal,* பெ. (n.) 1. கழிவு உண்டாகை;formation of a deposit or sediment. 2. கிட்டம் ஏற்படுகை; formation of dross on iron or steel. (சா.அக.)

[அதர்+உண்டாதல்.]

**அதலபாதாளம்** *atalapātāḷam,* பெ. (n.) அளவிட முடியாத ஆழம் அல்லதுபள்ளம்; immeasurable depths, chasm. மணல் முகட்டு மேலிருந்து அதலபாதாளத்தில் தள்ளிவிடுவது போன்ற காட்சி மெய்சிலிர்க்க வைத்தது. (வ.சொ.அக.).

*[அவல்–அதல்–அதலம்+பாதாளம்]*

**அதளை** *adaḷai,*(பெ.)(n.)மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk.

*[அதளம்–அதளை(செடி)]*

**அதளைவயல்** *adalaivayal,* (பெ.) (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppathur Taluk.

*[அதளை(செடி)+வயல்]*

**அதாட்டியம்** *adšṭṭiyam,*பெ. (n.) வல்லமை; strength. (வ.சொ.அக.).

*[அத்து–அத்தட்டு–அதாட்டு+அம்]*

**அதிக்கிராவி** *adikirāvi,*பெ. (n.) நெல் வகையுள் ஒன்று; a kind of paddy. *"மணவாரியும் சம்பாவும் அதிக்கிராவியும் விரைச்சு*

*புழுக்கோளாயிப் போக"* (TAS. v. P 208.).

*[அதி+கிராவி]*

**அதிகப்பாடி** *adigapādi,* பெ. (n.) சேலம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். Name of the village in salem.

*[அதிகன்+பாடி]*

**அதிகமான்** *adigamāṉ,* பெ. (n.) தகடூர் நாடாண்ட சேரர் குடிச் சிற்றரசன்; a king of Cera family who ruled Tagadur region.

[அதியன் → அதிக + (மகன்) மான் → அதிகமான்.]

**அதிகமான் நெடுமான் அஞ்சி** *adiga-māṉ-neḍumāṉ-anji,* பெ. (n.) அதிகமான்[1] பார்க்க see *adiga-māṉ.*

*[அதிகன்–அதிகமான்]*

**அதிகரணந்தண்டம்** *adikaraṇamtaṇḍam,* பெ. (n.) மேல் நீதி மன்றத்தில் செலுத்தும் ஒறுப்புக் கட்டணம்; a fine paid in the high court. *"கரணத் தண்டமும் அதிகரணத் தண்டமும்"* (SII, ii, 73.).

*[அதிகரணம்+தண்டம்]*

**அதிகன்** *adigaṉ,* (பெ.) (n.) 1. அதியமான் குடி மரபினன்; chieftain of chera dynasty. 2. மேம்பட்டவன்; man of high position.

*க. அத்திக (தலைவன்). து. அதிக (சொத்தினை ஆளும் குடியுரிமை). தெ. அதிக்கு (மேம்பட்டவன்).*

*[அதி–அதியன்–அதிகன்]*

**அதிகாரச்சியார்** *adikāricciyār,* பெ. (n.) பெண் அதிகாரி; lady officer *"அதிகாரிச்சியார் ஐயாரன் தேவியார் முன் செய்கின்ற நிபந்தத்திற்கு முதலாக"* (SII, vii, 1017.).

*[அதிகாரம்+(அத்தி)அச்சி+ஆர்]*

**அதிகை** *adigai,* பெ. (n.) தென் ஆர்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டிக்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village in south arcot near the Panrutti.

[அதியன் → அதிகை.]

**அதிட்டானமானம்** *adiṭṭānamānam,* பெ. (n.) சிற்பங்களின் உயரத்தினை முடிவு செய்யும் மரபு 5:20; deciding the height of statue.

*[அதிட்டானம்+மானம்]*

**அதிபங்கத்தோற்றம்** *adbangaṭṭrram,* (பெ.)(n.) முடிமுதல்அடிவரை ஒழுங்கின்றி அமைந்த சிற்பவடிவம் (5–38.); irregular shape of the statue.

*[அதி+பங்கம்+தோற்றம்]*

**அதிபங்கம்** *adbangam,* (பெ.) (n.) சிற்பநிலை களிற் ஒன்று (1:120); a posture of statue.

*[அதி+பங்கம்]*

**அதியமான் நல்லூர்** *adiyamannallūr,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in chengalpattu.

[அதியமான்+நல்லூர்.]

**அதியமான்பெருவழி** *adiyamāṉperuvaḻi,* (பெ.) (n.) அதியமான் பெயரிலமைந்த நெடுஞ்சாலை; highway named after *adiyamāṉ* the chieftain of *tagadūr.*

*[அதியமான் +பெருவழி]*

**அதியமான்பெருவழிக்கல்** *adiyamāṉ peruvaḻi-k-kal,* (பெ.) (n.) அதியமான் பெயரிலமைந்த நெடுஞ்சாலையில் நடப்பட்ட காவதக்கல்; milestone erected each at a distance of 5 miles (*kāvatam)* in the highway named after *āḍiyaman, king of cēra* clan.

**அதியன்விண்ணத்தனார்** *adiyaṉvinnattaṉār,* (பெ.) (n.) ஒரு புலவரின் பெயர்; name of a poet.

[அதியமான்+விண்ணத்தன்+ஆர்.]

**அதிரசக்கட்டை** *atirasakkaṭṭai,* பெ. (n.) அதிரசத்தில் உள்ள எண்ணெயை அழுத்தி வடிக்குமாறு செய்யப்பட்ட இருபகுதிகளைக் கொண்ட மரக்கருவி; a twin wooden plank need to squeeze extract oil in fried rie cake.



*[அதிரசம்+கட்டை]*

**அதிரடிப்படை** *adirad-p-padai,* (பெ.) (n.) திடுமென தாக்குதல் நடத்தத் தேர்ந் தெடுக்கப்பட்ட மறவர் குழு; commando squad.

*[அதிரடி+படை]*

**அதிரல்** *adiral,* பெ. (n.)ஒரு வகைக் கொடி; a creeper, dillenia Indica.

*[அதிர்–அதிரல்]*

**அதிரவீசுங்கை** பெ.(n.)நூற்றியெட்டு ஆடலியக்கங்களில் ஒன்று;one of 108 dance movements.

*[அதிர+வீசும்+கை]*

**அதிராம்பட்டினம்** *adiraām pattinam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு கடற்கரை நகரம். Name of the village in T*anjavūr.*

*[எதிரான்(இளவரசர்)–அதிரான்+பட்டினம்]*

**அதிருத்ரகும்மி** *adirudrakummi,*(பெ.) (n.) கும்மிப்பாடலின் ஒருவகை, விரைவுக்கும்மி; a play of laddies.

*[அதி+உருத்திரம்+கும்மி]*

**அந்தக் கழுதை இந்தக் கழுதை** *andak-kaludai inda-kkaludai,* பெ. (n.) கண்ணா மூச்சி விளையாட்டினைப் போன்ற விளை யாட்டு. a children's game similiar to hide and seek.

*[அந்த+கழுதை+இந்த+கழுதை]*

**அந்தப்பம்** *andappam,* பெ. (n.)கொங்கு நாட்டில் உள்ள ஓர் ஊர்; name of the village *kongunadu.*

*[ஒருகா. ஏந்தல் + குப்பம்]*

**அந்தர காந்தாரம்** *antarakāndāram* பெ. (n.) வன்சுரங்களில் ஒன்று; a musical note.

*[அந்தரம்+காந்தாரம்]*

**அந்தரத்தாசி** *andara-t-tāsi,* (பெ.) (n.) அந்தி நேரத்தில் உலவும் விலைமகள்; prostitute wandering in the evening. *(முகவை)*

*[அந்திநேரம் –அந்தரம்+தாசி]*

அந்தரத்தாசி என்பது நிரந்தரத்தாசி என்பதன் எதிர்ச்சொல்.

**அந்தராசியாக** *antarāsiyāga,* பெ. (n.) எந்தவொரு பிடிமானமும் இல்லாமல் ஏதிலியாக; vagabond.

*[அந்தரம்+வாசியாக]*

**அந்தராசிபிழைப்பு** *antarāsipilaippu,* பெ. (n.) உறுதியற்ற வேலை பிழைப்பு (இ.வ.);indefinite work, unstable livelyhood.

*[அந்தரம்+வாசி+பிழைப்பு]*

**அந்தராயவேணிமயம்** *antarāyavēnimayam,* பெ. (n.) ஒரு வகை வரி; a kind of tax. *"திருநந்தவனக் குடிகள் ஒன்பதின்மார்க்கு அந்தராய வேணிமயம் நீக்கி"*(SII, iv, 1285.).

*[அந்தராயம்+வேள்+நியமம்]*

**அந்தரி** *antari* பெ. (n.) பண்டைய தோற் கருவியினுள் ஒன்று; a musical drum.



**அந்தரிமுழவு** பெ. (n.) கொற்றவையாகிய அந்தரியை வழிபடும் விழாவில் முழக்கப்படும் முழவு; a musical drum.

*[அந்தரி+முழவு]*

**அந்தளகத்தார்** *andaḷakattār*, பெ. (n.) பல்லக்கு வீரர்; pallanquin bearer. *"அடைத்த நியாயம் உத்தம சோழத் தெரிந்த அந்தளகத்தார்"* (SII, ii, 12.).

*[அந்தளகம்+அத்து+ஆர்]*

**அந்தளி** *andaḷi*, (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[அம்+தளி]*

**அந்தன்** *andaṉ*, பெ. (n.) அழகன் (திருப்பு.40); handsome man.

க. அந்த.[அம்→ அந்தனம்→ அந்தம்– அந்தன்].

**அந்தி** *andi*, பெ. (n.) பாலையாழில் பிறக்கும் பண் (13 : 120.).a musical note.

*[அந்து+அந்தி]*

**அந்திக்களை** *andik-kaḷai*, பெ. (n.) களைவெட்டு அதிகமாக இருக்கும் போது, மதிய இளைப் பாறலுக்குப் பின் நிகழ்த்தும் களைவெட்டு; evening part-time work in the field.

*[அந்தி+களை+வெட்டு]*

(இதற்குக் காலை களைவெட்டும் கலியை விடக் குறைவாக இருக்கும்.) (இ.வ.)

**அந்திநடவு** *andinaḍavu*, (பெ.) (n.) காலை 10 மணி முதல் மாலை வரை நடும் நடவு செய்தல்; implanting work done till evening.

*[அந்தி+நடவு]*

**அந்திப்பூட்டு** *andi-p-pūṭṭu*, பெ. (n.) வயல் களில் மாலை நேரங்களில் உழவு செய்வது; tilling the land in the evening.

*[அந்தி+பூட்டு]*

ஏர் ஓட்டுதல், கமலை ஓட்டுதல், எரு வடித்தல் போன்ற வேலைகளில் உச்சிப் பொழுதில் மதிய உணவு மற்றும் ஓய்விற்குப் பின் தொடர்ந்து செய்யும் வேலை; (இ.வ.)



**அந்தியம்** *andiyam*, பெ. (n.) பத்தாயிரம் (குவளை) கோடி குறித்த பேரெண். (1000 000 000 000); thousand billion.

*[அந்து–அந்தியம்]*

**அந்தியிழவு** *andi-yilavu*, பெ. (n.) இறந்தோரின் வீட்டில் பதினெட்டு நாள் வரையிலும் மாலையில் ஒப்பாரி வைத்து அழும் நிகழ்ச்சி; lamenting song sung for 18 days in the house of the deceased.

*[அந்தி+இழவு]*

ஒரு வகை இனத்தாரில் இறந்தோர் வீட்டில் பதினெட்டாம் நாள் சடங்கு வரையில் நாள்தோறும் மாலையில் உறவின் முறையாரும் தெரு மக்களும் ஒப்பாரி வைத்து அழுது புலம்பும் நிகழ்ச்சியில் மகளிர் மட்டும் இடம் பெறுவர்.

**அந்திரன்** *andiraṉ*, பெ. (n.) தேவன், கடவுள்; celestial person, god. அந்திரனை ஆரூரில் அம்மான் தன்னை (தேவா.723–4)

*[அண்+தன்–அந்தன்–அந்தரன்–அந்திரன்]*

**அந்திவயல்** *andivayal*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[அந்தி+வயல்]*

**அந்துகம்** *andugam*, பெ. (n.) 1. வீரக்கழல்; anklet. 2. யானை கட்டும் இரும்புத் தொடரி (சங்கிலி);chain used to fasten the leg of elephant.

*[அத்து(தொடு, சேர்)–அந்து–அந்துகம்]*

**அந்துவஞ்சௌ்ளை** *anduvan ceḷḷai*, பெ. (n.) தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் மனைவி; name of chera queen and wife of

the chera king. *tagadurerindaperuncērall irumporai.*

*[அந்துவன்+செள்ளை]*

மையூர் (மைசூர்) கிழான் மகளாகிய அந்துவஞ்செள்ளை அந்துவன் மரபைச் சார்ந்தவள்.

**அந்துவன்** *anduvan,* பெ. (n.) அண்ணன், மூத்தவன்; elder person, 2. அழகியவன்; smart person, beloved person. **3.** நெருங்கியவன்; a close friendly person. அந்துவற்கொரு தந்தை ஈன்ற மகன்' (பதிற்.)

க.அந்து(சேர்தல்)து அந்தப்ப, அந்தய்ய, மு. அந்திக்க-(அருகில்)அந்தி-தமக்கை.

*[அண் (மேல்) + து – அந்து + அன் – அந்துவன்(மேலோன்,உயர்ந்தவன்)]*

**அந்தோமா** *andōmā,* கு.வி.எ. (ap.adv.) அந்தப் பக்கமாக. (இ.வ.); that side.

*[அந்த+ஓரமாக]*

**அந்தோளகம்** *andōlogam,* பெ. (n.) பல்லக்கு; palanquin. *"பகல் விளக்கும் பாவாடையும் அந்தோளகமும் குடையும்"*(EI, iii, 11.).

*[அந்தோள்+அகம்]*

**அநங்கதுந்துமி** *anangatundumi,* (பெ.) (n.) துந்துமி இசைக்கருவியின் வேறுபெயர்; name of a musical drum.

*[அணங்கு(காளி)+துந்துமி]*

**அநாதிவெயில்** *anādiveyil,* பெ. (n.) நின்று களைப்பாற நிழல் எதுவுமற்ற வெட்ட வெளியில் காயும் உச்சி வெயில் (இ.வ.); midday hot sun unbearable on the plains.

*[அநாதி+வெயில்]*

**அப்பணங்கட்டு-தல்** *appana-n-kattu-,* செ.குன்றாவி. (v.t.) ஒருவரின் செலவிற்கு பிறர் உதவி புரிதல்; expense met with by others; ஒருவரின் பயணம் முதலியவற்றிற்குத் தேவையான உதவிகளைச் செய்து ஆயத்தப்படுத்தல்; (இ.வ.) to extend monetary help for travelling purpose.

*[அறப்பணம் +கட்டு]*

**அப்பணை** *appanai,* பெ. (n.) கட்டளை; order. *"இருகண நாயக்கற்கு ஸமுக அப்பணையும் பண்ணி தர்ம சாரனமுங் குடுத்து"*(SII. xviii. 751.).

*[அப்பு–அப்பணை]*

**அப்பளாவரம்** *appalāvaram,* (பெ.) (n.) பொன்னேரி வட்டத்திவிலுள்ள சிற்றூர்; a village in ponneri Taluk.

*[ஒருகா. அப்பணை+புரம்]*

**அப்பன்** *appan,* (பெ.) (n.) தன்னுடைய மகனை அப்பன் என்று அழைக்கும் கொங்கு நாட்டு மரபு; a word of endearment used by father to address his son.

*[அப்பு+அப்பன்]*

**அப்பனம்மா** *appanammā,* (பெ.) (n.) அப்பாவும் அம்மாவும்; both fater and mother.

*[அப்பனும்+அம்மாவும்]*

**அப்பாடீ** *appādi,* பெ. (n.) பின்னால் வரப் போகும் தீங்கினைச் சுட்டும் சொல்; a word denoting bad symptom or omen. 'அப்பாடீ! நான் மாட்டேனப்பா.' (வ.சொ.அக.).

*[அப்பன்+அடீ]*

**அப்பிச்சி**[1] *appicci,* பெ. (n.) அப்பாவின் தம்பி, சித்தப்பா; father's younger brother.

*[அப்பு–(அத்மதி)இத்தி]*

**அப்பிச்சி**[2] *appicci,* (பெ.) (n.) அம்மாவின் அப்பா; maternal grand father.

*[அப்பு+(அத்தி)இத்தி]*

**அப்பு** *appu,* பெ. (n.) ஐயா; sir. *'அப்பு உங்களைத்ததானே.'*

*[அப்பன்–அப்பு(விளி)]*

**அப்புக்கட்டை** *appu-k-kattai,* பெ. (n.) ஏருழவு பிறழாமல் இருப்பதற்காக ஏரின் மேக்காலுக்கு மேல் வைத்து அடிக்கும் கட்டை;a wooden piece fixed in the yoke.

*[அப்பு+கட்டை]*

**அப்பூடு** *appūdū,* (பெ.) (n.) அப்பொழுதும்; then.

*[அப்+பூடு]*

**அம்சி** *amsi,* (பெ.) (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

ஒருகா.*[அம்புத்தி–அம்சி]*

**அம்பணப்பராரைக்கட்பறை** *ampānapārarai-k-katparai,* பெ. (n.) அம்பணமரக்கால் வடிவில் செய்யப்பட்ட பறை; a shape of measure ment type of musical drum.

*[அம்பணம்+பராரை+கண்+பறை]*

**அம்பர்** *ambar,* பெ. (n.) திருநள்ளாற்றிலிருந்து 11 கி.மீ. தொலைவிலுள்ள ஓர் ஊர். name of a village which is 11 K.M. away from *Tirunallār.*

*[அம்பல்–அம்பர்]*

இவ்வூர் அம்பர் நாட்டின் தலைகரமாகும். பிற்காலத்தில் இவ்வூர் "விக்கிர சோழபுரம்" எனப்பெயர் பெற்றது.

**அம்பர் அருவந்தை** *ambar-aruvandai,* பெ. (n.) மயிலாடுதுறை வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர். name of a village in *Mayilāduturai taluk.*

*[அம்பர்+அருவந்தை]*

**அம்பர்திருமாகாளம்** *ambartirumāgālam,* பெ. (n.) மயிலாடுதுறை வட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர். name of the village in Mayiladuturai taluk.

*[அம்பர்+திரு+மா+காளம்]*

**அம்பர்புறத்தூர்** *ambarpurattūr,* பெ. (n.) பேரரளத்திலிருந்து 8 அயிரமாத்திரி (கி.மீ.) தொலைவில் அமைந்துள்ளஓர் ஊர்.name of the village 8 K.M. away from *Pērālam.*

*[அம்பர்+புறம்+அத்து+ஊர்]*

**அம்பல்** *ambal,* (பெ.) (n.) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[அம்பு+அம்பல்]*

**அம்பலக் கூத்தர் பட்டர்** *ambalkūttarpattar,* பெ. (n.) விக்கிரம சோழன் காலத்தில் திருவோத்தூர் திருவுண்ணாழிகை அவை (சபை)யில் இருந்தவர். (காலம் 1124); a member *tiruvunnāliga* assembly of Vikkirama Cholan (1124).

[அம்பம்+கூத்தர்+பட்டர்.]

**அம்பி** *ambi,* பெ. (n.) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in Chengalpattu district.

*[அம்பு–அம்பி]*

**அம்பிலி** *ambili,* பெ. (n.) மல்லாக்கப்படுத்துக் கால்களை மடக்கிய நிலையில், பாத மடக்கில் குழந்தையை உட்கார வைத்து பாதத்தோடு குழந்தையைத் தூக்கித் தூக்கிப் போட்டுச் சிரிப்புக் காட்டும் விளையாட்டு; (இ.வ.);a childish play.

*[அம்பல்+அம்பிலி]*

**அம்பிலித்தொட்டி** (பெ.) (n.) நாய்க்கு உணவு இடும் சிறு சட்டி;a small earthen vessel meant for dog.

*[அம்புளி+அம்பிலி+தொ(ச)ட்டி]*

**அம்பிளிக்கை** *ambilikkai,* (பெ.) (n.) பழனி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Palani Taluk.

*[அம்புளிச்சை–அம்புளிக்கை]*

**அம்பு நடனம்** *ambu nadanam,* பெ. (n.) இலங்கையில் வேடர்கள் ஆடுகின்ற ஒரு வகை நடனம்;a dance performed by hunting tribe in celon.

*[அம்பு+நடனம்]*

**அம்மன்எடுப்பு** *amman eduppu,* (பெ.) (n.) ஊருக்கு வெளியேயுள்ள அம்மனை வழிபட்டு கொண்டாடுவது; celebration of rural deity.

*[அம்மன்+எடுப்பு]*

**அம்மன்கொண்டாடி** *ammankondādi,* (பெ.) (n.) தெய்வமேறி ஆடலில் அம்மன் அருள் ஏற்று ஆடுபவன்; a possessed priest in a temple.

*[அம்மன்+கொண்டாடி]*

**அம்மன் கோயில்பட்டி** *ammankovilpatti,* பெ. (n.) சேலம் மாவட்டத்தில் காரையூர்க்குத் தென்கிழக்கில் உள்ள ஓர் ஊர்; name of a village in salem south east to *kārayūr.*

[அம்மன்+கோயில்+பட்டி]

**அம்மாப் பாளையம்** *ammāppalayam*, பெ. (n.) விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; name of the village in *viluppuram*.

*[அம்மன்+பாளையம்]*

**அம்மாம்பொட்டு** *ammāmpoṭṭu*, பெ. (n.) ஒருவகை மேளக் கொட்டுப் போலப் பொட்டுப் பொட்டாக விழும் சற்றே பெரிய மழைத் தூறல்கள்; light rain falling in big drops. *'மானம் இப்பதான் கார்த்திய மாசம் மாதிரி அம்மாம் பொட்டு போட்டுக்கிட்டு நிக்குது'* (இ.வ.).

*[அம்+அம்+பொட்டு]*

**அம்மனைக்காய்** *ammaṉai-k-ai*, பெ. (n.) அம்மானை விளையாட்டில் பயன்படும் காய்; balls used in the *ammaṉai*. (girls' game of keeping a number of balls in the air, some rising while others are following.)

*[அம்மனை+காய்.]*

**அம்மான்கால்** *ammāṉkāl*, பெ. (n.) தாய் மாமன் உறவு; அம்மா வழி உற (இ.வ); maternal relationship.

*[அம்மான்+கால்]*

**அம்மான்வரிசை** *ammāṉvarisai*, பெ. (n.) குடும்பத்தில் இறப்போ, பிறப்போ மற்றுள்ள நிகழ்வுகளோ அனைத்திலும் சடங்கு செய்யும் உறவினர்க்குத் தாய்மாமனால் கொடுக்கப் படும் துணிமணி, பொன்நகை முதலிய சீர்வரிசை;gifts offered by maternal uncle.

*[அம்மான்+வரிசை]*

**அம்மானியாக** *amāṉiyāga*, வி.எ. (adv.) பெரும்பட்டினியாக(க் கிடத்தல்); hunger stricken.

*[அம்மாணி+ஆக]*

**அம்மானை ஆட்டம்** *amāṉai āṭṭam*, (பெ.) (n.) தட்டாங்கல் விளையாட்டினைக் குறிக்கும் சொல்; a children game.

*[அம்மானை+ஆட்டம்]*

**அம்மிச்சி** *ammicci*, (பெ.) (n.) அம்மாவின் அம்மா; maternal grand mother.

*[அம்மை+(அத்தி) இத்தி]*

**அம்மை நாயக்கனூர்** *ammaināyakkanūr*, பெ. (n.) கொடைக்கானல் வழியில் உள்ள ஓர் ஊர்; name of the village on the way to *kodaikkanal*.

[அம்மன்+நாயக்கனூர்]

**அம்முண்டி** *ammuṇḍi*, (பெ.) (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aarkkonam Taluk.

*[ஒருகா. அமர்+அன்]*

**அமஞ்சாக்கி** *amanjākkai*,(பெ.)(n.) அறந்தாங்கி தாலூக்காவிலுள்ள சிற்றூர்; a village in Arantagi Taluk.

*[ஒருகா.அமண+சாக்கி]*

**அமணி** *amaṇi*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[ஒருகா. அம்+மணி]*

**அமர் அடக்கி** *amaraḍakkī*, பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in *Tanjavūr* district.

[அமர்+அடக்கி]

உள்நாட்டுக் கலகத்தை ஒடுகக்கூடிய ஒரு வீரன் 'அமர்அடக்கி' என்று அழைக்கப்பட்டான். அவனுடைய பெயராலேயே இவ்வூர் வழங்கப்பட்டது.

**அமர்வு** *amarvu*, பெ. (n.) குறிப்பிட்ட செயலாற்றும் காலப்பகுதி; session, sitting; கருத்தரங்கின் முதல் அமர்வில் என் கட்டுரையைப் படித்துவிட்டேன்.

*[அமர்+அமர்வு]*

**அமரகுந்தி** *amarakundi*, (பெ.) (n.) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[அமரன்+குந்தி]*

**அமரகோன்** *amarakōṉ*, பெ. (n.) மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்து (1314) திருவாய்ப் பாடி நாட்டவர். *tiruvāyappāḍi* man who

lived during *māravārma sundarapandian period* (1314).

[அமர்+கோன்= அமரகோன்]

**அமரடக்கி** *amaraḍakki,* (பெ.) (n.) நிலக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nilakottai Taluk.

*[அமர்+அடக்கி]*

**அமரன்** *amaraṉ,* பெ. (n.) வித்தமிழ்தை (இந்திரியத்தை)க் கட்டுக்குள் வைத்து ஆள்வோன்;one who controls the semen.

*[அமர்+அன்]*

**அமரபயங்கரன்** *amarapayangaran,* பெ. (n.) கொங்கு நாட்டு அரசர்களில் ஒருவன்; a king of *kongu* country.

*[அமா+அ+பயங்கரன்]*

**அமரன்வயல்** *amaranvayal,* பெ. (n.) திரு வாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[அமர்(போர்வீரன்)+வயல்]*

**அமரோசை** பெ. (n.) ஒருவகையான சுரநிரல்; a musical fluctuation.

*[அமர்+ஓசை]*

**அமளை** *amaḷai,* பெ. (n.) மழைநீரை மட்டுமே நம்பியிருக்கும் மானா வாரிப் பயிரில் விழும் பசளி போன்ற ஒருவகைக் களை; a weed like pasaḷi (வ.சொ.அக.).

*[அமல்–அமலை–அமளை)]*

**அமானம்** *amāṉam,* பெ. (n.) முடிவு தெரியாதது; that which is infinitive. *'இப்படியே அமானமா பேசிக்கொண்டு இருந்தால் எப்படி?.'* (வ.சொ.அக.).

*[அல்+மானம்]*

**அமானிவெயில்** *amāṉiveyil,* பெ. (n.) **மிகுந்த வெயில்** பார்க்க;excessive head of the sun.

*[அல்+(மானம்)–அமானி (அளவுகடந்தது) + வெயில்]*

**அமுக்கடி** *amukkaḍi,* பெ. (n.) கிடைத்ததைப் பற்றிக் கொள்ளுதல்; grabbing whatever available. *'அவன் அமுக்கடிக் காரனாயிற்றே!'* (வ. சொ. அக.).

*[அமுக்கு+அடி]*

**அமுசு** *amusu,* பெ. (n.) அழகு, பேரழகு; beauty, charming.

*[அம்(அழகு)அம்முது–அமுசு]*

**அமுக்கிராபொடி** *amukkirā-poḍi,* பெ. (n.) அமுக்கிராக் கிழங்குடன், திரிகடுகு, ஏலம், கிராம்பு, சிறு நாவற்பூ முதலிவற்றைக் கலந்து செய்த மருந்துப் பொடி; a mixture of the powdered drugs such as horse-root dry ginger, pepper,long pepper, cardamum, cloe, cassia buds.

[அமுக்கிரா+பொடி]

அமு–அமுக்கு=அமுத்துதல். வீக்கத்தை அமுக்குதல். குறைக்கும் மருத்துவ இயல்பு கொண்டது. அமுக்கலாங்கீரை எனப் பெயர் பெற்று பேச்சு வழக்கில் அமுக்கலாங்கீரை – அமுக்கராக் கீரை எனத் திரிந்தது.

**அமுதகண்டலி** (பெ.) (n.) பழம்பெரும் இசைக்கருவி ; a musical instrument.

*[அமுதம்+கண்டம்+அளி]*

**அமுதகுண்டலி** பெ. (n.) தோற்கருவியினுள் ஒன்று; a parcussion instrument.

*[அமுது+குண்டலி]*

**அமுதவல்லபன்** *amudavallaban,* பெ. (n.) 1314ல் வாழ்ந்த திருவாய்ப்பாடி நாட்டவர்.*a tiruvāypādḍ* man who lived during 1314.

*[அமுதன்+வல்லபன்]*

**அமுதுபடி** *amudhupaḍi,* பெ. (n.) உணவுச் செலவு; expenditure of food stuff.

*[அமுது+படி]*

**அமுதூர்** *amudūr,* (பெ.) (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[அமுது+ஊர்]*

**அமைச்சகம்** *amaiccagam,* பெ. (n.) ஓர் அமைச்சரின் பொறுப்பிலிருக்கும் அரசு ஆளுவத்துறை; ministry.

*[அமைச்சு + அகம்]*

**அமைச்சரவை** *amaccaravai* பெ. (n.) அரசுத் துறைகளை ஆளுவம் செய்யும் (நிருவகிக்கும்) அமைச்சர்கள் அடங்கிய குழு; council of minister; cabinet.

[அமைச்சர்+அவை]

**அமைதி உருவங்கள்** (பெ.) (n.) அடக்கமான தோற்றம் கொண்ட சிற்பங்கள் (11 : 43.); sculpture of calmpose.

*[அமைதி+உருவம்+கள்]*

**அமைதிவாரி** *amaidivāri,* (பெ.)(n.) ஆசியா வுக்கும் அமெரிக்காவுக்கும் இடைப் பட்டிருக்கும் பசுபிக் கடல். pacific ocean.

[அமைதி+வாரி]

**அறுமை** *aṟumai,* பெ. (n.) ஆறாம்நாள் (சஷ்டி); sixth day.

[ஆறு → ஆறு–அறுமை]

**அமைப்பாளன்** *amai-p-pāḷaṉ,* ஏதாவது ஒரு நோக்கத்தின் பொருட்டு செயற்படவுள்ள மக்கள் குழுவை ஏற்படுத்துபவர். organizer.

[அமைப்பு+ஆளன்.]

**அமைப்பு** *amai-p-pu,* பெ.(n.) ஏதாவது ஒரு நோக்கத்தின் பொருட்டு ஏற்படுத்திக் கொள்ளும் மக்கள் குழு; organization.

[அமை–அமைப்பு.]

**அய்** *ay,* பெ. (n.) விலங்கினங்கள் குட்டிகளை ஈன்ற குட்டிகளின் மேல் இருக்கும் வழுவழுப்பான ஈரப்பசை; moisture on the skin of the new born animal. *'ஈன்று, அய் உலரவில்லை அதற்குள் என்ன தலைப்பிறட்டு பண்ணுகிறது பார் அந்தக் கன்னுக்குட்டி.'*

*[அள்+அய்]*

**அய்யன்கொம்பு** (பெ.) (n.) தாயின் கால் கட்டை விரலில் குழந்தைகள் கை வைத்து விளையாடுதல்; child's play.

*[ஐய்யன்–அய்யன்+கொம்பு]*

**அய்யனார்** (பெ.) (n.) நாட்டுப்புற மரபில் மழைக்கடவுளாகக்கருதப்பெறும் தெய்வம்;folk deity of rain.

*[ஐயன்+ஆர்]*

**அய்யனேரி** *ayyaneri,* (பெ.) (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruthani Taluk.

*[ஐயன்+ஏரி]*

**அய்யும் பொய்யும்** *ayyumpoyum,* பெ. (n.) உண்மையும் புனைவும்; (இ.வ).;truth and false.

*[ஐயும்+பொய்யும்]*

**அயன்** *ayaṉ,* பெ. (n.) தரமுயர்ந்த சரக்கு; a fine product. *'இது நல்ல அயனான சரக்கு.*

*[ஐ+ன்–அய்ன். ஐ–அழகு, உயர்வு]*

**அயன்மொழி** *ayaṉmoḻi,* பெ. (n.) ஒரு மொழி பேசும் இடத்திற்கு அப்பால் பேசப்படும் வேற்றுமொழி; foreign language.

[அயல்+மொழி]

**அயிக்கா மங்கலம்,** *ayikkāmaṅgalam,* பெ. (n.) நாகப்பட்டினம் வட்டத்திலுள்ள சிற்றூர்; name of the village in Nagapattinam taluk.

*[ஐ+அக்கா+மங்கலம்]*

**அயிர்ப்பு** (பெ.) (n.) திறப்பண்களின் ஒரு வகை. (113 : 119.).;a musical note.

*[அயிர்+அயிர்ப்பு]*

**அரச்சஅலேக்கிய ஏலேலக்கும்மி** *aracca alekkiya ēlēlakummy,* (பெ.) (n.) ஒரு வகையான கும்மிப்பாடல்; a kind of *kummi* play.

*[ஏலேலம்+கும்மி]*

**அரத்தை** *arattai* (பெ.) (n.) திருமால் சிற்பத்தின் இருப்பு நிலைகளில் ஒன்று. (52 : 34.);one of the posture of Thriumāl.

*[அரத்தை>Skt அர்ச்சை]*

**அரிசிப்பொரி** *ariśi-p-pori,* (பெ.)(n.) பொரிந்த அரிசி;parched rice.

[அரிசி+பொரி]

**அருஞ்செயல்** *aruñceyal,* (பெ.)(n.) அருவினை பார்க்க; see *aruviṉai.*

[அரு(ம்)+செயல்]

**அருவினை** *aruviṉai* (பெ.) (n.) ஏதாவது ஒரு துறையில் இதுவரை செய்ய முடிந்ததற்கும் மேலாகச் செய்வது; record, achievement.

'*இருவேம் ஆய்ந்த ஏமஞ்சால் அருவினை (குறிஞ்சி)*

**மறுவ.** அருஞ்செயல், சாதனை.

*[அரு+வினை]*

**அரைமண்டி** *araimaṇḍi* (பெ.) (n.) தமிழ் ஆடற்கலைக்கு அடிப்படைக் கோட்பாட்டினை வழங்கும் உடலமைவு; fundamental first pose in dance of the Tamils.

*[அரை+மண்டி]*



**அரைஅத்தம்** *araiarattam,* பெ. (n.) சிற்பிகள் செதுக்கும் இறைவடிவின் திருக்கரம் ; hand pose of god.

*[அரை+அத்தம்]*



**அரக்கப்பரக்க** *arakka-p-parakka,* வி.எ. (adv.) படப்படப்பான வேகத்துடன்; hasty. '*அவன் எந்த வேலைகளையும் கடைசி நேரத்தில் அரக்கப் பரக்கத்தான் செய்வான்*' (வ.சொ.அக.).

*[அரக்க+பரக்க]*

**அரக்கம்பி** *araikambi,* பெ. (n.) பலகணியில் குறுக்குச் சட்டத்தில் பொறுத்தப்பட்ட கம்பி; iron rod fixed in window.

*[அரம்+கம்பி]*



**அரக்கிக்கொடு-த்தல்** *arakki-k-koḍu-,* செ.கு.வி. (v.i.) சிக்கல்களைப் பெரிது படுத்தாமல் மனம் பொறுத்துப் போதல், சாக்குபோக்கு சொல்லி நாளைக் கடத்துதல்; (இ.வ.). to adjust to the situation.

*[அரக்கி+கொடு]*

**அரக்குக்கூண்டு** *aṟakku-k-kūṇḍu,* பெ. (n.) அரக்கு போன்ற பொருளினால் கட்டப்பெற்ற குளவிக்கூடு; wasp-hive.

*[அரக்கு+கூண்டு]*

**அரகண்டநல்லூர்** *arangaṇḍanullūr,* பெ. (n.) அரையணி நல்லூர் பார்க்க; see *arayani nullūr.*

. [அரையணி நல்லூர் → அரகண்ட நல்லூர்]

**அரங்கநாதர் சேவைப்பாடல்** (பெ.) (n.) அரங்கநாதர் எனும் இறைபற்றிய சேவைப் பாடல்; prayer song of Arunganather.

*[அரங்கம்+நாதன்+சேவை+பாடல்]*

**அரங்கம்** *aragam,*(பெ.) (n.) குண்டினை வைக்கும் இடம் சதுர அரங்கு (த.நா.வி.). a square place or stage.

*[அரங்கு–அரங்கம்]*

**அரங்கம்** *arangam,* (பெ.) (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[அரங்கு + அம்]*

**அரசங்கட்டு** *arasankattu,* பெ. (n.) பல்லாங் குழியில் கட்டாட்ட வகையில் ஒன்று; an indoor games.

*[அரசன் + கட்டு]*

**அரசம்பூர்** *arasambūr,* (பெ.) (n.) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salam Taluk.

*[அரசன்+புரம்]*

**அரசமரத்திருமணம்** *araša-mara-tirumaṇam,* பெ. (n.) குழந்தைஇல்லாதவன் பிள்ளைப் பேறடையும் பொருட்டு அரச மரத்தை நட்டு மகனாக் கருதி வளர்த்துப் பின் அவ்வரசமரத்திற்கு வேப்பமரத்தை மனைவியாக்கிச் செய்யும் திருமணச் சடங்கு (உ.வ.); rites of marriage performed with a pipal tree as bridegroom and margosa as bride the pipal having beenplanted by a sonless person with a view to a begetting a son and havingbeen reared by him as his first son.

[அரசமரம்+திருமணம்]

**அரசல் புரசலாக** *arašal purasalāga,* - வி.எ. (adv.) அரைகுறையாக (கொ.வ.வ.சொ.8.) defective, imperfect.

*[அரைசல்+புரைசல்+ஆக]*

**அரசாணி** *arasāṇi,* (பெ.) (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[அரசு+காணி]*

**அரசித்தி** *arasidi,*(பெ.)(n.) ஆகமங்கள் இயம்புகின்ற காளி சிற்பத்தின் வேறு வடிவம் (11: 48.).

*[அரன்+சித்தி]*

**அரசிதழ்** *arasidal,* பெ. (n.) (அரசின் அறிவிப்புகள், பணிக்குத் தெரிவு செய்யப் பட்டவர்களின் பெயர்கள் வெளியாகும்) அரசின் அதிகார வரம்புக்குட்பட்டதோர் ஏடு; gazette.

*[அரசு+இதழ்]*

**அரசி மாணிக்கம்** *arašimāṇikkam,* பெ. (n.) சிறந்தமாணிக்கம்; best rubi. *"திருப்பட்டிகை நானும் அரசி மாணிக்கமும் படுகண்ணும் கள்ளிப்பூவும்"* (SII. ii. 93.).

*[அரசி+மாணிக்ககம்]*

**அரசிலை** *arasilai,* (பெ.) (n.) விழாக் காலங்களில் இசைக்கப்படும் ஒரு சலங்கைக் கருவி; a musical instrument.

*[அரசு+இதழ்]*



**அரசிறாமணி** *arasirāmaṇi,* (பெ.) (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[ஒருகா. அரசு+இறை+மானியம்]*

**அரசு** *arasu,* பெ. (n.) பல்லாங்குழியில் ஒரு குழியின் பெயர் (கு.வ.); a dip in the board of pallan kuḷi.

*[அரசன்~அரசு]*

**அரசு ஊழியர்** *arasu ūliyar,* பெ. (n.) மாநில, நடுவண் அரசு அலுவலகங்களில் பணிபுரிபவர்; government servant, either state government or central government.

[அரசு+ஊழியர்]

**அரசுசுற்று—தல்** *arasusurru-,* செ.கு.வி. (v.i.) புதுமணமக்கள் திருக்கோயில்களில் உள்ள அரசும் வேம்பும் சேர்ந்து இருக்கும் மரத்தைச் சுற்றிவரும் சடங்கு; (இ.வ.);a ceremony of

coming round arasuvembu trees in the marriage.

*[அரசு+சுற்று]*

அரசு சுற்றியப் பிறகே கணவன் மனைவி உறவு உறுதியாகும்.

**அரசுடைமையாக்கு-தல்** *araśuḍaimai-y-ākku-,* செ.கு.வி. (v.t.) தனியொருவரால் அல்லது தனியாரால் தொடங்கப்பட்ட ஒரு தொழிலை அல்லது நிறுவனத்தை அரசு தன் உரிமையாக்குதல்; nationalisation.

*[அரசு+உடைமை+ஆக்கு]*

**அரசுவயல்** *arasuvayal,* (பெ.) (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ளலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[அரசு+வயல்]*

**அரசூர்** *arasūr,* பெ. (n.)செய்யாறு வந்தவாசி சாலையில் உள்ள ஓர் ஊர். name of the village way on *seyāruvandavaāsi*road.

[அரசு+ஊர்]

அரசூர் என்பது அரைசூர் எனவும் வழங்கப்பட்டது.

**அரசைமுரசம்** *arasaimurasam,* (பெ.) (n.) மயிர்க்கண் முரசின் மற்றொரு பெயர்;a name of a royal drum.

*[அரசு+முரசம்]*

**அரட்டாம் பெரட்டு** *araṭṭāmperaṭṭu,* பெ. (n.) போதுமானதாக இல்லாதது, உறுதியில்லாதது; (இ.வ.); insufficiency.

*[அரை–அரட்டு+ஆர்–(புரை)புரட்டு]*

**அரண்மனைச் சிறுவயல்** *araṇmaṉai c-ciṟu vayal,* பெ. (n.) சிவகங்கை மாவட்டத்தில் காரைக்குடி சிவகங்கைப் பாதையில் அமைந்துள்ள ஊர். name of the village in sivagangai.

*[அரண்மனை+சிறுவயல்]*

**அரண்மனைக்காப்பு** (பெ.) (n.) கோடியம்மன் கோயில் திருவிழாவை முன்னிட்டு பிற தெய்வங்களுக்குக் கட்டப்படும் காப்பு;a ritual observed in temple festival.

*[அரண்மனை+காப்பு]*

**அரணைப்புத்தி** *araṇai-p-putti,* பெ. (n.) நினைவுக் குறைவு; failure in memory.

[அரணை+புத்தி]

**அரதைப்பெரும்பாழி** *aradai-p-perumpāḻi,* பெ. (n.) அரித்துவார மங்கலம் என்று அழைக்கப் படும் கடலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in cuddalore.

*[ஒருகா.அருகதன்+பெரும்+பாழி]*

**அரப்பு** *arappu,* (பெ.) (n.) தலைக்குத் தேய்த்துக் குளிக்கப் பயன்படும் துரிஞ்சில் மர இலைப் பொடி. (கொ.வ.வ.சொ.8.).powder of Turinjil tree leaves used while taking oil bath.

*[அரைப்பு+அரப்பு]*

**அரம்புலி** *arampuli,* பெ. (n.) பெண் குழந்தை களின் குறியை மூடியிருக்குமாறு அரைநாண் கொடியில் கோத்துக் கட்டப்படும் அரசிலை வடிவிலான வெள்ளி அல்லது பொன்னணி கலன்; pipal leaf shaped metal piece to hide nudity worn on the waist of femal children.

*[அரசு+இலை+பொலி]*

**அரப்பேடு** *arappēḍu,* (பெ.) (n.) 1. மதுராந்தகம் வட்டத்திலுள்ளசிற்றூர். a village in Madu rantakam Taluk. 2.தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village name in T*anjāvūr.*

*[அரப்பு+பேடு]*

**அரம்** *aram,* பெ. (n.) தேர்ந்த மரப்பகுதியை நயப்படுத்த உதவும் குத்து முனைகளை உடைய பட்டையான இருப்புக் கருவி. (நெ.தொ.க. 53.).; file of a carpenter.

*[அருவு–அராவு–அரம்]*



**அரல்** *aral* பெ. (n.) நாக்கு போன்ற வடிவில் உள்ள கடல் வாழ் உயிரி; a tongue shaped marine fish variety.

*[அரு–அரல்]*



இதில் கொத்து கொத்தாக இருப்பதை அரல் என்பர். அருவருப்பான தோற்றமுடையது நாய் அரல். பெரியது பேய் அரல்.

**அரவக்கடில்** (பெ.) (n.) சிற்பங்களை அணி செய்யும் ஓர் அணிகலன்; ornament figuration in sculpture.

[அரவம்+கடில்]

**அரவாட்டம்** *aravāṭṭam,* பெ. (n.) பாம்பு ஊர்வது போன்று தொடர்ந்து எழும் மெல்லிய ஒலி; a mild sound compared with snake's movement. (வ.சொ.அக.).

*[அரவம்+ஆட்டம்]*

**அரளக்கல்** *araḷak-kal,* பெ. (n.) கருங்கற் பாறையில் உடைத்தெடுக்கப் பெற்று, வீட்டுச் சுவர் வைப்பதற்கேற்ற கல்;boulder piece used in contructing wall.

*[அரள்+கல்]*

**அரளவாடி** *araḷāvaḍi,* (பெ.) (n.) திருக்கோயிலூர் தாலூக்காவிலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

[அரளை+வாடி]

**அரளி** *araḷi,* (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[அரளி(செடி)–அரளி]*

**அரற்று** *arṟu* பெ. (n.) ஒரு வகையான திறப் பண்; a musical note.

*[அராறு–அரற்று]*

**அரனேரி** *aranēri,* (பெ.) (n.) திருப்பெரும்புதூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sriperumpudur Taluk.

*[அரன்+ஏரி]*

**அராகம்** (பெ.) (n.) முல்லை நிலத்தின் திறப்பண் (13 : 119.). a musical note.

*[அராவு–அராகம்]*

**அராளம்** (பெ.) (n.) ஒருவகையான ஒற்றை முத்திரை நிலை. ;a dancing pose.

*[அரள்+அராளம்]*

**அரி** பெ. (n.) நெற்கதிரை அறுவடை செய்தல் (வ.வ.வே.க.110). harvesting the paddy field.

*[அரிதல்–அரி]*

**அரிஓம்** *ariōm,* பெ. (n.) முதன் முதலாக ஒன்றைத் தொடக்குதல்; to start as a first venture. *'முதன்முதலாக அரிஓம் என்று இப்பொழுதுதான் வீடுகட்ட ஆரம்பித் திருக்கிறார்; இந்த நேரத்தில் மகள் செலவு வந்து விட்டது'* (இ.வ.).

*[அரி (அரிச்சுவடி)+ஓம்]*

**அரிக்கன்சட்டி** *ari-k-kāṉcaṭṭi* பெ. (n.) அரிசி களைவதற்குப் பயன்படும் உலோகம் மற்றும் மண்ணாலான சட்டி; அரிக்கண்சட்டி பார்க்க; see *arikkaṇcaṭṭi*

[அரி+கண்–அரிக்கண்–அரிக்கன் (கொவ)]



**அரிக்குஞ்சு** (பெ.) (n.) மிகச் சிறிய மீன் குஞ்சு; tiny fish.

*[அரி+குஞ்சு]*

**அரிக்குரல் தட்டைப்பறை** (பெ.) (n.) ஒரு வகையான பறை ; a drum which produces shrill sound.

*[அரி+குரல்]*

**அரிக்குருவி** *ari-k-kuruvi,* பெ. (n.) வயல்களில் விளைந்திருக்கும் நெல்மணிகளைக் கூட்டம் கூட்டமாக வந்து தின்னும் சிட்டுக் குருவி வகை; (இ.வ.).; a kind of sparrow group.

*[அரி+குருவி]*



**அரிக்கூடுஇன்னியம்;** *arikkūḍuinniyam,* (பெ.) (n.) மிக நுண்ணிய ஓசைகளை எழுப்பும் பறை வகை; a drum producing minute musical sound. (35 : 60.).

*[அரிக்குரல்(கூடும்) கூடு+இன்னியம்]*

**அரிக்கொடா** *ari-k-keḍā,* பெ. (n.)அறுத்து வரிசையாகப் போட்டிருக்கும் அரிகிடைகளிலும் அறுவடைக்கு விளைந்து சாய்ந்து கிடக்கும் பயிர்களிலும் வந்து உட்கார்ந்து நெல் மணிகளைக் கொறித்து வேகமாக நடந்து ஓடக் கூடிய பறவை வகை; (இ.வ.). a bird.

*[அரி+கடா–அரிக்கெடா (கொ.வ.)]*

**அரிக்கிடையாக** *arikiḍaiyāga,* பெ. (n.) ஒட்டுமொத்தமாக;all in one group. *"வீட்டில் ஒரு வயது பிள்ளையைத் தனியே விட்டு விட்டு எல்லாரும் அரிகிடையாக கூத்துப் பார்க்கப் போய்விட்டால் என்ன பொருள்?"*

*[அரி+கிடை+ஆக]*

**அரிகரண்டி** (பெ.) (n.) வாணலியில் வறுத்ததை சுடு எண்ணெயிலிருந்து எடுக்க உதவும் கரண்டி; ladle made of metal.

*[அரி+கரண்டி]*



**அரிகிலவாடி** *arikilavāḍi,* (பெ.) (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arkkonam Taluk.

*ஒருகா. [அரி+குளம்+வாடி]*

**அரிகிடை** *arrikiḍai* (பெ.) (n.) நெல் வயலில் அறுவடைத் தாளைக் கட்டாமல் குவியலாகப் போட்டுவைக்கும்கிடப்பு. (கொ.வ.வ.சொ.9.). heap of harvested paddy stalk.

*[அரி+கிடை]*

**அரிச்சந்திரன்முடக்கு** *ariccandiranmuḍakku,* பெ. (n.) அரிச்சந்திரனாகிய வெட்டி யானுக்குச் சேரவேண்டிய கால் பணத்தைச் செலுத்தும் சுடுகாட்டின் நுழைவாயில்; entrance area to burial ground. *"அரிச்சந்திரன் முடக்கில் பிணம் வந்ததும் அதுவரை வீட்டை நோக்கி வந்த பிணத்தின் முகத்தைச் சுடுகாட்டை நோக்கி இருக்குமாறு பாடையை மாற்றி எடுத்துச் செல்வர்."*

*மறுவ நடுக்கட்டு.*

[அரிசசந்திரன்+முடக்கு]

**அரிசிக்கருக்காய்** *araccikkarukkāi,* பெ. (n.) முதிராத நெல் நடுக்கட்டு எனப்படுந் தமிழ் மரபு;unripped paddy.

*[அரிசி+கருக்காய்]*

**அரிசிக்காளான்** *arisi-k-kāḷāṉ,* பெ. (n.) பட்டமரங்கள், புற்றுகளில் காணப்படும் மிகச்

சிறுவகைக் காளான்; small size mushroom.

*[அரிசி+காளான்]*

**அரிசிக்குழை** *ariśikkuḻai,* பெ. (n.) நெற்பயிரில் கிளைத்து வளரும் ஒருவகைக் களை; a kind of weed in rice field. (வ.சொ.அக.).

*[அரிசி+குழை]*

**அரிசிப்பூடு** *ariccipūdu,* (பெ.) (n.) சிறு இலைகளை உடைய ஒருவகைப் பூண்டு; a plant of small leaves.

*[அரிசி+பூடு]*

**அரிசில்கிழார்** *arisilkiḻār,* (பெ.) (n.) சோழ நாட்டில் அரிசில் என்னும் ஊரில் வாழ்ந்த சங்கப் புலவர்; a sangam poet of arisil village in chola country.

*[அரிசில்+கிழார்]*

**அரிசிற்கரைப்புத்தூர்** *arisiṟkaraiputtūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in *Tanjavūr.*

[அரிசில்+கரை+புத்தூர்]

**அரிதப்போதிகை** *arida-p-pōdigai,* (பெ.) (n.) யானையின் பின்னங்கால் தொடரி; the hind leg chain of elephant.

[அரிதம்+போதிகை]



**அரிப்பாள்** *arippāḷ,* பெ. (n.) அரிசியிலிருந்து கல்லை நீக்கும் பெண்;woman who sifts rice with seive. *"அரிசி அரிப்பாளுக்கும் உத்தமாக்கிரம் உண்ண"* (SII. viii. 679.).

*[அரி+அரிப்பாள்]*

**அரிப்பான்** *arippāṉ,* பெ. (n.) சலிப்பான்; sieve.

*[அரி–அரிப்பான்]*

**அரிமளம்** *arimaḷam,* பெ. (n.) புதுக்கோட்டை யிலிருந்து 18 அயிரமாத்திரி (கி.மீ.) தொலை விலுள்ள ஓர் ஊர். name of a village18 k.m. from pudukkottai.

[ஒருகா. அரி+வளம்]

**அரிமாகர்ணஅத்தம்** *arimākarna attam* பெ. (n.) சிற்ப வல்லுநர் வடிவமைக்கும் திருக்கரம்; hand pose chiseled by the sculptor.

[அரிமா+கர்ணம்+வளம்]

**அரியறாவி** *ariyaṟāvi,* (பெ.) (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Virddhachalam Taluk.

[ஒருகா.அரியல்+(தாவு)தாவி]

**அரியக்குடி** *ariyakkuḍi,* பெ. (n.) புதுக்கோட்டை மாவட்டத்தில் காரைக்குடிக்கு அருகில் உள்ள ஓர் ஊர். name of a village from pudukottai.

[அரியல்+குடி]

**அரியநாயகபுரம்** *ariyanāyagapuram,* பெ. (n.) நெல்லை நகருக்குத் தென் மேற்கே பத்து கல் (மைல்) தூரத்தில் உள்ள ஊர்; name of the town situated in south west in *Tirunalvēli.*

[அரியநாதமுதலியார் – அரிய நாயகம் + புரம்]

நாயக்கர்கள் மதுரையில் அரசு புரிந்த போது பெருந்துணை புரிந்தவர் அரியநாத முதலியார் என்பர்.

**அரியலூர்** *ariylūr,* பெ. (n.) அரியாற்றூர்; பார்க்கக; see *ariyāṟṟūr.*

[அரியாற்றூர்→அரியலூர்]

**அரியாற்றூர்** *ariyāṟṟūr,* பெ. (n.)மன்னார்குடி வட்டத்தில் அமைந்துள்ள ஊர்.name of the village in mannarkudi.

[அரியாறு+ஊர்–அரியாற்றூர்]

**அரியூர்** *ariyūr,* பெ. (n.)வேலூர் மாவட்டம் வேலூர்க்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village in *vellore.*

[அரி+ஊர்]

கற்கால மக்கள் அதிகமாக வாழ்ந்ததன் சான்றுகளாகப் பல சின்னங்கள் இங்குள்ள காடுகளில் கிடைத்துள்ளன.

**அரிவடைபோடு-தல்** *arivadaipōdu-,* செ.கு.வி. (v.i.) களிமண்ணைக் குழைத்துப் பச்சைச் செங்கற்களாக அறுத்துக் காயவைத்தல்; raw wet brick laid to dry in the sun.

*[அரிவடை+போடு]*

**அரிவரிப்பு** (பெ.) (n.) அருவருப்பு; disgust.

*[அருவருப்பு-அரிவரிப்பு.(கொ.வ.)]*

**அரிவித்தி** *arivitti,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

[அரிவித்தி]

**அரிவெட்டி** *arivetti,* பெ. (n.) அதிகமாக உண்பவன்; one who eats more and more. 'சரியான அரிவெட்டியா இருக்கானே உன்மகன்?'

*[அரி(அரிசி-சோறு)+ வெட்டி]*

**அரிவேதனை** *arivēdanai,* பெ. (n.) பசபசவென அரிப்பெடுத்துத் துன்பம் தரும் ஒருவகைச் சொறிசிரங்கு; scabies. (வ.சொ.அக.).

*[அரி+வேதனை]*

**அரிச்சுஎடுத்தல்** *ariccueduttal,* (பெ.) (n.) துருவித் துருவிக் கேட்டல்; to enquire deeply.

*[அரித்து(அரிச்சு)+எடுத்தல்]*

**அரிகாவூர்** *arikāvūr,* பெ. (n.) செய்யாறு ஆரணி சாலையில் உள்ள ஓர் ஊர். name of the village in *Cey-yaru* way to *arani salai*

[அரி+கா+ஊர்]

**அருகியல்பண்** *arugialpan,* (பெ.) (n.) பண் வகையினுள் நாற்பெரும்பண் வகை;a class of primary melody type.

*[அருகியல்+பண்]*

**அருகிளுப்பு** *arukiluppu,* பெ. (n.)1. கூச்சம்; shyness. 2.மனவருத்தம், துன்பம்; distress. *'அவன் முகத்தில் விழிக்க எனக்கு அருகிளுப்பா இருக்கு'.* (இ.வ.).

*[அருகல்-அருகலிப்பு-அருகிளுப்பு (கொ.வ.)]*

**அருகேரி** *arugēri,* (பெ.) (n.) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Virddhachalam Taluk.

*[அருகு+ஏரி]*

**அருகோடை** *arukōdai,* பெ. (n.) இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram Taluk.

*[அருகு+ஓடை]*

**அருங்குருக்கை** *arungurukkai;* (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[அரும்+குருக்கை]*

**அருங்குணம்** *arunkunam,* (பெ.) (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in wandiwash Taluk.

*[அரும் + (குளம்) குணம்]*

**அருணோன்மாலை** (பெ.) (n.) சிற்ப வடிவிலான கடிபந்தனத்தில் இருந்து தொங்கும் அணிகலன்; a jewellary design seen in sculpture.

*[அருணன்+மாலை]*

**அருந்தொலைவு** *aruntolaivu,* பெ. (n.) கிணற்றின் அதிகப்படியான ஆழம்; the maximum depth in a well. *'அருந் தொலைவில் கிடக்கும் தண்ணீரை இறைப்பதனால் வேகமாகப் போய் பாயமாட்டேன்குது'.* (இ.வ.).

*[அரும்+தொலைவு]*

**அருந்தோடு** *aruntōdu,* (பெ.) (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in wandiwash Taluk.

*[அரும்+தோடு (ஓடை)]*

**அரும்பொட்டி** *arumbotti,* (பெ.) (n.) சிற்பங் களின் கழுத்தணி வகையினுள் ஒன்று (5:76.); a design in jewellary.



[அரும்பு+ஒட்டி]

**அருமந்தை** *arumantai*, பெ. (n.)காஞ்சி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in *Kanji.*

[அருவன்+அந்தை]

**அருமன்** *aruman,* (பெ.) (n.) 1.அருமை (அன்பு)க்கு உரியவன்; beloved person. 2.அழகன்; smart person. 3.சிறந்தவன்; gentleman, man of excellance. 4. மேலோன்; a person of high position.

தெ.அரிமி (அன்பு). க.அருமை (அன்பு).ம.அருவ. (அழகு, பெண்) பிராகு.அர்வத் (மனைவி)

[அருமை+அன்–அருமையன்–அருமன்]

**அருமாத்து** *arumāttu,* பெ. (n.) 1. ஒப்புக்கு அமைவது; eye wash. *'அருமாத்துக்குப் பிள்ளையைப் பெற்றுவிட்டு இப்படியா தெருவில் அலைய விடுவது?'.* (இல).2. கடமை; duty. 3. அரிப்பு; irritation.

[அரு+மாத்து]

**அருமுழிதேவன்** *arumuḻidēvan,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

[அருண்மொழி+தேவன்]

**அருமுளை** *arumuḷai,* (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

[அரு+முளை]

**அருமைக்காரர்**[1] *arumai-k-kārar* (பெ.) (n.) கொங்கு வேளாளர் இனத்தில் திருமணத்தை நடத்துபவர்; Tamil priest authorised to conduct marriage ceremonies for kongu vellālars.

[அருமை+காரர்]

**அருமைக்காரி**[2] *arumaikkāri,*(பெ.)(n.) கொங்கு வேளாளர் திருமணத்தில் பெண்ணுக்குரிய சடங்குகளைச் செய்யும் பெண்; Tamil priestess authorised to conduct marriage ceremonies for kongu vellalars.

[அருமை+காரி]

**அருமைப்பெரியவர்** *arumaiperiavar,* (பெ.) (n.) அருமைக்காரரைச் சுட்டும் வேறு பெயர்; a name of *arumai-k-kārar.*

[அருமை+பெரியவர்]

**அருவம்** *aruvam,* (பெ.) (n.) பெரிய பானை; large water pot.

[அரு–அருவம்]

**அருவெட்டிப்படி** *aruveṭṭip-paḍi,* பெ.(n.) மரத்தாலான படி; a measure made of wood.

ஒருகா.[ அரி+அட்டு+படி]

**அருவு** *aṟuvu,* பெ. (n.) **அறுகங்கட்டை** பார்க்க; see *aṟukaṅkaṭṭai.*

[அருகு–அருவு]

**அருவோவியங்கள்** *aruvōviyangaḷ,* (n.) ஒரு நாட்டுப்புறக் கைவினைக் கலை; an handicraft.

[அரு+ஓவியங்கள்]

**அருள் கேட்டு** *aruḷkēṭṭu,* பெ. (n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in *vellore.*

[அருள்+கேட்டு]

**அருள்மொழிதேவச் சதுர்வேதிமங்கலம்** *aruḷ moḻi dēva-c-cadurvēdi mangalam,* பெ. (n.) மன்னார்குடி வட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in *mannarkudi.*

[அருள்மொழி+தேவன்+சதுர்வேதி+ மங்கலம்]

**அருளவாடி** *aruḷavāḍi,* (பெ.) (n.) கோபி செட்டிபாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a

village in Gopichetti Palayam Taluk.

*[அருளன்+வாடி]*

**அருக்குளா** *arukkuḷā*, பெ. (n.) நெய்மீன்; a kind of fish that smells as ghee.

*[அரு+(குளவு)குளா]*

**அருகெடுப்பு** *arukeḍuppu*, பெ. (n.) குடியான வனின் நிலவருமானத்தில் கணிச மாகச் செலவு ஏற்படுத்தும் கூறு; remarkable portion of the expenditure of farmer crop.

*[அருகு+எடுப்பு]*

**அருவுதல்** *aruvu-*, செ.கு.வி. (v.i.) தீர்ந்து போதல்; to become empty. *'அருவாகிப்போச்சு'*

*[அரு–அருவு]*

**அரூர்** *arur*, பெ. (n.) தருமபுரி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்.name of the village in *Dharumapuri*

[ஒருகா. ஆர்(ஆத்தி)+ஊர்]

**அரைக்கல்** *araikkal*, பெ.(n.) கோலி விளை யாட்டில் அடித்த குண்டு கோட்டில் போய்ச் சிக்கி நின்று விடுதல்; striker ball got stopped in the marker line.

*[அரை–கல்]*

**அரைக்களை**[1] *araikkaḷai*, பெ. (n.) களை வகை யினுள் ஒன்று; a weed.

*[அரை+களை]*

**அரைக்களை**[2] *araikkaḷai*, பெ. (n.) ஒரெண்ணளணிக்கைக்குள் இரண்டு குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்; pronouncing double short vowels at a time.

*[அரை–களை]*

**அரைக்கொட்டு** *araik-k-koṭṭu*, பெ. (n.) பாதியாகத் தேய்ந்த மண்வெட்டி; a blunt showel.

*[அரை+கொட்டு]*

**அரைசீர்** *araicīr*, பெ. (n.) **அஞ்சுமாசச் சீர்** பார்க்க; (இ.வ.) gift given on the fifth month of pregnancy.

*[அரை+சீர்]*

**அரைசீலைசாமான்கள்** *araicelaicāmāṉgal*, (பெ.) (n.) சடங்குகளில் பயன்படுத்தப்படும் சமையற்பொருள்கள்; provisions for cooking used for rituals.

*[அரைசல்–அரைசிலை+சாமான்கள்]*

**அரைசூருடையான்** *araisūruḍaiyāṉ*, பெ. (n.) முதலாம் குலோத்துங்கன் ஆட்சியின் போது (1081) பாரசூர் நாட்டு இருங்கலையில் வாழ்ந்தவன்; a person lived during the reign of the chola king Kulottungan - I.

[அரைசு(அரசு)+ஊர்+உடையாள்]

**அரைத்துரிதம்** பெ.(n.)தாளக்குறியீடு வகைகளுள் ஒன்று;a time measure in music.

*[அரை+துரிதம்]*

**அரைமனசும்தலைவலியுமாக** *araimaṉasum talaivaliyumāga*, பெ.எ. (adj) முழு மன நிறைவுடன் இல்லாமல்; (இ.வ.). un satisfactarily.

*[அரை+மனது+சும்+தலைவலி+உம்+ஆக* (மரபுத் தொடர்)*]*

**அரைமனை** *araimaṉai*, பெ. (n.) அரண்மனை; palace. *"அரைமனையில் கணக்கிலும் எழுதுவித்த விட்ட அளவுக்கு"* (SII. xxii. 194.).

*[அரண்மனை–அரைமனை(கொ.வ.)]*

**அரையணி** *araiyaṇi*, பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādanāi Taluk.

*[அரை–அணி]*

**அரையர்சேவை** *araiyarsēvai*, (பெ.) (n.) அரையர் இனத்தினர் வைணவக் கோயில் களில் நிகழ்த்தும் இசைச் சார்புக் கலை; chanting of holy devotional hymns by the vaishnava priests.

*[அரையர்+சேவை]*

**அல்பத்துவகரம்** *alpatuacuram*, பெ. (n.) ஓர் இராகத்தைப் பாடும் போது மிகக் குறைவாக ஒலிக்கப்பெறும் சுரம் ;a melody type in a low voice.

*[அல்கு–(அல்பம்)–அல்பத்துவம்+சுரம்]*

**அல்லாடு-தல்** *alādu-,* (செ.கு.வி.) (v.i.) தொல்லைப்படுதல், துன்பப்படுதல்; to suffer.

*[அல்லல்+ஆடு]*

**அல்லாண்டை** *allāṇḍai,* பெ. (n.) இவன் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்திய கோபாலராயன் என்பவரின் மகன்; a courtlord who lived during the period of *maravarman sundara pandian*

[அல்+ஆண்டை]

ஆக்களையும், எருதுகளையும் பெற்றுக் கொண்டு பாலும், நெய்யும் திருவோத்தூர் கோயிலுக்கு வழங்க உடன் பட்ட இடையர் குலத்தவன்.

**அல்லி அரசாணிபானை** *alli āraśāṇipānai,* பெ. (n.) திருமண நிகழ்ச்சியில் வைக்கும் மண்பானை; decorated pottery set at the marriage dias; அரசாணிப்பானைப் பார்க்க see *arasani-p-panai.*

[அல்லி+அரசாணி+பானை]



**அல்லிக்குழி** *allikuzhi,* (பெ.) (n.) திருவள்ளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvallur Taluk.

*[அல்லி+குழி]*

**அல்லிக்கோல்** *allik-kol,* பெ. (n.) பாவையின் குச்சியில் கயிறு கட்டிச் சரி செய்தல்; tie rope and adjust the hair of a woman.

**அல்லு-தல்** *allu-,* செய்குன்றாவி. (v.t.) கலப்பையை நுகத்தடியின் நடுவில் இணைத்துக் கட்டுதல் (வ.வ.வே.க.11). to fasten, plough to the yoke.

*[அல்+அல்லு]*

**அல்லுக்கயிறு** *alli-k-kayuru,* பெ. (n.) அல்லுப் போட்டு கட்டும் கயிறு. (ம.வ.தொ. 68.) to tie up with rope.

*[அல்லு+கயிறு]*

**அல்லுபிடித்தல்** *allupiḍital,* பெ. (n.) பாவை யியனைக் கஞ்சி போட்டு காய வைத்தல்; an operation of making dry in handloom.

*[அல்லு+பிடித்தல்]*

**அல்லேரி** *allēri,* (பெ.) (n.) வேலூர் வட்டடத்திலுள்ள சிற்றூர்; a village in vellore Taluk.

*[அல்லு+ஏரி]*

**அலக்கு** *alakku,* (பெ.) (n.) நுனியில் வளைந்த கத்தி பொருத்தப்பட்ட மூங்கிற்கழி; a bamboo pole fixed with a bent knife.(மீனவ.).

*[அல-அலக்கு]*



**அலகு**[1] *alagui,* பெ. (n.) பொதுவாக நான்கு எண்ணிக்கைகளைக் குறிக்கும். ஒரு வகை தாளக் குறியீடு; a time measure.

*[அல்-அலகு]*

**அலகு**[2] *alagu,* பெ. (n.) நடப்படும் நெற் பயிர்களின் வரிசை; row of paddy plant. *"நடவு வெலாத்தியா தெரியுது; இன்னும் ஒரு அலகா நெருக்கிப் போடுங்க"* (இ.வ.).

*[அல்-அலகு]*

**அலகுக்கருது** *alagukkarudu*,(பெ.)(n.) அலகுகதிர்; decorative ear of corn.

*[அலகு+கதிர்]*



கொங்கு நாட்டில் அறுவடை முடியும் தறுவாயில் நெற்கதிர்களை கட்டி வீடு, கோயில்களில் தொங்கவிடுவர். (கொ.வ.வ.சொ.10.).

*[அலகு+கதிர்]*

**அலகுகாவடி** *alagukāvadi*, பெ. (n.) சற்றே கரடுமுரடாக நடந்தால் குத்திவிடும்படியான அலகுகளின்வரிசையணியாகச் செய்யப்பெற்ற காவடி;a ritual in temple festival.

*[அலகு+காவடி]*



**அலங்கமலங்கஅடி—த்தல்** *alngamalangadi-*, செ.கு.வி. (v.i.) அரண்டு அஞ்சி ஓடும் படியாக அலங்கோலப்படுத்தி விரட்டுதல்; chasing rudely so as to flee bewilderly.

*[அலங்க+மலங்க+அடி]*

**அலங்காரதாசிகள்** *alangāradāsigal*, (பெ.) (n.) திருவிழா நிகழ்ச்சிகளில் பரதம் ஆடும் தேவரடியார்; dancing women on festival occasions.

*[அலங்காரம்+தாசி+கள்]*

**அலங்கியம்** *alangiam*, (பெ.) (n.) தாராபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharapuram Taluk.

*[அலங்கு—அலங்கியம்]*

**அலங்கிரி** *alangiri*, (பெ.) (n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[அலங்கு+கிரி]*

**அலங்கு** *alaṅgu*, பெ. (n.) எறும்பு தின்னி; ant eater.

மறுவ. நலுங்கு.

*[அல்—அல—அலங்கு]*



**அலம்** *alam*, பெ. (n.) ஏர்; plough.

[உலம்→உலம்: வளைவு. வளைந்த கொடுக்கு, கொடுக்குள்ள தேள்போன்ற வடிவுள்ள ஏர்; கலப்பை. த. அலம் →Skt. hala.



**அலண்ட ஈரம்** *alanda-īram*, பெ. (n.) நிலத்தில் ஈரம் வறண்ட தன்மை; dry land. "*அலண்ட ஈரத்தில் விதைத்த எள்ளு முளைக்கவில்லை.*"

*[அல–அலண்ட+ஈரம்]*

**அலண்டுபோடு–தல்** *alandupōdu-*, செ.கு.வி. (v.i.) 1. அஞ்சிப் பதறுதல்;to get bewildered. "*பிள்ளை இருட்டில் எதையோ பார்த்து அலண்டு போயிருக்கிறான்*" 2. ஈரம் வறண்டு போதல்; to get dried. "*கொல்லையில் ஈரம் அலண்டு போய் விட்டது*".

*[அல–அலண்டு+போ]*

**அலபத்திரம்** *alapattiram*,(பெ.) (n.) ஒற்றை முத்திரை நிலையில் ஒன்று; single hand pose in dance.

*[அலம்+பத்திரம்]*

**அலம்பு–தல்** *alambu-*, செ.கு.வி. (v.i.) கால்நடைகள் மேய்த்தல்; grazing. "*கரம்புல மாடுகளை அலம்படிச்சி ஓட்டிவா*" (இ.வ.).

*[அல–அலம்பு]*

**அலம்பு பனை** *alambu-panai*, (பெ.) (n.) ஆண் பனை; male palmyra.

*[அலம்பு+பனை]*

**அலர்மொழிப்பாடல்கள்** *alarmoli-p-pādalgal*, (பெ.) (n.) நாட்டுப்புறக் காதைப் பாடல்களின் ஒரு பிரிவு; a reaction of folk songs.

*[அலர்+மொழி+பாடல்கள்]*

**அலர** *alara*,பெ. (n.) கொஞ்சம் கூட ஈரமில்லாமல் காயப்போடுதல்; to make dry in the sun. '*விதைநெல்லை அலரக் காயப்போட வேண்டும்*' (வ.சொ.அக.).

*[அலர்–அலர]*

**அலவரை** *alavarai*,பெ. (n.) பனங்கதிர்; flower of palmira. (வ.சொ.அக.).

*[அல–அலவரை]*

**அலவலாதி** *alavalādi*, (பெ.) (n.) வம்பு மொழி; idle talk, gossip.

*மறுவ. வம்புப்பேச்சு, வீண்பேச்சு.*

*[அலவல்+ஆதி]*

**அலவாட்டு** *alavāttu-*,பெ.(n.) தொடர்ச்சியாகச் செய்யப்படும் விரும்பத்தகாத செயல்; (இ.வ.); continuation of undesired activities.

*[அலவு+ஆட்டு]*

**அலவுசட்டி** (பெ.) (n.) தப்பாட்டத்தில் பயன் படுத்தப்படும் ஓர் இசைக்கருவி; a musical instrument.

*[அல–அலவு+சட்டி]*



**அலறிப்போகு–தல்** *alarippōgu-*, செ.கு.வி. (v.i.) நில அதிர்வினால் அல்லது வெடி அதிர்வினால் சுவர், மரம் போன்றவற்றில் விரிசல் விடுதல் (இ.வ.); to get split wall, tree etc. due to earthquake or explosive sound.

*[அலறி+போதல்]*

**அலாக்குத்தா** *alākkuttā*, வி.எ. (adv.) தொய்வில்லாமல் ஒரே முயற்சியில் முடித்தல்; to complete the work at a stretch. "*அப்படியே அவனை அலாக்குத்தா பிடித்துத் தூக்கி வெளியே போட்டான் வீரன்*" (இ.வ.).

*[அலக்கு+குத்து+ஆக]*

**அலாதகம்** *alātagam*, (பெ.) (n.) தெருக்கூத்தில் கட்டைக் கட்டியாடும் பாத்திரங்கள் பின்பற்றும் அடி வரிசை (14 : 272.); stepping styles in street drama.

*[அலை–அலாதகம்]*

**அலார்** *alār,* (பெ.) (n.) வீண்பழி, புரளி; slander.

*[அலர் – அலார்]*

**அலிக்கி** பெ. *alikki,* (n.) மேளத்திற்குப் பயன்படும் பானை. (ம.வ.தொ. 69.); pot used for musical purposes.

*[அலக்கு–அலிக்கி]*

**அலுக்கம்** *alukkam,* பெ. (n.) மெல்லிய நடமாட்டம்; சந்தடி. (வ.சொ.அக.); a low sounds of slow movement.

*[அலுக்கு–அலுக்கம்]*

**அலுக்கி** *alukki* (பெ.) (n.) உருட்டும் போது உரசிச் செல்லும் குண்டு; a rolling ball.

*[அலுக்கு–அலுக்கி]*

**அலுக்குளி** *alukkuḷi,* (பெ.) (n.) கோபி செட்டிபாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்;a village in Gobichettipalayam Taluk.

*[ஒருகா.அல்லி+குழி]*

**அலுப்பஞ்சுளுப்பாமா** *aluppṇcuḷuppamā,* பெ.எ. (adj.) மிகவும் இழிவாகவும் ஏளனமாகவும்; derisively. *"உன்னிடம் கூலி வேலைக்கு வந்து விட்டதால் அலுப்பஞ் சுளுப்பமா எடை போடாதே; எங்க உடம்பிலேயும் இரத்தந்தான் ஓடுது"* (இ.வ.).

*[அலுப்பம்+ சுளுப்பம்+ஆக]*

**அலுவலகஉதவியாளர்** *aluvalaga udaviyāḷar,* பெ. (n.) அலுவலகத்துக்கு உதவியாக இருப்பவர்; office assistant.

[அலுவலகம்+உதவியாளர்]

**அலுவலகப்பணி** *aluvalaga-p-paṇ,* பெ.(n.) ஓர் அலுவலகத் தொடர்பாக அலுவலகத்தை விட்டு வெளியே ஆற்றும் பணி; official duty.

[அலுவலகம்+பணி.]

**அலுவலகம்** *aluvalagam,* பெ. (n.) பணி அல்லது தொழில் செய்யும் இடம்; a place of work, office.

[அலுவல்+அகம்.]

**அறிவின்மை** *aṟiviṉmai,* பெ. (n.) மடமை; ignorance.

[அறிவு+இன்மை.]

**அலுப்பு** *aluppu,* (பெ.) (n.) சலிப்பு, சோம்பல்; dullness, laziness.

*[அல்+அலுப்பு]*

**அலுவலர்** *aluvalar,* பெ. (n.) 1.உழைப்பில் அல்லது வேலையில் ஈடுபட்டவர். a worker, 2. அதிகாரி, officer.

*[அலுவல்+அர்]*

**அலை** *alai,* பெ. (n.) பல்லாங்குழியில் சிறப்பு வெற்றியைக் குறிக்கும் சொல். (செ.வ.) ;a word denoting win in dice.

*[அல்+அலை]*

**அலைகாற்று** *alaikāṟṟu,* பெ. (n.) இடைவெளி விட்டு வேகமாகக் கடல் அலையைப் போன்று சீறிச்சீறி வீசுங்காற்று; a wind surge.

*[அலை+காற்று]*

**அலைகொம்பு** *alaikombu,* பெ. (n.) குற்றமுடையதெனக் கூறப்படும் மாட்டுக் கொம்பில் ஒருவகை;a defective type horn of a cow.

*[அர்–அலை+கொம்பு]*

**அலைவாரி** *alaivāri,* பெ. (n.) ஏரி மற்றும் அணைப் பகுதியின் அடியில் அலையின் காரணமாக மண்ணரிக்காமல் இருக்கக் கருங்கல் அல்லது செங்கல் கொண்டு வாட்டச் சாய்விற்குக் கட்டப்படும் சுவர்; (இ.வ.);a supporting wall erected to stop erosion in a lake or dam.

*[அலை+வாரி]*

**அவக்காச்சி** *avakkācci,* பெ. (n.) நுகர்வுகளின் மீது கொள்ளும் வெறி; craving for enjoyments.

*[அவா+காய்ச்சி]*

**அவஞ்சி** *avanji,* (பெ.) (n.) ஒரு வகையான தோற்கருவி; a kind of drum.

*[அவை–அவஞ்சி]*

**அவட்டை** *avaṭṭai,* (பெ.)(n.)இறந்தோரின் ஆவி; spirit of dead person.(மீனவ.)

*[ஒருகா. அவடு–அவட்டை]*

**அவட்டைசொவட்டை** *avattaisovattai,* பெ. (n.) அயர்ச்சி மற்றும் சோர்வினால் வரும் மயக்கம்; giddiness, due to tiredness. *"வெயிலில் முந்திரிக் காட்டில் அலைந்தது அவட்ட சொவட்ட கண்டு போச்சி"* (இ.வ.).

*[அவல்–அவட்டை–சொவட்டை]*

**அவத்தாண்டை** *avattāṇḍai,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[அவம்+தண்டலம்]*

**அவதாளம்** பெ. (n.) சிறந்த நிகழ்ச்சிகளின் மங்கலத்தைக் கெடுத்து தீமையைக் கொடுக்கும் தாளவகை; inauspicious time measure in music performance.

*[அவம்+தாளம்]*

**அவரவயல்** *avaravayal,* (பெ.) (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[அவரை+வயல்]*

**அவரிவிளை** *avarivilai,* (பெ.) (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[அவரி+விளை(மிளை–விளை)]*

**அவல்பதம்** *aval-padam,* பெ.(n.) நெல் அரிசியாவதற்குரிய பக்குவம்;proper stage paddy to be pounded.

*[அவல்+பதம்]*

காய்ந்து கொண்டிருக்கும் நெல்லின் அரிசியை பல்லில் வைத்துக் கடிக்கும் போது நொறுங்காமல் நசுங்குகிற பக்குவம்.

**அவலிவனல்லூர்** *avalivanallūr* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்;name of the village in Thanjavur.

*[ஒருகா. அவல்–அவலி+வன+நல்லூர்]*

**அவனிவீமன்** *avanivīman,* பெ. (n.) விக்கிரம சோழன்ஆட்சிக் காலத்தில் (1123) அரியவூர் ஊரவையில் இருந்த உறுப்பினன்;a member of ariyavur sabai of (1125 AD) Vekkiranacholan period.

*[அவனி+வீமன்]*

**அவிந்து போ–தல்** *avilntu-pō-,* செ.கு.வி (v.t.) சோறு குழைந்து போதல்; rice over boiled.

*[அவி–அவிந்து+போ]*

**அவளிவணல்லூர்** *avaḷivṇanallūr,* (பெ.) (n.) இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்;name of the village in Thanjavur.

அவள்=காளான்; அவணம். கொட்டைப் பாக்கின் மிகுதி.

*[அவள்+அவணம்+நல்லூர்]*

**அவிநயன்** *avinayaṉ,* (பெ.) (n.)1.மெய்ப்பாடு வுளப்படுத்திக் கூத்துக் (நாட்டியம்) கலை நூல் எழுதிய முதல் நூலாசிரியின்பெயர்.The first exponant and author of (Bharatnatya) Avinnayam dance treatise in ancient Tamil.அவிநயக்கூத்து (சிலப். 3.12). 2.கூத்தன்; dancer.

*[அவி+நயன்]*

**அவியுணவு** *avi-y-uṇavu,* பெ. (n.) வேள்வித் தீயில் இடப்படும் பொருள்கள்;edibles thrown in the sacred fire.

*[அவி + உணவு]*

**அவிழ்த்துவிடு–தல்** *aviḻttu-viḍu-,* செ.கு.வி (v.t.) பொய் பேசுதல்; to lie to speak falsehood.

*[அவிழ்த்து+விடு]*

**அவுசாரி** *avusāri,* பெ. (n.) ஒழுக்கங்கெட்டவள்; an adulterated woman. *'அவள் ஊர் மேய்கிற அவுசாரி யாயிற்றே'.* (வ.சொ.அக.).

*[அவி+சாரி]*

**அவுட்டு** *avuṭṭu,*(பெ.) (n.) விளையாட்டை விட்டு வெளியேறுதல்; to set out from the game.

*[E.out→த.அவுட்டு]*

**அவுட்டுவிடு–தல்** *avaṭṭuviḍu,* பெ. (n.) பொய் பேசுதல்; to speak lie. *"விட்டால் போதும் அவன் நெய்வேலி இருக்கிற இடமே எங்கள் இடந்தான்னு பெரிய அவுட்டா விடுவான்"* (இ.வ.).

*[அவிழ்த்து+விடு]*

**அவுடு** *avuḍu* பெ. (n.) தொடையிடுக்கு; in between thighs. *'அவுட்டுக்குள்ள பாய்கிறான்'.*

*[அவுடி–அவுடு]*

**அவையக்கத்து** *avayakkattu,* பெ. (n.) முட்டையிட்ட கோழி அடைகாக்க அணியமாக இருப்பதைக் காட்டக் கொக், கொக் என்று சிறகை விரித்துப் போர்த்திய படி எழுப்பும் குரல்; (இ.வ.); the cakling sound of a brooding hen.

*[அவையம்+(கத்தல்)கத்து]*

**அவையத்தாப்பொட்டை** *avaiyatta-p-pōṭṭai,* பெ. (n.) அடை காக்கும் கோழி;brooding hen.

*[அவை+அத்து+பெட்டை]*

**அவையம்** *avaiyam,* பெ. (n.) அடைகாத்தல்; brooding. *"அவையத்தில் இருக்கிற கோழிமேல் பேன் அதிகமாக இருக்கிறது."* (இ.வ.).

*[அவை–அவையம்]*

**அழகானந்தல்** *aḻagānandal,* (பெ.) (n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalli Taluk.

*[அழகன்+ஏந்தல் (ஏரி)]*

**அழகிய சீயன்** *azakiasiyan,* பெ. (n.) மூன்றாம் இராச இராசன் காலத்தில் வாட்குடை வடகழனி என்ற ஊரில் வாழ்ந்தவன்; a devotee of *vāṭkuḍaivaḍakalāni village.*

[அழகிய + சீயன்.]

வாட்குடை வடகழனி என்ற ஊரில் நந்தவனத்தைப் பாதுகாத்துக் கொண்டு திருவோத்தூர் இறைவனுக்கு நாள்தோறும் குறுணிப்பூ அளித்து வந்தவன் இவன்.

**அழகிய சோழநல்லூர்** *aḻagiyacōḻanallūr,* பெ. (n.) கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்.a village in *kanniyakumari* district.

[அழகிய +சோழ நல்லூர்]

தேரூர் ஊரம்மன் பெயர் அழகிய சோழ நங்கை. இயல்பாகவே அழகிய சோழ நல்லூர் என்பது சோழர் மேலாண்மையைச் சுட்டியுணர்த்தும் சிறப்பு பெயராயிற்று.

**அழகிய பாண்டியன்** *aḻagiyaPāṇdiayan,* பெ. (n.) பொதிய மலையிலுள்ள ஓர் ஊர்.a village in *podiyamalai.*

[அழகிய + பாண்டியன்]

பொதிய மலைச் சிற்றரசனாகிஆய் என்பவனை வென்று மேம்பட்டஅப் பாண்டியன் தன் வெற்றிச் சிறப்பு விளக்குதற்பொருட்டு அம்மலையடி வாரத்திலுள்ள ஓர் ஊருக்கு அழகிய பாண்டிய புரம் என்று பெயரிட்டான் என்பர்.

**அழகுச்சம்பா** பெ. (n.) நெல்வகை;a variety of paddy.

*[அழகு+சம்பா]*

**அழண்டுபோ–தல்** *aḻaṇḍupō-,* செ.கு.வி. (v.i.) பதனழிதல்; to get rotten.

*[அழன்று – அழண்டு+போ]*

**அழல்உயிர்ப்பு** *aḻal-uyirppu,* பெ. (n.) 1. மூக்கின் வழியாக வரும் உயிர்ப்பு; breath coming from the nostrils. 2. தீப்போல் வெப்பமான மூச்சு; breath hot as fire.

*[அழல் + உயிர்ப்பு]*

**அழல்கரப்பான்** *aḻal-karappāṉ,* பெ. (n.) கரப்பான் வகை; a variety of cockcroch.

*[அழல்+கரப்பான்]*

**அழல்கருப்பை** *aḻal-karuppai,* பெ. (n.) சாமைப் பயிர்; a kind of millet.

*[அழல்+கருப்பை]*

**அழல்குணப்பாடு** *aḻal-kuṇa-p-pāḍu,* பெ. (n.) நெருப்பு அல்லது வேறுவகை வெப்பத்தினால் உடம்பிலுள்ள நோயைக் குணப்படுத்துதல்; treatment of diseases in the system by the application of heat thermotherapy.

*[அழல்+குணப்பாடு]*

**அழல்குணம்** *alar-kuṇam,* பெ.(n.) உடம்பிலுள்ள சூட்டை எழுப்புங்குணம்; the quality of producing heat, thermogenic property.

*[அழல்+குணம்]*

**அழல்குமரம்** *aḻal-kumaram,* பெ. (n.) ஒரு கூட்டு மருந்து; a compound medicine.

*[அழல் + குமரம்]*

**அழல்குமரன்** *aḻal̤-kumaraṉ,* பெ.(n.)முருகக் கடவுள்; Lord Murugan as off spring of agni.

*[அழல் + குமரன்]*

**அழல்சமன்மை** *aḻal-samaṉmai,* பெ. (n.) 1. செரிமான ஆற்றலை ஒழுங்குபடுத்துதல்; regulation of digestion. 2. செரிமான ஆற்றலைத் தூண்டுதல்; stimulation of digestion.

*[அழல் + சமன்+மை]*

**அழல்திசை** *aḻal-tisai,* பெ. (n.) அழல் மூலை பார்க்க; see aḻal-mūlai.

*[அழல் + திசை]*

**அழல்நிகழ்ச்சி** *aḻal-nigaḻcci,* பெ. (n.) 1. நெருப்பினால் ஏற்பட்ட நிகழ்ச்சி; that which happened from the action of fire or in resulting from fire. 2. நெருப்பின் தோற்றம்; production of fire.

*[அழல் + நிகழ்ச்சி]*

**அழல்மூலை** *aḻal-mūlai,* பெ. (n.) தென் கீழ்த்திசை; the south east quarter, as under the guardianship of Agni.

*[அழல் + மூலை]*

**அழலச்சம்** *aḻalaccam,* பெ. (n.) நெருப்பைக் காண நேர்ந்தவிடத்துண்டாகும் அச்சம்; morbid dread of fire a heat, Thirmophobia.

*[அழல் + அச்சம்]*

**அழலழிவு** *aḻalaḻivu,* பெ. (n.) தீயினாலுண்டாகும் உலகழிவு; destruction of the world of fire.

*[அழல்+அழிவு]*

**அழலன்** *aḻalaṉ,* பெ. (n.) செவ்வாய்; mars.

*[அழல்+அன்]*

**அழலாற்றல்** *aḻal-āṟṟal,* பெ. (n.) 1. செரிமான ஆற்றல்; the power of digestion. 2. நெருப்பின் வல்லமை; the power of fire.

*[அழல் + ஆற்றல்]*

**அழலுப்பு** *aḻaluppu,* பெ. (n.) வெடியுப்பு; a kind of salt.

*[அழல்+உப்பு]*

**அழலோன்** *aḻaloṉ,* பெ. (n.) தீக்கடவுள்; the god of fire.

*[அழல்+(ஆன்) ஒன்]*

**அழற்கண்டம்** *aḻaṟ-kaṇḍam,* பெ. (n.) வயிற்றுத் தீ; abdominal or gastric fire.

*[அழல் + கண்டம்]*

**அழற்கம்பம்** *aḻaṟ-kambam,* பெ. (n.) 1. நெருப்புத் தூண்; piller of fire. 2. நெருப்பு முதலானவற்றைச் சுடாதிருக்கச் செய்யும் மாயக்கலை; suspending the action of fire - a kind of magic.

*[அழல் + கம்பம்]*

**அழற்கம்பன்** *aḻaṟ-kambaṉ,* பெ. (n.) சிவன்; Sivan in the form on a column of fire.

*[அழல் + கம்பன்]*

**அழற்கல்** *aḻaṟ-kal,* பெ. (n.) சக்கிமுக்கிக் கல்; flint, pyrites.

*[அழல் + கல்]*

**அழற்கொப்புளம்** *aḻaṟ-koppuḷam,* பெ. (n.) நெருப்புக் கொப்புளம்; a collection of watery fluid beneath the superficial layer of the skin - bilister.

*[அழல் + கொப்புளம்]*

**அழற்சட்டி** *aḻaṟ-caṭṭi,* பெ. (n.) நெருப்பிடு கலம்; fire - pan, censer.

*[அழல் + சட்டி]*



**அழற்பிழம்பு** *aḻaṟ-piḻambu,* பெ. (n.) தீ நாக்கு; flame of fire.

*[அழல்+பிழம்பு]*

**அழற்போக்கு** *alar-pōkku,* பெ. (n.) உடம்பில் வெப்பம் பரவியிருக்கும் நிலைமை; the distributions of heat in the system.

*[அழல் +போக்கு]*

**அழற்சான்று** *alar-canru,* பெ. (n.) மணச் சடங்கில் தீ வளர்த்து அதனை முன்னிலைப் படுத்துதல்; confirming the marriage in the presence of sacred fire.

*[அழல் + சான்று]*

**அழிக்கால்துறை** *alikālturai,* (பெ.) (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agatheeswaram Taluk.

*[அழிகால்+துறை]*

**அழிகாடு** (பெ.) (n.) வேளாண்மை முடிந்த பின்னும் உழவு செய்வதற்கு முன்னும் மாடுகளை மேயவிடும் நிலப்பகுதி. (கொ.வ.வ.சொ.12.); harvested area left for grazing.

*[அழி+காடு]*

**அழிசி**[1] *alisi,* (பெ.) (n.) 1. பழங்காலப் புலவர் பெயர்; name of a poet. 2.ஆற்றுக் கழிமுகப் பகுதியைச் சார்ந்தவன்; a man from an area of confluence of a river.

*[அழி(ஆற்றுக்கழிமுகம்)–அழிசி]*

**அழிசி**[2] *alisi,* பெ.(n.)சோழர் கால மன்னனான 'பொலம் பூண்' என்ற அரசன் காலத்தவன், ஆதன் என்ற கடைக்கழகக் காலப் புலவரின் தந்தை; father of the sangam period poet, *ādan* who lived during the period of cholaking *'Polampūn'.*

*[அழி +அழிசி]*

**அழிசிகுடி** *alisikudi,* பெ. (n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[அழிசி+குடி]*

**அழிஞ்சிக்குச்சி** பெ. (n.) தட்டு பின்ன பயன்படும் குச்சி, (ம.வ.தொ.); a stick used to spin basket.

*[அழிஞ்சி+குச்சி]*

**அழிபாடு** *alipādu,* பெ. (n.) விற்பனை; sales. *'இந்த மாதம் சரக்கு அழிபாடு நன்றாகவுள்ளது'* (இ.வ.).

*மறுவ. அழிவு.*

*[அழி+பாடு]*

**அழிமானம்** *alimānam,* பெ. (n.) தோட்டங் களுக்கு ஆடுமாடுகளால் ஏற்படும் அழிவு; damage by cattle in the farm or garden. *'தோட்டத்தில் ஆடுகளை விட்டு அவர்கள் செய்யும் அழிமானம் தாங்க முடியவில்லை.'* (ம.சொ.அக.).

*[அழி+மானம்]*

**அழியாநிலை** *aliyāniali,* (பெ.) (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[அழியாத+நிலை]*

**அழிவு** *alivu,* பெ. (n.) விற்பனை; sales. *'சந்தைக்கு வந்த சரக்கு எல்லாமே அழிவாகி விட்டது.'*

*[அழி–அழிவு]*

**அழுகுனி ஆட்டம்** *aliguniāttam,* (பெ.) (n.) திருட்டுத் தொழில். (கொ.வ.வ.சொ.12.); activities of theft.

*[அழுகுனி+ஆட்டம்]*

**அழுங்கு** (பெ.) (n.) பாலையாழுக்குரிய பண்வகை; a musical note.

*[அழு–அழுங்கு]*

**அழுத்தம்** *aluttam,* பெ. (n.) துன்பம்; distress. *'அவன் கூட வாழ்வது பெரிய அழுத்தம்.'* (வ.சொ.அக.).

*[அழுத்து+அம்]*

**அழுதுவடி–த்தல்** *aludu-vadi-,* 2.செ.கு.வி. (v.i.) பொலிவின்றி இருத்தல்;to be dull, dispirited.

[அழு→ அழுது+வடி–,]

**அழும்பில்நாடு** *alumbil-nādu,* பெ. (n.) புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள அம்பு நாடு; a country of *Paudukōttai* regionat present it is called *ambunādu.*

[அழும்பில்+நாடு]

**அழும்பு** *alumbu,*(பெ.) (n.) வீணான செயல் களில் ஈடுபடுதல். (கொ.வ.வ.சொ.); vain activities.

*[அழிவு–அழிம்பு–அழும்பு]*

**அழுவுதொழுவு** *aluvutoluvu,*பெ.(n.) குடும்பம் நிலபுலம் தொடர்பான வேலைகள், சிக்கல்கள்; family responsibilities. *“அழுவு தொழுவு எந்த வேலையும் அவனுக்கு இல்லை அதுதான் ஊரைச் சுற்றித் திரிகிறான்.”* (இ.வ.).

*[அழுவு–தொழுவு]*

**அள்ளல்** *allal,* (பெ.) (n.) எண்வகை இசைக் கரணங்களுள் ஒன்று; one of eight musical practices.

*[அள்–அள்ளல்]*

**அள்ளிக்கிடாசு–தல்** *allikkidāsu-,* செ.கு.வி. (v.i.) பொய்ச்செய்தி பரப்புதல்; (இ.வ.); to gossip false propoganda.

*[அள்ளி+கிடாசு]*

**அள்ளிகோல்** *allikol,* பெ. (n.) தறியில் பாவை குஞ்சம் பிரிக்கும் கோல்;an implement used in loom.

*[அள்ளி+கோல்]*

**அள்ளிப்போடு–தல்** *allippōdu-,* செ.கு.வி. (v.i.) பொய்யைச் சொல்லித் தூண்டிவிடுதல்; to rouse calamity by false propoganda. *“எவளோ அள்ளிப்போட்டு இந்தக் குடும்பத்தைக் கெடுத்துவிட்டாள்.”* (இவ).

*[அள்ளி+போடு]*

**அள்ளுக்கம்பி** *allu-k-kambi,* பெ. (n.) வண்டியச்சு; cart axle

[அள்ளு+கம்பி]



**அள்ளுக்குத்திப்பூட்டு–தல்** *allukkutti-p-pūttu-,* செ.கு.ன்றாவி. (v.t.) நுகத்தடிப் பூட்டுக் கயிற்றின் நீளத்தைக் குறைக்க, முடிச்சு உள்ள முனையில் கயிற்றை இரு வளையமாக வளைத்துப் போட்டுப் பூட்டுதல்; (இ.வ.); to make a type knot.

*[அள்ளுக்குத்தி+பூட்டு]*

**அள்ளுகயிறு;** *allukayiru,* பெ. (n.) பண்ணை யில் கோல்களை மேலும் கீழும் இரு பக்கத்திலும் இழுத்துப் பிடிக்கும் கயிறு. (நெ.தொ.க.).

*[அள்ளு+கயிறு]*



**அளக்கை** *ala-k-kai,* பெ.(n.) 1. அளத்தல்; measuring; நில அளவிடல்; landsurvey. 2. தீர்வை நிலஅளக்கை; landcess.

<u>மறுவ.</u> அளப்பு.

[அள–அளக்கை]

**அள்ளுத்தறி** *allittari,* பெ. (n.) கயிறு போன்ற வற்றால் இழுத்துக் கட்டப்பட்டிருக்கும் தறி வகை. (நெ.தொ.க. 53.). tightly fastened loom.

*[அள்ளு+தறி]*

**அள்ளுபிடித்தல்** *alluipidittal,* பெ. (n.) பாவு அறுவாக்கல், பாவு கட்டுதல் (நெ.தொ.க. 53.); arrangement in loom.

*[அள்ளு+பிடி]*

**அள்ளுவிரைப்படு–தல்** *alluvirai-p-padu-,* செ.கு.வி. (v.i.) காளைகளுக்குக் காயடித்தல்; castrating.

*[அள்ளு+விதை(விரை)+படு]*

**அள்ளைக்கட்டி இழுப்பு** *aḷḷai-k-kaṭṭi iḻuppu,* செ.கு.வி. (v.i.) ஒரு வகை வலிப்பு நோய்; a disease.

*[அள்ளை+கட்டி+இழுப்பு]*

**அள்ளைக்கட்டி இழு-த்தல்** *aḷḷai-k-kaṭṭi iḻu-,* செ.கு.வி. (v.i.) நெஞ்சுக் கூட்டின் பக்கவாட்டு எலும்புகளை இழுத்தல் (ஒருவகை வலிப்பு); a strain felt on side ribes.

*[அள்ளை+கட்டி+இழு]*

**அள்ளைக்கழி** *aḷḷai-k-kaḻi,* பெ. (n.) **சாத்துக்கழி** பார்க்க; see *cāttu-k-kaḻi.*

*[அள்ளை+கழி]*

**அளம்பளம்** *aḷambaḷam,* (பெ.) (n.) கள்ளக் குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurichchi Taluk.

*[ஒருகா. அளம்+பள்ளம்]*

**அள்ளைக்கயிறு** *aḷḷai-k-kayiṟu,* பெ. (n.) மரமேறும் போது மரத்தொடு சேர்த்து இடையில் கட்டிக் கொள்ளப்பயன்படும்தோல் கயிறு; leather rope used by tree claimbers.

[அள்ளை+கயிறு]

**அளவாக** *aḷavāga,* பெ.எ. (adj.) ஒரே சன்னமாக நடவு செய்யும் முறை; implanting sparsely.

*[அளவு+ஆக]*

**அளவாங்குத்திருவை** *aḷavāṅguttiruvai,* பெ. (n.) மட்பாண்டம் செய்யும் திருவை. (ம.வ.தொ. 69.); an implement used in pottery.

*[அளவாங்கு + திருவை]*

**அளவு** *aḷavu,* பெ. (n.) தட்டையாகவும் கெட்டி யாகவும் உள்ள மூங்கில் பத்தை. (நெ.தொ.க.); flatend hard splinters of bamboo.

*[அள்–அளவு]*

**அளவுகோல்** *aḷavukōl,* பெ. (n.) அள்ளுத் தறியில் பாவை கொஞ்சம் கொஞ்சமாகப் பிரித்துக் கொடுப்பதற்குரிய கோல். (நெ.தொ. க. 53.); an implement in loom.

*[அளவு+கோல்]*

**அளவூர்** *aḷavūr,* (பெ.) (n.) காஞ்சிபுரம் வட்டத்தி லுள்ள சிற்றூர்; a village in Kanchipuram Taluk.

*[அளம் (உப்பளம்)+ஊர்]*

**அளி** *aḷi,* பெ. (n.) சகதி, நாற்றம் கொண்ட சேறு; mud with bad smell. (வ.சொ.அக.).

*[அள்+அளி]*

**அளித்தரை** *aḷi-t-tarai* பெ.(n) சேற்று நிலம்.; muddy place. அளித்தரையில் நடக்காதே (இ.வ.)

*[அள்–அளி+தரை]*

**அளியாப்பதி** *aḷiyāppadi,*. திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[அழியா+பதி]*

**அளையம்** *aḷayam,* பெ.(n.) செம்பும் வெள்ளீயமும் கலந்த கலப்பு மாழை; alloy.

*[அளை + அம்]*

**அறக்கட்டளை** *aṟakkaṭṭaḷai,* பெ. (n.) பொது நலனை மேம்படுத்தும் செயற்பாடுகளுக்காகத் தனியார் அல்லது அரசு ஏற்படுத்தும்செல்வ ஒதுக்கீட்டு (நிதி) அமைப்பு; endowment, trust.

*[அறம்+கட்டளை]*

**அறக்கட்டிப்பேசு-தல்** *aṟakkaṭṭi-p-pēsu-,* செ.கு.வி. (v.i.) ஒருசிக்கலை நாளைப் பேசித் தீர்க்கலாம் என்று அரைகுறையாக விடாமல் முழுவதுமாகப் பேசி முடித்தல்; (இ.வ.).;to take a final decision without postponing.

*[அற+கட்டி+பேசு]*

**அறவழித்தாங்கி** *aṟavaḻi-t-tāṅgi,* பெ.(n.) அறவிடைத்தாங்கி என்றழைக்கப்படும் செய்யாறு வட்டத்தில் உள்ளது ஊர். name of the village in *ceyyāru.*

[அறவழி+தாங்கி.( புத்தமதத்தினரின் ஊர்.)]

**அறவுணவுச்சாலை** *aṟavuṇavu-c-cālai,* (பெ.) (n.) துறவியரும் இரப்போரும் உண்டுதங்கும் இடம்;choultry where; pilgrims and religious mendicants are fed and provided accommodation.

*[அறவுணவு+சாலை]*

**அறங்கணக்குப்பொறங்கணக்கு** *aṟaṅkkaṇakku-p-poṟaṅkaṇakku,* பெ. (n.)

ஒருசெலவின் அனைத்துக் கணக்குகளையும் பார்க்கும் கணக்கு வழக்கு;auditing minutely. *"அறங்கணக்குப் பொறங்கணக்கு பார்க்கிற இடத்தில் எவன் வேலைக்குப் போவான்?"* (இ.வ.).

*[அற+கணக்கு+புற+கணக்கு]*

**அறளக்கல்** *aṟaḷakkal,* பெ. (n.) உருளைக்கல். *"அறளக் கல்லா இருந்தா பொறுக்கிப் போடலாம்; சரளக்கல்லா இருந்தால்?"* (நிலம் பற்றிய சொலவடை).

*[அறளை+கல்]*

**அறற்குழல்** *aṟaṟkuḻal,* (பெ.) (n.) ஏழிசை நரம்புட்குரிய சுருதி அளவில் ஏழு சுரங்களும் ஒலிக்குமாறுஇடைவெளிகளை வரையறுத்துத் துளைகள் அமைக்கப்பட்ட புல்லாங் குழல்; a flute with proper structure of holes.

*[அறல்+குழல்]*

**அறாக்களை** *aṟākkaḷai,* பெ. (n.) புற்கள் சரியாக அகற்றப்படமாலும் மண்ணில் எல்லா இடத்திலும்கொத்தப்படாமலும் குறைபாடுள்ள களைவெட்டு வேலை; (இ.வ.).inadequate and incomplete weeding work.

*[அறாத+களை]*

**அறாத்தல்** *aṟāttal,* பெ. (n.) விடலைகளின் தொல்லையான செய்கைகள்; (இ.வ.);nuisance of the youngsters.

*[அறாவு+அறாத்தல்]*

**அறாமிஞ்சி** *aṟāmiñji,* பெ. (n.) நச்சரிப்பவன்; one who is pressing again and again. *"அறாமிஞ்சி கேட்டால் பின்னும் பத்து ரூபாய் கொடுப்பான்?"* (இ.வ.).

*[அற+மிஞ்சி]*

**அறிவியம்** *aṟiviyam,* பெ. (n.);இயல் உலகு, இயற்கைநெறிகள் ஆகியவற்றைக் குறித்த ஆய்வும் அறிவும்;scientific studies.

*மறுவ. அறி.*

*[அறிவு+இயம்]*

**அறிவுப்புலன்** *aṟivu-p-pulaṉ,* பெ. (n.);அறிவுக் கருவி;organ of senses.

*[அறிவு+புலன்]*

**அறிவிப்புப்பலகை** *aṟivippu-p-palagai,* பெ. (n.) அலுவலகங்களில் அல்லது பொதுவிடங்களில் அறிவிப்புத் தாங்கிய அல்லது ஒட்டப்பட்ட பலகை;noticeboard.

[அறிவிப்பு+பலகை–அறிவிப்பு– பார்க்க]




**அறுத்துப்பேசு–தல்** *aṟuttu-p-pēsu-,* செ.கு.வி. (v.i.) ஈவு இரக்கமின்றி அறக்கட்டிப் பேசுதல்; (இ.வ.).;to speak firmly and decesively; to say final word.

*[அறுத்து+பேசு]*

**அறுதலைப்பயல்** *aṟutalaippayal,* பெ. (n.) கைம்பெண்ணின் மகன்; widow's son. *அறுதப் பயபுள்ள* (இ.வ.)

*[அறுத்(தாலி)தலி+பயல்]*

**அறுதாலி** *aṟutāli,* பெ. (n.) ஒரு வசவுச் சொல்; a word used while scolding - lit. widow. widow's son.

*[அறு+தாலி]*

**அறுதி** *aṟḍi,* பெ. (n.) எடுப்பு (கீர்த்தனைப் பல்லவி) அமைப்பில் கடைசியில் வரும் தனிச் சொல்லுக்கு முன் வரும் நெட்டிசைச் சொற்கட்டு; elongated expletive at the end of a line in music.

*[அறு–அறுதி]*

**அறுதிப்பெரும்பான்மை** *āṟudi-p-perumpāṉmai,* பெ. (n.) பிற கட்சிகளின் கூட்டில்லாமல் தனித்தே ஆட்சி அமைக்கத் தேவையான உறுப்பினர் எண்ணிக்கை, தனிப்பெரும்பான்மை; absolute majority.

*[அறுதி+பெரும்பான்மை]*

**அறுந்தல்** *arundal,* பெ. (n.) கிடைத்தற்கு அருமை, தட்டுப்பாடு; scarcity. *"கத்தரிக்காய் அறுந்தலாய் போய் விட்டது"* (வ.சொ.அக.).

*[அறு-அறுந்தல்]*

**அறுநிழல்** *aru-nilal,* பெ. (n.) அடர்த்தியாக இல்லாமல் ஆங்காங்கே வெயில்படும்படியான நிழல்; spaced shadow. *"ஏன் முருங்க மரத்து அறுநிழலில் உட்கார்ந்து இருக்கிறாய்.? (பே.வ.).*

*[அறு+நிழல்]*

**அறுப்பறு-த்தல்** *aruppaṟu-,* பெ. (n.) பன்னறு வாளால் கதிரறுத்தல்- அறுவடை செய்தல்; to harvest, to reap.

[அறுப்பு+அறு]

**அறுப்பாள்** *aruppāḷ,* பெ. (n.) நெற்கதிரை அறுவடை செய்யும் பெண். (வ.வ.வே.க. 11.). reaping woman in the field.

*[அறு+ப்+ப்+ஆள்]*

**அறுப்புச்சட்டி** *aruppu-c-caṭṭi,* பெ. (n.) திருவையிலிருந்து அறுத்து எடுக்கும் சட்டி. (ம.வ.தொ. 69.). ; pottery just taken from the potters wheel.

*[அறுப்பு+சட்டி]*

**அறுப்புச்சுகம்** *aruppu-sukkam,* பெ. (n.) பெண்களுக்குச் சொத்துரிமை வருமுன், குழந்தையில்லாத கைப்பெணுக்குச் கணவன் வீட்டாரால் பணமாகவோ, சொத்தாகவோ அளிக்கப்பட்ட பொருளாதார – வாழ்வாதார ஏந்து (வசதி); sources of livelyhood offered to a issuless widow by the family of her husband.

*[அறுபு+சுகம்]*

**அறுபத்திநான்குமனைவெள்ளான் செட்டி கனப்பு** *arubattināngumanainellāncetti kanappu,* (பெ.) (n.) கோடியம்மனுக்கு செட்டியார் இனத்தினர் கட்டும் கனப்பு (67 : 11.); it is one of the chettiyar castes.

**அறுபெரும்பொழுது** *aruperumpoludu,* பெ. (n.) இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி ஆகிய ஆறுபெரும்பொழுது; the six season of a year viz.

*[அறு+பெரும்+பொழுது]*

வேத ஆரியரின் முன்னோர் இருந்த வடமேலை நாடுகட்கு இளவேனில் (spring), கோடை(summer), வறளை(autumn), மாரி (winter), என்னும் நாற்பெரும் பொழுதே உரியன. தென்னாடு வந்து தமிழரோடு தொடர்பு கொண்ட பின்னரே தமிழகத்திற்குரிய அறுபெரும் பொழுதுகளையும் ஆரியர்கள் மொழி பெயர்த்துக் கொண்டனர்.

| தமிழ் | வடமொழி |
|---|---|
| இளவேனில் | வஸந்த்த |
| முதுவேனில் | க்ரீஷ்ம |
| கார் | வர்ஷ |
| கூதிர் | சரத் |
| முன்பனி | அச்சிர |
| பின்பனி | ஹேமந்த்த |

(வட.வர.298.)

**அறுவைமருத்துவம்** *aruvaiimaruttuvam,* பெ. (n.) அறுப்பு மருத்துவம்; surgery.

[அறுவை+மருத்துவம்]

**அறுவடைத்திருநாள் கும்மி** (பெ.) (n.) கும்மிப் பாடலின் ஒரு பிரிவு; a variety in kummi ply.

*[அறுவடை+திருநாள்+கும்மி]*

**அறுவடைப்பாடல்** *aruvaḍai-p-pāḍal,* (பெ.) (n.) மள்ளரின் உழவுத்தொழில் சார்ந்த பாடல்; an harvest song of mallar commuinity.

*[அறுவடை+பாட்டு]*

**அறுவணி** *aruvaṇi,* (பெ.) (n.) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[அறு+அணி]*

**அறுவியகல்** *aruviyakal,* பெ. (n.) செங்கல் சூளையின் வெளிப்புறச்சுவரில் பாதி வெந்ததும் வேகாததுமான கல்; (இ.வ.).; brick in the outer portion of the kiln not burnt properly.

மறுவ. அரை வேக்காட்டுக்கல்.

*[அறுவு+இ+அ+கல்]*

**அறுவு-தல்** *aruv-,* செ.கு.வி. (v.i.) முள்குத்தி இற்றுப்போன இடத்தில் தடவிப் பார்க்கும் போது விரல்களில் படுதல்;broken piece of thorn feelable by touch.

*[அறு-அறுவு]*

**அறைஞ்சி** (பெ.) (n.) பேரோசை எழ அடித்தல். (கொ.வ.வ.சொ.); striking to make loud sound.

*[அறை-அறைஞ்சி]*

**அறைபறை** *araiparai,* (பெ.) (n.) செய்தியைத் தெரிவிக்கும் பறை. message informing drum. *'அறை பறை யன்னார் கயவர்' (குறள்).*

*[அறை+பறை]*

**அறைவண்டி** *araivandi,* பெ. (n.) வில்வண்டி; oval shaped roofed bullock cart. (வ.சொ.அக.).

மறுவ. கூடார வண்டி.

*[அறை+வண்டி]*



**அறுகங்கட்டை** *arugankkattai,* பெ. (n.) நாட்பட்ட தடித்த உறுதியான தண்டுகளைக் கொண்ட அடர்த்தியான அறுகம்புல்; (இ.வ.). grass with strong stalk.

*[அறகம்+கட்டை]*

**அறைகடல்** *araikadal,* பெ. (n.) ஒலிக்கும் கடல்; roaring sea. *"அறைகடல் வளாகம்"* (EI . xxii. 16.).

*[அறை+கடல்]*

**அணுக்கவிளக்கு** *anukkavilakku,* பெ. (n.) கருவறைத் திருமேனிக்குப் பக்கத்தில் எரியும் விளக்கு; close light for the deity in sanctum sanctoriam. *"இராவை யந்திக்கு அணுக்க விளக்காக எரிய வைத்த விளக்கு"* (SII. viii. 66.).

*[அணுக்கம்+விளக்கு]*



**அணுகுமுறை** *ānugumurai,* பெ.(n.)ஒன்றைச் செய்ய அல்லது சொல்லப் பின்பற்றும் வழிமுறை; method of approach.

*[அணுகு+முறை]*

**அன்பில்** *anbil,* (பெ.) (n.) திருச்சிராப்பள்ளிக்கு அருகே உள்ள ஊர்; name of a village near village near *Tiruccirappalli.*

*[அன்பு+இல். இல்=மக்கள்வாழும் வீடு. அன்பின் இருப்பிடம் அன்பில்]*

**அன்மருதை** *anmarudai,* (பெ.) (n.) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in wandiwash Taluk.

*[ஒருகா. அன்+மருது]*

**அன்முறை** *anmurai,* பெ. (n.) 1. ஒழுங்கின்மை; irregularity. 2. நேர்மையின்மை; injustice.

*[அல்+முறை]*

**அன்றாடங்காய்ச்சிகள்** *ānrādankāyccigal,* பெ. (n.) அற்றை நாள் வருவாயில் அன்றைய வாழ்க்கையை நடத்துவோர்; poor persons who make living only through daily wages.

*[அன்றாடம்+ காய்ச்சிகள்]*

**அன்றில்பெடை** *anrilpeḍai,* பெ. (n.) இணை பிரியாத அன்புக்கும் உயிரொன்றிய காதல் பிணைப்புக்கும் கற்புக்கும் அடையாளமாக விளங்கும் பெண் பறவை;a bird known for chastity and inseparable affectionate loyal sincere partnership in life. ஒன்றில் காலைஅன்றில் போல புலம்புகொண்டுறையும் புன்கண் வாழ்க்கை (நற்.124).

*[அன்றி+இல்–அன்றில் – அகன்று இல்லாதது, துணையின்றி வாழாத பறவை. துணைப் பறவை இறந்தால் தானும் இறந்துவிடும் பறவை. ஆண் பறவை மகன்றில் (மகன்+அன்றில்) எனப்படும்]*

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய கடைக்கழக இலக்கியங்களில் அன்றில் பறவையின் இயல்புகளைப் பண்டைப் புலவோர் தக்காங்கு விளக்கியுரைத்துள்ளர்.

*"மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில் துணையொன்று பிரியினும் துஞ்சா காண்".(அகம்.50:11–12)*

*"நெருப்பினன்ன செந்தலை யன்றில் இறவினன்ன கொடுவாய்பெடையொடு*

*..........பையென நரலும்.(குறுந்.160)*

*துணை புணர் அன்றில் உயவு கேட்டொறும் (நற்.32)*

*மன்றிரும் பெண்ணை மடல்சேர் அன்றில் என்துயர் அறிந்தனை நரறியோ.(கலித்.129)*

*மகன்றிலொடுஅன்றில்உறைந்தன உயிரொன்றி (கம்பரா.)*

*செந்தலை, மடிந்த மூக்கு ஒருக்கணமும் பிரியாத இயல்பு அன்றிலின் அடையாளமாகும். இணைந்து கொஞ்சுவதை உயவும் என்றும் பிரிந்து ஓலமிடுவதை நரலும் என்றும் பழந்தமிழ்ப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

**அன்னச் சம்பா** *annac-cambā,* பெ. (n.) பழைய நெல் வகை. (வ.வ.வே.க.); an old variety of paddy.

*[அன்னம்+சம்பா]*

**அன்னசாகரம்** *annasāgaram,* (பெ.) (n.) தருமபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[அன்னம்+சாகரம்]*

**அன்னத்தட்டு** பெ. (n.) சோறு ஆற வைக்கும் தட்டு. (ம.வ.தொ. 69.). a plate for hot rice to get cool.

*[அன்னம்+தட்டு]*

**அன்னம்பாறு–தல்** *annampāru-,* செ.கு.வி. (v.i.) இல்லாமையைச் சொல்லிக் கொண்டிருத்தல்; to speak one's own poverty. *"சும்மா அன்னம்பாறுனா உள்ளதும் போய்விடும்."* (வ.சொ.அக.).

*[அன்னம்+பாறு+(பறத்தல்)]*

**அன்னம்பிடி–த்தல்** *annampiḍi-,* செ.கு.வி. (v.i.) தவசங்களின் கதிர் மணியில் பால்கோக்கும் பருவம். (வ.சொ.அக.). grain forming stage.

*[அன்னம்+பிடி]*

**அன்னவெறி** *annaveṟi,* பெ. (n.) உணவு உண்பதில் ஓர் அரக்கத் தன்மை (வ.சொ.அக.).; over anxiety to eat.

*[அன்னம்+வெளி]*

**அன்னாடு** *annāḍu,* (பெ.) (n. நாள்தோறும். (கொ.வ.வ.சொ.13.).daily.

*[அன்றாடம்–அன்னாடு கொ.வ.]*

**அன்னி** *anni* (பெ.) (n.)1.ஆண்பாற்பெயர்; a name of a person.2.தந்தை; father.

*[அல்–அன்–அன்னை(தாய்–அன்பு நிறைந்தவள்)–அன்னன்(தந்தை– அன்புநிறைந்தவன்)–அன்னி]*

**அன்னிகுடி** *annikkuḍi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் பாபநாசத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர்; name of the village in Thanjavur near Papanasam.

[அன்னி+குடி]

அன்னி– குறுநிலத் தலைவன், கழக இலக்கியம். (அகம் 196,262,45,145–ஆகிய வற்றில் இவனைப் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன.

**அன்னிமிஞிலி** *anņimiñili,* (பெ.) (n.) பழங்காலப் பெண்பாற் பெயர்; feminine name in ancient Tamil. *'அன்னிமிஞிலி போல மெம்மலிந்து'* *(அகம்.196–12, 262–12)*

*[அல்–அன்–அன்னை(தாய்–அன்பு நிறைந்தபவள்)–அன்னன்(தந்தை–அன்பு +நிறைந்தவன்)–அன்னி]*

**அனசுப்பலகை** பெ. (n.) அணைசுப் பலகை பார்க்க; *see anaisu-p-palagai* கதவுகளின் பின்புறம் வலிமைக்காக இணைக்கப்படும் பலகை. (ம.வ.சொ. 68.); supporting wooden plank.

*[அணைசு + பலகை]*

**அனத்தம்** *anatham,* (பெ.) (n.)1. அழியும் காலம்; period of destruction. 2.அழிம்பு, அழிவு (இ.வ.); destruction.

*[அல்+நத்தம்]*

**அனந்தலை** *anantdalai,* (பெ.) (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[அணந்தல்+தலை]*

**அனந்தலை விளக்கு** *anandalaivillakku,* பெ. (n.) ஒருவகைக் கோயில் விளக்கு; a kind of lamp, which is lit in temples. *"அனந்தலை விளக்கு உள்கருவும்"*(SII, v, 521.).

*[அனந்தலை+விளக்கு]*

**அனற்பிறவன்** *anar-piravan,* பெ. (n.) முருகக் கடவுள்; lord Murugā as born of the god of fire.the presence of sacred fire.

*[அனல் + பிறவன்]*

**அனிக்கி** *anikki,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[அனுக்கன்–அனுக்கி]*

**அனிகுருந்தன்** *anikurundan,* (பெ.) (n.) முதுகுளத்தூர் வடட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[அலி+குருந்தன்]*

**அனுக்காவூர்** *anukkavur,* பெ. (n.) செய்யாற்றிலிருந்து வந்தவாசி செல்லும் சாலையில் செயாற்றிலிருந்து தென் திசையில் 1. அயிரி மாத்திரி (கி.மீ.) தொலைவில் உள்ள ஊர்.a village 1 k.m. away from *seyyāru.*

*[அனுக்கன்+கா+ஊர்]*

**அனுக்காவூர் கிழவன்** *anukkāvūr kilavan,* பெ. (n.) வீரராசேந்திரன் என்ற மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சி ஆண்டில் திருவோத்தூர் கோயில் விளக்கு வைக்க ஆக்களை அளித்த அனுக்காவூர் வெள்ளாளன் (1180.); a farmer of *anukkāvūr* who donoted cows to get ghee to lit lamp in Tiruv*ōtūr* temple.

[அனுக்காவூர் + கிழவன்.]

**அனுங்கல்** பெ. (n.) சுரங்களுடன் மிக நுண்ணிய சுருதி அளவுடைய ஒலிகளை இணைத்து நடுங்க ஒலித்தல்; a musical aspect.

*[அனுங்கு+அனுங்கல்]*

**அனுசம்** (பெ.) (n.) ஒலகத்தின் (நாதசுரம்) உறுப்புகளில் ஒன்று. (12 : 3.).; a part of wind instrument, nadaswaram.

*[அனு–அனுசம்]*

**அனுசாரணி** பெ. (n.) தம்பூராவில் உள்ள சுருதி நரம்பு; a string inTambura instrument.

*[அனுசரணி–அனுசாரணி]*



**அனுசு** *anusu,* பெ. (n.) இழைப்புளியில் உள்ள உளியை நெருக்கிப் பிடித்திருக்குமாறு இறுக்கமாக அடிக்கப்பட்டிருக்கும் கனத்த இரும்புத் தகடு; (இ.வ.).; aside iron plate driven in to hold tightly.

**அனுப்பத்தூர்** *anuppattūr,* பெ. (n.) சேயாற்றி லிருந்து வந்தவாசி செல்லும் சாலையில் உள்ள ஓர் ஊர். a village in vandavasi Taluk. அநுப்பு என்பது பழைய வரி வகை.

[அனுப்பு+அத்து+ஊர்.]

**அனுபட்சத்திருமேனிகள்** *anupaṭcāttirumēnigaḷ,* (பெ.) (n.) சிற்பவல்லுனரால் உருவாக்கம் பெற்ற சிற்பங்கள்; sculptures of speciality.

*[அனுபட்சம்+திருமேனி+கள்]*

**அனுமனேரி** *anumanēri,* பெ. (n.) பரமகுடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramagudi Taluk.

*[அனுமன்+ஏரி]*

**அனேரி** *anēri,* (பெ.) (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

# ஆ

**ஆவுடையப்பன்** *āvuḍaiappaṉ,* பெ. (n.) சிவன்; God Siva.

*[ஆவு + உடை + அப்பன்]*

**ஆணாதிக்கம்** *āṇādikkam,* பெ. (n.) ஆண்களின் மேலாதிக்கம்; domination of men.

*[ஆண் + ஆதிக்கம்]*

**ஆதியோடந்தமாக** *āadiyōḍandamāga,* பெ. (n.) ஆரம்பம் முதல் முடிவு வரை முழுவதுமாக; from the beginning to the end.

*[ஆதி + ஒரு ++ அந்தம் + ஆக]*

**ஆட்சிச்சொல்** *āṭci-c-col,* பெ. (n.) மக்கள் ஆளும் அன்றாடச் சொல்; usage (of a word).

*[ஆட்சி + சொல்]*

**ஆகுமானம்** *āgu-māṉam,* பெ. (n.) ஒரு செயலைச் செய்வதற்கான பணம், பொருள் போன்றவை; money and material meant for a particular work.

*[ஆகு+மானம்]*

**ஆட்டுக்குடில்** *āṭṭu-k-kuḍil,* பெ. (n.) ஆட்டுக் குட்டிகளை அடைக்கும் கூடு; a pen for young *[ஒருகா. அன்னன் +ஏரி]* அன்னன்= தந்தை, தலைவன்.ones of goat.

*[ஆடு → ஆட்டு + குடில்]*



**ஆடிக்கழிவுத் திருவிழா** *āḍikkaḻivu-t-tiruviḻa,* பெ. (n.) அம்மனுக்கு நடைபெறும் திருவிழா; (67 :23); festival of a village goddess.

*[ஆடிக்கழிவு+திரு+விழா]*

**ஆடிக்கழிவுநாள்** *āḍikkaḻivunāḷ,* பெ. (n.) அம்மன் கோயில் திருவிழா நடைபெறும் நாள்(67 :22); festival of a village goddess.

*[ஆடிக்கழிவு+நாள்]*

**ஆட்சிச்சொல்அகராதி** *āṭci-c-col agarādi,* பெ. (n.) அரசு நடைமுறையிலுள்ள கலைச் சொற்களின் தொகுப்பான அகராதி; glossary of official technical terms usedby the government.

*[ஆட்சிச்சொல்+அகராதி]*

**ஆக்கம்** *ākkam,* பெ. (n.) சிறப்பு; greatness. *"ஆக்கம் பொங்குது" (இ.வ.).*

*[ஆகு +ஆக்கம்]*

**ஆக்காட்டு—தல்** செ.கு.வி. (v.i.) வாயைத் திறந்து காட்டுதல்; (கொ.வ.வ.சொ.13.) to open the mouth widely.

*[ஆ+காட்டு காண் (த.வி.) → காட்டு (பி.வி)]*

**ஆக்கிப்போடு—தல்** *ā-k-ki-p-pōḍu-,* செ.குன்றாவி. (v.t.) சமைந்த, பக்குவமடைந்த பெண்ணுக்கு உறவினர்கள் விருந்து வைத்தல்; to offer feast to a matured girl by her relatives.

*[ஆக்கி +போடு–,]*

**ஆக்குப் பூட்டு** பெ. (n.) எளிதில் பிரிக்க முடியாத வகையில் கயிற்றில் போடும் ஒரு வகை முடிச்சு; a kind of knot. (கொ.வ.வ.சொ.13.).

*[ஆக்கு+பூட்டு]*



**ஆக்கூர்** பெ. *ākkūr* (n.) நாகை மாவட்டத்தில் மயிலாடுதுறை பொறையாறு வழிச்சாலையில் அமைந்த ஓர் ஊர்; a village in Nagai dt.

*[ஆக்கு + ஊர்]*

**ஆக்கை** *ākkai,* பெ. (n.) நெற்கதிரைக் கட்டும் வைக்கோல் கயிறு; a twisted rope made of straw. (வ.வ.வே.க.12.).

*[ஆக்கு → ஆக்கை]*

**ஆகமாக** *āgamāga,* வி.எ. (adv.) நன்றாக, சரியாக; twisted that which is good, perfect. *"ஆகமாக் கூட எழுதவில்லை அதற்குள்கரிமுனையை உடைத்துவிட்டான்".* (இ.வ.).

*[ஆகு–ஆகம்+ஆக]*

**ஆகரம்** *āgaram,* பெ. (n.) உறைவிடம்; shelter. *"திருக்கோடிகாவில் சிறுநங்கை ஈச்வராகரத்து மஹாதேவர்க்கு திருவிளக்கு"* (SII, xii, 55).

*[அகரம்–ஆகரம்]*

**ஆகரி** *āgari,* பெ. (n.) குறிஞ்சிப் பண்ணோடு தொடர்பு உடைய இசைக்கூறு; a musical part of kurinji-p-paṉ. (13 : 118).

*[ஆகுளி – ஆகரி]*

**ஆகாரவீறு** *ākāravīṟu,* பெ. (n.) பலவின்பால் எதிர்மறைக் குறிப்பு வினை முற்றுச் சொல்லின் ஈறு; ending part of the negative verb. (வ.சொ. அ.க.). "குதிரைகள் ஓடா"

*[ஆகார(ம்)+ஈறு]*

**ஆகாவளி** *āgāvaḷi,* பெ. (n.) ஒரு வேலைக்கும் பயனற்றவன் (கொ.வ.வ.சொ.14.); useless person.

[(ஆ)– ஆகு+ (போ) போகு – ஆகு – ஆதாயம். கூடுதல் வருவாய். போகு – (போதல்) இழப்பு]

*[ஆகா+(ஆள்–ஆளி) வளி]*

**ஆகாவிசாதி** *āgavisādi,* பெ. (n.) நவமணிகளில் ஒருவகை; *"பளிங்கு இரண்டும் ஆகாவிசாதி ஒன்றும்"* (Sii, xii, 93).

**ஆகுபோகு** *āgupōgu,* பெ. (n.) ஆதாயமும் இழப்பும் (இலாப நட்டம்); loss and gain; எந்தத் தொழிலிலும் ஆகுபோகுகள் இருக்கத்தான் செய்யும்;

*[ஆகு+போகு]*

**ஆகுமானம்** *āgu-māṉam,* பெ. (n.) ஒரு செயலைச் செய்வதற்கான பணம், பொருள் போன்றவை; monetary source.

*[ஆகு+மானம்]*

**ஆச்சக்குழி** *ācca-k-kuḻi,* பெ. (n.) சாலையிலுள்ள ஆழமான பள்ளங்கள்; pits and holes on pathwayor road.

*[ஆழ் – ஆழ்ச்ச + குழி]*

**ஆச்சமார்** *āccamār,* பெ. (n.) பெரியோர், புரவலர்; eldersand *"கைக்கோளப் பெரும்*

*படையோமினால் சமைப்பித்து எங்கள் ஆச்சமார் திரிக"* (Sii, xii, 93).

*[அத்தன்–அச்சன்–ஆச்சன்+ஆர்]*

**ஆச்சன்** *āccan*, பெ. (n.) தகப்பன்; father (தெ.கோ.சா. 3 :2).

*[அத்தன்=அச்சன்→ஆச்சன்]*

**ஆச்சிமாடு** *āccimāḍu*, பெ. (n.) குழந்தைக்குப் பால் கொடுப்பதற்காகத் தாயின் வீட்டிலிருந்து பரிசமாக மணமகன் வீட்டிற்குக் கொடுக்கும் மாடு; presentation of a milking cow given to bridegroom from bride's family for feeding young child. (கொ.வ.வ.சொ.14.).

*[ஆய் – ஆய்ச்சி + மாடு]*

**ஆசனக்கட்டை** *āsana-k-kaṭṭai*, பெ. (n.) நெய்பவர் உட்காரும் இடம்; (நெ.தொ.க. 43.).a weaver's seat.

*[ஆசனம்+கட்டை]*

**ஆசனாம்பட்டு** *āsanāmpaṭṭu*, பெ. (n.) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in vellore Taluk.

*[ஆசான்+ஆம்+பட்டு]*

**ஆசான்** *āšān*, பெ. (n.) முல்லைநிலத்தின் திறப்பண்களில் ஒன்று; a melody type.

*[ஆசு–ஆசான்]*

**ஆசிரிகரு** *āsirikaru*, பெ. (n.) ஆசிரியர், அருக (சமண)த் துறவியின் பட்டப்பெயர்; preceptor a title of jaina monk. *"சந்திர நந்தி ஆசிரிகரு நிசீதிகை"* (Sii, xvii, 262).

*[ஆசிரியர்–ஆசிரிகர்+உ. கன்னடத் திரிபு]*

**ஆசிரியப் பதினம்** *āsiriya-p-padinam*, பெ. (n.) ஆசிரிய மண்டிலத்தால் அரசியல் உறுப்புகள் பத்தனையும் பாடும் பாடும் பனுவல் வகை. (தொன்.283,உரை.) தசாங்கத்தயல்; a poem in *āsiriyam* metrecelebratingtheten constituents of a kingdom, one of 96 pirabandam.

*[ஆசிரியம் + பதினம்]*

**ஆசு** *āšu*, பெ. (n.) செருப்பின் அடியில் குதிக்கால் பகுதியில் வைக்கும் தோல்; (கொ.வ.வ.சொ.14.).; a piece attached to the hind bottom of the shoe.

*[அல் – அச்சு – ஆசு]*

**ஆட்சித்துறை** *atci-t-turai*, பெ. (n.) அரசு நடவடிக்கை மேற்கொள்ளும் துறை; government department.

*[ஆட்சி + துறை]*

**ஆட்டக்கரகம்** *āṭṭa-k-karagam*, பெ. (n.) ஆடவரால் ஆடப்படுகின்ற கரகவகை. (14:162.); a kind of 'karaga dance' played by males.

*[ஆட்டம்+கரகம்]*

**ஆட்டம்** *āṭṭam*, பெ. (n.) தவறான நடத்தை; bad character. *"அவன் ஆட்டம் கொஞ்ச நஞ்சமா?"* (இ.வ.).

*[ஆடு →ஆட்டம்]*

**ஆட்டமடி–த்தல்** *āṭṭamaḍi-*, செ.கு.வி. (v.i.) விளையாட்டில் வெல்லுதல் (த.நா.வி.); to win the game.

*[ஆட்டம் + அடி–,]*

**ஆட்டுக்கத்தி** *āṭṭu-k-katti*, பெ. (n.) மீன் வகையுள் ஒன்று; strong ulara - a fish.

*[ஆட்டு+கத்தி]*

**ஆட்டுக்காம்புமாடு** *āṭṭu-k-kāmbu-māḍu-*, பெ. (n.) இருமடி மட்டுமே காணக்கூடும் மாடு;

*[ஆட்டுக்காம்பு+மாடு.]*

**ஆட்டுக்காரன்** *āṭṭu-k-kāran*, பெ. (n.)ஆடு மேய்ப்பவன்; shephard.

*[ஆடு→ஆட்டு+காரன்.]*

**ஆட்டுக்கால்முடிச்சு** *āṭṭukkālmuḍiccu*, பெ. (n.) முடிச்சுகளுள் ஒருவகை; a kind of knot. *"நன்றாக ஆட்டுக்கால் முடிச்சு போட்டுக் கட்டு"* (இ.வ.).

*[ஆட்டுக்கால்++முடிச்சு]*

**ஆட்டுக்கிடாய்ச்சண்டை** *āṭṭuk-k-idāay caṇḍai*, பெ. (n.) சேர்வையாட்டத்தில் இரு ஆட்டக்காரர்கள் ஆட்டினைப் போல் சண்டை யிடுதல்; bulling like the goats.

*[ஆட்டுக்கிடாய்+சண்டை]*

**ஆட்டுக்குமாரி** *āttukkumari,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[ஆட்டு+குமரி]*

**ஆட்டுக்குலைமுடிச்சு** *āttu-k-kulai,* பெ.(n.)முடிச்சுவகை; a kind of knot.

*[ஆடு→ஆட்டு+காரன்.]*

**ஆட்டுப்பட்டி** *āttuppatti,* பெ. (n.) ஆடுகளை அடைத்து வைக்கும் தடுப்பு; (கொ.வ.வ.சொ.14.). enclosure for the goat and sheep.

*[ஆடு →ஆட்டு +பட்டி]*

**ஆட்டுப்பொத்தை** *āttuppottai,* பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheesuvaram Taluk.

*[ஆடு+ பொற்றை →பொத்தை]*

**ஆட்டூர்** *āttur,* பெ. (n.) நாகை மாவட்டத்தில் மங்கை நல்லூர்க்கு நான்கு அயிரமாத்தி (4 கி.மீ.) தொலைவில் அமைந்த ஊர்; a village 4 k.m. away from Mangainallur in Nagai district.

*[ஆடு→ஆட்டூர்.]*

**ஆட்டை** *āttai,* பெ. (n.) முறை, தடவை; occassion. *"இவன் இந்த ஊருக்கு எத்தனை ஆட்டை வந்திருக்கிறான்."* (இ.வ.)

*[ஆடு–ஆட்டு–ஆட்டை]*

**ஆட்டைக்காணம்** *āttaikkānam,* பெ. (n.) ஓர் ஆண்டுக்கான வரி; annual tax. *"உக்கிர மங்கலம் பாட்டம் ஆட்டைக் காணம் கொள்விது"* (TAS, viiip43-44).

*[ஆண்டு–ஆட்டை+காணம்]*

**ஆட்டைத்திசை** *āttai-t-tisai,* பெ. (n.) ஆண்டுக்கு ஒருமுறை கொடுக்க வேண்டிய கடமை; annual tax *"நிழல் வகையில், கோயிலுக்கு போம் ஆட்டைத் திசை கொடாதவன்"* (IA, xx, p. 290.)

*[ஆண்டு→ ஆட்டை+திசை.]*

**ஆடகசாலை** *ādaga-sālai,* பெ. (n.) ஆடல் வகைகட்குரிய பெரிய அரங்க சாலை; theatre." (35:107.).

*[ஆடு+அகம்+சாலை]*

**ஆடணி** *ādani,* பெ. (n.) நடனமாடுதலுக்கேற்ற அழகு (35:107.); attracting appearance for dancing.

*[ஆடு+அணி]*

**ஆடல்வரை** *ādalvarai,* பெ.(n.) முன் தேர்க் குரவை, பின்தேர்க்குரவை, வாளமலை, கழல் நிலை, வாடாவள்ளி, வெறியாடல்; folk dances.

**ஆடற்குறுப்பு** *ādarkuruppu,* பெ. (n.) பதினோர் வகை ஆடல்கள் ஒவ்வொன்றுக்கும் உள்ள உறுப்பு; (35:113.). aspects of eleven variety of classical dances.

*[ஆடல்+உறுப்பு]*

**ஆடற்பற்று** *ādarparru,* பெ. (n.) பாவைக் கூத்துக்காகக் கம்பராமாயணத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஏறக்குறைய இரண்டாயிரம் பாடல்கள் மற்றும் அதற்கான விளக்கங்கள்; "(51:36.). about 2000 poems selected form Kambaramayanam for need of folklore.

*[ஆடல்+பற்று]*

**ஆடற்புரவி** *ādarpuravi,* பெ. (n.) போர்க் குதிரை; cavalry. *"ஆடற் புரவிளங் கரியும் அரிவையர் குழாத்தொடு மகப்படப் பிடித்து"* (Ei, xxi, p. 38.) (கல்.).

*[அடு–ஆடு–ஆடல்+புரவி]*

**ஆடிநோன்பு** பெ. (n.) ஆடிப்பண்டிகை; (கொ.வ.வ.சொ.14.).; festivel in the month of ādi.

*[ஆடி+நோன்பு]*

**ஆடுகளம்** *ādukalam,* பெ. (n.) விளையாட்டுக் கான பரந்த வெளியிடம்; play ground.

மறுவ விளையாட்டுத்திடல்.

*[ஆடு+களம்.]*

**ஆடுகாலி** *ādukāli,* பெ. (n.) ஓரிடத்தில் நிலை கொண்டு நில்லாதவனைக் குறிப்பிடுவது, ஒரு வசவுச் சொல்; (இ.வ.) a term referring to a vagabond.

*[ஆடு+காலி]*

**ஆடுங்கூத்தியர்** *āḍaṅkūttiyar,* பெ. (n.) கூத்தில் பங்கேற்கும் பெண்டிர்; (59 : 4.). dancing girla.

*[ஆடும்+கூத்தியர்]*

**ஆடுதுறை** *āḍuturai,* பெ.(n.)தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village inThanjavur.

**ஆடையூர்** *āḍaiyūr,*பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvaṇṇāmalai Taluk.

*[ஆடை+ஊர்]*

**ஆண்டகளூர்** *āṇḍagalūr,*பெ.(n.) இராசிபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Rasipuram Taluk.

*[ஆண்டை + அகளி + ஊர்]*

**ஆண்டார்பந்தி** *āṇḍārpandi,* பெ. (n.) பூந் தோட்டத்திலிருந்து 9 கி.மீ. தொலைவில் உள்ள ஓர் ஊர். a village 9k.m. away from *Pūntōṭṭam.*

*[ஆடு→ஆட்டு+காரன்.]*

**ஆண்டாளூர்** *āṇḍālūr,*பெ.(n.)திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvannamalai Taluk.

*[ஆண்டாள்+ஊர்]*

**ஆண்டிக்கோலம்** *āṇḍi-k-kōlam,* பெ. (n.) துறவுக்கோலம்;manifestationofrenunciation

*[ஆண்டி+கோலம்]*

**ஆண்டிமடம்** *āṇḍimaḍam,* பெ. (n.) ஆண்டி களும் இரப்போரும் அயலூர் எளியாரும் தங்குமிடம்; choultary where medicants, beggers and pilgrims stay.

*[ஆண்டி+மடம்.]*

**ஆண்டி** *āṇḍi,* பெ. (n.) சிற்றூர்க் கோயில் பூசகர்; priest in the small village. (கொ.வ.வ.சொ.15.).

*[ஆண்டவன்–ஆண்டி]*

**ஆண்டிவிளை** *āṇḍiviḷai,* பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agasthēsuvaram Taluk.

*[ஆண்டி+விளை]*

**ஆண்பிள்ளையான்** *āṇpillaiyāṉ,* பெ. (n.) கணவன்; husband *(செட்டிநாட்டு வழக்கு).*

*[ஆண் + பிள்ளை + ஆன். இது ஆம் பிள்ளையான் எனத் திரிந்துள்ளது.]*

**ஆண்திறல்** *āṇtiṟal,*பெ.(n.) திறன் சான்ற ஆண்மகன்; strong brave talented male.

*பெங். மண்; அண்ட்ரென்.* Gk. *anūr, āndros. து.ஆண்சேவு.*

*[ஆண்+ திறல்]*

**ஆண்பாற்பெயர்** *āṇpāṟpeyar,*பெ.(n.)ஆண், ஆண்விலங்கு ஆகியவற்றைக் குறிக்கும் சொல்வடிவம்; masculinenoun.

*[ஆண்பால்+பெயர்.]*

**ஆண்பால் உயர்திணை:** ஆண், ஆடவன், ஆடூஉ, ஆண்பிள்ளை, ஆண்மகன், மகன், மாந்தன்.

**ஆண்பால் அஃறிணை:** ஆண், அப்பர், இரலை, உதள், ஏறு, ஏற்றை, ஒருத்தல், கடா, கடுவன், கண்டி, கலை, களிறு, காளை, சலகன், சே, சேவல், தகர், புகல், போத்து, மோத்தை, விடை. (த.வ.1,139).

**அஃறிணை:** ஒன்றன் பாலில் பெரும்பாலும் ஆண்பால் பெண்பால் வேறுபாடு இருக்காது என்றாலும் சில சொற்கள் பால் வேறுபாட்டினைக் காட்டுகின்றன. எழுவாயாக வரும் இச்சொற்களுக்கு இணையாக வினைமுற்றில் பால் வேறுபாடு இருக்காது.

**ஆணடிகண்மார்** *āṇaḍikaṇmār,* பெ. (n.) ஆண்துறவியர்; mendicants. *"ஆணடிகன் மார்க்கு நியத நெல்லு முக்குறுணியாக"* (SII, xiv, p. 86.)

*[ஆண்டிகள்+மார்]*

**ஆணடிமை** *āṇaḍimai,* பெ. (n.) அடிமையான ஆண்;a male slave. *"இவர் தம்முடைய கல்லியாண இடுவித்த ஆணடிமை பெண்ணடிமையால் இருநூறு அடிமையும்"* (VCR, xviii, p. 16-19.)

*[ஆண்+அடிமை]*

**ஆண்பண்புள்ளஒயிலாட்டம்** *āṉ-paṇbuḷḷa-oyilaṭṭam,* பெ. (n.) ஒயிலாட்டத்தின்

வகைகளில் ஒன்று; (60 : 53.). a kind of 'oyil' dance.

*[ஆண்+பண்பு+ஒயிலாட்டம்]*

**ஆணத்தி** *āṇatti,* பெ. (n.) செப்பேட்டு ஆணையைக் குறிப்பிட்ட ஊருக்கு யானை மீது ஏறிச்சென்று சேர்ப்பிக்கும் அதிகாரி; announcing authority of royal proclamation being seated on elephant.

*[ஆவணம் – ஆவணத்தி – ஆணத்தி]*

**ஆணவக்கை** *āṇavakkai,* பெ. (n.) நாட்டியத்தில் இரட்டை கைகளின் ஒரு பிரிவு; (35 : 201.).a dancing pose.

*[ஆணவம்+கை]*

**ஆணி** *āṇi,* பெ. (n.) யாழின் உறுப்புகளில் ஒன்று; (1:24.).a part of *yāl.*

*[ஆண்+ஆண்+ஆணி]*

**ஆணிகிழவன் ஏறன்பிச்சன்** *āeṇikilavan ēṟanpiccan,* பெ. (n.) விக்கிரம சோழன் ஆட்சியில் அரியாவூர் அவையில் இருந்த ஓர் உறுப்பினன்(1125); a member of āriyavūr assembly of vikirama cholan.

*[ஆணி + கிழவன்]*

**ஆணெல்** *āṇel,* பெ. (n.) நெல்லாக இறுக்கும் வரி; paddy paid as tax. "தலையரையும் ஆணெல்லும் திங்கட்சோறும்" (sii.vi.p.324.).

*[ஆணை+நெல்]*

**ஆத்தமனையாள்** *āttamaṉaiyāḷ,* பெ. (n.) பொற்றாலி புனைந்து கைக்கொண்ட மனையாள்; bride, who adorned golden *tāli,* while performing marriage ceremony. "ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே காத்த மனையாளைக்கா முறுங்காளை"(திருமந்.244)

*[யாத்த – ஆத்த + மனையாள்]*

**ஆத்து–தல்** *āttu-,* செ.கு.வி. (v.i.) அமுக்கிக் கொள்ளுதல்; ஏமாற்றுதல். to cheat. *"கொடுத்த பணத்தை ஆத்திவிட்டான்".*

*[ஆற்று – ஆத்து]*

**ஆத்தோடை** *āttōḍai,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[ஆற்று → ஆத்து + ஓடை]*

**ஆதரம்** *ādaram,* பெ. (n.) ஓடக்கூலி; boat fare.

*[ஆது–(ஓடம்,தெப்பம்)ஆதரம் (ஓடக்கூலி)]*

**ஆதன்** *ādaṉ,* பெ. (n.) புலவர் அழிசியாரின் தந்தையான சோழ நாட்டுப் புலவர்; a Chola country poet, poet *Aḷiśi's father.*

**ஆதனம்** *ādaṉam,* பெ. (n.) ஓகநூல் கூறும் இருக்கை நிலை; a yogic posture. "பங்கய மாதி பதந்தபல் ஆதனும் அங்குள வாம்இரு நாளும்" (திருமந்.540)

*[ஆதன் + அம் → ஆதனம். இச்சொல் 'ஆசனம்' என வடமொழியில் திரிந்தது.]*

**ஆதனவினி** *ādaṉaviṉi,* பெ. (n.) கொங்கு சேர அரசர் மரபுவழியைச் சேர்ந்தவன்; a king of Kongu Chera dynasty.

*[ஆதன் + அவினி]*

**ஆதனூர்** *ādaṉūr,* பெ. (n.) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkurichi Taluk.

*[ஆதன்+ஊர்]*

**ஆதாரம்** *ādāram,* பெ. (n.) (ஆறாதாரங் களுக்கும் ஆதாரமான) சுழி முனை நாடி; oint of eternal bliss. "ஆதாரத் துள்ளே அறிந்து சிவனும்ருவைப் பேதமற அர்ச்சிக்கும் ஆறு" *(ஔவைக்குறள்74)*

*[ஆது – ஆதாரம்]*

**ஆதாளை** *ātaḷai,* பெ. (n.) ஒரு வகை மூலிகைச் செடி; a kind of herbal plant.

*[அதளை–ஆதாளை]*

**ஆதிஇலட்சியங்கள்** *ādiilaṭciyangaḷ,* பெ. (n.) தியாகராச சுவாமிகள் முத்துசுவாமி தீட்சிதர் சியாமா சாத்திரிகள் ஆகியோர் இயற்றிய பாடல்களின் இசை மரபு. (1 :70); musical tradition of the trios Thiyagaraja swamigal Muthuswami Decttidar and Syama swamigal.

*[ஆதி+இலட்சியம்+கள்]*

**ஆதிக்கேழல்** *ādi-k-kēḻal,* பெ. (n.) பன்றியாகத் தோற்றரவு செய்த திருமால்; incarnation of

Vishnu as a pig. *"திருமாலாதிக் கேழலாகி யாதுஞ்சலியா"* (sii, iii, p. 64.)

*[ஆதி+கேழல்]*

**ஆதிச்சநல்லூர்** *ādicca nallūr,* பெ.(n.) ஆதித்த நல்லூர் பார்க்க; see *ādittanallur*

*[ஆதித்த–ஆதிச்ச+நல்லூர்]*

**ஆதிசாரம்** *ādisāram,* பெ. (n.) சிற்பக்கலை இலக்கணங்களைக் கூறும் நூல்; treatise on music.

*[ஆதி+சாரம்]*

**ஆதித்தகுட்டி** *ādittakuṭṭi,* பெ. (n.) 9 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சோழ நாட்டு அதிகாரி; an officer of *Choḷa* country during 9th century.

*[ஆதித்தன் + குட்டி]*

**ஆதித்த நல்லூர்** *āditta nallur,* பெ. (n.) பொருநை ஆற்றங்கரையிலிருந்த தென் பாண்டி நாட்டுத் தொல்பழங்கால நகரம்; சிந்துவெளி நாகரிகத்துக்குச் சம கால நாகரிகத் தொல்பொருள் ஆய்விடம்; an ancient city on the river Porunai of south Pandiy a kingdom, an archaeological site of Indus valley period.

*[ஆதித்தன்+நல்லூர்]*

**ஆதித்தன்உய்யவந்தான்** *adittanuyyavan dān,* பெ. (n.) 1124–ல் வாழ்ந்த சோழ அதிகாரி; an officer of *Choḷa* country during 1124.

*[ஆதித்த+உய்யவந்தான்]*

**ஆதிவாயிலார்** *ādivāyilār,* பெ. (n.) பரத சேனாபதியம் எனும் இசை நூலின் ஆசிரியர்; (1:16).author of paradasenapatiyam.

*[ஆதிவாயில் + ஆர்]*

**ஆதிறைப்பாட்டம்** *ādiṟai-p-pāṭṭam,* பெ. (n.) கால்நடைகளின் மீது இடப்பட்ட வரி; tax for cattles (தெ.கோ.சா. 3 : 2).

*[ஆ+திறை+பாட்டம்]*

**ஆதீண்டுகுற்றி** *ātīṇḍukuṟṟi,* பெ.(n.) ஆக்கள் முதுகைத் தேய்த்துக் கொள்ள ஏதுவாக நட்டு வைத்திருக்கும் கல்; stone erected to facilitate cattle for rubbing body.

மறுவ மாடுரசுகல்.

*[ஆ+தீண்டு+குற்றி]*



**ஆது** *ādu,* பெ. (n.) தெப்பம், புணை; boat.

*[ஆ–(ஆதுதுதல்–(முன்செல்லுதல்) ஆது]*

**ஆதுவம்** *āduvam,* பெ. (n.) யாழுக்கு நேரும் நான்கு குற்றங்களில் ஒன்று; (35 : 116.).a defect in harp.

*[ஆற்று+ஆத்து+ஆதுவம்]*

**ஆந்துபோ–தல்** *āndupō-,* செ.கு.வி. (v.i.) பயிர் முளைத்து மேல் மழை இல்லாமல் கருகிப் போகும் நிலை; (இ.வ.). to fail as of crop.

*[அவிந்து – ஆந்து + போ–,]*

**ஆந்தூங்கி** *āntūṅgi,* பெ. (n.) சோம்பேறி; lazy fellow. *'அவன் ஆந்தூங்கிப் பயலாயிற்றே; அவனை வேலைக்கு வைக்கலாமா?"*

*[அறு-ஆ+தூங்கி]*

**ஆந்தைக்கூட்டம்** *āndaik-kūṭṭam,* பெ. (n.) கொங்குவேளாளர் குலத்தைக் குறிக்குஞ் சொல்; a class among Kongu Vellalas.

*[ஆந்தை+கூட்டம்]*

**ஆப்பாடி** *āppāḍi,* பெ. (n.) கடலூர் மாவட்டத்தில் கொள்ளிடத் தென்கரையில் அமைந்த ஓர் ஊர் திருவாப்பாடி என அழைக்கப்படுகின்றது. name of the village in cuddalore kolliodam south shore.

*[ஆய் + பாடி]*

**ஆப்பிராய்** *appirāy,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvādānai Taluk.

**ஆப்பு** *āppu,* பெ. (n.) உழவுக் கருவிகள் ஆடாமல் இருப்பதற்குக் செருகும் சிறிய மரக் குச்சி; (வ.வ.வே.க.12.).a supporing piece of wood.

*[அகப்பு–ஆப்பு]*

**ஆம்பல்** *āmbal,* பெ. (n.) ஆம்பல் மலர் அடியாகப் பெயர் பெற்ற பண்; a musical note.

*[அம்பு–அம்பல்+ஆம்பல்]*

**ஆம்பூர்** *āmbūr,* பெ.(n.)வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in vellore district.

*[ஆண்மையூர்→ஆம்பூர்]*

**ஆம்போதி** *āmbōdi,* பெ. (n.) அவினாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Avināsi Taluk.

*[அறவன் + போதி]*

**ஆமக்கண்** *āmakkaṉ,* பெ. (n.) கணவன் என்பதைக் குறிக்கும் நெல்லை வட்டாரச் சொல்; (64 : xv).;husband.

*[ஆண்+மகன்]*

**ஆமந்தகடவு** *āmandakaḍavu,* பெ. (n.) உடு மலைப்பேட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Udumalpettai Taluk.

*[ஆ+மந்தை+கடவு]*

**ஆமாஞ்சி** *āmāñji,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantāngi Taluk.

*[ஆ+(மந்தை)மந்தி–மஞ்சி]*

**ஆமாத்தூர்** *āmāttūr,* பெ. (n.) கடலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்.name of the village in cuddalore.

*[ஆ + மாத்தூர்]*

**ஆமூர்** *āmūr,* பெ.(n.)நாகை மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village in Nagai district.

*[ஆலூர் – ஆமூர்]*

**ஆமை**[1] *āmai,* பெ. (n.) சிற்பங்களில் உள்ள ஒரு வகையான மார்பணி; an ornament design in sculpture.

*[அம் – ஆமை]*

**ஆமைக்கொடாப்பு** *āmaikkoḍāppu,* பெ. (n.) இரவில் காவலுக்குத் தங்குபவர்களுக்கான கூண்டுக் கொடாப்பு; (கொ.வ.வ.சொ.15.).a semi circular shelter for nightwatch.

*[ஆமை+கொடாப்பு]*



**ஆமைபிரக்கி** *āmāipirakki,* பெ. (n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[ஆவு (மாடு) – ஆவை – ஆமை + பெருக்கி]*

**ஆய்குடி** *āykuḍi,* பெ. (n.) பொதிய மலைச் சாரலில் உள்ள ஓர் ஊர்; a village in Podiyamalai slope.

*[ஆய்+குடி]*

**ஆய்முதுகுடி** *āymudukuḍi,* பெ. (n.) தொன்முது தமிழ்க்குடி வழியினருள் குறிப்பிட்டுக் கூறப்படும் ஆய்மரபினர்; āydynasty of the Chera kings being the oldest.)

*[ஆ–மாடு, ஆனிரை.ஆ–ஆய்– ஆயர் குடிப்பெயர். வடபுலத்தில் இம்மரபினர் யாதவர் எனப்பட்டனர்.]*

**ஆய்ந்துவிடு–தல்** *āynduviḍu-,* செ.குன்றாவி. (v.t.) கரவடமாகக் கவர்தல்;to take away stealthily. "*அகழிக்கு இடங்கொடுத்து அவள் ஆய்ந்து விட்டால் என்ன செய்வது?*"

*[அகைந்து–ஆய்ந்து+விடு]*

**ஆய்வாளர்** *āyvāḷar,* பெ.(n.)1. துறையில் தேர்ந்தெடுத்த தலைப்பில் ஆராய்ச்சி செய்பவர்;

researcher, investigator, analyst.

*[ஆய்வு + ஆளர்]*

**ஆய்வுஅலுவலர்** *āyvualuvalar,* பெ. (n.) கண் காணிப்பு அதிகாரி, inspecting officer.

*[ஆய்வு + அலுவலர்]*

**ஆய்வுநிலை** *āyvunilai,* பெ. (n.) கருத்துகள் ஆய்வு நடைமுறை, பட்டறிவு ஆகியவற்றின் அடிப் படையில் வரும் முடிவுநிலை; empirical stage.

*[ஆய்வு+நிலை]*

**ஆய்வுநெறி** *āyvuneṟi,* பெ. (n.) ஆராயக்கூடிய வழிமுறை; research methodology. இக் காலத்தில் ஆய்வுநெறி நன்கு வரையறுக்கப் பட்டதாக இருக்கிறது.

*[ஆய்வு+நெறி]*

**ஆயக்காரன் புலம்** *āyakkāranpulam,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in Tanjavur.

*[ஆயம்+காரன்+புலம், வரி தண்டுவோர் இருந்த இடம்]*

**ஆயதி** *āyadi,* பெ. (n.) வருமானம்; income. *"ஆறு கூறினால் புரவும் ஆயதியும் பொன்னும் பெறுமாறு"* (Ei, iv, p. 32.)

*[ஆய்–ஆயதி]*

**ஆயம்** *āyam,* பெ. (n.) ஏழிசையின் பகுப்புகளில் முதல்வகை; first of the seven musical notes.

*[ஆ–ஆயம்]*

**ஆயம்** *āyam,* பெ. (n.) 1. பயன்; benefit. 2. ஆதாயம் (லாபம்); gain.

*[ஆ–ஆயம்]*

**ஆயல்** *āyal,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்தி லுள்ள சிற்றூர்; a village in Arakkōnam Taluk.

*[ஆய் + அல்]*

**ஆயாக்கிரந்தை** *āyākkirandai,* பெ. (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattūr Taluk.

*[ஆய் + கரந்தை]*

**ஆயாதிபோடு–தல்** *āyādipōḍu-,* செ.கு.வி. (v.i.) வீடுகட்ட அடிமனையாகிய கடைகால் இடுதல்; to lay foundation for the building to be constructed.

*மறுவ கடைகால்.*

*[ஆயத்தம்–ஆயத்தி–ஆயாதி +போடு]*

**ஆயாதிமரபு** *āyadimarabu,* பெ. (n.) படிமங் களின் உயரத்தினை அமைக்க பழம் மரபு முறைகளில் ஒன்றினைத் தேர்ந்து எடுக்கும் நிலை; a traditional selection of measurement.

*[ஆயாதி–மரவு]*

**ஆயிரங்காலத்துப்பயிர்** *āyiraṅkālattu-p-ayir,* பெ.(n.) திருமணம்; marriage. "

*[ஆயிரம்+காலம்+அத்து+பயிர்]*

**ஆயிரமங்கலம்** *āyiramangalam,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[ஆயிரம்+மங்கலம்]*

**ஆயிரவேலி** *ayiravēli,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvādānai Taluk.

*[ஆயிரம்+வேலி]*

வரி தண்டுவதற்கு ஏந்தாகச் சோழர் காலத்தில் ஆயிரம்வேலி விளைநிலம் பரப்பு கொண்ட ஊர்கள் ஒருங்கிணைக்கப்பட்டன. அத்தகைய ஊர்த்தொகுதி ஆயிரம்வேலி எனப்பட்டது. ஆயிரவேலி அயிரூர் வனவாசி ஈராயிரம் போன்ற சொல்லாட்சிகளை நோக்குக.

**ஆயிலம்** *āyilam,* பெ. (n.) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Walajah Taluk.

*[ஆயல் – ஆயலம் – ஆயிலம்]*

**ஆர்வக்கோளாறு** *ārva-k-kōḷaṟu,* பெ. (n.) ஆர்வ மிகுதியால் வலிந்து செயற்படுதல்; doing things voluntarily due to over enthusiasm.

*[ஆர்வம்+கோளாறு]*

**ஆர்வலம்** *ārvalam,* பெ. (n.) திருத்துறைப் பூண்டி வட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in

Tiruturaipūṇḍi. 'அவிவலம்' என்று அழைக்கப் படுகிறது.

*[ஆர் (ஆத்தி) + வல்லம்]*

**ஆரஞ்சி** *arañji,* பெ.(n.) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvaṇṇamalai Taluk.

*[ஆர் + அஞ்சி]*

**ஆரணி** *āraṇi,* பெ.(n.) வேலூர் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village in Vellore district.

*[ஆறு+அணி. ஆறுகள் அழகு சேர்க்கின்ற ஊர்]*

அத்தி மரங்கள் நிறைந்த காடாக இருந்த இடத்தைக் 'கரிகாலன்' என்ற மன்னன் கமண்டல நதி அருகே ஊராக்கியது 'ஆறு அணி'.

**ஆரல்வாய் மொழி** *āralvāymoḻi,* பெ.(n.) கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர்; a village in *Kanniyakumari.*

*[ஆரல் + வாய் + மொழி]*

**ஆரவல்லிஆட்டம்** *aravalliāṭṭām,* பெ.(n.) கரகாட்டத்தின் அமைப்பு முறை; a method of arranging 'karagam'

*[ஆரவல்லி+ஆட்டம்]*

**ஆரவல்லிசூரவல்லி** *aravallisūravalli,* பெ. (n.) கரகாட்டத்துக்கு வாசிக்கப்படும் ஆரவல்லி சூரவல்லி கூத்துப்பாடல்களின் இசை; the magic for kūttuppāḍal in karagāṭṭam.

**ஆராய்தல்எழால்** *ārāydaleḻāl,* பெ.(n.) எழால் வகையினுள் ஒன்று; a kind of musical notes of the yāḻ.

*[ஆராய்தல் + எழால்]*

**ஆராயன் சோலை மண்டைநம்பி** *ārāyaṉ sōlaimaṇḍainambi,* பெ.(n.) விக்கிரம சோழன் ஆட்சிகாலத்தில் காருவா (அமாவாசை) நாள்களில் இறைவன் வீதிஉலா வரவும் அமுது மேற்கொள்ளவும் நிலம் தானமாக விடப்பட்டதற்குச் சான்றாளராக ஒப்பமிட்டுள்ளவன். (இவனுடைய காலம் 1123.); who attested for the land given to meet the expenditure for procession of deities during new moon days and offering food during the Vikkiramādittiya Chola period.

**ஆராவயல்** *ārāvayal,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvāḍāṉai Taluk.

*[ஆராத+வயல்]*

**ஆரியக்கல்** *āriya-k-kal,* பெ.(n.) கேழ்வரகு அரைக்கும் எந்திரக்கல்; hand-mill.

*[ஆரியம்+கல்]*

**ஆரியக்குச்சரி** *āriya-k-kuccari,* பெ.(n.) மருதத்திற்குரிய பண்வகை; (13:121.); a morning melody type peculiar to agricultural tracts.

*[ஆரியம்+குச்சரி]*

**ஆரியக்கூத்தாடிகள்** *āriya-k-kūttaḍigaḷ,* பெ. (n.) தொம்பக் கூத்தினை நிகழ்த்துகின்ற கலைஞர்கள்; folklorsts of northern style.

*[ஆரியக்கூத்து+ஆடிகள்]*

**ஆரியத்தாள்** *āriya-t-tāḷ,* பெ.(n.) கேழ்வரகுத் தட்டை; stalk of ceusive coracana.

*[ஆரிய(ம்)+தாள்]*

**ஆரியப்படை** *āriya-p-paḍai,* பெ. (n.) வட புலத்தில் கூட்டுக் கொள்ளையராக இருந்த குழுவினர் (யௌதேயர்); The army of robbers. ஆரியப் படை கடந்த நெடுஞ் செழியன் (சிலம்பு) ஆரியப்படையின் உடைந்து (அகம்.336–19).

*[ஆரியம்+படை]*

இராசத்தானம், மத்தியப்பிரதேசம் ஆகிய பகுதிகளில் இருந்த ஆறலைக் கள்வர். சோகியாபர் (Johia bar) எனும் ஊரின் பெயரால் வடமொழியில் யௌதேயர் என்று குறிப்பிடப்பட்டனர்.

**ஆரியப்படையூர்** *ariyapadaiyūr,* பெ.(n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊர்; a village in Tanjavur near kumbakonam.

*[ஆரியப்படை + ஊர்]*

**ஆரியர்கயிறாடுபறை** *āriyarkayirāduparai*, பெ.(n.) பறைவகையினுள் ஒன்று; (35:135.); a kind of drum.

*[ஆரியர்+கயிறு+ஆடு+பறை]*

**ஆரோசை** *ārōsai*, பெ.(n.) சுரநிரல்களில் ஒன்று; a musical note.

*[ஆர்+ஓசை]*

**ஆலக்கொடி** *ālakkodi*, பெ. (n.) நான்கு இலைகளைக் கொண்ட படர்கொடி; (வ.வ.வே.க. 12.). climber of four leaves.

*[ஆலை – ஆல + கொடி]*

**ஆலக்கோயில்** *āla-k-koil*, பெ. (n.) சிற்பச் செய்திகளைப் புரிந்துகொள்ள துணை செய்யும் கோயில் வகை; a type of temple construction.

**ஆலங்காட்டாண்டி** *ālaṅkāttandi*, பெ. (n.) கூத்து வகையினுள் ஒன்று; (136 :.); dance variety.

*[ஆலங்காடு+ஆண்டி]*

**ஆலக்குழி** *ālakkuli*, பெ. (n.) ஆலைக்குழி, பனைவெல்லப்பாகு காய்ச்ச வெட்டப்படும் பெரிய குழி; (கொ.வ.வ.சொ.16.). a pit dug make a lug oven.

*[ஆலை+குழி]*

**ஆலங்கட்டி** *ālaṅkatti*, பெ. (n.) மழைபெய்யும் போது உறைந்து கட்டியாகி விழும் பனிக் கட்டிகள்; (கொ.வ.வ.சொ.16.);hail.

*[ஆலி–ஆலம்+கட்டி]*

**ஆலங்காயம்** *ālangāyam*, பெ. (n.) திருப் பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[ஆலம் + (காயன்) காயம்]*

**ஆலங்காத்தான்** *alaṅgāttān*, பெ.(n.) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[ஆலம் + காத்தான்]*

**ஆலச்சட்டி** *āla-c-catti*, பெ. (n.) மாவு, கூலங்கள் போன்றவற்றை வைத்துக் கொள்ள பயன்படுத்தி வந்த பெரிய மண்பாண்டம்; receptacle pot.

*[ஆல(ம்)+ சட்டி.]*

**ஆலத்தூர்** *ālattūr*, பெ. (n.) திருநள்ளாற்றுக்குத் தெற்கே 6 கி.மி. தொலைவிலுள்ள ஓர் ஊர்.a village south to Tirunlļāar.

*[ஆலம் + அத்து + ஊர்]*

**ஆலத்தூர் கிழார்** *ālyattūrkilār*, பெ. (n.) கிள்ளிவளவனைப் பாடிய கழகக்காலப் புலவர்; a poet of kaazham (sangam) a period.

*[ஆலத்தூர்+கிழார்]*

**ஆலயத்தாளம்** *ālayattālam*, பெ. (n.) பறை வாசிப்பின் ஒரு வகை; a kind of temple drum.

*[ஆலயம்+தாளம்]*

**ஆலமரம்** *ālāmaram*, பெ. (n.) கியாக் கியாக் குருவி விளையாட்டில் பயன்படும் சொல்; (த.நா.வி.).a word used in child's play.

*[ஆலம் + மரம்]*

**ஆலமுண்டி** *ālamundi*, பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். a village in Kancheepuram.

*[ஆலம் + உண்டி (உண்டவன்]*

**ஆலவேலி** *ālaveli*, பெ.(n.) மயிலாடுதுறை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mayiladuturai Taluk.

*[ஆலம்+வேலி]*

**ஆலன்விளை** *ālanvilai*, பெ. (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheesuvaram Taluk.

*[ஆலம்+விளை]*

**ஆலாடு** *ālādu*, பெ. (n.) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

**ஆலாத்திகுருவி** *ālātti-k-kuruvi*, பெ. (n.) வயல் வெளிகளில் நண்டைத் தின்னும் ஒரு வகைக் குருவி; (கொ.வ.வ.சொ.16.).a kind of sparrow.



*[ஆலாத்தி+குருவி]*

**ஆலாம்பாடி** *āḷāmpāḍi,* பெ. (n.) ஒரு வகை மாடு; (கொ.வ.வ.சொ.16.).a cow variety.

*[ஆலம்+பாடி]*

**ஆலி** *āli,* பெ. (n.) ஆலியாட்டத்திற்காகச் செய்யப்படும் மிகப்பெரிய மாந்தருவப் பொம்மை; a doll in the shape of a man.

*[ஆல்–ஆலி]*

**ஆலிடம்** *āliḍam,* பெ. (n.) நடனத்தில் இடம் பெறும் ஒருவகைக் கால் நிலை; a step or a leg posture in play.

*[அகல் + இடம்]*

**ஆலியாட்டம்** *āliyāṭṭām,* பெ. (n.) அச்ச மூட்டும் பேய் பூதவுருவங்களைத் தாங்கியாடும் ஆட்டம்; a dance with devil posture.

*[ஆலி+ஆட்டம்]*

**ஆலேந்தல்** *ālēṇdal,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[ஆல்+ஏந்தல் (ஏரி)]*

**ஆலை** *āḷai,* பெ. (n.) கைத்தறி நெசவில் நூலைப்பாவு ஆக்குவதற்கு உதவும் உருளை; ஒருவகைக் கால் நிலை; a device in handloom weaving.

*[ஆல்(சுற்றுதல், சுழற்றுதல்–ஆலை]*

**ஆவஞ்சி** *āvañji,* பெ. (n.) மாட்டின் அடிவயிற்றுத் தோலாற் மூடப்பட்ட இடக்கையாகிய பறை; a kind of drum.

*[ஆ+வஞ்சி (இளந்தோல்)]*

**ஆவலம்** *āvalam,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkōyilur Taluk.

*[ஆ+வல்லம்]*

**ஆவனம்** *avaṇam,* பெ.(n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[ஆ+வனம்]*

**ஆவாகுளம்** *āvākuḷam,* பெ. (n.) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantāngi Taluk.

*[ஆவி+குளம்]*

**ஆலேந்தல்** *ālēṇdal,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[ஆல்+ஏந்தல்]*

**ஆவிச்சட்டி** *āvi-caṭṭi,* பெ. (n.) பிட்டு செய்யப் பயன்படும் சட்டி; (ம.வ.சொ. 70.); a vessel to steam 'piṭṭu', a kind of confectionery.

*[ஆவி+சட்டி]*

**ஆவிடையார்கும்மி** *āviḍaiyārkummmi,* பெ. (n.) கும்மிப் பாடலிற் ஒரு வகை; a kummi play.

*[ஆவுடையார்+கும்மி]*

**ஆவியூர்** *āviyūr,* பெ.(n.) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[ஆவி + ஊர்]*

**ஆவிப்பதனம்** *āvi-p-padanam,* பெ. (n.) நீராவியினால் பதப்படுத்துகை; steam curing.

*[ஆவி + பதனம்]*

**ஆவியார்** *āviyār,* பெ.(n.) பழனியை ஆண்ட வேளிர் மரபினர்; a Veḷir ruler of Paḻaṇi.

*[ஆவி + ஆர்]*

**ஆழ்வார்** *āḻvār,* பெ. (n.) அரையர் இன மக்கள் தாளத்தைக் குறிக்க வழங்குஞ் சொல்; (4 : 24).

a term used for symbol by `Aryar' people. 2.சேவைப்பலகையைக் குறிக்க அரையர்கள் வழங்கும் சொல்;

*[ஆள் – ஆழ் + வார்]*

**ஆவூர்** *āvūr,* பெ.(n.) இப்போது ஆனூர் என்று அழைக்கப்படுகிற கொங்குநாட்டில் உள்ள ஓர் ஊர்; a village in Kongunadu.

*[ஆ + ஊர்]*

**ஆள்கட்டு** *āḷkaṭṭu,* பெ. (n.) ஆள்பலம்; (கொ.வ.வ.சொ.16.); man power.

*[ஆள்+கட்டு]*

**ஆழளவை** *āḻaḷavai,* பெ. (n.) கடலின் அழத்தை அளவிடும் கருவி; sonar equiment.

*[ஆழ்+அளவை]*

**ஆள்குடி** *āḷkuḍi,* பெ. (n.) ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஆட்சியாளர் தொடர் வரிசை, அரசர்களின் வழிவழிமரபு; dynasty.

*[ஆள்+குடி]*

**ஆள்திறன்** *āḷtiṟan,* பெ. (n.) திறனாளன்; capable person.

*[ஆள்+திறன்]*

**ஆள்நிலம்** *āḷnilam,* பெ. (n.) ஒரு நாட்டிற்குச் சொந்தமான நிலப்பகுதி, நாட்டாட்சிப் பரப்பு, நாட்டுரிமை எல்லை; territory.

*[ஆள்+நிலம்]*

**ஆள்வார்** *aḷvār,* பெ. (n.) படப்புக்குப் பக்கத்தில் இருபுறமும் இருக்கும் இடம்; side places adjacent to a hay rick.

*[ஆள்+இ+ஆர்]*

**ஆள்படி** *āḷpaḍi,* பெ. (n.) கூலி; wage.

*[ஆள்+படி]*

**ஆளமுட்டு** *āḷamuṭṭu,* பெ. (n.) ஆள் உயர நீராழம்; fathom depth.

*[ஆள்+அம்மட்டு]*

**ஆளார்ப்பச்சாலி** *āḷārppa-c-cāli,* பெ. (n.) அகலமாகச் சேர்த்து ஒலிக்கப்படுவது; group singing.

**ஆளிக்குட்டி** *aḷikkuḍi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruvāḍāṉai Taluk.

*[யாளி – ஆளி + குடி]*

**ஆளித்திடல்** *āḷittiḍal,* பெ. (n.) சிப்பியின் படுகை; oyster bed.

*[ஆளி + திடல்]*

**ஆள்கட்டு** *āḷkaṭṭu,* பெ. (n.) ஆள் வலிமை; (கொ.வ.வ.சொ.16.); man power.

*[ஆள்+கட்டு]*

**ஆளும்கட்சி** *āḷumkaṭci,* பெ. (n.) மக்களாட்சி அமைப்பில் பெரும்பான்மை நேரி (வாக்கு) களைப் பெற்று ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் கட்சி; ruling party.

*[ஆளும்+கட்சி]*

**ஆளுமை** *āḷumai,* பெ. (n.) மாந்தனொருவனின் தனிப்பட்ட குணத் தொகுப்பு; personality, individuality.

*[ஆள் → ஆளுமை]*

**ஆளுநர்** *āḷunar,* பெ. (n.) நடுவண் அரசால் பரிந்துரைக்கப்பட்டுக் குடியரசுத் தலைவரால் அமர்த்தம் பெறும் மாநில ஆளுவ (நிருவாக)ப் பொறுப்புடைய தலைவர்; a person appointed by the president to govern a state, governer.

*[ஆள் → ஆளுநர்]*

**ஆளுவர்** *āluvar,* பெ. (n.) 1. துளு நாட்டு மன்னர்பெயர்; name of the chieftains of Thulu nadu. 2.அலுவலகப் பணிகளுக்காகக் ஆனது குறிப்பிட்ட நிறுபவனத்தை மேற்

பார்க்கும் ஆளுவ(நிருவாக) அதிகாரி; administrative officer, executive officer.

*[ஆள்–ஆளுவர்]*

**ஆளேறும்திலா** *āleṟumtilā,* பெ. (n.) ஒரு வகையான ஏற்றப்பாடல்; a kind of 'ēṟṟam' song.

*[ஆளே+ஏறும்+துலா]*

**ஆற்றமாட்டாதவன்** *āṟṟamāṭṭādavaṉ,* பெ. (n.) இயலாதவன்; one who is incapable. *"ஆற்றமாட்டாதவனை இங்கிருந்து போகச் சொல்" (இ.வ.)*

*[அற்று–ஆற்ற+மாட்டாதவன்]*

**ஆற்றுக்குகை** *āṟṟu-k-kugai,* பெ. (n.) ஆற்றின் கரை; river bank. *(தொ.கோ. சா.3:2)*

*[ஆறு →ஆற்று + குகை]*

**ஆற்றுக்குலைத்தலைவாய்** *āṟṟy-k-kulai talaivāy,* பெ. (n.) ஆற்றங்கரையில் உள்ள தெரு; river bank street. *"கீழ்க் கோடிய வாய்க்காலுக்கும் ஆற்றுக் குலைத் தலைவாயின் நிலத்துக்கும்"* (SIIi, xix, p. 321.)

*[ஆற்றுக்கு+உலை+தலைவாய்]*

**ஆற்றுவண்டல்** *āṟṟuvaṇḍal,* பெ. (n.) ஆற்றோர் இருக்கும வண்டல் பகுதி;haugh.

*[ஆற்று + வண்டல்]*

**ஆறறிவு** *āṟaṟivu,* பெ. (n.) பகுத்தறியும் திறன்; rational faculty, sixth sense. *"ஐந்தறிவுள்ள விலங்குகளை ஆறறிவுள்ள மனிதனால் வெல்ல முடியாதா என்ன?"*

*[ஆறு + அறிவு]*

**ஆற்றுவரம்பு** *āṟṟuvarambu,* பெ. (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[ஆறு+வரம்பு]*

**ஆறுசல்லைக்கயிறு** *āṟusalaikkayiṟu,* பெ. (n.) (வடம்) ஆறு பெரும் புரிகளைக் கொண்ட கயிறு; (ம.வ.தொ. 70.).; rope which has six big strands.

*[ஆறு+சால்வை+கயிறு]*

**ஆறுசல்லைக்கயிறு** *āṟusalaikkayiṟu,* பெ. (n.) (வடம்) ஆறு பெரும் புரிகளைக் கொண்ட கயிறு; (ம.வ.தொ. 70.).; rope which has six big strands.

*[ஆறு+சால்வை+கயிறு]*

**ஆறுபாதி** *arupādi,* பெ.(n.) மயிலாடுதுறை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mayilāḍuturai Taluk.

*[ஆறு + பாதி]*

**ஆனந்தக்களிப்பு** *āṉanta-k-kaḷippu,* பெ.(n.) சித்தர்கள் தோற்றுவித்த ஒருவகை இசைப் பாடல்; a rythm designed by Siddhas.

*[ஆனந்தம் + களிப்பு]*

**ஆனந்தை** *ānandai,* பெ. (n.) குறிஞ்சிக்குரிய முப்பத்திரண்டு பண்களில் ஒன்று; one of thirty two 'kurinjipan'

*[ஆனந்தம் + ஐ]*

**ஆனமானத்திரி** *āṉamāaṉattiri,* பெ.(n.) துணியால் முறுக்கிச் செய்த திரி கொண்டு விளையாடல்; a play with twisted of cloth.

**ஆயி** *āyi,* பெ. (n.) தாலாட்டுச் சொல்; a term used while singing lullaby to make a child to sleep. *"இச்சொல்லையே திரும்பத் திரும்பச் சொல்லிப் பாடுவது வழக்கம்."*

*[ஆ + இ]*



**இங்கட்கு** *ingatku,* பெ. (n.) எங்களுக்கு; to us. *"சிந்தையினாலிய விங்கட்கிது நன்றென"* (SII, xiv, p.44.)

*[எங்கள்+கு]*

**இசலானி** *isalāni,* பெ. (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arokkōṇam Taluk. (இ.வ.)

*[இசல்+அணி]*

**இசலிமடை** *isalimaḍai,* (பெ.) (n.) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk. (இ.வ.)

*[இகலி+இசலி+மடை]*

**இச்சிலாத்தி** *iccilātti,*(பெ.)(n.) மன எரிச்சல், அமைதி கொள்ள முடியாமை; irritational mood.

மறுவ:அச்சலாத்தி.
*[அச்சலாத்தி–இச்சலாத்தி]*

**இசுவல்** *isuval,* (பெ.) (n.) இடையூறு தொல்லை; hinderance. "இசுவல் இல்லாமல் இருக்க வேண்டும்"

மறுவ. இடுக்காட்டம்.
*[இழுவல்+இசுவல்]*

**இசைமணி** *isaimaṇi,* (பெ.) (n.) தாளத்திற்குப் பயன்படும் சிறு சதங்கைகள்; small silver bells for steps in dance.

*[இசை+மணி]*



**இசைமை** *isaimai,* (பெ.) (n.) தொழில் முறைபாணி; professional method.

*[இசை+மை]*

**இசைவேளாளர்** *isaivēlāḷar,* (பெ.) (n.) கோயில் மேளக்குழுவில் தவில் வாசிக்கும் இசைக்கலைஞர்; drummers in temple.

*[இசை+வேளாளர்]*

**இட்டகவேலி** *iṭṭagavēli,* (பெ.) (n.) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk. (இ.வ.)

*[இட்டகம்+வேலி]*

**இட்டிகைப்படை** *iṭṭigai-p-paḍai,* பெ. (n.) செங்கல் கட்டடம்; house built by bricks. *"இத்தேவர்க்கு முன்னிட்டிகைப் படையாலுள்ள ஸ்ரீகோயிலை"* (SII, xix, p.292.)

*[இட்டிகை+(படு)படை]*

**இடங்கன்சாலை** *iḍangansālai,*(பெ.) (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk. (இ.வ.)

*[இடங்கன்+சாலை]*

**இடம்பாடிகள்** *iḍampāḍigal,*(பெ.) (n.) வில்லுப்பாட்டு பாடுவோரில் ஒரு பிரிவினர்;a sect of singers of bow song.

*[இடம்+பாடி]*

**இடமுறை** *iḍamuṟai,* (பெ.) (n.) வட்டப் பாலையில் ஏழுபாலைகள் பிறக்கின்ற முறை; a feature in musical note.

*[இடம்+முறை]*

**இடிவிலகி** *iḍivilagi,* (பெ.) (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk. (இ.வ.)

*[இடி+விலகி]*

**இடுக்கை** *iḍukkai,*(பெ.) (n.) உடுக்கையின் பண்டைய பெயர்; (12:16); a name of 'udukkai'

**இடுகட்டி** *idukkatti,*(பெ.) (n.) குறவன் குறத்தியாட்டத்தில் பயன்படுத்தப்படும் ஓர் இசைக்கருவி; a musical instrument, used in kuravan kurattiyattam.

*[இடு+(கொட்டி) கட்டி]*

**இடுகுபறை** *iduguparai,* (பெ.) (n.) ஒருவகையான பறை; a kind of drum.

*[இடுகு+பறை]*

**இனவன்** *inavan,* பெ. (n.) தன் இனத்தான்; man of same group. இவன் எங்கள்இனவன் (இ.வ.)

*[இனம்+அவன்]*

**இடைச்செறி** *idaicceri,* (பெ.) (n.) ஒரு வகையான கையணி; a kind of hand ornament.

*[இடை+செறி]*




**இடைசுருங்கிப்பறை** *idaisurungipparai,* (பெ.) (n.) திமிலையின் வேறொருபெயர்; an another name of Timilai.

*[இடை+சுருங்கி+பறை]*

**இடைத்தரகர்** *idai-t-taragar,* (பெ.) (n.) பெரும்பாலும் வணிகவொப்பந்தம் போன்ற பெரும் பேரத்தை முடித்து வைப்பவர்;middle man.

*[இடை+தரகர்]*

**இடைநாழிகை** *idainaligai,* பெ. (n.) சிற்பக் கலையில் அர்த்த மண்டபச் சுவரைக் குறிக்குஞ் சொல்; a name for the wall of ardhamandapa in architecture.

*[இடை+நாழிகை]*

**இடைபனுவலியர்** *idaippanuvaliyar,* பெ. (n.) வாய்மொழி இலக்கியத்தில், தாமே புதிய புதிய அடிகளைக் கோப்பவர்; introduction in a oral song.

*[இடை+பனுவல்+இயர்]*

**இடைபெருத்தபறை** *idaipperuttaparai,* பெ. (n.) பறை வகையினுள் ஒன்று; a kind of drum.

*[இடை+பருத்த+பறை]*

**இண்டாவி** *indāvi,* பெ. (n.) திறன், ஆற்றல்; energy to do work. "அங்கே போய்ச் சேர்வதற்குள் நம்ம இண்டாவி அற்றுப் போய்விடும் போலுள்ளதே" (இ.வ.)

*[ஈண்டு+ஆவி]*

**இண்டை** *indāi,* பெ. (n.) சிவனின் சிற்பத்தில் காணப்பெறும் மாலை வகை; (5 : 74) a flower decoration in sculpture of siva.

*[இண்டு–இண்டை].*

**இணை** *inai,*பெ. (n.) ஏழிசைத் தொகுதியில் இரண்டாமிசையையும், ஏழாமிசையையும் குறிக்குஞ்சொல்; a name of musical note.

*[இள்–இண்–இணை]*

**இணைப்பறடு** *ināipparadu,*பெ. (n.) சமமான நகங்களைக் கொண்டதாகக் கால்களை வைத்து கைகளைக் கொடிபோலத் தொங்குவிட்டு உடலை இயல்பாக வைத்தாடல்; a dance pose.

*[இணை +பறடு]*

**இணைமுகப்பறை** *iṇaimugappaṟai,* பெ. (n.) இரண்டு பக்கமும் ஓசையெழுப்பும் முழவுகளின் பொதுப் பெயர்; double side drum.

*[இணை+முகம்+பறை]*



**இணைவிழைச்சுத்தன்மை** *iṇaiviḷaccuttaṉmai,* பெ. (n.) நாட்டுபுறக் காதற் பாடல்களில் உள்ள ஒரு கூறு; a feature in folk dance.

*[இணைவிழைச்சு+தன்மை]*

**இணைவிழைச்சுப்பொருண்மை** *iṇai viḷaiccupporuṇmai,* பெ. (n.) நாட்டுப் புறக் காதல் பாடல்களில் உள்ள ஒரு கூறு; theme of love in folk dance.

*[இணை+விழைச்சு+பொருண்மை]*

**இதம்பாடல்** *idampāḍal,* (பெ.) (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukalattur Taluk. (இ.வ.)

*[இதை–இதம் + பாடல்].*

**இதழ்முனை** *itaḻmuṉai,* (பெ.) (n.) சிற்பச் சிறப்பையுணர்த்த இசைத்தூண்களின் உச்சியில் அமைக்கப்பெறும் முனை; top decordation in pillars of temple.

*[இதழ்+முனை]*

**இந்தளம்** *inḍaḷam,* (பெ.) (n.) பகற்பொழுதுக் குரிய பண்வகை; music for day time.

*[ஒருகா. இன்+தாளம்]*

**இந்திரகாளியம்** *indirakāḷiyam,* (பெ.) (n.) இசைநூல்களில் ஒன்று; a treatise of music. (1:16).

*[இந்திரகாளியன்–இந்திரகாளியம்]*

**இந்திரம்** *iraṅtiram,* பெ. (n.) தாள முழக்கில் நேரும் தவறான இடைவெளி; a fallacy in time measure.

*[இல்* (துளை, பிசகு, விடுபாடு) *+து–இந்து–இந்திரம்]*

**இந்திரமடி** *indiramaḍi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[இந்திரம்+மடி(வயல்)]*

**இந்திரவிழாப்பாடல்கள்** *indiraviḷāppāḍalgaḷ,* பெ. (n.) கொங்கு நாட்டில் பாடப்பெறும் உழத்தியரின்பள்ளுப்பாடல்களின் இன்னொரு வடிவம்; an another form of palluppāḍal in 'koṅgu Nāḍū'.

*[இந்திரவிழா+பாடல்கள்]*

**இப்பரி** *ippari,* பெ. (n.) இந்த வகை; this kind. *"உலகுக்குச் சந்திரனும் உள்ளளவும் அஞ்சு வண்ணம் ஸந்ததி பிர்ருதி ஸ்ரீ இப்பரி அறிவென."*

*[இ+பரிசு]*

**இம்மாகுளம்** *immākuḷam,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[ஒருகா. இம்மான்+குளம்]*

**இமிலை** *imilai,* பெ. (n.) ஓர் இசைக்கருவி; a kind of music instrument.

*[இம்–(இமிழ்)இமிலை]*

**இயக்கு** *iyakku,* பெ. (n.) "மண்டிலம்" என்பதைக் குறிக்கும் வேறு பெயர்; an another name of mandilam.

*[இய–இயக்கு]*

**இயங்கன்** *iyangan,* பெ. (n.) அனைத்து வகை ஆட்டத்திற்கும் அடிப்படை நிலையாக அமைவது; common base for all games.

*[இயங்கு–இயங்கன்]*

**இயம்** *iyam,* பெ. (n.) பழம் பெரும் இசைக்கருவி; an ancient music instrument.

*[இய–இயம்]*

**இயவு**[1] *iyavu,* பெ. (n.) இசைக் கருவியின் வேறு பெயர்;a name of music instrument. 2.தாளத்தின் செலவு; step measure.

*[இய–இயவு]*

**இரக்காபோகம்** *irakkābōgam,* பெ. (n.) காவலுக்காகச் செலுத்தும் வரி; *"இரக்கா போகம் ஆட்டு கற்கடக ஞாயிற்று மகத்தினான்"* (TAS, iii, p. 159-69). a kind of tax for watching.

*[இரா+காவல்+போகம்]*

**இரங்கிசை முரசம்** *irangisaimurasam,* பெ. (n.) இரக்கத்தையுணர்த்தும் வண்ணம் கொட்டப்படும் முரசம்;a drum sound of lamentation.

*[இரங்கு+ இசை + முரசம்]*

**இரட்டல்** *iraṭṭal,* பெ. (n.) இசைமாறி ஒலித்தல்; anti note.

*[இரட்டு–இரட்டல்]*

**இரட்டி** *iraṭṭi,* பெ. (n.) ஒரு தாளக்கூறு இரண்டாகப் பெருகுதல்; a step measure.

*[இரட்டு–இரட்டி]*

**இரட்டித்தொத்தல்** *iraṭṭi-t-to-ttal,* பெ. (n.) ஒரெண்ணிக்கைக்கு இரு தட்டுகள் தட்டித் தாளம் போடுதல்; two claps for one unit.

*[இரட்டித்து+ஒத்துதல்]*

**இரட்டைக்கை** *iraṭṭi-k-kai,* பெ. (n.) அடியார்க்கு நல்லார் கூறாத இரட்டைக் கைவகை; double hand pose.

**இரட்டைச்சுரப்பிறழ்ச்சிப்பண்** *iraṭṭai-c-curappralcicippan,* பெ. (n.) ஒரு வகையான பிறழ்ச்சிப்பண்; varying musical note.

*[இரட்டை+சுரம்+பிறழ்ச்சி+பண்]*

**இரட்டைவால்கட்டுதல்** *iraṭṭai-vālkaṭṭu-,* பெ. (n.) புலி ஒப்பனையில் குறிப்பிடத்தக்க ஒரு கூறு; a fashion made in tiger dance.

*[இரட்டு+இரட்டை+ வால்–ஒப்பனை]*

**இரண்டுகளை** *iranḍukaḷai,* பெ. (n.) களை வகையினுள் ஒன்றான ஒரெண்ணிக்கைக்குள் எட்டுக் குறில்கள் அடைந்து ஒலிக்கும் நேரம்.; a time duration of eight short vowels. 'தகதின தகதின'

*[இரண்டு+களை]*

**இரண்டொத்துடைத்தாளம்** *irandottuḍaittāḷām,* பெ. (n.) இரண்டு தட்டுதல்களை ஒரு தொகுதியாகக் கொண்ட தாளம்; a time mesure of double clapp.

*[இரண்டு+ஒத்து+தாளம்]*

**இரவசேரி** *iravasēri,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.)

*[இரவு+சேரி]*

**இரவு** *iravu,* (பெ.) (n.) இரவல்;hand loan. *'இரவு கொடுத்த நாச்சியா, இருந்து அழ விடமாட்டா?'* (பழ.)

*[இர–இரவு]*

**இரவை** *iravai,* (பெ.) (n.) இராப்போது; night. *"இரவைக்கும் குறுணியும்"* (Sii, iii 51-)

*[இரவு–இரவை]*

**இரனியூர்** *iranīyūr*, பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[இரணியல்+ஊர்]*

**இராக்காட்டி** *irākkāṭṭi*, (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.)

*[இரவு+காட்டி]*

**இராகபுடமுறை** *irāgapuḍamuṟai*, (பெ.) (n.) இசைப்பாடல்களை (கீர்த்தனங்களை) எழுதுவதற்காக அடிப்படையான முறையாக ஆபிரகாம் பண்டிதரால் அறிமுகப்படுத்தப்பட்ட முறை; a method adapted for music.

*[இராகம்+புடம்+முறை]*

**இராசதாசிகள்** *irāsatāsigaḷ*, (பெ.) (n.) தூய கொடிக்கம்பத்தின் முன் பரதம் ஆடுபவர்கள்; dancers in front of flag post.

*[இராச+தாசிகள்]*

**இராசி** *irāsi*, (பெ.) (n.) நாணய வகை; a kind of coin. "ஆண்டு ஒன்றுக்கு வாடாக் கடமையாக இராசி இருபத்து அஞ்சு பணம் கடமை கொள்ளவும்" (IPS, 424)

*[இராசன்+இராசி]*

**இராமகிருட்டிண நாயுடு** *irāmakiriṭṭiṉa nāyudu*, (பெ.) (n.) பொய்க்கால் குதிரை யாட்டத்தை முதன் முதலில் கண்டு பிடித்தவர்; one who introduced poykkāl dance.

*[இராமகிருட்டிண+நாயுடு]*

**இராமாயணச்சேவைப்பாட்டு** *irāmāyaṇaccēvaippāṭu*, (பெ.) (n.) சேவைப் பாடல்களிற் ஒரு வகை; folk song.

*[இராமாயணம் + சேவை + பாட்டு]*

**இராயபுரம்கும்மி** *irāyapuramkummi*, (பெ.) (n.) ஒருவகையான கடைக்கால் கும்மிப்பாடல்; a kind of kummi.

*[இராயபுரம்+கும்மி]*

**இருகுபிலா** *irugupilā*, (பெ.) (n.) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk. (இ.வ.)

*[ஒருகா. இருங்கு+பலா]*

**இருங்கல்** *iruṅgal*, (பெ.) (n.) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arkkonam Taluk. (இ.வ.)

*[இரும் +கல்]*

**இருசு** *irusu*, (பெ.) (n.) தேர்ப்பாகத்தில் ஒன்று; a part of temple car.

*[இரு–இருசு]*

**இருட்டடிப்பு** *iruṭṭaḍippu*, பெ. (n.) ஒரு செய்தி அல்லது நிகழ்ச்சி வெளியே தெரியாதவாறு அல்லது பரவாதவாறு மறைத்தல்; black out.

*[இருட்டு + அடிப்பு]*

**இருள்தூங்குவறுவாய்** *iruḷtūṅguvaṟuvāy*, (பெ.) (n.) யாழின் பத்தரின் உட்பகுதி; a part in the *hārp*.

*[இருள்+தூங்கு+வறுவாய்]*

**இருதல்வாரிபட்டா** *irudalvāripaṭṭā*, (பெ.) (n.) திருத்தணி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruthani Taluk. (இ.வ.)

*[இரு+தலை + வரி + பட்டா]*

**இருப்புப்பதிவேடு** *iruppu-p-padivēḍu*, பெ. (n.) கையிருப்பிலுள்ள பொருள்களின் பதிவேடு; stock register.

*[இருப்பு + பதிவு + ஏடு]*

**இருப்புளி** *iruppuḷi*, (பெ.) (n.) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk. (இ.வ.).

*[இரும்+புளி]*

**இரும்பிலி** *irumbili,* (பெ.) (n.) 1. கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk. (இ.வ.). 2.செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chengelput Taluk. (இ.வ.). 3.செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk. (இ.வ.).

*[இரும்+புளி]*

**இரும்பை** *irumbai,* (பெ.) (n.)1. திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk. (இ.வ.). 2.விழுப்புரம் மாவட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram District.

*[இரும்+புளி–இரும்புளி–இரும்பை]*

**இருமதி** *irumadi,* பெ. (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk.

*[இரு+மதி]*

**இருமேனி** *irumēni,* (பெ.) (n.) இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanathapuram District.

*[இரு+மேனி]*

**இருவணிவயல்** *iruvaṇivayal,* பெ. (n.) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruppattur Taluk.

*[இரு+அணி+வயல்]*

**இருள்நீக்கி** *irulnīkki,* பெ. (n.) மன்னார்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in MannārgudiTaluk.

*[இருள்+நீக்கி]*

**இரையூர்** *iraiyūr,* (பெ.) (n.) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk. (இ.வ.).

*[ஒருகா. இறை–இரை+ஊர்]*

**இல்லத்தரசி** *illattarasi,* பெ. (n.) 1. மனைவி; wife. 2. குடும்பத்தலைவி; house wife.

*[இல்லம் + அத்து + அரசி]*

*அத்து – சாரியையாக வரும் இணைப்பு இடைச்சொல்.*

**இல்லிப்பூடு** *illi-p-p-ūḍu,* (பெ.) (n.) செஞ்சிகை பூண்டு; a kind of herb. “அருகு இல்லிப்பூடும் இராவணன் மோவாழும் எழுந்து மணல் குன்றாம் நிலமும்”(SII,v,990).

*[இல்லி+பூண்டு]*

**இல்லோடு** *ilōḍu,* பெ. (n.) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk. (இ.வ.).

*[இல்+ஓடு]*

**இலக்கணிவயல்** *ilakkaṇivayal,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.).

*[இலக்கு+அணி+வயல்]*

**இலஞ்சனி** *ilanjaṇi,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.).

*[இலஞ்சி+அணி]*

**இலத்தாளம்** *ilattāḷam,* (பெ.) (n.) ஒரு வகையான சேரநாட்டு (கேரள) இசைக் கருவி; (1:53 ) a kind of music instrument in Keraḷā

*[இலை+தாளம்]*

**இலந்தையடி** *ilandayaḍi,* (பெ.) (n.) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk. (இ.வ.).

*[இலந்தை+அடி]*

**இலம்பகூர் ஆசனம்** *ilambakūrāsanam,* (பெ.) (n.) நான்முகனின் சிற்பம் அமைந்து உள்ள இருக்கை நிலை; a yogic posture of Bramma in architecture.

**இலுப்பகுணம்** *illuppakuṇam,* (பெ.) (n.) போளூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Polur Taluk. (இ.வ.)

*[ஒருகா.இலுப்பை+குளம்]*

**இலேகனி** *ilēkaṉi,*(பெ.)(n.) தூரிகையைப்பற்றிக் குறிப்பிடுகின்ற சிறப்பு நூல்; (5 : 15). a special type of brush.

*[இலக்கு+நூல்]*

**இலைவாங்கி** *ilaivāṅgi,* பெ. (n.) இலை தைக்கும் ஊசி; needle meant for knitting leaves.

*[இலை+வாங்கி]*

**இளமங்கை** *iḷamaṅgai,* பெ. (n.); இளம் பெண்; young lady.

*[இளம் + மங்கை]*

**இருண்டகாலம்** *iruṇḍakālam,* பெ. (n.) வரலாறுகளில் தெளிவு கிடைக்காத காலம்; a dark period in history.

*[இருள் – இருண்ட + காலம்]*

**இறையாண்மை** *iṟai-y-āṇmai,* பெ. (n.) ஆட்சி; reign.

*[இறை (அரசன்) + ஆண்மை]*

**இழவைத் தெம்மாங்கு** *ḻavai-t-temmāṅgu,* (பெ.) (n.) தொகையறாத த்ன்மையில் இழைந்து இசைத்துப் பாடும் தெம்மாங்குப் பாடல்; (57 : 22); a type of temmangu song.

மறுவ. நெட்டுத்தெம்மாங்கு

*[இழைவை+தெம்மாங்கு]*

**இள்ளிமுள்ளி** *iḷḷiuḷḷi,* (பெ.) (n.) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramagudi Taluk. (இ.வ.).

*[இள்ளி+முள்ளி]*

**இளமணி** *iḷamaṇi,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk. (இ.வ.).

*[இள+மணி]*

**இளமதியம்** *iḷamadhiyam,* (பெ.) (n.) முற்பகல்நேரம்;forenoon.

*[இள+மதியம்]*

**இளிச்சாக்கொம்பு** *iḷiccā-k-kombu,* (பெ.) (n.) மாட்டுக் கொம்பின் ஒரு வகையமைப்பு; a kind of horn in cow.

*[இளிச்சா+கொம்பு]*

**இளைப்பாறுதல்** *iḷai-p-pāṟu-,* (பெ.) (n.) பச்சைக்காளி பவளக்காளி அம்மன்கள் அருள் வழங்கியபின் நடைபெறும் சடங்கு; a ceremany in the village temple.

*[இளைப்பு+ஆறுதல்]*

**இளையானை** *iḷaiyaṉai,* (பெ.) (n.) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk. (இ.வ.)

*[ஒருகா. இளையன்+ஐ]*

**இழைபுவண்ணம்** *iḻaibuvaṇṇam,* (பெ.) (n.) ஒரு சந்தப் பாடல்; a rhythamic song.

*[இழைபு+வண்ணம்]*

**இறந்தகதை** *irandakadai,* (பெ.) (n.) கதையாடலில் ஒரு பிரிவு; a section in folk lore of lamentation.

*[இறந்த+கதை]*

**இறந்துபட்ட வாதைகள்** *irandupaṭṭavādagaḷ,* (பெ.) (n.) வில்லுப்பாட்டில் இறப்புப்பற்றிய கதையாடல்களுக்குரியவர்; one who narrates the lamentation feature in villuppāṭṭu.

[இறந்துபட்ட+வாதைகள்]

**இறுக்கான்** *iṟukkāṉ,* (பெ.) (n.) பயிரில் கதிர் வெளியே தள்ளமுடியாமல் நின்றுவிடும் ஒருநோய்; a kind of disease in crops.

[இறுக்கு+ஆன்]

**இறுதிஊர்வலம்** *iṟudiūrvalam,* பெ. (n.) சவவுடம்பை இடுகாட்டிற்குத் தக்க மரியாதையுடன் ஊர்வலமாக எடுத்துச் செல்லுதல்; funeral procession.

[இறுதி + ஊர்வலம்]

**இறுதிச்சடங்கு** *iṟudi-c-caḍaṅgu,* பெ. (n.) இறந்தாரை நல்லடக்கம் செய்யும் வரை தொன்றுதொட்டு பின்பற்றப்படும் முறைமை கள்; funeral rites.

[இறுதி + சடங்கு]

**இறுமான்** *iṟumāṉ,* (பெ.) (n.) பெருச்சாளியில் ஒருவகை; a kind of Bandikoot.

[இறுக்கு+ஆன்]

**இறுவாய் திறந்தகுழல்** *iṟuvāytirandakuḻal,* (பெ.) (n.) குழல் வகையினுள் ஒன்று; a kind of flute.

[இறு+வாய் + திறந்த + குழல்]



**இனக்கனேரி** *iṉakaṉēri,* (பெ.) (n.) ஊர்ப் பெயர்; name of a village.

[இணக்கன் – இனக்கன் + ஏரி]

**இனவன்** *iṉavaṉ,* பெ. (n.) தன் இனத்தான்; man of same group.

[இணம் + அவன்]

# ஈ

**ஈக்கி** *īkki,* (பெ.) (n.) தட்டையில் உரித்த அல்லது உரிந்த தோலின் பகுதி; a peeling.

[ஈக்கு–ஈக்கி]

**ஈகரை** *īgarai,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.).

[இடி+கரை]

**ஈச்சங்காரணை** *iccaṅkāraṇai,* (பெ.) (n.) செங்கற்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chengelput Taluk. (இ.வ.)

[ஈச்சம்+காரணை]

**ஈசனி** *isaṉi,* (பெ.) (n.) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvādānai Taluk. (இ.வ.)

[ஒருகா. ஈயல்–ஈசனி]

**ஈசத்துவம்** *īsattuvam,* (பெ.) (n.) அட்டமாசித்திகளின் சிற்பம்; sculptures of eight achievements.

[ஈச்சம்+காரணை]

**ஈசானம்** *īsāṉam,* (பெ.) (n.) சிவனின் சிற்ப வடிவில் உச்சி நோக்கிய முகம்; up ward face in sculpture.

[ஈசன்–ஈசானியம்]

**ஈசானமுகம்** *īsāṉamugam,* (பெ.) (n.) விசுவப் பிரம்மனின் சிற்பத்திலுள்ள முக வகை; face type of viswa Brahma in sculpture.

*[ஈசானம்+முகம்]*

**ஈசுதல்** *īsu-,* செ.கு.வி. (v.i.) உரசிக் கொண்டுசெல்லுதல்; to go slightly dashing.

*[ஈசு–ஈசுதல்]*

**ஈசுவக்கன்** *īsuvakkaṉ,* பெ. (n.) அணிகலன் களை வடிவமைக்கும் சிற்பியர்; sculptors who design ornament in sculpture.

*[இசைவுகன்–ஈசுவக்கன்]*



**ஈத்தை** *īttai,* பெ. (n.) முதிராத கதிர்; tender crop. *'கதிர் ஈத்தையாப் போயிற்று'*

*[ஈன்–ஈத்தை]*

**ஈமத்தாழி** *īma-t-tāḻi,* பெ.(n.) உடலை எரித்த சாம்பல், எலும்பு முதலியனவடங்கிய பானை; an earthen vessel containing the bones and ashes of the dead.

***மறுவ : ஈமப்பானை***

*[ஈமம் + பானை]*

**ஈமப்பார்ப்பான்** *īma-p-pārppāṉ,* பெ. (n.) சவத்தை எரியூட்டும் சடங்கினை நடத்து விக்கும் பார்ப்பனன்; brahmin who conducts the funeral rights of the dead cremated.

*[ஈமம் + பார்ப்பான்]*

**ஈயாப்பொத்தி** *īyāppotti,* பெ. (n.) எதையும் எவருக்கும் ஈயாத இவறன்(கருமி); miser.

*[ஈயான்+ பொத்தி]*

**ஈரடிமேல்வைப்பு** *īrādimēlvaippui,* பெ. (n.) பாடலுக்குரிய ஈரடிகளுக்கு மேல் ஒன்று அல்லது ஈரடிகளை வைப்பது; adding additional lines to a poem.

*[ஈர்+அடி+மேல்+வைப்பு]*

**ஈரநிலம்** *īranilam,* பெ. (n.) பாடலைப் பாடும் வகையினுள் ஒன்று;a method of singing.

*[ஈரம்+நிலம்]*

**ஈருசு** *īrusu,* பெ. (n.) மானம்; self respect. *'கொஞ்சமாவது ஈருசு வேண்டாமா?' (இ.வ.)*

*[ஈர்–ஈருத்து–ஈருசு]*

**ஈருசுரி** *īrusuri,* பெ. (n.) பிள்ளைத் தாய்ச்சி; pregnant woman. *நீ ஈருசுரி, மெதுவாக நடக்க வேண்டும். (கொங்.வ.)*

*[இரு–ஈர்+(உயிரி) உசிரி]*

**ஈரெட்டு** *īreṭṭu,* பெ. (n.) உறுதியில்லாத; உறுதியின்மை; uncertainity.

*[இரு →இரட்டு – ஈரெட்டு (இருவகை) → ஈரெட்டு.]*

**ஈரோப்பி** *īrōppi,* பெ. (n.) உயரம், ஈடு, எடுப்பு மிகு தோற்றம் கொண்டவன்; a tall and sturdy person like European.

*[Europe - ஈரோப்பி.]*

# உ

**உலகவாழ்க்கை** *ulagavāḷkkai,* பெ. (n.) உலகில் வாழும் வாழ்வு; mundane existence.

*[உலகம் + வாழ்க்கை]*

**உகரக்கிளவி** *ugara-r-kiḷavi,* பெ. (n.) 'உ' எனும் எழுத்து; the vowel 'u'

*[உகரம் + கிளவி]*

**உங்கன்** *ungaṉ,* பெ.(n.) ஆண்பாற்பெயர் ;name of a male person.

*ம. உங்கன். தெ. உங்கிம்ப்பு, (உங்குவழு–பரிசு, காணிக்கை)*

*[உங்கு–பெருமிதம், எழுச்சி, உங்கு–உங்கன்]*

**உங்கு** *ungu,* பெ. (n.) சங்கில் விட்டு ஊற்றப்படும் பால்;milk in conch. *"உங்கு சாப்பிடு கண்ணா; உங்கு."*

*[இங்கா – உங்கா – உங்கு]*

**உச்சநீதிமன்றம்** *uccanīdimaṉṟam,* பெ. (n.) நாடு முழுமைக்குமான தலைமை நீதிமன்றம்; supreme court.

*[உச்சம் + நீதி + மன்றம்]*

**உச்சகாரம்** *uccagāram,* பெ. (n.) 'சு' எனும் எழுத்து; the letter 'cu'

*[உ + ச – சு]*

**உச்சாடம்** *uccāḍam,* பெ. (n.) கடுஞ்சினம் பொங்கும் மனநிலை; furious mentality. *அவன் உச்சாடமாக இருக்கிறான். பேச்சு கொடுக்காதே.(மீனவ.)*

*[உச்சி–உச்சாளம்–உச்சாடம்]*

**உச்சிச்செலுந்தில்** *ucci-c-celundil,* பெ. (n.) ஒருவகை மரம்; a kind of tree.

*[உச்சல் + இலந்தை]*

**உச்சிமலை** *uccimalai,* பெ. (n.) விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள ஓர் ஊர். name of the village in viluppuram.

*[உச்சி + மலை]*

**உச்சுவா** *uccuvā,* பெ. (n.) விடுமுறை; holiday. *'நாளைக்கு நமக்கு உச்சுவாவா?'*

*[ஒருகா. உற்சவ + உவா]*

**உஞ்சை மாகாளம்** *unjaimākāḷam,* பெ. (n.) உச்சயினி நகரிலுள்ள சிவன் கோயில்; siva temple at ujjaini (M.P.).

*[உஞ்சை(துரிஞ்சில்மரம்)+மாகாளம்–மாகாளனாகிய சிவன் கோயில்)*

மாகாளம்–மாகாணம் எனத் திரிந்து கோயிலைக் குறிப்பது உண்டு.

**உட்பாய்தல்** *uṭpāydal,* பெ. (n.) உட்புகுதல்; influx.

*[உள்+பாய்தல். பாய்+தல்→பாய்தல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**உடம்பழிவு** *uḍampaḻivu,* பெ.(n.) உடல் நலிவு; ill health.

*[உடம்பு+அழிவு]*

**உடம்பு இறங்கு–தல்** *udambu iṟaṅgu-,* செ.கு.வி. (v.t.) கருக்கலைதல்; abortion. அவளுக்கு நான்காம் மாதத்திலேயே உடம்பு இறங்கி விட்டது. (இ.வ.)

*[உடம்பு+இறங்குதல்]*

**உடல்நூல்** *uḍalnūl,* பெ. (n.) உயிரினங்கள் இயங்கும் முறை, இயற்கையான செயற்பாடு ஆகியன குறித்த அறிவியல் முறையான ஆய்வு; physiology.

*மறுவ உடலிங்கியல்.*

*[உடல்+நூல்]*

**உடல்வெக்கை** *udalvekkai*,பெ.(n.) மாட்டிற்கு வெயில் காலத்தில் வரும் நோய்; a disease of cow.

*[உடல்+வெகிர்]*

**உடல் இயங்கியல்** *udaliyaṅgiyal*, பெ. (n.) உயிர்ப்பொருள்களில் இயங்குமுறை அல்லது இயற்கையான செயற்பாடுகளைக் குறித்த அறிவியல்; physiology.

*[உடல்+இயங்கியல்]*

**உடற்கல்வி** *udar-kalvi*,பெ.(n.) பலவகைப் பயிற்சி மூலம் அளிக்கும் உடல்வளத்திற்கான கல்வி; physical education.

*[உடல்+கல்வி]*

**உடற்பயிற்சி** *udar-payircci*,பெ.(n.) உடம்பை வளமாகவும் வலிமையாகவும் வைத்துக் கொள்வதற்காக மேற்கொள்ளும் உடல் இயக்கும் செயல்கள்; physical exercise.

*[உடல்+பயிற்சி]*



**உடற்குறி** *udar-kuri*, பெ. (n.) உடலுறுப்புகளால் காட்டும் அடையாளம்; bodily sign, mark.

*[உடல்+குறி]*

**உடன்பங்காளி** *udanpaṅgāli*, பெ. (n.) தந்தை வழிவந்த ஆண் உறவினர்;relative by father's side. *'நெருங்கிய பங்காளி'*

*[உடன்+பங்கு+ஆளி]*

**உடுமலைப்பேட்டை** *udumalai-p-pāttai*,பெ.(n.) திருப்பூர் மாவட்டத்தில் உள்ள நகரம்; a town in Tiruppur district.

*[உடு+மலை+பேட்டை]*

*உடு–உடும்பு. உடும்பு மிகுதியாக இருந்த மலை உடுமலை.*

**உடுமீன்** *udumin*, பெ.(n.) ஐங்கோண வடிவத்திலுள்ள கடல் மீன்வகை (நட்சத்திரமீன்); starfish.

*[உடு(விண்மீன்)+மீன்]*



**உடைப்பெயர்** *udai-p-payar*, பெ. (n.) உயர்திணைப் பெயர்களில் உடைமை கரணியம் பெற்று வைக்கப்பட்டுள்ள பெயர்; put up name, that name about any of his belonging.

குட்டுவன்– குட்டநாட்டுத் தலைவன்.
*[உடை+பெயர்]*

**உண்ணாடகம்** *unnādagam*,பெ.(n.) நாடகத்துள்ளேயே நடக்கும் துணை நாடகம்; a plat within a play.

*[உள்+நாடகம்]*

**உண்ணீர்மை** *uṇṇīrmai*,பெ.(n.)மனத் தூய்மை; purity of mind. *"தருமமே சார்பாக உள்நீர்மை வீறும் உயர்ந்து"* *(ஔ.நல்:32).*

*[உள்+நீர்மை]*

**உணர்ந்தறி-தல்** *uṇarndaṟi-*, செ.குன்றாவி. (v.t.) ஒன்றை முழுமையாகப் புரிந்து கொள்ளுதல்; to comprehend, to understrand completely.

*[உணர்ந்து+அறி-,]*

**உத்தமவுறுப்பு** *uttama-vu-ṟuppu*, பெ.(n.) தலை; head.

*[உத்தம(ம்)+உறுப்பு]*

**உத்தமாங்கம்** *uttamāṅgam*, பெ. (n.) உத்தமவுறுப்பு பார்க்க; see *uttama-vuṟuppu*. *"புத்தன் உத்தமாங்கம்உருண்டு வீழ்க எனப்பெறா உரைமுன்விட்டார்"* *(பெரியபு.2811).*

*[உத்தம(ம்)+அங்கம்]*

**உத்தர குரு** *uttaraguru*,பெ.(n.)இன்பநுகர்ச்சி இடங்கள் (போக பூமி) ஆறனுள் ஒன்று; one of the blissful regions where the fruits of good karma are enjoyed six in number. *"அத்தரு திருவின் அருந்தவம் முடிந்தோர் உத்தர குருவின் ஒப்பத்தோன்றிய"* *(சிலப்.2::9:10)*

*[உத்தர(ம்)+குரு]*

**உத்தரகுருவம்** *uttara kuruvam*, பெ. (n.) அருந்தவம் கொடுக்கும் "சுருங்காச் செல்வத்து உத்தர குருவம் ஒத்த அம்மை" (பெருங். இலாவண. 7, 141) உத்தரகுரு பார்க்க; see uttarakuru. *"உத்தர குருவமொத்த சும்மை"*(பெருங். இலாவண. 7, 141)

*[உத்தரம்+குருவம்]*

**உத்தரப்பலகை** *uttara-p-palagai*, பெ.(n.) தூணின் மீது வைக்கும் பலகை; the plank fixed on a pillar. *"உத்தரம் பலகையோடு அரங்கின் பலகை வைத்த இடைநிலம்."* *(சிலப்:3:103:4).*

*[உத்தரம்+பலகை]*

**உத்தரவேதி** *uttaravēdi*,பெ.(n.)வேள்வித் தீயுள்ள இடம்; altar of sacrifice fire. *"உத்தர வேதியில் நின்ற ஒருவனை". (பெரியபு.1:9:6).*

*[உத்தர(ம்)+வேதி]*



**உத்தராபதம்** *uttārāpadam*, பெ. (n.) வடநாடு; North India. *"உத்தராபதத்தும் ஒப்புமை இல்லாப் பத்திராபதி"* *(பெருங். 38 : 289-9).*

*[உத்தர(ம்)+பதம்-உத்தராபதம்→உத்தரபதம்]*

**உத்தரன்** *uttaraṉ*, பெ. (n.) தாங்கும் திறனுடையவன்; one who bears anything.

*[உத்து+உத்தரன்]*

**உத்தராயணம்** *uttarāyaṇam*, பெ. (n.) வடக்கு முகமாகச் செல்லும் சுறவம் (தை) முதல் ஆறுமாத காலம்; a period of fix months from January.

*[உத்தர(ம்)+அயணம்]*

**உத்தரி** *uttari*, பெ. (n.) குதிரை; horse. *"வயங்கு கொய்யுளை யுத்தரிச்சலதியும்" (இரகு. திக்குவி.133).*

*[உத்து-உத்தரி]*

**உத்தரியம்** *uttāriyam*, பெ.(n.) மேலாடை; cloth worn loosely over the shoulders, upper garment. *"அறுவை யுத்தரியந் தனி விசும்பிலெறிந்தார்க்குந் தன்மையாலே"* *(பெரியபு. திருஞான.95).*

*[உத்தரி→உத்தரியம்]*

**உத்திசை** *uttisai*,பெ.(n.)அப்பக்கம்.(அப்புறமான இடம்); the other side. "உத்திசை விஞ்சை மாதர் உறையுளை முறையின் உற்றான்".
*[உ+திசை]*

**உத்திட்டம்** *uttittam*,பெ.(n.)வண்ணக் குழிப்புகளின் (சந்தங்களின்) *அறுவகைத் தெளிவுகளுள் ஒன்று;* one of six clarity note of musical flow. *"ஒப்பார் உறழ்ச்சியும் கேடும் உத்திட்டமும் ஒன்று இரண்டு என" (வீரசோ.133).*

*[உத்து+திட்டம்]*

**உத்திட்டன்** *uttittan*,பெ.(n.)நோற்றுவினை *களைவோன்;* a man who practices religious austerities to discard 'karma'. *"மனை துறந்து மாதவர் தாள் அடைந்துநோற்று வினை யறுப்பான் உத்திட்டன் ஆம்" (அருங்.172).*

*[உத்து – உத்திட்டன்]*

**உத்தூளித்தல்** *uttūli*, *செ.குன்றா.வி.*(v.t.) *நீரில் குழைக்காமல் வரியின்றிப் பூசுதல்;* to smear sacred ash etc, without mixing water. "திருநீற்றை உத்தூளித்து ஒளிமிளிரும் வெண்மையாலோ"(வாச.126).

*[உத்தம்+தூளி]*

**உதகவன்** *udakavan*,பெ.(n.)நெருப்பு; fire. *"அழல் உதாசனன் சங்கு தேயுதழல் வசு உதகவன்".*

*[ஊற்று→ஊத்து→ஊத்தகம்→உதகம்→ உதகவன்=நீரால் அழிக்கப்படுபவன்]*

**உதவாக்கரை** *udavā-k-karai*, பெ. (n.) குளம் ஏரி ஆறு ஆகியவற்றின் உறுதியில்லாததும் இடிந்து அல்லது அரிக்கப்பட்டுக் கரைந்து போவதுமான மண்கரை; நீரின் உதைப்புதாக்கும் கரைக் கட்டுமானம் இல்லாத நீர்நிலை, கரைப் பகுதி; erosive banks of river, well, tank, reservoir etc. 2.*பயன்படாதவன்;* useless fellow.

*மறுவ இடிகரை.*

*[உதவாத+கரை உதவாதகரை, (நீரின் பாதுகாப்புக்கு உதவாத கரை) ]*

**உதயஞாயிறு** *udayañāyiru*, பெ. (n.) இளங்கதிரவன்; morning sun. *"உதய ஞாயிற்றுத் திசைமுகம்நோக்கி" (பெருங்.79–130).*

*[உதய(ம்)+ஞாயிறு]*

**உதய மண்டிலம்** *udayamandilam*,பெ.(n.) கதிரவன் உலகம் (சூரிய மண்டலம்); regions of the sun. *"அற்றவன் தலை அறுமுறை எழுந்து எழுந்து அண்டத்து ஒற்ற வானகம் உதய மண்டிலம் என ஒளிர" (புக்.32–8).*

*[உதய(ம்)+மண்டிலம்]*

**உதயராசி** *udayarāsi*,பெ.(n.)வைகறை;early morning, *"உதயராசியிற் புணர்ந்தாகம் புகும் நரசியைப் புகுவன்" (அ.வெ.2.329)*

*[உதய(ம்)+ராசி]*

**உதவித்தொகை** *udavi-t-togai*, பெ. (n.) ஒருவர் கல்வி கற்பதற்கு உதவும் வகையில் அளிக்கும் தொகை; scholarship.

*[உதவி + தொகை]*

**உதைப்பு** *udaippu*, பெ. (n.) குறைதல்; dificiency. *'கணக்கில் ஆயிரம் ரூபாய் உதைப்பு ஏற்படுகிறது.' (உ.வ.)*

*[உதை–உதைப்பு]*

**உப்பகாரம்** *uppagāram*, பெ. (n.) உகரம் சேர்ந்த பகரம், 'பு' எனும் எழுத்து; to letter `pu'

*[உ + பகாரம் – (ப் + உ – பு)]*

**உப்பல்** *uppal*,பெ.(n.)பொறாமை, அழுக்காறு; envy.*அவன் உப்பல் எடுத்தவன். (த.வ.)*

*[உப்பு(தல்)=(மனம்வெதும்பி பெருமூச்சு விடுதல்) – உப்பல்]*

**உப்புக்கலிகெளுத்தி** *uppukallikeḷutti,* பெ. (n.) உப்பில் ஊற வைத்த மீன் வகைகள்; aricus faloarius.

*[உப்பு + கல் + கெளுத்தி]*

**உம்பர்நாள்** *umbarnāḷ,* பெ. (n.) மேனாள்; former day. *"உம்பர் நாள் கள்வார் நறுங்கோதை காரணமாகக் கொள்வான் மருங்கு எண்ணி வந்தார்" (பு.வெ.94)*

*[உம்பர்+நாள்]*

**உம்மைவினை** *ummaivinai,* பெ. (n.) முன்வினை; karma of previous birth. *"உம்மை வினை வந்து உருத்தல் ஒழியாது எனும் மெய்மைக்கிளவி விளம்பிய பின்னும்" (மணிமே. 26:32–3)*

*[உம்மை+வினை]*

**உமண்சாத்து** *umaṇsāttu,பெ.*(n.)உப்பு வணிகர் *கூட்டம்;* group of salt sellers. *"உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பின்" (அக.119–8)*

*[உமண்+சாத்து]*

*சார்த்து – சாத்து சேர்ந்து செல்லும் வணிகக் கூட்டம்*

**உமை** *umai,பெ.*(n.) அம்மா;mother.

*[அம்மா→அமா→உமை]*

**உய்வழி** *uyvaḷi,* பெ. (n.) தப்பும் வழி; escaping route. *"நெஞ்சில் ஒன்றும் உய்வழி காணான்".*

*[உய்+வழி]*

**உயர்நீதிமன்றம்** *uyarnīdimaṉṟam,* பெ. (n.) அவ்வம்மாநிலத்திற்கான தலைமை முறை மன்றம்; high court.

*[உயர் + நீதி + மன்றம்]*

**உயர்ந்தோருலகம்** *uyarndōrulagam,* பெ. (n.) தேவருலகம்;celestial world, paradise. *"ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர் உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தன னாகலின்" (புறநா 174 – 19 – 20).*

*[உயர்ந்தோர்+உலகம்]*

**உயிர்க்கலை** *uyirkkalai,* பெ. (n.) உயிரெழுத்து; vowel."ஓதும்எழுத்தோடுஉயிர்க்கலை மூ அஞ்சுகம்"(மூல.963)

*[உயிர்+கலை]*

**உயிர்க்கொடை** *uyirkkoḍai,பெ.*(n.) உணவு தரும்அறம்;.virtue of offering food. "உயிர்க் கொடை பூண்ட உரவோய் ஆகிக் கயக்கு அறு நல் அறம் கண்டனை என்றலும்" (மணிமே. 11: 078)

*[உயிர்+கொடை]*

**உயிர்ச்சேதம்** *uyir-c-cēdam,பெ.*(n.) உயிரி (பிராணி)களின் அழிவு;(கோ.வ.);loss of life.

*[உயிர்+சேதம்]*

**உயிர்த்தானம்**[1] *uyir-t-tāṉam,பெ.*(n.) உயிர்நிலை; seat of life, any vital part of the body.

*[உயிர் + தானம்]*

**உயிர்த்தானம்**[2] *uyir-t-tāṉam,பெ.*(n.) உயிரையளிக்கை;gift of life, saving one's life.

*[உயிர் + தானம்]*

**உயிர்த்தீ** *uyir-t-tī,பெ.*(n.) உயிருக்கு மூலாதார மான மூன்று வகைத் தீ (சூடா); the three vital fires which sustain life.

*[உயிர்+தீ]*

**உயிர்த்தூய்மை** *uyirttūymai,பெ.*(n.) புலம்பன் தெளிவு (ஆன்ம சுத்தி); purity of soul. "பழ வினையும் ஒருங்காக உயிர்த்தக்கால் உயிர்த்தூய்மை வீடென்றாள்" (*நீல:4:47)*

*[உயிர்+தூய்மை]*

**உயிர்த்தொடர்** *uyirttoḍar, பெ.*(n.)குற்றியலுகரம் ஆறனுள் ஒன்று;one of the six *"kuṟṟiyalugaram"*.ஈர் எழுத்து ஒருமொழி உயிர்த்தொடர் ஆயீரு மூன்றே உகரம் குறுகிடன்" (தொல்.9:1)

*[உயிர்+தொடர்]*

**உயிர்நாடி** *uyināḍi,பெ.*(n.) ஒன்று நிலைப்பதற்கு முதன்மையானது; vital. 'கவிதைக்கு உயிர் நாடி உணர்ச்சியே'.

*[உயிர்+நாடி]*

**உயிர்நாடிச்சொல்** *uyirnāḍi-c-col,* பெ. (n.) அகத்தியமான அடிப்படைச் செய்தி; very very important message.

*[உயிர் + நாடிசொல்]*

**உயிர்ப்படை** *uyirppadai, பெ.* (n.) மெய்க்காவல்; guarding. ".மண் உயிர்ப்படை பின் தொடர்ந்து மயான வாழ்வு முடித்து". (கோ.5.5–90)

*[உயிர்+படை]*

**உயிர்ப்பிராணி** *uyir-p-pirāṇi, பெ.* (n.) உயிரி, குறிப்பாக விலங்கு. (சீவ.செந்து) (கொ.வ.); term used for living creature, usu. restricted to inferior animals.

*[உயிர்+பிராணி]*

**உயிர்மூச்சு** *uyir-mūccu,பெ.*(n.)1. உயிர்வளி; oxigen. 2. உயிர்போன்று வாழ்வதற்கு இன்றியமையாதது; the breath of life.' "உரிமை பெறுவதொன்றே எம் உயிர் மூச்சு".

*[உயிர்+மூச்சு]*

**உயிர்வளர்–த்தல்** *uyirvaḷar-,* பெ. (n.) வாழ்தல்; living.

*[உயிர் + வளர்]*

**உயிர்வளி** *uyirvaḷi,* பெ. (n.) உயிர்க்காற்று; oxygen.

*[உயிர்+வளி]*

**உயிர்வேதனை** *uyir-vēdanai, பெ.* (n.) உயிர்க்குத்துன்பம் விளைப்பவை. (திவா.); source of pain or distress, of which 12 kinds are mentioned.

*[உயிர்+வேதனை]*

**உயிரச்சம்** *uyiraccam,பெ.*(n.)உயிருக்கு தீங்கு நேரும் என்னும் அச்சம்; dread of death. "அறம்பொரு ளின்ப முயிரச்சம் நான்கின் திறந்தெரிந்து தேறப் படும்" (குறள்.500)

*[உயிர்+அச்சம்]*

**உயிரிசைவுமாற்றம்** *uyirisaivumāṟṟam, பெ.* (n.) ஒரு சொல்லில் இடம் பெற்ற ஓர் உயிரொலியின் தாக்கத்தால் அச்சொல்லில் உள்ளதொரு உயிரொலி மாறுதல்; harmonic sequence of vowels.

*[உயிரிசைவு+மாற்றம்]*

<u>எ.டு.</u> வடகு→வடுகு. இறுதியுகரம் அதற்கு முன்னுள்ள டகரத்தில் அகரத்தை உகரமாக மாற்றியுள்ளது.

**உயிரின்பம்** *uyir inbam, பெ.* (n.) இன்பம், வீட்டின்பம்; blissful state. "உயிர்கட்கு துயர்தீர்த்து உயிர் இன்பம் ஆக்கும் சொல்லான்" (நீலா.க.வா.1).

*[உயிர்+இன்பம்]*

**உயிரீசன்** *uyarīšan,பெ.*(n.)பெருவுடையார் (மகேசன்). *šivan,* the supreme lord. "உணரில் ஆதி தேவதையும் உயிர் ஈசன் ஆமே" (சை.சா.4:2:5:3).

*[உயிர்+ஈசன்]*

**உரப்பு–தல்** *urappu-,* செ.கு.வி. (v.i.) அழுக்காக்குதல்; to make dirty. *'சட்டையை இப்படி உரப்பிக் கொண்டு வந்தால் யார் துவைப்பது?"*

*[உர–உரப்பு]*

**உரற்பாணி** *uraṟpāṇi, பெ.* (n.) தவசத்தை உரலிலிட்டுக் குத்தும் போது பாடும் வள்ளைப்பாட்டு; song in praise of a hero,

sung by women when husking or hulling grains. "தொடிமால் உலக்கைத் தூண்டு உரல் பாணி நெடுமால் வரைய குடிஞையோடு இரட்டும்" (அக.9:11–3).

[உரல்+பாணி]

**உரிச்சொற்கிளவி** *uriccoṟkiḷavi,* பெ. (n.) உரிச்சொல் வகைப்பாடு; classified term for uriccal.

[உரி+ சொல் + கிளவி]

**உரித்திரம்** *uruttiram*, பெ.(n) 1. மஞ்சள் (மலை), turmeric 2. மரமஞ்சள் (மலை) tree turmeric உருத்திரம் பார்க்க, see urittiram

**உரித்துலுக்கன்** *uri-t-tulukkaṉ, பெ.* (n.) ஒருவகைப் பழைய கொள்ளைக் கூட்டத்தான்; Thug. (M.M.).

[உரி+துலுக்கன்]

**உருக்குத்தூள்** *urkkuttūḷ, பெ.* (n.) உருக்கு இரும்புப் பொடி; steel powder.

[உருக்கு+தூள்]

**உருக்குலைவு** *urukkulaivu, பெ.*(n.) முன்னுருவம் அழிந்துபோதல்; injury to the surface or beauty of the body - Defacement or disfigurement.

[உரு+குலைவு. குலை→குலைவு.]

**உருட்டி** *uruṭṭi, பெ.* (n.) மீன் வகையுள் ஒன்று; sucker fish.

[உருள்+உருட்டி]



**உருத்து** *uruttu,* பெ. (n.) சொந்தபந்தத்தின் மேல் ஏற்படும் அக்கறை; affection towards on kith and kin.

[உரு–உருத்து]

**உருப்புனை–தல்** urup-punai செ.குன்றா.வி. (v.t.) உடை முதலியவற்றால் மாறு வேடம் கொள்ளுதல்; to disguise. "யாரும் எவருவும் உருப்புனைந்து இருவர் மேவக் கண்டான்" (தி.தி. 33.10)

(உரு + புனை–,)

**உருவம் காட்டி** *uruvamkāṭṭi,* பெ.(n) கண்ணாடி; mirror. (பி.நி.152–3)

(உருவம் + காட்டி)

காண் (த.வி.) காட்டு (பி.வி.) – காட்டி

**உருவரை** *uruvarai, பெ.*(n.) எண்ணம், குறிப்பு, திட்டம்; design.

[உரு+வரை]

**உருவலிப்பு** *uruvalippu, பெ.*(n.) மனத்தில் உருக்காட்சிகளைத் தோற்றுவிக்கும் அல்லது புதுக் கருத்துகளை உருவாக்கும் ஆற்றல்; imagination.

[உருவ(ம்)+வலிப்பு]

**உருவாஞ்சுருக்கு** *uruvañsurukku,* பெ. (n.) எளிதாக அவிழ்க்கப்படும் முறையில்போடும் முடிச்சு; a knot to be released easily.

[உருவும்+சுருக்கு]

**உருவாரச் சம்மட்டி** *uru-vāra-c-camaṭṭi,* வீழிச்செடி (மலை). a straggling shrub with simple oblong leaves and greenish flowers.

(உருவாரம் + சம்மட்டி)

**உருள்தண்டம்** *urul-tandam,*பெ.(n.) கோயிற் திருச்சுற்றினை உடலாற் புரண்டு வலம் வருகை (அங்கப்பிரதட்சணம்); rolling the body to the right, around a sacred place like temple, generally in fulfilment of a vow.

*[உருள் + தண்டம்]*



**உருளைக்காந்தம்** *urulai-k-kāndam,* பெ.(n) ஒரு வகைக் காந்தக்கல் (மூ.அ.); variety of lodestone.

(உருளை + காந்தம்)

**உல்லாவலை** *ullāvalai,பெ.*(n.)உல்லம் எனும் மீன்களைப் பிடிப்பதற்குரிய வலை; fishing-net used to catch hilsa fish.

*[உல்லம்–உல்லா+வலை]*

**உரிமம்** *urimam,* பெ. (n.) ஓர் இடத்தைப் பயன்படுத்துதல், ஒரு தொழிலை மேற் கொள்ளுதல் போன்றவற்றுக்கு உரிய அலுவலரிடமிருந்து பெறப்படும் இசைவாணை உரிமம்; licence

*[உல் – உரி– உரிமம்]*

**உரிமைமகளிர்** *urimaimagalir,* பெ. (n.) அரசனின் அல்லது தனிமாந்தனின் மனைவியர்; wives of king or ordinary men.
*[உரிமை + மகளிர்]*

**உருத்திரக் கணிகை** *uruttira-k-kanigai,* பெ.(n) சிவன் கோயில் ஆடல் மகள் (தாசி); dancing girl of a Siva temple "உருத்திர கணிகையர் கவரி வீச" (பரத.ஒழிபி.29 உரை)

(உருத்திரன்+கணிகை)

குள் > குண் > குணி. குணித்தல் = அளத்தல், அளவிடுதல் – குணிப்பு = அளவு. குணி > கணி, கணித்தல் = அளவிடுதல், கணக்கிடுதல். கணி = கணிப்பவன். கணி > கணியன். கண் > கணி > கணிகை = தாளத்தை அளந்து ஆடுபவள்.)

**உருத்திரக் கணிகைமார்** *uruttira kanigaimār* பெ.(n) சிவன் கோயில் பொதுமகளிர் (தாசியர்); courtesan of Sivan temple. "உருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்துள்" (பெரியபு:278)

(உருத்திர(ன்) + கணிகைமார்)

**உருத்திரக்கலன்** *uruttira-k-kalan* பெ. (n) சிவமணி, அக்கமணி; rudrak bead, "உருத்திரக்கலனும் நிலவு உமிழ் புண்ணியம் பால் நிறச் சாந்தமும்" (கல். 57–21)

(உருத்திரன் + கலன்)

**உருத்திரக்கன்னியர்** *uruttira-kanniyar*பெ. (n) உருத்திர கணத்தைச் சேர்ந்த மகளிர், damsels who are among Siva's attendants "சாமரை யுருத்திர கன்னியரிரட்ட" (காஞ்சிப்பு. சார்ந்தாசயப் 36)

(உருத்திரம்(ன்) + கன்னியர். கன்னி > கன்னியர், 'அர்' ப.பா.ஈறு. கன்னுதல் = பழுத்தல். அரத்தங்கன்னுதல் = வெப்பத்தினாலாவது அழுத்தத்தினாலாவது உள்ளங்கையிலும், உள்ளங்காலிலும் அரத்தங் கட்டி சிவத்தல்.)

கன் > கன்னி > கனி – பழம். இது கன்னி என்னும் சொல்லின் தொகுத்தல். கன் > கன்னி = பூப்படைந்த பெண், சமைந்தவள், பக்குவமானவள். கன்னி > Skt, Kanya

**உருத்திரசடை** uruttirasaḍai, பெ. (n) திருநீற்றுப்பச்சை, (செடி வகை) (மூ.அ); sweet basil

(உருத்திரன் + சடை)

சள்ளுதல் = சிக்குதல். சள் > சடு > சடை = கற்றை, இயற்கையான மயிர்க்கற்றை. கற்றையான அல்லது கொத்தான பொருள்களையும் சடையுணர்த்தும், அதிலும் புல் முதலியவற்றில் கற்றையாக இருப்பதைக் குறிப்பது இயல்பே.

**உருத்திர சாதனம்** uruttira šādaṉam பெ.(n) சிவச்சின்னங்கள்; insignia of Sivan, beads of Siva emblem. "பூதி அணிவது..." கண்டிகை ஓதியவர்க்கும் உருத்திர சாதனம்" (மூல : 1662)

மறுவ. உருத்திராக்கம்

(உருத்திர(ன்) + சாதனம்)

**உருத்திர சூத்தம்** *uruttira - sūttam,* பெ.(n) உருத்திரனைப் புகழ்ந்து கூறும் ஒரு மறை (வேத) மந்திரம்; a - Rg - vedic. hymn addressed to Rudra.

(உருத்திர(ன்) + சூத்தம்)

**உருத்திர பஞ்சமம்** *uruttira panjamam* பெ.(n) ஒரு வகை அராகம் : a melody type "காந்தார பஞ்சமம் உருத்திர பஞ்சமம்" (நக: 10.168)

(உருத்திர(ன்) + பஞ்சமம்)

**உருத்திர பட்டம்** *uruttirapaṭṭam* பெ.(n) தோட் பட்டிகை; shoulder - strap "யுத்த வடத்து இளநாகம் உருத்திர பட்டம் வேண்டும்" (நாவு 4:2:3)

(உருத்திர(ன்) + பட்டம்)

**உருத்திரபூமி** *uruttira-būmi,* பெ.(n) சுடுகாடு; burning ground, where Siva is said to dance.

(உருத்திரம் + பூமி)

**உருத்திர முடிச்சு** *uruttira-muḍiccu,* பெ.(n) பூணூல் முடிச்சுவகை; spiral knot of the sacred thread esp. as tied by Saivas

(உருத்திர(ன்) + முடிச்சு)

**உருத்திர ரோகம்** *uruttira - rōgam,* பெ.(n) மாரடைப்பு(வின்..) angina pectoris breast pang being a disease in the anakatam or rudra-centre one of the dynamic nerve - plexuses in the body.

(உருத்திரம் + ரோகம்)

**உருத்திரவிருதயம்** uruttira - v - irudayam, பெ.(n) நூற்றிறெட்டு உப நிடதங்களுள் ஒன்று; name of a upanisad

(உருத்திரம் + இருதயம்)

**உருத்திர வீணை** *uruttira-viṇai,* பெ.(n) யாழ்வகை (சிவரக. உருத்திரவீணை); Rudra's viṇa, somewhat resembling the aeolian harp in action.

(உருத்திர + வீணை)



**உருத்திரவுப்பு** *uruttira - v - uppu,* பெ.(n) வெடியுப்பு, salt petre

(உருத்திர + உப்பு)

உப்புதல் = பொங்கியெழுதல். உப்பு = உவர்த்துப் பொங்கியெழும் சத்து; = உவர்ப்புக்கல்

**உருத்திராக்கப் பூனை** *uruttirāṭca-p-pūnai,* பெ.(n) அடியார் வேடம் பூண்ட கயவன் (வஞ்சகன்); cat which puts on a rosary of rudraksa beads, said of one who assumes the garb of a devotee with an unworthy object in view; profound dissembler. "இராப் போதிலே யுருத்திராட்சப் பூனை தானே" (தண்டலை 29)

(உருத்திராக்கம் + பூனை)

**உருத்திராக்கம்** *uruttirākkam,* பெ.(n) உருத்திராக்க மரத்தின் மணி; rudraksa nuts worn as sacred beads and used in rosaries by Saivas, so called because these beads represent the eyes of Siva "உருத்திராக்கம்விழுமியவணி"(திருவானைக் கோச்சொல். 49) 2. மரவகை (மூ.அ.) rudraksa tree. 3. உலங்காரை; wild olive 4. மரவகை; downy - nerved olive linden. 5. துப்பாக்கி மரம்; musket tree.

(உருத்திரம் + அக்கம்)

மறுவ அக்கமணி, கடவுள் மணி, சிவமணி, தெய்வ மணி, நாயக மணி, கண்மணி, கண்டம் கண்டி, கண்டிகை, முன்மணி கூர்முனை களைக் கொண்டது எனப் பொருள்படுவது.

கள்மணி. கள்மணி என்பது கண்மணி என்று புணரும். குள் > கள் முள். கள் > கள்ளி = முள்ளுள்ள செடி. கள் > கண்டு = கண்டங்கத்தரி. கண்டு > கண்டி = முனைகள்ள உத்திராக்கம். கண்டி > கண்டிகை = உருத்திராக்கமாலை. வேத காலத்துத் தெய்வமான உருத்திரனை (ருத்ர) சிவனொடு இணைத்துக் கொண்டபோது கண்மணி என்னும் கூட்டுச் சொல்லைக் கண்+மணி என்று தவறாகப் பிரித்துக் கொண்டனர். அதுபோலவே அக்கம் என்னும் தென் சொல்லை அக்ஷ என்று திரித்து அதற்குக் கண் என்று வடமொழி வழிப் பொருளூட்டி விட்டனர்.

**உருத்திராக்க முகம்** *uruttirākk-mugam* பெ.(n) உருத்திராக்க மணியின் மேற்பக்கத்தின் பிரிவு; parts between lines on rudraksa nuts.

(உருத்திராக்கம் + முகம்)

**உருத்திராகாரம்** *uruttirā-gāram.* பெ.(n) கடுஞ்சீற்றத் தோற்றம்; ferocious visage, fierce countenance. "அவன் உருத்திரா காரமாயிருக்கிறான்."

(உருத்திர(ன்) + ஆகாரம்)

**உருத்திராக்ககடுக்கன்** *uruttirā-kka-kaḍukkan* பெ. (n) கடுக்கன் வகை; ear-ring of rudraksa nuts.

(உருத்திராக்கம் + கடுக்கன்)

**உருத்திராக்கக்கரை** *uruttirā-kka-k-karai,* பெ.(n) ஆடைகளின் கரை வகை; border of cloth with rudraksa design.

(உருத்தராக்கம் + கரை)

**உருத்திராக்கக்கண்டி** *uruttirakkak-kandi,* பெ.(n) உருத்திராக்கக்கண்டிகை பார்க்க, see uruttirakkak kandigai

(உருத்திராக்கம் + கண்டி)

**உருத்திராக்கக் கண்டிகை** *uruttirākkak-kanḍigai,* பெ.(n) அக்கமணி (உருத்திராக்க)

மாலை. necklace of rudraksa beads worn with or without gold.

(உருத்திராக்கம் + கண்டிகை)

**உருத்திராட்சக் கரை** *uruttiratca-k-karai* பெ.(n) உருத்திராக்கக் கரை பார்க்க; uruttirakka-k-karai

(உருத்திராட்சம் + கரை)

த. உருத்திராக்கம் > skt. rudraksa> த. உருத்திராட்சம்

**உருத்திராட்சப் பூனை** *uruttirāṭca-p-pūnai* பெ.(n) உருத்திராக்கப் பூனை பாரக்க; see uruttirakka-p-punai.

(உருத்திராட்சம் + பூனை)

த. உருத்திராக்கம் > skt.rudraksa > த. உருத்திராட்சம்

**உருத்திராட்சம்** *uruttirāṭcam,* பெ.(n) உருத்திராக்கம் பார்க்க; see uruttirakkam

**உருத்திராணி** *uruttirāṇi,* பெ.(n) ஏழு 1. (சத்த) கன்னியருளொருத்தி; Rudrani, energy of Rudra, one of catta madar, 2. உருத்திரை. பார்க்க; see uruttirai "சுருதி சருவாணி சரச்சோதியுருத்திராணி" (கூர்மபு. திருக்கலி. 22)

(உருத்திரம் + ராணி)

**உருத்திரை** uruttirai பெ.(n) மலைமகள் (உமை); Parvati "ஆசிரியை காமக்கோட்டி அம்பிகை.... உருத்திரை உமை அம்மை திருநாமம் என்ப" (நிக.பி. 2:14)

*[உருத்திரன் (ஆ.பா.) உருத்திரை (பெ.பா.)]*

**உருமகாலம்** *uruma-kālam,* பெ.(n) கோடைக்காலம்(வின்); hot weather. *மறுவ. உச்சிஉருமம்*

(உருமம்(ம்) + காலம்)

**உருமுத்துவசன்** *urumuttuvasan,* பெ.(n) மின்னலைத் தன்கொடியில் உடையவன், இந்திரன், Indra, who has on his banner the symbol of lightning. "உருமுத்துவசன் மைந்தன்" (பாரத. புட்பாய. 178)

(உருமு + துவசன்)

(skt.dhvaja (கொடி) > த. துவச > துவசன்)

**உருவகி – த்தல்** *uruvagi-,* 11. செ.குன்றாவி. (v.t) உருவகப்படுத்துதல்; to speak metaphorically.

*[உருவம் – உருவகி]*

**உருவச்சாதகம்** *uruva-c-cādagam,* பெ.(n) உருவசாத்திரம் பார்க்க; see uruvacattiram. "உருவச்சாதகத்துக்கேற்பப் பெண்ணலங் கிடந்த பேதை" (சீவக (1571)

[த. உருவம் + சாதகம்]

**உருவசாத்திரம்** *uruva-cāttiram,* பெ.(n) உறுப்பமைதியால் ஏற்படும் உயர் விழிவுகளைக் கூறும் நூல்; science of the shape, features and marks of the human body, including palmistry and physiognomy and of the characterstic qualities betokened, by them, one of aṟupattu nalu kalai.

*[உருவம் + சாத்திரம்]*

**உரையன்** *uraiyan,* பெ.(n) புகழுடையவன்; renouned person. "மறவர் கையகத்து உய்ந்த கன்றுடைப் பல் ஆதன் நிரையொடு வந்த உரையன் ஆகி" (புறநா : 260:17–9)

(உரை – உரையன்)

**உரையாட்டு** *uraiyāṭṭu,* பெ.(n) விடை, மறுமொழி; answer "உரையாட்டு இல்லை; உறுதவத்தீர்" (சிலப்:10–3)

**(உரை + ஆட்டு. ஆடு – ஆட்டு)**

**உரையாடல்** *urai-y-āḍal* தொ.பெ. (vbl.n.) கருத்துகளை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ளும் வகையில் பேசுதல். கலந்து பேசுதல்; conversation

(உரை + ஆடல். ஆடு – ஆடல்)

**உரை வந்துறும் பதம்** *urai vandurum Padam*, பெ. (n) மழலைப் பருவம்; childhood "உரை வந்துறும் பதத்தே உரைமின்கள்" (கபி.2:16)

(உரைவந்துறும் + பதம்)

**உரைவரவு** *uraivaravu* பெ.(n) தூதுவழிச் சொல்; report of an embassy. "தென் கொற்கைச் சேரமான் உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு" (முத்தொள். 1556)

(உரை + வரவு)

**உரைவாணர்** *uraivāṇar,* பெ.(n) புலவர்; poet, learned person. "உரைவாணர் தங்கள் நவை காணின் மாற்றும் குமார குலோத்துங்கன்" (நட். 3:363)

(உரை + வாணர்)

**உரைவாதி** *uraivādi,* பெ.(n) உலகம் நான்முகன் (பிரமன்) படைப்பு என உரைப்பவன். (சுத்தப் பிரமவாதி); one who holds the tenet that the universe is an egg or Brahma "விரையாது உணரும் அது வீடு எனவே வரையாது உரைவாதி வகுத்தனனே" (சை.சா. 4:1:197)

(உரை + வாதி)

**உரை விகற்பம்** *uraivigarpam* பெ.(n) மாறான கூற்று; different view of a commentary etc. "வேற்று உரை விகற்பமும் உண்மைப் பொருளும் உலோகாய்தன் உணர்வே" (மணிமே. 27:272)

(உரை + விகற்பம்)

**உரைவித்தகம்** *uraivittagam,* பெ.(n) சொல்வன்மை; eloquence, command of language "உரை வித்தகம் எழுவார் காண்பவே, கையுள் சுரைவித்துப் போலும் தம் பல்" (நால். 32.5)

மறுவ. சொற்றிறம்.

(உரை + வித்தகம்)

**உல்லாகன்** *ullāgan,* பெ.(n) நோய் நீங்கி உடல் நலம் தேறியோன்; getting healthy after sickness. "உலவு நோய் உற்று ஒழிந்தோன் உல்லாகன் பதாதி" (நிக.சூ. 2–40)

**(உல்லாகம் - உல்லாகன்)**

**உலககர்த்தா** *ulaga - karttā,* பெ.(n) கடவுள், god, the maker of the world.

(உலகம் + கர்த்தா)

**உலகங்காத்தாள்** *ulagan-kāttāḷ* பெ.(n) அவுரி (மலை); Indian Indigo

*[உலகம் + காத்தாள்]*

**உலக சஞ்சாரம்** *ulaga-canjāram,* பெ.(n) உலகஞ்சுற்றி வருகை; journey around the world.

[உலகம் + சஞ்சாரம்]

**உலகத்தவர்** *ulagattavar* பெ.(n) உலகத்து மக்கள்; people of the world. "உயர்நிலை உலகத்தவரும் பிறரும்" (பெருங். 131. 73–4)

(உலக(ம்) + அத்து + அவர்)

**உலக நயன்** *ulaga nayan,* பெ.(n) உலக நெறி, உலக நடை; customs and usages of the world. "செம்புண் உறுத்தவரை தின்பர் அறத்தோடு நின்று உலகநயன் இயலா மாந்தர்" (அற:98)

(உலக(ம்) + நயன்)

**உலகநாதன்** *ulaga-nādan,* பெ.(n) கடவுள், god, lord of the world.

(உலகம் + நாதன்)

**உலகப் பிரசித்தி** *ulaga-p-pirasitti,* பெ.(n) உலகமெங்கும் பரந்த புகழ்; universal renown.

(உலகம் + பிரசித்தி)

**உலகபத்ததி** *ulaga-pattadi,* பெ.(n) உலகத்தாரொழுகும் வழி; way of the world.

(உலக(ம்) + பத்ததி)

**உலக மயக்கு** *ulaga mayakku,* பெ.(n) உலக மூடம் பார்க்க; see ulaga mūḍam

(உலக(ம்) + மயக்கு)

**உலக மன்னன்** *ulaga mannan,* பெ.(n) மன்னர் மன்னன் (சக்கரவர்த்தி); emperor "உலக மன்னவர்திரு நாள் ஒளிமுடி அணிந்து நின்றவர்போல்" (சிவ. 7–2) மறுவ. பேரரசன்

(உலக(ம்) + மன்னன்)

**உலகமாதா**[1] *ulagamāda,* பெ.(n) உலக வன்னை பார்க்க; see ulaga vannai "பாரதி வாணி... உலக மாதா.. வாக்கின் செல்வியே நோக்கிய பெயரே" (நிக. தி. 1.19)

(உலக(ம்) + மாதா)

**உலகமாதா**[2] *ulaga-mādā,* பெ. (n) 1. கலைமகள் (திவா); Sarasvati, Lit, mother of world. 2. உமை (Siva) Parvati, the mother of the Universe. 3. செம்மணித் தக்காளி (தைலவ–தைல.19) பார்க்க; see Semmani-t-takkali.

[உலகம் + மாதா]

**உலக மூடம்** *ulagamūḍam,* பெ.(n) உலக மயக்கு; mental delusion, stupor, bewilderment, sberration of mind, as from ignorance, fascination, etc. "மாமாங்கம் ஆடல் மணல் குவித்தல்... ஆடொடு எருமை அறுத்தல் இவை உலக மூடம் என உணரற்பாற்று" (அற.15)

(உலக(ம்) + மூடம்)

**உலகவிளக்கு** *ulagaviḷakku,* பெ. (n.) உலக முழுமைக்கும் இன்றியமையாத ஒளியையும் வெப்பத்தையும் தருவதுமான நாண்மீன்; the sun.

*[உலகம் + விளக்கு]*

**உலகயாத்திரை** *ulaga-yāttirai,* பெ.(n) உலக நடை; mundane matters business of the world, worldly affairs.

(உலக(ம்) + யாத்திரை)

**உலையாணிக்கோல்** *ulaiy-āṇi-k-kōl, பெ.* (n.) உலையில் வைத்த இரும்புப் பொருளைப் புரட்டுவதற்கும் கரியைக் கிளறி விடுவதற்கும் பயன்படும் உருண்டையானதும் நீளமானதுமான கொல்லுக்கருவி; blacksmith's instrument.

*மறுவ. உலவாணிக்கோல்.*

**உலகரீதி** *ulaga-rīdi,* பெ.(n) உலக முறை; order of the world.

(உலக(ம்) + ரீதி)

**உலகவன்னை** *ulagavannai,* பெ.(n) நாமகள்; goddess of learning, sarasvati

(உலக(ம்) + அன்னை)

**உலக வாஞ்சை** *ulaga-vāñjai,* பெ.(n) உலகச் செய்திகளிலுள்ள பற்று; ardent desire for wordly enjoyments,

(உலக(ம்) + வாஞ்சை)

**உலக வாதம்** *ulaga - vādam,* பெ.(n) (ஐதிகம்) மரபு, (சி.சி. அளவை 1, சுப்பிர.) tradition.

(உலக(ம்) + வாதம்)

**உலக வார்த்தை** *ulagavārttai,* பெ.(n) பொய்ப்பரப்பு (வதந்தி); common talk, Popular report, rumour, "அன்னதே உலக வார்த்தை ஆவது" (ஆள. 518)

**(உலக(ம்) + வார்த்தை)**

skt.vartta > த.வார்த்தை

**உலக வாழ்வு** *ulaga-vālu,* பெ.(n) இக வாழ்வு; worldly prosperity.

(உலகம் + வாழ்வு)

**உலக விடைகழி** *ulagaviḍaikali,* பெ.(n) ஊர் வாயில்; entrance of a village. "உலக விடைகழி ஒருங்குடன் நீங்கி" (சில. 10.27)

(உலக(ம்) + இடைகழி)

**உலக வியாபாரம்** *ulaga - viyābāram* உலகளாவிய வாணிகம்; worldly affairs, business of the world. "உலக வியாபார வழக்கில் வளைத்தலைக்க" (அருட்பா 6, தற்போது 9)

(உலக(ம்) + வியாபாரம்)

**உலக விருத்தம்** *ulaga viruttam,* பெ.(n) உலக வழக்கொடு மாறுபட்டது; contrariety to common usage. "உலக விருத்தம் உலகின் மாறாத உரை இலகு மதி சந்திரன் அல்ல என்றல்" (மணிமே. 29:162–3)

[(உலக (ம்) + விருத்தம்)

skt.viruddha > த. விருத்தம்]

**உலக வேடணை** *ulaga-vēḍanai,* பெ.(n) ஏடணாத்திரயத்தொன்று (திருவாலகட்); attachment to the world, one of etana-t-tirayam.

skt. +vetanai > த. உலக வேடணை)

**உலகாயதம்** *ulagāyaḍam,* பெ. (n) உலோகாயதம் (பிங்) பார்க்க, see ulokayatam.

(skt. lokayata > த. உலகாயதம்)

**உலகிகம்** *ulagigam,* பெ.(n) உலகம், worldliness. "உலகிக மன்புடைமை" (அருங்கலச். 41)

[உலகம் + இகம்]

**உலகு** *ulagu,* பெ.(n) உலகம் பார்க்க, see ulagam

ம. உலகு

[உல–உலகு]

**உலகொழுக்கு** *ulagoḷukku* பெ.(n) உலகநயன் பார்க்க; ulaganayan. "உலகொழுக்கு இறவாது உயர் புகழ் காந்தம்" (தண்.த. 23).

(உலக(ம்) + ஒழுக்கு–ஒழு - ஒழுகு - ஒழுக்கு)

**உலர்த்துசூலை** *ularttu-cūlai,* பெ.(n) சூலை நோய் வகை (சுவரட்); anarthritic disease.

[உலர்த்து + சூலை]

**உலர்ந்தம்** ularndam, பெ.(n) தண்டு (மூ.அ.); stalk

[உலர் + உலர்ந்தம்]

**உலர்மின்கலம்** *ullārminkalam, பெ.*(n.)உலர் மீன்கலம்; dry battery.

*[உலர்+மின்+கலம்]*

**உலர்வெளுப்பகம்** *ularveḷuppagam, பெ.*(n.) வேதிப்பொருள் பயன்படுத்தித் துணி வெளுத்துச் சலவை செய்து தரும் பணியிடம்; dry-clean shop.

[*உலர் + வெறுப்பகம்* ]

**உலவாக்கலம்** *ulavā-k-kalam* பெ. (n) அமுதசுரபி; a vessel supplying inexhaustible food.

(உலவாத + கலம்)

**உலவு** *ulavu,* பெ. (n.) மரவகையுள் ஒன்று; a kind of tree.

*[உல்–உலா]*

**உலாப்புறம்** *ulā-p-puram,* பெ.(n) சிற்றிலக்கிய (பிரபந்த) வகைகளுள் ஒன்று. one of the poetic composition of 96 vareities. "உனை அன்பால் திரு உலாப்புறம் பாடினேன்" (பெரியபு. 4280)

(உலா + புறம்)

**உலாப்போக்கு** *ulā-p-pōkku*, பெ.(n) வலம் வருதல்; procession. "சிறப்பு இன்று உலாப்போக்கு அறத்தகை அண்ணல்" (பெருங். 117–22) 2. காற்றாடச் சுற்றிவரல்; strolling.

**(உலா + போக்கு.** போ - போகு - போக்கு)

**உலைக்கல்** *ulai-k-kal*, பெ.(n) உலைக்கூட்ட பயன்படும் கல்; stone used to form oven. "கருங்கைக் கொல்லன் விசைத்தெறி கூடமொடு பொரூஉம் உலைக்கல் லன்ன வல்லா ளன்னே" (புற. 170: 15–17)

பட. ஒலெகல்லு

(உலை + கல்)

**உலைக்குருகு** *ulai-k-kurugu,* பெ.(n) கொல்லு லையிலுள்ள நெருப்பூதுந்துருத்தி; smith's bellow. "கொல்லன் ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அகமும்" (நற். 125:3.4)

மறுவ. உலைத்துருத்தி

(உலை + குருகு)



**உலையமுது** *ulai-y-amudu*, பெ.(n) உலைத் தண்ணீர் பார்க்க, see ulai-t-taṇṇīr

(skt. ulai + amudu > உலையமுது)

**உலையாணிக்கோல்** *ulaiyāṇi-k-kōl,* பெ.(n) மாடு முதலியவற்றிற்குச் சூடு இடுதற்குரிய கம்பி; branding iron, instrument for cauterising 'சூட்டுக்கோல் உலையாணிக் கோல் எனச் சொல்ப' (நிக.தி. 7:167)

மறுவ. சூட்டுக்கோல்

(உலையாணி + கோல்)

**உலையிற்பிணந்தின்னி** *ulaiyir-pinantinni,* பெ.(n) ஒரு வகை மாழை மூலப்பொருள் (தாது) மாமிச வேதி(வின்) kind of ore.

[உலையில் + பிணம் + தின்னி]

**உலோகம்** *ulōgam,* பெ.(n) உலகம் (திவா.); the world.

**(உலகம் - உலோகம்)**

**லோக** என்னும் வடசொற்கு முன் உகரம் சேர்த்து உலகத்தை உலோகம் என்பது பொருந்தா வழக்கு, தவிர்த்தல் வேண்டும்.

**உலோக யாத்திரை** *ulōga-yāttirai,* பெ.(n) உலக நடை; way of the world; worldly affairs. "உலோக யாத்திரைக ளதிகரியா துறுநர்க்கு" (வேதா. சூ. 164)

(உலகம் - **உலோகம் + யாத்திரை)**

**உலோக வாதம்** *ulōga-vādam,* பெ.(n) மரபு (ஐதிகம்) (சி.சி. அளவை 1, ஞானப்); Popular report, tradition

[உலகம் + வாதம்]

**உவகைமுத்து** *uvagai-muttu,* பெ.(n) உவகைக் கண்ணீர்; large drops of tears of joy.opp.to புலம்புமுத்து.

(உவகை + முத்து)

**உவட்டிற்கூர்மை** *uvaṭṭir-kūrmai,* பெ.(n) ஒருவகை மாழை மூலப்பொருள் (தாது) (மாமிச பேதி)(வின்); Kind of ore.

[உவடு + இல் + கூர்மை]

**உவணவூர்தி** *uvaṇa-v-ūdi,* பெ.(n) திருமால்; Lord Vishnu. "மாதவன் கொடியோன் உவணவூர்தி என்று இவை நாராயணன் திருநாமம் ஆகும்" (நிக.பி. 2–38)

[உவணம் + ஊர்தி]

**உவமக்கிளவி** *uvama-k-kiḷavi,* பெ.(n) உவமவுருபு; sign of comparision. "வினை எஞ்சு கிளவியும்" (தொல் 7–2)

(உவம(ம்) + கிளவி)

**உவமாநிலம்** *uva-mā-nilam,* பெ.(n) சுவர்.(பிங்.) wall.

(உவம + நிலம்)

**உவமானசங்கிரகம்** *uvamāna-sangiragam,* பெ. (n) மகளிர் உறுப்புகளுக்கு உவமை கூறும் ஒரு நூல்; name of short treatise on the various objects of comparison for the several items of feminine beauty and grace by Tiruvenkata Aiyer, 14th C.

(உவமை + சங்கிரகம்)

**உவவுமதி** *uvavu madi,* பெ.(n) வெள்ளுவா, முழுத்திங்கள்; full moon "உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை" (புறநா: 3–1)

(உவவு + மதி)

**உவர்மண்காரம்** *uvar-maṇ-kāram,* பெ.(n) உவர் மண்; fuller's earth.

**உவரச்சொல்** *uvara-c-col,* பெ.(n) கடுஞ் சொல்; harsh word. "உவரச்சொல் வேருடைய காடு உகந்து ஆடிய ஏகம்பரனார்" (ப.பி. 4–75)

**(உவர் > உவரம் + சொல்)**

**உவரி** *uvari-, பெ.* (n.) கீழைக் கடலில் உள்ள பாண்டியரின் துறைமுகப் பட்டினம்; a pandiya sea port on the eastern coast of pandya kingdom.

<u>மறுவ</u> உப்பரி.

*[உவர்–உவரி]*

சாலமன் மன்னனின் கப்பல் உவரித் துறைக்கு வந்தது என்பதால் இதன் காலம் கி.மு.1000 எனக் கருதப்படுகிறது.

**உவாய்** *uvāy,* பெ.(n) உவாத்தேக்கு. பார்க்க, see uva-t-tekku.

[உவை – உவாய்]

**உவைச்சன்** *uvaiccan,* பெ.(n) உவச்சன் (தெ.க.தொ;. 11.275). பார்க்க, see uvaccan.

**உழணி** *u!ani, பெ.* (n.) வயலில் நீரைத் தேங்க வைக்க அல்லது வெளியேற்றப் பயன்படுத்தும் தோணி வடிவக் கருவி; boat-shaped wooden trough for bailing water from fields.

*[உழன் – உழணி]*

**உழப்பாம்பு** *u!appāmbu,பெ.* (n.) மண்ணுளிப் பாம்பு; a kind of snake.

**உழவுத்தடி** *u!avu-t-tadi,பெ.*(n.)கலப்பை நுகத்தடி; yoke.

*[உழவு + தடி ]*

**உழலைமரம்** *u!alai-maram,* பெ.(n) வாயிலின் குறுக்கே தடையாகக் கோக்கும் மரம்; block of wood kept across an entrance to prevent going in. "உழலை மரத்தைப் போல தொட்டன ஏறு" (கலித். 106–21–2)

(உழலை + மரம்)

**உழிஞ்சில்** *u!iñjil,* பெ. (n) உசிலை மரம்; a tree 'நெற்று உடையதாலும் காற்றில் ஒலிப்பதாலும் வாகையொடு உழிஞ்சில் மயங்கின் (அடியார்க்கு நல்லார் 11.76.207)

*[உழி – உழிஞ்சில் ]*

**உழுந்தோதனம்** *u!undōdanam,* பெ.(n) உழுத்தம் பயிற்றோடு கலந்திட்ட சோறு (பதார்த்த 1408), a preparation of food made of rice mixed with bruised black-gram and boiled together.

(உழுந்து + ஓதனம்)

**உழுத்தகர்** *u!uttagar,* பெ.(n) உழுந்தின் மேல் தோல்; rind of black gram "பருத்திவேலிச் சீறூர் மன்னன் உழுத்தகர் உண்ட ஓய் நடைப் புரவி" (புறநா: 299:1–2)

(உழுந்து – உழு + தகர்)

**உள்துறை** *u!-turai,பெ.*(n.)ஒரு நாட்டின் அல்லது ஒரு மாநிலத்தின் சட்டம் ஒழுங்கு முதலிய வற்றுக்குப் பொறுப்பாக அமைந்துள்ள அரசுத்துறை; internal affairs; home ministry.

*[உள் + துறை ]*

**உள்நெருப்பு** *u!neruppu,* பெ. (n) மனக் கொதிப்பு; excitement in mind, as from sorrow. "உள்நெருப்பு எழத்தனது உடல் நெருப்பு எழும்" (வி.பா: 21–43)

(உள் + நெருப்பு)

**உள்நோக்கம்** *y!nōkkam,* பெ. (n.) (செயலொன்றைச் செய்பவர் மற்றவர்க்கு வெளியில் தெரியாதவகையில்) உள்ளூரக் கொண்டிருக்கும் (கெட்ட) எண்ணம்; hidden intention.

*[உள் + நோக்கம்]*

**உள்நோக்கல்** *u!nōkkal,* பெ.(n) ஊழ்கம் அகநோக்கம்; meditation.

[உள் + நோக்கல், நோக்கு → நோக்கல்]

உண்ணோக்கல் பார்க்க

**உள்ளாட்சி** *u!-!-ātci, பெ.* (n.) சிற்றூர் (ம) நகரம் போன்ற பேரூர்களில் வாழ்வோர் தத்தம் வாழிடங்களுக்கான நிருவாகத்தை படி நிகராளி (பிரதிநிதி)கள் மூலம் நடத்தும் முறை; local self-government.

*[உள் + ஆட்சி ]*

**உள்வாய்** *ū!vāy,* பெ. (n.) சக்கரம் உருளும்போது குடத்தினுள் அச்சு உராயுமிடம்; inner part of axis.

*[உள் + வாய் ]*

**உள்வரிக்கோலம்** *uḷvari-k-kōlam*, பெ.(n) பொய்யுரு; disguise "உள்வரிக் கோலத்து உறுதுணைதேடி" (சிலப். 5:215–6)

(உள்வரி + கோலம்)

**உள்வரிப்பாணி** *uḷvari-p-pāṇi*, பெ.(n) பிறிதொரு உருவம் கொண்டும் கொள்ளாதும் பாடி வாழ்த்தும் பாட்டு; song of benediction sung by person in disguise or otherwise. "புள் ஊர் கடவுளைப் போற்றுதும் போற்றுதும் உள்வரிப்பாணி ஒன்று உற்று" (சில.17–28:6–7)

(உள்வரி + பாணி)

**உள்வளி** *uḷvaḷi*, பெ.(n) மார்பை இடமாகக் கொண்டு மூக்கு, கண்டம், தொப்புள் ஆகிய இடங்களில் உலாவிப் பேச்சுக்கு முதற் காரணமாயும் உடம்பிற்கு நிறம், ஒளி, நினைப்பு ஆகிய குணங்களை யுண்டாக்கும் பத்து வளி (தசவாயு) களில் ஒன்று. (பதானன்) One of the ten vital airs (nerve-current) originating in the naval region and having its seat in the parts of the body. "நிறை உயிர் முயற்சியின் உள்வளி துரப்ப எழும் அணுத்திரள்" (நன். 74)

(உள் + வளி)

**உள்வீச்சுச்சன்னி** *ul-viccu-c-caṉṉi*, பெ.(n) ஒரு வகை இசிவு (சன்னி) நோய் (வின்); internal convulsions.

[*உள் + வீச்சு + சன்னி*]

**உள்வெக்கை** *uḷvekkai*, *பெ.*(n.)மாட்டிற்கு வரும் ஒரு வித நோய்; a disease affecting cow.

[*உள் + வெக்கை*]

**உள்ளக்கிடக்கை** *uḷḷa-k-kiḍakkai*, *பெ.* (n.) மன விருப்பம்; one's desire. அவன் பேசிய முறையைக் கொண்டு அவன் உள்ளக் கிடக்கையை அறியமுடிந்தது.

[*உள்ளம் + கிடக்கை* ]

**உள்ளடக்கம்** *uḷḷaḍakkam*, *பெ.*(n.)கட்டுரை போன்றவற்றில் அடங்கியுள்ளவற்றின் தலைப்புகளைக் குறிக்கும் முன்பகுதி; content.

[*உள் + அடக்கம்* ]

**உள்ளத்தான்** *uḷḷattaṉ*, பெ.(n) மனம் உடையவன்; a man who has inclination towards something. "என் மேல் வைத்த உள்ளத்தான் என வயந்தமாலை மாதவிக்கு ஒரு நாள் கிளந்த மாற்றம் கேட்டேன்". (மணிமே. 4:80–2)

(உள்ளம் + அத்து + ஆன்)

**உள்ளப்பான்மை** *uḷḷa-p-pāṉmai*, பெ.(n) மனநிலை; state of mind "பரவிய மன்னன் உள்ளப்பான்மை யார் பகர வல்லார்"

(உள்ள(ம்) + பான்மை)

**உள்ளமுது** *uḷḷamudu*, பெ.(n) அறிவில் வெளிப்படும் பேரின்பம்; bliss attained by wisdom "தெள் அமுது உறைச்சிவாய என்று உள் அமுது உற ஒரு கால் உரைத்திரும்" (மூல. 2704)

(உள் + அமுது)

**உள்ளுக்குச்சாப்பிடு–தல்** *uḷḷukku-c-cāppiḍu-*,செ.குன்றாவி(v.t). மருந்துண்ணுதல்; to take internally as medicine.

(உள் + உள்ளுக்கு + சாப்பிடு–)

**உள்ளுணர்வு** *uḷḷuṇarvu*, பெ.(n) அகவிழிப்பு நிலை, அறிவு; inner consciousness awakering of the mind, knowledge. 'ஓங்கு எழுங் கலைக்கு உள் உணர்வு ஆனவன்' (மூல. 1386)

(உள் + உணர்வு)

**உள்ளுறவர்** *ullur̤avar*, பெ.(n) ஓர் ஊரின் கண் வாழ்வோர்; residents of a village or town. 'உள்ளுறவரால் உணர்ந்தால் முதல் எனினும் எல்லாமை வேண்டும்' (பழ. 108)

(உள் + உரவர்)

**உள்ளுறை பகைஞர்** *ulluraipagaiñar*, பெ.(n) உட்பகைவர்; internal enemy, man of rancour at heart without inward passion of friendship. "கள்ளரின் சுரந்து உரைகாமம் ஆதிவம் உள்ளுறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வெனோ" (கம்ப. அயோ.1:17)

(உள் + உறை + பகைஞர். பகை பகைஞர்)

**உளநாள்** *ulanāl*, பெ.(n) வரையறுக்கப்பட்ட வாழ்நாள்; pre-determined or prescribed life time. "உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது" (சிலப். 30–200)

(உள + நாள்)

**உளநூல்** *ulanūl*, பெ.(n) மனம் மற்றும் மாந்தான் நடத்தை முறை குறித்த அறிவியல்; psychology.

(உள்ள(ம்)–உள(ம்) +நூல்)

**உளப்பாங்கு** *ulā-p-pāngu*, பெ.(n) மனநிலை; state of mind.

(உள(ம்) + பாங்கு)

**உளம்புநர்** *ulambunar*, பெ.(n) அலைப்பவர்; those who drive out the animals from thicket in hunting. 'இலங்கு ஒளி மருப்பின் கைம்மா உளம்புநர்' (கலித். 23.1)

(உளம்பு + நர்)

**உளவியல்** *ulaviyal*, பெ.(n) உளநூல் பார்க்க; see ulanū.

(உள்ள(ம்) – உள(ம்) + இயல்)

**உளவியலாளர்** *ulaviyalālar*, பெ.(n) உளவியல் அறிஞர்; psychologist.

(உளவியல் + ஆளம்)

**உளவுகோல்** *ulavukōl*, பெ.(n) குதிரைச் சவுக்கு; horse - whip "மச்ச நாடன் மாமதலை... அச்சம் அற்று இருந்து உளவுகோல் அருணனின் கொள்ள" (வில்லி.பா. 22–64)

( உளவு + கோல்)



**உளவுத்துறை** *ulavuttur̤ai*, பெ.(n) உள்ளாராயும் துப்புத்துறை; the department which deals in spying.

(உளவு + துறை)

**உளிக்கருவி** *uli-k-karuvi*, பெ.(n) கணிச்சி; battle-axe "உளிக்கருவி தளிகைக் கருவி என்று இசைப்ப கணிச்சிப் பெயரின் வழங்கும் கருவி" (நிக.தி. 7–26)

(உளி + கருவி)

**உளில்** *ulil*, பெ.(n) ஒரு நீர்வாழ் பறவை, உள்ளான்; common snipe "உன்னம் நாரை மகன்றில் புதா உளில்" (சுத். 2–149)

[*உள் + இல்*]



**உற்கம்** *uṟkam, பெ.*(n.) விண்வீழ்கொள்ளி (புறம்.4); meteor.

[*உல் – உற்கு – உற்கம்*]

**உற்கு–தல்** *uṟku-*, 5. செ.கு.வி.(v.i.) விண்ணினின்றும் எரிகொள்ளி விழுதல்; to shoot through the sky, as a meteor "திசையிரு நான்கு முற்க முற்கவும்" (புறம் 41, 4)

(உல் + கு – உல்கு → உற்கு–)

**உற்கை** *uṟkai*, பெ.(n) 1. கடைக்கொள்ளி, fire brand. "உற்கையென்றெறியும்" (நைடத. நகர. 2) 2. விண்வீழ் கொள்ளி, meteor. "இழிந்தவானுற் கையென்ன" (பாரத. இரண்டா.9). 3. விண்மீன் (சூடா). star

(உல் – கு – உற்கு – உற்கை)

**உற்றகாலை** *uṟṟakālai*, பெ.(n) தொடங்கும் போது; when starting. "ஒரு மகன் ஆன்நிரை கொள்ள உற்ற காலை" (சிலப். 12–12)

(உறு → உற்ற + காலை)

**உறங்கு–தல்** *uṟangu-* 15. செ.கு.வி.(v.i.) செயலற்று இருத்தல்; being without work. 'ஆற்றுவ செய்யாது நாளும் உறங்குதல் காரணம் என்னை' (அற. 168)

(உற → உறங்கு)

**உறம்** *uṟam*, பெ.(n) உறவு; entering upon. "விளைவு அறிவார் பண்டை மெய் உறம் செய்வார்" (மூல. 1325)

(உறு → உறம்)

**உறவாடி** *uṟavāḍi*, பெ.(n) மாப்பிள்ளை பெண்களைக் கொண்டு கொடுத்து உறவு கொண்ட பெற்றோர் (சம்பந்தி); parent of one's son-in-law or daughter -in-law.

(உறவு – உறவாடி)

**உறவாரை** *uṟavārai*, பெ.(n) வெல்லப் பாகை உலர்த்த உதவும் பட்டையான முனை கொண்ட கோல்; iron rod used in drying molases.

(உறு–உற + வாரை)

**உறழ்ந்தோன்** *uṟaḻndōn*, பெ.(n) மாறுபட்டவன்; a man of discordant. 'ஒய்யப்போ வாளை உறழ்ந்தோன் இவ்வாணுதல்' (பரி: 20–41)

(உறழ்ந்தவன் → உறழ்ந்தோன்)

**உறழ்நிலை** *uṟaḻnilai*, பெ.(n) ஒத்த தன்மை; state of equality. "பாணர் புலி நோக்கு உறழ்நிலை கண்ட கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே" (குறு. 328.6–8)

(உறழ் + நிலை)

**உறழ்பு** *uṟaḻbu*, பெ.(n) வேறுபாடு; admission of an option in the combination of words in regard to a letter undergoing a change or remaining unchanged. "இயல்பா குநவும்

உறழா குநவுமென்று ஆயீரியல வல்லெழுத்து வரினே'' (தொல். 5-9)

(உறழ் → உறழ்பு)

**உறிக்காவாளர்** *uri-k-kāvāḷār,* பெ.(n) உளித்தொங்கும் காவடியைச் சுமப்போர், இடையர், those who bear balancing pole for carrying, burdens, ''மறித்தோண் நவியத்து உறிக்கா வாளரொடு'' (சிலப். 15-205)

(உறிக்கா + ஆளர்)

**உறுக்கல்** *urukkal,* பெ.(n) பாய்தல்; jumping. 'குப்புற;; உகளுதல் குதித்தல் பாய்தல் உறுக்கலும் மதித்தலும் உரைப்பா அகற்கே' (நிக.தி. 9:57-58)

(உறு → உறுக்கு → உறுக்கல்)

**உறுத்து-தல்** *uruttu-* 5 செ.குன்றாவி.(v.t) செலுத்துதல்; to send ''முகத்து உறுப்பு ஒத்த வகையால் விரல் உறுத்தி வாய்பூசல்'' (ஆ.கோ.27)

**(உறு → உறுத்து)**

**உறுப்பாண்மை** *uruppāṇmai,* பெ.(n.) உறுப்பினர் தகுதி; membership.

*[உறுப்பு+ஆள்+மை]*

**உறுப்பில் பிண்டம்** *uruppil-piṇḍam,* பெ.(n) கருவில் வடிவுறுமுன் சிதைந்த தசைப்பிண்டம்; aborted embryo. ''சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும்'' (புறநா. 28)

(உறுப்பு + இல் + பிண்டம்)

**உறுபெயர்** *urupeyar,* பெ.(n) பெரும்புகழ்; great fame. 'ஒப்புவழி உவத்தல் உறு பெயர் கேட்டல்' (தொல். 24-22)

(உறு + பெயர்)

**உறுமிப்பு** *urumippu,* பெ. (n.) வேக்காடு, புழுக்கம்; sultry.

*[உருமம்-உறும்-உறுமிப்பு]*

**உறுவோன்** *uruvōṉ,* தொடங்குவோன்; a man who commences. ''அப்பொருள் நிகழ்வும் கட்டும் வீடும் மெய்ப்பட விளம்பு என விளம்பல் உறுவோன்'' (மணிமே. 27-169-70)

(உறு - உறுவோன்)

**உறை** *urai,* பெ.(n) தவசம் கொட்டி வைக்க உதவும் பெரிய மண் தாழி; a barrel like earthen vessel used to store foodgrains,

(உறு - உறை)

**உறைக்காலம்** *urai-k-kālam,* பெ.(n) வெண்கலக் காலம்; bronze age.

(உறை + காலம்)

**உறைகாரன்** *urai-kāran,* பெ.(n) காரோடன் (சிலப். 5, 32, உரை), sheath maker.

*[உறை+காரன்]*

**உறைகோடு-தல்** *urai-kōḍu-,* செ.கு.வி. (v.i) பருவமழை பெய்யாதொழிதல் (குறள் 559), to fail, as rain in its season

(உறை + கோடு)

**உறைப்பெட்டி** *urai-p-petti,* பெ.(n) நெல் குத்தும்போது சிதறாதவாறு உரலைச் சுற்றிப் பொருத்தியிருக்கும் நார்க்கூடை; a circular frame work of fibre to keep around mostar in pounding.

(உறை + பெட்டி)

**உன்னம்** *uṉṉam,* பெ. (n.) படகு; boat



# ஊ

**ஊக்கறை** *ūkkaṟai,* பெ. (n.) ஒழுங்கான கொம்பு, நிறம், உறுப்புகள் இல்லாத தோற்றத்தில் அருவருக்கத் தக்க மாடுகள்; ugly cattle.

*[ஊக்கு–ஊக்கறை]*

**ஊக்குநர்** *ūkkunar,* பெ.(n) முயல்பவர்; one who motivates, prompts. 'உள்ளம் அழிய ஊக்குநர் மிடல்தடிந்து' (பதிற். 13–18)

(ஊக்கு + நர்)

**ஊகாமுள்** *ugā-muḷ,* பெ.(n) ஊகம் புல்லின் முள்; spring them of broomstick - grass

(ஊகம் + முள்)

**ஊகாரம்** *ūkāram,* பெ.(n) உயிர்நெட்டெழுத்து ஊ; the long vowel u "ஊ காரம் நவவொடு நவிலா" (தொல். 2–42)

(ஊ + காரம் – காரம் எழுத்துச் சாரியை)

**ஊங்காரம்** *ūṅgāram,* பெ. (n.) பெரிதாக ஓசை எழுப்புதல்; to make loud noise. *'உன் ஊங்காரம் என்னிடம் செலிக்காது'*

*[ஊ–ஊங்காரம்]*

**ஊச்சி** *ūcci,* பெ. (n.) நத்தை; snail.

*[ஊ–ஊச்சி]*



**ஊசாட்டம்** *ūsāṭṭam,* பெ. (n.) ஒற்று அறிதல்; நோட்டம் பார்த்தல்;to spy. *'அவன் மெல்ல வந்து ஊசாட்டம் பார்க்கிறான்'*

*[ஊசு–ஊசாட்டம்]*

**ஊணுழைப்பு** *ūṇ-uḻaippu,* பெ. (n.) உணவுக் காக உழைத்தல்; to toil for bread.

*[ஊண் + உழைப்பு]*

**ஊசிக்காந்தம்** *ūsi-k-kāndam,* பெ.(n) இரும்பை இழுக்குங் காந்தக்கல்; loadstone magnet.

*[ஊசி+காந்தம்]*

**ஊசிவேர்** *ūci-vēr,* பெ.(n) சிறுவேர்; tiny root, thin as a needle. "ஊசிவேரோடும் பக்க வேரோடும் மாய்த்து" (ஈடு, 1, 2, 3, ஜீ)

(ஊசி + வேர்)

**ஊஞ்சில்** *ūnjil,* பெ.(n) உசில்; black sirissa.

(ஊஞ்சு + இல்)

**ஊட்டுகொடு–த்தல்** *ūṭṭu-koḍu-,*பெ. (n.) காவு கொடுத்தல்; to offer for slaughtering.

*மறுவ. காவு*

*[உண்–ஊட்டு + கொடு]*

**ஊடகங்கள்** *ōḍagaṅgaḷ,* பெ. (n.) அன்றாட நடவடிக்கைகளை வெளிப்படுத்த உதவும் சாதனம்; medium.

*[ஊடகம் + கள்]*

**ஊடகத்திரளி** *ūḍaga-t-tiraḷi,* பெ.(n) மீன் வகை (வின்); a kind of fish

(ஊடகம் + திரளி)

**ஊடுபயிர்** *ūḍupayir,* பெ. (n.) மிளகாய், கத்தரி, மற்றும் பிறகாய்கறிச் செடிகளின் வரப்பில்

ஊடுபயிராக வேறொரு பயிரை விளைவித்துப் பயன்பெறல்; a side crop, or by crop.

மறுவ. ஊடு சாகுபடி.

*[ஊடு+பயிர்]*

**ஊட்டுநள்** *uttunal,* பெ.(n) உண்பிப்பவள்; woman who feeds. பசி களைய ஒடுகைக் கொண்டு நின்று ஊட்டுநள் போல் (மணிமே. 18:115–6)

(ஊட்டு + நள்)

**ஊத்தம்** *ūttam,* பெ. (n.) திமிர்; arrogance

*[ஊது – ஊத்தம்]*

**ஊத்தை குடியன்** *ūttai-kudiyan,* பெ.(n) ஒரு பேய் (பிசாசம்) (யாழ். அக); a goblin

(ஊத்தை + குடியன்)

**ஊதாவூமத்தை** *ūdāūmattai,* பெ.(n) ஊமத்தை வகை; purple datura.

(ஊதா + ஊமத்தை)

**ஊதுகணை** *ū-du-kaṇai,* பெ.(n) கணை நோய் வகை; a wasting disease of childhood

(ஊது + கணை)

**ஊதுகரப்பான்** *ū-du-karappāṉ,* பெ.(n) குழந்தைகளுக்கு வரும் கரப்பான்நோய் வகை (மூ.அ); an eruptive disease of children, resulting from bad humours in the system and attended with swelling of the body.

(ஊது + கரப்பான்)

**ஊதுபுரளி** *ūtupurali,* பெ. (n.) 1. வயிறு ஊதிப் போகும் நோய் வகை; a disease. 2. பொய்; lie.

**ஊதுமாந்தம்** *ūdu-māndam,* பெ.(n) குழந்தைகளுக்கு மாந்தத்தால் வயிறு விம்மும் நோய் வகை; abdominal swelling brought on by indigestion, a disease of children. "ஊதுமாந்தம்விட் டோடுவ துண்மையே" (பாலவா. 218)

(ஊது + மாந்தம்)

**ஊதுவழலை** *ū-du-valalai,* பெ.(n) ஒரு வகைப் பாம்பு; a kind of brown snake.

மறுவ. ஊது சரட்டை



**ஊமைக்காரி** *ūmaikkāri,* பெ. (n.) மணி பிடிக்காத வெற்றுக் கதிர்; empty corn.

மறுவ. ஊமைக்கதிர்

*[ஊமை+காரி]*

**ஊமைக்குறும்பு** *ūmai-k-kurumbu,* பெ. (n.) அமைதியான குறும்புத் தனம்; mischief.

**ஊர்க்கட்டு** *ūrkkattu,* பெ. (n.) ஊர் ஒழுங்குமுறை; ஒற்றுமை.; integrity.

*[ஊர்+கட்டு]*

**ஊர்க்காறுபாறு** *ūr-k-kārupāru,* பெ.(n) ஊர் நேர்கேட்பு (விசாரணை), உசாவல்; managment of the public affairs of a village or town.

*[ஊர் + காறுபாறு]*

**ஊர்க்கோட்டம்** *ūr-k-kōttam,* பெ. (n) கயிலாயம்; place in Himalayas supposed to be the abode of Lord Sivan "உச்சிக்கிழான்

கோட்டம் ஊர்க்கோட்டம் வேற் கோட்டம்'' (சில. 9:11)

(ஊர் + கோட்டம் – கோடு → கோட்டம்)

**ஊர்காப்பாளர்** *ūr-kāppāḷar,* பெ. (n) ஊர்க் காவலர்; village guard. "நூல் வழிப் பிழையா நுணங்கு தேர்ச்சி ஊர் காப்பாளர்" (மதுரைக். 646–7)

(ஊர் + காப்பாளர் கா– காப்பு + ஆளர்)

**ஊர்ச்சுற்று** *ūr-c-cuṟṟu,* பெ.(n) நகச் சுற்று; whitlon. ஊர்ச்சுற்றின் மேலே உரல் விழுந்ததுபோல். (பழ.)

மறுவ. உகிர்ச்சுற்று, நகச்சுற்று

(உகிர்+சுற்று–உகிர்ச்சுற்று+ஊர்ச்சுற்று கொ.வ.)

**ஊர்திறம்** *ūr-tiṟam,* பெ.(n) செம்மணி; கெம்பு வகை; inferior ruby which improves in lustre when placed over a thin coloured plate of gold

*[ஊர் + திறம்]*

**ஊர்ப்புகைச்சல்** ūr-p-pugaiccal, பெ.(n) 1. ஊரில் தீய நிமித்தமாகத் தோன்றும் புகை நிறம்(வின்); appearence of smoke at a distance, regarded as an inauspicious omen. 2. பொய்ப்புரளி (ஊர்வதந்தி); rumour

(ஊர் + புகைச்சல்;. புகை → புகைச்சல்)

**ஊரிழவு** *ūrilavu,* பெ. (n.) ஊரில் உறவினர் அல்லாதார் வீட்டு இறப்பு நிகழ்வு; a death of non-relatives.

*[ஊர்+இழவு]*

**ஊரடங்கு–தல்** *ūradaṅgu,* செ.கு.வி. (v.i.) ஊரார் துயிலுதல்; sleeping time of the people.

*[ஊர்+அடங்கு]*

**ஊரடங்குஉத்தரவு** *ōraḍaṅguuttaravu,* பெ. (n.) மக்கள் வெளியே நடமாடக்கூடாது என்று சட்டப்படியாகப் பிறப்பிக்கப்பட்ட ஆணை; curfew.

*[ஊரடங்கு + உத்தரவு]*

**ஊரர்** *ūrar,* பெ.(n) ஊரில் வாழ்பவர்; inhabitants of a village or town. "மலை இடையிட்ட நாட்டரும் அல்லர், மரந்தலை தோன்றா ஊரரும் அல்லர்" (குறுந். 203:1–2)

*[ஊர் + அர்]*

**ஊராங்கி** *ūrāṅgi,* பெ. (n.) ஊர்வலம்; கலியாண ஊர்வலம். procession.

*[ஊர்–ஊராங்கி]*

**ஊரார்வீடு** *ūrār-viḍu,* பெ. (n.) அயலார் வீடு; house of others.

*[ஊர்+ஆர் + வீடு]*

**ஊருடன்மூலி** ūrudanmūli, பெ.(n) முருங்கை (சங்.அக.); horse - radish tree.

(ஊர் + உடல் + மூலி)

**ஊருவாரக்கொடி** ūruvārakkoḍi, பெ.(n) வெள்ளரி (சித்.அக.) mottled melon

*[உருவாரம் + கொடி]*



**ஊரெட்டு** ūr-eṭṭu, பெ.(n) வரி வகை (தெ.இ.க.தொ. 2. பக். 521); a kind of tax

*[ஊர் + (அட்டு) எட்டு]*

**ஊரை** *ūrai,* பெ.(n) மலைநெல் (நாமதீப); mountain paddy.

மறுவ வரை. நெல் (ஊர் – ஊரை)

**ஊழ்கனி** *ūlkaṉi,* பெ.(n) பதனழிந்த பழம்; rotten or decayed fruit. "உடம்பொடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர்" (சீவ. 13–244)

(ஊழ் + கனி)

**ஊழ்விதி** ūḻ-vidi, பெ.(n) பழவினைப் பயன் (வின்); inevitable result of deeds done in former births.

மறுவ ஊழ்வினை

**ஊழக்காதன்** *ūḻakkādaṉ,* பெ. (n.) சீழ் வழியும் காதுகளை உடையவன்; one who has ear with pus.

*[ஊழை+காதன்]*

**ஊழப்பாடி** *ūḻappaḍi,* பெ. (n.) குழப்பம்; turmoil.

*[உழப்பு+அடி]*

**ஊழலாற்றி** *ūlaḻārri,,* பெ.(n) மரவகை (தைலவ. தைல. 124); a medicinal tree

(ஊழல் + ஆற்றி)

**ஊழிநாயகன்** *ūḻi-nāyagan,* பெ.(n) ஊழிமுதல்வன் பார்க்க; see ūḻi-mudalvan. "அழியா ஆழிநாயகன்" (கந்தபு. தெய்வ. 194)

(ஊழி + நாயகன்)

**ஊழிநீர்** *ūḻi-nīr,* பெ.(n) உலக முடிவிலுண்டாகும் கடல் கோள் (வின்); water which prevails at the last deluge which submerges the world.

(ஊழி + நீர்)

**ஊளைநண்டு** *ūḷainaṇḍu,* பெ. (n.) மிக மென்மையான ஓடுகளைக் கொண்ட, உணவிற்காகாத வெள்ளை நிற நண்டுகள்; white crabs which are not edible.

மறுவ. பால் நண்டு

*[ஊழ்–ஊள்–ஊளை+நண்டு]*



**ஊறாப்பு** *ūṟāppu,* பெ.(n) தினவு (இலக்); itching sensation.

*[உறு–ஊறு–ஊறாப்பு]*

**ஊன்கண்** *ūṉkaṇ,* பெ.(n) புறக்கண்; physical eye, opp.aga-k-kan. "ஊன் கணினார் கட்டு உற்றதை உரைக்கும்" (மணிமே. 21–128)

(ஊன் + கண்)

**ஊடுதட்டு** *ūḍutaṭṭu,* பெ. (n.) கைகலப்பு; clash.

*[ஊடு+தட்டு]*

**ஊறி** *ūri,* பெ. (n.) பெரிய உடம்பும் பெரிய வயிறும் உடையவன்; a big bellied fat

*[இனம்–எனம் (கொ.வ.]*

# எ

**எக்கட்டான்** *ekkaṭṭāṉ,* பெ. (n.) பிஞ்சு நிலக்கடலை, எள்ளுக்காய் போன்றவற்றின் மேல் அமர்ந்து அவற்றினுள்ளே இருக்கும் பாலை விரைவாக உறிஞ்சிச் சக்கையாக்கும் ஒரு வகைப் பூச்சி; an insect *'எள்ளுக்காயில் மருந்து போடப்பா; இல்லையானால் எக்கட்டான் உறிஞ்சிவிடும்.'*

*[இக்கு—எக்கு—எக்கட்டான்]*

**எக்கண்டம்** *ekkaṇḍam,* பெ. (n.) கேலி, கிண்டல், ஏகடியம்; redicule.

க. சக்கந்த

*[எக்கு—எக்கண்டம்]*

**எக்காளம்** *ekkālam,* பெ. (n.) கும்மாளம்; over enjoyment. *'எக்காளம் போடாமல் சும்மா இருங்கப்பா'*

*[எக்கு—எக்காளம்]*

**எகத்தாரு** *egattāru,* பெ. (n.) ஏராளம், நினைத்ததை விட மிக அதிகம்; abundance.

*[எகம் + (தரல்) தாரு]*

**எச்சப்பிறவி** *ecca-p-piṟavi,* பெ. (n.) ஊனமுற்றபிறவி; defect by birth

*[எச்சம் + பிறவி]*

**எச்சவினை** *eccaviṉai,* பெ. (n.) வினையெச்சம்; adverb.

*[எச்சம் + வினை]*

**எச்சிஇளைச்சி** *ecciiḷaicci,* பெ. (n.) மெலிவு; feeble. *'ஆள் எச்சி இளைத்துப் போனான்.'* slimness.

*[எய்த்து+இளைத்து]*

**எசலிப்பு** *esalippu,* பெ. (n.) நண்பர்களுக்குள் போட்டி; competition among friends.

*[எகல்—எகில்—எசலிப்பு]*

**எணல்** *eṇal,* பெ. (n.) நிழல்; shadow.

*[இள்—எள்—எண்—எணல்]*

**எதரம்** *edaram,* பெ. (n.) கொலைவெறி; roguish fury.

*[எதிர்—எதிரம்]*

**எதிர்நீச்சல்** *edirnīccal,* பெ. (n.) எதிர்த்து வாழ்தல்; to meet the challenges

*[எதிர் + நீச்சல்]*

**எதிர்ச்சொல்** *edir-c-col,* பெ. (n.) ஒரு சொல்லின் பொருளுக்கு நேரெதிரான பொருளுடைய சொல்; antonyml, opposite.

*[எதிர் + சொல்]*

**எதிர்பார்ப்பு** *edirpārppu,* பெ. (n.) முன் கூட்டியே எண்ணிப்பார்ப்பது; hope, expectation.

*[எதிர் + பார்ப்பு]*

**எதிர்மறைப்பெயரெச்சம்** *edirmaṟai-p-peyareccam,* பெ. (n.) எதிர்மறைப்பொருள் தரும் எச்சச்சொல்; negative (adjective.)

*[எதிர்மறை + பெயர் + எச்சம்]*

**எதிர்மறைவினையெச்சம்** *edirmaṟaivinai-y-eccam,* பெ. (n.) எதிர்மறைப் பொருள் தரும் எச்சவினை; negative adverb.

*[எதிர்மறை + வினை + எச்சம்]*

**எரசல்** *erasal*, பெ. (n.) தூவானம்;drisling.

*[இறைச்சல்–எரசல் (கொ.வ.)]*

**எரிநீரம்** *eri-nīram*, பெ.(n.) பட்ட இடத்தில் அல்லது பொருள்களை எரித்து விடும் தன்மையுள்ள நீர்மம்; acid which corrode or burn the parts of which they are applied.

*[எரி+ நீரம்]*

**எருமைநாக்கு** *erumainākku*, பெ. (n.) ஒருவகைப்புல்; a kind of grass.

*[எருமை+நாக்கு]*

**எழுத்துவிளக்கு** *eḷuttu-viḷakku*, பெ.(n.) தமிழ் மொழியிலுள்ள முப்பது எழுத்துகளைக் குறிக்கு முகத்தான் கோயிலிலேற்றப் பெறும் முப்பது விளக்கு; row of 30 lights set in temples, as representing the 30 letters

*[எழுத்து + விளக்கு]*

**எளந்தமனசு** *elantmanasu*, பெ. (n.) இளகிய, இரக்கம் நிறைந்த மனம்; compassion pity.

*[இள–எளந்த+மனசு]*

**எளந்தரம்** *eḷandaram*, பெ. (n.) ஆண்குறி இருக்குமிடம்; male organ. *'எளந்தரத்திலே மிதித்துவிட்டான்'*

*[இளம்+தரம்]*

**எளவாங்கி** *elavāngi*, பெ. (n.) தைக்கும் ஊசி; needle.

*[இலை – எள+வாங்கி]*

**எறைக்கான்** *eṟaikkāṉ*, பெ. (n.) எலி வளையில் உள்ள கள்ள வழி;secret hole in rafter.

*[இறை–இறைக்கன்]*

**எனம்** *eṉam*, பெ. (n.) வசதி;well to do. *'நல்ல எனமான ஆளு' (இ.வ.)*

*[இன் – எனம்]*

# ஏ

**ஏங்கல் தாங்கல்** *ēngaltāngal*, பெ. (n.) தக்க தருணம், இன்றியமையாத நேரம்;come in time.

*[ஏங்கல்+தாங்கல்]*

**ஏத்தகுடி** *ēttakuḍi*, பெ. (n.) பெண் எடுத்த குடி; bride's house.

*[ஏற்ற(ஏத்த)+குடி (கொ.வ.)]*

**ஏடாசி** *ēḍāsi*, பெ. (n.) வேடிக்கைப் பேச்சு;reduculing remarks.

*[ஏளனம்–ஏடம்]*

**ஏராங்கடேசி** *ērankaḍēsi*, பெ. (n.) ஆகக் கடைசி; at last.

*[ஈறாம்–ஏராம்+கடைசி]*

**ஏழ்மை** *ēḷmai*, பெ. (n.) 1. வறுமை; poverty. 2. பொருள்வசதியின்மை; want of means.

*[இல்–இம்–ஏழ்–ஏழ்மை]*

*இரண்டு ஒகாரங்கள் சேர்ந்து நெடில் ஓகாரம் ஆகும் என்பது சிந்துவெளி நாகரிகக் காலத்தமிழர் எழுத்து முறை. + குறி மகர மெய் குறித்தது.இவை ஒன்று சேர்ந்து ஓங்காரவடிவம் கொண்டது.*

**ஏழரைச்சேவல்** *ē[arai-c-cēval*, பெ. (n.) பின்னிரவு 3 மணிக்குக் கூவும் சேவல்; cock crowing at 3 A.M.

**மறுவ. ஏழரைக்கோழி**

*[ஏழ+அரை+சேவல்]*

யாமக்கோழி கூவுவதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். விடியலுக்கு முன்பு இரவு 3 மணிக்குக் கோழி கூவுதை மலையாள நாட்டில் ஏழரைக்கோழி கூவுகிறது என்பர். பழங்காலக் கணக்குப்படி இரண்டரை நாழிகை கொண்ட கால அளவு இக்காலத்தில் ஒரு மணி நேரத்தைக் குறிக்கும். ஏழரை நாழிகை மூன்று மணியைக் குறிப்பதால் இரவு பன்னிரண்டு மணிக்குப் பிறகு பின்னிரவு 3 மணியளவில் கூவும் கோழியை ஏழரைக் கோழி என்றனர். இதிலிருந்து வெள்ளைக்காரர்களுக்கு முன்பே ஒரு நாளை இரவு பன்னிரண்டு மணியிலிருந்து தொடங்கும் வழக்கம் தமிழ்நாட்டில் நிலவியது என்பதை உய்த்துணரால். கணியம் (நூதகம்) கணிக்கும் சிலர் காலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரை ஒரு நாள்என்று கணிப்பதும், முகமதியர் ஒரு நாள் மாலை 6 மணி முதல் மறுநாள் மாலை 6 மணி வரை ஒரு நாள் என்று கணிப்பதும் நாளடைவில் ஆங்காங்கு தோன்றிய வழக்கங்களாகும்.

சேவல் கூவுவதைக் கோழி கூவுகிறது எனும் மக்கள் வழக்கு மரபுவழுவமைதி.

**ஏழாம்பொருத்தம்** *ē[āmporuttam*, பெ. (n.) ஒருவர் மற்றொருவரோடு ஒத்துப் போக முடியாத நிலை, இருவரிடையே காணப்படும் இணக்கமற்ற நிலை; incompatibility.

*[ஏழாம்+பொருத்தம்]*

**ஏளா** *ē[ā*, பெ. (n.) கணவன் மனைவியை அழைக்கும் சொல்;a word of endearment used by husband to address wife.

***மறுவ. ஏட்டி, அடியே, ஏய், ஏபிளா***

*[யாழ்–ஏழ–ஏளா]*

**ஏற்றகுடி** *ē[rakudi*, பெ. (n.) பெண் எடுத்த குடி; brides house.

*[ஏற்ற+குடி]*

# ஐ

**ஐந்தாம்படை** *aindāmpadai*, பெ. (n.) (ஒரு நாட்டை அல்லது அமைப்பைச் சார்ந்தவர்களாக இருந்து கொண்டே) எதிரிகளுக்கு உதவி செய்வோர்; fifth column.

*[ஐந்தாம் + படை]*

**ஐயரவு** *iyaravu*, பெ. (n.) மனக்கூச்சம்; மனத்தில் தோன்றும் ஒருவித அருவருப்பு; a slid/at feeling/detachment.

*[ஐ+அரவு]*

**ஐயாவு** *ayyāvu*, பெ. (n.) சிறு குழந்தைகளைச் செல்லமாக அழைக்கும் சொல்; a word of endearment while referring to children.

*[ஐயா – ஐயாவு]*

*[ஒற்றை–ஒத்த+பெயரி–பேரி]*

# ஒ

**ஒக்கலும்மக்களும்** *okkalummakkalum*, பெ. (n.) உறவினர்கள் அனைவரும்;all relatives.

*[ஒக்கல்+உம்+மக்கள்+உம்]*

**ஒச்சம்** *occam*, பெ. (n.) 1. குறைபாடு; defect. 2. மாட்டுச் சந்தைச் சொல்லாட்சி; a term used in cattle market.

*[உத்து – ஒத்து – ஒச்சம். உழவர், தரகர் வழக்கு மதுரை]*

**ஒச்சாயி** *occāyi,* பெ. (n.) முக்குலத்தோரால் வழிபடப்படும் பெண் தெய்வம்; female deity worshipped by certain sections of Mukkulattor.

*[உத்தம்–உச்சம்–ஒச்சம்+ஆயி (உயர்ந்த தெய்வம்]*

முக்குலத்தோரிடையே ஒச்சனன், ஒச்சாண்டி ஒச்சித்தேவர் எனும் இயற்பெயர்கள் வழங்கி வருவது குறிப்பிடத்தக்கது.

**ஒட்டுப்படை** *oṭṭu-p-paḍai,* பெ. (n.) ஒட்டுச்சுவர்; supporting wall.

*[ஒட்டு + படை]*

**ஒத்தப்பேரன்,** *otta-p-pēran,* பெ. (n.)தனியாள்; lonely person.

*[ஒற்றை–பெயரன்]*

**ஒத்தப்பேரி** *otta-p-pēri,* பெ. (n.) தனியாளாக இருக்கும் பெண்; lonely woman. *'ஒத்தப்பேரி நான் என்ன செய்வேன்'*

*[ஒற்றை–ஒத்த+பேரி]*

**ஒப்புநோக்குதல்** *oppunōkku-,* பெ. (n.) ஒன்றை மற்றொன்றோடு ஒப்புநோக்குதல் இணைத்துக் காணுதல்; comperision, contrast.

*[ஒப்பு + நோக்கு]*

**ஒப்பிலி** *oppili,* பெ. (n) ஒப்பில்லாதவள்; who is incomparable.

*[ஒப்பு + இல்லி]*

**ஒப்பேறாதது** *oppērādadu,* பெ. (n.) கைசேராதது, பிழைக்காதது; that not regainable.

*[ஒப்பு–ஏறாதது]*

**ஒயிலாட்டம்** *oyilāṭṭam,* பெ. (n.) கையில் வண்ணத்துணிகளை வைத்துக் கொண்டு கும்மி அடிப்பதுபோல் சுற்றிவந்து ஆடும் ஒரு நாட்டுப்புற நடனம்; a kind of folk dance by a group in a circle waving colourful handkerchïef.

த.வ. ஒயில்கும்மி

*[ஒயில் + ஆட்டம்]*

**ஒருஆளம்பனை** *oruāḷampaṉai,* பெ. (n.) 80 பனை மரங்கள் கொண்டது என்ற கணக் கீட்டுச் சொல்; a group of 80 trees.

*[ஒரு+ஆள்+அம்+பனை]*

**ஒருங்கிணை–த்தல்** *oruṅgiṇai-,* செ. குன்றாவி. (v.t.) ஒன்றாக இணைத்தல் அல்லது சேர்த்தல்; link up, integrate. 2. ஒன்றின் கீழ்க் கொண்டு வருதல்; bring under, compile.

*[ஒருங்கு + இணை–,]*

**ஒரும்பு** *orumbu,* பெ. (n.) வறட்சி, பற்றாக்குறை, புழுக்கம்;draught. *'இந்த ஆண்டு ஒரும்பாகி விட்டது மழையே கிடையாது'.*

*[உரும்பு–ஒரும்பு]*

**ஒருமனதாக** *orumaṉadāga,* வி.எ. (adv.) கருத்து வேற்றுமை இல்லாமல்; unanimously.

*[ஒரு + மனது + ஆக]*

**ஒருவழிப்பாதை** *oruvaḻi-p-pādai,* பெ. (n.) வாகனங்கள் ஒரு திசையில் மட்டுமே போவதற்கு அனுமதிக்கப்பட்ட வழி; one-way

*[ஒருவழி + பாதை]*

**ஒழுகுஒழுகாய்** *oḻukuoḻukāy,* பெ. (n.) வரிசை வரிசையாய்;line or row one by one.

*[ஒழுகு+ஒழுகு+ஆய்]*

**ஒன்றரைவாடம்** *oṉṟaraivāḍam,* பெ. (n.) ஒருநாள் விட்டு ஒருநாள்; alternative day.

*[ஒன்று+ஒறு+வாடம்]*

**ஒன்றிணை–தல்** *oṉṟiṇai,* பெ. (n.) ஒன்றாகச் சேர்தல்; to get united.

*[ஒன்று + இணைத்தல்]*

**ஒடுக்குமுறை** *oḍukkumuṟai,* பெ. (n.) கண்டித்தொடுக்குகை; repressive measure.

*[ஒடுக்கு + முறை]*

**ஒரேருழவர்** *ōrēruḻavar,* பெ. (n.) ஒரே ஏர்க்காரர்; a man of single of plough.

*[ஓர் + ஏர் + உழவன்]*

**ஒங்காரம்** *ongānam,* பெ. (n.) சுவசுதிக் எனப்படும் வலச்சுற்றான மங்கலக் குறியீடு; auspicious symbol *swastik.*

*[ஓம் + காரம் – ஒங்காரம்]*



**ஒங்காளம்** *ongālam,* பெ. (n.) அருவருப்பு; dislike. *'அவன் நடந்து கொள்வதை நினைத்தால் ஒங்காளமா இருக்கிறது'.*

*[ஓக்காளம் –ஒக்களிப்பு-ஒங்காளம்]*

**ஒச்சம்** *ōccam,* பெ. (n.) ஓசை, ஒலி;sound. *'மணியோச்சம் கேட்கிறது'.*

*[ஓசை–ஒச்சம் (கொ.வ.)]*

**ஒட்டுநர்** *oṭṭunar,* பெ. (n.) பேருந்து, மகிழுந்து முதலியவைகளை ஒட்டும் பணிபுரிபவர்; driver.

*[ஒட்டு – ஒட்டுநர்]*

**ஒமலிப்பு** *ōmalippu,* பெ. (n.) ஒவலை; hatred.

*[ஒமல்–ஒமலிப்பு]*

**ஒமாங்குளி** *ōmāṅguli,* பெ. (n.) குரும்பையில் (குரும்பலில்) பழுத்த மிகச் சிறிய பனம் பழம்;a small palm fruit.

*[ஒமம் + குளி]*

**ஒய்வூதியம்** *ōyvūdiyam,* பெ. (n.) அரசு பணியிலிருந்து ஒய்வு பெறுபவருக்கு ஒவ்வொரு மாதமும் அரசாங்கத்தால் வழங்கப் படுகின்ற ஊதியம்; pension.

*[ஒய்வு + ஊதியம்]*

**ஒயாக்கண்ணு** *ōyākkaṇṇu,* பெ. (n.) மாறுகண், ஒன்றரைக் கண்; squint eye.

*[ஒய்–ஒயா+கண்ணு]*

**ஒர்சல்** *ōrsal,* பெ. (n.) கணக்குத் தீர்த்தல்; to settle in account.

*[ஓர்–ஒரிசல் – ஒர்சல்]*

**ஒர்மை** *ōrmai,* பெ. (n.) நினைவு, நினைப்பு; memory.

*ம. ஓர்ம.*

*[ஓர்–ஒர்மை]*

**ஒரங்கட்டு** *ōraṅkaṭṭu,* பெ. (n.) புறக்கணித்தல்; neglecting.

*[ஓரம் + கட்டு]*

**ஒரணேர்** *oraṇēr,* பெ. (n.) சற்றொப்ப 20 குறுக்கை (ஏக்கர்) நிலம் கொண்ட வேளாண் ஆளுவம்; a farm of an individual management.

*[ஓர்+ ஆள் + ஏர்]*

**ஒரை** *ōrai,* பெ. (n.) ஒரு தடவை; once. *"ஒரு ஒரை சொன்னால் போதும்; புரிந்து கொள்வோம்"*

*[ஓர்–ஒரை]*

**ஒலமடைதல்** *ōlamaḍai-,* செ.கு.வி. (v.i.) எதிர்பாராத துக்கம்;unexpected grief.

*[அவலம்–ஒலம்+அடைதல்]*

**ஒவணியம்** *ovaṇiyam,* பெ. (n.) மருத்துவம் முதலான கவனிப்பு;complete care including medical treatment.

*[உவணி – ஒவணியம்]*

# க

**கக்கதாசம்** *kakkadāsam*, பெ.(n) ஒசூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Hosur Taluk.

*[கக்கன் + (தாசன்) தாசம்]*

**கக்கண்டு** *kakkaṇḍu*, பெ.(n) கண் இமை நுனியில் வரும் பரு, கண்கட்டி; sty on the eye lid.

*[கண்+கண்டு-கக்கண்டு]*

**கக்கிட்டி** *kakkiṭṭi*, பெ.(n) கண்ணுக்கு அருகில் வரும் வீக்கம்; a swelling near the eye. (கொ.வ.வ.சொ.39.)

*[கண்+கட்டி–கண்கட்டி–கக்கட்டி →கக்கிட்டி .]*

**கக்கு** *kakku* பெ.(n) ஒரு வேட்டி நெய்து முடிந்தவுடன் எடுக்கும் இடை வெளி; the gap left after a dhoti in weaving. (நெ.தொ.க.55).

*[கங்கு – கக்கு]*

**கக்குவான் கயிறு** *kakkuvāṉ kayiru*, பெ.(n) குழந்தைகளின் கழுத்தில் மந்திரித்துக் கட்டப்படும் கயிறு; amulet tied around children's neck.

கக்குவான் கயிறு ஒண்ணு கட்டு புள்ளைக்குச் சரியாகப் பூடும். (உ.வ.).

*[கக்கு > கக்குவான்+கயிறு]*

**ககுபம்** *kagupam*, பெ.(n) திசை; direction. "மாதிரம், ஆசை, வம்பல், திசைப்பெயர், ககுபம் காட்டையும் ஆம்". (நிக.தி.5:5–6).

*[ககு – ககுபம்]*

**கங்கணம் கட்டு–தல்** *kanganam kaṭṭu-*, செ.குன்றாவி.(v.t.) 1. மஞ்சட்கிழங்கு கட்டிய மஞ்சள் கயிற்றை மணிக்கட்டில் கட்டும் உறுதி ஏற்பு சடங்கு; a ceremony of oath taking by way of tieing a yellow thread on the wrist. 2. முன்னோக்கம் கொள்; to preconceive notion. நீ என்ன, கங்கணம் கட்டிக்கொண்டு சண்டைக்கு வருகிறாயா. (உ.வ.).

*[கை+அங்கணம்–கங்கணம்]*

**கங்கணி** *kaṅgaṇi*, பெ.(n) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[கண் + காணி]*

**கங்கள வேடக்கும்பி** *kaṅgaḷavēdakkummi* பெ.(n) கும்மிப்பாட்டின் ஓர் ஆய்வு;

**கங்கனான அழகிய சுந்தரக்கோன்** *kanganana alagiya sundarakon*, பெ.(n) மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் தி.பி.1314 ஆம் ஆண்டு திருவோத்தூர் கோயிலுக்கு பால் இயவன்; one who are milk and ghee to the temple.

**கங்காணி** *kaṅgāṇi*, பெ.(n) கால் காணி; ¼ measure.

*[கால்+காணி]*

**கங்காளம்** *kaṅgālam*, பெ.(n) சிற்பங்களில் உள்ள தோளணி; armlet of statue..

*[கங்கு+ஆளம்]*

**கங்கு** *kaṅgu*, பெ.(n) (கம்மங்) கதிரினின்று தவசமணிகள் நீக்கப்பட்ட பகுதி; ear of corn wihout grains.

*[கல்–கங்கு(கருப்பு நிறமுடையது]*

**கங்குகட்டு–தல்** *kaṅgukaṭṭu*, செ.குன்றாவி. (v.t.) பாய் நெசவு செய்த பின்னர் அதன் ஆரங்களைச் சீவி மடித்துக் கட்டுவது; to stitch the edge of a mat after plaiting.

*[கங்கு+கட்டு]*

**கங்குநீர்** *kaṅgunir*, பெ. (n) மூன்றாம் நாள் நாற்றங்காலுக்குப் பாய்ச்சும் நீர்; irrigating to a field on third day of transplantation.

*[கங்கு+நீர்]*

மறுவ. எடுப்பு நீர்

**கங்குபத்திரம்** *kaṅgupattiram*, பெ. (n.) அம்பு; arrow.

*[கங்கு+பத்திரம்]*

**கங்குபுரட்டியடி-த்தல்** *kañgupurattiyadi-*, செ.குன்றாவி (v.t.) நெற்கதிரை சாய்த்து அடித்தல்; to thrash paddy on stalk on the ground.

*[கங்கு+புரட்டி + அடி]*

**கங்கை** *kaṅkai*, பெ.(n) கிளித்தட்டு விளையாட்டில் உட்காருவதற்கான இடத்தை அடையாளப்படுத்த போடப்படும் வட்டம்; to identify one's round - place in a game coco.

*[கொங்கு-கங்கு - கங்கை]*

**கங்கை மொள்ளு-தல்** *kaṅkaimōḷḷu-*, செ.கு.வி. (v.i.) ஏரித் தண்ணீரைக் குடத்தில் நிரப்பி அருளாடி (சாமியாடி) வருதல்; the lake water in a pot and dance with a divines grace.

*[கங்கை (நீர்) + மொள்]*

**கச்சடா** *kaccaḍā*, பெ.(n) எண்ணெய்க் கச்சல்; (கொ.வ.வ.சொ. 39.) sediment.

*[கழிச்சல் – கச்சடா]*

**கச்சல்** *kaccal*, பெ. (n.) நெய்யும் போது பயன்பாடு இல்லா நூல்; waste (thread) accumulated while leaving.

*[கழிச்சல் – கச்சல்]*

**கச்சிக்குவாச்சான்** *kachchikkuvāccāṉ*, பெ.(n) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[கச்சிக்கு + வாய்த்தான்]*

**கச்சிரம்** *kacciram*, பெ.(n) திருத்துறைப்பூண்டி வட்டத்தில் அமைந்துள்ள ஒரு ஊர்; a village in Thiruthuraipundi. இவ்வூர் தற்போது 'கச்சினம்' என்று அழைக்கப் படுகிறது.

*[கச்சில் – கச்சிரம்]*

**கச்சூர்** *kaccūr*, பெ.(n) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Thanjavur. கல்வெட்டுப்பெயர் "நித்திய வினோத நல்லூர்" என ஆயிற்று.

*[கச்சில் + ஊர்]*

**கச்சைக்கட்டி** *kaccai-k-katti*, பெ.(n) நிலக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nilakottai Taluk.

*[கச்சை (போட்டி) + கட்டி]*

**கச்சை** *kaccai*, பெ.(n) குறுகிய நீரோடை; a narrow stream.

*[கச்சு–கச்சை]*

**கசங்கு** *kasangu*, பெ.(n) கூடை பின்னப் பயன்படும் ஈச்சமரத்தின் நார்; fiber of *iccam* tree for making basket.

*[கசம்–கசங்கு]*

**கசம்** *kašam*, பெ.(n) அழுக்கு; filth.

*[கயம் – கசம்]*

**கசமுசா** *kasamusa*, பெ.(n) வெளிப்படையாகச் சொல்லாமல் முணுமுணுத்தல்; to murmur as a secret.t (கொ.வ.வ.சொ. 40.)

*[கசமுச (ஒலிக்குறிப்பு)]*

**கசறு-தல்** *kašaṟu-*, செ.கு.வி. (v.i.) நச்சரித்தல், மேலும் மேலும் விலை குறைத்துக் கேட்டல்; haggle for a trifling gain to gains.

*[கய–கச–கசறு]*

**கசாங்கு** *kašangu*, பெ.(n) ஓலைகளால் ஆன கயிறு; rope made of palm leaves.

*[கசல் – கசாங்கு]*

**கசைக்குச்சி** *kasaikucci*, பெ.(n) கலசங்களைத் தாங்கி நிற்கும் குச்சி. *(ம.வ.தொ.75.)* supporting sticks.

*[கசை + குச்சி]*

**கஞ்சம்** *kañjam*, பெ.(n) தோற்கருவி செய்யப் பயன்படும் ஒரு மாழை (உலோகம்); a metel used to make one of the leather musical insturment.

*[கஞ்சு (வெண்கலம்)–கஞ்சம்]*

**கஞ்சனூர்** *kanjanur*, பெ.(n) தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவேலங்காடு கும்பகோணம் வழிச்சாலையில் அமைந்த ஒரு ஊர்; a village in Thanjavur on way to Thiruvalangadu Kumbakkonam salai.

*[கஞ்சன் + ஊர்]*

**கஞ்சிகாய்ச்சு** *kañjikāyccu*, செ.கு. வி. (v.i.) பல்லாங்குழியில் முன்பே பிரித்து ஆடத் தொடங்குதல்; to start the game played with cowries on a *'pallānguli'*.

*[கஞ்சி + காய்ச்சல்]*

**கஞ்சிகை எழினி** *kañjigai-eluni*, பெ.(n) உருவு திரை; curtain. "கஞ்சிகை எழினியிற் கரந்து நிற்போரும்". (பெருங்.44:51).

*[கஞ்சிகை + எழினி]*

**கஞலுவார்** *kañalūvār*, பெ.(n) பத்தியால் வழிபட்டு நிற்போர்; praying the tutelary deity. "கான நாடித் திருமுன்றில் கவின கஞலுவார்" (ஒட்.5:80).

*[கஞல் = கஞலுவார்]*

**கட்கொண்டி** *katgōndi*, பெ.(n) கள்ளாகிய உணவு; toddy as a food. "கட்கொண்டிக் குடிப் பாக்கத்து" (மது.137).

*[கள் + கொண்டி]*

**கட்சி–பிரி** *katcipiri-*, செ.குன்றாவி.(v.i.) குழு விளையாட்டில் இரு அணியாக பிரிக்கும் முறை. 'உத்தி பிரிக்கும் முறை'; form two teams in group events.

*[கட்சி + பிரி]*

**கட்டக்குருத்து** *katta-k-kuruttu*, பெ.(n) அறுவடை செய்தபின் எஞ்சியிருக்கும் பயிரின் அடிப்பகுதி மீண்டும் தழைத்தல்; after cutting the top part of the stalk the stem let to grow up as sprout.

*[கட்டை + குருத்து]*

**கட்ட கழனி** *kattakkalani*, பெ.(n) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in Chengalpattu.

*[கட்டை + கழனி]*

**கட்டகொட்டு** *kaṭṭakoṭṭu*, பெ. (n.) தேய்ந்துபோன மண்வெட்டி. (வ.வ.வே.க.16.) wornout shovel.

*[கட்டை + கொட்டு]*

**கட்பொம்முஇசை** *kaṭṭapommuisai*, பெ. (n.) கரகாட்டத்திற்குரிய, நையாண்டியிசையில் இடம்பெறும் கட்டபொம்மு கூத்து, நாடகம் இவற்றின் இசை; musich of tolk dance.

*[கட்டபொம்மு + இசை]*

**கட்டம்** *kaṭṭam*, பெ. (n.) ஆடவர் விளையாட்டு வகை (மதுரை); a game played by men.

*[கட்டு – கட்டம்]*

**கட்டவிளையாட்டு[1]** *kaṭṭaviḷai-y-āṭṭu*, பெ. (n.) 1. கட்டங்கள் வரையப்பட்டு காய்களை நகர்த்தி விளையாடும் ஆட்டம்; a game played with cowries in a chess.

*[கட்டம் + விளையாட்டு]*

சில மூன்று கோடுகள், நான்கு கோடுகள், மூலைக்கோடுகள் எனப் பல வகைகள் உள்ளன.

**கட்டவிளையாட்டு[2]** *kaṭṭaviḷai-y-āṭṭu*, பெ.(n) ஆடுபுலி போன்ற விளையாட்டு; one of the country game using dice.

*[கட்டம் + விளையாட்டு]*

**கட்டாஞ்சி** *kattañci*, பெ.(n) கவைகளின் நாற்புறமும் முட்களைக் கொண்டு திண்மையாக வளரும் முட்செடி; a thorn plant.

*[காட்டு + ஆஞ்சி]*

**கட்டாய்இணைதல்** *kattāy-iṇaidal*, பெ.(n) இடுப்பைக் கையால் வளைத்துக் கொண்டு மற்றவர்களைத் தொடும் விளையாட்டு; a kind of play.

*[கட்டு + ஆய் + இணைதல்]*

**கட்டால்** *kaṭṭāl*, தொ.பெ.(vbl.n.) அழித்தல்; destruction. "உம்முடைய கைக்கு அடைந்தான் உயிர்காக்கக் கடவீர், எங்களைக் கட்டால்" (யுத்.16:349).

*[கடு (வெட்டு) – கட்டு + ஆல்]*

**கட்டாலகன்** *kattalagan*, பெ.(n) ஓர் இயற்பெயர்; proper name.

*[கட்டல் + (அவன்) அகன்]*

**கட்டாளம்** *kaṭṭāḷam* , பெ.(n) ஒரு சொற்கட்டுடன் ஓர் ஒற்று எழுத்தைக் கூட்டி அகலமாக்குதல்; add and joint lettter in sentences to increase the size.

*[கட்டு + ஆளம்]*

**கட்டிக்கயிறு** *kaṭṭikkayiṟu*, பெ. (n.) 3 பிரிகளைக் கொண்டது; rope made of trible twist.

*[கட்டி + கயிறு]*

**கட்டிப்பொன்** *kaṭṭi-p-pon*, பெ.(n) காசு, நாணயம் ஆகியவை வார்க்கப்படுவதற்கு முன்பு எடையளவில் வார்க்கப்பட்ட பொற்கட்டிகள்; gold bar.

*[கட்டு + ஆளம்]*

**மறுவ. பனங்கட்டிப்பொன், பொன் கருப்பு**

*[கட்டி+பொன்]*

தேங்காய்ச் சிரட்டை அரையுருளை மட்பாண்டம் ஆகியவற்றில் பனைவெல்லம் போல் வைக்கப் பட்டிருந்த பொற்கட்டிகள் கேரள திருவனந்தபுரம் சார்ந்த சாமியார் மடம் சுரங்கப்பாதை தோண்டிய போது வெளிப்பட்டதாகக் கூறுவர்.

**கட்டிநாடு** *kattinādu*, பெ.(n) கொங்கு நாட்டின் வடக்கே அமைந்த ஊர்; name of a village from Coimbatore in North side.

*[கட்டை + நாடு > கட்டிநாடு]*

இந்நாட்டை அரசாண்ட பரம்பரையார் 'கட்டியர்' 'கட்டி' என்று பெயர் பெற்றிருந்தனர்.

**கட்டி** *kaṭṭi*, பெ.(n) தாராமங்கலப் பகுதியை ஆண்டு வந்தகட்டி மரபினர்; kaṭṭi name of petty ruler clan in the area around river Bavani and Tara mangalam.

*[கட்டு + கட்டி]*

**கட்டியாம் பந்தல்** *kattiyam panthal*, பெ.(n) செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஒரு ஊர்; name of the village in Chengalpattu District.

*[கட்டியான + பந்தல்]*

**கட்டில்கை** *kaṭṭilkai*, பெ. (n.) கட்டிலின் கைப்பிடி; side frame of cot .

*[கட்டில் + கை]*

**கட்டிவளத்தானியம்** *kaṭṭivaḷa-t-tāṉiyam*, பெ.(n) இறந்தவர்களைப் புதைத்த பின் இடுகாட்டில் ஏழைகளுக்குக் கொடுக்கப்படும் தவசம் (தானியம்); grains offered at burial ground after burying the dead.

*[கட்டி + வளம் + தானியம்]*

**கட்டு–தல்** *kaṭṭu*, செ.குன்றாவி. (v.t.) கிளித்தட்டு விளையாட்டில் இறங்கும் கட்சியாரைத் தடுத்தல் (மதுரை); to stop the aponent team in the game *'kiḷitaṭṭu'*.

*[கள் – கட்டு]*

**கட்டுக்கட்டு–தல்** *kaṭṭu-k-kaṭṭu*, செ.கு.வி. (v.i.) பல்லாங்குழியில் மூலைக்குழியில் போடாமல் வைத்தல்; to see that do not drop the cowries in the corner packet in '*pallānguli*'.

*[கட்டு+கட்டுதல்.]*

**கட்டுக்கரை** *kattukkarai*, பெ. (n) அறந் தாங்கியிலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கட்டு + கரை]*

**கட்டுக்காசு** *kāttu-k-kasu*, பெ.(n) வைப்புப் பணம்; deposit. (யாழ்ப்.).

**மறுவ. செலுத்துபணம்**

*[கட்டு+காசு]*

**கட்டுகுளிகை** *kattukulikai*, பெ. (n) புணர்ச்சியின் போது உயிர்ப்புச் சத்துக் கூடவும், வீணாக விந்து ஒழுகுவதைத் தடுக்கவும் குங்குமப்பூ, அபினி, அரத்திப்பழம் விதை ஆகியவற்றுடன் சாதிக்காயைச் சேர்த்துத் தேன்விட்டு அரைத்து மாலை ஆறுமணிக்குத் தின்னும் கடலையளவு மாத்திரை; (தம்பனக் குளிகை); a bengal gram size pill made of saffron, opium, seed of apple, nutmeg.

*[கட்டு + குளிகை]*

**கட்டு சட்டு** *kattu cattu*, பெ.(n) சிக்கனம்; thrifty.

**மறுவ. கட்டுச்செட்டு**

*[கட்டு+சட்டு]*

**கட்டுங்கை** *kattungai*, பெ.(n) மத்தளத்தை இசைக்கும் முறைகளில் ஒன்று; a method of playing mattalam.

*[கட்டும்+ கை]*

**கட்டு** *kattu-*, பெ.(n) கிளித் தட்டு ஆட்டத்தில் பயன்படும் சொல்; a word used in one of the country game.

*[கள் – கட்டு]*

**கட்டுத்துறைவாதம்** *kattutturaivādam*, பெ. (n.) மாட்டிற்கு ஏற்படும் ஊதை (வாத) நோய். (வ.வ.வே.க.16.);a disease of cow.

**கட்டுபாண்டி** *kattup-pāndi*, பெ.(n) பல்லாங்குழியிலுள்ள கற்கள் தனக்கு உரிமைப்படுத்துதல்; winning points. *'pallānguli'*

*[கட்டு + பாண்டி]*

**கட்டுப்போடு–தல்** *kattupōdudal*, செ. குன்றாவி. (v.i.) நாடாவில் ஊசி, வில், டிம்மி ஆகியவை விட்டுப்போனால் ஒட்ட வைத்து சரி செய்தல்; to make knot to connect the threa while it torn in stitching.

*[கட்டு + போடு]*

**கட்டு நிட்டு** *kattu nittu*, பெ.(n) கட்டுப்பாடு; control

*[கட்டு + நிட்டு – மரபினச்சொல்]*

**கட்டு மணல்** *kattu manal*, பெ.(n) கல் படிகள் நிரம்பிய பகுதிகளில் ஆழ்துளைக் கிணறு தோண்டும்போது கிடைக்கும் கெட்டி மணல்; hard sad got while installing borewell.

*[காட்டு + மணல்]*

**கட்டுமாவடி** *kattumāvadi*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்தின் சிற்றூர்; a village in Arantāngi Taluk.

*[கட்டு + மா + அடி]*

**கட்டுமான்** *kattumān*, பெ.(n) கட்டுபாண்டி பார்க்க; seekaltu pandi.

**கட்டுமூட்டை** *kattumūttai*, பெ.(n) சாக்கிலிட்டு வைக்கோலால் கட்டிய நெல் மூட்டை. (வ.வ.வே.க.16.)stitched gunny bag o paddy.

*[கட்டு + மூட்டை]*

**கட்டுரை–த்தல்** *katturai-*, செ. குன்றாவி. (v.t.) வழக்குரைத்தல்; one who carry on a dispute. "காவலன் முன்னர் யான் கட்டுரைத்தேன்" (சில 9:50).

*[கட்டு + உரை]*

**கட்டுவாங்கம்** *kaṭṭuvāṅgam*, பெ.(n) சிற்பங்களில் காணப்பெறும் பொருள்களில் ஒன்று; a feature in sculpture.

*[கட்டு + வாங்கம்]*

**கட்டுனவாய்** *kaṭṭunavai*, பெ.(n) பொட்டலம், பொதிந்த பொதி வாய்; opening of a small bag.

*[கட்டின + வாய்]*

**கட்டைச் சூளை** *kattai-c-cūlai*, பெ.(n) பெரிய மரக்கட்டையைக் கொண்டு எரித்து தரமான செங்கற்களை உருவாக்கும் சூளை; kiln designed to get standard bricks.

*[கட்டை + சூளை]*

**கட்டைத்தாளம்** *kaṭṭai-t-tāḷam*, பெ.(n) பண்டைய தாளவிசைக் கருவி; an ancient musical instrument.

*[கட்டை + தாளம்]*

**கட்டேரி** *kaṭṭēri*, பெ.(n) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur taluk.

*[கட்டு + ஏரி]*

**கட ஒலி** *kaḍa oli*, பெ.(n) மத யானையின் பிளிறொலி; roar as an elephant. "உடன் பயந்த கடஒலி ஏற்றும்" (கல் 13:9).

*[கட + ஒலி]*

**கடக்கம்** *kaḍakkam*, பெ.(n) மயிலாடுதுறை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mayuram Taluk.

*[கடம் (பாலை நிலம்) – கடக்கம்]*

**கடக்குட்டி** *kaḍa-k-kuṭṭi*, பெ.(n) கடைசியாக பிறக்கும் குழந்தை; youngest child in a family.

*[கடைக்குட்டி + கடக்குட்டி]*

**கடகஅத்தம்** *kaḍagattam*, பெ.(n) இறைவடிவ சிற்பத்தின் திருக்கரப் பெயர்; the hand of deity in sculpture.

*[கடக(ம்) + அத்தம்]*

**கடக நோன்பு** *kadaganōṇpu*, பெ.(n) கடக (ஆடி)த் திங்களில் கொண்டாடப்படும் பண்டிகை; a festival in the month of Ādi.

*[கடக(ம்) + நோன்பு]*

**கடகரி** *kada-kari*, பெ.(n) ஆண் யானை; male elephant. "விண்ட கடகரி மேகமொடு அதிர" (பரி.தி.1:57).

*[கடம் + கரி]*

**கடகம்**[1] *kaḍagam*, பெ.(n) பரதத்தில் உள்ள ஒற்றை முத்திரை நிலைகளில் ஒன்று; a hand posture in baratham.

*[கடகு + கடகம்]*

**கடகம்**[2] *kaḍagam*, பெ.(n) நன்னிலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Nannilam Taluk.

*[கடாகம் + கடகம்]*

**கடகம்**[3] *kaḍagam*, பெ.(n) காலில் அணியும் ஒரு வகை அணிகலன்; a leg ornament.

*[கடகு – கடகம்]*

**கடகாமுகம்** *kaḍagāmugam*, பெ.(n) சிற்பநூல்கள் இயம்பும் முத்திரை வகை; a posture found in treetise.

*[கடகம் + முகம்]*

**கடசல்புடி** *kaḍagalpuḍi*, பெ. (n) களைக்கொட்டு, மண்வெட்டி போன்றவற்றிற்குக் கடைசல் இயந்திரத்தால் கடையப்பட்ட பிடி; handle made by lathe.

*[கடைசல் + பிடி]*

**கடஞ்சூளை** *kadaṇcūlai*, பெ.(n) குயக் கலயங்கள் சுடும் காலவாய்; "கடம் சூளை ஒன்றிற் கிடந்து" (ஜீவ.189). kiln for making pottery.

*[கடம் + சூளை]*

**கடம்பம்** *kaḍambam*, பெ.(n) முடக்குவாதம், மூட்டுவலி, இடுப்பு வலிக்கு மருந்தாகப் பயன்படும் மரம்; a tree of medical use.

*[கடம்பு – கடம்பம்]*

**கடம்பாளம்** *kadampālam*, பெ.(n) மிதவை நங்கூரத்திற்குப் பயன்படும் கயிறு; buoy anchor rope.

*[கடம்பு – கடம்பாளம்]*

இவ்வூரில் நடந்த போரில் 'களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல்' நன்னனை வென்றான். "உருள் பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை' (பதிற்–4ஆம் பத்து).

**கடம்பூர்** *kadambur*, பெ.(n) பாபநாசம் வட்டத்தில் உள்ள ஒரு ஊர்; a village in papanasam.

*[கடம்பு + ஊர்]*

**கடமான்** *kaddamaan*, பெ.(n) இந்தியாவில் காணப்படும் ஒரு வகை மான்; sambar

*[கடம் + மான்]*

**கடமுலைகுச்சி** *kaḍamulaikucci*, பெ.(n) மாட்டின் கழுத்துப்பகுதி வெளிவராமல் இருக்க நுகத்தடியின் நுனிப்பகுதியில் செருகும் குச்சி. (வ.வ.வே.க.16.)

*[கடமுலை + குச்சி]*

**கடயல்** *kaḍayal*, பெ.(n) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavancode Taluk.

*[கடல் + அயல்]*

**கடல் ஏற்றம்** *kaddal yētṟṟam*, பெ.(n) கடல் பகுதியில் ஏற்றமும் வற்றுதலும்; up surge of the sea.

*[கடல் + ஏற்றம்]*

**கடல்திரட்டு** *kaddal tirattu*, பெ.(n) முனைத் திட்டு; head land.

*[கடல் + திரட்டு]*

**கடல்நீரடிப்பாறை** *kadal niradi parrai*, பெ.(n) நீரின் அடியில் உள்ள கற்பாறை; reaf.

*[கடல் + நீர் + அடி + பாறை]*

**கடல் முரசோன்** *kadal muracoṉ*, பெ.(n) காமன்; cupid. "மால் மகன் கடல் முரசோன்... காமன் பெயரே".

*[கடல் + முரசோன்]*

**கடல்வழி மைல்** *kadalvaḻimail*, பெ.(n) கடற்செலவு தொடர்பான எல்லைக் கணக்கு; naritical mile.

*[கடல் + வழி + மைல்]*

*மறுவ. கடல் வழிக்கல்*

**கடல்வாய்** *kaḍal vāy*, பெ.(n) வரம்பு; மேல் உச்சி; ridge.

*[கடல் + வாய்]*

**கடலாழமானி** *kaddalazhamaani*, பெ.(n) கடலின் ஆழத்தை அளக்க பயன்படும் கருவி; fathometer.

*[கடலாழம் + மானி]*

**கடலேறு-தல்** *kaḍal-ēṟu-*, செ.குன்றாவி. (v.t.) மரக்கலமேறிக் கடலிற் செல்லுதல்; ŏvoyage.

*[கடல்+ஏறு]*

**கடலலை** *kaḍalalai*, பெ.(n) ஒற்றைக்கை முத்திரையில். முதலாவதான கொடிமூலம் உரைக்கப்படும் ஒரு முத்திரை; a hand posture in dance.

*[கடல் + அலை]*

**கடலி** *kaḍali*, பெ.(n) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Senji Taluk.

*[கடல் + கடலி]*

**கடலமுத்து** *kaḍalal-muttu*, பெ.(n) நிலக்கடலை விதை; ground nut

*[கடலை + முத்து]*

**கடவம்** *kaḍavam*, பெ.(n) பனைமரத்து ஓலையைக் கொண்டு முடையப்பட்ட பெட்டி; basket.

*[கடகம் > கடவம் (கொ.வ.)]*

**கடவா நில்—தல்** *kaḍavā-nil-*, செ.கு.வி.(v.i.) செல்லுதல்; pasing the way. "கல் அதர் அத்தம் கடவா நின்றுழி" (மணி.13:39).

*[கடவா + நில்]*

**கடவுள் வீதி** *kaḍavul-vēdi*, பெ.(n) துறக்க (சொர்க்க) உலக வீதி; Indra's heaven. "கடவுள் வீதியில் விசும்பிடை படக் கடுதியோ (ஒட.5:70-7).

*[கடவுள் + வீதி]*

**கடாச்சண்டை** *kaḍā-c-canḍai*, பெ.(n) ஆட்டுக்கடாக்களை ஒன்றுடனொன்று மோதவிடுதல்; ram - tight.

*[கடா + சண்டை]*

**கடிச்சின்னம்** *kaḍi-c-cinṉam*, பெ.(n) அரைமண்டியில் வலதுகால் அதன் இடத்திலேயே ஊன்றியிருக்க இடதுகாலின் குதியை மட்டும் நிலத்தில் ஊன்றிக் கைகள் இரண்டையும் தோளளவுக்கு மேல் உயர்த்தி அதனதன் பக்கங்களிலேயே நீட்டித் தொங்கவிடப்பட்டுள்ள நிலை; a posture in dance.

*[கடி + சின்னம்]*

**கடிசூத்திரம்** *kḍi-šūtiram*, பெ.(n) தேவாரத்தில் கூறப்பெற்ற சிறப்ப அணிகலன்; an ornament mentioned in devatram.

*[கடி + சூத்திரம்]*

**கடிப்பிணை** *kaḍi-p-piṇai*, பெ.(n) சிற்பங்களின் காதணியாக சிற்ப நூலார் கூறுவது; an ornament in sculpture.

*[கடி + பிணை]*

**கடுக்கு** *kaḍukku*, பெ.(n) ஆண்கள் காதில் அணியும் அணிகலன்; (கொ.வ.வ.சொ. 41.) ear ring for man.

*[கடு – கடுக்கு]*

**கடுகுசந்தை** *kaḍugusandai*, பெ.(n) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[கடுகு + சந்தை]*

**கடுமுடுக்கு** *kaḍumuḍukku*, பெ.(n) மிகுந்த விரைவு (மிகு அவசரம்); utmost urgency. கடுமுடுக்குச் சேவகமாம் கம்பரிசிச் சம்பளமாம் (பழ.)

*[கடு + முடுக்கு]*

**கடுவாக்களி** *kaḍuvākkaḷi*, பெ.(n) கேரளத்தில் புலியாட்டத்திற்குரிய பெயர்; dance with tiger margnerade.

*[கடுவாய் (பிலி) + களி]*

**மறுவ. புலிக்களி**

**கடூர்** *kaḍūr*, பெ.(n) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[கடு + ஊர்]*

**கடேனி** *kaḍēṉi*, பெ.(n) கல்குளம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kalkulam Taluk.

*[ஒருகா. சடல் + அணி]*

**கடைச்சாவி** *kaḍaic-cāvi*, பெ.(n) அச்சின் இருபுறமும் போடப்படும் இரும்பு ஆணி. (வ.வ.வே.க.) axil bolt.

*[கடை + சாவி]*

**கடைசிக்கல்** *kaḍaicikkal*, பெ.(n) கல்லெடுத்தல் விளையாட்டுச் சொல்; a term used in children's.

*[கடைசி + கல்]*

**கடைமடை** *kaḍaimaḍai*, பெ.(n) தருமபுரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dharmapuri Taluk.

*[கடை + மடை]*

**கடையம்** *kadaiyam*, பெ.(n) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[கடை + அம்]*

**கடையனேந்தல்** *kadaiyanēndal*, பெ.(n) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[கடையன் + ஏந்தல் (ஏரி)]*

**கடையாட்டம்** *kadaiyattam*, பெ.(n) கடைசி விளையாட்டு; final game.

*[கடை+ஆட்டம். ஆடு–ஆட்டம்]*

**கண்டத்திச் சிற்பம்** *kandatti-c-cirpam*, பெ.(n) பெண் தெய்வத்தின் தலை மட்டும் சிற்பமாக உள்ள நிலை; bust-relief goddess in sculpture.

*[கண்டத்து + சிற்பம்]*

**கண்கட்டிவிளையாடு-தல்** *kankatti-vilaiyādu-*, பெ.(n) வட்டத்திற்குள் கண்ணைக் கட்டிக் கொண்டு விளையாடல்; a children's play.

*[கண்கட்டி + விளையாடுதல்]*

**கண்டசாய்ப்பு** *kandaccāyppu*, பெ.(n) தமிழிசையின் ஒரு கூறு; a feature in Tamil music.

*[கண்டம் + சாய்ப்பு]*

**கண்டப்பாடல்** *kanda-p-pādal*, பெ.(n) மிடற்று குரலைச் சுட்டும் சொல்; a term demoting vocal music.

**கண்டகசோதனை** *kantaka-sōtonai*, பெ.(n) குற்றவாளியைத் தண்டித்தல்; punishing culsrit.

*[கண்டகம் + சோதனை]*

**கண்டர்** *kandar*, பெ.(n) வீரர்; warriar. "அமரபு புசங்கள் முப்புளியரிடை கண்டருள் கண்டப் பல்லவரையன்". (Sil, XIX, 163).

*[கண்டு (திரட்சி, வலிமை) – கண்டா]*

**கண்டாயம்** *kandāyam*, பெ.(n) ஒரு வகை வரி; a kind of tax.

*[கண்டர் + இயம்]*

**கண்டவரட்டி** *kandavaratti*, பெ.(n) வந்தவாசி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wandiwash Taluk.

*[ஒருகா. கண்டர் + விரட்டி > வரட்டி]*

**கண்டி** *kandi*, பெ.(n) தேவாரம் கூறுகின்ற சிற்பத்தின் மார்பணி; a chest ornament mentioned in devaram.

*[கண்டு – கண்டி]*

**கண்டிகை** *kandigai*, பெ.(n) சிற்பங்களில் உள்ள ஒரு மார்பணி. a chest ornament found in sculpture.

*[கண்டி – கண்டிகை]*

**கண்டிநடனம்** *kandi-nadanam*, பெ.(n) இலங்கையின் நாட்டுப்புற நடனம்; dance of ceylon.

*[கண்டி + நடனம்]*

**கண்டியமடை** *kandiya-madai*, பெ.(n) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

*[கண்டியன் + மடை]*

**கண்டியர்பறை** *kandiyar-parai*, பெ.(n) பறைவகையினுள் ஒன்று; a kind of drum.

*[கண்டியர் + பறை]*

**கண்டினிவயல்** *kandinivayal*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கண்டன் – கண்டினி + வயல்]*

**கண்டை** *kandai*, பெ.(n) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[கண்டு – கண்டை]*

**கண்ணகியம்மன்குளிர்த்தி** *kaṇṇagiyammaṉ-kuḷirtti,* பெ.(n) கொம்புமுறி விளையாட்டில், தேர்களின் ஊர்வலத்திற்கு மறுநாள் நடைபெறும் விழாச்சடங்கு; ritual of a temple festival.

*[கண்ணகி + அம்மன் + குளித்தி]*

**கண்ணடக்கம்** *kaṇṇaḍakkam,* பெ. (n) தீப்பாய்ந்தம்மனால். கண்பார்வை குணமானோர் அவ்வம்மனுக்குச் செய்யும் காணிக்கை; eye ornament presented to the deity.

*[கண் + அடக்கம்]*

**கண்ணந்தல்** *kaṇṇandal,* பெ.(n) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Villupuram Taluk.

emple festival.

*[கண்ணன் + ஏந்தல்]*

**கண்ணாடிக்கூடு** *kaṇṇāḍi-k-kūḍū,* பெ.(n) மூக்குக் கண்ணாடி வைத்துக்கொள்ளும் கூடு; spectacles cover.

*[கண்ணாடி + கூடு]*

**கண்ணாமுழி** *kaṇṇāmuḷi,* பெ.(n) கண்; eye.

*[கண்ணின் + விழி]*

**கண்ணாமூச்சி** *kaṇṇāmūcci,* பெ.(n) ஓமலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Omalur Taluk.

*[ஒருகா. கன்னாறு + முச்சி]*

**கண்திறத்தல்** *kaṇtirattal,* தெ.பெ. (vbi.n.) தோற்பாவை நிழற்கூத்துக்கானப் பொம்மைகள் உருவாக்கும் இறுதிப் பகுதி; the treatment part of the work in making doll.

*[கண் + திறத்தல்]*

**கண்பழத்தார்** *kaṇpaḷattār* பெ.(n) சேவையாட்டம் ஆடும் கம்பளத்தாரைக் குறிக்குஞ் சொல்; a term mentiong the kanbalattar.

*[கண்பழுத்து + ஆர்]*

**கண்மாக்கிணை** *kaṇmākkiṇai* பெ.(n) ஒரு வகையான இசைக்கருவி; a musical instrument.

*[கண் (ஒரு கண்) + மா + கிணைப்பறை]*

**கண்விடுதல்** *kaṇviḍudal* தொ.பெ. (vbl.n.) ஓவிய உருவாக்கத்தின் ஒரு கூறு; drawing eye as a last feature drawing sculpture

*[கண் + விடு]*

**கணக்காந்தை** *kaṇakkāndai,* பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கண் + காந்தை (காணல்)]*

**கணக்கி** *kaṇakki,* பெ.(n) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[கணக்கன் – கணக்கி]*

**கணக்குச்சொல்லு–தல்** *kaṇakku-c-collu-,* செ.கு.வி.(v.i.) அருள்வாக்குச் சொல்லுதல்; to foretell future.

*[கணக்கு + சொல்]*

**கணக்கு** *kaṇakku* பெ. (n) 1. ஊழ் (விதி) fate. 2. வாழ்நாள்; life time.

*[கள்–கண்–கணக்கு]*

**கணங்கூர்** *kaṇaṅgūr,* பெ.(n) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkuricci Taluk.

*[கணக்கு + ஊர்]*

**கணிச்சி** *kaṇicci,* பெ.(n) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[கணி–கணிச்சி]*

**கணியாமூர்** *kaṉiyāmūr*, பெ.(n) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakurici Taluk.

*[கணியன் + ஆமூர்]*

**கணியான் ஆட்டம்** *kaṉiyāṉāṭṭam* பெ.(n) சுடலைமாடன் இசக்கியம்மன் செங்கிடாக்காரன் ஆகிய கோயில் விழாக்களில் நடைபெறும் ஆட்டம்; a dance in suddalaimadan Isakki sengidikkaran festival.

*[கணியன் + ஆட்டம்]*

**கத்தரிகை** *kattarigai*, பெ.(n) பரதத்தில் பின்பற்றப்படும் ஒரு வகையான ஒற்றை முத்திரை நிலை; a posture in Baradan.

*[கத்தரி–கத்தரிகை]*

**கத்தாழமுட்டி** *kattāḻamuṭṭi*, பெ.(n) கற்றாழை செடியின் அடிபாகம். (கொ.வ.வ.சொ. 42.) bottom part of aloe.

*[கத்தாழ + முட்டி]*

**கத்தாழை** *kattāḻai*, பெ.(n) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[கல் + தாழை]*

**கத்திகட்டிச்சேவல்** *kattikaṭṭic-cēvan* பெ.(n) கால்களின் கத்திகட்டி சண்டைக்கு விடப்படும் சேவல்; the cock which is tied with a razar on its leg in a cock fight.

*[கத்தி+கட்டி+சேவல்]*

**கத்திரக்கை** *kattirakkai*, பெ.(n) மத்தளத்தை இசைக்கும் ஒரு முறை; a mode of playing mattalam.

*[கத்திரம் + கை]*

**கத்தேரி** *kattēri*, பெ.(n) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[கல்லத்தம் + ஏரி]*

**கதயன்** *kadayaṉ*, பெ.(n) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

**கதவணி** *kadavaṇi*, பெ.(n) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[கதவம் + அணி]*

**கதவாளம்** *kadavāḷam*, பெ.(n) குடியாத்தம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gudiyattam Taluk.

*[கதம் (வெப்பம்) + ஆளம்]*

**கதனை** *kadaṉai*, பெ.(n) வெடி; (கொ.வ.வ.சொ. 42.)explosive.

*[காய்தல் – கதல் – கதனை]*

**கதிர்** *kadir*, பெ.(n) வில் எனும் இசைக்கருவியில் பொருத்தப்படும் வெண்கலக்குப்பி; a brasscap found in the musical instrument 'vil'

*[கது –கதிர்]*

**கந்தனேரி** *kandaṉēri*, பெ.(n) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[கந்தன் + ஏரி]*

**கந்தாடு** *kandāḍu*, பெ.(n) திண்டிவனம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tindivanam Taluk.

*[கந்து + ஆடு]*

**கந்திலி** *kandili*, பெ.(n) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[கந்து – கந்தில் – கந்திலி – கந்து – தெய்வம் உறையும் மரக்குற்றி]*

**கந்துகவரி** *kandukavari*, பெ.(n) நாட்டுப்புறச்சிறார், சிறுமியர் பாடும் பந்தடிக்கும் பாடல்; children's play song.

*[கந்திகம் + வரி]*

**கப்பறை** *kapparai* பெ.(n) தாய விளையாட்டில் ஒரு கணக்கு; a score in *'tāyam'.*

*[கப்பு – கப்பறை]*

**கப்பாணிகயிறு** *kappāṇikayiru* பெ.(n) கூரைக்கட்டுதலுக்குப் பயன்படும் கயிறு. *(ம.வ.தொ.77)* rope used to the hay etc. kept a root.

*[கப்பு + ஆணி + கயிறு]*

**கப்பூர்** *kappūr,* பெ.(n) விழுப்புரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Viluppuram Taluk.

*[ஒருகா. கருப்பு + ஊர்]*

**கபால உரிமை** *kabālaurrimai* பெ.(n) கோடியம்மன் திருவிழாவில் அம்மன்களை வழி நடத்திச்செல்லும் உரிமை; a right in temple worship.

*[கபாலம் + உரிமை]*

**கபாலம்** *kapālam* பெ.(n) இறையுருவம் கொண்ட வெண்கலத்தாலான சின்னம்; a emblem.

*[கணக்கு + ஊர்]*

**கபாலவடம்** *kabālavaḍam,* பெ.(n) சிற்ப அணிகலன்களில் ஒன்று; in ornament in sculpture.

*[கபாலம் + வடம்]*

**கபாலி** *kabāli,* பெ.(n) சிவனியப் பிரிவுகளில் ஒன்று; a doctrine of Sivam.

*[கபாலம் – கபாலி]*

**கபித்தம்** *kabittam,* பெ.(n) பரத நடனக் கலைஞர் வெளிப்படுத்தும் ஒற்றை முத்திரை நிலை; an hand posture.

**கபிலக்குறிச்சி** *kabila-k-kuṟicci,* பெ.(n) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[கபிலம் + குறிச்சி]*

**கபோதம்**[1] *kabōdam,* பெ.(n) ஒற்றை முத்திரை நிலை; single hand pose in dance an hand posture.

*[கபோதம் – புறாநிலை]*

**கம்மங்காடு** *kammaṅgāḍu,* பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantābgi Taluk.

*[கம்பு + அம்+ காடு]*

**கம்மஞ்சோறு** *kammañjōṟu,* பெ.(n) கம்பால் செய்யப்பட்ட சோறு; (கொ.வ.வ.சொ. 43.)

*[கம்பு + அம்+ சோறு]*

**கம்மந்தட்டு** *kammantaṭṭu,* பெ.(n) காய்ந்த கம்புப் பயிர்; dried stalk of the bulrish millet.

*[கம்பு + தட்டு – கம்புதட்டு – கம்மந்தட்டு]*
*தட்டு →தட்டை→தட்டு*

**கம்மம்மாவு** *kammam-māvu,* பெ.(n) கம்பை அரைத்து வெல்லம் சேர்த்து செய்யப்படும் மாவு; the bulrnsh millet flour mixrf with jaggery.

*[கம்மம் + மாவு]*

**கம்மு–தல்** *kammu-,* செ.குன்றாவி. (v.t.) இருட்டுதல்; to start darkening.

*[கம் – கம்மு]*

**கம்பங்கூத்தாடி** *kambaṅ-kūttāḍi,* பெ.(n) கம்பின் துணையோடு கூத்தாடுபவர்; pole dancer.

*[கம்பு + அம் + கூத்து + ஆடி]*

**கம்பரக்கத்தி** *kambara-k-katti,* பெ.(n) கேப்பை (ராகி). சோளம் போன்றவற்றை அறுக்க உதவும் பிறை வடிவிலான கத்தி. *(கொ.வ.வ.சொ. 43.)* cresent knife of harvest, ragi, jowaretc.

*[கம்பு + அறு + கத்தி]*

**கம்பளிக்குப்பம்** *kambaḷi-k-kuppam*, பெ.(n) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[கம்பளி + குப்பம்]*

**கம்பனி[1]** *kambaṉi*, பெ.(n) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[கும்பல் – கும்பலி – கம்பனி]*

**கம்பனி[2]** *kambaṉi*, பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கும்பல் – கும்பலி – கம்பனி]*

**கம்பாலி** *kambāli*, பெ.(n) அருப்புக்கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[ஒருகா. கம்மம் + பள்ளி]*

**கம்பிக்குடி** *kambi-k-kuḍi*, பெ. (n) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[கம்பி + குடி]*

**கம்புஉமி** *kambu-ūmi*, பெ.(n) கம்புத்தவசத்தின் மீது குடியிருக்கும் உமி; cob of the bulrush millet after the grain has been removed.

*[கம்பு + உமி]*

**கம்பை** *kambai*, பெ.(n) குறவன் குறத்தியாட்டத்தில் இடம் பெறும் ஒரு வகை இசைக்கருவி. a musical instrument used in kurattiattam.

**கமலக்குடி** *kamala-k-kuḍi*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கமலம் + குடி]*

**கமுதக்குடி** *kamuda-k-kuḍi*, பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கமுதம் + குடி]*

**கயத்தம்** *kayattam*, பெ.(n) இறைவடிவின் திருக்கைப் பெயர்; hand of deity.

*[கயம் + அத்தம்]*

**கயமா** *kayamā*, பெ.(n) யானை; elephant. "கயமாய் பேணி கலவாது ஊரவும்" (பரி.20:19).

*[கயம் + மா]*

**கயமுனி** *kayamūni*, பெ.(n) யானைக்குட்டி; young of elephant. "பொய்பொரு கயமுனி முயங்கு கை கடுப்ப" (மலை.107).

*[கயம் (யாகை) + முனி (கன்று)]*

**கயலாணை** *kayalāṉai*, பெ.(n) கயல் சின்னம் பெற்ற பாண்டிய ஆட்சி; the rule of 'pandiya' kind.திரைக் கடலேய் எல்லையாகப் பார் முழுதுந் கயலாணை.

*[கயல் + ஆணை]*

**கயன்மரம்** *kayaṉmaram*, பெ.(n) பயன்படாத மரம்; useless tree. "பயன் மரம் அல்லது கயன் மரம் இல்லா" (பெருங்.71:28).

*[கய + கயன் + மரம்]*

**கயிற்றுக்கோலாட்டம்** *kayiṟṟu-k-kōlāṭṭam*, பெ.(n) கோலாட்ட விளையாட்டு; a 'kolatta' game

*[கயிறு + கோலாட்டம்]*

**கயிறுருவிவிடு–தல்** *kayiṟuruvi-viḍu*, செ.கு.வி.(v.i.) எருது முதலியவற்றை வெளியேறும்படி அவிழ்த்து விடுதல்; to let loose bull etc.

*[கயிறு + உருவி + விடு–,]*

**கர்ணகைகூத்து** *karṇa-kai-kūttu*, பெ.(n) இடுக்கி மாவட்டத்தைச் சார்ந்த மன்னான் இனப் பழங்குடியினர் ஆடும் கூத்து; a dance played by 'Mannantribe'

*[கண்ணகி + கூத்து]*

**கர்ப்பூரவிலை** *karppuravilai*, பெ.(n) பயிரிட்ட கோயில் நிலங்களுக்கான வரி; tax collected for the temples arable hand.

*[கருப்பூரம் + விலை]*

**கரகரவண்டி** *karakaravaṇḍi*, பெ.(n) சுற்றி விளையாடும் சிறுமியர் ஆட்ட வகை; a children's game.

*[கரகர (ஒலிக்குறிப்பு) + வண்டி]*

**கரகிராமம்** *karakirāmam*, பெ.(n) அரசுக்கு வரி செலுத்தும் தனிச்சிற்றூர்; hamlet which pay tax to Government. 2. தன்னைத்தானே சுற்றி விளையாடும் விளையாட்டு வகை; a game.

*[கரம் + கிராமம்]*

**கரசோறு** *karašōṟu*, பெ.(n) நீரையும் தயிரைச் சேர்த்து கரைத்த சோறு; *(கொ.வ.வ.சொ. 43.)* cooked riced mixed with butter milk.

*[கரை + சோறு – கரைசோறு – கரசோறு]*

**கரடி** *karaḍi*, பெ.(n) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirukkoyilur Taluk.

*[காடு (சிறுகுன்று) – கரடி]*

**கரடிக்கல்** *karaḍikkal*, பெ.(n) திருமங்கலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tirumangalam Taluk.

*[காடி + கல்]*

**கரடிக்குடி** *karaḍikkuḍi*, பெ.(n) வேலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vellore Taluk.

*[கரடி + குடி]*

**கரடிசித்தூர்** *karaḍi-chittūr*, பெ.(n) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakuricci Taluk.

*[கரடி + சிற்றூர்]*

**கரடியூர்** *karaḍiyūr*, பெ.(n) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Salem Taluk.

*[கரடி + ஊர்]*

**கரண்டமுகுடம்** *karaṇḍa-mūgūdam*, பெ.(n) பானையடுக்கு போன்ற மகுடம். crown resembling pottery layer. "பொற் பண்டாரத்துக்கு முதலாக ஒடுக்கின ரத்நங் கட்டின கரண்டமுகுடம்" (Sii, IV, 499).

*[கரணியம் + முகுடம்]*

**கரண்டை[1]** *karaṇḍai*, பெ.(n) கால் தாண்டி விளையாட்டில் கரண்டைக் காலினைப் பிடித்துக் குனிந்து நிற்கும் நிலை (மதுரை மாவட்டம்). a bending pose in children's game.

*[கரண்டு – கரண்டை]*

**கரணப்பந்து** *karaṇa-p-pandu*, பெ.(n) துண்டு. சட்டைத் துணியை முறுக்கிச் செய்த திரியைக் கொண்டு விளையாடல்; a children's play.

*[கரணம் + பந்து]*

**கரணம்** *karaṇam*, பெ.(n) தலை கீழாகப் பாய்கை (மதுரை மாவட்டம்); somarsamlt.

*[கரு–கரணம்]*

**கரணிக்கசோடி** *karanikkacōdi*, பெ.(n) கணக்கர் வரி; tax for village accountant.

*[கரணம்–கரணிக்கம் + சோடி]*

**கரணை** *karaṇai*, பெ.(n) சிறுசிறு துண்டுகளாக வெட்டப்பட்ட கரும்பு; sugercane pieces.

*[கரள – கரணை]*

**கரவம்** *karavam*, பெ.(n) வஞ்சம். vengence. "ஞாலம் இடு பிச்சை தம் கரவம் ஆக உழிதந்து" (சம்.3:83:7).

*[காவு–கரவம்]*

**கரிக்கண்டானி** *kari-k-kaṇḍāṇi*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[கரி + கண்டன் + ஆனி]*

**கரிக்கல்** *karikkal*, பெ.(n) அரக்கோணம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arakkonam Taluk.

*[கரு–கரி + கல்]*

**கரிக்காலி** *karikkāli*, பெ.(n) திண்டுக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Dindukkal Taluk.

*[கரு–கரி + (கல்லி) காலி]*

**கரிக்கிலி** *karikkili*, பெ.(n) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றுர்; a village in Madurandagam Taluk.

*[கரு–கரி + (கல்லி) கிலி]*

**கரிகந்தாங்கல்** *karigantāṅgal*, பெ.(n) வாலாசா வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Wallajah Taluk.

*[கரிகன் + தாங்கல் (ஏரி)]*

**கருக்கடை** *karu-k-kadai*, பெ.(n) உற்றறிதல், பொறுப்பு; observation, attending with care.

*[கருக்கு–கருக்கடை]*

**கருக்காத்தி** *karukkātti*, பெ.(n) திருவாடணை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[கருக்கல் + ஆத்தி]*

**கருக்காமாலை** *karukkāmālai*, பெ.(n) மதுராந்தகம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurandagam Taluk.

*[கருக்கல் + மாலை]*

**கருக்கை** *karukkai*, பெ.(n) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[கரு–கருக்கை]*

**கருக்காத்தி** *karukkatti*, பெ.(n) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[கருக்கல் + ஆத்தி]*

**கருங்காத்து** *karuṅgāttu*, பெ.(n) அதிக ஈரப்பதத்துடன் வீசும் காற்று; *(கொ.வ.வ.சொ. 44.)*

*[கரும் + காற்று]*

**கருங்குருவை** *karuṅkuruvai*, பெ.(n) நெல் வகை. *(வ.வ.வே.க.17.)* a variety of paddy

*[கரும் + குருவை]*

**கருஞ்சுத்தி** *karuñcutti*, பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கரும் + சுழுத்தி]*

**கருஞ்செவலை** *karuñ-cēvali*, பெ.(n) மாட்டின் நிறம்; brownish colour.

*[கரும் + செவலை]*

**கருடி** *karuḍi*, பெ.(n) சிலம்பம்; the play cilambam.

*[காருடி–கருடி]*

**கருணாவயல்** *karuṇā-vayal*, பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கருணன் + வயல்]*

**கருதூசி** *karudūsi*, பெ.(n) இரட்டையில் தாருக்குச்சியை சொருகி சுற்றப் பயன்படும் கருவி. *(நெ.தொ.க.55).* a device in loom.

*[கரு + தூசி]*

**கருநிலம்** *karunilam*, பெ.(n) செங்கல்பட்டு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chingleput Taluk.

*[கரு + நிலம்]*

**கருப்படித்துண்டு** *karuppaḍi-t-tuṇḍu*, பெ.(n) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[கரும்பு + அடி + துண்டு]*

**கருப்பனூர்** *karuppanūr,* பெ.(n) திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thiruppattur Taluk.

*[கரும்பன் + ஊர்]*

**கரும்பாடு** *karumbāḍu,* பெ.(n) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[கரும் + பாடு]*

**கருப்புச்சட்டி** *karuppu-c-caṭṭi,* பெ.(n) கன்னடக்காரர்களால் செய்யப்படும் சட்டி; black pottery.

*[கருப்பு + சட்டி]*

**கருப்பூர்உக்கடை** *karuppūr-ukkaḍai,* பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கருப்பூர் + உக்கடை]*

**கரும்பூர்** *karumbūr,* பெ.(n) குடியாத்தம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gudiyattam Taluk.

*[கரும்பு + ஊர்]*

**கருமள்** *karumaḷ,* பெ.(n) முதுகுளத்தூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Mudukulattur Taluk.

*[கரு + மால்]*

**கருமாண்டபதி** *karumāṇḍapati,* பெ.(n) கிருட்டிணகிரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Krishnagiri Taluk.

*[கருமாண்டன் + பதி]*

**கருமாயம்** *karumāyam,* பெ.(n) 1. தொந்தரவு; trouble, 2. கருவினை; black magic.

*[கரு + மாயம்]*

**கருவடிப்பங்கு** *karuvaḍipaṅgu,* பெ.(n) மண் கருப்பாக இருக்கும் பகுதி; black soil

*[கருவடி + பங்கு]*

**கருவ மரம்** *karuvamaram,* பெ.(n) நாட்டு மர வகை. *(ம.வ.தொ.77.)* a tree.

*[கருவேல் + மரம்]*

**கரை உருளை** *karaiurruḷai,* பெ.(n) கரைப்பாவு சுற்றுவதற்கு உதவும் கரை உருளை. *(ம.வ.தொ.77.)* a device in loom.

*[கரை + உருளை]*

**கரைக்கன்னி** *karai-k-kanni,* பெ.(n) கரை நூல்; thread used for border in weaving. *(நெ.தொ.க.56)*

*[கரை+கன்னி. கண்ணி > கன்னி ]*

**கரையர்** *karayar,* பெ.(n) சிண்டு நடனம் ஆடுகின்ற பழங்குடி மக்கள்; a tribe.

*[கரு + கரையர்]*

**கல்பாவி** *kalpāvi,* பெ.(n) பவானி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Bavani Taluk.

*[கல் + பாவி]*

**கல்பிடித்தல்** *kal-piḍittal,* பெ.(n) அம்மானை விளையாட்டு வகை; a variety of 'ammanai' game.

*[கல் + பிடித்தல்]*

**கல்மாரி** *kalmāri,* பெ.(n) மழை வரும்போது விழும் பனிக்கட்டித்துகள்; *(கொ.வ.வ.சொ. 45.)* hail.

*[கல் + மாரி]*

**கல்யாணக்கொட்டு** *kalyāṇakkoṭṭu,* பெ.(n) தப்படித்தல் வகைகளில் ஒன்று; a mode of beating drum.

*[கலியாணம் + கொட்டு]*

**கல்யாணதிருமேனி** *kalyāna-trumēni,* பெ.(n) நோயற்ற உடல்; healthy body.

*[கலியாணம் + திருமேனி]*

**கல்யாணம்** *kalyāṇam,* பெ.(n) குதிரைக் கல்லு விளையாட்டில் பயன்படுத்துதல்; a term used at 'kudiraikkal' game.

*[கலியாணம்–கல்யாணம்]*

**கல்யாணி** *kalyāṇi,* பெ.(n) கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Kallakkuricci Taluk.

*[கலியாணி – கல்யாணி]*

**கல்லடம்** *kalladam*, பெ.(n) கோடியம்மன் திருவிழாவில் காளிவேடம் பூணுபவர் அணியும் உடை; dress worn by the devotee.

*[சல்லடம் – கல்லடம்]*

**கல்லடர்** *kalladar*, பெ.(n) மலைக்குகை; mountain cavern. "கான மொடு கல்லடருள் இல இடரும் நீங்கி" (நீல. 1:9).

*[கல் + சுடர்]*

**கல்லல்** *kallal,* பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[கல் – கல்லல்]*

**கல்லாங்காடு** *kallāṅgādu,* பெ.(n) கல் நிறைந்த நிலம்; *(கொ.வ.வ.சொ. 45.)* a grand or stone.

*[கல் + அம் + காடு]*

**கல்லாடை** *kallāḍai,* பெ.(n) சிற்பியர் வடிவமைக்கும் ஓர் அணிகலன்; an ornament in sculpture.

*[கல் – ஆடை]*

**கல்லாம்பிரம்பு** *kallāmpirambu,* பெ.(n) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[கல் + அம் + பிரம்பு]*

**கல்லாமண்ணா** *kallāmaṇṇā,* பெ.(n) தொட்டு விளையாடல்; a game of children.

*[கல்லா + மண்ணா]*

**கல்லிமடையான்** *kallimaḍaiyaṉ,* பெ.(n) ஒரு வகை நெல்; *(கொ.வ.வ.சொ. 45.)* a variety of paddy.

*[கல்லி + மடை + ஆன்]*

**கல்லுக்குச்சி** *kallukucci,* பெ.(n) குச்சியினையும் கல்லினையும் தொட்டு விளையாடுதல்; a game with pebbles and sticks.

*[கல்லு + குச்சி]*

**கல்லுச்சோளம்** *kalluc-cōḷam*, பெ.(n) சோள வகை. *(வ.வ.வே.க.17.)* a variety of fowar.

*[கல் + சோளம்]*

**கல்லுவைத்தல்**[1] *kallu-vaittal,* பெ.(n) நெற்றியில் கல்லை வைத்து தண்டித்தல்; punishing in laping pebbles on forehead.

*[கல்லு + வைத்தல்]*

**கல்லெடுத்தல்**[2] *kalleḍuttal,* பெ.(n) பல கற்களை ஓர் இடத்திற்கு கொண்டுவரும் விளையாட்டு வகை (மதுரை மாவட்டம்); a game of children.

*[கல் +எடுத்தல்]*

**கல்லெடுத்தல்**[3] *kalleḍuttal,* பெ.(n) சிறு கற்களை வரிசையாக வைத்து எடுத்து விளையாடுதல்; playing with pebbles a children game.

*[கல் +எடுத்தல்]*

**கல்லேரி** *kallēri,* பெ.(n) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvannamalai Taluk.

*[கல் + ஏரி]*

**கலங்காணி** *kalaṅgāṇi,* பெ.(n) நாமக்கல் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Namakkal Taluk.

*[ஒருகா. கலிங்கு + காணி]*

**கலசங்குடி** *kalasaṅgudi,* பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[கலசம் + குடி]*

**கலஞ்சொரிகளிறு** *kalañcōri-kaliru*, பெ.(n) மரக்கலங்களில் கடல் வழியாகக் கொண்டு

வரப்பட்ட யானைகள். elephants brought from foreign country by ship. "தீவாந்தரத்து பூபாலர் திறை விடுத்த கலஞ்சொரி களிறு முறை முறை நிற்ப" (முதல். குலோத்துங்கன்.மெய்கீர்த்தி).

*[கலம் + சொரி + களிறு]*

**கலப்பக்காடு** *kalappa-k-kāḍu*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கலப்பை + காடு]*

**கலவாங்கட்டி** *kalavāṅkaṭṭi*, பெ.(n) உடைந்த ஓடு (மதுரை மாவட்டம்); broken tiles.

*[கலவாய் + கட்டி]*

**கலன்** *kalaṉ*, பெ.(n) கடன், உரிமைத் தொடர்பு. dept. or right. "இந்நிலத்துக்கு எப்பேறபட்ட கலனும் இல்லை. கலனுளவாய்த் தொற்றுங் கால் நாங்களே தீத்து குடுக்கக் கடவோம்". (தெ.கல்.தொ.12 பகு.1 கல்.190).

*[கள் – களன் – கலன்]*

**கலி** *kali*, பெ.(n) வடவர் சூது விளையாட்டில் தோல்வியினைக் குறிக்கும் சொல் (மதுரை மாவட்டம்); a term used to refer to depat in game by northewers.

*[கல் – கலி]*

**கலிகடந்தான்** *kali-kaḍandāṉ*, பெ.(n) சிதம்பரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Chidambaram Taluk.

*[கலி + கடந்தான்]*

**கலிங்கலேரி** *kaliṅgalēri*, பெ. (n) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvannamalai Taluk.

*[கலிங்கு + கலிங்கல் + ஏரி]*

**கலிங்கியம்** *kaliṅgiyam*, பெ. (n) கோபி செட்டிப்பாளையம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Gopichettipalayam Taluk.

*[கலிங்கு – கலிங்கல் + ஏரி]*

**கலிதீர்த்தான்** *kali-tīrttāṉ*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivaganga Taluk.

*[கலி + தீர்த்தான்]*

**கலிதேரி** *kalitēri*, பெ.(n) திருவண்ணாமலை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvannamalai Taluk.

*[கலியன் – கலிதன் + ஏரி]*

**கலிவாப்பங்கு** *kalivāppaṅgu*, பெ.(n) களிமண் நிலப்பகுதி. *(வ.வ.வே.க.17.)* clay ground.

*[களி – களிவை + பங்கு]*

**கலை–த்தல்** *kalai*, செ.கு.வி.(v.i.) ஒரு குழிக்காயை எடுத்தல் (திருச்சி.வ); to take from one pit.

*[கலை – கலைத்தல்]*

**கவட்டை** *kavaṭṭai*, பெ.(n) கிளிகடி கருவி (மதுரை மாவட்டம்); a device to frighten and device parrots.

*[கவடு – கவட்டை]*

**கவட்டைக்கம்பு** *kavaṭṭai-k-kambu*, பெ. (n) இரண்டாகப் பிளந்துள்ள கம்பு வண்டி யுருட்டுதல் விளையாட்டில் பயன்படுவது; forked pole.

*[கவட்டை + கம்பு]*

**கவணை[1]** *kavaṇai*, பெ.(n) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Viruddhachalam Taluk. *(கொ.வ.வ.சொ. 43.)*

*[கவண் – கவணை]*

**கவணை[2]** *kavaṇai*, பெ.(n) வாய்க்கால் நீரோட்டத்தைத் தடுக்கப் போடும் தடுப்பு; an obstantion made at flowing water cannel.

*[கவண் – கவணை]*

**கவுண்** *kavuṇ*, பெ.(n) கயிற்றில் கட்டப்பட்ட பட்டையான தோலில் கல்லை வைத்துச் சுழற்றி

வீசி எறியும் சிறு கருவி; sling, made up of for branch.

*[கவண் – கவுண்]*

**கவுறுவாய்க்கால்** *kavuṟuvāykkāl*, பெ.(n) சிறு வாய்க்கால்; *(கொ.வ.வ.சொ. 47.)* a small canee.

*[கவை + உறு + வாய்க்கால்]*

**கழநிகோல்** *kalani-kol*, பெ.(n) ஒரு நில அளவு கோல்; a linear measurement pole. "இந்நிலம் கழநி கோலால் ஆயிரத்து நாநூறு குழி". (Sii, III,156).

*[கழநி + கோல்]*

**கழிதட்டு** *kaḻitaṭṭu*, பெ.(n) மாடுகள் தின்னாமல் கழிக்கும் தீவனத்தட்டை; left over stalk etc of toddes.

*[கழி + தட்டு]*

**கழிமடை** *kaḻimaḍai*, பெ.(n) நீர் கடைசியாகச் சென்று சேரும் மடை; *(கொ.வ.வ.சொ. 47.)* to last end channel of tant.

*[கழி + மடை]*

**மறுவ. கடை மடை**

**கழுகேர்கடை** *kaḻukērkaḍai*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[கழுகு + ஏர் + கடை]*

**கழுஞ்சிக்கல்** *kaḻuñjikkal*, பெ.(n) சிறுவர்களின் ஒரு வகை விளையாட்டு; a chileren's game

*[கழுஞ்சி + கல்]*

**கழுத்துக்கட்டி** *kaḻuttu-k-kaṭṭi*, பெ. (n) வண்டியில் மாட்டைக் கட்டுவதற்காகக் கழுத்தில் பிணைக்கப்பட்டிருக்கும் கயிறு; *(கொ.வ.வ.சொ. 47.)*

*[கழுத்து + கட்டி]*

**கழுதூர்** *kaḻudūr*, பெ.(n) விருத்தாசலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Viruddhachalam Taluk.

*[கழுது + ஊர்]*

**கழுமலம்** *kaḻumalam*, பெ.(n) திருக்கோயிலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Thirukkoyilur Taluk.

*[கெழுமல் – கழுமல் + அம்]*

**கள்ளக்காத்தான்** *kaḷḷa-k-kāttāṉ*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[கள்ளர் + காத்தன்]*

**கள்ளக்காரி** *kaḷḷakkāri*, பெ. (n) அருப்புக் கோட்டை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Aruppukkottai Taluk.

*[கள்ளன் + காரி]*

**கள்ளக்காய்** *kaḷḷakkāy*, பெ.(n) நிலக்கடலை; *(கொ.வ.வ.சொ. 47.)* groundnut.

*[கடலைக்காய் – கள்ளக்காய்]*

**கள்ளத்தி** *kaḷḷatti*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[கள்ளன் + அத்தி]*

**கள்ளந்திரி** *kallandiri*, பெ.(n) மதுரை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Madurai Taluk. *(கொ.வ.வ.சொ. 47.)*

*[கள்ளன் + திரி]*

**கள்ளமுத்து** *kaḷḷamuttu*, பெ.(n) கட்டாட்டத்தில் திருட்டுத்தனமாக முத்து போடுதல்; deceiving play.

*[கள்ளம் + முத்து]*

**கள்ளிக்குடி** *kalli-k-kudi*, பெ.(n) பாண்டிய நாட்டுச் சிற்றூர்; a village in Pandiya territory.

*[கள்ளி + குடி]*

**கள்ளி** *kalli*, பெ.(n) ஒரு வகை மாட்டு நோய்; a kind of cattle disease. "பெருமானடிகளுக்கு குடுத்த பசு கள்ளி கொள்ள காக்கமாட்டாது". (Sii, XIX, 151).

*[கள் – கள்ளி]*

**கள்ளுக்கலயம்** *kallu-k-kalayam*, பெ.(n) பதனியெடுக்கப் பயன்படும் கலயம். *(ம.வ.தொ. 78.)* earthern pot used to tap palm juice.

*[கள்ளு + கலயம்]*

**கள்ளுத்தண்ணி** *kalluttanni*, பெ.(n) கள்; *(கொ.வ.வ.சொ. 47.)* toddy.

*[கள்ளு + தண்ணீர்]*

**களக்குடி** *kaḷa-k-kuḍi*, பெ.(n) அறந்தாங்கி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Arantangi Taluk.

*[களக்காய் – களம் + குடி]*

**கள்ங்கண்ணி** *kaḷaṅkaṇṇi*, பெ.(n) களத்தின் அடியில் தங்கும் மண்ணோடு கூடிய நெல். *(வ.வ.வே.க. 18.)* left out paddy on the threshing floor.

*[களம் + தண்ணி]*

**களகண்மாய்** *kaḷakaṇmāy*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[களம் + கண்மாய்]*

**கள(த்)திரம்** *kalatiram*, பெ.(n) மனைவி; wife. விலக்குமவன் தந்தையைக் கொன்று தள்ளையைக் களத்திரம்". (TAS ii, p, 173-207).

**களதம்** *kaladam*, பெ.(n) பெருச்சாளி; bandicoot. "மூடிகம், களதம், உந்துரு, பெருச்சாளி" (நிக.பி.8:221).

*[கள்ளதம் – களதம்]*

**களபங்குடி** *kaḷabaṅguḍi*, பெ.(n) திருவாடானை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruvadanai Taluk.

*[களபம் + குடி]*

**களமணிசம்** *kalamanisam*, பெ.(n) வளமிக்க நெற்கதிர். fine paddy corn. "பொற்றாமரை மலர்மிசை விளைவுறு களமணிசமென மிளிர்ந்தி லங்கு". (PNDCP.P.95-115).

*[கள் – கள + மணியம்]*

**களரி** *kaḷari*, பெ. (n)இராமநாதபுரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ramanadhapuram Taluk.

*[களம் – களரி]*

**களரிப்பணம்** *kaḷari-p-paṇam*, பெ. (n) திருமணம் முடிந்த பிறகு பணிசெய் குடிகளுக்கு கொடுக்கப்படும் அன்பளிப்பு; *(கொ.வ.வ.சொ. 47.)*

*[களரி + பணம்]*

**களவா** *kaḷavā*, பெ.(n) செஞ்சி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Señji Taluk.

*[குள + வாய்]*

**களவாணி** *kaḷavāṇi*, பெ.(n) திருடன்; *(கொ.வ.வ.சொ. 47.)* thief.

*[களவு + ஆனி]*

**களிப்பாக்கு** *kaḷi-p-pākku*, பெ.(n) பல்லாங்குழிக் காயாகத் தஞ்சையில் பயன்படுத்தும் பாக்கு; are canut used for playing indoor-game.

*[களி + பாக்கு]*

**களியல்** *kaḷiyal*, பெ.(n) விளவங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Vilavangodu Taluk.

*[கழியல் – களியல்]*

**களுகாடி** *kaḷukāḍi*, பெ.(n) சிவகங்கை வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Sivagangai Taluk.

*[கழுகு + ஆடி]*

**களையூர்** *kaḷaiyūr*, பெ.(n) கடலூர் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Cuddalore Taluk.

*[களை + ஊர்]*

**கற்கடகம்** *kaṟkadagam*, பெ.(n) கடக (ஆடி) மாதம். "இவ்வாட்டை கற்கடக ஞாயிற்று வெள்ளிக்கிழமை". (SII, III, 106).

*[கல் + கடகம்]*

**கற்கடகம்** *kaṟkaḍagam*, பெ.(n) இரட்டைக் கை முத்திரையின் ஒரு வகை; double hand pose in dance.

*[கல் + கடகம்]*

**கற்கடை** *kaṟkaḍai*, பெ.(n) கற்குவியல்; mound of stones. "தென்வடமான பெருவழிக்கும் கற்கடைக்கும் மேற்கு". (IPS.559).

*[கல் + (கிடை) கடை]*

**கற்பகம்** *kaṟpagam*, பெ.(n) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Selam Taluk.

*[கல் + (பாங்கம்) பகம்]*

**கற்பூரக்குடுக்கை** *kaṟpūra-k-kuḍukkai*, பெ.(n) பரமக்குடி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Paramakudi Taluk.

*[கற்பூரம் + கொடுக்கை]*

**கற்றாழைச்சரடு** *kaṟṟāḻai-c-caraḍu*, பெ.(n) கற்றாழை நாரை எடுத்துச் சரடு சரடாக பாய் பின்ன நூலாக்குதல்; aleo fiber.

*[கல் + தாழை + சரடு]*

**கறம்** *kaṟam*, பெ.(n) கருமை; black colour. "கறம் படுமனத்தின் ஓங்கும் கார் அமண் குண்டர். (தி.தி.37:51).

*[கறு – கறம்]*

**கறையான்குழி** *kaṟayāṉkuḻi*, பெ.(n) அகத்தீசுவரம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Agastheeswaram Taluk.

*[கறையான் + குழி]*

**கன்னூர்** *kaṉlūr*, பெ.(n) பொன்னேரி வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Ponneri Taluk.

*[கன்னல் (கரும்பு) + ஊர்]*

**கன்னங்குறிச்சி** *kaṉṉaṅkuricci*, பெ.(n) சேலம் வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Selam Taluk.

*[கள்ளான் + குறிச்சி]*

**கன்று** *kaṉṟu*, பெ.(n) கையணி வகையினுள் ஒன்று; an hand ornament.

*[கல் + து– கனது – கன்று]*

**கன்னித்தும்பு** *kaṉṉi-t-tumbu*, பெ.(n) கன்று குட்டிகளுக்கு போடும் சிறிய தும்பு; *(கொ.வ.வ.சொ. 48.) asmallrope*

*[குன்னி – கன்னி + தும்பு]*

**கன்னிவிடை** *kaṉṉiviḍai*, பெ.(n) முதன் முதலாக முட்டை இடும் கோழி; *(கொ.வ.வ.சொ. 48.)* hen laying egg for the first time

*[கன்னி + விடை]*

**கனக்குலம்** *kaṉa-k-kūlam*, பெ. (n) மேகக்கூட்டம். cloud. "கனக்குலம் ஏழும் சேரக் கல்மழை பொழிந்தது என்ன". (வி.பா.46:39).

*[கணம் – கனம் + குலம்]*

**கனககிரி** *kaṉagagiri*, பெ.(n) திருச்செங்கோடு வட்டத்திலுள்ள சிற்றூர்; a village in Tiruchengode Taluk.

*[கனகம் + கிரி]*

*மறுவ. பொற்கோடு*

**கனம்** *kaṉam*, பெ.(n) இசைபாடும் முறைமைகளிற் ஒன்று; a method of singing.

**காக்கட்டான்விதை** *kākkaṭṭāṉ-vidi,* பெ.(n.) கொடிக்காக்கட்டான் விதை; kaladana seeds or seeds of the plant.

கசப்பான இவ்விதை பெருவயிறு, தொண்டைக் கம்மல், தோல் நோய் இவற்றிற்கும் சளியைப் மல வழியாய் வெளிப்படுத்தவும் பயன்படும் (சா.அக.).

**காக்கட்டான்வேர்** *kākkaṭṭāṉ-vēr,* பெ.(n.) காக்கணங் கொடியின் வேர்; mussell-shell root.

*[காக்கட்டான் + வேர்.]*

நீரைப் பிரித்து, மலத்தை இளக்கும், காக்கணங்கொடியின் வேர் மூத்திரப்பை, மூத்திரத் தாரை ஆகியவற்றில் ஏற்படும் அழற்சியைப் போக்கி வெள்ளை, வெட்டை நோய்களையும் குணமாக்கும். இவ்வேரின் பொடி குழந்தைகளின் மாந்தம், காய்ச்சல், இருமலைப் போக்கும் (சா.அக.).

**காக்கணங்கொடி** *kākkaṇaṅ-kodi,* பெ.(n.) கொடிக்காக்கட்டான்; sky-blue blind weed, smaller morning glory - *Ipomaea hederacea* (சா.அக.).

*[காக்கணம் + கொடி.]*

**காக்கலை** *kākkalai,* பெ.(n.) குறட்டை; bitter-gourd - *Trichosanthes palmata* (சா.அக.).

**காக்களி** *kākkaḷi,* பெ.(n.) தேட்கொடுக்கி; Indian turnsole or Indian heliotrope - *Heliotropium indicum* (சா.அக.).

*[கா + களி.]*



**காக்கனம்** *kākkaṉam,* பெ.(n.) காகனம் பார்க்க; see *kāgaṉam* (சா.அக.).

**காக்காய்க்கடி** *kākkāy-k-kaḍi,* பெ. (n.) பெரும்பாலும் சிறுவர்கள் தின்பண்டம் போன்றவற்றை எச்சில் படாமல் துணியால் மூடிக் கடிக்கும் முறை; practice of splitting sweet meats, etc., in which the object is not directly bitten but through a cloth prevalent among children. *அந்த மிட்டாயில் எனக்குக் காக்காய்க் கடி கடித்துக் கொடு "காக்காய் கடி கடிச்சு கொடுத்த கமருகட்டு மிட்டாயி, சோக்கா வாங்கி போட்டுக்கிட்டு விட்டானய்யா கொட்டாவி (நா.பா.)".*

*[காக்காய் + கடி.]*

**காக்காய்க்குளியல்** *kākkāy-k-kuḷiyal,* தொ.பெ. (vbl.n.) முழு உடம்பையும் நனைக்காமல் தண்ணீரை அள்ளித் தெளித்துக் குளிக்கை; wash head in a hurry. *காக்காய்க் குளியல் போட்டு விட்டு ஐந்து நிமையத்தில் வந்து விடுகிறேன்.*

*[காக்காய் + குளியல்.]*

**காக்காய்க்கொள்** *kākkāy-k-koḷ,* பெ.(n.) காக்காய்க்கொல்லி எனும் செடிவகை; a plant - *Coeculus indicus.*

*[காக்காய் + கொள்.]*

**காக்காய்க்கொல்லிவிதை** *kākkāy-k-kolli-vidai,* பெ.(n.) மருந்தாகப் பயன்படும் காக்கைக் கொல்லிக்கொடியின் விதை; berries of crow-creeper or bitter creeper-*Fructus cocculi of chemists* (சா.அக.).

*[காக்கைக்கொல்லி →காக்காய்க்கொல்லி + விதை.]*

**காக்கினி** *kākkiṉi,* பெ.(n.) குருஞ்சூலி மரம்; toon tree - *Cedrela toons* (சா.அக.).

மறுவ. அகச்சூலி

**காக்குமிளம்** *kākkumiḷam,* பெ.(n.) நீர்க்குளிரி அல்லது நீர்ச்சேம்பு; water-archer - *Saggitaria obtusifolia* (சா.அக.).

*[காக்கு + மிளம்.]*

**காக்குறட்டை** *kākkuṟaṭṭai,* பெ.(n.) 1. காக்கணங் கொவ்வை; mussell-shell creeper. 2. கருங் காக்கணத்தி; palmated gourd; blue mussell-shell creeper - *Clitoria ternatea* (சா.அக.).

*[கா + குறட்டை]*

**காக்கைக்கண்ணன்** *kākkai-k-kaṇṇaṉ,* பெ.(n.) ஒற்றைப் பார்வை உடைய கண்ணன்; squiant-eyed man (சா.அக.).

*[காக்கை + கண்ணன்.]*

**காக்கைப்பாலை**[1] *kākkai-p-pālai,* பெ.(n.) பாலை மரவகை; cluster - flowered croton - *Gelonium lanceolatum* (சா.அக.).

*[காக்கை + பாலை.]*

**காக்கைப்பாலை**[2] *kākkai-p-pālai,* பெ.(n.) கருப்பு வேப்பிலை மரம்; false wampee tree - *Micromelum Pubescens* (சா.அக.).

*[காக்கை + பாலை.]*

**காக்கைப்பித்து** *kākkai-p-pittu,* பெ.(n.) காக்கையின் பித்தம்; the bile of crow's bladder (சா.அக.).

*[காக்கை + பித்து.]*

**காக்கைப்பிலை** *kākkai-p-pilai,* பெ.(n.) ஒரு வகைப்பூடு; false kamela - *Casearia esculenta* (சா.அக.).

*[கால் + கைப்பு + இலை.]*

**காக்கைவலிச்சுழற்சி** *kākkai-vali-c-culaṟci,* பெ.(n.) கால்கை வலியால் ஏற்படும் தலைச் சுழற்சி; vertigo which attends or fellows an epileptic attack - *Epileptic vertigo* (சா.அக.).

*[கால் + கைவலி + சுழற்சி.]*

**காக்கைவேர்** *kākkai-vēr,* பெ.(n.) **காக்கட்டான் வேர்** பார்க்க; see *kākkaṭṭāṉ-vēr* (சா.அக.).

*[காக்கை + வேர்.]*

**காக்கைவேலி** *kākkai-vēli,* பெ.(n.) கொடிவகை; stinking swallow wort - *Damia extensa* (சா.அக.).

*[காக்கை + வேலி.]*

**காக்கொரட்டை** *kā-k-koraṭṭai,* பெ.(n.) கருப்புக் காக்கட்டான்; blue flowered mussell-shell creeper - *clitorea ternatea (typica)* (சா.அக.).

*[கா+ குறட்டை.]*

**காகக்கரிப்பான்** *kāga-k-karippāṉ,* பெ.(n.) கருப்புக் கரிசலாங்கண்ணி; a black variety of eclipse plant - *Eclipta prostata* (சா.அக.).

*[காகம் + கரிப்பான்.]*

**காககங்கு** *kāgakaṅgu,* பெ.(n.) ஒரு வகைப்புல்; a kind of panic grass - *Panicum milliaceum* (சா.அக.).

*[காகம் + கங்கு.]*

**காககுடம்** *kāga-kuḍam,* பெ.(n.) எள்; sessamum seed (சா.அக.).

*[காகம் + குடம்.]*

**காகச்சிலந்தி** *kāga-c-cilandi,* பெ.(n.) ஒரு வகைச் சிலந்திப் பூச்சி; a species of spider.

*[காகம் + சிலந்தி.]*

இது உடம்பில் பட்ட இடத்தில் வெளுத்தும், சிவந்தும் கொப்புளமெழுப்பும். அதனால் விக்கல், இரைப்பு, அதிக தாகம், மூர்ச்சை, உறக்கம் கெடுதல், மார்பு நோய் முதலிய துன்பங்கள் ஏற்படும் (சா.அக.).



**காகச்சுரம்** *kāga-c-curam,* பெ.(n.) கரும் புள்ளிகளை எழுப்பும் ஒரு வகைக் காய்ச்சல்; a kind of developing black or dark eruptions or spots in the body (சா.அக.).

*[காகம் + சுரம்.]*

**காகசம்பு** *kāga-šambu,* பெ.(n.) 1. கறுப்பு நாவற்பழம்; black jaumoon - *Ardisia humilis.* 2. சம்பு நாவல்; malacca jaumoon (சா.அக.).

*[காகம் + சம்பு.]*

**காகசி** *kāgaši,* பெ.(n.) மணித்தக்காளி; black-berried solanum - *Solanum nigrum* (சா.அக.).

*[கா + கசி.]*

**காகண்டகம்** *kā-gaṇḍagam,* பெ.(n.) 1. மருக்காரை; common emetic nut - *Randia dumetorum.* 2. பறவைக் கொல்லி அல்லது பருந்து; destroyer of birds or hawk; falcon (சா.அக.).

*[கா + கண்டகம்.]*

**காகண்டம்** *kā-gaṇḍam,* பெ.(n.) பிரண்டை; adamant creeper - *Vitex quadrangularis* (சா.அக.).

*[கா + கண்டம்.]*

**காகண்ணான்** *kā-kaṇṇāṉ,* பெ.(n.) சாதிக்காய்; a kind of nutmeg - *Goniothaiamus wyanadensis* (சா.அக.).

*[கா + கண்ணான்.]*

**காகணந்தி** *kāgaṇandi,* பெ.(n.) **காகணந்திரை** பார்க்க; see *kāgaṇa-n-tirai* (சா.அக.).

**காகணந்திரை** *kagaṇa-n-tirai,* பெ.(n.) குன்றிக் கொடி; country liquorice - *Abrus preoatorius* (சா.அக.).

*[காகணம் + திரை.]*

**காகணம்** *kāgaṇam,* பெ.(n.) ஒரு வகைக் குட்ட நோய்; a kind of leprosy.

*[கா + கணம்.]*

இது கருஞ் சிவப்பு கொப்புளங்களை எழுப்பும். பூச்சிகளின் குற்றத்தினால் உண்டாவது (சா.அக.).

**காகத்திருப்பி** *kāga-t-tiruppi,* பெ.(n.) திப்பிலி; long pepper - *piper longum* (சா.அக.).

*[காக்கம் + திருப்பி.]*

**காகத்தீருகம்** *kāga-t-tīrugam,* பெ.(n.) காட்டுப் புகையிலை; wild tobacco - *Lobelia nicotianaefolia* (சா.அக.).

*[காகம் + தீருகம்.]*

**காகதாளி** *kāga-tāḷi,* பெ.(n.) மரவகை; Ceylon ebony (செ.அக.).

*[காகம் + தாளி.]*

**காகதிக்தம்** *kāga-tiktam,* பெ.(n.) குன்றி; crab's eye - *Abruos precatorious* (சா.அக.).

*[காகம் + திக்தம்.]*

**காகதிண்டு** *kāga-tiṇḍu,* பெ.(n.) ஒருவகைக் கருங்காலி; a kind of ebony - *Diospyros tomentosa* (சா.அக.).

*[காகம் + திண்டு.]*

**காகதித்தம்** *kāga-tittam,* பெ.(n.) குருஞ்சூலி மரவகை; toon tree - *Cedrela toona* (சா.அக.).

*[காகம் + தித்தம்.]*

**காகதிந்துகம்** *kaga-tindugam,* பெ.(n.) 1. கருந்தும்பை; black tumbai flower of the leucas genus. 2. பெருந்தும்பை; large black toombay - *Aniso meles malabarica.* 3. எட்டி; nux vomica - *Strychnos nux vomica* (சா.அக.).

*[காகம் + திந்துகம்.]*

**காகதிறம்** *kāga-tiṟam,* பெ.(n.) குறிஞ்சா; Indian or country ipecacuanha - *Asclepias asthmatica* (சா.அக.).

*[காகம் + திறம்.]*

**காகதுண்டகம்** *kāga-tuṇḍagam,* பெ.(n.) ஒரு நீர்க்கோழி; a kind of water-fowl (சா.அக.).

*[காகம் + துண்டகம்.]*

**காகதுண்டி** *kāga-tuṇḍi,* பெ.(n.) காக்கைப் பொன்; tinsel of brass leaf (சா.அக.).

*[காகம் + துண்டி.]*

**காகதும்பி** *kāga-tumbi,* பெ.(n.) 1. ஒரு வகைக் கருப்புத் தும்பி மீன், கடல் மீன்; a brownish black sea fish called black toomby - *Gymna-Pistusniger.* 2. முதுகின் புறம் கருப்பாயுள்ள தும்பி மீன்; another variety of toomby - *Pterois volitans.* 3. மற்றொரு வகைத் தும்பி மீன்; another variety - *Pterois miles.* 4. கருங்காலி; Mysore coromandal ebony - *Diospyros tupru.* 5. கருப்பு மரம்; black ebony - *Diospyros melan-oxylon.* 6. ஒரு நரும்பிலி மரம்; south Indian pine-*Podo carpus latifolia.*

*[காகம் + தும்பி.]*

**காகதூண்டி** *kāga-tūṇḍi,* பெ.(n.) **காகதுண்டி** பார்க்க; see *kāga-tuṇḍi* (சா.அக.).

**காகந்தகம்** *ka-kandagam,* பெ.(n.) ஆற்று முள்ளங்கி; wall radish - *Blumea arita* (சா.அக.).

*[கா + (கந்தம்) கந்தகம்.]*

**காகந்தம்** *kā-kandam,* பெ.(n.) 1. கருவக்களை மரம்; a kind of ebony - *Diospyros tementosa.* 2. ஒரு சிலந்திப் பூச்சி; a kind of spider (சா.அக.).

*[கா + கந்தம்.]*

**காகந்துரத்தி** *kāga-n-turatti,* பெ.(n.) 1. ஆதொண்டை; thorny caper - *Capparis horrida.* 2. காத்தொட்டி; Ceylon caper - *Capparis zeylanica* (சா.அக.).

*[காகம் + துரத்தி.]*

**காகநகம்** *kāga-nagam,* பெ.(n.) கருப்பும், சிவப்புமானத் தழும்புகளை உடம்பில் உண்டாக்கும் ஒரு தோல் நோய்; a skin disease characterised by dark-red or black-coloured patches with burning pain in the affected parts (சா.அக.).

*[காகம் + நகம்.]*

**காகநாசத்துவம்** *kāga-nāšattuvam,* பெ.(n.) 1. நாக மல்லிகை; snake jasmine - *Rhinacanthus communis.* 2. பேய்ச் சேம்பு; a bitter plant (சா.அக.).

*[காகம் + நாசத்துவம்.]*

**காகநாசிகம்** *kāga-nāšigam,* பெ.(n.) ஒரு பூடு; a plant - *Leca hirta* (சா.அக.).

*[காக்கை + பாலை.]*

**காகநாபி** *kāga-nābi,* பெ.(n.) கருநாவிக் கிழங்கு; black aconite root - *Glorisa superba* (சா.அக.).

*[காகம் + நாபி.]*

**காகநாமன்** *kāga-nāmaṉ,* பெ.(n.) 1. உட்சூடு; internal heat. 2. உடம்பின் சூடு; bodily heat. 3. உடம்பினுள் இருக்கும் நெருப்பு; internal or gastric fire. 4. பசி; hunger. 5. மனக்கொதிப்பு; anger. 6. உள்ளறிவு; internal knowledge.

*[காகம் + நாமன்]*

**உட்சூடாவன** : வெட்டைச்சூடு, பித்தச்சூடு, கணச்சூடு, கருப்பச்சூடு, மூலச்சூடு, காமச்சூடு முதலியன (சா.அக.).

**காகநேமி** *kāga-nēmi,* பெ.(n.) ஒரு பளபளப்பான கருப்புப் பிசின்; black dammer; resin.

இது மேற்குக் கரை காடுகளில் விளையும் ஒரு மரத்தின் அடி பகுதியைக் கீறி எடுக்கப்படும் உறைந்த பால். இது கருப்பூரத் தைலத்தை விட அதிகமாகப் புகையும் (சா.அக.).

*[காகம் + நேமி.]*

**காகபரி** *kāga-pari,* பெ.(n.) காக்கைப் பொன்; brass tinsel (சா.அக.).

*[காகம் + பறி.]*

**காகபுச்சம்** *kāga-puccam,* பெ.(n.) குயில்; Indian cuckoo - *Cuculus orientalis* (சா.அக.).

*[காகம் + புச்சம்.]*

**காகபுட்டம்** *kāga-puṭṭam,* பெ.(n.) **காகபுச்சம்** பார்க்க; see *kāga-puccam.*

**காகப்பிருகம்** *kāga-p-pirugam,* பெ.(n.) 1. கருப்புத் தும்பை; black toombay indica. 2. கதும்பை, பேய் மருட்டி; Malabar catmint - *Anisomeles malabarica.* 3. கருங்காலி; coromandal ebony. 4. கருப்பு மரம்; black ebony - *Diospyros melanoxylon* (சா.அக.).

*[காகம் + பிருகம்.]*

**காகமலடு** *kāga-malaḍu,* பெ.(n.) முதலில் இரண்டு பிள்ளைகளைப் பெற்றுப் பின்பு இல்லாதிருக்கை; a woman who has begot two children (சா.அக.).

*[காகம் + மலடு.]*

**காகமாசித்தைலம்** *kaga-māśi-t-tailam,* பெ.(n.) செம் மணித்தக்காளிச் சாற்றுடன் சில கடைச் சரக்குகளைச் சேர்த்து வடித்த எண்ணெய்; a medicated oil in which the red-berried nightshade forms the chief ingredient along with other drugs (சா.அக.).

*[காகமாசி + Skt. தைலம்.]*

**காகமுண்ணுங்காசம்** *kāgamuṇṇuṅ-kāšam,* பெ.(n.) காக்கைகள் விருப்பப்பட்டு உண்ணும் கோழையையும், சளியையும் வெளிப்படுத்தும் ஈளை நோய்; a kind of asthma attended with a discharge of phlegm or mucous fondly picked up by crows (சா.அக.).

*[காகம் + உண்ணும் + Skt. காசம்.]*

**காகயா** *kāgayā,* பெ.(n.) காத்தொட்டிக் கொடி; a thorny creeper - *Ceylon caper* (சா.அக.).

*[கா + கயா.]*

முட்செடியாகிய இதற்கு ஆதண்டன், ஆதொண்டன், காத்தொட்டி என்று பல பெயர் களுண்டு. இதன் இலைகள் அழற்சியைப் போக்கி, பசியை உண்டாக்கும். வேர்ப்பட்டை வலியையும், வேட்கையும் போக்கும். கக்கலையும் போக்கும் (சா.அக.).

**காகருடி** *kā-karuḍi,* பெ.(n.) 1. குயில்; Indian cuckoo. 2. பன்றி; hog (சா.அக.).

*[காகம் + ருடி.]*

**காகலீரவம்** *kāgal-īravam,* பெ.(n.) **காகரூடி** பார்க்க; see *kā-karuḍi* (செ.அக.).

**காகவசுகம்** *kāgava-šugam,* பெ.(n.) ஆலமரம்; banyan tree (சா.அக.).

*[காகம் + வசுகம்.]*

**காகவிருட்சம்** *kāga-viruṭcam,* பெ.(n.) புல்லூரி; parasite or mistle-toe (சா.அக.).

*[காகம் + விருட்சம்.]*

**காகவேப்பிலை** *kāga-vēppilai,* பெ.(n.) கருப்பு வேப்பிலை; false wampee tree - *Micromelum pubescens* (சா.அக.).

*[காகம் + வேப்பிலை.]*

**காகளகம்** *kāgaḷagam,* பெ.(n.) குரல்வளை; larynx (சா.அக.).

*[கா + களகம்.]*

**காகனாசனி** *kāganāšani,* பெ.(n.) 1. சேவகனார் கிழங்கு; plough root - *Methonica superba.* 2. சிற்றாமல்லி; short-tubed Arabian jasmine - *Jasminum sambuc (typica)* (சா.அக.).

*[காகம் + நாசினி.]*

**காகனார்** *kāganār,* பெ.(n.) நான்மணிக் கடிகை இயற்றிய புலவர்; the versor of *nānmaṇi-k-kaḍigai* (அபி.சிந்.).

*[காகன் + ஆர்.]*

**காகாட்சிகோளநியாயம்** *kākāṭci-kōḷaniyāyam,* பெ.(n.) காகத்தின் இரு கண்களுக்கும் ஒன்றே மணியானாற் போல ஒரே சொல் அல்லது தொடர் ஈரிடத்து இயைந்து பொருள் விளக்கும் நெறி; illustration of the single eye-ball of the crow functioning through both the eyes, to explain the same word or phrase being construed twice (செ.அக.).

*[காகாட்சி + கோளம் + **Skt.** நியாயம்.]*

**காகாபாலை** *kāgā-pālai,* பெ.(n.) **காக்கைப் பாலை** பார்க்க; see *kākkai-p-pālai* (சா.அக.).

**காகாபிசாசு** *kākā-pišāšu,* பெ.(n.) அரத்த முண்ணும் வெளவாற் பறவை; a kind of vampire-bat of black colour and bristling hair (செ.அக.).

*[காகம் + பிசாசு.]*

**காகாரண்டகி** *kākāraṇḍagi,* பெ.(n.) **காகண்டம்** பார்க்க; see *kākaṇḍam* (சா.அக.).

**காகாவல்லி** *kākā-valli,* பெ.(n.) **காகதித்தம்** பார்க்க; see *kāga-tittam* (சா.அக.).

**காகித்தம்** *kāgittam,* பெ.(n.) **காகித்திரம்** பார்க்க; see *kāgittiram* (செ.அக.).

**காகித்திரம்** *kāgittiram,* பெ.(n.) குறிஞ்சா; Indian ipecacuanha - *Tylophora asthmatica* (சா.அக.).

*[காகம் + அத்திரம்.]*

**காகிமசாரி** *kāgimašāri,* பெ.(n.) **காகித்திரம்** பார்க்க; see *kāgittiram* (சா.அக.).

**காகிமம்** *kāgimam,* பெ.(n.) **காகி** பார்க்க; see *kāgi* (சா.அக.).

**காகுகீரை** *kāgu-kīrai,* பெ.(n.) இனிப்பான ஒரு வகைச் சிறுகீரை; a kind of small sweet greens - *Amaranthus genus* (சா.அக.).

*[காகு + கீரை.]*

**காகுதம்** *kāgudam,* பெ.(n.) அண்ணம்; palate (சா.அக.).

*[காகு – காகுதம்.]*

**காகுராசி** *kāgu-rāši,* பெ.(n.) 1. கொடிவகை; snake -gourd - *Trichosanthes anguina.* 2. பேய்ப்புடல்; wild snake-gourd (செ.அக.).

*[காகு + ராசி.]*

**காகெந்து** *kākendu,* பெ.(n.) **காகப்பிருகம்** பார்க்க; see *kāga-p-pirugam* (சா.அக.).

**காகேடளி** *kā-kēḍaḷi,* பெ.(n.) ஒரு கடைச்சரக்கு (கருஞ்சீரகம்); black cumin (சா.அக.).

*[காகு + ஏடளி.]*

**காகேந்து** *kā-kēndu,* பெ.(n.) **காகெந்து** பார்க்க; see *kā-kendu.*

**காகோட்சி** *kā-kōṭci,* பெ.(n.) 1. பாகற்கொடி; spiked bitter cucumber - *Momordica charantia.* 2. ஒரு வகைக் கசப்புப் பாகல்; an unknown bitter variety of pagal plant (சா.அக.).

*[கா + கோட்சி.]*

**காகோடகம்** *kā-kōḍagam,* பெ.(n.) காட்டு முருங்கை; jungle moringa; senna-leaved French honey suckle - *Ormocarpum sennoides* (சா.அக.).

*[கா + கோடகம்.]*

**காகோடரிசி** *kā-kōḍariśi,* பெ.(n.) வாலுளுவை; spindle tree - *Celastrus paniculata* (சா.அக.).

*[கா + கோடரிசி.]*

**காகோதும்பரிகை** *kākōtumbarigai,* பெ.(n.) பேயத்தி மரம்; wild fig tree; devil's fig tree - *Ficus hispida alias F.daemonum* (சா.அக.).

*[கா + கோதும்பரி + கை.]*

**காகோர்ப்பலம்** *kāgōr-p-palam,* பெ.(n.) செவ்வாம்பல்; red water-lilly - *Nymphae rubra* (சா.அக.).

*[காக + உற்பலம்.]*

**காகோலி** *kāgōli,* பெ.(n.) தண்ணீர் விட்டான் கிழங்கின் இயல்பையுடைய ஒரு பூடு; a plant having qualities a kin to that of the water-root - *Asparagus racemosus* (சா.அக.).

*[கா + கோல.]*

**காகோளிகா** *kā-kōḷigā,* பெ.(n.) தேட்கொடுக்கி; Indian turnsole or Indian heliotrope - *Heliotropium indicum* (சா.அக.).

*[கா + கோளிகம்.]*

**காகோளிச்சிறுமி** *kākōḷi-c-ciṟumi,* பெ.(n.) சிர காகோளி; caper shrub - *Capparis sphylla* (சா.அக.).

*[கா + கோளி + சிறுமி.]*

**காகோறினி** *kākōṟiṉi,* பெ.(n.) அசோகு; Asoka tree - *Saracaindica* (சா.அக.).

*[கா + கோலினி.]*

**காகோனியம்** *kā-kōṉiyam,* பெ.(n.) **காகேடளி** பார்க்க; see *kā-kēḍaḷi* (சா.அக.).

**காங்கேருகம்** *kāṅgērugam,* பெ.(n.) நாகபலை; sweet smelling hare foot - *Uraria lagopoides* (சா.அக.).

*[காங்கு + ஏறுகம்.]*

**காங்கேருகி** *kāṅkērugi,* பெ.(n.) 1. ஒரு மரம்; a tree. 2. பீர்க்கு; gourd plant - *Luffa acutangula* (சா.அக.).

*[காங்கு + ஏறுகி.]*

**காங்கைதணிக்குமருந்து** *kāṅgai-t-taṇikku-marundu,* பெ.(n.) 1. உடம்பில் ஏற்படும் காய்ச்சல், வெள்ளைநோய், கபாலச் சூடு, முதலிய நோய்களால் ஏற்படும் வெப்பத்தை ஆற்றும் மருந்து; the medicine which abates or allays the heat in the system due to diseases such as fever, venereal heat, braïn-heat etc., and tends to cool the system, *Refrigerant.* 2. அழற்சியைத் தணிக்கும் மருந்து; any medicine counter acting the inflammation or irritation caused by fever, etc., *Antiphlogestics* (சா.அக.).

*[காங்கை + தணிக்கு + மருந்து.]*

**காங்கைபூமி** *kāṅgai-būmi*, பெ.(n.) வெப்ப நிலம்; hot place (சா.அக.).

*[காங்கை + பூமி.]*

**காச்சக்கீரை** *kācca-k-kīrai*, பெ.(n.) புளிச்சைக் கீரை; Indian brown hemp - *Hibiscus cannabinus* (சா.அக.).

*[காச்சல் + கீரை.]*

**காச்சப்பட்டா** *kācca-p-paṭṭā*, பெ.(n.) சூநாறிமரம்; umbelled yellow - flowered resin seed (செ.அக.).

*[காச்சல் + பட்டு.]*

**காச்சப்பட்டை** *kācca-p-paṭṭai*, பெ.(n.) ஒரு மரப்பட்டை; resin-seed shrub - *Pittosporum tetraspermum* (சா.அக.).

*[காச்சல் + பட்டை.]*

**காச்சம்** *kāccam*, பெ.(n.) **காச்சக்கீரை** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

**காச்சரக்கு** *kāccarakku*, பெ.(n.) **காச்சக்கீரை** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

**காச்சரக்குநார்** *kāccarakku-nār*, பெ.(n.) புளிச்சைக்கீரை; Indian brown hemp (செ.அக.).

*[காச்சரக்கு + நார்.]*

**காச்சல்** *kāccal*, பெ.(n.) வெப்பு நோய்; fever (சா.அக.).

மறுவ. காய்ச்சல்

**காச்சற்கட்டி** *kāccaṟ-kaṭṭi*, பெ.(n.) 1. வெப்பு நோயால் வயிற்றுள் காணுங் ஈரற் கட்டி; enlargement of the spleen from fever. 2. காய்ச்சி யெடுத்தக் கட்டி; lump of any substance derived from boiling (சா.அக.).

*[காய்ச்சல் + கட்டி.]*

**காச்சாத்திரம்** *kāc-cāttiram*, பெ.(n.) காட்டாத்தி; yellow mountain ebony - *Bauhinia tomentose* (சா.அக.).

*[கா + சாத்திரம்.]*

**காச்சிரக்கு** *kāccirakku*, பெ.(n.) புளிச்சைக்கீரை; Indian brown hemp - *Hibiscus Cannabinus* (செ.அக.).

*[T. Kāci > த. காச்சி.]*

**காச்சுப்பு** *kāccuppu*, பெ.(n.) **காய்ச்சுப்பு** பார்க்க; see *kāy-c-cuppu* (சா.அக.).

**காச்சுரக்கை** *kāccurakkai*, பெ.(n.) உலர்ந்த சுரக்குடுக்கை; dried bottle-gourd (சா.அக.).

*[காய் (காய்ந்து) + சுரக்கை.]*

**காச்சுரக்கைநார்** *kāccurakkai-nār*, பெ.(n.) புளிச்சைக்கீரை; Indian brown hemp - *Hibiscus Cannabinus* (செ.அக.).

*[காய் + சுரக்கை + நார்.]*

**காச்சுரம்** *kāccuram*, பெ.(n.) **காச்சக்கீரை** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

**காச்சுலவணம்** *kāccu-lavaṇam*, பெ.(n.) 1. சவட்டுப்பு; salt produced from the earth impregnated with soda. 2. துருசு குருவாகு மோர் உப்பு; a salt capable of converting copper sulphate or copper acetate into a quintessence salt having alchemical virtues (சா.அக.).

*[காய்ச்சு + (இ)லவணம்.]*

**காச்சுலவணவுப்பு** *kāccu-lavaṇa-uppu*, பெ.(n.) **காச்சுலவணம்** பார்க்க; see *kāccu-lavaṇam* (சா.அக.).

**காச்சுவா** *kāccuvā*, பெ.(n.) சிற்றாமல்லி; short -tubed Arabian jasmine - *Jasminus sambac* (சா.அக.).

*[காய் + சுவல்.]*

**காச்சுவாதம்** *kāccu-vādam*, பெ.(n.) பிள்ளைப் பேற்றுக் காய்ச்சல்; puerperal fever (சா.அக.).

*[காய்ச்சல் + வாதம்.]*

**காச்சுறுக்குக்கீரை** *kāccurukku-k-kīrai,* பெ.(n.) **காச்சக்கீரை** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

**காச்சை** *kāccai,* பெ.(n.) காயாச்செடி; a plant.

*[கய – காயா– காச்சை.]*

இதற்குக் காயாம் பூச்செடி அல்லது சிறுகாசா என்றும் பெயர். 10–12 அடி உயரம் வளரும் இச்செடி குட்டையாகவும், இதன் இலைகள் சிறு காம்புகளாகவும், பூக்கள் நீல நிறமாயும் இருக்கும். இதன் இலைகளைக் கொண்டு வண்ணமூட்டலாம். இதன் வகைகள் :

1. சிறுகாசா – small ironwood tree, *Meme - Cylon edule*; 2. பெருங்காசா – big variety; 3. காகைக் காசா – wild ironwood tree; 4. வெள்ளைக் காசா – narrowmall ironwood tree, *Meme - Cylon edule*; 5. பூங்காசா; many-flowered iron wood - *Memecylon edule* (சா.அக.).

**காச்சொறிக்கீரை** *kāccori-k-kīrai,* பெ.(n.) **காச்சக்கீரை** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

**காசக்கினி** *kāšakkini,* பெ.(n.) சிறு தேக்கு; bettle-killer - *Cleodendron serratum* (சா.அக.).

*[கய – காய – காச + நெக்கினி.]*

**காசக்கூறு** *kāša-k-kūru,* பெ.(n.) ஈழை நோயின் வகை; various kinds of asthma (சா.அக.).

*[காசம் + கூறு.]*

**காசகந்தம்** *kāša-gandam,* பெ.(n.) ஒரு வேர்; a species of root (சா.அக.).

**காசகாமலம்** *kāšakāmalam,* பெ.(n.) ஒரு கண் நோய்; a disease of the eye (சா.அக.).

*[காசம் + காமலம்.]*

**காசப்புல்** *kāšā-p-pul,* பெ.(n.) ஒரு பொன்னிறமான புல் வகை; a yellow or gold-coloured grass (சா.அக.).

*[காசம் + புல்.]*

**காசபத்திரம்** *kāša-pattiram,* பெ.(n.) பூச பத்திரி; an unidentified drug (சா.அக.).

*[காசம் + பத்திரம்.]*

**காசமலம்** *kāša-malam,* பெ.(n.) கண் நோயினால் உண்டாகும் கண்ணழுக்கு; morbid fluid or other impurities secreted by the eye in cataract etc. (சா.அக.).

*[காசம் + மலம்.]*

**காசமாதாரி** *kāša-mādāri,* பெ.(n.) பொரும்பிலி; a species of horse gram plant (சா.அக.).

*[காசம் + மாதாரி.]*

**காசமுறுக்கி** *kāša-murukki,* பெ.(n.) கருப்பு விழியில் நரம்பு சிவந்து, வெள்ளை விழியில் தசை வளர்ந்து, கீழிமையை உறுத்தி நீர் வடிந்து, மிகுந்த வலியோடு, பல் வலியையும், தலை வலியையும் உண்டாக்கும் ஒரு கண்ணோய் (அக.நய.விதி.); a disease of the eye marked by inflammation of the optic-nerve, morbid growths on the white of the eye, irritation of the lower lid, watery discharge, distressing pain, tooth-ache, headache etc. (சா.அக.).

*[காசம் + உறுக்கி.]*

**காசாக்கிழங்கு** *kāšā-k-kilangu,* பெ.(n.) மஞ்சள் கலந்த சிவப்பு நிறமான முள்ளங்கி இனத்தைச் சேர்ந்த ஒரு வகைக் கிழங்கு; a kind of yellowish red root resembling horse radish (சா.அக.).

*[காசம் + கிழங்கு.]*

**காசல்விதை** *kāšal-vidai,* பெ.(n.) காசல் கீரையின் விதை; seed of *kāšal-kīrai* (சா.அக.).

*[காச்சல் + விதை.]*

**காசலவணம்** *kāša-lavaṇam,* பெ.(n.) ஐந்து வகை உப்புகளில் (பஞ்சலவணத்துள்) ஒன்று; one of *pañca-lavaṇam*, salt of potash or soda in crystalline state (செ.அக.).

*[காச + **Skt.** இலவணம்.]*

**காசாக்கு–தல்** *kāšākku-,* 5 செ.கு.வி.(v.i.) தன்னலத்தையே குறியாகக் கொண்டு எதையும் விற்றுப் பணம் சேர்த்தல்; cash in on something. *நடிகையின் தந்தை மகளின் புகழைக் காசாக்குவதில் குறியாக இருக்கிறார். அவன் மண்ணைக் கூடக் காசாக்கி விடுவான்.*

*[காசு + ஆக்கு–தல்.]*

**காசாகிதம்** *kāšāgidam,* பெ.(n.) அரைக்கீரை; round-headed amaranth - *Amarantus gangeticus* (சா.அக.).

**காசாகுவாகு** *kāšāguvāgu,* பெ.(n.) 1. கருப்புத் தக்காளிச் செடி. இது சூதத்தைக் கட்டும்; a black *takkāḷi* plant; it is supposed to consolidate mercury. 2. மிளகுத் தக்காளி; mad apple - *Solanum melongena* (சா.அக.).

*[காசா + ஆகு + வாகு.]*

**காசாநிறம்** *kāšā-niṟam,* பெ.(n.) 1. திப்பிலி மூலம்; root of piper longum. 2. ஒரு சிகப்பு நிறம்; a sort of deep red colour (சா.அக.).

*[காசம் + நிறம்.]*

**காசாப்பற்று** *kāšā-p-paṟṟu,* பெ.(n.) தனது பற்று; dues, as to a shop, bank, etc. (செ.அக.).

*[U. Khāsā > + த. காசா.]*

*[காசு + பற்று.]*

**காசாம்பூ** *kāšāmbū,* பெ.(n.) காயாவின் பூ; flower of the kaya tree (சா.அக.).

*[காயாம் – காசாம் + பூ.]*

**காசாம்பூவர்ணத்தான்** *kāšāmbū-varṇattāṉ,* பெ.(n.) 1. துரிசு; blue vitriol. 2. காய்ச்சற் பாடாணம்; a mineral poison (சா.அக.).

*[காயாம்பூ + வண்ணத்தான்.]*

**காசாலினி** *kāšāliṉi,* பெ.(n.) பழு பாகல்; buffalo carolah - *Momordica hispida* (சா.அக.).

**காசாவிருட்சம்** *kāšā-viruṭcam,* பெ.(n.) குடசபாலை; milk plant - *Dregea volubilis* (சா.அக.).

**காசாவில்லை** *kāšā-villai,* பெ.(n.) சிறப்புச் சந்தனக் கூட்டு (யாழ்.அக.); sandal paste with special fragrant ingredients (செ.அக.).

*[காசா+ வில்லை]*

**காசாளர்** *kāšāḷar,* பெ.(n.) வங்க, அலுவலகம் முதலியவற்றில் பணம் தருதல், பெறுதல் ஆகியவற்றையும் அவை தொடர்பான பிற பணிகளையும் கவனிக்கும் பதவி வகிப்பவர்; cashier.

*[காசு + ஆளர்.]*

**காசானிஇலை** *kāšāṉi-ilai,* பெ.(n.) காயாச் செடியின் இலை; leaves of iron wood tree - *Memicylon tinctoria* (சா.அக.).

*[காயா – காசானி+ இலை.]*

**காசிக்கட்டி** *kāši-k-kaṭṭi,* பெ.(n.) **காசுகட்டி** பார்க்க; see *kāšu-kaṭṭi* (சா.அக.).

**காசிக்கிருட்டி** *kāši-k-kiruṭṭi,* பெ.(n.) பறவை வகை (யாழ்.அக.); a bird.

**காசிக்கிருட்டிணன்** *kāši-k-kirusṇaṉ,* பெ.(n.) 1. சீரகம்; cummin seed - *Cuminum cyminum.* 2. சாதிபத்திரி; mace; nut-meg (சா.அக.).

மறுவ. சாதிக்காய்

*[காசி + கிருட்டிணன்.]*

**காசிக்குடபதி** *kāši-k-kuḍapadi,* பெ.(n.) கழுதை; ass (சா.அக.).

*[காசி + குடபதி.]*

**காசிகம்** *kāšigam,* பெ.(n.) புழுக்கொல்லிப் பூடு; worm killer - *Aristolochia bracteata* (சா.அக.).

*[காசு–காசிகம்.]*

**காசிகாவகத்தி** *kāšigāvagatti,* பெ.(n.) அகத்தி மரவகை; west Indian pea-tree - *Sesbania grandiflora* (சா.அக.).

*[காசிகம் + அகத்தி.]*

**காசிடை** *kāšiḍai,* பெ.(n.) காசினிறை அளவு; the weight of a pie (an old Indian copper coin) (சா.அக.).

*[காசு + எடை = காசெடை →காசிடை.]*

**காசிடைபுகட்டல்** *kāšiḍai-pugaṭṭal,* பெ.(n.) காசிளைவு உள்ளுக்குச் செலுத்துகை; to administer internally anything weighing a pie as medicinal oil (சா.அக.).

*[காசு + எடை + புகட்டல்.]*

**காசித்து** *kāšittu,* பெ.(n.) உடலை நரைதிரையின்றி நெடுநாள் இருக்கச் செய்யும் பேறு; rejuvenation (சா.அக.).

*[கா + சித்து.]*

**காசிப்பலிகம்** *kāši-p-paligam,* பெ.(n.) கேந்திர வல்லி; an unidentified creeper (சா.அக.).

*[காசி + பலிகம்.]*

**காசிபன்** *kāšibaṉ,* பெ.(n.) அத்தியிடம் தேவர்களையும், திரியிடம் அசுரர்களையும் பெற்ற ஒரு முனிவன்; a rsi, said to be the father of Devas by aditi, and of asuras by diti. *"காசிபனார் தந்தது" (வள்ளுவமா.14)* (செ.அக.).

*[காயன் – காயிபன் – காசிபன்.]*

**காசிரோர்த்தம்** *kāširōrttam,* பெ.(n.) தொட்டாற் சுருங்குஞ் செடிவகை; sensitive plant called touch-me-not - *Mimosa pudica* (செ.அக.).

*[கா + சிரம் + ஊர்த்தம்.]*

**காசிவாசனி** *kāši-vāšaṉi,* பெ.(n.) குறும் பூசினி; a kind of pumpkin (சா.அக.).

*[காகி + வாசனி.]*

**காசுக்கட்டிப்பில்லை** *kāšu-k-kaṭṭi-p-pillai,* பெ.(n.) காய்ச்சுக் கட்டியை மருந்துச் சரக்குகளோடு கலந்து சக்கரை இட்டுத் திரட்டிய வில்லைகள்; tablets prepared by mixing catechu and other medicinal drugs with sugar, *Catechu lozenges* (சா.அக.).

*[காசுகட்டி + வில்லை.]*

**காசுக்கருதி** *kāšu-k-karudi,* பெ.(n.) பொற் காசுகளில் முதல் தரமானது, நற்காசென்றும் பெயர் பெறும்; superior quality gold coins. *"காசுக் கருதித் துளையிலும் உரையிலும் நிறையலும் வழுவாதது தீப்போக்குச் செம்பொன்" (தெ.இல்.கல்.தொ.8, கல்.199). (கல்.அக.).*

*[காசு + கருதி.]*

**காசுக்கட்டல்** *kāšu-k-kaṭṭal,* பெ.(n.) **காசுபோடல்** பார்க்க; see *kāšu-pōḍal* (சா.அக.).

**காசுகடமை** *kāšu-kaḍamai,* பெ.(n.) காசாகப் பெரும் வரி; tax payable in money (செ.அக.).

*[காசு + கடமை.]*

**காசுகரப்பன்** *kāšu-karappaṉ,* பெ.(n.) உடம்பில் நமைச்சல் ஏற்பட்டு, சொறிந்த

இடத்தில் சிவந்து, காசு மாதிரி தடித்துக் குருக்கள் கிளம்பும் ஒரு கரப்பன்; eruption of small round patches of the size of a pie resembling the effects of nettlestings (சா.அக.).

*[காசு + கரப்பன்.]*

**காசுகல்** *kāšukal*, பெ.(n.) நிறைகல்; standard weight for weighing jewels (செ.அக.).

*[காசு + கல்.]*

**காசுசின்னம்** *kāšu-šinnam*, பெ.(n.) சோழ பாண்டியர் ஆட்சியில் உயர்ந்த முதல் மதிப்புக் காசு; first made coin of the pomdya and chola perif. *"ஒரு காசு தலையாக ஒரு சின்னங் கடையாகவும்" (தெ.கல்.தொ.8, கல்.148).*

*[காசு + சின்னம்.]*

கடைசியாக கொள்ளப்பட்ட பின்ன மதிப்பு சின்ன காசு – சின்னம் என்பதாகும். உருபா–பைசா போன்றதாகும். இது சோழ நாட்டில் நடைமுறையில் இருந்த காசு மதிப்பீட்டு முறை.

**காசுபோடல்** *kāšu-pōḍal*, பெ.(n.) காசு எடை மருந்து கூட்டல் அல்லது சேர்த்தல்; adding or mixing a pie-weight of medicine (சா.அக.).

*[காசு + எடை.]*

**காசுரண்டம்** *kāšuranḍam*, பெ.(n.) நாயுருவி; Indian burr - *Achyrantnes aspera* (சா.அக.).

**காசுலவணம்** *kāšu-lavaṇam*, பெ.(n.) வளையலுப்பு; salt used in the manufacture of bangles known as glass gall (சா.அக.).

*[காய்ச்சு – காசு + லவணம்.]*

**காசுலவம்** *kāšulavam*, பெ.(n.) **காசுலவணம்** பார்க்க; see *kāšu-lavaṇam* (சா.அக.).

**காஞ்சதம்** *kāñjadam*, பெ.(n.) புங்க மரம்; puṅgu tree - *Dalbergia arborea* (சா.அக.).

*[காஞ்சனம் + நதம்.]*

**காஞ்சநாகரம்** *kāñja-nāgaram*, பெ.(n.) ஒரு கடைச் சரக்கு; a bazzaar drug (சா.அக.).

**காஞ்சனபுட்பி** *kāñjaṇa-puṭpi*, பெ.(n.) மஞ்சள் பூவுள்ள ஒரு பூடு; a plant akin to premna spinosa with yellow flowers (சா.அக.).

*[காஞ்சனம் + புட்டு.]*

**காஞ்சனமாலிதம்** *kāñjaṇa-mālidam*, பெ.(n.) கொத்தவரை; cluster bean - *Cysmopsis psoralioides* (சா.அக.).

**காஞ்சனமாலை** *kāñjaṇa-mālai*, பெ.(n.) 1. கண்ணன் (கர்ணன்) மனைவி; wife of *karṇā*. 2. மலையத்துவச பாண்டியன் மனைவி; wife of *Malaiya-t-tuvaša Pāṇḍiyā*. 3. பாண்டியன் மகள்களில் ஒருத்தி;one of the daughter of *Pāṇḍiyā* king. 4. பெருங்கதையின் தலைவி வாசவ தத்தையின் உயிர்த் தோழி; the close friend of *vāšava-tattai* (அபி.சிந்.).

*[காஞ்சனம் + மாலை.]*

**காஞ்சனமாலைகோயில்** *kāñjaṇa-mālai-kōyil*, பெ.(n.) ஏழு கடல்களும் தம்முள் அடங்கிய தடாகத்தின் தென் மேற்கில் உள்ள பழமையான கோவில்; an ancient temple in South West direction of a tank seven sea.

*[காஞ்சனமாலை + கோயில்.]*

இதில் சலகண்டேசுவரரென்ற பெயருடைய சிவபெருமானும், அவரைக் கண்டு வணங்கிய நிலையில் காஞ்சனமாலையின் வடிவமும் அமைக்கப்பட்டுள்ளது (அபி.சிந்.).

**காஞ்சனாகுவயம்** *kāñjaṇā-kuvayam*, பெ.(n.) சண்பகம்; champak, *Michelia champaca* (சா.அக.).

**காஞ்சனாவயம்** *kāñjaṉā-vayam,* பெ.(n.) ஊமத்தைச் செடிவகை; thorn apple - *Datura* (சா.அக.).

**காஞ்சிகவடகம்** *kāñjiga-vaḍagam,* பெ.(n.) 1. உசிலை (மசலா) இட்ட கூழ் வடகம்; rice gruel seasoned with condiments. 2. புளித்த கூழும், துவையலும் சேர்ந்த உணவுப் பொருள்; a dish consisting of sourgruel meal and paste ground with several condiments (சா.அக.).

**காஞ்சிகி** *kāñjigi,* பெ.(n.) கொழுமிச்சை; citron; bitter orange - *Citrus aurantium* (சா.அக.).

**காஞ்சிதம்** *kāñjitam,* பெ.(n.) கூத்துக்குரிய அசைவுக(பாதங்க)ளுள் ஒன்று (சிலப்.); a kind of pose.

**காஞ்சிநதி** *kāñji-nadi,* பெ.(n.) மேலைச் சிதம்பரம் அல்லது பேரூரிலுள்ள ஆறு; a river in west Chidambaram or a river in Perur (அபி.சிந்.).

**காஞ்சிப்புலவனார்** *kāñji-p-pulavaṉār,* பெ.(n.) மதுரைக்காஞ்சி பாடிய மாங்குடி மருதனார்; the versor of *madurai-k-kāñji.*

*[காஞ்சி + புலவனார்.]*

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனை நிலையாமை அறிவுறுத்த வேண்டி மதுரைக்காஞ்சி பாடியதனால் மதுரைக் காஞ்சி புலவரென்றும், காஞ்சிப் புலவரென்றும் கூறப்பெறுவாராயினர். மாங்குடிக் கிழார் என்பவரும் இவரே. வேளாண் குடியினரான இவர் பாண்டியனது அவைக்களப் புலவராகவும் விளங்கினார் (அபி.சிந்.).

**காஞ்சிபுரம்சபாபதிமுதலியார்** *kāñjipuram-šabāpati-mudaliyār,* பெ.(n.) சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பணிபுரிந்த தமிழ்ப்புலமை உடைய புலவர்; a Tamil scholar who stuited at Pacciappan college.

பெரியபுராணம், திருவிளையாடல் மற்றும் சில தல புராணங்களுக்கு உரை இயற்றி உரையாசிரியர் எனப் பெயர் பெற்றவர். எழுபது வருடங்களுக்கு முன் வாழ்ந்தவர். தமிழில் அருணாசல சதகம் முதலியன இயற்றியவர் (அபி.சிந்.).

**காஞ்சிரங்களம்** *kāñjiraṅgaḷam,* பெ.(n.) 1. இனிகம்; sweetness. 2. எட்டி மரம்; strychnine tree - *Strychncs nux vomica* (சா.அக.).

**காஞ்சிரம்பழம்** *kāñjiram-paḻam,* பெ.(n.) எட்டிப்பழம்; fruit of the strychnine tree (சா.அக.).

**காஞ்சிரைமேற்புல்லுருவி** *kāñjirai-mēṟ-pulluruvi,* பெ.(n.) எட்டி மரத்தின் மேல் முளைக்கும் புல்லுருவி; a parasite on the strychnine tree (சா.அக.).

**காஞ்சிபுரம்** *kāñjipuram,* பெ.(n.) பழங்காலத்தில் இருந்த சிறந்த ஏழு நகரங்களுள் ஒன்று; *Kāñjipuram,* one among the sacred city of Tamil Nadu (சா.அக.).

**காஞ்சீரகம்** *kāñjīragam,* பெ.(n.) செந்தொட்டி; scorpion leaf - *Tragia involucrata* (சா.அக.).

**காஞ்சுரை** *kañjurai,* பெ.(n.) 1. உலர்ந்த சுரைக்காய்; dried bottle-gourd. 2. சுரைக் குடுக்கை; fruit of bottle-gourd which when dried and emptied of its contents is used by beggars as a feeder-bottle - *Fakeer's bottle.* 3. எட்டி; strychnine tree - *Srychncs nux vomica* (சா.அக.).

**காஞ்சூரை** *kāñjūrai,* பெ.(n.) **காஞ்சுரை** பார்க்க; see *kāñjurai* (சா.அக.).

**காஞ்சொறியொற்றல்** *kāñjoṟi-y-oṟṟal,* தொ.பெ.(vbl.n.) காஞ்சொறிப்பூடை உடம்பிற்படும்படிச் செய்து தினவை

உண்டாக்கல்; touching one with a nettle plant to cause itching sensation (சா.அக.).

*[காஞ்சொறி + ஒற்றல்.]*

**காட்சிப்பிரமாணம்** *kāṭci-p-piramāṇam,* பெ.(n.) ஆறுவகை அளவைகளுள் ஒன்று; perception, means of perception (செ.அக.).

*[காட்சி + **Skt.** பிரமாணம்.]*

**காட்சியளி-த்தல்** *kāṭci-y-aḷi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒருவர் அல்லது ஓர் இடம் தொடர்பாக ஏதேனும் ஒரு தோற்றம் தருதல்; appear, present oneself in a particular manner. *'அந்த மருத்துவர் எப்போதும் சிரித்த முகத்துடன் காட்சியளிப்பார். திருவிழாக் கோலத்தில் நகரமே ஒளிமயமாகக் காட்சியளித்தது'.* 2. இறைவன், பெரியோர் காட்சி தருதல்; appear of God, devotees, holy person.

*[காட்சி + அளி-த்தல்.]*

**காட்சியா-தல்** *kāṭci-yā-,* 6 செ.கு.வி.(v.i.) தூக்கத்தில் தோன்றல், கனவில் தோன்றல்; appearance in a vision (சா.அக.).

*[காட்சி + ஆ-தல்.]*

**காட்டகுட்டம்** *kāṭṭa-kuṭṭam,* பெ.(n.) ஒரு பறவை; an unidentified bird (சா.அக.).

**காட்டஞ்சம்** *kāṭṭañjam,* பெ.(n.) செவ்விறகு; red fuel or firewood. It is said to be used in alchemy, because of its fumes having extraordinary virtues (சா.அக.).

**காட்டமிர்தம்** *kāṭṭamirdam,* பெ.(n.) தில்லைப்பால்; tiger's milk - *Excoecaria agallocha.*

*[காட்டு + அமிர்தம்.]*

இதைக் காட்டிலுள்ள சித்தர்கள் அருந்துவதால் இப்பெயர் பெற்றது. (சா.அக.).

**காட்டமிர்து** *kāṭṭamirdu,* பெ.(n.) காட்டில் விளையும் பொருட்கள்; forest produce.

*[காட்டு + அமிர்து.]*

**அவையாவன :** அரக்கு, கருந்தினை, தேன், நாவி, மயிற்பீலி, தேன்கூடு முதலியன (சா.அக.).

**காட்டரலி** *kāṭṭarali,* பெ.(n.) காட்டு மா; jungle mango - *Gerbera odollam* (சா.அக.).

**காட்டரளி**[1] *kāṭṭaraḷi,* பெ.(n.) காட்டு அரளி மரம்; wild nerium or jungle mango - *Cerebra odallam alias C.lactaria* (சா.அக.).

*[காட்டு + அரளி.]*

**காட்டரளி**[2] *kāṭṭaraḷi,* பெ.(n.) 1. காட்டரளி; wild gannair; willow leaved water croton - *Homonoia riparia.*

*[காட்டு + அலகு.]*

**காட்டலகு** *kāṭṭalagu,* பெ.(n.) காட்டு அலகு மரம்; an unidentified tree; but believed to be referring to *kāṭṭaraḷi* which see (சா.அக.).

*[காட்டு + அரளி.]*

**காட்டலகுக்குழல்** *kāṭṭalagu-k-kuḻal,* பெ.(n.) மருந்தை வைத்து அவிப்பதற்காகப் பயன்படுத்தும் காட்டலகு மரத்தினாற் செய்த குழாய்; a wooden tube made out of the alagu tree used for roasting medicine (சா.அக.).

*[காட்டு + அலகு + குழல்.]*

**காட்டலாகிரி** *kāṭṭalāgiri,* பெ.(n.) கொடி மாதுளை; creeping emanaur - *Punicum genus* (சா.அக.).

**காட்டாசான்** *kāṭṭāšāṉ,* பெ.(n.) திருநெல்வேலி மாவட்டம் முதலிய இடங்களில் வாழும் குறுந்தொழிற் பிரிவினர்; a sect ot people who live in *tirunelvēli* district.

*[காட்டு + ஆசான்.]*

இவர்கள் கூடைகட்டுவர்; கிளிஞ்சல் சுடுவர் (அபி.சிந்.).

**காட்டால்** *kāṭṭāl,* பெ.(n.) பேய் ஆல் அல்லது கல் ஆல்; forest banyan tree or demon fig. - *Ficus citrifolia.*

*[காட்டு + ஆல்.]*

இதன் பட்டை மருந்திற்குப் பயன்படும் (சா.அக.).

**காட்டாவங்கம்** *kāṭṭāvaṅgam,* பெ.(n.) வெள்ளைக் கழற் கொடி; a white species of bonducella (சா.அக.).

**காட்டிக்கொள்(ளு)-தல்** *kāṭṭi-k-koḷ-,* 13 செ.கு.வி.(v.i.) ஒன்றைப் போல் போலியாக (பாவனை) செய்தல்; try to pass for someone; put on airs. *அவன் தன்னை அறிவாளி போல் காட்டிக் கொண்டான்.*

*[காட்டி + கொள்(ளு)-தல்.]*

**காட்டுச்சேனா** *kāṭṭu-c-cēṉā,* பெ.(n.) நிலவாவிரையில் ஒருவகை; a species of senna growing wild.

*[காடு + சேனா.]*

**காட்டிஞ்சிமூலம்** *kāṭṭiñji-mūlam,* பெ.(n.) வெள்ளைச் சாரண வேர்; one styled trianthema - *Trianthema Obcordata* (சா.அக.).

**காட்டிதோசணா** *kāṭṭi-tōśaṇā,* பெ.(n.) திப்பிலி; long pepper - *Piper longum* (சா.அக.).

**காட்டிராட்சி** *kāṭṭirāṭci,* பெ.(n.) அரத்தை; galangal - *Alpinia galanga* (சா.அக.).

**காட்டிருப்பவல்** *kāṭṭiruppaval,* பெ.(n.) ஒரு கொடி; a kind of creeper - *Indian cudweed, Gnaphalium indicum* (சா.அக.).

*[காட்டு + இருப்பு + அவல்.]*

இதற்குப் புத்தர்கைச் சம்மட்டி, காயசித்தி, உப்புநீக்கி, காரீய செந்தூரி, கானல் கள்ளி முதலிய பல பெயர்கள் உண்டு (சா.அக.).

**காட்டினாமணத்தி** *kāṭṭiṉāmaṇatti,* பெ.(n.) 1. பேய் ஆமணக்கு; wild castor - *Baliospermum axillare.* 2. சீமை ஆமணக்கு; bronze-leaved physic nut - *Jatropha gossy-pifolia* (சா.அக.).

**காட்டிகை** *kāṭṭigai,* பெ.(n.) இண்ட` முள்ளு; fine-leaved acacia - *Acacia pennata* (சா.அக.).

**காட்டுக்கத்தோதிகம்** *kāṭṭu-k-kattōdigam,* பெ.(n.) சாமை; little millet - *Panicum miliare* (சா.அக.).

**காட்டுக்கரணை** *kāṭṭu-k-karaṇai,* பெ.(n.) பாவட்டை; Indian pavatta - *Pavetta indica* (சா.அக.).

**காட்டுக்குறி** *kāṭṭu-k-kuṟi,* பெ.(n.) மாலியப் (வைணவ) பார்ப்பனருள் ஒரு சாராருக்குரிய குடிபெயர்; a sect of vaishnava 'parpar'. *"இவ்வூர் பண்டிதவத்ஸலச்சேரி காட்டுக்குறி பஞ்சுகிரமவித்தன்" (தெ.கல். தெ.19, கல்.58). "ஸ்ரீகிருஷ்ணபட்டனும் காட்டுக்குறி வெண்ணய கிரமவித்தனும்" (தெ.கல்.தொ.IV கல்-133) (கல்.அகர.).*

**காட்டுக்கருஞ்சீரகம்** *kāṭṭu-k-karuñ-cīragam,* பெ.(n.) ஒரு கடைச் சரக்கு; black cumin, *Nigellasativa* (சா.அக.).

*[காட்டு + கரும் + சீரகம்.]*

**காட்டுக்கர்ப்பூரகிச்சிலிக்கிழங்கு** *kāṭṭu-k-karppūra-kiccili-k-kiḻaṅgu,* பெ.(n.) காட்டு பூலாங் கிழங்கு; forest orange root of - *Curcuma genus* (சா.அக.).

*[காட்டு + கர்ப்பூர + கிச்சிலி + கிழங்கு.]*

**காட்டுக்கரோசயம்** *kāṭṭu-k-karōśayam,* பெ.(n.) சாரப் பருப்பு; pulp of cuddapah almond (சா.அக.).

*[காட்டு + கரோசயம்.]*

**காட்டுக்கள்ளி** *kāṭṭu-k-kaḷḷi,* பெ.(n.) மலைக்கள்ளி; hill kalli; leper's plant.

*[காட்டு + கள்ளி.]*

இதன் பூ மஞ்சள் நிறம். இலைகளை வதக்கிக் காயம், புண் முதலியவைகளுக்கு வைத்துக் கட்ட, அழற்சி அல்லது எரிச்சல் போம். (சா.அக.).

**காட்டுக்கறிவேப்பிலை** *kāṭṭu-k-kaṟi-vēppilai,* பெ.(n.) **காட்டுக்கருவேப்பிலை** பார்க்க; see *kāṭṭu-k-karu-vēppilai* (சா.அக.).

*[காட்டு + கறிவேப்பிலை.]*

**காட்டுக்கருவேப்பிலை** *kāṭṭu-k-karu-vēppilai,* பெ.(n.) ஆனாந்தளை; axilflowered shrubby Indian wampee - *Clansena wildenovi* (சா.அக.).

*[காட்டு + கரு + வேப்பிலை.]*

**காட்டுக்கிச்சிலிக்கிழங்கு** *kāṭṭu-kiccili-k-kiḻaṅgu,* பெ.(n.) ஒரு மணமுள்ள கிழங்கு; jungle zedoary of the hedychium genus (சா.அக.).

*[காட்டு + கிச்சிலி + கிழங்கு.]*

**காட்டுக்கிழங்கு** *kāṭṭu-k-kiḻaṅgu,* பெ.(n.) 1. சிறு வள்ளிக் கிழங்கு; small sweet yam or chinese yam - *Dioscorea aculeata.* 2. காட்டில் விளையுங் கிழங்கு; bulbous roots found grown in forests; forest esculent roots so called from its growth in the forest (சா.அக.).

*[காட்டு + கிழங்கு.]*

**காட்டுக்கிளிப்பிள்ளை** *kāṭṭu-k-kiḷi-p-piḷḷai,* பெ.(n.) காட்டில் வசிக்கும் கிளிப்பிள்ளை; jungle parrot - *Taccocua leschenaultii alias zandostomers sirkeer* (சா.அக.).

*[காட்டு + கிளிப்பிள்ளை.]*

**காட்டுக்குளஞ்சி** *kāṭṭu-k-kuḷañji,* பெ.(n.) **காட்டுக்குளாஞ்சி** பார்க்க; see *kāṭṭu-k-kuḷāñji* (சா.அக.).

*[காட்டு + குளாஞ்சி.]*

**காட்டுக்கொங்கை** *kāṭṭu-k-koṅgai,* பெ.(n.) ஒரு வகைக் கோங்கு; prussic acid tree - *Pygerum wightiana* (சா.அக.).

*[காட்டு + கொங்கை.]*

**காட்டுக்கொசு** *kāṭṭu-k-kośu,* பெ.(n.) காட்டில் உலாவும் கொசு; wild mosquitoes (சா.அக.).

*[காட்டு + கொசு.]*

**காட்டுக்கொட்டி** *kāṭṭu-k-koṭṭi,* பெ.(n.) கொட்டிக்கிழங்கு; a variety of Indian water-lily root (சா.அக.).

*[காட்டு + கொட்டி.]*

**காட்டுக்கொத்தமல்லி** *kāṭṭu-k-kottamalli,* பெ.(n.) காட்டில் விளையும் கொத்தமல்லி; wild coriander (சா.அக.).

*[காட்டு + கொத்தமல்லி.]*

**காட்டுகொழுமிச்சை** *kāṭṭu-k-koḻumiccai,* பெ.(n.) 1. கசப்பு எலுமிச்சை; bitter lime. 2. கசப்பு நாரத்தை; bitter orange (சா.அக.).

*[காட்டு + கொழுமிச்சை.]*

**காட்டுக்கொள்ளி** *kāṭṭu-k-koḷḷi,* பெ.(n.) தின்றிடந் தீய்ஞ்சான்; a plant c.f. மல்லைப்பூடு (சா.அக.).

*[காட்டு + கொள்ளி.]*

**காட்டுக்கொன்னை** *kāṭṭu-k-koṉṉai,* பெ.(n.) காட்டுக் கொன்றை; wild condray, wight's inga - *Mimosa bigemina.*

*[காட்டு + கொன்றை.]*

இதன் இலையை இட்டு காய்ச்சிய நீரினாற் குட்டம் போம், தலைமயிர் வளரும் (சா.அக.).

**காட்டுகஞ்சா** *kāṭṭu-kañjā,* பெ.(n.) இமயமலை, காசுமீரம் இக்காடுகளில் தானாகவே பயிராகும் மதமதக்கச் செடி; wild hemp found growing wild in western Himalayas and Kasmere - *Cannabis sativa* (சா.அக.).

*[காட்டு + கஞ்சா.]*

**காட்டுகை** *kāṭṭugai,* பெ.(n.) புகை காட்டுதல்; the act of applying smoke - *Fumigation* (சா.அக.).

**காட்டுச்சதுரகள்ளி** *kāṭṭu-c-cadura-kaḷḷi,* பெ.(n.) சதுரக் கள்ளி; square spurge - *Euphorbia antiquorum* (சா.அக.).

*[காட்டு + சதுரக்கள்ளி.]*

**காட்டுச்சம்பங்கி** *kāṭṭu-c-cambaṅgi,* பெ.(n.) 1. நீலகிரிச் சண்பகப் பூ; white-stalked tulip tree of Nilgiris; white champak - *Michelia nilgrica.* 2. உரோம வாசனி; forest champak - *Plumeria aculifolia* (சா.அக.).

*[காட்டு + சம்பங்கி.]*

**காட்டுச்சாதிபத்திரி** *kāṭṭu-c-cādi-pattiri,* பெ.(n.) 1. பொதுவாகக் காட்டில் விளையும் மரங்கள்; forest trees in general. 2. கான் (வன) சாதிப் பத்திரி; forest mace - *Myristica horsfieldii* (சா.அக.).

*[காட்டு + சாதிபத்திரி.]*

இதற்கு வாசனையிராது.

**காட்டுச்சார்வளை** *kāṭṭu-c-cārvaḷai,* பெ.(n.) மூக்கரணைச் சாரணை; white trianthema - *Trianthema decandra* (சா.அக.).

**காட்டுச்சிறுசாமை** *kāṭṭu-c-ciṟu-śāmai,* பெ.(n.) காட்டில் விளையும் சாமை; wild small millet - *Panicum antipodum* (சா.அக.).

*[காட்டு + சிறுசாமை.]*

**காட்டுச்சின்னி** *kāṭṭu-c-cinṉi,* பெ.(n.) கான் (வன)ச்சின்னி; a wild species of Indian shrubby copper leaf - *Acalypha fruticosa* (சா.அக.).

*[காட்டு + சின்னி.]*

**காட்டுச்சீயக்காய்** *kāṭṭu-c-cīyakkāy,* பெ.(n.) 1. காட்டுச்சிகை; sensitive tree - *Mimosarubicaulis.* 2. பேய்ச்சீயக்காய்; rusty mimosa; narrow-leaved soap pod - *Acaciapennata* (சா.அக.).

*[காட்டு + சீயக்காய்.]*

**காட்டுச்சுண்டெலி** *kāṭṭu-c-cuṇḍeli,* பெ.(n.) காட்டில் வாழும் சுண்டெலி; forest mouse - *Mus rodentia.*

*[காட்டு + சுண்டெலி.]*

இது உனாணி மருத்துவத்தில் மிகுதியாக மருந்திற்குப் பயன்படும் (சா.அக.).

**காட்டுச்சுரம்** *kāṭṭu-c-curam,* பெ.(n.) மலைச்சுரம்; malarial fever (சா.அக.).

*[காட்டு + சுரம்.]*

**காட்டுச்சேப்பன்** *kāṭṭu-c-cēppaṉ,* பெ.(n.) காட்டில் விளையும் சேப்பங் கிழங்கு; Egyptian yam - *Colocasia antiquorum* (சா.அக.).

*[காடு + சேப்பன். சேம்பு →சேப்பன்.]*

**காட்டுச்சேவல்** *kāṭṭu-c-cēval,* பெ.(n.) காட்டில் இருக்கும் சேவற் கோழி; wood-cock.

*[காட்டு + சேவல்.]*

இதன் இறைச்சி அதிக சூடு, தாது ஊட்டத்தைத் தரும். அழற்சியைப் போக்கும். வியர்வையை உண்டாக்கும்; மேலும் வலிமையைத் தரும் (சா.அக.).

**காட்டுச்சோதி** *kāṭṭu-c-cōdi,* பெ.(n.) சோதி மரம்; an unidentified tree supposed to be luminous in the dark (சா.அக.).

**காட்டுசாதிக்காய்** *kāṭṭu-šādi-k-kay,* பெ.(n.) 1. பொதுவாகக் காட்டில் விளையும் மரங்கள்; forest trees in general. 2. காட்டுச்சாதி பத்திரி; wild mae - *Myristica malabarica.* 3. பெரிய காட்டு சாதிக்காய்; malabar nutmeg - *Myristica malabarica.*

*[காட்டு + சாதிக்காய்.]*

இதன் உள்சதைப் பற்றை எடுத்து இடித்து கொதிக்க வைத்து மஞ்சள் நிறமான ஓர் எண்ணெய் எடுப்பார்கள். இது வலியில்லா புண்களுக்குப் பூசுவதற்கு உதவும். இதை நல்ல எண்ணெயோடு கலந்து காற்றுப் பிடிப்புக்குப் பூசலாம். எண்ணெய் விளக்கும் எரிக்கலாம் (சா.அக.).

**காட்டுசெட்டிப்பூ** *kāṭṭu-ceṭṭi-p-pū,* பெ.(n.) மாசி பத்திரி; Indian absinth - *Artimeslavulgaris* (சா.அக.).

**காட்டுண்ணி** *kāṭṭuṇṇi,* பெ.(n.) காட்டில் காணப்படும் ஒரு வகை நஞ்சுண்ணி; a poisonous, tick or blood sucker found in forests.

*[காட்டு + உண்ணி.]*

இது கடித்தால் வீக்கம், தடிப்பு இவைகள் காணும் (சா.அக.).

**காட்டுத்தர்ப்பை** *kāṭṭu-t-tarppai,* பெ.(n.) முழு முதல் (பிரம) தர்ப்பைப் புல்; cock's skin grass - *Panicum crusgalli* (சா.அக.).

*[காட்டு + தர்ப்பை.]*

**காட்டுத்தர்பார்** *kāṭṭu-t-tarbār,* பெ.(n.) வரைமுறை இல்லாமல் தன்னிச்சையாகச் செயல்படும் போக்கு (நிர்வாகம்); anarchy. (குற்றம் சுமத்தியவனையே தூக்கில் போடும் காட்டுத்தர்பார்!) (க்ரியா.).

*[காட்டு + தர்பார்.]*

**காட்டுத்திப்பிலிக்கொடி** *kāṭṭu-t-tippili-k-koḍi,* பெ.(n.) சிறு மூலம்; long pepper - *Piper longum* (சா.அக.).

*[காட்டு + திப்பிலி + கொடி.]*

**காட்டுத்துருக்கம்** *kāṭṭu-t-turukkam,* பெ.(n.) காட்டுக் குந்துருக்கம்; forest dammer (சா.அக.).

*[காட்டு + துருக்கம்.]*

**காட்டுத்துழாய்** *kāṭṭu-t-tuḷāy,* பெ.(n.) 1. இலட்சுமித் துளசி; wild basil or black basil - *Ocimum adscendens.* 2. கருந் துளசி; a black variety of holy basil found in forests. 3. நாய்த் துளசி; white basil or dog basil - *Ocimum canum* (சா.அக.).

*[காட்டு + துழாய்.]*

**காட்டுத்தொனி** *kāṭṭu-t-toṉi,* பெ.(n.) 1. பிண்டி; *ašōkā* tree - *Saraca indica.* 2. நெட்டிலிங்கம்; Indian mast-tree (சா.அக.).

*[காட்டு + தொனி.]*

**காட்டுநாடு** *kāṭṭu-nāḍu,* பெ.(n.) களவேள்வி நாடு; the *kaḷavēḷvi* city (அபி.சிந்.).

*[காட்டு + நாடு.]*

**காட்டுநாயகம்** *kāṭṭu-nāyagam,* பெ.(n.) கிரந்தி நாயகம்; a lant supposed to cure syphitic sores, and glandular swellings. it is so called from its great usefulness in medicine as a forest plant (சா.அக.).

*[காட்டு + நாயகம்.]*

**காட்டுநீரடிமுத்து** *kāṭṭu-nīraḍi-muttu,* பெ.(n.) காட்டு நீர் வெட்டி; forest tamana oil tree - *Hydnocarpus venenata* (சா.அக.).

*[காட்டு + நீரடி + முத்து.]*

**காட்டுப்பலிதம்** *kāṭṭu-p-palidam,* பெ.(n.) கருவாப் பட்டை; bark of small cinnamon

- *Cinnamomum verum* (சா.அக.).

*[காட்டு + பலிதம்.]*

**காட்டுப்பழுபாகல்** *kāṭṭu-p-paḻubāgal,* பெ.(n.) பழுபாகல்; buffalo carolah; prickly carolah - *Momordica hispida* (சா.அக.).

*[காட்டு + பழுபாகல்.]*

**காட்டுப்பனச்சி** *kāṭṭu-p-paṉacci,* பெ.(n.) **காட்டுக்கறிவேப்பிலை** பார்க்க; see *kāṭṭu--k-kaṟi-vēppilai* (சா.அக.).

**காட்டுப்பாகிகம்** *kāṭṭu-p-pāgigam,* பெ.(n.) குறண்டி; corandy - *Lepidagathis scariosa* (சா.அக.).

**காட்டுப்பால்வள்ளி** *kāṭṭu-p-pāl-vaḷḷi,* பெ.(n.) ஒரு காட்டு மூலி; a forest milk creeper - *Cryptolepis bucbanania* (சா.அக.).

*[காட்டு + பால்வள்ளி.]*

**காட்டுப்பிரசினம்** *kāṭṭu-p-pirašiṉam,* பெ.(n.) பிணங்களை எரித்தற்குரிய (அபரக்கிரியைக்குரிய) மந்திரமடங்கிய மறைப்பகுதி (வேதப்பகுதி); section of the vēdaconsisting mostly of mantras used in funeral rites (செ.அக.).

*[காட்டு + Skt. பிரசினம்.]*

**காட்டுப்பிரா** *kāṭṭu-p-pirā,* பெ.(n.) **காட்டுப்பிராய்** பார்க்க; see *kāṭṭu-p-pirāy* (சா.அக.).

**காட்டுப்பிராயம்** *kāṭṭu-p-pirāyam,* பெ.(n.) காட்டில் வளரும் பிராய் மரம்; cododepas calycinum (சா.அக.).

**காட்டுப்பலா** *kāṭṭu-p-palā,* பெ.(n.) 1. பலா; jungle jack tree - *Artocarpus hirsuta.* 2. மலைப்பலா; mountain jack - *Nauclea purpures* (சா.அக.).

*[காட்டு + பலா.]*

**காட்டுப்பின்னை** *kāṭṭu-p-piṉṉai,* பெ.(n.) 1. கேரள (மலையாள)த்தில் வளரும் புன்னை மரம்; Malabar poon - *Calophyllum tomentosum.* 2. காட்டுப் புன்னை மரம்; forest poon tree - *Rhizophora mucronata* (சா.அக.).

*[காட்டு + பின்னை.]*

**காட்டுப்புங்கிகம்** *kāṭṭu-p-puṅgigam,* பெ.(n.) திரளங் கொடி; an unidentified creeper (சா.அக.).

*[காட்டு + புங்கிகம்.]*

**காட்டுப்புளிச்சைமரம்** *kāṭṭu-p-puḷiccai-maram,* பெ.(n.) ஒரு வகைப் புளிச்சை மரம்; a tree - *Aatidesma acida* (சா.அக.).

*[காட்டு + புளிச்சை + மரம்.]*

**காட்டுப்பூவன்** *kāṭṭu-p-pūvaṉ,* பெ.(n.) பூவம்; eye-ball tree - *Nephelium longasa* (சா.அக.).

*[காட்டு + பூவன்.]*

**காட்டுமசகம்** *kāṭṭu-mašagam,* பெ.(n.) காட்டுக்கொசு; a species of mosquito. *இது கடித்த இடத்தில் நமைச்சலும், வீக்கமும், எரிச்சலும் உண்டாகும்* (சா.அக.).

*[காட்டு + மசகம்.]*

**காட்டுமயிலை** *kāṭṭu-mayilai,* பெ.(n.) 1. நொச்சி மரவகை; tall chaste tree - *Vitex altissima.* 2. மரவகை; water peacock's foot tree - *Vitex leucoxylon* (செ.அக.).

*[காட்டு + மயிலை.]*

**காட்டுமராட்டி** *kāṭṭu-marāṭṭi,* பெ.(n.) குருவிக்காரன்; kuravan.

**காட்டுமருது** *kāṭṭu-marudu,* பெ.(n.) 1. கருப்பு மருத மரம்; black marutham or negroe's olive - *Terminalia tomentosa.* 2. இரும்பிலி; black satinwood - *Maba buxifolia* (சா.அக.).

*[காட்டு + மருது.]*

**காட்டுமனிதன்** *kāṭṭu-maṉidaṉ*, பெ.(n.) 1. நாகரிகமற்றவன்; wild, uncivilized man. 2. வாலில்லாக் குரங்கு; man of the woods, chimpanzee, orangoutang (செ.அக.).

*[காட்டு + மனிதன். மனுஷன் → மனுடன் → மனிடன் → மனிதன்.]*

**காட்டுமனோரஞ்சிதம்** *kāṭṭu-maṉō rañjidam*, பெ.(n.) மர மனோரஞ்சிதம்; forest cananga tree - *Cycas circinalis* (சா.அக.).

*[காட்டு + மனோரஞ்சிதம்.]*

**காட்டுமாங்காய்** *kāṭṭu-māṅgāy*, பெ.(n.) 1. காட்டில் காணப்படும் மாமரம்; jungle mango tree - *Mangifera indica.* 2. புளி மாங்காய்; sour mango; buchananis mango - *Buchanania angustifolia* (சா.அக.).

*[காட்டு + மாங்காய்.]*

**காட்டுமாம்பழம்** *kāṭṭu-māmbaḻam*, பெ.(n.) 1. காட்டு மா மரம்; jungle mango-*Spondias mangifera.* 2. ஊதளை; odallum called also jungle mango from the resemblance of the fruit - *Cerbera odallum alias Cerbera manghus.* 3. காட்டு மாமரம்; jungle mango or Cuddappa almond - *Buchanania latifolia alias Spondias mangifera* (சா.அக.).

*[காட்டு + மாம்பழம்.]*

**காட்டுமாவிதை** *kāṭṭu-mā-vidai*, பெ.(n.) சாரப் பருப்பு; the seed of jungle mango or cuddappa almond seed (சா.அக.).

**காட்டுமிருகாண்டி** *kāṭṭu-mirugāṇḍi*, பெ.(n.) காட்டுமிறாண்டி (யாழ்.அக.); rude fellow, savage (செ.அக.).

*[காட்டு + மிருகம் + ஆண்டி. **Skt.** Mrga > த. மிருகம்.]*

**காட்டுமிறாண்டி** *kāṭṭu-miṟāṇḍi*, பெ.(n.) நாகரிகமில்லா மாந்தன்; rustic, rude, ill-bred-person, savage (சா.அக.).

**மறுவ. விலங்காண்டி**

*[காட்டு + மிருகம் + அண்டி. **Skt.** Mrga > **த.** மிருகம்.]*

**காட்டுமுட்டை** *kāṭṭu-muṭṭai*, பெ.(n.) 1. காட்டு எருமுட்டை; dung of cattle naturally found dried in forests. 2. ஆவின் உலர்ந்த சாணம் (காட்டு விரட்டி); dried cow dung; dried dung of cattle in general (சா.அக.).

*[காட்டு + முட்டை.]*

**காட்டுமுட்டைநெருப்பு** *kāṭṭu-muṭṭai-neruppu*, பெ.(n.) காட்டு முட்டையை எரித்த நெருப்பு; fire obtained from *kāṭṭu-muṭṭai* (சா.அக.).

*[காட்டு + முட்டை + நெருப்பு.]*

**காட்டுமுந்திரிகை** *kāṭṭu-mundirigai*, பெ.(n.) 1. காட்டுக் கொடி முந்திரிகை; jungle grape vine - *Vitis latifolia.* 2. காட்டுக் கொட்டை முந்திரிச் செடி; wild cashew nut - *Anacardium occidentale* (சா.அக.).

*[காட்டு + முந்திரிகை.]*

**காட்டுலவங்கம்** *kāṭṭu-lavaṅgam*, பெ.(n.) காட்டு இலவங்கப் பட்டை; wild cinnamon tree or country cinnamon,*Cinnamomum iners alias c.eucalyptoidus.*

*[காட்டு + இலவங்கம். இலவங்கம் = கருவாப் பட்டை (இணைப்பு).]*

இது ஒரு சிறிய மரம். இதன் இலையைக் கசக்க மணமாயிருக்கும்; உள் பட்டையைச் சாதாரணமாகக் கருவாப்பட்டைக்குப் பதிலாய் விற்று ஏமாற்றுவார்கள். இது மிக்க பருமையாகவும், பெரிதாயும் இருக்கும்; வளைவாயிருக்குமே அல்லது மற்றொன்றைப் போல் சுருட்டையாய் இராது;

மணமும், சுவையும் வேறுபட்டு இருக்கும். இதன் காய்ந்த மொக்கு கருவாப் பட்டையைப் போல் காற்றைப் போக்கிப் பசியை உண்டாக்கும் தன்மை கொண்டது. இதன் விதைகளை இடித்துத் தேன் அல்லது சர்க்கரையில் கலந்து சீதபேதி, இருமல் இவைகளுக்குக் கொடுக்கலாம்; மற்ற கடைச் சரக்குகளோடு சேர்த்து காய்ச்சலுக்குப் பயன்படுத்தலாம். இதன் பட்டை கறிக்கூட்டா (மசாலா)கவும் வழங்கலாம் (சா.அக.).

**காட்டுவா** *kāṭṭuvā*, பெ.(n.) 1. பேயத்தி; devil fig - *Diospyros embryopteris*. 2. காட்டில் விளையும் அத்தி; wild fig - *Ficus hispida* (சா.அக.).

**காட்டுவாழ்புங்கம்** *kāṭṭuvāḻ-puṅgam*, பெ.(n.) செந்நாய்; a red variety of ferocious dog; hound (சா.அக.).

*[காட்டு + வாழ் + புங்கம்.]*

**காட்டுவாளவரை** *kāṭṭu-vāḷavarai*, பெ.(n.) காட்டில் வளரும் வாள் போன்ற அமைப்புடைய அவரை; wild aword bean, *Canavalia ensiformis* (சா.அக.).

*[காட்டு + வாள் + அவரை.]*

**காட்டுவிரட்டி** *kāṭṭu-viraṭṭi*, பெ.(n.) **காட்டு முட்டை** பார்க்க; see *kāṭṭu-muṭṭai இது புடத்திற்குச் சிறந்தது* (சா.அக.).

*[காட்டு + விரட்டி.]*

**காட்டைவிடம்** *kāṭṭu-viḍam*, பெ.(n.) காட்டில் உள்ள நஞ்சுப் பூடு; deadly poison plant - *Haemodictyon suberectum* (சா.அக.).

*[காட்டு + விடம்.]*

**காட்டுவெண்சாமை** *kāṭṭu-veṇšāmai*, பெ.(n.) **காட்டுவெள்ளைச்சாமை** பார்க்க; see *kāṭṭu-veḷḷai-c-cāmai* (சா.அக.).

*[காட்டு + வெண்சாமை.]*

**காட்டுவெள்ளைச்சாமை** *kāṭṭu-veḷḷai-c-cāmai*, பெ.(n.) காட்டில் விளையும் சாமை; wild white millet, Panicum prostatum (சா.அக.).

*[காட்டு + வெள்ளை + சாமை.]*

**காட்டுள்ளிக்கிழங்கு** *kāṭṭuḷḷi-k-kiḻaṅgu*, பெ.(n.) காட்டில் விளையும் வெங்காயக் கிழங்கு; the bulbous root of the jungle onions (சா.அக.).

*[காட்டு + உள்ளி + கிழங்கு.]*

**காட்டுளுந்து** *kāṭṭuḷundu*, பெ.(n.) காட்டில் விளையும் உளுந்து; forest black gram (சா.அக.).

*[காட்டு + உளுந்து.]*

**காட்டூர்கிழார்மகனார்கண்ணனார்** *kāṭṭūr-kiḻār-maganār-kaṇṇaṉār*, பெ.(n.) கடைச்சங்கம் மருவிய புலவர்; the poet who belonged to the last ancient Šaṅgam (அபி.சிந்.).

**காட்டெரி** *kāṭṭeri*, பெ.(n.) 1. ஒருவகை மணமுள்ள மரம்; eagle wood - *Aquilaria agallocha*. 2. கள்ளி; spurge (சா.அக.).

**காட்டெருமுட்டை** *kāṭṭeru-muṭṭai*, பெ.(n.) 1. **காட்டுமுட்டை** பார்க்க; see *kāṭṭu-muṭṭai*. 2. வயலில் இருந்து எடுத்த ஆவினது சாணம் (வயலெரு முட்டை); cow dung of cattle dung found dry on pasture lands (சா.அக.).

**காட்டெருமைவிருட்சம்** *kāṭṭerumai-viruṭcam*, பெ.(n.) எருமை மரம்; unknowned tree (சா.அக.).

*[காட்டு + எருமை + விருட்சம்.]*

இது தில்லை மரத்தைப் போல் பாலுள்ள மரம். இது உடல் இளமைக்குப் பயன்படும். இது வேப்பந்தூருள்ள இடங்களில் முளைக்கும்.

இதனருகில் போய் எருமைக் கன்றைப் போல் கனைனக்க ஒரிலை உதிரும். ஆகவே இதற்கு

இப்பெயர் வந்தது. அடிமரத்தைக் கொத்தினால் பால் வழியும். அது மிகவும் காரமானது. தில்லைப் பாலைக் காட்டிலும் கொடியது. பட்டவிடமெல்லாம் வெந்து புண்ணாகும். இதனால் 64 வித நஞ்சும் சுத்தியாகும். அதைக் கொண்டு மெழுகு, நீற்றினம் முதலியவைகள் செய்யலாம் (சா.அக.).

**காட்டெலுமிச்சந்துளசி** *kāṭṭelumicca-n-tuḷaši,* பெ.(n.) காட்டில் விளையும் எலுமிச்சந் துளசி; a forest variety of *elumicca-n-tuḷaši* (சா.அக.).

*[காட்டு + எலுமிச்சை + துளசி.]*

**காடெழுகரம்பு** *kāteḻu-karambu,* பெ.(n.) செடிகொடிகள் மண்டிக்காடாக எழுந்து நிற்கும் சமனில்லாத நிலப்பரப்பு; place tract of land. *"ஏரிக்கு மேற்கு காடெழு கரம்பு" (தெ.கல்.தொ.17, கல்.304). (கல்.அக.).*

*[காடு +எழுகரம்பு.]*

**காட்டேணி** *kāṭṭēṇi,* பெ.(n.) காட்டுமாடு அதாவது காட்டு ஆ அல்லது காட்டெருது; wild cow or wild ox, bison - *Gaveous ganrus* (சா.அக.).

*[காடு + ஏணி.]*

**காட்டேரிமூலி** *kāṭṭēri-mūli,* பெ.(n.) கருமத்தை; black dhatura or stramonium (சா.அக.).

*[காட்டேறி →காட்டேரி + மூலி.]*

**காட்டைப்புடம்** *kāṭṭai-p-puḍam,* பெ.(n.) 1. காடை உயரமளவு அதாவது மூன்று எருவில் போடும் புடம்; a small fire with three cow dung cackes used for calcining oxidising metals and metallic compounds. 2. ஒரெருப் புடம்; calcination with a single dried cow-dung cake (சா.அக.).

*[காடை + புடம்.]*

**காட்டோங்கம்** *kāṭṭōṅgam,* பெ.(n.) 1. காட்டில் வாழும் எருமை; wild buffalo - *Bubulusanni.* 2. கடகை நீறு; a farinaceous substance procured from the Indian arrow root - *Curcuma angustifolia.* 3. சதுரக்கள்ளி; square spurge - *Euphorbia antiquorum.* 4. எருக்கு; madar plant - *Caltropis gigantea.* 5. காட்டு வெள்ளை வெங்காயம்; gungle white onion - *Urginia indica.* 6. கள்ளிப் பொது; milk spurge-*Euphorbia genus.* 7. திருகு கள்ளி; twist-spurge - *Euphorbia tirucalli* (சா.அக.).

*[காடு + ஓங்கு > ஓங்கம்]*

**காட்டோமவல்லி** *kāṭṭōma-valli,* பெ.(n.) 1. ஒரு வகை மருந்துச் செடி; thick-leaved lavender - *Anisochilus carnosum.* 2. ஒரு வகை நறுமணச் செடி; country borage - *Coleus aromaticus* (சா.அக.).

*[காட்டு + ஓமவல்லி.]*

**காடச்சரம்** *kāḍa-c-caram,* பெ.(n.) ஒரு நீர் நோய்; a urinary disease (சா.அக.).

*[காடம் + சரம்.]*

**காடம்பூ** *kāḍambū,* பெ.(n.) மஞ்சள் பூ பூக்கும் ஒரு செடி; hairy yello-flowered laurustinus - *Viburnum hebanthum* (சா.அக.).

*[காடம் + பூ.]*

**காடவர்கோன்** *kāḍavar-kōṉ,* பெ.(n.) காஞ்சியை ஆண்ட அரச மரபைச் சார்ந்தவர்; a king who ruled *kāñji.*

*[காடவர் + கோன்.]*

இவர் காஞ்சியில் சிவாலயம் கட்டி அதற்கு குடமுழுக்கு செய்ய நாள் குறித்தார். சிவன் இவருக்குக் காட்சியளித்து, பூசலார் நாயனார் செய்யும் குடமுழுக்கிற்குப் போவதால் நாள் மாற்றி வைக்குமாறு வேண்டினார். இவர் நாளை மாற்றி வைத்து, பூசலாரைத் தேடிக்கண்டு களித்து இன்பமடைந்தார் (அபி.சிந்.).

**காடாற்றுமுன்னெலும்பு** *kāḍāṟṟu-muṉṉ elumbu,* பெ.(n.) சுடுகாட்டில் பிணம் சுட்ட எலும்பு; unburnt bones left after the cremation of a dead body (சா.அக.).

*[காடு + ஆற்று + முன் + எலும்பு.]*

**காடிக்காரத்தழும்பு** *kāḍi-k-kāra-t-taḻumbu,* பெ. (n.) காடிக்காரத்தை அடிக்கடி பயன் படுத்துவதனால் சதை கறுத்து ஏற்படும் தழும்பு; discoloration of the skin caused by prolonged or frequent application of nitrate of silver - *Argyria* (சா.அக.).

*[காடி + காரம் + தழும்பு.]*

**காடிகட்டுண்டழுவாள்** *kāḍi-kaṭṭuṇḍaḻuvāḷ,* பெ.(n.) மாவிலங்கம்; garlic near - *Crataeva religiosa* (சா.அக.).

*[காடி + கட்டுண்டு + அழுவான்]*

**காடிகானா** *kāḍi-kāṉā,* பெ.(n.) வண்டியை நிறுத்தப் பயன்படும் கட்டடம்; cart-stand, carriage-house, shed for keeping carts (செ.அக.).

*[U.gādi-khāva > த. காடிகானா.]*

**காடிச்செயநீர்** *kāḍi-c-ceya-nīr,* பெ.(n.) இளநீரையும், இள வழுக்கையையும் சேர்த்துக் கரைத்துத் தெளிவித்து, அத்துடன் சுண்ணாம்பு நீர் விட்டுக் கலக்கி, சூரிய ஒளியில் வைத்துப் பிறகு தெளிவிறுத்து வடித்த காடி. இது சிந்தூரம் செய்ய உதவும்; a strong pungent fermented liquid filtered after exposing to the sun's rays a solution of lime water and the cocoanut extract obtained from a mixture of tender cocoanut and its water. This is used for preparing red oxides (சா.அக.).

*[காடி + செயநீர்]*

**காடிலை** *kāḍilai,* பெ.(n.) கல்லுமா; kidney plum - *Pygeum gardneri* (சா.அக.).

*[காடு + இலை.]*

**காடிவகை** *kāḍi-vagai,* பெ.(n.) பல வகைக்காடி; the different varieties of vinegar - *Aceta* (சா.அக.).

*[காடி + வகை.]*

**காடிவைப்பு** *kāḍi-vaippu,* பெ.(n.) காடி செய்யும் முறை; the process in the manufacture or preparation of vinegar (சா.அக.).

*[காடி + வைப்பு.]*

**காடினம்** *kāḍiṉam,* பெ.(n.) மூளையின் முன்பக்கத்து கூரிய முனை (கூச்சு) என்னும் உருண்டை வடிவம்; oval prominences at the sides of the anterior pyramids of the oblongata - *Olivery body* (சா.அக.).

*[காடு + இனம்.]*

**காடுபடுவளன்** *kāḍupaḍu-vaḷaṉ,* பெ.(n.) அரக்கு, தினை, தேன், கருந்தினை, நாவி, மயிற்பீலி முதலியன; forest products.

*[காடு + படு + வளம்.]*

**காடுவசாதி** *kāḍuva-šādi,* பெ. (n.) காடுகளில் வாழக்கூடிய ஒருவகைக் குலம்; one of the caste who living in forest (செ.அக.).

*[காடு + வாழ் + சாதி.]*

**காடுவெட்டியசோழன்** *kāḍu-veṭṭiya-cōḻaṉ,* பெ.(n.) காஞ்சி நாடாண்ட சோழர்களில் ஒருவன்; a king who ruled *kāñji.*

*[காடு + வெட்டிய + சோழன்.]*

குலபூடணபாண்டியன் மதுரையை ஆண்ட காலத்தில் இவன் மதுரைக்கு வந்து வணங்க எண்ணினான். பாண்டியனுக்கு அஞ்சி வராமல் இருந்த சோழனை, சிவன் சித்தர் உரு கொண்டு வழித்துணையாய் வந்து மதுரையை வணங்க உதவினார். கோவிலில் இருந்த மீன் முத்திரையை, புலி முத்திரையாக சிவன் மாற்றினார். இதனைப்

பாண்டியனுக்கு உணர்த்தி, சோழனுடன் நட்பு கொள்ளச் செய்தார் (அபி.சிந்.).

**காடைச்சாறு** *kāḍai-c-cāṟu,* பெ.(n.) காடை இறைச்சியினின்று இறங்கிய சாறு; essence of the flesh of quail boiled with various other ingredients.

*[காடை + சாறு.]*

இதனால் இளைத்த உடல் பருக்கும். படுக்கையாய்க் கிடப்பவர்கள் தேறுவர் (சா.அக.).

**காடைத்தனம்** *kāḍai-t-taṉam,* பெ.(n.) முரட்டுத்தனம் (ரௌடித்தனம்) (இலங்.); rowdyism. *அவர்களின் காடைத்தனத்தால் பல உயிர்கள் இரை(பலி)யாயின (க்ரியா.).*

*[காடு – காடை + தனம்.]*

**காண்டம்** *kāṇḍam,* பெ.(n.) 1. மலைவேம்பு; hill margosa - *Melia azadirach alias M.Composita.* 2. கானற்பலா; jungle jack - *Artocarpus hirsuta* (சா.அக.).

*[கா + அண்டம்.]*

**காண்டம்பனை** *kāṇḍam-paṉai,* பெ.(n.) மலைக்கமுகு; hill areca-nut palm of Travancore - *Bentinckis Coddapana* (சா.அக.).

*[கா – அண்டம் + பனை.]*

**காண்டரிக்கன்** *kāṇḍarikkaṉ,* பெ.(n.) **காண்டரிசாரணை** பார்க்க; see *kāṇḍari-šāraṇai* (சா.அக.).

**காண்டரிசாரணை** *kāṇḍari-šāraṇai,* பெ.(n.) சத்தி சாரணை அல்லது மூக்கிரட்டை; spreading hogweed - *Boerhaavia repens* (சா.அக.).

**காண்டவசூரணம்** *kāṇḍava-šūraṇam,* பெ.(n.) 1. தாளிசபத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், இலவங்கப் பட்டை, ஏலம் முதலிய தணிகை மருந்துகளைச் சேர்த்து இடித்து ஈளை நோய்க்குக் கொடுக்கும் ஒரு பொடி மருந்து; a sedative medicine consisting of a mixture of several powdered drugs such as dried giner, pepper, long pepper, cumin seed; cardamom and other sedative agents. 2. காற்றை (வாயுவை)க் கண்டிக்கக் கொடுக்கும் மருந்து; a drug formerly used against flutulence - *zeodoti* (சா.அக.).

*[காண்டவம் + சூரணம்.]*

**காண்டாதிக்கிருதம்** *kāṇḍāti-k-kirudam,* பெ.(n.) நில வேம்புடன் வேறு கடைச் சரக்குகளைச் சேர்த்து நெய்யிலிட்டுக் காய்ச்சி வடித்த மருந்து நெய்; a medicinal ghee prepared with ground neem as a chief ingredient along with other bazaar drugs (சா.அக.).

*[காண்டம் + ஆதி + கிருதம்.]*

**காண்டிகையுரை** *kāṇḍigai-y-urai,* பெ.(n.) **காண்டிகை** பார்க்க; see *kāṇḍigai.*

**காண்டியயம்** *kāṇḍiyayam,* பெ.(n.) வெக்கை; intensity of heat (சா.அக.).

*[காண்டி + அயம்.]*

**காணரூட்டம்** *kāṇarūṭṭam,* பெ.(n.) இது ஒரு கடைச் சரக்கு; black hellebore - *Helleborumniger* (சா.அக.).

*[காணார் + ஊட்டம்.]*

**காணாக்கடிசொறி** *kāṇā-k-kaḍi-coṟi,* பெ.(n.) பூச்சிக் கடியினால் உண்டாகும் சொறி; itching due to poisonous bites (சா.அக.).

*[காணா + கடிசொறி.]*

**காணாக்கடிநஞ்சு** *kāṇā-k-kaḍi-nañju,* பெ.(n.) 1. சில் நஞ்சு; the poisonous effects of an unknown insect or creature. 2. சிறு பாம்பு நஞ்சு; small snake poison (சா.அக.).

*[காணா + கடி + நஞ்சு.]*

**காணாக்கிரந்தி** *kāṇā-k-kirandi,* பெ.(n.) 1. உடம்பில் உண்டாகும் கிரந்திப் புண்; internal ulcers or venereal sore. 2. ஆண் அல்லது பெண் குறியிற் காணும் கிரந்திப் புண்; a syphilitic sore forming on the genital of a male or female - *Chancre* (சா.அக.).

**காணாத்திருத்தி** *kāṇā-t-tirutti,* பெ.(n.) பிறர் பார்க்கக் கூடாத இடம் அதாவது ஆண், பெண் குறி; the genitals which are the private parts in a male or a female (சா.அக.).

**காணாதுகடல்புகு-தல்** *kāṇādu-kaḍal-pugu-,* செ.கு.வி.(v.i.) நோய் மீண்டும் வாராது இருத்தல்; total sappearance without relapse, said of disease (சா.அக.).

*[காணாது + கடல் + புகு.]*

**காணாப்பத்தியம்** *kāṇā-p-pattiyam,* பெ. (n.) அவ மருந்துணவு; deviation from the observance of the prescribed diet (சா.அக.).

*[காணா + பத்தியம்.]*

**காணாப்புள்தோடம்** *kāṇā-p-puḷ-tōšam,* பெ. (n.) குழந்தைகளுக்குக் காணும் பறவைக் குற்றம் (தோஷம்); a morbific diathesis in children said to be due to the evil influence reflected on them while birds are retiring to their nest.

இதனால் உச்சி, கண் முதலிய இடங்களில் குழி விழல், முலையுண்ணாமை, பச்சை நிறமாய்க் கழிதல், பறவையைப் போல் சீறி அழுதல் முதலிய குணங்கள் காணும் (சா.அக.).

**காணாம்படுவோம்** *kāṇam-paḍuvōm,* பெ. (n.) காணப்பொன் தண்டப்படுவோம் (காணாம் பொற்காசு); a kind of tax. *"நிலைப் பொலியூட்டாகத் திங்கடோறுமாக குடும்போமானோம் முட்டு வதாயிற் தர்மாஸதத்து நிசதி நாலேகால் காணம் படுவோமானோம்" (தெ.கல்.தொ.12, கல்.70).*

*[காணம் = பொற்காசு. காணம் + படுவோம்.]*

**காணாமேகம்** *kāṇā-mēgam,* பெ.(n.) ஆண் அல்லது பெண் குறிகளில் வரும் வெள்ளை (மேக)ப் புண்; a venereal sore found on the genitals - *Chancroid* (சா.அக.).

*[காணா + மேகம்.]*

**காணாவஞ்சனி** *kāṇā-vañjaṇi,* பெ.(n.) மறைப்பு மை, அதாவது சித்தர்கள் தங்களை மறைத்துக் கொள்வதற்காகப் பயன்படுத்தும் மை; a blackd paint prelpared by siddhars and used by them to become invisible to others (சா.அக.).

*[காணா + (அஞ்சனம்) அஞ்சனி.]*

**காணாவியாதி** *kāṇā-viyādi,* பெ.(n.) 1. கரணியம் இன்னதெனத் தெரியாத நோய்; a disease which could not be diagonised. 2. உள் நோய்; internal disease which could not be ascertained without operation. 3. பார்க்கக்கூடாத இடங்கள் அதாவது ஆண் அல்லது பெண் குறிகளில் காணும் நோய்; a disease of the genitals either in males or females. 4. உள்ளுறுப்புகளில் காணும் நோய்; disease of internal organs (சா.அக.).

**காணிகொண்டாரும்அடைகொண்டாரும்** *kāṇi-koṇḍārum-aḍai-koṇḍārum,* வி.அ.(adv.) நிலத்தைப் பரம்பரையாக உரிமையுடன் நுகரும் உரிமையாளரும், பயிரிடும் பகுதி உரிமை கொண்டாரும் (உரிமையாளர் – குத்தகையாளர் பகுதி உரிமை–உள்குத்தகை); contractor, lessee, to let out farm lease out as land. *"இக்கோயில் காணி கொண்டாரும் அடை கொண்டாரும் இக்கோயில் திறந்து முறை செய்தாரே இவ்விளக்கு எரிக்கக் கடவோ*

*மானோம்" (முதற் குலோத்துங்கன், கி.பி.1105, தெ.இ.கல்.தொ.5 கல்.1001). (கல்.அக.).*

*[காணிகொண்டாரும் + அடைகொண்டாரும்.]*

**காணிமாடு** *kāṇi-māḍu,* பெ.(n.) குத்தகை காணியைப் போன்று இடையர் உரிமையுடன் பெற்றுள்ள பயன்தரும் மாடு; to let out and lease out as a cow. *"மலையம் பாக்கத்து மன்றாடி பெருமாள் மகன் கேரக் கோனேன் இவ்வெருமை பத்தும் காணி மாடா கக்கைக் கொண்டு அருண்மொழி தேவன் உழக்கால்" (தெ.கல்.தொ.7, கல்.539). (கல்.அக.).*

*[காணி + மாடு.]*

தவச விளைவினால் பயன்தரும் நிலங்களைக் காணியாட்சியாகப் பெறுதலைப் போன்று, பால்வளம் தருதல் மாடெனும் செல்வத்தாலாதனான். மாடு காணி மாடென்று கருத்துடன் கூறப்பட்டுள்ளது. காணியாட்சி போன்ற உரிமையுடன் இடையர் பெறும் மாடு.

**காணிமாறினநிலம்** *kāṇi-māṟiṉa-nilam,* பெ. (n.) காணியாட்சி நிலத்திணை. அப்பணி செவ்வனே நிகழாத குற்றத்தால், காணியாட்சி உரிமையினை மாற்றி மற்றொரு பணியாளனுக்கு உரிமை செய்யும் நிலம்; to obtain a contract of lease. *"இந்நாட்டு குலோத்துங்க சோழன் கருப்பூரில் துரோகஞ் செய் நாரை காணி மாறின நிலமும்" (தெ.கல்.தொ.5, கல்.708). (கல்.அக.).*

*[காணி + மாறினநிலம்.]*

**காத்தவராயன்** *kāttava-rāyaṉ,* பெ. (n.) 1. வரலாற்றில் மறைவுண்ட மக்களைளத் துன்பத்தினின்று காப்பாற்றிய மறவனின் பெயர்; name of a hero who protected people from great danger or calamity. 2. மலைமகள் அமைத்த பூங்காவைக் (நந்தவனத்திற்குக்) காவல் செய்தவன்; a village deity.

*[காத்த + அரையன்.]*

இரண்டாம் பொருள் பின்வரும் தொன்மக் கதை தழுவியது. சிவன் உலக உயிர்கள் எல்லாவற்றையும் காப்பவர் என்னும் கருத்தில் மாறுபட்ட மலைமகள் ஒரு எறும்பைப் பிடித்துப் பரணியில் அடைத்து வைத்தார். மறுநாள் அதைத் திறந்து பார்க்க, அவ்வெறும்பின் வாயில் ஒரு சிறு அரிசி இருந்தது. தான் செய்த செயலைச் சிவனிடம் தெரிவித்தார். சிவன் மலைமகளை நோக்கி அந்த எறும்பைத் துன்பஞ் செய்ததற்கு நீ ஒரு பூங்காவை ஏற்படுத்தி அந்தக் கழுவாயை (பாவம்) போக்குக என்றார். மலைமகளும் அவ்வாறே பூங்காவை ஏற்படுத்தி அதன் காவலுக்குச் சிவனிடமே ஒருவனைப் பெற்று அவனுக்கு காத்தான் என்று பெயரிட்டார். அவனே காத்தவராயன் ஆவான். இவன் ஆரியமாலை முதலிய பல பெண்களை மணந்தவன் (அபி.சிந்.).

**காத்தாலை** *kāttālai,* பெ.(n.) விடியற்காலம்; early morning (செ.அக.). *காலங்காத்தாலை எழுந்து கழனி வேலைக்குப் போக வேண்டும் (வ.வரி.).*

*[காலை + அத்தில் காலத்தில் – காத்தாலை (கடுங்கொச்சை).]*

**காத்தேனி** *kāttēṉi,* பெ.(n.) மணித்தக்காளி; black-berried solanum - *Solanum nigrum* (சா.அக.).

**காதட்டி** *kādaṭṭi,* பெ.(n.) ஆதொண்டை; thorny caper - *Capparis horrida alias C.zeylanica* (சா.அக.).

*[கால் + (தொடு) தொட்டி.]*

**காதடி** *kādaḍi,* பெ.(n.) செவியடி; that portion behind the lobe of the ear (சா.அக.).

*[காது + அடி.]*

**காதவடி** *kādavaḍi,* பெ.(n.) **காதடி** பார்க்க; see *kādaḍi* (சா.அக.).

**காதழற்சி** *kādaḻaṟci,* பெ.(n.) மிகு வெப்பத்தினால் காதிற்குள் ஏற்படும் எரிச்சல்; inflammation of the ear-*Otitis* (சா.அக.).

*[காது + அழற்சி. அழற்சி = கொதிப்பு, எரிவு.]*

**காதழுக்கு** *kādaḻukku,* பெ.(n.) குறும்பீ; ear-wax - *Cerumen* (சா.அக.).

*[காது + அழுக்கு.]*

**காதார** *kādāra,* வி.எ.(adv.) 1. தன் காதுகளில் பட; with one's own ears. *அவள் சொன்ன சொல்லை என் காதாரக் கேட்டேன் (வட்.வழ.).* 2.நிரம்ப; to the full satisfaction of the ears (செ.அக.).

*[காது + ஆர.]*

**காதில்சீழ்வடி-தல்** *kādil-cīḻ-vaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) காதில் புண்கட்டி ஏற்பட்டு அதனால் சீழ் வெளிப்படுதல்; a purulent discharge from the ear - *Otorrhoea* (சா.அக.).

*[காதில்சீழ் + வடி-தல்.]*

**காதில்போட்டுக்கொள்(ளு)-தல்** *kādil-pōṭṭu-k-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) பிறர் சொல்வதைக் கேட்டு உரிய கவனம் செலுத்துதல்; pay head to; listen to. *நான் வீடு மாற்ற வேண்டும் என்று சொல்வதை நீங்கள் காதில் போட்டுக் கொள்வதே இல்லை. கைத்தறி நெசவாளர்களின் கோரிக்கைகளைக் காதில் போட்டுக் கொள்ளாமல் செயல்படுகிறார்கள்.*

*[காதில் + போட்டு + கொள்-தல்.]*

**காதில்போட்டுவை-த்தல்** *kādil-pōṭṭu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) கவனத்தில் கொள்ளும்படி ஒன்றைத் தெரிவித்தல்; put in a word; mention. *என் பையன் வேலை பற்றிய செய்தியை உங்கள் காதில் போட்டு வைக்கிறேன்.*

*[காதில் + போட்டு + வை-த்தல்.]*

**காதில்வாங்கு-தல்** *kādil-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஒருவர் சொல்வதைக் கவனமாகக் கேட்டல்; pay head to; lend one's ear. *அவர் கூறுவதைக் காதில் வாங்காமல் நீ பேசிக்கொண்டே போனால் என்ன அர்த்தம்?.* 2. **காதில்போட்டுக் கொள்-தல்** பார்க்க; see *kādil-pōṭṭu-k-koḷ-.*

*[காதில் + வாங்கு-தல்.]*

**காதின்பின்பொகுட்டு** *kādiṉ-piṉ-poguṭṭu,* பெ. (n.) காதிற்குப் பின் புறத்திலுள்ள முலைக்காம்பொத்த சிறிய பொகுட்டு; the tiny bony prominence of the skull just behind the ear - *Mastoid process* (சா.அக.).

*[காது + பின் + பொகுட்டு.]*

**காதின்புறம்** *kādiṉ-puṟam,* பெ.(n.) வெளிக்காது; the outer ear - *Concha* (சா.அக.).

*[காது + புறம் - காதுபுறம்→காதின்புறம்.]*

**காதினருகு** *kādiṉarugu,* பெ.(n.) 1. காதின் வெளிப்புறம்; the external portion of the ear, *Concha.* 2. காதின் இதழ்; lob of the ear. 3. காதின் முருந்து; gristle of the ear (சா.அக.).

*[காது + இன் + அருகு.]*

**காதுக்கருவி** *kādu-k-karuvi,* பெ.(n.) காது கேட்பதில் குறைபாடு உள்ளவர்களின் கேட்கும் திறனை மிகுதிப்படுத்த காதில் பொருத்திக் கொள்ளும் குறு மின் கருவி; hearing aid.

*[காது + கருவி.]*

**காதுக்குடைவான்** *kādu-k-kuḍaivāṉ,* பெ.(n.) காதைக் குடைந்து தூய்மை செய்ய பயன்படுத்தும் கருவி; an instrument for cleaning the ear - *Ear-pick* (சா.அக.).

*[காது + குடைவான்.]*

**காதுக்கொப்புளம்** *kādu-k-koppuḷam,* பெ. (n.) வெளிக் காதில் காணும் கொப்புளம்; boil in the external ear. *இது உடம்பின் வலிமை குறைவினாற் காணும். இதனால் குத்தல், வலி மிகுதியாகும் (சா.அக.).*

**காதுகுற்று-தல்** *kādu-kuṟṟu-,* செ.கு.வி. (v.i.) காதில் ஊசி அல்லது வேறு கருவியிட்டு துளையிடுதல்; boring a hole in the lobe of the ear with a needle or other sharp instrument; to bore or pierce the ear, as a ceremony (சா.அக.).

*[காது + குற்று.]*

**காதுகொடுத்துக்கேள்-தல்** *kādu-koḍuttu-k-kēḷ-,* 16 செ.கு.வி.(v.i.) உன்னிப்பாகக் கேட்டல்; give one's ear to; listen attentively. *அவன் சொல்வதைச் சிறிது நேரம் காது கொடுத்துக் கேள்.*

*[காது + கொடுத்து + கேள்.]*

**காதுடனெட்டி** *kāduḍaṉeṭṭi,* பெ.(n.) நெருஞ்சி; caltrops - *Tribulus terrestris* (சா.அக.).

*[கால் + தொடுவன் + எட்டி.]*

**காதுத்தண்டு** *kādu-t-taṇḍu,* பெ.(n.) 1. கீழ்க்காது சோணை; ear-flap. 2. காதினருகு; lobes of the ear (சா.அக.).

**காதுத்துவாரம்** *kādu-t-tuvāram,* பெ.(n.) காதின் வழி; ear-hole; external passage of the ear - *Aurium meatus* (சா.அக.).

**காதுநடு** *kādu-naḍu,* பெ.(n.) செவிப்பறை; middle ear or ear-drum-*Tympanum* (சா.அக.).

**காதுநோய்** *kādu-nōy,* பெ.(n.) 1. காதில் உண்டாகும் நோய்கள்; disease of the ear in general. 2. காதுவலி; ear-ache - *Otalgia* (சா.அக.).

*[காது + நோய்.]*

**காதுநோவு** *kādu-nōvu,* பெ.(n.) **காதுநோய்** பார்க்க; see *kādu-nōy* (சா.அக.).

**காதுப்பறை** *kādu-p-paṟai,* பெ.(n.) காதின் ஒலிச் சவ்வு; ear-drum (சா.அக.).

*[காது + பறை.]*

**காதுப்பிதுக்கம்** *kādu-p-pidukkam,* பெ.(n.) வெளிக்காது உள்ளடங்காமல் விரிவாய்க் காணல்; marked protrusion of the ears (சா.அக.).

*[காது + பிதுக்கம்.]*

**காதுப்புண்** *kādu-p-puṇ,* பெ.(n.) காதில் புண், புரை முதலியவற்றால் ஏற்படும் கட்டி; sores or ulcers from abscesses etc., ulceration of the ear (சா.அக.).

*[காது + புண்.]*

**காதுப்புழு** *kādu-p-puḻu,* பெ.(n.) காதில் ஈ புகுந்து முட்டை வைப்பதனாலும், அல்லது நோய் புண்கட்டி முதலிய கரணியங்களாலும் காதிற்குள் உண்டாகும் புழு அல்லது பூச்சிகள்; worms or germs formed in the ear due to a fly depositing its egg therein or through other causes such as diseases, wounds, injuries etc (சா.அக.).

*[காது + புழு.]*

**காதுப்புற்று** *kādu-p-puṟṟu,* பெ.(n.) காது நரம்புகளில் சளி நீர் நிறையப் பெற்று அதனால் கெடு சதை வளர்ந்து பருக்கும் ஒரு புண்; herpes zoster of the ear, due to herpetic inflammation of the facial nerve arising from accumulation of bad fluid - *Zoster oticus. இது அக்கியைப் போல் இருக்கும்* (சா.அக.).

*[காது + புற்று.]*

**காதுபட** *kādu-paḍa,* பெ.(n.) செய்தி கேட்கும் அளவுக்குத் தெரியும்படியாக; in one's hearing. *உன்னைப் பற்றி மோசமாக அவன் காதுபடப் பேசினாள்.*

*[காது + பட.]*

**காதுமத்திமம்** *kādu-mattimam,* பெ.(n.) குறைவான கேட்கும் திறன்; dullness of hearing - *Amblyacusia* (சா.அக.).

*[காது + மத்திமம்.]*

***மறுவ. காது மந்தம்***

**காதுமந்தன்** *kādu-mandaṉ,* பெ.(n.) காது கேளாதவன்; a deafman; one who is thick of hearing (சா.அக.).

*[காது + மந்தன்]*

**காதுமலம்** *kādu-malam,* பெ.(n.) காதுக் குறும்பி; ear-wax (சா.அக.).

*[காது + மலம்.]*

**காதுமூர்ச்சை** *kādu-mūrccai,* பெ.(n.) காது நோயினால் ஏற்படும் களைப்பு; a swoon or fainting observed in patients suffering from aural diseases - *Ear-faint* (சா.அக.).

*[காது + மூர்ச்சை.]*

**காதுமூளி** *kādu-mūḷi,* பெ. (n.) 1. அறுந்த காது; torn ear. 2. அந்தக் கேடா (அவலட்சணமா)ன காது; deformed ear (சா.அக.).

*[காது + மூளி.]*

**காதுவாதை** *kādu-vādai,* பெ. (n.) 1. உட்காதின் குத்தல் வலி; acute boring pain in the ear, *Otalgia.* 2. காதின் தொந்தரவு; trouble or sufferings from pain in the ear - *Otalgia* (சா.அக.).

*[காது + வாதை.]*

**காதுவிறைப்பு** *kādu-viṟaippu,* பெ.(n.) காதுமுறைப்பு; stiffness of the outer ear (சா.அக.).

*[காது + விறைப்பு.]*

**காதுவீக்கம்** *kādu-vīkkam,* பெ.(n.) காதிற்குள் ஏற்படும் நோய் அல்லது புண்ணினால் உண்டாகும் வீக்கம்; swelling of the ear through inflammatory diseases (சா.அக.).

*[காது + வீக்கம்.]*

**காதுவெளியா-தல்** *kādu-veḷiyā-,* பெ.(n.) 1. காதடைப்பு நீங்குதல்; to be free from dullness of hearing. 2. செவிடு குணப்படுதல்; the curing of deafness (சா.அக.).

**காதெலும்பு** *kādelumbu,* பெ.(n.) கன்னப்பொறி எலும்பு; temporal bone (சா.அக.).

*[காது + எலும்பு.]*

**காதைக்கடி-த்தல்** *kādai-k-kaḍi-,* செ.கு.வி. (v.i.) காதைக் கடிப்பது போல் நெருங்கி வந்து செய்தியை மெதுவாகச் சொல்லுதல்; கிசுகிசுத்தல்; whisper. *வெளிப்படையாகச் சொல் காதைக் கடிக்காதே.*

*[காதை + கடி-த்தல்.]*

**காதைப்பொத்து-தல்** *kādai-p-pottu-,* செ.கு.வி. (v.i.) ஓசை கேட்காதபடிக் காதை மூடுதல்; to shut the ears to prevent hearing (சா.அக.).

*[காதை + பொத்து.]*

**காதொட்டி** *kādoṭṭi,* பெ.(n.) 1. அறுந்து போன காதை ஒட்டச் செய்யும் மருந்து; a medicine or drug capable of re-uniting the two edges of a torn ear of a female. 2. சிற்றாமுட்டி; fragrant sticky mallow - *Pavonia odorata* (சா.அக.).

*[காது + ஒட்டி.]*

**காதொலி** *kādoli,* பெ.(n.) 1. காதின் ஒலி; sound of the ear. 2. உள்ளொடுக்க (யோகாப்பியாசத்)த்தில் காதில் கேட்கும் சிலம்பொலி, சங்கு ஒலி முதலியன; the different kinds of melodius sounds heard at a certain stage in yoga practice, such as, the creeking of anklet, the blowing of conch etc. (சா.அக.).

*[காது + ஒலி.]*

**காதொழுக்கு** *kādoḻukku,* பெ.(n.) காதில் சீழ் வடிகை; discharge of pus from the ear (சா.அக.).

**காதோடம்** *kādōḍam,* பெ.(n.) வெண்கடம்பு; white cadamba - *Anthocephalus cadumba* (சா.அக.).

**காதோடுகாதாக** *kādōḍu-kādāga,* வி.அ. (adv.) மிகவும் மெதுவான குரலில் கமுக்கமாக; in a hushed voice; in a whisper. *காதலர் இருவரும் கட்டிலில் அமர்ந்து காதோடு காதாகப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டேன்.*

*[காது + ஒடு + காது + ஆக]*

**காந்தஅயசு** *kānda-ayašu,* பெ.(n.) அயச்சிலை; iron ore (சா.அக.).

**காந்தக்கவர்ச்சி** *kānda-k-kavarcci,* பெ.(n.) காந்தத்திற்கு இயல்பிலேயே இரும்பு முதலியவைகளிடத்து உண்டான இழுக்குந் தன்மை; the influence of a magnet upon certain metallic substances cheifly iron - *Magnetic attraction* (சா.அக.).

*[காந்தம் + கவர்ச்சி.]*

**காந்தக்களிமண்** *kānda-k-kaḷimaṉ,* பெ. (n.) திருமண் அல்லது திருமால் அன்பர்கள் அணியக்கூடிய வெண்மை கலந்த மஞ்சள் நிறமுடைய திருமண் (கோபிச் சந்தனம்); common magnesian clay used by a class of the Hindus for putting on naman the sectarian mark on the forehead. 2. நாமவெள்ளை; white earth used by Vaishnavites for namam obtained from duwaraka. 3. மஞ்சள் திருச்சுண்ணம்; aluminous yellow earth obtained from the Ganges at Haridwar used by Madhwas (சா.அக.).

*[காந்தம் + களிமண்.]*

**காந்தக்கிண்ணம்** *kānda-k-kiṇṇam,* பெ.(n.) காந்தத்தினால் செய்த ஒரு வாயகன்ற ஏனம்; a baisn made out of magnetic mettalic compound.

*[காந்தம் + கிண்ணம்.]*

இதில் பாலை விட்டால் பொங்கினாலும் வழியாதென்றும், இச ாிய (பாதரச)த்தை விட்டால் இதளியங் கட்டி, வெள்ளியைப் போல் ஆகுமென்றும் கூறப்படுகிறது. இதைச் சித்தர்கள் உடல் நரை திரையின்றி வெகு நாள் இருக்க வேண்டி உண்பதற்கு முன் கற்பத்தை இதில் இட்டு காதுகாப்பார்கள். இக்கிண்ணம் செய்யும் முறை மிகவும் கமுக்க (இரகசிய)மானது (சா.அக.).

*[காந்தம் + கிண்ணம்.]*

**காந்தக்கிண்ணி** *kānda-k-kiṇṇi,* பெ.(n.) காந்த உண்கலம்; magnetic eating dish.

*[காந்தம் + கிண்ணி.]*

**இதைச் செய்யும் முறை** : காந்தத்தைக் கல்லுப்பு, மெழுகு இவைகளுடன் கலந்து உருக்கி விந்தினால் சுருக்குக் கொடுக்க கண் விட்டாடும். அப்போது வார்ப்பில் ஊற்றிக் கிண்ணியாக அடித்துக் கொள்வது (சா.அக.).

**காந்தச்சுண்ணம்** *kānda-c-cuṇṇam,* பெ. (n.) காந்தத்தைப் புடமிட்டு சுண்ணச் சத்தாக மாற்றிய மருந்து; an alkaline compound of magnet obtained by calcination.

*[காந்தம் + சுண்ணம்.]*

இதைப் பாலுடன் சேர்த்து நாற்பது நாட்கள் உண்ண உடம்பின் காந்தல், வெக்கை, வெதுப்பு, சூலை, பாண்டு, வயிற்றுப்போக்கு (கிராணி) முதலிய நோய்கள் போம் (சா.அக.).

**காந்தச்சத்தி** *kānda-c-catti,* பெ.(n.) காந்தத்திற்கு உள்ள இழுக்கும் ஆற்றல்; magnetic power (சா.அக.).

*[காந்தம் + சத்தி.]*

**காந்தச்சத்து** *kānda-c-cattu,* பெ.(n.) 1. காந்தத்தின் வலிமை; magnesium; essence of magnesia. 2. காந்த சாரம்; magnetism (சா.அக.).

*[காந்தம் + சத்து.]*

**காந்தச்சத்துக்கிண்ணி** *kānda-c-cattu-k-kiṇṇi,* பெ.(n.) **காந்தக்கிண்ணம்** பார்க்க; see *kānda-k-kiṇṇam* (சா.அக.).

**காந்தச்சத்துச்சுண்ணம்** *kānda-c-cattu-c-cunnam,* பெ.(n.) காந்தத்தில் இருந்து வலிமையை (சத்து) எடுத்து அதை மற்ற பொருள்களோடு சேர்த்து புடத்திலிட்டு எடுத்த சுண்ணம்; an alchemical compound obtained by the calcination of a mixture of several alkaline compounds in which the essence of magnet forms the cheif ingredient. *இது வாதத்திற்கு உதவும் (சா.அக.).*

*[காந்தம் + சத்து + சுண்ணம்.]*

**காந்தச்சத்துவம்** *kānda-c-cattuvam,* பெ.(n.) காந்தத்தின் இயல்பான வலிமை; natural magnetic power (சா.அக.).

*[காந்தம் + சத்துவம்.]*

**காந்தச்சாரம்** *kānda-c-cāram,* பெ.(n.) காந்தத்தின் வலிமை; a peculiar property or power possessed by bodies or animals whereby they naturally attract or repel one another, *Magnetism* (சா.அக.).

*[காந்தம் + சாரம்.]*

**காந்தச்சிகிச்சை** *kānda-c-cigiccai,* பெ.(n.) 1. காந்தம் கலந்த மருந்தைக் கொண்டு செய்யும் மருத்துவம்; a treatment effected through medicine prepared from magnet mixed with otheringredients - *Magneto-theraphy.* 2. மந்திர உச்சரிப்பினால் அல்லது மனோ சத்தியினால் நோய்களைக் குணப்படுத்துகை; magnetic treatment effected by chanting of mantrams or a cure effected through animal magnetism - *Hypnotic cure* (சா.அக.).

*[காந்தம் + சிகிச்சை.]*

**காந்தச்சிங்கி** *kānda-c-cingi,* பெ.(n.) காந்தம் சேர்ந்த ஒரு நஞ்சு மருந்து; a poisonous compound containing magnet as one of the ingredients (சா.அக.).

*[காந்தம் + சிங்கி.]*

**காந்தச்சூசி** *kānda-c-cūsi,* பெ.(n.) காந்த ஊசி; magnetic needle (சா.அக.).

**காந்தச்செந்தூரம்** *kānda-c-cendūram,* பெ.(n.) காந்தத்தைப் புடமிட்ட சிவப்புத் தூள்; a redoxide obtained by calcination of magnet - *Magnetic oxide of iron* (சா.அக.).

*[காந்தம் + செந்தூரம்.]*

**காந்தண்மலரான்** *kāndaṉ-malarāṉ,* பெ.(n.) சவர்க்காரம்; fuller's earth; bleaching powder (சா.அக.).

*[காந்தம் + மலரான்.]*

**காந்தத்துருவம்** *kānda-t-turuvam,* பெ.(n.) காந்தத்தின் வலிமுனை; magnetic pole (சா.அக.).

*[காந்தம் + துருவம்.]*

**காந்தப்பட்சி** *kānda-p-paṭci,* பெ.(n.) மயில்; pea-cock - *Pavo cristatus* (சா.அக.).

**காந்தப்பலம்** *kānda-p-palam,* பெ.(n.) காந்த ஆற்றல்; magnetic power (சா.அக.).

**காந்தப்பன்னிகம்** *kānda-p-paṉṉigam,* பெ.(n.) சன்னி நாயகம்; a plant prescribed as a specific for apoplexy or in cases of delirium (சா.அக.).

*[காந்தம் + பன்னிகம்.]*

**காந்தப்பாத்திரம்** *kānda-p-pattiram,* பெ.(n.) **காந்தக்கிண்ணம்** பார்க்க; see *kānda-k-kiṉṉam* (சா.அக.).

**காந்தப்பாடாணம்** *kānda-p-pāḍāṇam,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை; a mineral poison (செ.அக.).

*[காந்தம் + **Skt.** பாடாணம்.]*

**காந்தப்புடம்** *kānda-p-puḍam,* பெ.(n.) மந்தாரை; mountain ebony (சா.அக.).

**காந்தம்பிடித்தபொடி** *kāndam-piḍitta-poḍi,* பெ.(n.) காந்தத்தில் ஒட்டியுள்ள பொடி; a mass of soft iron at the extremity of a magnet - *Armature* (சா.அக.).

*[காந்தம் + பிடித்த + பொடி.]*

**காந்தமண்சத்து** *kānda-maṇ-šattu,* பெ.(n.) காந்த மண்ணைப் போதுமான அளவு எரித்து எடுக்கும் ஒரு வெண்ணிறமான ஊட்டம் (சத்து); magnesia or oxide of magnesia extracted from magnesium carbonate by application of heat (சா.அக.).

*[காந்தம் + மண் + சத்து.]*

**காந்தமண்பற்பம்** *kānda-maṇ-paṟpam,* பெ.(n.) காந்த மண்ணினின்று அணியம் (தயாரிக்கும்) செய்யும் பற்பம்; magnesium carbonate obtained from magnesite - *Magnisial carbonas.*

*[காந்தம் + மண் + பற்பம்.]*

இது காந்தமண் கலந்த சுண்ணாம்புக் கல்லுக்குள் இயற்கையாகவே இருக்கும். இது வெண்ணிறமான பொடி, மருந்திற்குப் பயன்படும் (சா.அக.).

**காந்தமதீர்த்தம்** *kāndama-tīrttam,* பெ.(n.) தென் கடற்கரையிலுள்ள நீர்நிலை; dool near southern seashore.

*[காந்தமன் + தீர்த்தம்.]*

**காந்தமயம்** *kānda-mayam,* பெ.(n.) 1. கவர்ச்சியான அல்லது மேன்மையான காந்த ஆற்றல்; influence or predominence of magnetic power.2. காந்தமும், இரும்பும் சேர்ந்தது an alloy of magnet and iron (சா.அக.).

*[காந்தம் + மயம்.]*

**காந்தமாட்டு-தல்** *kānda-māṭṭu,* செ.கு.வி. (v.i.) 1. காந்த மூட்டுதல்; to induce magnetic properties, that is to render a piece of iron magnetic. 2. காந்தத்தை அறைத்தல்; to grind loadstone into a powder (சா.அக.).

*[காந்தம் + ஆட்டுதல்.]*

**காந்தமின்சாரம்** *kānda-miṉšāram,* பெ.(n.) காந்தத்தைக் கொண்டு மூட்டும் மின்சாரம்; electricity induced by means of a magnet - *Magneto electricity* (சா.அக.).

*[காந்தம் + மின்சாரம்.]*

**காந்தமின்னிராயம்** *kānda-miṉṉirāyam,* பெ.(n.) காந்த மின்சார ஒட்டம்; magneto electric current (சா.அக.).

*[காந்தம் + மின் + இரையம்.]*

**காந்தமின்னுபகாரம்** *kānda-miṉṉubagāram,* பெ.(n.) காந்த மின்சாரக் கருவிகள்; magneto-electric current (சா.அக.).

**காந்தமூசை** *kānda-mūšai,* பெ.(n.) காந்தத்தினால் செய்த குகை; a crucible made of magnet (சா.அக.).

*[காந்தம் + மீசை.]*

**காந்தயச்சாரி** *kāndaya-c-cāri,* பெ.(n.) காய்ப் பூவரசு அல்லது காட்டுப் பூவரசு; false fern tree - *Fillicium decipiens* (சா.அக.).

*[காந்தம் + அயச்சாரி.]*

**காந்தரசவிருட்சம்** *kāndarasa-viruṭcam,* பெ. (n.) ஒளி மரம்; a tree luminous in the dark.

இதில் காந்தம், பாதரசம் இலைகளின் ஆற்றல் உள்ளதாகக் கருதி இப்பெயர் அமைந்தது போலும். இதன் வெளிச்சத்தினால் இரவு, பகல் தோன்றாது. இம்மரம் வாதத்திற்குப் பயன்படும் என்று கருதப்படும் (சா.அக.).

**காந்தலாய்ப்போ-தல்** *kāndalāy-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) தீய்ந்து போதல்; to become

scorched (சா.அக.).

*[காந்தல் + ஆய் + போ–தல்.]*

**காந்தலோகம்** *kānda-lōgam,* பெ.(n.) 1. காந்தம்; magnet. 2. வார்த்த இரும்பு; cast-iron. 3. காந்தமும் இரும்பும்; magnet and iron. 4. நில உலகம்; earth which in itself is a magnet (சா.அக.).

*[காந்தம் + உலோகம். கந்து → காந்து → காந்தம். கந்துதல் = பற்றுதல், கந்து = பற்றுக்கோடு.]*

**காந்தவயசு[1]** *kānda-vayašu,* பெ.(n.) அயமண்; iron ore.

*[காந்தம் + அயசு.]*

**காந்தவயசு[2]** *kānda-vayašu,* பெ.(n.) காந்த மருந்துகளைச் சாப்பிட்டு அதனால் அடைந்த அகவை முதிர்வு; life pralonged by the use of the calcined preparations of magnet (சா.அக.).

*[காந்தம் + **Skt.** வயசு.]*

**காந்தவலி** *kānda-vali,* பெ.(n.) காந்தத் திற்குள்ள இழுக்கும் ஆற்றல்; the attractive power of magnet (சா.அக.).

*[காந்தம் + வலி.]*

**காந்தவி** *kānda-vi,* பெ.(n.) சிறுவழுதலை; prickly night shade - *Solanum indicum* (சா.அக.).

*[காந்தம் – காந்தவி.]*

**காந்தவிருசு** *kānda-virušu,* பெ.(n.) காந்தத்தினால் செய்த அச்சு (இருசு); magnetic axis (சா.அக.).

*[காந்தம் + இருசு.]*

**காந்தாமற்கருகாமலெடு–த்தல்** *kāndāmar-karugāmaledu-,* செ.கு.வி. (v.i.) பக்குவ நிலையழியாத படியும், தீயாமலும் பொங்கி எடுக்கும் நிலை; a stage at which boiled substances are taken out without being over-boiled or scorched (சா.அக.).

*[காந்தாமல் + கருகாமல் + எடு.]*

**காந்தாயசம்** *kāndāyašam,* பெ.(n.) அயக்காந்தம்; iron mixed with magnet or the containing magnetic power (சா.அக.).

*[காந்தம் + ஆயசம்.]*

**காந்தாரகம்** *kāndāragam,* பெ.(n.) ஒரு வகைக் கரும்பு; a kind of sugarcane (சா.அக.).

*[காந்தம் + ராகம்.]*

**காந்தாளி** *kāndāḷi,* பெ.(n.) சின்னி மரம்; birch-leaved acalypha - *Acalypha fruiticosa* (சா.அக.).

*[காந்து + ஆளி.]*

**காந்திகம்** *kāndigam,* பெ.(n.) காந்த ஆற்றல்; magnetism.

*[காந்து + இகம்.]*

இவ்வாற்றலினால் நோய்களைக் குணப் படுத்தலாம். இது ஆங்கிலேயருக்கும், செருமானி யருக்கும் தெரியும் முன்னமே வெகு காலமாய் நமது நாட்டில் பயன்படுத்தப்பட்டு வந்தது (சா.அக.).

**காந்திகாட்டு–தல்** *kāndi-kāṭṭu-,* பெ.(n.) வெப்பம் தாக்குகை; imparting heat (சா.அக.).

*[காந்தி + காட்டல்.]*

**காந்திதாயகம்** *kāndi-tāyagam,* பெ.(n.) ஒரு மரம்; an unknown tree (சா.அக.).

**காந்திமதி** *kāndi-madi,* பெ.(n.) ஒளி யுடையவள்; woman having bright features (செ.அக.).

*[காந்தி + மதி. **Skt.** மத் > த.மதி.]*

**காந்தமான்** *kāndi-māṉ,* பெ.(n.) ஒளி யுடையவன்; man having bright features (சா.அக.).

*மறுவ. காந்தமன்*

*[காந்தம் + மான் – காந்தமான்]*

இச்சொல் காந்தமன் எனும் விரிவு

**காந்தியானமருந்து** *kāndiyāna-marundu,* பெ. (n.) சூட்டை உண்டாக்கும் மருந்து; warmth producing medicine (சா.அக.).

**காந்தியதிகமேனி** *kāndiyadiga-mēni,* பெ. (n.) காவி நிறமுடைய கல்; reddle (செ.அக.).

*[காந்தி + அதிகமேனி.]*

**காந்தியிரு-த்தல்** *kāndiyiru-,* செ.கு.வி. (v.i.) அதிகச் சூட்டினால் கருத்தல்; blackened by being over-burnt or scorched (சா.அக.).

*[காந்தி + இரு.]*

**காந்தியுடமூலி** *kāndiyuḍa-mūli,* பெ.(n.) 1. ஒளி மரம்; a plant luminous in the dark. 2. நீல ஒளி; bright blue leaved plant (சா.அக.).

*[காந்தி + உடல் + மூலி.]*

**காந்தோரகம்** *kāndōragam,* பெ.(n.) செங்கரும்பு; red-coloured sugarcane (சா.அக.).

**காப்பகம்** *kāppagam,* பெ. (n.) பொறுப்பேற்றுக் கவனிக்கும் இல்லம்; home for orphans, the aged, etc. *குழந்தைகள் காப்பகம், மனநலக் காப்பகம், முதியோர் காப்பகம் , ஊனமுற்றோர் காப்பகம்.*

*[காப்பு + அகம்.]*

**காப்பாளர்** *kāppāḷar,* பெ. (n.) 1. விடுதி போன்றவற்றில் தங்கியிருப்போரைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு ஏற்றவர்; warden. *விடுதிக் காப்பாளர், எதிலியர் இல்லக் காப்பாளர்.* 2. பாதுகாப்பாளர்; guardian.

*[காப்பு + ஆளர்.]*

**காப்பிடம்** *kāppiḍam,* பெ.(n.) ஒற்றிடம்; fomentation (சா.அக.).

*[கப்படம் – காப்படம் – காப்பிடம் (கொ.வ.)]*

**காப்பியக்குடி** *kāppiya-k-kuḍi,* பெ. (n.) ஒரு குடிப்பெயர்; a family name (அபி.சிந்.).

*[காப்பியன் (உழவன்) + குடி.]*

**காப்பியஞ்சேந்தனார்** *kāppiyañ-jēndaṉār,* பெ.(n.) பாலைத் திணையைச் சிறப்பித்து நற்றிணைப் பாடல் பாடிய கழகப் புலவர்; a *śaṅgam* poet.

*[காப்பியம் + சேந்தனார்.]*

சேந்தன் என்பது இவரின் இயற்பெயர். உழவன் என்னும் காப்பியக் குடியில் பிறந்ததால் பெற்ற பெயர்

**காப்பியாற்றுக்காப்பியனார்** *kāppi-y-āṟṟu-k-kāppiyaṉār,* பெ.(n.) களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைப் பாடிப் பரிசில் பெற்ற புலவர்; A poet who received award from *kalaṅkāy-k-kaṇṇi-nārmuḍi-cēral* (அபி.சிந்.).

*[காப்பி + ஆறு + காப்பியன் + ஆர்.]*

**காப்பிரிசல்லாத்து** *kāppiri-śallāttu,* பெ. (n.) சுருண்டு கிடக்கும் காட்டு சல்லாத்து; curled endive - *Chichorium endiva.*

*[காப்பிரி + சல்லாத்து.]*

இது சுருட்டையுள்ள சல்லாத்துக் கீரைச் செடி. இது உடம்பின் சூட்டை அறுத்துக் குளிர்ச்சியைத் தரும் (சா.அக.).

**காப்பிரியெலுமிச்சை** *kāppiri-y-elumiccai,* பெ.(n.) காட்டு எலுமிச்சை; Indian wild lime - *Atlantia monophylla* (சா.அக.).

*[காப்பிரி + எலுமிச்சை.]*

**காப்பில்** *kāppil,* பெ.(n.) 1. மீனவர்கள் மீன் பிடிக்க பயன்படுத்தக்கூடிய கூரிய ஈட்டி போன்ற கருவி; barbed fishing-spear. 2. கப்பலின் பாயை முன்பாகவோ, பின்பாகவோ நீட்டுவதற்கு உதவும் கழி போன்ற தோணியின் உறுப்பு; a spar used in ships to extend the heads of fore-and-aft sails (செ.அக.).

*[காப்பு + இல்.]*

*[E. gaff > த. காப்பில்.]*

**காப்புக்குரியகடவுள்** *kāppukkuriya-kaḍavuḷ,* பெ.(n.) காப்பாக நூன்முகத்து உரைக்கப்படும் தெய்வம்; a derty which protects.

*[காப்புக்கு + உரிய + கடவுள்.]*

**காப்புக்கட்டல்** *kāppu-k-kaṭṭal,* பெ.(n.) பேய், பூதம் அல்லது கெடுதல் செய்கை, சூழியம் (சூனியம்) வைத்தல் இவைகள் அணுகாதபடி பாதுகாப்புக்காகக் கடவுளை வேண்டி மாழை (உலோகம்)யால் ஆன தகடு அல்லது மஞ்சள் கயிற்றை நோயாளிகளின் கையில் கட்டுகை; tying an amulet or a yellow string after praying to God, as a protective against the influence of evil spirits and other acts of malevolence (சா.அக.).

*[காப்பு + கட்டல்.]*

**காப்புகாவரிசி** *kāppugāvariši,* பெ.(n.) **கார்போகவரிசி** பார்க்க; see *kārbōgav ariši* (சா.அக.).

**காப்புநீக்கு-தல்** *kāppu-nīkku-,* 5 செ.கு.வி. (v.i.) கட்டி வைத்துள்ள ஓலைச்சுவடியை அதன் கட்டை அவிழ்த்துத் திறத்தல்; to unloose and open, as a book of palmyra leaves. *"பரந்தநூல் காப்பு நீக்கி" (தணிகைப்பு.அகத்.167). (செ.அக.).*

*[காப்பு + நீக்கம்.]*

**காப்புரிமை** *kāppurimai,* பெ. (n.) 1. கண்டுபிடித்த ஒரு பொருளுக்கு அல்லது அதற்குச் சூட்டிய பெயருக்குக் குறிப்பிட்ட காலம் வரை அதைத் தான் மட்டுமே செய்து விற்பனை செய்ய அரசில் பதிவு செய்து பெறும் உரிமை; patent. *இன்றியமையாத சிறிய மருந்து வகைகளுக்குக் கூடப் பெரிய நிறுவனங்கள் காப்புரிமை பெறுகின்றன.*

*[காப்பு + உரிமை.]*

**காப்புறுதி** *kāppuṟudi,* பெ.(n.) காப்பீடு செய்தல்; insurance (க்ரியா.).

*[காப்பு + உறுதி.]*

**காப்புறை** *kāppuṟai,* பெ.(n.) நோய்கள் வராதபடிக்குக் காக்கும் மருந்துகள்; medicines which act as preventives in diseases.

*[காப்பு + உறை.]*

இது தமிழ் மருத்துவ முறைப்படி காப்பு, நீக்கம், நிறைப்பு ஆகிய மூவகை மருந்துகளுள் ஒன்று (சா.அக.).

**காம்பசி** *kāmbaši,* பெ.(n.) செந்நெருஞ்சில்; a red variety of oaltrops - *Tribulus terrestris* (சா.அக.).

**காம்பம்** *kāmbam,* பெ.(n.) **காம்பசி** பார்க்க; see *kāmbaši* (சா.அக.).

**காம்பாய்-தல்** *kāmbay-,* 1 செ.கு.வி.(v.i.) இலைக் காம்புகளைக் கிள்ளுதல் அல்லது நீக்குதல்; removing the foot stalk of leaves; separating the foot stalk from leaves (சா.அக.).

*[காம் + ஆய்.]*

**காம்பு** *kāmbu,* பெ.(n.) 1. முலைக்காம்பு; nipple. 2. மயிர்க்காம்பு; hair-follicle. 3. இலைக்காம்பு; foot stalk.

**காம்புக்கழலை** *kāmbu-kaḻalai,* பெ.(n.) காம்பைப் போன்ற கட்டி; a long projecting tumour growing from a more or less marked pedicle or stem in the ear, nose, lower gut, female genital and some-times in the throat - *Polypus or polypoid tumour* (சா.அக.).

*[காம்பு + கழலை.]*

**காம்புகி** *kāmpugi,* பெ.(n.) நாகப்பிரண்டை; a speicies of adamant creeper so called probably of its shape like the cobra (சா.அக.).

*[காம்பு + அகி.]*

**காம்புரி** *kāmburi,* பெ.(n.) மூங்கில்; bamboo (சா.அக.).

*[காம்பு + உரி.]*

**காம்போதியார்** *kāmbōdiyār,* பெ.(n.) கழகம் மருவிய புலவர்களில் ஒருவர்; the poet who belonged to last *śaṅgā*age (அபி.சி.ந்.).

**காமக்கணிப்பசலையார்** *kāma-k-kaṇi-p-paśalaiyār,* பெ.(n.) கழகக் காலப் பெண்பாற் புலவர்; poetess of sangama age.

இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு பாடல்கள் கிடைத்துள்ளன. மகளிர்க்குண்டாகும் பசலையைப் பாராட்டிப் பாடினமையின் இவர் பசலையாரெனப்பட்டார் போலும் (அபி.சிந்.).

**காமக்களை** *kāma-k-kaḷai,* பெ. (n.) பெண்ணின் காமத்தின் அளவாக கலவியில் குறி வழியாய் வெளிவரும் காமநீர்; a fluid discharge in a woman from orgasm in sexual intercourse. This is unknown in western science (சா.அக.).

*[காமம் + களை.]*

**காமக்கிழத்தியர்** *kāma-k-kiḻattiyar,* பெ.(n.) பலருக்கும் உரியவர் அன்றி ஒருவருக்கே உரிமை பூண்டு வரும் குலப்பரத்தையர்; female the patren comeray from a proskitute family.

*[காமம் + கிழத்தி + ஆர்.]*

**காமக்கினி** *kāmakkiṉi,* பெ.(n.) **காமத்தீ** பார்க்க; see *kāmattī* (செ.அக.).

*[காமம் + அக்கினி. **Skt.** Agni > த. அக்கினி.]*

**காமக்கிரீடை** *kāma-k-kirīḍai,* பெ.(n.) காம விளையாட்டு; amorous sport (சா.அக.).

*[காமம் + கிரீடை. **Skt.** krīdai> த. கிரீடை.]*

**காமக்கொடியோன்** *kāma-k-koḍiyōṉ,* பெ.(n.) ஒருவகைச் செய் நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

*[காமம் + கொடியோன்.]*

**காமக்கொடுமை** *kāma-k-koḍumai,* பெ.(n.) காமக்கேட்டால் கொடிய செயலைச் செய்கை; cruelty with sexual perversion - *Tyrannism* (சா.அக.).

*[காமம் + கொடுமை.]*

**காமகக்கோபி** *kāmaga-k-kōbi,* பெ.(n.) செடிவகை; tuscan jasmine - *Jasminum sambacflore manoraepleno* (சா.அக.).

*[காமம் + கக்கோபி.]*

**காமகட்கதலம்** *kāmagaṭga-talam,* பெ.(n.) தாழை; common screw-pine of India - *Pandanus odoratissimus* (சா.அக.).

**காமகரம்** *kāmagaram,* பெ.(n.) காமுகம் அதாவது காமத்தை உண்டாக்கும் மருந்து; any medicine that promotes sexual desire - *Aphrodisiac* (சா.அக.).

*[காமம் + கரம்.]*

**காமகருக்கல்** *kāma-karukkal,* பெ.(n.) மூன்று மாதத்திய கரு (பிண்டம்); foetus three month's old (சா.அக.).

*[காமம் + கருக்கல்.]*

**காமகலை** *kāma-kalai,* பெ.(n.) ஒரு விலைமகளின் பெயர்; name of a prostitute.

*[காம + கலை.]*

இவள் காசிக்குச் சென்று கங்கையில் குளித்து தம் நாட்டு அரசன் வீரசேனனுக்குக் காசியின் பெருமையைக் கூறி முத்தியடைந்தவள் (அபி.சிந்.).

**காமகத்தூரி** *kāma-kattūri,* பெ.(n.) திருநீற்றுப்பச்சை; love-musk - *Ocimum basilicum* (சா.அக.).

**காமகாந்தம்** *kāma-kāndam,* பெ.(n.) **காமுகம்** பார்க்க; see *kāmugam* (சா.அக.).

**காமகாமின்** *kāma-kāmiṉ,* பெ.(n.) காமத்தினால் ஏற்படும் பல வகை விருப்பங்கள்; various

desires or wishes following lust; the dictates of sexual passion (சா.அக.).

**காமகாரம்** *kāma-kāram,* பெ.(n.) பொறாமை; envy, jealousy impelled by selfishness (செ.அக.).

*[காமம் + காரம்.]*

**காமகுணம்** *kāma-kuṇam,* பெ.(n.) காமவெறி; passion (சா.அக.).

*[காமம் + குணம்.]*

**காமகேசரி** *kāma-kēšari,* பெ.(n.) மிகுதியான காமம்; excess of sexual desire (சா.அக.).

*[காம + கேசரி.]*

**காமகேளி** *kāma-kēḷi,* பெ.(n.) 1. காம விளையாட்டு; sexual perversion. 2. புணர்ச்சி; coition; copulation (சா.அக.).

*[காமம் + கேளி.]*

**காமச்சுரம்** *kāma-c-curam,* பெ.(n.) புணர்ச்சியின் பொருட்டு மிக்க விருப்பத்தினால் ஏற்படும் காய்ச்சல்; amative fever or fever-lust.

*[காமம் + சுரம்.]*

இதனால் மனக்கவலை, மயக்கம், உணவு வெறுப்பு, நெஞ்சு வலி, இளைப்பு முதலிய குணங்களுண்டாம். மேலும் ஆண்குறி, பெண்குறி, தொப்புள், முலை முதலிய இடங்களில் ஓர் உணர்ச்சியையும் சில பொழுதுகளில் உடம்பில் எரிச்சலையும் உண்டாக்கும் (சா.அக.).

**காமசரம்** *kāmacaram,* பெ.(n.) மாமரம்; mango tree - *Mangifera indica* (சா.அக.).

**காமசனனி** *kāma-šaṉaṉi,* பெ.(n.) வெற்றிலை; betel-pepper - *Piper betle* (சா.அக.).

*[காமம் + சனனி.]*

**காமசாதி** *kāma-šādi,* பெ.(n.) கொக்கோக நூலின்படி வகுக்கப்பட்ட நான்கு வகை பெண் இனங்கள்; the four classes of women as stated above divided according to their lust and enumerated in the Tamil erotic science of Kokkogamuni (சா.அக.).

*[காமம் + சாதி.]*

**காமசாரம்** *kāma-šāramm,* பெ.(n.) 1. கசகசாச் செடியின் பால்; opium, inspissated juice of *Papaver somniferum.* 2. மாமரம்; mango tree (சா.அக.).

*[காமம் + சாரம்.]*

**காமசித்தங்கம்** *kāma-cittaṅgam,* பெ.(n.) காமக்கவலையும், காமத்தினவும் உள்ளவன்; one whose mind and body is overcome with sexual passion (சா.அக.).

*[காமம் + சித்தங்கம்.]*

**காமசுந்தரம்** *kāma-ššundaram,* பெ.(n.) ஆவு (பசு); cow (சா.அக.).

*[காமம் + சுந்தரம்.]*

**காமஞ்சுருக்கி** *kāmañ-curukki,* பெ.(n.) காம விருப்பத்தைத் தணிக்கும் மருந்து; an agent that lessens the sexual impulse - *Antaphrodisiac* (சா.அக.).

*[காமம் + சுருக்கி.]*

**காமஞ்சேர்குளத்தார்** *kāmañcēr-kuḷattār,* பெ.(n.) கடை கழகக் காலத்துப் பெண்பாற் புலவர்; the women poet who belonged to the last ancient Šaṅgam (அபி.சிந்.).

**காமஞாலத்தி** *kāma-ñālatti,* பெ.(n.) 1. முன்மர வகை; jujube-tree - *Zizyphus jujuba.* 2. நீர்நிலை; water tank (சா.அக.).

*[காமம் + ஞாலத்தி.]*

**காமணம்** *kāmaṇam,* பெ.(n.) 1. சிறுமூலம்; small root. 2. திப்பிலி; long-pepper (சா.அக.).

*[கா + மணம்.]*

**காமணி**[1] *kāmaṇi,* பெ.(n.) நவச்சாரம் (யாழ். அக.); nitre (செ.அக.).

*[கா + மணி.]*

**காமணி**[2] *kāmaṇi,* பெ.(n.) 1. எரியுப்பு (வெண்காரம்); ammonium chloride. 2. கையாந்தகரை; eclipse plant - *Eclypta prostrata* (சா.அக.).

*[கா + மணி.]*

**காமத்தானம்** *kama-t-tāṉam,* பெ.(n.) கொக்கோக நூலிற் கண்டபடி பெண்கள் உடம்பில் காமம் தங்கி நிற்பதாகக் கருதப்படும் சில இடங்கள்; certain parts of the female body the excitation of which caused by a male through impress of nails etc.

*[காமம் + தானம்.]*

இவை நகக் குறி முதலியவைகளினால் கூச்சம் ஏற்படுத்திக் காமப் பெருக்கை உண்டாக்கக் கூடிய இடங்கள் (சா.அக.).

**காமத்திராசமூலம்** *kāmattirašamūlam,* பெ.(n.) 1. கருப்புத் தக்காளிச் செடி; a black Takkali plant (un identified). 2. மிளகுத் தக்காளி; mad apple - *Solanum melongena* (சா.அக.).

*[காமத்திராச + மூலம்.]*

**காமத்தேகம்** *kāma-t-tēgam,* பெ.(n.) காம விருப்பத்தை மிகுதியாகக் கொண்ட உடல்; the body of a amorous person; the body of a person easily susceptitible to sexual passion (சா.அக.).

*[காமம் + தேகம்.]*

**காமத்தேகி** *kāmattēgi,* பெ.(n.) **காமவிகாரி** பார்க்க; see *kāma-vigāri* (சா.அக.).

**காமத்தைக்களையப்பண்ணி** *kāmattai-k-kaḷaiya-p-paṇṇi,* பெ.(n.) பூனைக்காலி; cowhage - *Mucana pruriens* (சா.அக.).

*[காமத்தை + களையம் + பண்ணி.]*

**காமதகனமூர்த்தி** *kāma-tagaṉa-mūrti,* பெ.(n.) மன்மதனை எரித்த திருவுரு; God šiva.

**காமதம்** *kāmadam,* பெ.(n.) நிலத்தில் விழுந்த பின் எடுத்துக் கொள்ளப்படும் ஆவின் (பசுவின்) சாணம் (சைவச.பொது.169, உரை); cow dung secured after it has fallen on the ground (செ.அக.).

*[கா + மதம்.]*

**காமதனம்** *kāmadaṉam,* பெ.(n.) ஊமத்தை; datura plant (சா.அக.).

**காமதுரம்** *kāmaduram,* பெ.(n.) 1. சாராயம்; arrack, liquor. 2. கள்ளு; toddy. 3. ஓர் இனிமை (மதுரம்)யான பருகம்; a sweet drink (சா.அக.).

*[கா + மதுரம்.]*

**காமதூதி** *kāma-tūdi,* பெ.(n.) 1. பெண்குயில்; the female of an Indian cuckoo. 2. பாதிரி மரம்; trumpet flower tree - *Bignonia suaveolens* (சா.அக.).

*[காமம் + தூதி.]*

**காமதூதிகம்** *kāma-tūdigam,* பெ.(n.) ஒரு பூடு; a plant - *Tiaridium indicum* (சா.அக.).

*[காமம் + தூதிகம்.]*

**காமநாயகம்** *kāma-nāyagam,* பெ.(n.) காமத்தை விளைவிக்கும் ஒரு வகை ஒட்டுந் தன்மை கொண்ட பிசின்; a resin supposed to promote sexual desire.

*[காமம் + நாயகம்.]*

இது பாரசிக நாட்டில் இருந்து வரும் ஒரு யுனானிச் சரக்கு (சா.அக.).

**காமப்பயித்தியம்** *kāma-p-payittiyam,* பெ.(n.) **காமவெறி** பார்க்க; see *kāma-veṟi* (சா.அக.).

**காமப்பற்று** *kāma-p-paṟṟu,* பெ.(n.) 1. காம விருப்பம்; sexual desire. 2. மனதின் தீக்குணங்களுள் ஒன்று; libidinous propensities. 3. உலகப்பற்று; wordly desire (சா.அக.).

*[காமம் + பற்று.]*

**காமப்பித்தன்** *kāma-p-pittaṉ,* பெ.(n.) புணர்ச்சியின் மீதே நினைவுள்ளவன்; one who is affected with erotomania - *Erotomaniac* (சா.அக.).

*[காமம் + பித்தன்.]*

**காமப்பிராந்தி** *kāma-p-pirāndi,* பெ.(n.) 1. காமப்பித்து; emotional insanity characterised by exhibitions of extravagant affection for persons of the opposite sex or of excessive sexual desire - *Erotomania.* 2. காமமயக்கம்; delusion in love (சா.அக.).

*[காமம்+ பிராந்தி.]*

**காமப்பிரியகாரி** *kāma-p-piriyakāri,* பெ.(n.) அமுக்கிறா; burr wood - *Physalis flexyosa* (சா.அக.).

*[காமம் + பிரியகாரி.]*

**காமப்புரட்டு** *kāma/-p-puraṭṭu,* பெ.(n.) காம நுகர்ச்சியின் மாறுபாடு; disorder of the sexual impulse - *Erotopathy* (சா.அக.).

*[காமம் + புரட்டு.]*

**காமபலம்** *kāma-balam,* பெ.(n.) 1. காம விருப்பம்; sexual desire. 2. காமத்தை விளைவிக்கும் ஒரு வகை மாம்பழம்; a species of mango-fruit promoting sexual passion. 3. காமத்தை உண்டாக்கும் பழம்; any fruit tending to increase sexual passion (சா.அக.).

*[காமம் + பலம். Skt. palam > த. பலம்.]*

**காமபலை** *kāmapalai,* பெ.(n.) மாம்பழம்; mango known as love-fruit - *Mangifera indica* (சா.அக.).

*[காமம் + பலை.]*

**காமபீடம்** *kāma-pīḍam,* பெ.(n.) மனிதர்கள் அடைய விரும்பும் வீடு பேற்றினை அளிக்கக் கூடிய வல்லமையுள்ள காஞ்சிபுர நகரம்; the place where one's desires are all fulfilled, conjeevaram. *"முத்திபோகம்..... கொடுத்திடுந் தன்மையற் காமபீடமென்று" (கந்தபு. திருநகரப்.70)* (செ.அக.).

*[Skt. kāma + பீடம்.]*

**காமபீடிதம்** *kāma-pīḍidam,* பெ.(n.) காம வேதனை; torment of plant (சா.அக.).

*[காமம் + பீடிதம்.]*

**காமபூதம்** *kāma-pūdam,* பெ. (n.) 1. மக்களுக்குக் கனவில் மிகுதியாகக் காமவிருப்பத்தை மூட்டும் அரமகள் (மோகினி) என்னும் ஒரு பெண் பூதம்; a female demon known as mohini exciting excessive sexual desire in dreams of men or women. 2. தான் கருத்து வைத்த தலைவன் அல்லது தலைவியை நினைவிற் காணல்; the appearance of her lover in a woman's dream or of his love in a man's dream; the vision of a lover in dream. 3. காமத்தால் ஏற்படும் ஒரு நோய்; love-sickness (சா.அக.).

*[காமம் + பூதம்.]*

**காமபோகம்** *kāma-bōgam,* பெ.(n.) காம நுகர்ச்சி; gratification of lust of sexual desire (சா.அக.).

*[காமம் + போகம்.]*

**காமபோசம்** *kāma-pōšam,* பெ.(n.) 1. கமேலா மாவு மரம்; kamela tree - *Rottleria tinctoria.* 2. ஓரூர்; Cambodia (சா.அக.).

*[காமம் + போசம்.]*

**காமபோகி** *kāma-bōgi,* பெ.(n.) குன்றி (யாழ்.அக.); crab's eye (செ.அக.).

**காமமயக்கம்** *kāma-mayakkam,* பெ.(n.) காமவெறி; delusion in love; infatuation (சா.அக.).

*[காமம் + மயக்கம்.]*

**காமமுள்ளான்** *kāmamuḷḷāṉ,* பெ.(n.) காம விருப்பங் கொண்டவன்; an amorous man; a lascivious person (சா.அக.).

*[காமம் + உள்ளான்.]*

**காமமுற்றவள்** *kāmamuṟṟavaḷ,* பெ.(n.) விருப்பம் கொண்டவள்; an amorous woman (சா.அக.).

*[காமம் + உற்றவள்.]*

**காமமூடன்** *kāma-mūḍaṉ,* பெ. (n.) **காமப்புரட்டன்** பார்க்க; see *kāma-p-puraṭṭaṉ* (சா.அக.).

**காமமோகம்** *kāma-mōgam,* பெ.(n.) காமத்தினால் உண்டாகும் மயக்கம் (பிரமை); infatuation through lust (சா.அக.).

*[காமம் + மோகம்.]*

**காமர்** *kāmar,* பெ.(n.) காமுகர்; lascivious persons. *"கருங்கடைக் கண்ணயில் காமர்நெஞ்சினை யுருங்குவ" (கம்பரா. நகரப்.46)* (செ.அக.).

**காமர்த்தகாவிரணம்போக்கி** *kāmarttagā viraṇam-pōkki,* பெ.(n.) **காமரீகம்** பார்க்க; see *kāmarīgam* (சா.அக.).

**காமரசம்** *kāma-rašam,* பெ.(n.) 1. அகத்தியர் மருத்துவ நூலில் சொல்லியுள்ள ஒரு மருந்து; an aphrodisiac preparation described in Agastiyar's treatise on medicine. 2. மாமரம்; mango tree. 3. காம இன்பம்; sexual enjoyment (சா.அக.).

*[காமம் + ரசம்.]*

**காமரசாகிகம்** *kāma-rašāgigam,* பெ.(n.) பேரீந்து; wild date fruit - *Phoenix dactylifera* (சா.அக.).

*[காமம் + ரசாகிகம்.]*

**காமரசேபிகம்** *kāma-rašēbigam,* பெ.(n.) நத்தைச் சூரி; button-weed - *Spermacoci hispida* (சா.அக.).

*[காமம் + ரசேபிகம்.]*

**காமரதிவினோதம்** *kāma-radi-viṉōdam,* பெ.(n.) 1. சித்தினி இனப் பெண்; one of the 4 classes of women divided according to lust, *Furoruterimus.* 2. அழகி (லீலாவதி); a femal affected with an insane sexual desire - *Nymphomaniac.* 3. மகளிர் கலவி விளையாட்டு; wanton sport of women (சா.அக.).

*[காமன் + ரதி + வினோதம்.]*

**காமரிசி** *kāmariši,* பெ.(n.) நெருஞ்சில்; caltrops - *Tribulus terrestris* (சா.அக.).

**காமரீகம்** *kāmarīgam,* பெ.(n.) புல்லுருவி; Indian mistletoe - *Loranthus elasticus alias L. Pentandrus* (சா.அக.).

*[காமம் – காமரீகம்]*

**காமலதை** *kāmaladai,* பெ.(n.) 1. ஆண்குறி; penis. 2. காமவல்லி; love-creeper - *Ipomaeaquamoclit* (சா.அக.).

**காமலின்** *kāmaliṉ,* பெ.(n.) காமாலையினால் தாக்கப்பட்டவன்; one suffering from jaundice (சா.அக.).

**காமவதி** *kāmavadi,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric - *Coscinium fenestratum* (சா.அக.).

*[காமம் = காமவதி.]*

**காமவல்லபம்** *kāma-vallabam,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

*[காமம் + வல்லபம்.]*

**காமவலை** *kāma-valai,* பெ.(n.) காமம் கொள்ளும்படிச் செய்யும் சூழ்ச்சி; a device by which one is entangled or ensnared in lust (சா.அக.).

*[காமம் + வலை.]*

**காமவலைவீசல்** *kāma-valai-višal,* பெ.(n.) காமத்திற்கு உட்படுத்துகை அதாவது காம

விருப்பத்தை உண்டாக்குகை; inducing of sexual passion by a woman through cunning devices; ensnaring a man to sexual delights of women (சா.அக.).

*[காமம் + வலை + வீசல்.]*

**காமவளை** *kāma-vaḷai,* பெ.(n.) பெண்குறி; orifice of the vagina (சா.அக.).

*[காமம் + வளை.]*

**காமவிகாரம்** *kāma-vigāram,* பெ.(n.) காமத்தினால் உண்டாகக் கூடிய வேறுபாடு; the physical and mental changes brought about by intense love. *"வெம்மைக் காமவிகாரம் பெறுதியால்" (உபதேசகா.அயமுகி.72) (செ.அக.).*

*[Skt. kāma + விகாரம்.]*

**காமவிகாரி** *kāma-vigāri,* பெ.(n.) காமக் குறும்புடையோன்; a person with disordered sexual impulse - *Erotopath* (சா.அக.).

*[காமம் + விகாரி.]*

**காமவிச்சை** *kāmaviccai,* பெ.(n.) காமவிருப்பம்; sexual desire; venereal oestrum (சா.அக.).

*[காமம் + இச்சை.]*

**காமவிச்சையுள்ள** *kāmaviccai-y-uḷḷa,* பெ.(n.) காமத்தனமுள்ள; salacious, lecherous (சா.அக.).

*[காமம் + இச்சையுள்ள.]*

**காமவிருத்தி** *kāma-virutti,* பெ.(n.) காம மிகுதி; increase of sexual passion (சா.அக.).

*[காமம் + விருத்தி.]*

**காமவிருந்தம்** *kāma-virundam,* பெ.(n.) பாதிரிப்பூ; trumpet flower - *Bignonia suaveolens* (சா.அக.).

*[காமம் + விருந்தம்.]*

**காமவெறுப்பு** *kāma-veṟuppu,* பெ.(n.) காம விருப்பமின்மை; morbid dislike for sexual love - *Erotophobia* (சா.அக.).

*[காமம் + வெறுப்பு.]*

**காமன்கோட்டம்** *kāmaṉ-kōṭṭam,* பெ.(n.) காமன் கோவில்; the temple of *kāmaṉ* (சா.அக.).

*[காமன் + கோட்டம்.]*

இராசகிரியத்தின் புறநகரில் உள்ள சோலையில் இக்கோவில் இருந்தது. இதில் தலைவன், தலைவி இருத்தற்குரிய மணவறையும் தோட்டமும் இருந்தன. ஏழு நாட்கள் இங்கு விழா நடந்தது. பெருங்கதை உதயணன் பதுமாவதியை முதலில் கண்டு களித்தது இக்கோட்டத்தின் வாயிலிலேதான் (அபி.சிந்.)

**காமாக்கினி** *kāmākkiṉi,* பெ.(n.) காமமாகிய நெருப்பு; venereal principle manifesting itself in the form of sexual desire, one of three *uyir-t-tī* (சா.அக.).

*[காம + Skt. அக்கினி → காமக்கினி → காமாக்கினி.]*

**காமாகமனம்** *kāmāgamaṉam,* பெ.(n.) காமத்தின் வழியே நடக்காமல் அவ்விருப்பத்தை வேறு வழியாக மாற்றுகை; the process of deviating sexual motive powers from their sexual aims or objects to new aims other than sexual - *Sublimation* (சா.அக.).

*[காமம் + ஆகமனம்.]*

**காமாங்கம்** *kāmāṅgam,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

*[காம + அங்கம்.]*

**காமாச்சி** *kāmācci,* பெ.(n.) காவட்டம்புல்; citronella grass - *Andropogon nardus.*

இது 3–6 அடி உயரம் இருக்கும். மணமுள்ளது; சிறிது கசப்புத் தன்மை கொண்ட

இது வயிற்றுக் கோளாறுகளைப் போக்கும் (சா.அக.).

**காமாசோமாவென்று** *kāmāśōmāvenṟu,* வி.அ.(adv.) திருத்தமாக இல்லாமல்; ஒழுங்கானபடி இல்லாமல்; in a haphazard manner. *போதிய பணம் இல்லாததால் காமாசோமாவென்று முடித்துவிட்டார்*

*[காமா + சோமா + என்று.]*

**காமாதிகாரம்** *kāmādikāram,* பெ.(n.) காமத்தின் தூண்டுகை; influence of sexual passion or desire (சா.அக.).

*[காம + அதிகாரம்.]*

**காமாதுரம்** *kāmāduram,* பெ.(n.) காம விருப்பம்; voluptuousness (சா.அக.).

**காமாந்தம்** *kāmāndam,* பெ.(n.) 1. குயில்; Indian cuckoo. 2. காமக்குருடு; blind with lust; blinded through love (சா.அக.).

**காமாயு** *kāmāyu,* பெ.(n.) கருடன்; brahminy kite (சா.அக.).

**காமாலைநாசனி** *kāmālai-nāšaṉi,* பெ.(n.) காமாலையைப் போக்கும் ஒரு வகை மூலிகை (இருள் விடு செடி); a plant capable of curing jaundice (சா.அக.).

*[காமாலை + நாசனி.]*

**காமாலைநிவர்த்தி** *kāmālai-nivartti,* பெ.(n.) கீழாநெல்லி; Indian annual phyllanthus - *Phyllanthus niruri* (சா.அக.).

*[காமாலை + நிவர்த்தி.]*

**காமாலைமகோதரம்** *kāmālai-magōdaram,* பெ.(n.) நடுக்கல் காய்ச்சல் கண்டு உடம்புலர்ந்து, புறங்கால் வீங்கி, தலைவலி காணும் ஒரு வகைக் காமாலை; dropsy attended with jaundice (சா.அக.).

*[காமாலை + மகோதரம்.]*

**காமாலையத்திசுரநாசினி** *kāmālai-y-atti-šura-nāšiṉi,* பெ.(n.) திருநாமப்பாலை; oval-leaved china root - *Smilar macrophylla* (சா.அக.).

*[காமாலை + அத்தி + சுரம் + நாசினி.]*

**காமாலையத்திசுரம்** *kāmālai-y-atti-šuram,* பெ.(n.) காமாலை நோயினால் ஏற்படும் எலும்பைப் பற்றிய ஒரு காய்ச்சல்; a kind of fever affecting the bones of a patient suffering from jaundice (சா.அக.).

*[காமாலை + அத்தி + சுரம்.]*

**காமாலைவீக்கம்** *kāmālai-vīkkam,* பெ.(n.) காமாலை நோயினால் ஏற்படும் வீக்கம்; swelling due to jaundice (சா.அக.).

*[காமாலை + வீக்கம்.]*

**காமாவேசம்** *kāmā-vēšam,* பெ.(n.) காமக்கோலம்; ecstatic frenzy through sexual desire - *Nympholepsy* (சா.அக.).

*[காம + ஆவேசம்.]*

**காமி** *kāmi,* பெ.(n.) 1. வழலையுப்பு; alchemical salt. 2. அதிகக் காமம் உடைய பெண்; a voluptuous woman (சா.அக.).

*[காமம் – காமி.]*

**காமியம்** *kāmiyam,* பெ.(n.) 1. கருதிச் செய்வது; inference to be done. 2. நேர்ந்து செய்வது; in sight to be done. *"தம்முடைய இட்டகாமியம் முடிகைக்கு இவ்வூர் திருப்புறத்துறை மஹாதேவர்க்கு தம்முடைய காணியாக நிலம் – குடுத்தமையின்" (தெ.இ.கல்.தொ.7, கல்.496) (கல்.அக.).*

*[காமம் – காமியம்.]*

**காமியகம்** *kāmiyagam,* பெ.(n.) நற்பேறு பெற்ற இடம்; sacred place (அபி.சிந்.).

*[காமி + அகம்.]*

**காமியகுரு** *kāmiya-guru,* பெ.(n.) சிவ பத்தியையும், அறத்தையும் அறிவுறுத்தக் கூடிய குரு; preceptor who inculcates devotion and righteousness.

*"அறத்தைப் போதகஞ்செய் திருமையினு மின்பமருள்பவனே..... காமியகுரு" (தேவா.கு.16). (செ.அக.).*

*[காமியம் + குரு.]*

**காமிருகம்** *kāmirugam,* பெ.(n.) மான்மதம்; musk - *Moschus moschiferus* (சா.அக.).

*[கா + மிருகம்.]*

**காமிலம்** *kāmilam,* பெ.(n.) ஒரு நோய்; an unknown disease (சா.அக.).

**காமினம்** *kāminam,* பெ.(n.) புணர்ச்சி செய்கை; having sexual intercourse (சா.அக.).

**காமினிபோகம்** *kāmini-bōgam,* பெ.(n.) சித்தினி சாதிப் பெண்ணோடு புரியும் கலவி; sexual enjoyment with a voluptuous woman (சா.அக.).

*[காமினி + போகம்.]*

**காமினிபோகரோகணி** *kāmini-bōga-rōgaṇi,* பெ.(n.) புல்லுருவி; mistletoe - *Loranthuselasticus* (சா.அக.).

*[காமினி + போகம் + ரோகணி.]*

**காமுகக்கள்ளன்** *kāmuga-k-kaḷḷan,* பெ.(n.) எருமை; Buffalo (சா.அக.).

*[காமுகம் + கள்ளன்.]*

**காமுகக்காசம்** *kāmuga-k-kāšam,* பெ.(n.) அதிகப் புணர்ச்சியினால் உண்டாகும் கோழை (காசம்); sexual asthma (சா.அக.).

*[காமுகம் + காசம்.]*

**காமுகம்** *kāmugam,* பெ.(n.) 1. பூங் கொன்றை; cassia flower - *Cassia fistula.* 2. அசோக மரம்; asoka tree - *Jonesia Asoka.* 3. குறிஞ்சா; spring creeper - *Gaerthera racemosa.* 4. பெட்டையை விட்டுப் பிரியாத புறா; a male pigeon inseparable from its mate (சா.அக.).

*[காமம் – காமுகம்.]*

**காமுகன்** *kāmugan,* பெ.(n.) காமவெறி கொண்டவன்; lustful man.

*[காமம் – காமுகன்.]*

**காமுகி** *kāmugi,* பெ.(n.) காமமுடையவள்; a lustful woman (சா.அக.).

**காமுறல்** *kāmuṟal,* பெ.(n.) மோகமடைகை; lustfulness (சா.அக.).

*[காமம் + உறல்.]*

**காமுனி** *kāmuṉi,* பெ.(n.) கண்ணனுக்குப் பூணூல் அணிவித்தவன்; initiatory ceremony intended to God *kaṇṇā* (அபி.சிந்.).

**காமூரி** *kāmūri,* பெ.(n.) 1. காமவிருப்பம்; sexual desiïllre. 2. சிற்றின்பம்; sexual pleasure (சா.அக.).

**காமேதகம்** *kāmēdagam,* பெ.(n.) இந்திர கோபப்பூச்சி; a scarlet insect of velvetty appearance.

*[காமம் – காமேதகம்.]*

இதற்குப் பட்டுப் பூச்சி என்றும் பெயர். இது ஆண்டில் முதல் மழை பெய்தவுடன் திறந்த வெளிகளில் காணப்படும் (சா.அக.).

**காமோத்தீபகம்** *kāmō-t-tīpagam,* பெ.(n.) காமத்தைத் தூண்டும் பொருள்கள் (பண்டங்கள்); substances promoting sexual desire; any drug that aroses sexual instinct - *Aphrodisiac* (சா.அக.).

*[காமம் – உத்தீபகம்.]*

**காமோதகம்** *kāmōdagam,* பெ.(n.) 1. காமநீர்; seminal discharge in a male. 2. **காமக்களை** பார்க்க; see *kāma-k-kaḷai* (சா.அக.).

*[காமம் – உதகம்.]*

**காமோபாதை** *kāmōpādai,* பெ.(n.) காமநோய்; love sickness (சா.அக.).

*[காமம் + Skt. உபாதை.]*

**காய்-த்தல்** *kāy-*, செ.கு.வி.(v.i.) 1. மரத்தில் காய்விடல்; bearing fruit. 2. முதிர்தல்; nmaturing as in *kadir-viḍal* as corn. 3. பரு அல்லது கழலை உண்டாதல்; appearance or formation of warts, tumours or other hard eruptions on the body as in cases of small-pox or syphilis (சா.அக.).

**காய்-தல்** *kāy-*, செ.கு.வி.(v.i.) 1. புண்ணாதல்; healing as of a wound. 2. மெலிதல்; becoming emaciated. 3. காய்ச்சல் காய்தல்; raging with fever; being feverish. 4. உலர்தல்; drying. 5. பட்டினியாய் இருத்தல்; starving. 6. சூடேறல்; getting heated. 7. பழுக்கக் காய்தல்; getting red-hot. 8. உடம்பு சுடுதல்; growing warm. as of body in temperature. 9. பசையறல்; as in *udaḍukāydal*, parching as of lips or the mouth. 10. களைப்புறல்; getting exhausted. 11. அழித்தல்; killing. 12. வெட்டுதல்; cutting. 13. காய்ச்சலுறல்; getting feverish. 14. வாடல்; withering (சா.அக.).

**காய்க்குமரம்** *kāykku-maram*, பெ.(n.) காய் காய்க்கும் மரம்; tree bearing fruit as opposed to *kāyā-maram* (சா.அக.).

*[காய்க்கும் + மரம்.]*

**காய்க்குள்பாடாணங்கட்டி** *kāykkuḷ-pāḍāṇaṅ-kaṭṭi*, பெ.(n.) பேய்க்குமட்டி; bitter apple - *Cucumis colocynthis* (சா.அக.).

*[காய்க்குள் + பாடாணம் + கட்டி.]*

**காய்ச்சகட்டி** *kāyccakaṭṭi*, பெ.(n.) 1. காசுக் கட்டி; Indian catechu. 2. காய்ச்சலால் வயிற்றுள் காணுங் ஈரற் கட்டி; enlargement of the spleen from fever. 3. காய்ச்சி எடுத்தக் கட்டி; lump of any substance derived from boiling (சா.அக.).

*[காய்ச்சு + கட்டி.]*

**காய்ச்சல்** *kāyccal*, பெ.(n.) 1. பசி; hunger as in *vayiṟṟu-k-kāyccal*. 2. வறட்சிக் காற்று; dry weather. 3. காய்ச்சுதல்; boiling; heating (சா.அக.).

*[காய்→காய்ச்சல்.]*

**காய்ச்சற்காரி** *kāyccaṟ-kāri*, பெ.(n.) காய்ச்சலால் தாக்குண்ட பெண்; a woman who is suffering from fever (சா.அக.).

*[காய்ச்சல் - காய்ச்சற்காரி. காரி உடைமைப் பொருள் பெண்பாலீறு.]*

**காய்ச்சற்பாடாணம்** *kāyccāṟ-pāḍāṇam*, பெ.(n.) பிறவி நஞ்சு (பாஷாண) வகைகளுள் ஒன்று; a mineral poison (செ.அக.).

*[காய்ச்சல் + பாடாணம்]*

**காய்ச்சற்பட்டை** *kāyccaṟ-paṭṭai*, பெ.(n.) 1. பூநாறிப்பட்டை; yellow-flowered resin seed - *Pittosporum tetraspermum*. 2. உலர்ந்த பட்டை; dried bark. 3. சுரப்பட்டை; chincona bark (சா.அக.).

*[காய்ச்சல் + பட்டை.]*

**காய்ச்சாற்றல்** *kāy-c-cāṟṟal*, பெ.(n.) கொதிக்க வைத்துப் பிறகு ஆற்றுகை; to cool after boiling (சா.அக.).

*[காய் + ஆற்றல்.]*

**காய்ச்சாற்றியநீர்** *kāyccāṟṟiya-nīr*, பெ.(n.) கொதிக்க வைத்துப் பிறகு ஆற வைத்த நீர்; water boiled and cooled (சா.அக.).

*[காய்ச்சி + ஆற்றிய + நீர்.]*

**காயச்சிப்பந்தி** *kāya-c-cippandi*, பெ.(n.) நிலையான பதவியில் இருப்பவர்; permanent establishment; holder of permenant post (செ.அக.).

*[U.qāim> த. காயம்.]*

**காய்ச்சிறக்கல்** *kāy-c-ciṟakkal,* பெ.(n.) 1. வாலையில் இட்டு இறக்குகை; distilling. 2. நெருப்பில் கொதிக்க வைத்து வடிகட்டுகை; filtering after boiling (சா.அக.).

*[காய்ச்சி + இறக்கல்.]*

**காய்ச்சுகை** *kāy-c-cugai,* பெ.(n.) 1. சுடுகை; the operation of heating - *Calefaction.* 2. கொதிக்க வைக்கை; the process of vapouraisation by bubble formation (சா.அக.).

*[காய் – காய்ச்சுகை]*

**காயசித்திச்சி** *kāya-šitticci,* பெ.(n.) 1. சிறு கீரை; pig's greens - *Amaranthus campestris.* 2. பொன்னாங்காணி; mari-gold vebesina - *Illecebrum sessile.* 3. பெரு மலர்க்கொன்றை; a species of cassia with large flowers (unidentified) (சா.அக.).

*[காயம் + சித்திச்சி.]*

**காயசித்திச்சுண்ணம்** *kāya-citti-c-cuṇṇam,* பெ. (n.) கருப்பூரசிலாசத்து; crystallized or foliated gypsum used as a medicine (செ.அக.).

*[காயம் + சுத்தி + சுண்ணம்]*

**காயசித்தியானோன்** *kāya-šittiyāṉōṉ,* பெ. (n.) 1. நீண்ட காலம் உடல் நீடித்திருக்கக் கூடியவன்; one who has attained the power of *kāya-citti.* 2. வைப்புப் பாடாண வகை; a prepared arsenic (செ.அக.).

*[காயம் + சித்தி + ஆனோன்.]*

**காய்ச்சுண்டை** *kāy-c-cuṇḍai,* பெ.(n.) **காசுக்கட்டி** பார்க்க; see *kāšu-k-kuṭṭi* (செ.அக.).

**காய்ச்சுப்பால்** *kāyccu-p-pāl,* பெ.(n.) முப்பால்களுள் ஒன்றான, காய்ச்சிய பால் (யாழ்.அக.); boiled milk, one of *mu-p-pāl* (செ.அக.).

*[காய்ச்சு + பால்.]*

**காய்ச்சுபால்** *kāyccu-pāl,* பெ.(n.) கொதிக்க வைத்த பால்; boiled milk (சா.அக.).

*[காய்ச்சு + பால்.]*

**காய்ச்சுமுறை** *kāyccu-muṟai,* பெ.(n.) காய்ச்சி வடிக்கும் முறை; the process of boiling down decoctions, medicated oils, syrups etc.

*[காய்ச்சும் + முறை.]*

எண்ணெய் முதலியவைகளை எட்டிலொன்று. ஆறில் ஒன்று அல்லது நான்கில் ஒன்றாக தமிழ் நூல் முறையிற் சொல்லியபடி காய்ச்சும் முறை (சா.அக.).

**காய்ச்சுவச்சிரம்** *kāyccu-vacciram,* பெ.(n.) காய்ச்சித் தயாரித்த பிசின் (வச்சிரம்); glue obtained by boiling from certain parts of animalsï Gelatine (சா.அக.).

*[காய்ச்சு + வச்சிரம். வயிரம்→வசிரம் →வச்சிரம்.]*

**காயம்பேரிஜ்** *kāyam-pērij,* பெ.(n.) **காயந் தீர்வை** பார்க்க; see *kāyan-tīrvai* (செ.அக.).

*[U. qāim-beriz > த. காயம்.]*

**காய்ஞ்சிப்போ–தல்** *kāyñji-p-pō-,* செ.கு.வி. (v.i.) உலரல்; growing dry; getting dried (சா.அக.).

*[காய்ஞ்சி + போ–.]*

**காய்ஞ்சொறி** *kāy-ñ-coṟi,* பெ.(n.) செந்தொட்டி; scorpion leaf - *Tragia involucrata* (சா.அக.).

*[காய் + சொறி.]*

இது ஒரு முறுக்கேறிய கொடி. இதன் இலைகள் முசுமுசுப்பாயிருக்கும். இதன் சுனை உடம்பில் பட்டால் கடுக்கும். பூக்கள் சிறிது பச்சை

நிறக்கொத்துகளாக இருக்கும். சிலவேளை ஒரே காம்பில் நிறைய உண்டு. மேல் பூ ஆண், அடிப்பூ பெண். ஆண்டுதோறும் பூக்கும். இதன் சிறு வேருக்கு எவ்வித மணமும், சுவையும் இராது.

இதன் வேர் மேகத்திற்கு நல்லது. இதைக் காய்ச்சிக் குடிக்க மூத்திரக் கட்டை உடைத்து நீரைப் பிரிக்கும். இதன் சாற்றை ஆவின் பாலில் சர்க்கரை இட்டுக் கொள்ள காய்ச்சல், சொறி, சிறங்கு இலைகள் போம். இதன் காயை நசுக்கிக் கட்டிகளுக்கு வைத்துக் கட்ட பழுத்து உடையும் (சா.அக.).

**காய்ந்ததிராட்சை** *kāynda-tirāṭcai,* பெ.(n.) 1. உலர்ந்த கொடி முந்திரி; dried grape. 2. பாகில் இட்ட கொடி முந்திரி; raisin (சா.அக.).

*[காய்ந்த + திராட்சை.]*

**காய்ந்தபேரீந்து** *kāynda-pērindu,* பெ.(n.) கச்சூரம்; dried date-fruit (சா.அக.).

*[காய்ந்த + பேரீந்து.]*

**காய்நீர்க்கயம்** *kāy-nir-k-kayam,* பெ.(n.) வெந்நீர் ஊற்று; hot water spring (சா.அக.).

*[காய் + நீர் + கயம்.]*

**காய்நீர்விரணம்** *kāy-nir-viraṇam,* பெ.(n.) வெந்நீரினால் ஏற்பட்ட சூட்டுப்புண் (விரணம்); a burn or injury caused by bot water or other hot liquid, *Scald* (சா.அக.).

*[காய் + நீர் + Skt. விரணம்.]*

**காய்ப்படாமை** *kāy-p-paḍāmai,* பெ.(n.) காய்க்காமை; not yielding fruit; unproductiveness (சா.அக.).

*[காய் + படாமை.]*

**காய்ப்பரு** *kāy-p-paru,* பெ.(n.) 1. பழுக்காத கட்டி; unripe boil. 2. கடினப் பரு; any horny growth such as a wart, *Keratosis.* 3. காய்ப்பு; callosity (சா.அக.).

*[காய் + பரு.]*

**காய்பலம்** *kāy-balam,* பெ.(n.) 1. தான்றி; a tree, devil's abode - *Terminalia belerica.* 2. தேக்கு; teak - *Tectona grandis* (சா.அக.).

*[காய் + பலம்.]*

**காய்புட்டியெண்ணெய்** *kāyputti-y-enney,* பெ.(n.) கையாப்புடை இலையினின்று செய்யும் எண்ணெய்; medicated and distilled oil extracted from leaves - *Cajuputi oleum oil* (சா.அக.).

*[கையா + புடை + தைலம்.]*

இது மிகத் தெளிவாகவும், துலக்கமுள்ளதாகவும், பச்சை நிறமாகவும் உள்ளது. எளிதில் ஆவியாய்ப் போகக் கூடியது. கற்பூரத்தைப் போல் மணமாயிருக்கும். இதை மருந்தாக உள்ளுக்குக் கொடுக்கச் சுறுசுறுப்பை உண்டாக்கும். வியர்வையைப் பிறப்பிக்கும். பூசு மருந்தாகப் பயன்படுத்தத் தோல் சிவக்கும். காய்ச்சல், பாரிசவாயு, நரம்பிசிவு, வாதவலி குணமாகும். வாந்தி பேதிக்குச் சிறந்த மருந்தாகும். வயிற்றுவலி, வயிற்றிசிவு, சூதக சன்னி முதலியவை போம் (சா.அக.).

**காய்விடு-தல்** *kāy-viḍu-,* பெ.(n.) சிறுவர்கள் ஒருவரோடொருவர் பேசாத வகையில் நட்பை முறித்தல்; of children break friendship. *மிட்டாய் தராவிட்டால் உனோடு காய்விட்டு விடுவேன் என்றான் (க்ரியா.),*

*[காய் + விடு-தல்.]*

**காய்வெட்டி** *kāy-veṭṭi,* பெ.(n.) கழலை, பரு முதலிய சதை வளர்த்தியை அறுக்கப் பயன்படுத்தும் கத்தி; a knife or instrument for removing tumours, warts etc. (சா.அக.).

*[காய் + வெட்டி.]*

**காயக்காரம்** *kāya-k-kāram,* பெ.(n.) 1. உடம்பைச் சுட்டுக் கொப்புளிக்கச் செய்யும் காரமருந்து; blistering agent. 2. சதையைச் சுட்டுப் புண்ணாக்கும் ஒரு கார மருந்து; a substance which burns or corrodes the

skin such as lunar caustic. 3. காயமருந்து; any corrosive substance, as an acid (சா.அக.).

*[காயம் + காரம்.]*

**காயக்குத்தகை** *kāya-k-kuttagai,* பெ.(n.) நிலையான குத்தகை ஏற்பாடு; permanent lease (செ.அக.).

*[U.qāim > த. காயம்.]*

**காயங்கரை** *kāyaṅkarai,* பெ.(n.) ஓர் ஆறு; a river.

*[காயம் + கரை.]*

இதன் கரையில் பிரமதருமன் எனும் புத்த முனிவன் தவம் செய்து கொண்டிருந்தான்.

**காயங்கள்கதிர்போலாக்கி** *kāyaṅgaḷ-kadir-pōlākki,* பெ.(n.) 1. புளிச்சிறு கீரை; sour-sorrel - *Oxalis coniculata.* 2. உடம்பை இளைக்கச் செய்யும் மருந்து; any medicine or agent reducing the corpulency or the bulk of the human body (சா.அக.).

*[காயங்கள் + கதிர் + போலாக்கி.]*

**காயச்சுரம்** *kāya-c-curam,* பெ.(n.) காயம், சூட்டுப்புண் (விரணம்) இவைகளினால் ஏற்படும் காய்ச்சல்; a fever which follows a wound or injury - *Traumatic fever* (சா.அக.).

*[காயம் + சுரம்.]*

**காய்சண்டிகை** *kāya-caṇḍigai,* பெ.(n.) தேவர் உலகப் பெண்; a celestial woman.

இவள் தன் கணவனுடன் பொதியமலையின் வளம் காணச் சென்றாள். அங்கு விருச்சிகர் என்னும் முனிவர் பொருட்டு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பழுத்து அவர் பசியைப் பன்னிரண்டு ஆண்டு வரை போக்கவல்ல நாவற்கனியைக் காலால் சிதைத்துவிட்டாள். எனவே அம்முனிவர் கொடுத்த சாவிப்பால் (சாபம்) யானைத்தீ என்னும் கொடிய பசி நோயால் வருந்திய இவள் மணிமேகலை தந்த உணவால் பசி நீங்கினாள். பின் தன் உலகம் செல்கையில் விந்தமலை காக்கும் விந்தாகடிகையால் இழுக்கப்பட்டு அவள் வயிற்றில் அடங்கினாள் (அபி.சிந்.).

**காயசலம்** *kāya-šalam,* பெ.(n.) 1. சிறுநீர்; urine. 2. உடம்பினின்று கசியும் வியர்வை நீர்; perspired water (சா.அக.).

*[காயம் + சலம்.]*

**காயசிகிச்சை** *kāya-šigiccai,* பெ.(n.) 1. மருந்துகளை வைத்துச் செய்யும் மருத்துவம்; practice of physic by pure medicine. 2. உடம்பையடுத்த காய்ச்சல், நீரழிவு, ஈழை நோய் முதலியவைகளுக்கு மருந்து கொடுப்பது; treatment of bodily diseases such as fever, diabets, consumption, diarrhoea etc. with the aid of medicine. 3. உடம்பைப் பற்றி உண்டாகும் காற்று (வாதம்) பித்தம், ஈழை நோய்களையும், அவற்றிற்கு உண்டான மருத்துவ முறைகளையும் பற்றிக் கூறும் நூல்; a medical treatise bearing on all diseases caused by the three humours of the system and the treatment relating to each of them (சா.அக.).

*[காயம் + Skt. சிகிச்சை.]*

**காயசிட்சை** *kāya-šiṭcai,* பெ.(n.) **காய சிகிச்சை** பார்க்க; see *kāya-šigiccai* (சா.அக.).

*[காயம் + Skt. சிட்சை.]*

**காயசித்திகணத்திலாக்கி** *kāyašitti-kaṇattilākki,* பெ. (n.) 1. சதுகமரம்; an unknown tree said to be useful in rejuvenation. 2. உடம்பை ஒரு நொடிப்பொழுதில் கெட்டிப்படுத்தும் மருந்து; any medicine or agent tending to

rejuvenate the human system instantaneously (சா.அக.).

*[காயம் + சித்தி + கணத்தில் + ஆக்கு.]*

**காயசித்திநிறத்தி** *kāya-šitti-niṟatti,* பெ.(n.) உடலை இளமையாக்கும் ஒரு மூலிகை (ஆத்திமல்லிகை); a herb used in rojuvenation (சா.அக.).

*[காயம் + சித்தி + நிறத்தி.]*

**காயசித்திமூலிகை** *kāyašitti-mūligai,* பெ.(n.) உடம்பை வலிவடையச் செய்யும் பச்சிலை மருந்து; a rejuvenating herb (சா.அக.).

*[காயம் + சித்தி + மூலிகை.]*

**காயசித்தியடை-தல்** *kāyašitti-y-aḍai-,* செ.கு.வி.(v.i.) உடம்பை நிலைக்கச் செய்தல்; getting the body firmly established (சா.அக.).

*[காயம் + சித்தி + அடை.]*

**காயசித்தியாக்கி** *kāyašitti-y-ākki,* பெ.(n.) 1. சேங்கொட்டை; dhoby's nut - *Semecarpus anacardium*. 2. உடலை நீண்ட காலம் இளமையாக வைக்கும் மருந்து; any medicine or agent promoting longevity (சா.அக.).

*[காயம் + சித்தி + ஆக்கி.]*

**காயசுட்கம்** *kāya-šuṭkam,* பெ.(n.) நிழலில் உலர்த்தல்; drying anything in the shade without exposing it to sunlight (சா.அக.).

*[காயம் + சுட்கம்.]*

**காயத்தழும்பு** *kāya-t-taḻumbu,* பெ.(n.) அடிபட்ட காயத்தினால் ஏற்பட்ட தழும்பு; scar, cicatrix (சா.அக.).

*[காயம் + தழும்பு.]*

**காயகல்பம்** *kāya-kalpam,* பெ.(n.) நீண்ட நாள் இளமையாக வாழ எண்ணி உட்கொள்ளும் மருந்து; elixir; more often in a semi solid form to keep oneself young (க்ரியா.).

*[காயம் + கல்பம்.]*

**காயத்தைக்கல்லாக்கி** *kāyattai-k-kallākki,* பெ.(n.) உடம்பைக் கல்லைப் போல் கெட்டியாக்கும் மருந்து; any medicine tending to strengthen the body making it as hard as a stone (சா.அக.).

*[காயத்தை + கல்லாக்கி.]*

**காயதைக்கற்றூணாக்கி** *kāyattai-k-kaṟṟūṇākki,* பெ.(n.) 1. **காயத்தைக் கல்லாக்கி** பார்க்க; see *kāyattai-k-kallākki.* 2. உடம்பைக் கல் தூணைப் போல் கெட்டியாகச் செய்யும் மருந்து; a medicine rendering the body as strong as a stone pillar (சா.அக.).

*[காயத்தை + கல் + தூணாக்கி.]*

**காயத்தைச்செம்பாக்கி** *kāyattai-c-cembākki,* பெ.(n.) **காயத்தைப் பவளமாக்கி** பார்க்க;see *kāyattai-p-pavaḷamākki* (சா.அக.).

*[காயத்தை + செம்பு + ஆக்கி.]*

**காயத்தைப்பவளமாக்கி** *kāyattai-p-pavaḷamākki,* பெ.(n.) 1. செந்திராய்; a red speicies of tiray. 2. உடம்பைச் செந்நிறமடையச் செய்யும் மருந்து; any medicine lending a red colour to the body (சா.அக.).

*[காயத்தை + பவளமாக்கி.]*

**காயத்தைலம்** *kāya-t-tailam,* பெ.(n.) 1. கடுகு, ஓமம், வெந்தயம், உள்ளி, பெருங்காயம் முதலிய ஐந்து கூட்டுப் பொருட்கள் (ஐங்காயத் தைலம்); the five vegetable stimulants. 2. உடம்பிற்குப் பூசும் எண்ணெய்; any medicated oil used for anointing the body with. 3. பெருங்காயம் சேர்ந்த தைலம்; any oil prepared with

asafoetida as the chief ingredient (சா.அக.).

*[காயம் + Skt. தைலம். திலம்→தைலம்.]*

**காயத்தைவேதிச்சி** *kāyattai-vēdicci,* பெ. (n.) 1. கருப்பு நொச்சிச் செடி; willow leaved justicia, *Justicia gendarussa alias J.vulgaris.* 2. உடம்பைப் பொன்னிறமடையச் செய்யும் மருந்து; any medicine tending to develop a golden lustre inthe body (சா.அக.).

*[காயத்தை + வேதிச்சி.]*

**காயந்தீர்வை** *kāya-n-tirvai,* பெ.(n.) அறுதியிட்டு குறிக்கப்பெற்ற நிலவரி; permanent assessment (செ.அக.).

*[U.qāim> த. காயம்+தீர்வை]*

**காயநிலை** *kāya-nilai,* பெ.(n.) 1. உடம்பின் நிலைமை; condition of the body. 2. காயத்தின் நிலைமை; state of the wound or injury (சா.அக.).

*[காயம் + நிலை.]*

**காயநோய்** *kāya-nōy,* பெ.(n.) 1. உடம்பின் நோய்; bodily disease. 2. காயத்தினால் ஏற்பட்ட நோய்; any disease due to wound or injury - *Traumatopathy* (சா.அக.).

*[காயம் + நோய்.]*

**காயப்படல்** *kāya-p-paḍal,* பெ.(n.) காயமடைதல்; being wounded (சா.அக.).

*[காயம் + படல்.]*

**காயப்படு-த்தல்** *kāya-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) காயம் உண்டாக்கல்; causing or inflicting an injury or wound (சா.அக.).

*[காயம் + படு-.]*

**காயப்பூண்டு** *kāya-p-pūṇḍu,* பெ.(n.) 1. அரிவாள்மணைப் பூடு; sickle leaf - *Sida acuta.* 2. காயத்திற்கு வைத்துக் கட்டும் பூண்டு; a plant bruised and applied to wounds as a curve (சா.அக.).

*[காயம் + பூண்டு.]*

**காயபலம்** *kāya-balam,* பெ.(n.) 1. ஒரு சிறிய மரம்; the name of a small tree found in the North West of Hindustan. *இதன் மணமுள்ள பட்டையும், விதைகளும் மருந்திற்குப் பயன்படும். பழம் தின்பதற்கு உதவும்.* 2. உடம்பின் வலிமை; bodily strength (சா.அக.).

*[காயம் + பலம்.]*

**காயபேதி** *kāya-bēdi,* பெ.(n.) 1. மூவிலைக் குருந்து; a species of kurundu (unidenified) conspicuous by its three leaves. 2. **காயத்தைவேதிச்சி** பார்க்க; see *kāyattai-vēdicci* (சா.அக.).

*[காயம் + Skt.பேதி.]*

**காயம்படு-த்தல்** *kāyam-paḍu-,* செ.கு.வி. (v.i.) காயம் உண்டாக்கல்; inflicting wound (சா.அக.).

*[காயம் + படு-.]*

**காயம்பண்ணல்** *kāyam-paṇṇal,* தொ.பெ. (vbl.n.) 1. பிள்ளைப்பேற்று மருந்து கூட்டல்; preparing medicine for lying in women. 2. புண் உண்டாக்கல்; causing wound (சா.அக.).

*[காயம் + பண்ணல்.]*

**காயம்போடல்** *kāyam-pōḍal,* தொ.பெ. (vbl.n.) பிள்ளைப் பேற்றுக் காலத்தில் பெருங்காயம் சேர்த்து மருந்து செய்தல்; preparing medicine with asafoetida as a chief ingredient for the use of lying-in women (சா.அக.).

*[காயம் + போடல்.]*

**காயம்பௌனாகவுல்** *kāyam-paunākavul,* பெ.(n.) ஏற்பட்ட நிலத்தீர்வையில்,

முக்கால்வாசி நிலையாகச் செலுத்தும் குத்தகை உடன்படிக்கை; a cowle, according to the terms of which three-quarters of the original assessment is permanently payable (செ.அக.).

*[Arab. qaim + Hind. pauna > த.காயம் + பௌனா + கவுல்.]*

**காயம்சமாபந்தி** *kāyam-samā-pandi,* பெ.(n.) நிலையான நிலவரித் திட்டம்; permanent settlement (செ.அக.).

**காயம்சோடி** *kāyam-sōḍi,* பெ. (n.) கொடையாக வழங்கப்பட்ட தீர்வை அறுதியிடப்பட்ட நிலம்; land on a fixed quit-rent not subject to variation with reference to cultivation or produce (செ.அக.).

*[Skt. kāyam+ ஜோடி த. சோடி]*

**காயமடை-தல்** *kāyamaḍai-,* செ.கு.வி.(v.i.) 1. கத்தி முதலிய கருவிகளினால் உடம்பில் தழும்படைதல்; sustaining injury or wound in the body with a knife or other sharp weapons. 2. உடல் இளமையடைதல்; securing eternal youth; attaining success in rejuvenation (சா.அக.).

*[காயம் + அடை-.]*

**காயமாகு-தல்** *kāyamāgu-,* செ.கு.வி.(v.i.) பணி நிரந்தரமாதல்; of job become permanent. *உனக்கு வேலை காயமாயிற்றா?.*

*[காயம் + ஆகு-தல்.]*

**காயமாயம்** *kāyamāyam,* பெ.(n.) உடல் நிலையாமை; the vanishing away of the human body (சா.அக.).

*[காயம் + மாயம்.]*

**காயமாற்றம்** *kāyamāṟṟam,* பெ.(n.) 1. காயத்திற்குச் செய்யும் மருத்துவம்; treatment of a wound. 2. உடலின் மாற்றம்; change of body, as from old to young. 3. பருமையி(தூலத்தி)னின்று நுண்மை (சூக்குமத்திற்)க்கு மாறுகை; changing or transformation of the human body from the physical into the astral state (சா.அக.).

*[காயம் + மாற்றம்.]*

**காயமாற்று-தல்** *kāyamāṟṟu-,* செ.கு.வி. (v.i.) 1. **காமமாற்று-தல்** பார்க்க; see *kāmamāṟṟu-*. 2. உடல் இளமையாதல்; rejuvenating the body. 3. உருமாறல்; assuming a different body (சா.அக.).

*[காயம் + ஆற்றல்.]*

**காயமாற்று-தல்** *kāyamāṟṟu-,* செ.கு.வி. (v.i.) 1. உடம்பில் ஏற்பட்ட புண்களை ஆற்றுதல்; curing or healing the external injuries, Vulneration. 2. உடம்பை ஏமாற்றுதல்; transformation of the human body as from the physical into the subtle state (சா.அக.).

*[காயம் + ஆற்று-. காயம் + மாற்று-.]*

**காயமாற்றுமருந்து** *kāyamāṟṟu-marundu,* பெ.(n.) 1. உடம்பில் பட்ட புண்களை ஆற்றும் மருந்து; a medicine or any plant, drug or preparation useful in the cure of wounds - *Vulnerary* (சா.அக.).

*[காயம் + ஆற்றும் + மருந்து.]*

**காயமாறுங்காலம்** *kāyamāṟuṅkālam,* பெ.(n.) 1. இறப்பு கிட்டிய வேளை; the moments of death. 2. உடலில் ஏற்பட்ட காயம் குணமாகும் காலம்; the period of healing, as of a wound or an injury. 3. உடல் மாற்றமடையுங் காலம்; the period of visible change in the human body. 4. கிழத்தனமடையுங் காலம்; the period of attaining old age (சா.அக.).

*[காயம் + ஆறும் + காலம்.]*

**காயமிருத்தி** *kāyamirutti,* பெ.(n.) 1. சவர்க்காரம்; dhoby's earth. 2. சர்க்கரை வேம்பு; sweet neem. 3. உடலை நீண்ட காலம் நிலை நிறுத்தும் மருந்து; any medicine or agent promoting longevity (சா.அக.).

*[காயம் + இருத்தி.]*

**காயமிறுகல்** *kāyamiṟugal,* பெ.(n.) 1. உடம்பு இறுகுகை; body getting heardened. 2. உடம்பு கெட்டிப்படுகை; invigoration of the system (சா.அக.).

*[காயம் + இறுகல்.]*

**காயமூலிகை** *kāyamūligai,* பெ.(n.) **காய கற்பமூலிகை** பார்க்க; see *kāyakaṟpa-mūligai* (சா.அக.).

**காயமுண்டோன்** *kāyamuṇḍōṉ,* பெ.(n.) காயம்பட்டவன்; wounded person (சா.அக.).

*[காயம் + உண்டோன்.]*

**காயமுருக்கி** *kāyamurukki,* பெ.(n.) 1. உடலை இளைக்கச் செய்யும் நோய்; a disease causing emaciation of the body as consumption. 2. உடம்பை இளைக்கச் செய்யும் மருந்து; any drug or medicine capable of reducing the bulk or causing emaciation of the human body (சா.அக.).

*[காயம் + உருக்கி.]*

**காயல்மரம்** *kāyal-maram,* பெ.(n.) பனிச்சை மரம்; back-water tree - *Diospyros embryopteris* (சா.அக.).

*[காயல் + மரம்.]*

**காயவான்** *kāyavāṉ,* பெ.(n.) 1. காயத்தை இறுத்தியவன் (துறவி); one who rejuvenated the system. 2. காயம் அடைந்தவன்; a wounded man (சா.அக.).

*[காயம் + அவன்]*

**காயவியல்** *kāyaviyal,* பெ.(n.) 1. அவியல் காய்; the baking of vegetable curry in steam. 2. காய்கறி சமையல்; the preparation of vegetable curry (சா.அக.).

*[காய் + அவியல்.]*

**காயல்** *kāyal,* பெ.(n.) காய்ச்சல்; fever

*[காய் – காயல் (வேதல், வெப்பம்.]*

**காயலா** *kāyalā,* பெ.(n.) காய்ச்சல்; fever (செ.அக.). **காயல்** பார்க்க; see kāyal.

*[காயல்→காயலா. U.kāhilā> த. காயலா.]*

**காயவள்ளி** *kāyavaḷḷi,* பெ.(n.) 1. சர்க்கரை வள்ளிக் கிழங்கு; sweet potato - *Ipomaea batatas.* 2. வெற்றிலை வள்ளிக் கிழங்கு; betel yam - *Dioscorea opositifolia.* 3. சீரக வள்ளி; Malacca yam - *Dioscorea bulbifera.* 4. காட்டுக்காய் வள்ளி; granada yam - *Dioscorea sativa* (சா.அக.).

*[காய + வள்ளி.]*

**காயவிலை** *kāyavilai,* பெ.(n.) 1. காயத்திற்கு வைத்துக் கட்டும் இலை; leaf applied to wounds as a curative. 2. காக்கட்டான் இலை; leaf of crow creeper - *clitorea ternatea* (சா.அக.).

*[காய் + இலை.]*

**காயாங்குலைச்செடி** *kāyāṅgulai-c-ceḍi,* பெ.(n.) காயா மரம்; a barren tree (சா.அக.).

*[காயாங்குலை + செடி.]*

**காயாசுவாதம்** *kāyāśuvādam,* பெ.(n.) பிள்ளைப்பேற்றுக் காய்ச்சல்; puerperal fever (சா.அக.).

*[காயா + சுவாதம்.]*

**காயாதிகற்பம்** *kāyādikaṟpam,* பெ.(n.) 1. அமுதம்; nectar. 2. உடலை நெடுநாள் இளமையாக வைத்திருக்க உட் கொள்ளுமோர் மருந்தெண்ணெய்; a medicated oil used for rejuvenation (சா.அக.).

*[காயாதி + கற்பம்.]*

**காயத்தம்** *kāyaštam*, பெ. (n.) 1. கடுக்காய்; galnut. 2. நெல்லிக்காய்; Indian gooseberry - *Emblica offioinalis*. 3. துளசி; holy basil - *Ocimum sanctum*. 4. அசோகு; Asoka tree - *Saraca indica*. 5. தேட் கொடுக்கி; Indian turnsole or Indian heliotrope - *Heliotroium indicum*. 6. கடிச்சை; false kamela - *Casearia tomentosa*. 7. ஒரு பூடு; a plant - *Tizyphus napeca*. 8. கொடிய நஞ்சு; a virulent type of poison. 9. கொடியரசு; wild peepul creeper - *Ficus arnottiana*. 10. ஏலம்; cardamons (சா.அக.).

*[காய + **Skt.** அஸ்தம்.]*

**காயாதிகற்பமூலி** *kāyādikarpa-mūli*, பெ.(n.) 1. சித்தர்கள் கற்ப நூலின்படி நெடுநாள் உடலை இளமையாக வைக்க வேண்டி சாப்பிடும் மூலிகைகள்; drugs taken by siddhars for retaining the body for a long period and thus promoting longevity. 2. சித்தர்கள் நூற்படி கற்ப முறையில் கடுக்காயை ஆதியாகச் சொல்லி வரும் மூலிகைகள்; rejuvenating drugs commencing with galnut, as enumerated in the siddhars science (சா.அக.).

*[காயாதி + கற்பமூலி.]*

**காயாப்பேரிஞ்சு** *kāyā-p-pēriñju*, பெ.(n.) 1. காட்டு பேரிச்சை மரம்; barren date tree - *Phoenix genus*. 2. சீமையீச்சம்; English fern-palm - *Cycus circinalis* (சா.அக.).

*[காயா + பேரிஞ்சு.]*

**காயாரோகணம்** *kāyā-rōganam*, பெ.(n.) **காரோணம்** பார்க்க; see *kārōṇam* (செ.அக.).

*[**Skt.** kāyā-rōhana>த. காயாரோகணம். காயாரோசணம்→காரோணம். காயம் + ஆரோகணம். உடலில் ஏறியிருத்தல்.]*

**காயில்** *kāyil*, பெ.(n.) 1. கடல் நீர் பெருகி நிற்கும் கழிகளுள்ள கரை காயல்; back water. 2. ஒத நீர்க்கரை; seashore. 3. காயல் பட்டினம்; a village in Tirunelvelly District once a famous port the mouth of the Tamaraparani, where marco polo landed (கல்.அக.).

*[காயல் →காயில்.]*

**கார்-த்தல்** *kār-*, செ.கு.வி.(v.i.) உப்புக் கரித்தல்; to be saltish; having saline tase (சா.அக.).

*[கரித்தல் – கார்த்தல்.]*

**கார்க்கவன்** *kārkkavaṉ*, பெ.(n.) ஒரு மாலிய வணிகன்; a vaishnavite merchant.

*[கார் →கார்க்கவன்.]*

இவன் வயிணவன் என்றும் ஒருவருடன் கூடிப் பல வணிகரைக் கொன்று, ஒரு கோவிலில் ஏற்றிய விளக்கைக் காண வயிணவனுடன் முத்தி பெற்றான் (அபி.சிந்.).

**கார்க்கன்** *kārkkaṉ*, பெ.(n.) ஒரு முனிவன்; a saint. *தொண்டை நாட்டில் திருக்காரகத்தில் திருமால் அருள் பெற்றவன் (அபி.சிந்.).*

*[கார் →கார்க்கன்.]*

**கார்க்கோல்** *kār-k-kōl*, பெ.(n.) கார்போகவரிசி; hazel-leaved psorales - *Psoraleacoriflora* (சா.அக.).

*[கார் + கோல்.]*

**கார்க்கோளி** *kār-k-kōḷi*, பெ.(n.) 1. கருப்புகொள்; black horse gram - *Cassia absus*. 2. கருஞ்சீரகம்; nigella-seeds. 3. தேட்கொடுக்கி; Indian turnsole

- *Pandamus Odoratissimus alias Heliotropium indicum.* 4. நிலப்பனை; ground palm - *Curculigo drehioides.* 5. முத்தக்காசு; koray root - *Cyperus rotundus* (சா.அக.).

*[கார் + கோளி.]*

**கார்கரணை** *kār-karaṇai,* பெ.(n.) கருணைக்கிழங்கு (பதார்த்த.415); elephant-yam - *Typhonium orixense* (செ.அக.).

*[காறுகருணை→காறாக்கருணை = சேனைக் கிழங்கு. காறு→காரு→கார்.]*



**கார்கருணை** *kārkaruṇai,* பெ.(n.) **காருகரணை** பார்க்க; see *kārukaraṇai* (சா.அக.).

**கார்காஞ்சிரம்** *kār-kāñjiram,* பெ.(n.) கருப்பு எட்டிப் பூடு; bitter luffa-*Peristrophe bicalyculata.*

*[கார் + காஞ்சிரம்.]*

இதன் அடித்தண்டு அறுகோண வடிவாகும். கிளைகள் உடையது; வெளிறிய சிவப்பு நிற பூக்களைக் கொண்டது. இதன் சமூலத்தை அரிசி களைந்த நீரில் இடித்துப் போட்டு காய்ச்சிய நீரைக் கொடுக்க பாம்புக்கடி குணமாகும் (சா.அக.).

**கார்காத்தார்** *kār-kāttār,* பெ.(n.) **கார் காத்தவேளாளர்** பார்க்க; see *kārkātta-vēḷāḷar* (செ.அக.).

*[கார்காத்தார் = மழையின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்.]*

**கார்காலம்** *kār-kālam,* பெ.(n.) **கார்ப் பருவம்** பார்க்க; see *kār-p-paruvam* (செ.அக.).

*[T. kārukālamu>M. kārkkālam > த. கார் காலம்.]*

**கார்குவளை** *kārkuvaḷai,* பெ.(n.) மழை காலத்தில் பூக்கும் குவளைப் பூ; water-lily flowering in rainy season (சா.அக.).

*[கார் + குவளை.]*

**கார்கை** *kārgai,* பெ.(n.) துவரை; common dholli; red gram - *Cajanus indicus* (சா.அக.).

*[கார் → கார்கை]*

**கார்கோணி** *kārkōṇi,* பெ.(n.) சிறுசெடிவகை (பதார்த்த.263); turnsole - *Heliotropium indicum* (செ.அக.).

*[கார் +கோணி]*

**கார்கோழி** *kār-kōḻi,* பெ. (n.) 1. காட்டுக் கொள்; black horse - gram - *Cassiaabsus.* 2. சீரகவகை (பதார்த்த. 1034); black cumi - *Nigella sativa* (செ.அக.).

*[கார் +கோழி]*

**கார்ப்பவம்** *kārppavam,* பெ.(n.) உணவுக்குரிய ஒருவகைக் கிழங்கு; கருணைக் கிழங்கு; an esculent root known as elephant-foot yam or purple-stalked a dragon - *Dracontium Polyphyllum alias Typhonium trilobatum* (சா.அக.).

*[கார் – கார்ப்பவம்]*

**கார்ப்பான** *kārppāṉa,* பெ. (n.) 1. உறைப்பான; acrid; pungent. 2. உவர்ப்பான; saltish (சா.அக.).

*[கார்ப்பு + ஆன.]*

**கார்முகில்வன்னம்** *kārmugil-vaṉṉam,* பெ.(n.) தீ முறுகல் நஞ்சு; a dark grey coloured arsenic (சா.அக.).

*[கார் + முகில் + வன்னம்.]*

**கார்முகிற்பாடாணம்** *kārmugiṟ-pāḍāṇam,* பெ. (n.) ஒரு வகை வைப்பு நஞ்சு; a prepared arsenic so called from its colour of the clouds (சா.அக.).

*[கார் + முகில் + பாடாணம்.]*

**கார்மேகசாரம்** *kār-mēga-šāram,* பெ.(n.) காசியுப்பு (யாழ்.அக.); a mineral salt (செ.அக.).

*[கார் –மேக + சாரம்.]*

**கார்வங்கம்** *kārvaṅgam,* பெ.(n.) கருவங்கம்; black-lead (சா.அக.).

*[கார் + வங்கம்.]*

**கார்வளங்கொண்டமண்டலம்** *kār-vaḷaṅ-koṇḍa-maṇḍalam,* பெ.(n.) பாண்டி நாட்டில் உள்ள மண்டலங்களுள் ஒன்று; one of the part where in *Pāṇḍiya-nāḍu* (அபி.சிந்.).

*[கார் + வளம் + கொண்ட + மண்டலம்.]*

**காரக்குழம்பு** *kāra-k-kuḻambu,* பெ.(n.) உறைப்பான புளிக்குழம்பு; a kind of hot sauce with a tamarind base.

*[காரம் + குழம்பு.]*

**காரகக்கொம்பு** *kāraga-k-kombu,* பெ.(n.) கருப்பு மாட்டுக் கொம்பு; horn of a black ox (சா.அக.).

*[காரகம் + கொம்பு.]*

**காரகத்தி** *kāragatti,* பெ.(n.) கருப்பகத்தி; black sesbane (சா.அக.).

*[கார் + அகத்தி.]*

**காரகப்பட்டை** *kāraga-p-paṭṭai,* பெ.(n.) 1. வெட்டைச் சூடு அல்லது வெப்பத்தினால் உடம்பின் மேற்காணும் படை நோய்; a disease like eczema found on the surface of the skin in any part of the body due to venereal causes. 2. வெள்ளைநோய்ப்படை; ring-worm. 3. உள்ளங்கை, உள்ளங்காலிற் காணும் படை; red spots on the palms and soles - *Acrodynic erythema* (சா.அக.).

*[காரகம் + பட்டை.]*

**காரகம்** *kāragam,* பெ.(n.) 1. முதலை; crocodile. 2. **காரகப்படை** பார்க்க; see *kāraga-p-paḍai* (சா.அக.).

**காரச்சம்** *kāraccam,* பெ.(n.) அம்மான் பச்சரிசிச் செடிவகை; an annual with erect or procumbent branches - *Euphorbia hirta* (சா.அக.).

*[கார் + அச்சம்.]*

**காரச்சரக்கு** *kāra-c-carakku,* பெ.(n.) 1. சாம்பலுப்பு, பூநீறு முதலிய கடுங்கார உப்பு வகைகள்; caustic substances, such as, caustic potash, caustic soda, fuller's earth etc. 2. கருங்கல் அழிவதால் அம்மண்ணின்று எடுக்கும் காரமான சரக்கு தென்னிந்தியாவில் இக்கார மண் அதிகம்; alkaline drug found in Southern India which is particulary rich in alkaline and earthly minerals, one source of which is decaying granites. 3. தமிழ் மருத்துவத்தில் சொல்லியுள்ள உறைப்பான சரக்குகள்; strong and pungent drugs enumerated in Tamil medicine.

*[காரம் + சரக்கு.]*

**உப்பு வகைகள் :–** 1. அண்டவெண்கரு; albumen. 2. அப்பிரகம்; mica. 3. இரும்பு; iron. 4.கடல்நுரை; sea froth. 5. கல்லுப்பு; sea-salt. 6. காரீயம்; black lead and so on. 7. கிளிஞ்சிலோடு; bivalve-shell. 8. கெவுரி; yellow arsenic. 9. சங்கு; chank. 10.சூடன்; camphor. 11. சூதம்; mercury. 12. தங்கம்; gold. 13. தொட்டி; a kind of arsenic. 14. நாகம்; zinc. 15. பச்சைக் கருப்பூரம்; crude camphor. 16. மூத்திரம்; urine. 17. விந்து; semen. 18. வீரம்; perchloride of mercury. 19. வெடியுப்பு; nitre. 20. வெண்ணெய்; butter (சா.அக.).

**காரச்சிவப்பு** *kāra-c-civappu,* பெ.(n.) புண், புரை, பிளவை முதலியவைகளுக்குப் பயன்படுத்தும் ஒரு வகை சிகப்புக் கடுங்காரத் தண்ணீர்; a red strong and pungent lotion contemplated in Agastya's work used in surgery for washing or cleaning sores, wounds, cancers, carbuncles etc., (சா.அக.).

*[காரம் + சிவப்பு.]*

**காரச்சுண்ணம்** *kāra-c-cunnam,* பெ.(n.) 1. முப்புச் சுண்ணம்; an old name for universal solvent and for a medicine curative of all congestions - *Alcahest.* 2. உடன் சுட்ட சுண்ணாம்பு; unslaked lime. 3. காரமான சுண்ணம்; powerful alkaline compound (சா.அக.).

*[காரம் + சுண்ணம்.]*

**காரச்சூடு** *kāra-c-cūḍu,* பெ.(n.) காரத்தினால் தோலினைச் சுடல்; caustic application; burning or corroding the skin with a caustic substance.

*[காரம் + சூடு.]*

**காரச்சேவு** *kāra-c-cēvu,* பெ.(n.) **காராச் சேவு** பார்க்க; see *kāra-c-cēvu.*

**காரச்சோடம்** *kāra-c-cōḍam,* பெ.(n.) காரச்சோடா உப்பு; caustic soda (சா.அக.).

*[காரம் + சோடம்.]*

**காரச்சோடா** *kāra-c-cōḍā,* பெ.(n.) **காரச்சோடம்** பார்க்க; see *kāra-c-cōḍam* (சா.அக.).

*[காரம் + சோடா.]*

**காரசகரம்** *kārašagaram,* பெ.(n.) ஒரு வகை நஞ்சு மருந்துப் பூடு; an unknown poisonous medical plant (சா.அக.).

*[காரம் + சகரம்.]*

**காரசத்து** *kārašattu,* பெ.(n.) 1. பூநீர் ஆற்றல் (சத்து); sodium. 2. சாம்பல் ஆற்றல்; potash. 3. ஒரு தாது; potassium (சா.அக.).

*[காரம் + சத்து.]*

**காரசாரச்சரக்கு** *kāracāra-c-carakku,* பெ.(n.) 1. உறைப்பான சரக்கு; pungent drug. 2. உப்புச் சரக்கு; alkali and acid drugs (சா.அக.).

*[காரம் + சாரம் + சரக்கு.]*

**காரசாரநீர்** *kārašāra-nīr,* பெ.(n.) பனிக் குடத்து நீர்; fluid of amniotic sac - *Liquor amni* (சா.அக.).

*[காரம்சாரம் + நீர்.]*

**காரசாரநீறு** *kārašāra-nīṟu,* பெ.(n.) பூநீறு; fuller's earth (சா.அக.).

*[காரசாரம் + நீறு.]*

**காரசாரப்பஞ்சபூதம்** *kārašāra-p-pañja pūdam,* பெ.(n.) ஐந்து வகைக் கூறான உப்புப் புளிவகைச் சரக்குகள்; the five kinds of salt and acid drugs divided according to the first principles of the five elements.

*[காரம் + சாரம் + பஞ்ச + பூதம்.]*

**காரப் பஞ்சபூதம்** : 1. வெடியுப்பு; earth, nitre. 2. கல்லுப்பு; water, common salt. 3. வளையலுப்பு; fire, glass gall. 4. சீனம்; air, alum. 5. பூநீறு; sky, fuller's earth (சா.அக.).

**காரசாரமின்மை** *kārašāram-iṉmai,* பெ.(n.) 1. சுவையில்லாமை; tastelessness insipid. 2. உப்பு, புளிப்பு, காரம் இல்லாமை; devoid of the taste of salt, acid and alkali. 3. உறைப்பில்லாமை; devoid of pungency (சா.அக.).

*[காரம் + சாரம் + இன்மை.]*

**காரசாரவுப்பு** *kārašāra-v-uppu,* பெ.(n.) 1. கல்லுப்பு; sea-salt. 2. காரம், சாரம், உப்பு மூன்றும் கூடிய பொருள்; any substance

consisting of atleast all the three kinds, that is alkali, acid and salt. 3. காரம், புளி, உப்புச் சரக்கு வகைகள்; the three kinds of drugs that is alkali, acid, and salt. 4. இருப்பத்தைந்து சரக்குகளான உறைப்பான உப்பு வகைகள்; alkaline salts consisting of 25 drugs.

*[காரம் + சாரம் + உப்பு.]*

**உறைப்பான உப்பு வகையாவன :** 1.அமுரி; urine salt. 2. இணங்கன்; nitre or salt-petre. 3. இந்துப்பு; rock-salt. 4. எவட்சாரம்; another variety of prepared salt. 5. ஏம்பச்சாரம்; an alchemical salt. 6. கடல் நுரை; sea froth. 7. கல்லுப்பு; sea-salt. 8. கற்பூரம்; medicinal camphor. 9. காகிச்சாரம்; benares salt. 10. காய்ச்சு லவணம்; purified nitre. 11. கெந்தி லவணம்; sulphur salt. 12. கோதிலா லவணம்; pure salt. 13. சத்தி சாரம்; a prepared salt. 14. சவட்டுப்பு; salt from fuller's eath. 15. சாரம் அல்லது நவாச்சாரம்; salammoniac. 16. சிந்து லவணம்; sindh salt. 17. சீனம்; alum. 18. சூடன்; ordinary camphor. 19. பிடாலவணம்; a variety of glass gall. 20. பூநீறு காரம்; soda. 21. பொன்னம்பர்; amber. 22. மீனம்பர்; ambergiris. 23. வழலை அல்லது சவர்க்காரம்; fuller's earth. 24. வளையலுப்பு; glass-gall. 25. வெண்காரம்; borax (சா.அக.).

**காரசாராதி** *kārasārāti,* பெ.(n.) 1. காரமும் சாரமும் உள்ள பொருள்; any substance containing the properties of both alkali and acid. 2. உறைப்புள்ள பொருள்; pungent substance. 3. காரசாரம் முதலியவைகள்; acid, alkali etc. (சா.அக.).

*[காரம் + சாரம் – சாராதி.]*

**காரசீரம்** *kārašīram,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin - *Nigellasativa* (சா.அக.).

*[காரம் + சீரம்.]*

**காரசுரம்** *kārašuram,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine (சா.அக.).

**காரணக்காரி** *kāraṇakkāri,* பெ.(n.) வட்டச்சாரணை; purslance leaved trianthema - *Trianthema pentandra* (சா.அக.).

*[காரணம் + காரி]*

**காரணகாரியம்** *kāraṇa-kāriyam,* பெ.(n.) ஒரு செயலின் அடிப்படைக் காரணங்களும் அதன் விளைவுகளும்; cause and effect; object and reason. *இது ஏன் இப்படி நடந்தது என்பதற்கான காரண காரியங்களை அலசிப் பார்க்க வேண்டும்.*

*[காரணம் + காரியம்.]*

**காரணகேவலம்** *kāraṇa-kēvalam,* பெ.(n.) காரணாவத்தை மூன்றனுள் ஆதன்கள் உலகம் அழியக்கூடிய காலம் வரை ஆணவ மலத்தாலே மறைப்பூண்டு கிடப்பது துன்ப நிலை (சிவப்.கட்.15); the major condition of the soul in which it remains inert and united to Aṇavam, awaiting the period of creation, one of three kāraṇāvattai (சா.அக.).

*[காரணம் + Skt. கேவலம்.]*

**காரணசகலம்** *kāraṇa-šagalam,* பெ.(n.) மூன்று வகையான காரணாவத்தைகளுள், ஆதன் உடல் மூலமாக பிறப்பு இறப்புகளுக்கு உட்படும் துன்பநிலை (சிவப்.கட்.15); the major condition of the soul in which it is invested with bodies and subjected to births and deaths, one of three kāraṇāvattai (செ.அக.).

*[காரணம் + Skt. சகலம்.]*

**காரணசத்தி** *kāraṇa-šatti,* பெ.(n.) 1. வெடியுப்பு; saltpetre, Nitrate of Potash. 2. தமிழ் நூலின்படி வெடியுப்பு, சோற்றுப்பு,

கல்லுப்பு, பூ நீர் இவைகளை அமுரியி (சிறுநீரி)ல் இட்டுக் காய்ச்சி எடுக்கும் ஒரு வகைச் செய்யுப்பு; a salt prepared by dissolving a mixture of saltpetre, common salt, rock salt and fuller's earth in a sufficient quantity of urine and the boiling the solution till the water is completely evaporated (சா.அக.).

*[காரணம் + சத்தி.]*

**காரணசரீரம்** *kāraṇa-šarīram,* பெ.(n.) ஐந்து வகை வளராக்கமான (பரிணாமமான) தூல உடம்பிற்குக் காரணமாயுள்ள நுட்பமான உடம்பு; the subtlest and innermost rudiment of the body, causal frame (சா.அக.).

*[காரணம் + **Skt.** சரீரம்.]*

**காரணசிவதத்துவம்** *kāraṇa-šiva-tattuvam,* பெ.(n.) சிவ மெய்ம்மை (தத்துவங்)களுள் ஒன்று; one of the šiva-tattuvam (சி.சி.1, 66, ஞானப்.) (செ.அக.).

*[காரணம் + சிவம் + தத்துவம்.]*

**காரணசுத்தம்** *kāraṇa-šuttam,* பெ.(n.) காரணாவத்தை மூன்றனுள் மல நீக்கம் பெற்ற ஆதன் (ஆன்மா) கடவுளின் திருவடிகளில் ஒன்று சேரும் அவத்தை (சிவப்.கட்.15); the major condition of the soul in which it becomes united to the feet of the Lord, freed (செ.அக.).

*[காரணம் + **Skt.** சுத்தம்.]*

**காரணத்தின்காரணம்** *kāraṇattin-kāraṇam,* பெ.(n.) கரணியத்தின் மறு (பிரதி) கரணியம்; cause against cause - *Causa causati* (சா.அக.).

*[காரணத்தின் + காரணம்.]*

**காரணநோய்** *kāraṇa-nōy,* பெ.(n.) இன்ன வகையில் உண்டானது என்று அறிந்து கொள்ளக்கூடிய நோய்; disease in which the causes can be determined through diagnosis (சா.அக.).

*[காரணம் + நோய்.]*

**காரணம்** *kāraṇam,* பெ.(n.) பிறிதொன்றற் காகாமல் எப்பொழுதும் (நியதமாய்) காரியத்திற்கு முன் நிற்பது; reason which stands as a cause for doing a thing.

**காரணமாயை** *kāraṇa-māyai,* பெ.(n.) உடல் கரணிய இன்ப நுகர்ச்சி போகங்களுக்கு முதற் கரணியமாயுள்ள மாயை (சி.சி.2, 50, நிரம்ப); māyā, as the primordial, original principle from which all manifestations of matter are evolved, and into which they are finally resolved (செ.அக.).

*[காரணம் + **Skt.** மாயை.]*

**காரணமாலையணி** *kāraṇa-mālai-y-aṇi,* பெ. (n.) பின்பின்னாக வருவனவற்றிற்கு, முன்முன்னாக வருவனவற்றைக் காரணங் களாகவேனுங் காரியங்களாக வேனும் சொல்லுதல்; figure of speech in which a chain of causes and corresponding effects occur.

**காரணிக்கம்** *kāraṇikkam,* பெ.(n.) 1. வரலாறு; history. 2. செபமாலை; rosary (செ.அக.).

**காரணியம்** *kāraṇiyam,* பெ.(n.) குதிரைச் செவி; horse-ear or spogel - *Plantago ovata* (சா.அக.).

**காரத்திராட்சரசம்** *kāra-t-tirāṭcarašam,* பெ.(n.) கொடி முந்திரிச் சாற்றில் இருந்து செய்யும் காரமான பருகம்; an ardent drink prepared from vine or fruit juices, Brandy (சா.அக.).

*[காரம் + **Skt.** திராட்ச+ரசம்.]*

**காரத்துணி** *kārattuṇi,* பெ. (n.) 1. புண்களுக்கு இடும் காரமான திரி;

corrosive plaster inserted into wounds. 2. கொப்புளத்தை எழுப்பும் சீலை; plaster producing a vesication - *Blistering plaster.* 3. கெட்ட ஊண், புண், புரை, பிளவை இவைகளுக்கிடும் அல்லது சலாகை கொண்டு செலுத்தும் கார மருந்துச் சீலை; a plaster or lint steeped with or soaked in pungent or acrimonious drugs and applied externally or inserted by a probe into an ulcer with proud flesh, into phagedenous ulcers, sores with sinuses carbuncle etc., Rubefacient plaster. 4. மிளகு, மிளகாய், கடுகு, சாதிக்காய், இலவங்கம் முதலிய காரமான பொருட்கள் சேர்ந்த *காரச்சீலை*; a plaster containing pungent substances such as pepper, capsicum or chilly, mustard, nutmeg, cloves etc., - *Spice plaster* (சா.அக.).

*[காரம் + துணி.]*

**காரத்தூமை** *kāra-t-tūmai,* பெ.(n.) காரமான மாதவிடாய்; menstrual blood with alkaline properties (சா.அக.).

*[காரம் + தூமை.]*

**காரதோசம்** *kāra-tōšam,* பெ.(n.) கார மருந்துகளால் ஏற்பட்ட நஞ்சுக் குற்றம்; slow chemical poisoning (சா.அக.).

*[காரம் + தோசம்.]*

**காரப்பச்சை** *kāra-p-paccai,* பெ.(n.) 1. புண் புரைகளுக்குப் போடும் காரமான பசை; a caustic plaster used for wounds. 2. கம்மாளர்கள் பயன்படுத்தும் குன்றிமணிப் பசை; jeweller's cement or solder prepared by goldsmiths out of crab's eye seed and alum; (சா.அக.).

*[காரம் + பச்சை.]*

**காரப்பற்று** *kāra-p-parru,* பெ.(n.) புண்ணுக்கு இடும் காரமான பற்று; an external application of pungent drugs for wounds (சா.அக.).

*[காரம் + பற்று.]*

**காரப்புகையிலை** *kāra-p-pugai-y-ilai,* பெ.(n.) சுருட்டிற்குப் பயன்படுத்தும் காரமான புகையிலை; tobacco with a strong and pungent smell used chiefly for smoking (சா.அக.).

*[காரம் + புகையிலை.]*

**காரப்புடல்** *kāra-p-pudal,* பெ.(n.) பேய்ப்புடல்; devil's snake gourd or bitter snake-gourd - *Trichosnthus cucumarika* (சா.அக.).

*[காரம் + புடல்.]*



**காரப்பூண்டு** *kāra-p-pūndu,* பெ.(n.) காரப் பொருட்கள் அடங்கிய சாம்பலை எடுப்பதற்காக எரிக்கும் பூண்டு; plants from which ashes are obtained for extracting alkaline substances such as potash, soda etc. (சா.அக.).

*[காரம் + பூண்டு.]*

**காரபத்திரகம்** *kārapattiragam,* பெ.(n.) **காரபத்திரம்** பார்க்க; see *kārapattiram* (சா.அக.).

*[காரம் + பத்திரகம்.]*

**காரபூமி** *kāra-būmi,* பெ.(n.) உவர்மண் நிலம்; soil of fuller's earth (சா.அக.).

*[காரம் + பூமி]*

**காரபேதி** *kārabēdi,* பெ.(n.) குழந்தை களுக்குக் கொடுக்கும் கார மருந்து; pungent drugs given to children (சா.அக.).

*[காரம் + பேதி]*

**காரம்பூ** *kārambū,* பெ.(n.) பூநீறு; fuller's earth (சா.அக.).

*[காரம் + பூ.]*

**காரம்போடல்** *kāram-pōḍal,* தொ.பெ. (vbl.n.) 1. காரமான பொருட்களை இழைத்துப் புண்களுக்கு இடல்; application of caustic to the wound. 2. உணவுக் கறிக்குக் காரம் கூட்டல்; adding pungent stuffs to curry. 3. மாழைகளை உருக்கக் காரம் சேர்த்தல்; adding flux for melting purposes (சா.அக.).

*[காரம் + போடல்.]*

**காரமசாலை** *kāramašālai,* பெ.(n.) 1. காரமுள்ள பொடி; any pungent powder. 2. புகையிலைப் பொடி; tobacco snuff powder. 3. மூக்கிற்குள் இழுத்து நோயைக் கட்டுப்படுத்தப் பயன்படுத்தும் மருந்துப் பொடி; a medicinal powder used for sniffing to alleviate pain in diseases such as smelling salt. 4. கார மருந்து சேர்ந்த பொடி; caustic powder. 5. குழம்பு கறிக்கூட்டுப் பொடி; powder of hot-stuffs used in kitchen, such as condiments, or pungent spices. 6.கச்சக் கருவாட்டுப் பொடி; small dried fish (சா.அக.).

*[காரம் + மசாலை.]*

**காரமாத்திரை** *kāra-māttirai,* பெ.(n.) 1. கட்டி, வீக்கம் இவைகளுக்குப் பூசும் மருந்து; a caustic pill macerated and used as an external application. 2. குழந்தைகளுக்குக் கோழையைப் போக்குவதற்காகக் கொடுக்கும் மான் மணத்தி (கத்தூரி) அல்லது ஆமணத்தி மாத்திரை; a strong pill containing musk or cow's bezoar as chief ingredients, given, internally for children to bring out phlegm (சா.அக.).

*[காரம் + மாத்திரை.]*

**காரமான** *kāramāṉa,* பெ.எ. (adj.) 1. கார்ப் பான; brackish; caustic; corrosive. 2. உறைப்பான; racy piquant (சா.அக.).

*[காரம் + ஆன.]*

**காரமித்துரு** *kāramitturu,* பெ.(n.) கார மருந்துகளுக்கு உதவியாக இருக்கும் மருந்து; drugs friendly to alkaline drugs (சா.அக.).

*[காரம் + Skt. மித்துரு.]*

**காரமுள்ள** *kāramuḷḷa,* பெ.எ. (adj.) காரத்தினால் சதையை அரிக்குந் தன்மையுள்ள; corrosive; alkaloidal (சா.அக.).

*[காரம் + உள்ள.]*

**காரரிசி** *kārariši,* பெ.(n.) மட்டையரிசி; a red course rice (சா.அக.).

*[கார் + அரிசி.]*

**காரல்லி** *kāralli,* பெ.(n.) கருப்பு அல்லி; memecylon - *Carallia integerrima* (சா.அக.).

*[கார் + அல்லி.]*

**காரலவணம்** *kāralavaṇam,* பெ.(n.) கார உப்பு; corrosive salt (சா.அக.).

*[காரம் + லவணம்.]*

**காரவர்க்கம்** *kāra-varkkam,* பெ.(n.) 1. கார வகை; alkalies. 2. காரமான பொருள்; pungent substances (சா.அக.).

*[காரம் + வர்க்கம்]*

**காரவலி** *kāravali,* பெ.(n.) 1. மிதி பாகற்காய்; small spiked bitter cucumber - *Momordica humilis.* 2. பாகற் கொடி; small snake-gourd - *Momordica charantia.* 3. வெற்றிலைக் கொடி; betel wine - *Piper betle* (சா.அக.).

*[காரம் + வல்லி.]*

**காரவன்னம்** *kāra-vannam,* பெ.(n.) குழம்புச் சோறு; boiled rice mixed with sauce (சா.அக.).

*[காரம் + அன்னம்.]*

**காரவுப்பு** *kāra-v-uppu,* பெ.(n.) 1. காரமுள்ள உப்பு; pungent salt. 2. கடுங்கார உப்பு; corrosive salt. 3. நாக்குக்கு உறைப்பான உப்பு; acrimonious or acrid salt (சா.அக.).

*[காரம் + உப்பு.]*

**காரவுருண்டை** *kāra-v-uruṇḍai,* பெ.(n.) குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்களைத் தடுக்கவும், பசி உண்டாக்கவும், பொதுவாகத் தலைமுழுக்காட்டியவுடன் இழைத்துக் கொடுக்கும் ஒரு காரமான மாத்திரை; it is used in every household for treating children as a preventive or as a rule especially when they are given a bath, to prevent coled and promote hunger .

*[காரம் + உருண்டை.]*

இது சீரகம், கருவேப்பிலை, உப்பு, மிளகு, ஓமம் இவைகளைச் சம அளவாக எடுத்து அரைத்துத் திரட்டிய உருண்டை (சா.அக.).

**காரவெல்லம்** *kāra-vellam,* பெ.(n.) 1. **காரவலி** பார்க்க; see *kāravali.* 2. பலாமரம்; jack-fruit tree - *Atrocarpus hirstua.* 3. காரஞ் சேர்ந்த வெல்லம்; jaggery mixed with some acrid substance (சா.அக.).

*[காரம் + வெல்லம்.]*

**காரவெள்ளை** *kāra-veḷḷai,* பெ.(n.) 1. ஒரு வகைச் சுரை; a kind of gourd - *Mimordica charantia.* 2. **காரச்சுண்ணம்** பார்க்க; see *kāra-c-cuṇṇam*(சா.அக.).

*[கார + வெள்ளை.]*

**காரளவம்** *kāraḷavam,* பெ.(n.) கறுப்புக் கடலை; black bengal gram (சா.அக.).

*[கார் + அளவம்.]*

**காரளன்** *kāraḷan,* பெ.(n.) சூரபத்மன் படைத் தலைவரில் ஒருவன்; a army chief in Surapatman's army.

இவன் காட்டெருமை உருக்கொண்ட விகாரனுடன் கூடி, தான் காட்டுப் பன்றி உருவம் கொண்டு விநாயகரிடம் வந்து இறந்தவன் (அபி.சிந்.).

**காரளிகம்** *kāraḷigam,* பெ.(n.) ஒரு முள்செடி; a thorny plant, yellow-berried night shade - *Solanum jacquini alias S.Xanthocarpum* (சா.அக.).

*[கார் + அளிகம்.]*

**காராக்கினி** *kārākkini,* பெ.(n.) நோய் அல்லது நஞ்சைக் கண்டித்தல்; removing poison or the disease (சா.அக.).

*[கார் + அக்கினி.]*

**காராச்சேவு** *kārā-c-cēvu,* பெ.(n.) கடலை மாவுடன் மிளகாய்ப் பொடி கலந்து பிசைந்து அச்சின் மூலம் சிறு குச்சியாகப் பிழிந்து எண்ணெய்யில் இட்டுச் செய்யும் தின் பண்டம்; a kind of snack made from a paste of chickpea flour mixed with chilli powder and fried in oil in the shape of small sticks.

*[காரம் + சேவு.]*

**காராட்டுப்பால்** *kārāṭṭu-p-pāl,* பெ.(n.) வெள்ளாட்டுப் பால்; goat's milk. *இது நோய்களுக்கு உதவும் (சா.அக.).*

*[காராட்டு + பால்.]*

**காராடம்** *kārāḍam,* பெ.(n.) மருக்காரை; common emitic nut - *Randia dumetorum* (சா.அக.).

*[கார் + ஆடம்.]*

**காராம்பசும்பால்** *kārāmpaśumpāl,* பெ.(n.) காராவின் பால்; the milk of the cow with black tongue and udder.

*[கார் + ஆ + Skt. பசு + பால்.]*

இதனால் விழிப்பிணி, கயம் குணம் ஆகும் (சா.அக.).

**காராமணிக்கீரை** *kārāmaṇi-k-kīrai,* பெ.(n.) காராமணிச் செடியின் இலை; edible leaves of cow-gram plant (சா.அக.).

*[காராமணி + கீரை.]*

காட்டு + ஆமணக்கு – காட்டாமணக்கு. காட்டாமணக்கு→ காட்டாமணி→ காடாமணி →காறாமணி→காராமணி.

**காராமையோடு** *kārāmai-y-ōḍu,* பெ.(n.) கருப்பு ஆமை ஓடு; black tortoise-shell (சா.அக.).

*[கார் + ஆமை + ஓடு.]*

**காராயி** *kārāyi,* பெ.(n.) அடி ஈரல் அல்லது மண்ணீரல்; spleen (சா.அக.).

*[கார் + ஆயி.]*

**காராவு** *kārāvu,* பெ.(n.) நாக்கு, மடி, முலைக் காம்பு இவைகள் கருத்த ஆ; a sacred cow, the tongue, the under and nipple which are black (சா.அக.).

*[கார் + ஆ – காரா – காராவு.]*

**காராவெண்ணெய்** *kārāveṇṇey,* பெ.(n.) ஆ வெண்ணெய்; butter from cow's milk (சா.அக.).

*[கார் + ஆ + வெண்ணெய்.]*

**காரான்** *kārāṉ,* பெ.(n.) 1. எருமை; buffalo. 2. **காராவு** பார்க்க; see *kārāvu* (சா.அக.).

*[கார் + ஆன்.]*

**காரானை** *kārāṉai,* பெ.(n.) 1. முகில்; cloud. 2. கறுத்த யானை; black elephant. 3. காட்டுப் பலா; wild durian - *Cullenia excelsa* (சா.அக.).

*[கார் + ஆனை.]*

**காரிக்கண்ணனார்** *kāri-k-kaṇṇaṉār,* பெ.(n.) கடைச்சங்கம் மருவிய புலவர்களில் ஒருவர்; the poet who belonged to the last ancient Śaṅgam (சா.அக.).

காவிரிபூம்பட்டிணத்துக் காரிக்கண்ணனார் என்பவரும் இவரே. வணிகர் குலத்தவர். இவர் பாடிய பாடல்கள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு மற்றும் திருவள்ளுவர் மாலையில் இடம் பெற்றுள்ளன.

**காரிக்கம்** *kārikkam,* பெ.(n.) **காரிக்கன்** பார்க்க; see *kārikkaṉ* (செ.அக.).

**காரிகடுமலை** *kārikaḍumalai,* பெ.(n.) **காரீயமலை** பார்க்க; see *kārīyamalai* (சா.அக.).

*[காரி + கடு + மலை.]*

**காரிகமூலி** *kārigamūli,* பெ.(n.) 1. காட்டு முருங்கை; wild Indian horse radish - *Moringa concanensis.* 2. புனல் முருங்கை; oval-leaved Indigo - *Indigofera trita.* 3. ஆடாதோடை; a kind of plant eaten only by goats - *Justicia adhatoda.* 4. சிறு மாவிலங்கை; forest small lingam tree - *Crataeva religiosa.* 5. பூனை முருங்கை; jungle moringa - *Ormocarpum sennoides.* 6. பவளப் பூலா; wild moringa or coral berry tree - *Bryonia rhamnoides.* 7. கசப்பு முருங்கை; bitter moringa. 8. காரிகத்தைப் போக்கும் மூலிகை; any green herb curing eczema (சா.அக.).

*[காரிகம் + மூலி.]*

**காரிகல்** *kārikal,* பெ.(n.) நத்தைச்சூரி; bristly button-weed - *Spermacoce hispida* (சா.அக.).

*[காரி + கல்.]*

**காரிகா** *kāriga*, பெ.(n.) வறட்சுண்டி; ஆடு தின்னாப் பாளை; worm-killer, woody - *Aristolochia bracteata* (சா.அக.).

**காரிகாலம்** *kārikālam*, பெ.(n.) பாகற்கொடி; small bitter-gourd - *Momordica charantia* (சா.அக.).

*[காரி + காலம்.]*

**காரியாற்றுத்துஞ்சியநெடுங்கிள்ளி** *kāri-y-āṟṟu-t-tuñjiya-neḍuṅkiḷḷi*, பெ.(n.) சோழ பரம்பரையைச் சார்ந்தவன்; a king who belonged to Chōḻā dynasty.

*[காரி + ஆறு + துஞ்சிய + நெடுங்கிள்ளி.]*

உறையூரில் இருந்த இவன் கோவூர்கிழாரால் பாடப்பெற்றவன். சோழன் நலங்கிள்ளிக்குப் பகைவன். இவனை நெடுங்கிள்ளி என்றும் கூறுவர் (அபி.சிந்.).

*[காரி + ஆறு + துஞ்சிய + நெடும் + கிள்ளி.]*

**காரியாறு** *kāri-y-āṟu*, பெ.(n.) ஒரு ஆறு; a river.

*[காரி + ஆறு.]*

நெடுங்கிள்ளி என்னும் சோழன் இறந்த இடம் (அபி.சிந்.).

**காரிரத்தம்** *kārirattam*, பெ.(n.) 1. கருப்பு அரத்தம்; venous blood. 2. ஆடுதின்னாப் பாளை; worm killer, woody - *Aristolochia bracteata* (சா.அக.).

*[காரி + ரத்தம்.]*

**காரிரத்னகவிராயர்** *kāri-ratṉa-kavirāyar*, பெ.(n.) ஒரு மாலியர்; the person who belonged to the vaiṇavā caste.

இவர் திருநெல்வேலி மாவட்டம் ஆழ்வார் திருநகரியை அடுத்த பேறையூரில் சற்றேறக் குறைய 300 ஆண்டுகளுக்கு முன்பிருந்தவர். மாறனலங்காரவுரை, பரிமேலழகர் நுண் பொருண்மாலை முதலியன இயற்றியவர் (அபி.சிந்.).

**காரிழைநாதம்** *kāriḻai-nādam*, பெ.(n.) கந்தகம்; sulphur (செ.அக.).

*[கார் + கழை + நாதம்.]*

**காரிவிகாரி** *kārivigāri*, பெ.(n.) குதிரை; horse (சா.அக.).

*[காரி + விகாரி.]*

**காரிவிதை** *kāri-vidai*, பெ.(n.) கண்டங் கத்திரி விதை; seeds of Indian prickly night shade (சா.அக.).

*[காரி + விதை.]*

**காரீடம்** *kārīḍam*, பெ.(n.) எரு முட்டைக் குவியல்; heap of cow-dung cakes (சா.அக.).

*[கார் + இடம்.]*

**காரீமை** *kārīmai*, பெ. (n.) கொடிவேலி; Ceylon leadwort - *Plumbago zeylanica* (சா.அக.).

*[கார் – காரீமை.]*

**காரீயச்செம்பி** *kārīya-c-cembi*, பெ.(n.) செந்திராய்; a red plant of Mollugo (chick-weed) genus (சா.அக.).

*[காரீயம் + செம்பி.]*

**காரீயச்செம்பு** *kārīya-c-cembu*, பெ.(n.) காரீயத்தோடு மற்றச் சரக்குகளைச் சேர்த்து உருக்கி எடுக்கும் செம்பு; pure copper extracted from black lead by melting it with other ingredients (சா.அக.).

*[காரீயம் + செம்பு.]*

**காரீயசத்துரு** *kārīya-śatturu*, பெ.(n.) கருப்பு ஈயத்தின் பகைச் சரக்குகள்; enimical drugs of black lead.

*[காரீயம் + Skt. சத்துரு.]*

**காரீயத்தின் பகைச் சரக்குகள் :**
1. அண்டம்; fowl's egg or human skull. 2. தகட்டுத்தாள்; mica. 3. அயக் காந்தம்; calcined

oxide of magnetic iron. 4. இராசவர்த்தகம்; lapis lazuli. 5. கல்லுப்பு; sea-salt. 6. கல்நார்; asbestos. 7. கெந்தி; sulphur. 8. கிளிஞ்சில்; bi-valve shell. 9. கெவுரி; yellow arsenic. 10. சாத்திர வேதி;a mineral dissolvent. 11. நண்டு; river-crab. 12. நத்தை; snail. 13. நற் சுண்ணம்; calcium carbonate. 14. நிமிளை; bismuth or antimony. 15. வெடியுப்பு; nitre (சா.அக.).

**காரியமலை** *kāriya-malai,* பெ.(n.) காரீயம் வெட்டி எடுக்கும் மலை; mountain where-from black lead ore is dug out - *Black lead mine* (சா.அக.).

*[கார் + ஈயம் + மலை.]*

**காரீயமித்துரு** *kārīya-mitturu,* பெ.(n.) காரீயத்திற்கு வேண்டிய நட்பான (அனுகூலமான) சரக்குகள்; friendly drugs to black lead.

*[காரீயம் + **Skt.** மித்துரு.]*

1. கல் மதம்; bitumen. 2. இதளியம் (சூதம்); mercury. 3. செம்பு; copper. 4. தவளை; frog. 5. நாகம்; zinc. 6. பூ நாகம்; earth-worm. 7. மயில் (மயூரச்) செம்பு; copper from peacock's feather. 8. வங்கம்; lead. 9. வெள்ளி; silver (சா.அக.).

**காரீரம்** *kārīram,* பெ.(n.) குழலா தொண்டை; common caper - *Capparis aphylla alias C. Sodada.*

*[கார் – காரீரம்]*

இது ஒரு முட்செடி. இதன் பழத்தை உண்ணலாம். கொழுந்தைப் பொடி செய்து கொப்புளிக்கும் மருந்தாகப் பயன்படுத்தலாம். இப்பூடை பச்சையாகவே கொளுத்தினால் கொழுந்து விட்டு எரியும் (சா.அக.).

**காருக்குளம்பு** *kāru-k-kuḷambu,* பெ.(n.) கிராம்பு; clove (சா.அக.).

*[கார் + குளம்பு]*

**காரும்பாதி** *kārumpādi,* பெ.(n.) கரு வண்டு; black beetle (சா.அக.).

*[கார் (கருநிறம்) → காரும்பாதி.]*

**காருராசி** *kāru-rāśi,* பெ.(n.) கொடிவகை (மலை.); snake - gourd (செ.அக.).

**காருகச்சி** *kāru-kacci,* பெ.(n.) கக்கரிக்காய்; field - cucumber - *Cucumis melo* (சா.அக.).

*[கார் – கச்சி]*



**காருடயூகம்** *kāruḍa-yūgam,* பெ.(n.) கருடன் வடிவில் அமைக்கப்படும் ஒரு படைவகுப்பு; garuda-shaped array of an army. *"வீடுமனும் வகுத்தான் கருங்கா ருடயூகம்" (பாரத.மூன்றாம்போ.2) (செ.அக.).*

*[கலுழன்→கருடன்→காருடன்+**Skt.** வியூகம்.]*

**காருடவிஞ்சை** *kāruḍa-viñjai,* பெ.(n.) **காருடவிச்சை**[1] பார்க்க; see *kāruḍa-viccai.* *"காருடவிஞ்சை வித்தகர்" (பெரியபு. திருஞான.1062) (செ.அக.).*

*[கலுழன்→கருடன்→காருடன் + விஞ்சை.]*

**காருடவிச்சை**[1] *kāruḍa-viccai,* பெ.(n.) நஞ்சு மருத்துவம்; art of counteracting poison by charms, incantations, etc. (செ.அக.).

*[கலுழன்→கருடன்→காருடன் + விச்சை.]*

*[வித்தை – விச்சை]*

**காருடவிச்சை**[2] *kāruḍa-viccai,* பெ. (n.) ஏமாற்று விச்சை, ஏமாற்றுக்கலை; legerdemain, jugglery (செ.அக.).

*[தெ.காரடமு→காரடம்→காருடம் + விச்சை.]*

*[வித்தை – விச்சை]*

**காருடன்** *kāruḍaṉ,* பெ.(n.) ஏமாற்றுக்காரன்; jugglar.

*[காரடன்→காருடன்.]*

**காருகத்திரி** *kāru-kattiri,* பெ.(n.) தொண்டையில் விருவிருப்பை உண்டாக்கும் காரற் கத்திரி; a kind of brinjal the taste of which lends irritation to the throat; brinjal with an acrid taste (சா.அக.).

*[காரு + கத்திரி.]*

**காருகத்தொழில்** *kāruga-t-toḻil,* பெ.(n.) நெய்தற்தொழில் (சிலப்.5, 17, உரை); spinning, weaving (செ.அக.).

*[காருகம் + தொழில்.]*

**காருகம்**[1] *kārugam,* பெ.(n.) 1. நெய்யுந் தொழில் (சிலப்.5, 17, உரை); spinning and weaving. 2. ஊழிய வேலை; menial service, servile labour as carrying burdens (செ.அக.).

**காருகம்**[2] *kārugam,* பெ.(n.) இல்லறம்; life of a householder. *"காருக மடந்தை" (மணிமே.23, 105) (செ.அக.).*

**காருகம்**[3] *kārugam,* பெ.(n.) குரோசாணி யோமம்; khorassan ajwaus-*Hyoscyamus niger* (சா.அக.).

**காருகரணை** *kāru-karaṇai,* பெ.(n.) காரற் கருணை; caustic potato; itching yam - *Amorphophallus campanullatus.*

*[காரல் –காரு + கரணை]*

சாப்பிட்டால் தொண்டையில் விறுவிறுப்பை உண்டாக்கும் ஒரு வகைக் கரணைக் கிழங்கு. இதன் வேர் கொடிய காரமானது. சூடுண்டாக்க வெளிப்பூச்சு மருந்தாகப் பயன்படும். இதைத் துண்டித்து, புளியிட்டு ஊறுகாய் போடலாம். பாகிலிட்டுச் சமைத்து நாட்பட வைத்துப் பயன்படுத்தலாம். இதன் நச்சுத் தன்மையைப் போக்க இரண்டு மூன்று முறை கூட வேக வைக்க வேண்டி வரும் (சா.அக.).

**காருகவடி** *kāruga-v-aḍi,* பெ.(n.) கோள்களின் (கிரக) நிலை; position of a planet. *"காருகவடிப் பயின்று" (சிலப்.26: 25) (செ.அக.).*

*[**Skt.** graha > த. காருகம். காருகம் + அடி.]*

**காருகவி** *kārukavi,* பெ.(n.) விடத்தலை; ashy babool; sore-eye plant - *Dichrostachys cinera* (சா.அக.).

**காருகன்**[1] *kārugaṉ,* பெ.(n.) 1. நெசவுத் தொழில் செய்வோன்; weaver. *"கட்டு நுண்வினைக் காருகரிருக்கையும்" (சிலப். 5:17).* 2. துணி வெளுப்பவன் (வண்ணான்); washerman. 3. ஓவியன் (யாழ்.அக.); painter (செ.அக.).

*[காருகம் – காருகன்]*

**காருகன்**[2] *kārugaṉ,* பெ.(n.) கொலை செய்பவன் (சூடா.); murderer (செ.அக.).

**காருடதந்திரம்** *kāruḍa-tandiram,* பெ.(n.) நஞ்சு நீக்கும் மந்திரங்கள் முதலியவற்றைக் கூறும் நூல்; a work dealing with the art of removing poison with charms, etc. (செ.அக.).

*[**Skt.** gāruḍa+ tantra த. காருடதந்திரம்.]*

**காருடபுராணம்** *kāruḍa-purāṇam,* பெ.(n.) ஒரு தொன்ம நூல்; a kind of mythology book (அபி.சிந்.).

**காருடம்**[1] *kārudam,* பெ.(n.) 1. கருட குழுகாயம்; a flock of kites. *"காருடங் கண்ட பாந்தட் கணமென" (கந்தபு. தாரகன்வ.54).* 2. கலைகள் அறுபத்து நான்கனுள் நஞ்சு நீக்கும் கலை; art of removing poison with charms, mantras, etc., invoking Garuda, one of arupattu-nāṅgu kalai. 3. நூற்றி யெட்டு அறிவுப் பகுதிகளுள் (உபநிடதங் களுள்) ஒன்று; name of an Upanisad. 4. பதினெண் தொன்மங்களுள் ஒன்றான கருட புராணம் (கந்தபு.பாயி.55); a chief purāṇa. 5. பச்சைக் கல்; green stone, igneous rock,composed chiefly of felspar and hornblend. *"முத்தந் துப்புக் காருடம்" (திருவிளை.மாணிக்.48) (செ.அக.).*

*[கார் – காருடம்]*

**காருடம்**[2] *kārudam,* பெ.(n.) 1. மருக்காரை; emetic-nut. 2. கொடிவகை; snake-gourd - *Trichosanthes anguina* (செ.அக.).

**காருவன்** *kāruvan,* பெ.(n.) **காருவாகன்** பார்க்க; see *kāruvāgan* (செ.அக.).

**காருவாகன்** *kāruvāgan,* பெ.(n.) துணிகளைத் துவைப்போன் (வண்ணான்); washerman. *"சாணகம் உவர்கார முதலியவற்றால் காருவாகன்..... நின்மாக்கா நிற்பன்" (சி.சி.2, 52, மறை.) (செ.அக.).*

*[கார் + வாகன்.]*

**காருளநாங்கி** *kārulanāṅgi,* பெ. (n.) கொத்தான்; air-plant, air creeper - *Cassytha filliformis* (சா.அக.).

*[காருளம் + நாங்கி.]*

**காருன்னி** *kārunni,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை; worm killer; woody - *Aristolochia bracteata* (சா.அக.).



**காரூடகூடன்** *kārūda-kūdan,* பெ.(n.) ஒரு சிவகூட்டத் தலைவன்; one of the head of celestial host to Śivā (அபி.சிந்.).

**காரைக்கட்டி** *kārai-k-katti,* பெ. (n.) 1. காய்ச்சுக் கட்டி அல்லது பற்காவிக்கட்டி; catechu or black catachu - *Catechu nigrum of chemists.* 2. ஒரு பல் நோய்; a disease of the teeth - *Calcareous deposit.*

*[காரை + கட்டி.]*

இதனால் ஊத்தைக் கட்டி பல்லின் மேல் இருக்கும் பளிங்கு விழுந்து அகலும் (சா.அக.).

**காரைக்கட்டு** *kārai-k-kattu,* பெ.(n.) பல்லின் அடியில் ஊத்தை படர்கை; formation of hard crust or concretion in the teeth (சா.அக.).

*[காரை + கட்டு.]*

**காரைக்கரிக்கான்** *kārai-k-karikkān,* பெ.(n.) உளுந்து; black-gram - *Phaseolus mungoglaber* (சா.அக.).

*[காரை + கரிக்கான்.]*

**காரைத்தேகிகம்** *kārai-t-tēgigam,* பெ.(n.) துத்தி; Indian marshmallow - *Sida mauritiana* (சா.அக.).

**காரைப்பழம்** *kārai-p-palam,* பெ.(n.) காரைச்செடியின் பழம்; honey thorn fruit (சா.அக.)

*[காரை + பழம்.]*

**காரைப்பொடி** *kārai-p-podi,* பெ.(n.) காய்ந்த ஒரு சிறு மீன்; a small bride-fish - *Equuala genus* (சா.அக.).

*[காரை + பொடி.]*

**காரையெலும்பு** *kārai-y-elumbu,* பெ.(n.) கழுத்தின் கீழ் இரு பக்கமும் தோள் மூட்டுவரை அமைந்துள்ள எலும்பு; collar bone.

*[காரை + எலும்பு.]*

**காரைவேர்** *kārai-vēr,* பெ.(n.) 1. காரைச் செடியின் வேர்; root of kārai plant. 2. பல்லினடி; the bottom or root of the teeth at the cemented portions (சா.அக.).

*[காரை + வேர்.]*

**கால்கட்டு** *kāl-kaṭṭu,* பெ.(n.) ஆணுக்குத் திருமணம் மூலமாக ஏற்படுத்தும் கட்டுப்பாடு; fetters of marriage as a check on way-ward sons. *பையன் திருந்த வேண்டும் என்றால் அவனுக்குக் கால்கட்டு போட வேண்டும்.*

*[கால் + கட்டு.]*

**கால்கடுதாசி** *kāl-kāḍudāśi,* பெ.(n.) திடீர் பதவி விலகல் கடிதம்; letter of resignation, especially one written huffily. *அதிகாரி திட்டியதால் கால்கடுதாசியை நீட்டிவிடக் கூடாது.*

*[கால் + கடுதாசி.]*

**கால்கடுப்பு** *kāl-kaḍuppu,* பெ.(n.) 1. கால்குடைச்சல்; boring pain in the leg. 2. காலின் அடிப்பாகம் கடுத்தல்; acute pain in the foot (சா.அக.).

*[கால் + கடுப்பு.]*

**கால்கடுவன்** *kāl-kaḍuvaṉ,* பெ.(n.) குழந்தைகட்கு முழங்காலின் கீழுள்ள கணைக்காலில் கருப்புப் புள்ளிகள் ஏற்பட்டு, குருக்களாகத் திரண்டு துன்புறுத்தும் படையைப் போன்ற ஒரு நோய்; a very rare disease of the shin in children, characterised by dark spots about the size of pin's head evidently vascular, developed in the dilated vessels of the shin.

*[கால் + கடுவன்.]*

இந்நோய் பெண்களுக்கும் வரும் (சா.அக.).

**கால்கரப்பன்** *kāl-karappaṉ,* பெ.(n.) முழங்காலுக்குக் கீழே காணும் கரப்பன்; an assemblage of papules surrounding each leg like a shin-guard (சா.அக.).

*[கால் + கரப்பன்.]*

**கால்கரமசதி** *kāl-kara-maśadi,* பெ.(n.) கைகால்களில் உண்டாகும் களைப்பு; exhaustion of the limbs (சா.அக.).

*[கால் + Skt. கரம் + அசதி.]*

**கால்குடைச்சல்** *kāl-kuḍaiccal,* பெ.(n.) 1. காலில் ஏற்படும் குத்தல் வலி; boring pain in the leg. 2. ஊதை (வாதம்) வலி; rheumatic pain in the leg (சா.அக.).

*[கால் + குடைச்சல்.]*

**கால்கைகுறண்டல்** *kālkai-kuṟaṇḍal,* பெ.(n.) கை கால் சுருட்டி இழுத்தல்; painful spas-modic contractions of the limbs; spasms of the leg and the arm - *Cramps* (சா.அக.).

*[கால் + கை + குறண்டல்.]*

**கால்கைபோட்டுக்கிட–த்தல்** *kālkai-pōṭṭu-k-kiḍa-,* 4 செ.கு.வி. (v.i.) கால் கை நீட்டியபடி மல்லாந்து கிடத்தல்; stretching the body and limbs carelessly in a horizontal po-sition; lying with the limbs stretched - *Sprawl* (சா.அக.).

*[கால் + கை + போட்டு + கிட–.]*

**கால்கைமுடக்கு** *kāl-kai-mudakku,* பெ.(n.) கால் கை எழாமற் செய்யும் ஒரு காலை நோய்; a painful disease as rheumatism affecting the joints; atrophy of the limbs as from paralysis (சா.அக.).

*[கால் + கை + முடக்கு.]*

**கால்கையோச்சல்** *kālkai-y-ōccal,* பெ.(n.) வலிமை இன்மையால் கால் கை சோர்வடைதல்; exhaustion of the limbs through bodily weakness (சா.அக.).

*[கால் + கை + ஓய்ச்சல்–ஓச்சல்.]*

**கால்கைவிட்டுபோ–தல்** *kāl-kai-viṭṭu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) கால் கை சோர்வடைதல்; exhaustion of the limbs (சா.அக.).

*[கால் + கை + விட்டு + போ–தல்.]*

**கால்கைவிழு–தல்** *kāl-kai-viḻu,* 2 செ.கு.வி. (n.) பக்க வலிப்பி (பாரிச வாயுவி)னால் கால் கை சோர்வடைதல்; loss of sensation of the limbs through paralysis (சா.அக.).

*[கால் + கை + விழு–.]*

**கால்சட்டை** *kāl-šaṭṭai,* பெ.(n.) ஆண்கள் அணியக்கூடிய, இரு பகுதிகளாகப் பிரித்துத் தைத்த முழுங்கால் வரை உள்ள உடை; close fitting knee length shorts, Bermudas.

*[கால் + சட்டை.]*

**கால்சீரகம்** *kāl-šīragam,* பெ.(n.) கருஞ் சீரகம்; black cumin - *Nigella sativa* (சா.அக.).

*[கால் + சீரகம். கால் = கருப்பு.]*

**கால்தட்டல்** *kāl-taṭṭal,* பெ.(n.) முட்டிக்கால் தட்டல்; the condition in which the knees come together while the ankles are far apart knock knee - *Genu valgum* (சா.அக.).

*[கால் + தட்டல்.]*

**கால்தடுக்கல்** *kāl-taḍukkal,* தொ.பெ.(n.) கால் இடறுகை; tripping in walking or running, stumble.

*[கால் + தடுக்கல்.]*

**கால்தாபரி** *kāl-tābari,* பெ.(n.) தொடரிப்பூடு; small jujube tree - *Scutia indica* (சா.அக.).

*[கால் + தாபரி.]*

**கால்துரத்தி** *kāl-turatti,* பெ. (n.) ஆதொண்டை; thorny caper - *Capparis horrida alias C.zeylanica* (சா.அக.).

**கால்தோற்றம்** *kāl-toṟṟam,* பெ.(n.) பிள்ளைப் பேற்றின் போது குழந்தையின் கால் வெளிக் காணல்; version which causes the feet to present - *Podalic version* (சா.அக.).

*[கால் + தோற்றம்.]*

**கால்நடுக்கம்** *kāl-naḍukkam,* பெ.(n.) கிழத் தன்மையாலும், வலிமை இன்மையாலும் காலிற் காணும் நடுக்கம்; trembling of the leg due to old age or weakness (சா.அக.).

*[கால் + நடுக்கம்.]*

**கால்நடுக்குவாதம்** *kāl-naḍukku,* பெ.(n.) கால் கை எப்பொழுதும் உதறும்படிச் செய்து, நடக்க முடியாமல் தள்ளாடச் செய்யும் நரம்பைப் பற்றிய ஊதை (வாத) நோய்; a nervous disease marked by a continuous trembling of the limbs, rigidity of the muscles and difficulty in maintaining one's balance while walking; shaking palsy - *Paralysis agitans* (சா.அக.).

*[கால் + நடுக்கு + **Skt.** வாதம்.]*

**கால்நடையாக** *kāl-naḍaiyāga,* வி.அ.(adv.) கால்களால் நடந்து; on foot. *நாட்டுப்புற மக்கள் எவ்வளவு தொலைவானாலும் கால்நடையாகவே செல்வார்கள்.*

*[கால் + நடை + ஆக.]*

**கால்நிறு-த்தல்** *kāl-niṟu-*, 5 செ.கு.வி.(v.i.) காற்றுறை உண்டாக்கும் உணவு வகைகளை நிறுத்தி பதவுணா (பத்தியம்) உண்ணல்; observance and regulation of diet by avoiding flatulent substances (சா.அக.).

*[கால் + நிறு-த்தல்.]*

**கால்பாதசன்னிவாதம்** *kāl-pāda-šanni-vādam*, பெ.(n.) முழங்காலின் கீழ் நெருப்பைப் போல் சூடுண்டாகி, குத்தலும், வலியும் ஏற்பட்டு நடக்க முடியாமல் செய்யும் ஒரு இழுப்பு (வாத) நோய்; a kind of rheumatism affecting the lower limb with inflammation and acute pain and rendering the patient unable to walk (சா.அக.).

*[கால் + பாதம் + **Skt.** சன்னிவாதம்.]*

**கால்பானம்** *kāl-pāṉam*, பெ.(n.) மருந்திற்குப் பயன்படுத்தும் பிசின்; resin or gum used in medicine - *Galbanum* (சா.அக.).

*[கால் + பானம்.]*

**கால்பிடிப்பு** *kāl-piḍippu*, பெ.(n.) இழுப்பு நோயால் கால் இழுத்துப் பிடிக்கை; stiffening or contraction of the muscles of the leg due to rheumatism or other nervous affections (சா.அக.).

*[கால் + பிடிப்பு.]*

**கால்பிளவு** *kāl-piḷavu*, பெ.(n.) குதிகால் வெடிப்பு; a crack or fissure in the heel (சா.அக.).

*[கால் + பிளவு.]*

இது சில வேளை நடக்க முடியாமற் செய்யும் நோய் (சா.அக.).

**கால்பின்னல்** *kāl-piṉṉal*, பெ.(n.) 1. வலிமை இன்மையாலோ அச்சத்தாலோ கால் முறுக்கிக் கொள்ளல்; becoming cross-legged through weakness, nervous debility or fear. 2. முட்டிக்கால் தட்டல்; to be knock-kneed (சா.அக.).

*[கால் + பின்னல்.]*

**கால்புள்ளி** *kāl-puḷḷi*, பெ.(n.) பொருள் புரியும்படி நிறுத்திப் படிக்க சொற்றொடரின் இடையில் அல்லது பல இலக்க எண்களில் எண்ணின் இடத்தை அறிய இடப்படும் குறி; comma.

*[கால் + புள்ளி.]*

**கால்பேனம்** *kāl-pēṉam*, பெ.(n.) **கால்பானம்** பார்க்க; see *kāl-pāṉam* (சா.அக.).

**கால்மண்டலம்** *kāl-maṇḍalam*, பெ.(n.) நாற்பது அல்லது நாற்பத்தி எட்டு நாளின் கால் பாகம் அதாவது பத்து அல்லது பன்னிரண்டு நாள்; a period of 10 or 12 days (சா.அக.).

*[கால் + மண்டலம்.]*

**கால்மாட்டுவைத்தியன்** *kālmāṭṭu-vaittiyaṉ*, பெ. (n.) போலி மருத்துவன்; a pretender to medical skill - *Quack* (சா.அக.).

*[கால்மாட்டு + **Skt.** வைத்தியன்.]*

**கால்மாடுதலைமாடாக்கல்** *kālmāḍu-talai-māḍākkal*, தொ.பெ. (vbn.) 1. படுக்கையில் கால் பக்கத்தைத் தலைப்பக்கமாக மாற்றல்; taking an inverted position while lying on the bed. 2. பொருட்கள் ஒழுங்கற்ற நிலையில் இருக்கை; disordered, disarrange (சா.அக.).

*[கால் + மாடு + தலை + மாடு + ஆக்கல்.]*

**கால்மாடுதலைமாடு** *kālmāḍu-talaimāḍu*, பெ. (n.) அடிமுடி மாற்றம்; upside down - *Topsy-turvy* (சா.அக.).

*[கால் + மாடு + தலைமாடு.]*

**கால்முடக்குவாதம்** *kāl-muḍakku-vādam*, பெ.(n.) காலை முடக்கி நொண்டியாக அல்லது படுத்தபடியாகக் கிடக்கச் செய்யும்

ஓர் ஊதை நோய்; a kind of rheumatism causing stiffening of the joints or prostration of the limbs thereby rendering the patient unable to get up from his bed (சா.அக.).

*[கால் + முடக்கு + Skt. வாதம்.]*

**கால்முடங்குவாதம்** *kāl-mudangu-vādam,* பெ.(n.) நரம்பை இழுத்து மேலே சுருட்டி வைப்பதனால் கால் குடைச்சல் கண்டு நடக்க முடியாமற் செய்யும் ஓர் ஊதை நோய்; a kind of nervous contraction of the legs with acute pain rendering the patient unable to walk (சா.அக.).

*[கால் + முடங்கு + Skt. வாதம்.]*

**கால்முடம்** *kāl-mudam,* பெ.(n.) கால் நொண்டி; lameness - *Talipes* (சா.அக.).

*[கால் + முடம்.]*

**கால்முளி** *kāl-muli,* பெ.(n.) காற்பரடு; ankle (சா.அக.).

*[கால் + முளி.]*

**கால்முறி–தல்** *kāl-muri-,* 4 செ.கு.வி.(v.i.) கால் முறிவு; fracture of the leg (சா.அக.).

*[கால் + முறி–.]*

**கால்மேசு** *kāl-mēšu,* பெ.(n.) காலில் அணியும் உறைவகை; socks or stockings (செ.அக.).

*[கால் + மேசு.]*

**கால்வலி** *kāl-vali,* பெ.(n.) காலில் உண்டாகும் வலி; pain in the leg (சா.அக.).

*[கால் + வலி.]*

**கால்வாங்கு–தல்** *kāl-vāngu-,* செ.கு.வி. (v.i.) 1. இறத்தல்; to die. 2. காற்று வாங்கல்; enjoy to the breeze (சா.அக.).

*[கால் + வாங்கு–தல்.]*

**கால்வாய்க்குப்போ–தல்** *kālvāykku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல்; easing, stooling (சா.அக.).

*[கால்வாய்க்கு + போ–தல்.]*

**கால்விருத்தி** *kāl-virutti,* பெ.(n.) பொரும்பிலி (ஒரு பயற்றஞ் செடி); a cereal plant (சா.அக.).

**கால்வீக்கம்** *kāl-vīkkam,* பெ.(n.) பொதுவாகச் சூட்டினால் ஏற்படும் வீக்கம்; swelling of the leg generally due to inflamation of wound or injury.

*[கால் + வீக்கம்.]*

வேறுவகைக் கரணியங்களாலும் காலில் வீக்கம் ஏற்படும். அவை :

1. வெள்ளை நோய் நீரால் காலில் உண்டாகும் நீங்காத வீக்கம்.

2. இழுப்பு நோயால் காலிற் காணும் வீக்கம்.

3. பாண்டு நோயினால் காலில் பித்தநீர் இறங்கிக் காணும் வீக்கம்.

4. பெண்கள் கருவுற்ற காலத்தில் காணும் வீக்கம்.

5. பெண்களுக்கு மாதவிடாய் ஓயும் காலத்தில் காணும் வீக்கம்.

6. பெண்களுக்கு மாதவிடாய் சரியாகக் காணாமல் தடைப்படுங் காலத்திற் காணும் வீக்கம்.

7. சொறி, கரப்பானால் காணும் வீக்கம்.

8. நச்சுக் காய்ச்சலினால் வயிற்றில் காய்ச்சல் கட்டி ஏற்படுவதினால் காணும் வீக்கம்.

9. வலிமையின்மை, சோகை, நச்சுக் காய்ச்சல் முதலிய கரணங்களை முன்னிட்டுக் காணும் வீக்கம் (சா.அக.).

**காலக்கிரமநோய்** *kālakkirama-nōy,* பெ. (n.) நாளடைவில் வரும் நோய்கள்; diseases occurring in course of time, age, etc. (சா.அக.).

*[காலம் + கிரமம் + நோய்.]*

**காலகம்** *kālagam,* பெ.(n.) மரவகை (மலை.); marking-nut tree - *Semecarpus anacardium* (செ.அக.).

**காலகவி** *kāla-kavi,* பெ.(n.) பிரகலாதனின் குமரன் விரோசநன் மகன்; son of virosana.

*[கால + கவி.]*

விளாமரமாக இருந்து கண்ணன், பலராமனால் இறந்தவன் (அபி.சிந்.).

**காலகார்முகன்** *kāla-kār-mugaṉ,* பெ.(n.) அரக்கன் சுமாலியின் மகன்; son of a giant Šumāli (அபி.சிந்.).

*[கால + கார் + முகன்.]*

**காலகாலசோழன்** *kāla-kāla-cōḻaṉ,* பெ.(n.) சுந்தரச்சோழன் மகன்; the son of Šundara-c-cōḻaṉ.

*[காலகால + சோழன்.]*

**காலகாலன்** *kāla-kālaṉ,* பெ.(n.) சிவன்; Šivā, as one who subdued yamā. *"கால காலனைக் கம்பனெம்மானை" (தேவா.1048, 1) (செ.அக.).*

*[காலன் + காலன்.]*

**காலகேது** *kāla-kēdu,* பெ.(n.) பாதாளத்தில் உள்ள அரக்கன்; giant who live in abyss hell.

*[காலன் + கேது.]*

**காலகௌசிகன்** *kāla-kaušigaṉ,* பெ.(n.) காசியில் இருந்த ஒரு மறையோன்; the Brahmin who lived in kāši.

இவன் விசுவாமித்திரனால் ஏவப்பட்டுச் சந்திரமதியை விலைக்கு வாங்கியவன். இவனுக்குக் காளகண்டன் என்ற பெயரும் உண்டு (அபி.சிந்.).

**காலங்காட்டிலும்** *kālaṅ-kāṭṭilum,* வி.எ. (adv.) விடியற்காலையில்; early in the morning (செ.அக.).

*[காலம் + காட்டிலும்.]*

**காலங்கார்த்தல்** *kālaṅkārttal,* பெ.(n.) விடியற்பொழுது; the break of day as the first appearance of light in the morning (சா.அக.).

*[காலம் + கார்த்தல் (புலர்தல்).]*

**காலசங்கதி** *kāla-šaṅgadi,* பெ.(n.) நடப்புச் செய்தி; current news, events of the day (செ.அக.).

*[காலம் + Skt. சங்கதி.]*

**காலசங்கை** *kāla-šaṅgai,* பெ. (n.) 1. மதிப்பிடப்பட்ட (உத்தேச) கால அளவு; approximate time, as guessed. 2. காலக் கணக்கு; reckoning of time. 3. குறித்த கால அளவு கடந்து போதல் (காலாவதி); specified period, time-limit (செ.அக.).

*[காலம் + Skt. சங்கை.]*

**காலசாகம்** *kālašāgam,* பெ. (n.) 1. கறிவேப்பிலை; curry leaf - *Murraya koenigii.* 2. துளசி; holy basil (சா.அக.).

**காலசாலி** *kālašāli,* பெ.(n.) கறுப்பரிசி; black rice (சா.அக.).

*[கால்→ கால + சாலி. கால் = கருப்பு.]*

**காலசிக்குவம்** *kālašikkuvam,* பெ.(n.) கறுப்பு நாக்கு; black tongue (சா.அக.).

*[கால் + சிக்குவம். கால் = கருநிறம்.]*

**காலசிங்கி** *kālašiṅgi,* பெ.(n.) தவளை நெய்யை மயிற் துத்தத்தில் தடவி அதனின்று இறக்கிய எண்ணெயுடன் கெந்தி, காரம், நாபி, சாரம் முதலிய சரக்குகளும் சேர்த்துக் குழப்பிய மருந்து; an ointment prepared by mixing sulphur, borax, aconite, sal ammoniac etc. with the medicated oil extracted by steeping blue vitriol in frog's ghee (சா.அக.).

*[கால + சிங்கி.]*

**காலசித்தன்** *kāla-šittaṉ,* பெ. (n.) சூரபதுமனின் அமைச்சன்; minister of Šūrapadmaṉ (அபி.சிந்.).

*[கால + சித்தன்.]*

**காலசூத்திரம்** *kāla-šūttiram,* பெ.(n.) ஒரு நரகம்; a hell. *"காலசூத்திர நரகிடை வீழ்த்தினார்" (குற்றா.தல.கவுற்சன.68) (செ.அக.).*

**காலசெயமதம்** *kālašeyamadam,* பெ.(n.) தயிர்; curd (சா.அக.).

**காலசேயம்** *kāla-šēyam,* பெ.(n.) மோர் (பிங்.); buttermilk (செ.அக.).

**காலஞானம்** *kāla-ñāṉam,* பெ. (n.) சிவபெருமான் மலைமகளுக்கு அருளிய தாகக் கதைகளில் கூறப்படும் மருத்துவ

முறைகளடங்கிய ஒரு நூல்; a treatise on medicine, said to have been preached by Šiva to Malai-magaḷ (சா.அக.).

*[கால + ஞானம்.]*

**காலடிமண்** *kālaḍi-maṇ,* பெ.(n.) பாதத்தின் அடியினால் பதிந்த மண்; the mud impressed or trampled by human feet.

*[காலடி + மண்.]*

இது மந்திரவினைக்குப் பயன்படும் (சா.அக.).

**காலத்துரத்தி** *kāla-t-turatti,* பெ.(n.) ஆதொண்டை; thorny caper - *Capparis horrida alias C.Zeylanica* (சா.அக.).

*[காலம் + துரத்தி.]*

**காலதத்துவம்** *kāla-tattuvam,* பெ.(n.) தன் இன்பங்களை (போகம்) அளக்கும் காலம் என்னும் தூய உண்மை (சுத்தாசுத்த தத்துவம்) (சி.போ.பா.2, 2, பக்.144); Categeory of time, which determines the duration of soul's experiences, one of seven Šuttā-Šutta-tattuvam (செ.அக.).

**காலதருமம்** *kāla-tarumam,* பெ.(n.) காலவியல்பு; spirit of the age (செ.அக.).

*[காலம் + **Skt.** தருமம்.]*

**காலதானம்** *kāla-dāṉam,* பெ. (n.) இறப்பிலிருந்து மீளுமாறு (உய்யுமாறு) காலனுக்கு அன்புடன் செய்யும் கொடை (திவ்.நான்மு.52, வ்யா, அரும்.); gifts to propitiate yama to avert death (செ.அக.).

*[**Skt.** kāla + dāṉa > த. காலதானம்.]*

**காலதிண்டுகம்** *kāla-tiṇḍugam,* பெ.(n.) கருங்காலி; a black variety of ebony - *Diospyros ebenum* (சா.அக.).

*[காலம் + திண்டுகம்.]*

**காலதேசவர்த்தமானம்** *kāla-dēša-varttamāṉam,* பெ. (n.) கால இடங்களின் நிலைமை; time, place and circumstance, milieu, environment, surrounding circumstances (செ.அக.).

*[காலம் + **Skt.** தேசம் + வர்த்தமானம்.]*

**காலதேவன்** *kāla-dēvaṉ,* பெ.(n.) கூற்றுவன் (யமன்); god of death.

*[காலம் + தேவன்.]*

**காலப்பிரசவம்** *kāla-p-pirašavam,* பெ.(n.) 1. காலமுறைப்படி உண்டாகும் பிள்ளைப்பேறு; child-birth taking place after full time pregnancy, as opposed to *agāla-p-pirašavam.* 2. துன்பமான பிள்ளைப்பேறு; protracted or tedious labour (சா.அக.).

*[காலம் + **Skt.** பிரசவம்.]*

**காலப்பிரமம்** *kāla-p-piramam,* பெ. (n.) காலமாகிய பரம்பொருள்; time,as the Supreme Being (செ.அக.).

*[காலம் + **Skt.** பிரமம்.]*

**காலப்போக்கில்** *kāla-p-pōkkil,* வி.அ.(adv.) காலம் செல்லச் செல்ல; in the course of time. *சில நகரங்கள் காலப்போக்கில் புதையுண்டன. இந்தக் கோயிலைப் பற்றிப் பல கட்டுக்கதைகள் காலப்போக்கில் வளர்ந்து விட்டன.*

*[காலம் + போக்கில்.]*

**காலபரிச்சேதம்** *kāla-pari-c-cēdam,* பெ. (n.) 1. காலத்தால் ஒரு பொருளை அளவிடுகை; determination or ascertainment of anything from time. *"ஒரு காலத்துண் டின்றொருகாலத் தெனுங் காலபரிச்சேதம்" (வேதா.சூ.36).* 2. கால வரையறை; time-limitation (செ.அக.).

*[காலம் + **Skt.** பரிச்சேதம்.]*

**காலபரிபாகம்** *kāla-paribāgam,* பெ.(n.) காலத்தின் முதிர்ச்சி நிலை; fulness of time (செ.அக.).

*[காலம் + **Skt.** பரிபாகம்.]*

**காலபலம்** *kālapalam,* பெ.(n.) கருவுற்ற காலத்தையும், பிறந்த நேரத்தையும், பருவ காலத்தையும் முன்னிட்டு கோள்களின் நிலைப்படி ஒருவருக்கேற்படும் நன்மை தீமைகள்; one's fortune, health or otherwise as determined according to the disposition of the planets during the time of conception, or at the time of one's birth or at the approach of the different stages of life during one's life-time (சா.அக.).

*[காலம் + பலம்.]*

**காலபுட்பம்** *kālaputpam,* பெ.(n.) நன்னாரி; Indian sarsaparilla - *Hemidesmns indicus* (சா.அக.).

*[காலம் + **Skt.** புட்பம்.]*

**காலபேதவிரேசனம்** *kālapēdavirēšanam,* பெ. (n.) கோடை, மழை, பனி முதலிய காலங்களுக்குத் தக்கவாறு வயிற்றுப் போக்கிற்குக் கொடுக்கும் முறையான மருந்துகள்; purgatives prescribed upon due consideration to the weather conditions such as summer, rainy or dew season prevailing at the time (சா.அக.).

*[காலம் + **Skt.** பேதவிரேசனம்.]*

**காலபேதி** *kāla-pēdi,* பெ. (n.) 1. காலத்தை ஒட்டி உண்டாகும் வயிற்றுப்போக்கு; purgation or diarrhoea occuring to climatic condition. 2. உமட்டலும் வயிற்றுப்போக்கும்; Cholera (சா.அக.).

*[காலம் + பேதி.]*

**காலபைரவரசம்** *kāla-pairavarašam,* பெ. (n.) யமனும் கண்டு அஞ்சும்படியான மருந்து; an all healing drug at the efficacy of which even yama, the god of death is overawed (சா.அக.).

*[காலம் + **Skt.** பைரவரசம்.]*

**காலபோசனம்** *kāla-bōšanam,* பெ.(n.) அந்தந்த காலத்தில் தவறாமல் எடுத்துக் கொள்ளும் உணவு; timely meal (செ.அக.).

*[காலம் + **Skt.** போசனம்.]*

**காலம்கடத்து-தல்** *kālam-kadattu-,* 5 செ.கு.வி. (v.i.) வேண்டுமென்றே சுணக்கம் (தாமதம்) செய்தல்; delay; protract. *ஏன் தேர்வுக்குப் பணம் கட்டாமல் காலம் கடத்துகிறாய்?*

*[காலம் + கடத்து-தல்.]*

**காலம்காலமாக** *kālam-kālamāga,* வி.அ. (adv.) நீண்ட நெடுங்காலமாக; for ages, alons *காலம் காலமாகக் காவிரி ஓடிக் கொண்டு தான் இருக்கிறது.*

*[காலம் + காலம் + ஆக.]*

**காலம்செல்-தல்** *kālam-cel-,* 13 செ.கு.வி. (v.i.) இறப்பை மங்கல வழக்காகக் கூறும் முறை; euphemistically way of telling a death; pass away. *அவர் எந்த ஆண்டு காலம் சென்றார்?*

*[காலம் + செல்-தல்.]*

**காலம்தள்ளு-தல்** *kālam-tallu-,* 5 செ.கு.வி. (v.i.) ஏதேனும் ஒரு வசதிக் குறைவுடன் மகிழ்ச்சி இல்லாமல் வாழ்க்கை நடத்துதல்; lead a difficult life as a result of deprivation; get on. *வட இந்தியாவில் இருக்கும்வரை ஈரட்டி (ரொட்டியைச்) சாப்பிட்டே காலம் தள்ள வேண்டியதாயிற்று. இனிமேலும் உன்னோடு காலம் தள்ள முடியாது.*

*[காலம் + தள்ளு-தல்.]*

**காலம்தாழ்த்து-தல்** *kālam-tālttu-,* 5 செ.கு.வி. (v.i.) **காலம்கடத்து-தல்** பார்க்க; see *kālam-kadattu-.*

*[காலம் + தாழ்த்து-தல்.]*

**காலம்நெருங்கல்** *kālam-neruṅgal*, பெ.(n.) 1. சாவு ஏற்படுதல்; approach of death. 2. வாழ்நாள் முடிதல்; reaching the end of one's life time (சா.அக.).

*[காலம் + நெருங்கல்.]*

**காலம்முடி-தல்** *kālam-muḍi-*, 4 செ.கு.வி. (v.i.) வாணாள் (ஆயுள்) முடிதல்; completion of one's life-time (சா.அக.).

*[காலம் + முடி-தல்.]*

**காலமரணம்** *kāla-maraṇam*, பெ.(n.) 1. கால ஒழுங்கின்படி ஏற்படும் இயல்பான சாவு; natural death. 2. கொடிய சாவு; cruel death (சா.அக.).

*[காலம் + மரணம்.]*

**காலமாய்விடல்** *kālamāy-viḍal*, பெ.(n.) சாவு; dying; reaching the end of one's life time (சா.அக.).

*[காலமாய் + விடல்.]*

**காலமிருத்து** *kāla-miruttu*, பெ.(n.) குறித்த (விதித்த) காலத்தில் இறக்கை; death at the destined moment, dist. tr. akāla-mirutu (செ.அக.).

*[காலம் + இருத்து.]*

**காலமிழ்தண்ணீர்** *kālamiḻ-taṇṇīr*, பெ.(n.) 1. கணுக்கால் மறையும் அளவுள்ள தண்ணீர்; water sufficient to cover the ankle portions. 2. கணுக்கால் வரை உள்ள தண்ணீர்; water ankle-deep (சா.அக.).

**மறுவ.** முழங்கால்தண்ணீர்

*[கால் + அமிழ் + தண்ணீர்.]*

**காலமீரம்** *kālamīram*, பெ.(n.) பளிங்கு; crystal glass (சா.அக.).

**காலமுட்டி** *kālamuṭṭi*, பெ.(n.) ஒரு நோய்; an unknown disease (சா.அக.).

*[கால + முட்டி.]*

**காலமுனி** *kāla-muṉi*, பெ.(n.) ஒரு முனிவர்; a saint (அபி.சிந்.).

*[காலம் + முனி.]*

**கால்மூன்று** *kālamūṉṟu*, பெ. (n.) 1. காலை, பகல், மாலை எனும் முக்காலம்; past, present and future. 2. இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனும் முப்பொழுது; morning, noon and evening. 3. வெயில், மழை, பனிக் காலங்கள்; the three seasons of the year as summer, rainy and winter. (சா.அக.).

*[காலம் + மூன்று.]*

**காலமே** *kālamē*, வி.எ.(adv.) விடியற் காலையில்; in the morning, early, bed-times (செ.அக.).

*[காலை→காலமே.]*

**காலமேகம்** *kāla-mēgam*, பெ. (n.) காளமேகம்; black cloud appearing at the end of a yaga. *"காலமேக மென்னவே யிடித்ததிர்ந்து" (திருவாலவா.36:19)* (செ.அக.).

*[கால் = கருப்பு. கால் + மேகம்.]*

**காலமேகாட்டியும்** *kālamē-kāṭṭiyum*, வி.எ. (adv.) அதிகாலையில்; very early in the morning dawn. (செ.அக.).

*[காலை→காலமே + காட்டியும். (கொ.வ)]*

**காலமேசி** *kālamēśi*, பெ.(n.) ஒரு கொடி; an unknown creeper (சா.அக.).

*[காலம் + மேசி.]*

**காலமேசம்** *kāla-mēśam*, பெ. (n.) சாயமூட்டும் வேர் (சாய வேர்); madder of Bengal; chay root - *Olden landia umbellata* (சா.அக.).

*[காலம் + மேசம். (மூலம் – மூசம் – மேசம்)]*

**காலயந்திரம்** *kāla-yandiram*, பெ. (n.) 1. காலத்தைக் குறிக்கும் இயந்திரம்; a machine or other instrument for measuring or showing the progress of time; clock or watch, time-piece.

2. காலக்குறியறி இயந்திரம்; an apparatus for registering atmospheric phenomena - *Meteorograph*. 3. காலச் சக்கரம்; cycle of time (சா.அக.).

*[காலம் + யந்திரம்.]*

**காலராத்திரி** *kāla-rāttiri,* பெ.(n.) 1. உலக (கற்ப) முடிவிலுள்ள நீண்ட இரவு; the long night that envelopes the whole world at its final destruction. 2. துன்பம் விளைக்கும் இரவு; night of distress, as seemingly long. 3. துர்க்கா சத்தியின் ஒரு வேறுபாடு (பேதம்); one of the manifestations of Durga (செ.அக.).

*[காலம் + இராத்திரி.]*

**காலலவணம்** *kāla-lavaṇam,* பெ.(n.) கறுப்பு உப்பு; black facitions and purgation salt (சா.அக.).

*[கால் + இலவணம்.]*

**காலலோகம்** *kāla-lōgam,* பெ.(n.) 1. இரும்பு; iron. 2. கருப்பு மாழை; any black metal (சா.அக.).

*[கால் = கருப்பு. கால் + **Skt.** உலோகம்.]*

**காலவர்த்தமானம்** *kāla-varttamāṉam,* பெ.(n.) நடப்புச் செய்தி; events of the time (செ.அக.).

*[காலம் + **Skt.** வர்த்தமானம்.]*

**காலவரை** *kāla-varai,* பெ.(n.) **காலவரையறை** பார்க்க; see *kāla-varaiyaṟai* (செ.அக.).

*[காலம் + வரை.]*

**காலவன்** *kālavaṉ,* பெ. (n.) 1. விசுவாமித்திரனின் சீடர்களில் ஒருவன்; student of Višuvāmitrā. 2. கேமதரிசியின் தந்தையின் அமைச்சன்; minister of Kematarisi's father. 3. ஒரு முனிவர்; a saint. 4. ஒரு பார்ப்பனச் சிறுவன்; brahmin boy (அபி.சிந்.).

**காலவாதிமதம்** *kālavādi-madam,* பெ.(n.) ஒரு வகை மதம்; a kind of religion.

*[காலவாதி + மதம்.]*

உலகில் உள்ள எல்லா உயிர்களும் காலத்தில் இறந்து மீண்டும் பிறந்துவரச் செய்தலானும், இத்தனை அகவை சென்றதென்று வாழ்நாளைக் (ஆண்டுகளைக்) கூறுதலானும், காலத்திற்கு மூப்பு, இளமை இல்லாமையானும், எல்லாம் தன்னால் அழியத் தான் அழியாதிருத்தலாலும் காலமே கடவுள் என்பர். இம்மதத்தவர் நோக்கில் முத்தி என்பது காலங்கடந்த கடவுளை அடைவது என்பதாகும் (அபி.சிந்.).

*[காலம் + வாதி + மதம்.]*

**காலவேகன்** *kāla-vēgaṉ,* பெ. (n.) சிவன் கூட்டத்தவரில் ஒருவன்; the person who one of the Siva's celestial hosts (அபி.சிந்.).

**காலனி** *kālaṉi,* பெ.(n.) ஒரு நகரத்தின் புதிய குடியிருப்புப் பகுதி; in a town cluster of houses forming a new settlement; colony. *வங்கி அதிகாரிகள் காலனி; பஞ்சாலைத் தொழிலாளர் காலனி.*

*[**E.** colony - **த.** காலனி.]*

**காலனியாட்சி** *kālaṉi-y-āṭci,* பெ.(n.) **காலனியாதிக்கம்** பார்க்க; see *kālaṉi-y-ādikkam.*

*[காலனி + ஆட்சி.]*

**காலனியாதிக்கம்** *kālaṉi-y-ādikkam,* பெ. (n.) ஒரு நாட்டைத்தன் ஆளுமைக்கு உட்படுத்திய வல்லரசு நாடு நடத்துகிற ஆட்சி; colonial rule. அடக்குமுறை ஆட்சி பார்க்க; see adakkumuṟai āṭci.

*[காலனி + ஆதிக்கம்.]*

**காலனுசாரம்** *kālaṉušāram,* பெ.(n.) மஞ்சள் நிறமான சந்தனம்; yellow sandal (சா.அக.).

*[கால் + அனு + சாரம்.]*

**காலாக்கினிருத்திரன்** *kālākkiṉi-ruttiraṉ,* பெ.(n.) அழிக்குந் தொழிலைச் செய்யும் சிவன்; Rudra, the god of destruction, one of the presiding deities in the lower regions (செ.அக.).

*[காலன் + **Skt.** அக்கினி + உருத்திரன்.]*

**காலாகாலத்தில்** *kālā-kālattil,* வி.எ.(adv.) 1. உரிய வேளையில்; at the proper time. *"காலாகாலத்தில் உண்ண வேண்டும்".* 2. சிற்சில வேளையில்; occasionally, not frequently. *"அது காலாகாலத்தில் கிடைக்கும்" (செ.அக.).*

*[காலம் →காலா + காலத்தில்.]*

**காலாசுரம்** *kālāśuram,* பெ.(n.) 1. ஒரு கொடிய வெப்ப நோய்; black fever. 2. நச்சுக் காய்ச்சல்; a chronic malarial fever - *Kala azar* (சா.அக.).

*[கால + சுரம்.]*

**காலாஞ்சரம்** *kālāñjaram,* பெ. (n.) தூய்மை யான நீர்த்துறை (தீர்த்தம்); sacred bathing-ghat (அபி.சிந்.).

**மறுவ. படித்துறை**

**காலாட்படை** *kālāṭ-paḍai,* பெ.(n.) தரைப்படை; infantry.

*[கால் + ஆள் + படை.]*

**காலாண்டு** *kālāṇḍu,* பெ.(n.) மூன்று மாதங்களுக்கு ஒரு முறை; quarter; quarterly. *ஒவ்வொரு காலாண்டிலும் தேர்வு நடக்கும்.*

*[கால் + ஆண்டு.]*

**காலாதீதப்படல்** *kālātīda-p-paḍal,* தொ.பெ.(vbl.n.) காலமுறை தவறுதல்; time-barred; barred by limitation of time; exceeding in time (சா.அக.).

*[காலம் + அதீதம் + படல்.]*

**காலாமிந்தர்** *kālā-mīndar,* பெ.(n.) கரிக்கட்டை மரம்; black tree - *Diospyros hirsuta* (சா.அக.).

**காலாயம்** *kālāyam,* பெ.(n.) நீர்; water (சா.அக.).

*[கால்வாய் + அம்]*

**காலிகவிப்புருதி** *kāligavippurudi,* பெ.(n.) நாள்பட்ட புண்கட்டி (இங்.வை.298); chronic abscess (செ.அக.).

*[காலம் → காலிகம் + விப்புருதி.]*

**காலிசெய்-தல்** *kāli-cey-,* 1 செ.கு.வி.(v.i.) 1. குடியிருக்கும் வீடு, அறை முதலியவற்றை விட்டு வெளியேறுகை; இருக்கும் இடத்தை அல்லது இருக்கையை விட்டு நீங்கிப் போதல்; vacate house, room, etc. clear off; clear out. *வாடகை கொடுக்கவில்லை என்று வீட்டைக் காலி செய்யச் சொன்னார். பேசிக்கொண்டே நிற்காதே, இடத்தைக் காலி செய்.* 2. பானை, குவளை முதலியவற்றில் உள்ள பொருள்களை இல்லாமல் செய்தல், இல்லாமல் ஆக்குதல்; empty a container etc., of its contents. *கலயத்தில் இருந்த கள் முழுவதையும் காலி செய்துவிட்டான்.* 3. ஒன்றைத் தீர்த்தல்; செலவழித்தல்; spend; finish. *ஒரே நாளில் பணத்தையெல்லாம் காலி செய்துவிட்டான்.*

*[காலி + செய்-தல்.]*

**காலிதம்** *kālidam,* பெ.(n.) படிகாரம்; alum (சா.அக.).

**காலியா-தல்** *kāli-y-ā-,* 6 செ.கு.வி.(v.i.) வீடு, பதவி முதலியன ஒருவரும் இன்றி ஒழிந்திருக்கை; to become vacant, as a situation, a house (செ.அக.).

*[U. Khālī > த. காலி.]*

**காலிலிப்பிண்டம்** *kālili-p-piṇḍam,* பெ.(n.) கால் அல்லது பாதம் இல்லாமலும் உறுப்புகள் கேடானதுமான கருப்பிண்டம்; a monster foetus without the lower limbs or feet *Apeduous fetus; Apus* (சா.அக.).

*[கால் + இலி + பிண்டம்.]*

**காலிறங்கு-தல்** *kāliṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வாயு இறங்குதல்; descent of wind causing inflammation as in scrotum. 2. யானைக்கால் உண்டாதல்; development of elephantiasis of the leg. 3. காலில் இருந்து கெட்ட நீர் இறங்குதல்; accumulation of morbid fluid in the tissues of the leg; edema of the leg (சா.அக.).

*[கால் + இறங்கு-தல்.]*

**காலிறுதி** *kāliṟudi,* பெ.(n.) விளையாட்டுப் போட்டியில் அரை இறுதி ஆட்டத்திற்குத் தகுதி பெற விளையாடும் ஆட்டம்; quarter final.

*[கால் + இறுதி.]*

**காலியகம்** *kāliyagam,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric - *Coscinium fenestratum* (சா.அக.).

**காலுதறுவாதம்** *kāludaṟu-vādam,* பெ.(n.) **காலூன்றுவாதம்** பார்க்க; see *kālūṉṟu-vādam* (சா.அக.).

*[கால் + உதறு + வாதம்]*

**காலுறை** *kāluṟai,* பெ.(n.) பாதத்திலிருந்து முழங்காலுக்குச் சற்றுக் கீழ்வரை இறுக்க மாக அணியப்படும், நூலால் பின்னப்பட்ட இரட்டை உறை; pair of socks; stockings.

*[கால் + உறை.]*

**காலூறல்** *kālūṟal,* பெ.(n.) 1. வெள்ளை நோயினால் உள்ளங் காலில் ஏற்படும் தினவு; itching of the sole from venereal causes. 2. பயணச் செலவை (பிரயாணம்) முன்னிட்டு உள்ளங் காலில் ஏற்படும் அரிப்பு; an itching causally felt in the sole as a sign of impending journey (சா.அக.).

*[கால் + ஊறல்.]*

**காலூறு-தல்** *kālūṟu-,* செ.கு.வி. (v.i.) 1. பயணக் குறியாகக் காலில் தினவுண்டாதல்; to feel an itching sensation in feet, as foreboding an impending journey. 2. ஓடியாடப் பிள்ளைகள் விருப்பப்படல்; to be impatient, restless to walk, run or move about, as a child (செ.அக.).

மறுவ. கால்மரப்பு

*[கால் + ஊறு-தல்.]*

**காலூன்றல்** *kālūṉṟal,* தொ.பெ.(vbl.n.) காலைப் பதிய வைத்தல்; setting one's foot firmly on the ground (சா.அக.).

*[கால் + ஊன்றல்.]*

**காலெரிச்சல்** *kālericcal,* பெ.(n.) **காலெரிவு** பார்க்க; see *kālerivu* (சா.அக.).

*[கால் + எரிச்சல்.]*

**காலெரிவு** *kālerivu,* பெ.(n.) காய்ச்சலாலும், பித்த மிகுதியாலும் ஏற்படும் பாத எரிச்சல்; burning sensation of the sole arising from biliousness or excessive secretion of bile or due to excessive fever (சா.அக.).

*[கால் + எரிவு.]*

**காலெலும்பு** *kālelumbu,* பெ.(n.) தொடையில் இருந்து பாதம் வரை உள்ள பல எலும்புகள்; the bones in each of the limbs from the thigh to the foot.

*[கால் + எலும்பு.]*

**பல எலும்புகளாவன:–** 1. சரவென்பு; the outer and lesser bone of the leg - *Fibula.* 2. தொடை எலும்பு; thigh-bone - *Femur.* 3. நளகம்; shin-bone - *Tibia.* 4. பாதஎலும்பு; bones of the feet. 5. முழந்தாட் சில்; knee-cap - *Patella* (சா.அக.).

**காலேயநாளம்** *kālēya-nāḷam,* பெ.(n.) ஈரல் இருக்கும் நாடி; the vein in the liver - *Hepaticvein* (சா.அக.).

*[காலேய + நாளம்.]*

**காலைக்கலவி** *kālai-k-kalavi,* பெ.(n.) காலை நேரத்தில் செய்யும் புணர்ச்சி; sexual intercourse indulged early in the morning (சா.அக.).

*[காலை + கலவி.]*

**காலைக்கறி** *kālai-k-kaṟi,* பெ.(n.) காலையில் கொள்ளும் உணவுக் கறி வகைகள்; vegetables prescribed to be taken as diet in the mornings as distinguished from irā-k-kaṟi (சா.அக.).

*[காலை + கறி.]*

**காலைக்குடியன்** *kālai-k-kuḍiyaṉ,* பெ.(n.) விடியற்காலையில் வெறும் வயிற்றில் கள், சாராயம் இவைகளைக் குடிப்பவன்; one who addicted to drink toddy, liquor etc. early in the morning in empty stomach (சா.அக.).

*[காலை + குடியன்.]*

**காலைக்கோட்டிவிகாரம்** *kālai-k-kōṭṭi-vigāram,* பெ. (n.) நரம்பு மண்டிலம் ஆறனுள் ஒன்று (ஆறாதாரத்தில் ஒன்று); one of the six nerve-centres in the human body.

இது அறிவிற்கு எட்டாத இடம். இது வயிற்றுக்கு மேலுள்ள நெஞ்சகத்தில் முக்கோண வடிவாய் 12 இதழ்களுடையனவாய்த் தோன்றும் (சா.அக.).

**காலைப்பிடி-த்தல்** *kālai-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) உதவியை எப்படியும் பெற்றுவிட வேண்டும் என்ற நோக்கத்துடன் மனதை இளகச் செய்யும் அளவுக்குக் கெஞ்சுதல்; மிகவும் பணிந்து வேண்டுதல்; go down on one's knees for favour; cringe. *உதவி வேண்டுமானால் காலைப் பிடிக்கவும் தயாராக இருப்பான்.*

*[காலை + பிடி-த்தல்.]*

**காலைப்புசிப்பு** *kālai-p-puśippu,* பெ.(n.) 1. காலை உணவு; morning food; break fast. 2. காலையிற் கொள்ளும் பதவுணா; morning diet taken by patients (சா.அக.).

*[காலை + புசிப்பு.]*

**காலைப்போசனம்** *kālai-p-pōśaṉam,* பெ. (n.) **காலைப்புசிப்பு** பார்க்க; see *kālai-p-puśippu* (சா.அக.).

*[காலை + போசனம்.]*

**காலைமூத்திரம்** *kālai-mūttiram,* பெ.(n.) உணவினால் வேறுபடாமல், தூங்கி எழுந்தவுடன் வெளிப்படும் சிறுநீர்; urine passed after a night's rest and so not influenced by food or drink - *Urinasanguinis* (சா.அக.).

*[காலை + மூத்திரம்.]*

**காலைவாரு-தல்** *kālai-vāru-,* 5 செ.கு.வி. (v.i.) தனக்குச் சார்பா (சாதகமா)க இருக்கும் என்று நினைத்திருக்கையில் ஏமாற்றும் முறையில் அமைந்து விடுதல்; கை விடுதல்; let down; pull the rug from under one's feet. *பல இலக்கம் செலவில் தொடங்கிய தொழில் அவரைக் காலை வாரி விட்டது.*

*[காலை + வாரு-தல்.]*

**காலொட்டல்** *kāloṭṭal,* பெ.(n.) 1. பொய்க்கால்; false leg. 2. பொய்க்கால் சேர்த்தல்; attaching a false leg. 3. கால் சுடுதல்; burning of the feet (சா.அக.).

*[கால் + ஒட்டல்.]*

**காலோசிதம்** *kālōśidam,* பெ.(n.) காலத்திற்கு ஏற்றது; that which is suited to time as clothing, food etc. (சா.அக.).

*[கால் + ஒசிதம்.]*

**காலோட்டு-தல்** *kālōṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) மூச்சு வரும்படி செய்தல்; inducing artificial respiration (சா.அக.).

*[கால் + ஓட்டு-தல்.]*

**காலோட்டுவாதம்** *kālōṭṭu-vādam,* பெ.(n.) மூச்சு திணரும்படி செய்யும் இழுப்பு நோய்; rheumatism marked by difficulty of respiration (சா.அக.).

*[கால் + ஓட்டு +* ***Skt.*** *வாதம்.]*

**காலோடுகழி–தல்** *kālōḍu-kaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) அடக்க முடியாமல் காலில் படும்படி நின்றபடியே மலங்கழித்தல்; purging even before one has time to squat being urged wtih troublesome pertina city (சா.அக.).

*[காலோடு + கழி–தல்.]*

**காலோத்திரம்** *kālōttiram,* பெ.(n.) உலோத்திர மரப் பட்டை; lodhra bark (சா.அக.).

**காவடியெடு–த்தல்** *kāvaḍi-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) உயர் நிலையில் உள்ள ஒருவரைப் பார்ப்பதற்காகப் பலமுறை போக நேரிடுதல்; make repeated calls at someons's place. *அமைச்சரைப் பார்க்க எத்தனை முறை காவடியெடுக்க வேண்டி யிருக்கிறது.*

*[காவடி + எடு–த்தல்.]*

**காவல்துறை** *kāval-tuṟai,* பெ.(n.) சட்டம் ஒழுங்கை நிலை நாட்டுவதற்காக அரசு ஏற்படுத்தியுள்ள அமைப்பு; the police department.

*[காவல் + துறை.]*

**காவல்தெய்வம்** *kāval-teyvam,* பெ.(n.) எல்லைப்புறத்திலிருந்து ஊரைக் காத்து வரும் தெய்வம்; deity guarding the village.

*[காவல் + தெய்வம்.]*

**காவல்நிலையம்** *kāval-nilaiyam,* பெ.(n.) சட்டம் ஒழுங்கை நிலைநாட்டுவதற்காக ஒரு ஊரில் அல்லது நகரத்தின் பல பிரிவுகளில் இருக்கும் காவலர்கள் பணிபுரியும் அலுவலகம்; police station.

*[காவல் + நிலையம்.]*

**காவலர்** *kāvalar,* பெ.(n.) 1. சட்டம் ஒழுங்கை நிலை நிறுத்தும் அரசுப் பணியாளர்; policeman. 2. காவலாளி; security guard. *வனத்துறையில் காவலர் வேலைக்கு ஆள் எடுக்கிறார்கள்.*

*[காவல் →காவலர்.]*

**காவலில்வை–த்தல்** *kāvalil-vai-,* 4 செ.கு.வி. (v.i.) குற்றம் சாட்டப்பட்டவரை உசாவுதற் (விசாரணைக்)கு முன் சிறையில் வைத்தல்; keep under detention; keep in gool. *குற்றம் சாட்டப்பட்டவரைப் பதினைந்து நாள் காவலில் வைக்க அறமன்றத் தலைவர் ஆணையிட்டார்.*

*[காவலில் + வை–த்தல்.]*

**காவளை** *kāvaḷai,* பெ.(n.) 1. பேய்த்தும்பை; devil leuces - *Leucas linifolia.* 2. தைவேளை; five-leaved cleome - *Cleome pentaphylla* alias *Galaga maxima.* 3. பூண்டின் இறுதிப் பெயர்; plant's second term. 4. **காவளைச் சுக்கான்** பார்க்க; see *kāvaḷai-c-cukkāṉ* (சா.அக.).

*[காவாளை – காவளை.]*



**காவளைச்சுக்கான்** *kāvaḷai-c-cukkāṉ,* பெ.(n.) கருஞ்சுக்கான்; black lime stone (சா.அக.).

*[காவளை + சுக்கான்.]*

**காவற்கட்டு** *kāvar-kattu,* பெ.(n.) 1. காவல் செய்வதற்குரிய கட்டுப்பாடு; custom regulating village-watch. 2. காவலாளர்க்கு ஊதியமாகப் பணத்திற்குப் பதிலாகக் கதிரைக்கட்டாகக் கொடுக்கும் முற்றூட்டு (மானியம்); bundle of paddy sheaves given to watchmen as dues (செ.அக.).

*[காவல் + கட்டு.]*

**காவற்கட்டை** *kāvar-kattai,* பெ. (n.) 1. மகவு ஈன்ற பெண்டிர்க்குக் காவலாக எரிக்கப்படும் விறகுக் கட்டை; a log of wood kept burning to ward off the female demon korri from a woman in child birth. 2. காவலுக்காகக் குடிசையின் பக்கத்து வைத்து எரிக்கும் விறகு; clump of wood kept burning throughout the night near a patrol-hut (செ.அக.).

*[காவல் + கட்டை.]*

**காவற்கடவுள்** *kāvar-kadavul,* பெ.(n.) திருமால்; Višṇu, as preserver of the world (செ.அக.).

*[காவல் + கடவுள்.]*

**காவற்கணிகை** *kāvar-kanigai,* பெ.(n.) பழங்காலத்தில் இருந்த ஆடற்குலப் பெண் (களத்தாடுங் கூத்தி) (சிலப்.5:50); a class of dancing-girls (செ.அக.).

*[காவற்–கணிகை.]*

**காவற்கப்பல்** *kāvar-kappal,* பெ.(n.) காவல் வேலை செய்யுங் கப்பல்; guard-ship, reconnoitering vessel (செ.அக.).

*[காவல் + கப்பல்.]*

**காவற்கலி** *kāvar-kali,* பெ.(n.) வாழை (மலை.); plantain (செ.அக.).

**காவற்காடு** *kāvar-kādu,* பெ. (n.) 1. பழங்காலத்தில் கோட்டையைச் சுற்றிலும் பாதுகாப்பின் பொருட்டு வளர்க்கப்படும் காடு (தொல்.பொருள்.65, உரை); jungle or forest serving as defence. 2.அரசாங்கத்தினரால் பாதுகாக்கப்படுங் காடு; reserved forest (செ.அக.).

*[காவல் + காடு.]*

**காவற்குலிகம்** *kāvar-kuligam,* பெ.(n.) 1. திப்பிலி; long-pepper - *Piper longum.* 2. நாவல்மரம்; jaumoon tree - *Eugenia jambolana* (சா.அக.).

*[காவல் + குலிகம்.]*

**காவற்கூடம்** *kāvar-kūdam,* பெ. (n.) சிறைச்சாலை; prison house (செ.அக.).

*[காவல் + கூடம்.]*

**காவற்கூடு** *kāvar-kūdu,* பெ.(n.) காவலாளர் தங்கும் இடம்; sentry box (செ.அக.).

*[காவல் + கூடு.]*

**காவற்சாலை** *kāvar-šālai,* பெ. (n.) **காவற்கூடம்** பார்க்க; see *kāvar-kūdam.* *"வலிதிற் காவற் சாலையிலாக்கினார்கள்" (திருவாத.பு.திருப்பெருந்.119) (செ.அக.).*

*[காவல் + சாலை]*

**காவற்சோலை** *kāvar-šōlai,* பெ.(n.) அரசர் முதலியோர் விளையாடுவதற்குரிய பூஞ் சோலை (சிலப்.14:127, உரை); royal park or grove, as guarded (செ.அக.).

*[காவல் + சோலை.]*

**காவற்படை** *kāvar-padai,* பெ. (n.) மெய் காவல் படை (யாழ்.அக.); body-guard.

*[காவல் + படை.]*

**காவற்பிரிவு** *kāvar-pirivu,* பெ.(n.) தலைவன் நாடு காவற்பொருட்டுத் தலைவியைப் பிரியும் பிரிவு (திருக்கோ.312, தலைப்பு); major theme which describes the husband's parting from his wife to defend his country (செ.அக.).

*[காவல் + பிரிவு.]*

**காவற்புரி** *kāvaṟ-puri,* பெ.(n.) 1. வயலில் பயிர்களுக்குக் காவலாக வைக்கோலால் செய்து வைக்கப்படும் பாவை; scare-crow made of twisted or plaited straw. 2. அறுவடைக்குப் பின், நெற்குவியலின் மேல் பேய், பூதம் போன்றவவை அணுகாமல் தடுக்க இடும் வைக்கோற் பழுதை; straw rope thrown over a heap of grain in a field to protect it from demons (செ.அக.).

**மறுவ. சோளக்காட்டுப் பொம்மை**

*[காவல் + புரி.]*

**காவற்பெண்** *kāvaṟpeṉ,* பெ.(n.) வளர்ப்புத் தாய் அல்லது செவிலி; nurse (சா.அக.).

*[காவல் + பெண்.]*

**காவற்பெண்டு** *kāvaṟ-peṇḍu,* பெ.(n.) 1. கடைக்கழகக்காலத் தலைவியைச் சிறுவயது முதல் வளர்க்கும் மாற்றாந்தாய் (செவிலித் தாய்) (சிலப்.29, காவற்பெண்டு சொல்.); nurse. 2. கழகக் காலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவருள் ஒருவர் (புறநா.86); an ancient poetess, author of a poem in puṟaṉāṉūṟu (செ.அக.).

*[காவல் + பெண்டு.]*

**காவற்பேறு** *kāvaṟ-pēṟu,* பெ.(n.) ஊர்க் காவலுக்காகக் கொடுக்கும் வரி (M.E.R. 262 of 1925); cess collected for paying the village-watchmen (செ.அக.).

*[காவல் + பேறு.]*

**காவற்றண்டனை** *kāvaṟṟaṇḍaṉai,* பெ.(n.) சிறையிலிடுந் தண்டனை; sentence of imprisonment (செ.அக.).

*[காவல் + தண்டனை.]*

**காவற்றலம்** *kāvaṟṟalam,* பெ.(n.) சிறைச்சாலை; prison, gaol (செ.அக.).

*[காவல் + தலம்.]*

**காவற்றெய்வதம்** *kāvaṟṟeyvadam,* பெ.(n.) காக்குந் தெய்வம்; tutelary deity. *"காவற்றெய்வதங் கண்டுவந் தெய்தி" (மணிமே.25:159) (செ.அக.).*

*[காவல் + தெய்வதம்.]*

**காவன்முல்லைப்பூதனார்** *kāvaṉ-mullai-p-pūdaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்களில் ஒருவர்; the poet who belonged to the ancient saṅgam period.

*[காவல் + முல்லை + பூதன் + ஆர்.]*

இவரது இயற்பெயர் பூதன். காவன்முல்லை, புறத்திணைக்குட்பட்ட ஒரு துறை. அத்துறையைப் பாடினமையால் காவன்முல்லைப் பூதனார் என்று அழைக்கப்பட்டார்.

**காவனை** *kāvaṉai,* பெ.(n.) காட்டு மல்லிகை; wild jasmine - *Jasminum angustifolium* (சா.அக.).

**காவாங்கரை** *kāvāṅgarai,* பெ.(n.) வாய்க்காற்கரை; bank of a channel (செ.அக.).

*[கால்+வாய் + கரை.]*

**காவாடுபுல்** *kāvāḍu-pul,* பெ.(n.) ஒரு வகைப்புல்; a kind of unknown grass (சா.அக.).

*[கவடு – காவாடு + புல்.]*

**காவாய்** *kāvāy,* பெ.(n.) ஒருவகைப் புல்; a kind of grass (செ.அக.).

*[கவை – காவாய்.]*

**காவாளி** *kāvāḷi,* பெ.(n.) **காவாளை** (மலை.) பார்க்க; see *kāvāḷai* (செ.அக.).

**காவிகா** *kāvigā,* பெ.(n.) கருப்புத்தினை; black millet or Italian millet - *Panicum indicum* (சா.அக.).

**காவிடோல்** *kāvi-ḍōl,* பெ.(n.) **காவிப் பருவான்** பார்க்க; see *kāvi-p-paruvāṉ* (செ.அக.).

**காவிப்பருவான்** *kāvi-p-paruvāṉ,* பெ.(n.) கப்பலின் தலைப் பாய்மரம்; topsail-yard (செ.அக.).

*[காவி+பருவான்.]*

**காவிப்பல்** *kāvi-p-pal,* பெ.(n.) 1. காவி நிறம் அடைந்த பற்கள்; red soiled teeth. 2. ஊத்தை படிந்த பல்; filthy teeth (சா.அக.).

*[காவி + பல்.]*

**காவிமாலை** *kāvi-mālai,* பெ.(n.) கலவியை விரும்பிய தலைவன் தலைவிக்கு அனுப்பும் மாலை (யாழ்.அக.); garland sent by a lover to his beloved, soliciting her favour (செ.அக.).

*[காவி + மாலை.]*

**காவியகுணம்** *kāviyaguṇam,* பெ.(n.) செய்யுட் குணம் (தண்டி.); merits of poetic composition.

செய்யுட் குணங்களாவன: செறிவு, தெளிவு, சமநிலை, இன்பம், ஒழுகிசை, உதாரம், உய்த்தலில் பொருண்மை, காந்தம், வலி, சமாதி (செ.அக.).

**காவியா** *kāviyā,* பெ.(n.) காவியாக்கட்டை பார்க்க; see *kāviyā-k-kaṭṭai* (செ.அக.).

**காவியாக்கட்டை** *kāviyā-k-kaṭṭai,* பெ.(n.) நங்கூரக் கட்டை; wooden beam of an anchor (செ.அக.).

*[காவி→காவியா + கட்டை.]*



**காவிரிக்கரைகண்டசோழன்** *kāviri-k-karai-kaṇḍa-cōḻaṉ,* பெ.(n.) காவிரி ஆற்றுக்குக் கரை கட்டிய சோழன்; a king who built the dam river *kāviri.*

இம்மன்னன் தன் சிற்றரசர்களுக்குக் காவிரிக்கரையைப் பகுத்தளித்து கரை கட்டும்படி பணித்தான். அதில் பிரதாபருத்திரன் என்னும் மூன்று கண்களை உடையவன் மட்டும் தன் பங்கைக் கட்டாது இருந்தான். அதைக் கண்ட சோழன் அவன் உருவத்தைப் படத்தில் கண்டு சிவனைப் போல் இவனுக்கும் மூன்று கண்களா என ஒரு கண்ணைக் குத்த, அவனின் கண் மறைந்தது. பிரதாபருத்திரனும் தன் பங்கைக் கட்டி முடித்தான் (அபி.சிந்.).

*[காவிரி – கரை + கண்ட + சோழன்]*

**காவிரிப்பூம்பட்டினத்துக்கண்ணன்** *kāviri-p-pūm-paṭṭiṉattu-k-kaṇṇaṉ,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவன்; the poet who belonged to last ancient Šaṅgam (அபி.சிந்.).

*[காவிரி + பூம்பட்டினத்து + கண்ணன்.]*

**காவிரிப்பூம்பட்டினத்துக்கந்தாத்தனார்** *kāviri-p-pūm-paṭṭiṉattu-k-kandāttaṉār,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவர்களில் ஒருவர்; one of the poet who belonged to the last ancient Šaṅgam (அபி.சிந்.).

**காவிரிப்பூம்பட்டினத்துச்செங்கண்ணனார்** *kāviri-p-pūm-paṭṭiṉattu-c-ceṅkaṇṇaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; the poet who belonged to the ancient Šaṅgam period (அபி.சிந்.).

**காவிரிப்பூம்பட்டணத்துச்சேந்தன்கண்ணனார்** *kāvir-p-pūm-paṭṭaṇattu-c-cēndaṉ-kaṇṇaṉār,* பெ.(n.) கடைக்கழகம் மருவிய புலவர்களில் ஒருவர்; one of the poet who belonged to the ancient Šaṅgam period.

இவரது ஊர் சோழ நாட்டுக் காவிரிப் பூம்பட்டினம். கண்ணன் பெயருடையார் வேறிருத்தலின் இவர் சேந்தன் கண்ணன் எனப்பட்டனர் போலும் (அபி.சிந்.).

*[காவிரி + பூம்பட்டினத்து + செம்மை + கண்ணனார்.]*

**காவிகம்** *kāvigam,* பெ.(n.) சேங்கொட்டை; dhoby's nut - *Semecarpus anacordium* (சா.அக.).

**காவீயகம்** *kāviyagam,* பெ.(n.) மரமஞ்சள்; tree-turmeric - *Coscinium fenestratum* (சா.அக.).

*[காவீ + அகம்.]*

**காவு** *kāvu,* பெ.(n.) 1. ஒரு மந்திர மை; a black magic paint; colllyrium. 2. பீதரோகணி; Himalayan plant used for diseases of the eye (சா.அக.).

*[கரு – கா – காவு.]*

**காவுகொடு–த்தல்** *kāvu-kodu-,* 4 செ.கு.வி. (v.i.) காளி முதலிய தெய்வங்களுக்கு உயிரைக் காணிக்கையாகக் கொடுத்தல்; offer animal, human sacrifice. *காளிக்கு ஆடு வெட்டிக் காவு கொடுத்தார்கள். எத்தனையோ உயிர்கள் இந்தப் போராட்டத்தில் காவு கொடுக்கப்பட்டிருக்கும்!.*

*[காவு + கொடு–த்தல்.]*

**காவுகொள்–தல்** *kāvu-kol-,* 4 செ.கு.வி. (v.i.) உயிரைக் காணிக்கையாக ஏற்றல்; accept or take animal, human sacrifice. *குழந்தையின் உயிருக்காகத் தாயின் உயிரை தெய்வம் காவு கேட்பதா?*

*[காவு + கொள்–தல்.]*

**காவூமி** *kāvūmi,* பெ.(n.) **காவு** பார்க்க; see *kāvu* (சா.அக.).

*[கா + ஊமி.]*

**காவெட்டு** *kāvettu,* பெ.(n.) பழுக்கத் தொடங்கியிருக்கும் காய்; the state before becoming fruit; unripe. *வாழைப்பழம் காவெட்டாகப் பார்த்து வாங்கி வா.*

*[காய்+வாட்டு.]*

**மறுவ. செங்காய்**

**காவேளை** *kāvēlai,* பெ.(n.) 1. தைவேளை; five-leaved cleome, cleome pentaphylla alias Galaga maxima. 2. பூண்டின் இறுதிப் பெயர்; plant's second term (சா.அக.).

*[கா + வேளை.]*

**காழ்கொள்ளு–தல்** *kāl-kollu-,* 16 செ.கு.வி. (v.i.) 1. முதிர்ச்சி அடைதல்; maturing. 2. வயிரம் பாய்தல்; formation of core inside a tree (சா.அக.).

*[காழ் + கொள்ளல்.]*

**காழியன்**[1] *kāliyan,* பெ.(n.) வண்ணான்; washerman, dhoby. *"காழியர் கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிய" (அகநா.89, 7) (செ.அக.).*

*[காழ் – காழியன்.]*

**காழியன்**[2] *kāliyan,* பெ.(n.) 1. பிட்டு விற்கும் வாணிகன் (மணிமே.28, 32); dealer in the rice preparation pittu. 2. உப்பு வாணிகன் (சூடா.); salt vendor.

*[காழ் – காழியன்.]*

**காழூன்றுகடிகை** *kālūnru-kadigai,* பெ.(n.) 1. குத்துக்கோல்; military machine fitted with spears. *"கானப்படமுங் காழூன்று கடிகையும்" (சிலப்.14, 173).* 2. கூடாரம் (சிலப்.14, 173, அரும்.); tent (செ.அக.).

*[காழ் + ஊன்று + கடிகை.]*

**காளகண்டகி** *kāla-kandagi,* பெ.(n.) நீலிப்பூடு; dog-bite shrub; dyers indigo - *Indigofera tinctoria alias I.emarginate* (சா.அக.).

*[காளம் + கண்டகி.]*

**காளகண்டசுரம்** *kāḷakaṇḍa-šuram*, பெ.(n.) 1. கழுத்தைக் கருமையாகச் செய்யும் ஒரு காய்ச்சல்; a fever marked by dark colouration of the neck. 2. மண்ணீரல் வீங்கியதால், வரும் காய்ச்சல்; fever marked by enlargement of the spleen (சா.அக.).

*[காளம் + கண்டம் + சுரம்.]*

**காளகர்ணிமுத்திரை** *kāḷa-karṇi-muttirai*, பெ.(n.) நாட்டிய முத்திரை வகை (சைவ.வி.19); a hand-pose in worship (செ.அக.).

**காளக்கடவுள்** *kāḷa-k-kaḍavuḷ*, பெ.(n.) சிவன்; God of Šiva (சி.பெய.).

*[காளம் + கடவுள்.]*

**காளங்கன்று** *kāḷaṅ-kaṉṟu*, பெ.(n.) காளைக் கன்று; bull-calf, very young steer (செ.அக.).

*[காளை + கன்று.]*

**காளச்சீலை** *kāḷa-c-cīlai*, பெ.(n.) விடரியம் (வைடூரியம்); a variety of chalcedony, cat's eye (சா.அக.).

*[காளம் + சீலை.]*

**காளசீகம்** *kāḷašīgam*, பெ.(n.) மரவகை; strychnine tree- *Strychnos nux-vomica* (சா.அக.).

**காளபதம்** *kāḷa-padam*, பெ.(n.) புறாவகை (திவா.); blue rock-pigeon (செ.அக.).

*[காளம் + பதம்.]*

**காளபிருட்டம்** *kāḷa-piruṭṭam*, பெ.(n.) கன்னன் (கர்னன்) வில்; bow of karṉaṉ(அபி.சிந்.).

**காளமேகநாராயணசிந்தூரம்** *kāḷa-mēga-nārāyaṇa-šindūram*, பெ.(n.) ஒருவகைச் செந்தூரம்; a dark reddish metallic oxide (சா.அக.).

*[காளமேகம் + **Skt.** நாராயணசிந்தூரம்.]*

**காளமேடிகை** *kāḷa-mēḍigai*, பெ.(n.) 1. மஞ்சிட்டை; manjeet. 2. கருஞ்சிவதை; a kind of Indian jalap (செ.அக.).

**காளவனம்**[1] *kāḷa-vaṉam*, பெ.(n.) சுடுகாடு (சூடா.); burning-ground (செ.அக.).

*[காளம் + வனம்.]*

**காளவனம்**[2] *kāḷa-vaṉam*, பெ.(n.) 1. உஞ்சை நகரின் புறத்தே உள்ள காடு; the forest in out of city. 2. உதயணன் மேல் மிக்க அன்புடைய இலாமயன் என்பவன் இருந்த காடு; a forest (அபி.சிந்.).

**காளவாசல்** *kāḷa-vāšal*, பெ.(n.) சுண்ணாம்புக் காளவாய்; lime kiln (சா.அக.).

*[காள + வாசல்.]*

**காளன்**[1] *kāḷaṉ*, பெ.(n.) குண்டலகேசி காப்பியத்தில் வரும் பத்தரை என்பவளின் கணவனான காளன்; husband of Pattarai in Kuṇḍalakēši epic.

**காளன்**[2] *kāḷaṉ*, பெ.(n.) 1. வீரபத்திரரின் பெயர்களுள் ஒன்று; one of the name to Vīrapatrā. 2. சிவன் அணிந்திருந்த பாம்புகளில் ஒன்று; Siva's snake which he were as a ornament.

**காளவுலை** *kāḷa-v-ulai*, பெ.(n.) மாழைகளை உருக்கும் உலைக்களம்; சரவுலை; a fire-place where double bellows are used; a contrivance for a vehement fire for purposes of melting, Furnace (சா.அக.).

**காளாகிகம்** *kāḷāgigam*, பெ.(n.) திருவாத்தி; holy mountain ebony - *Bauhima tomentosa* (சா.அக.).

**காளாஞ்சகம்** *kāḷāñjagam*, பெ.(n.) எண்பது வகை ஊதை (வாதம்) நோய்களுள் ஒன்று; one of the eighty kinds of rheumatism.

*[காளா + அஞ்சகம்.]*

இந்நோய் கை கால் குடைச்சல் கண்டு நடக்க முடியாமல் கரடு கட்டி முடமாக்கி, உடம்பு வெளுத்து மயக்கத்தை உண்டாக்கும் (சா.அக.).

**காளாம்பகி** *kāḷāmbagi,* பெ.(n.) பறவைப் பாம்பு (நாமதீப.); a winged serpent (செ.அக.).

**காளாத்திரி** *kāḷāttiri,* பெ.(n.) பாம்பின் கீழ்வரிசை நச்சுப் பற்களில் ஒன்று; the second of the four fangs in the lower row of the teeth in a cobra (சா.அக.).

*[காளா + திரி.]*

**காளாராத்திரி** *kāḷā-rāttiri,* பெ. (n.) **காளாத்திரி** பார்க்க; see *kāḷāttiri.*

**காளாமுகி** *kāḷāmugi,* பெ.(n.) கொடுமையான அச்சத்தை ஊட்டும் முகம்; a form of monster-face (சா.அக.).

*[காளா + முகி]*

**காளிக்காரம்** *kāḷi-k-kāram,* பெ.(n.) ஒரு நச்சுக் காரம்; a poisonous caustic (சா.அக.).

*[காளி + காரம்.]*

**காளிங்கமர்த்தனன்** *kāḷiṅga-marttaṉaṉ,* பெ.(n.) காலிங்கனென்னும் பாம்பின் மீது பாதங்களை வைத்து ஆடித்துகைத்த கண்ணபிரான்; Krišṇa as dancing on the hood of the serpent Kāḷiyaṉ (செ.அக.).

*[காளிங்கன் + மர்த்தனன்.]*

**காளிங்கர்** *kāḷiṅgar,* பெ.(n.) திருக்குறளுக்கு உரை எழுதிய ஆசிரியர்களில் ஒருவர்; Kāliṅgar commentary on Thiru-k-kuṟal.

**காளிதேவர்** *kāḷi-tēvar,* பெ.(n.) வீர சிவனிய அடியவர்; devotee of Šivā.

*[காளி + தேவர்.]*

இவரிடம் சில மறையோர்கள் வந்து தாம் பிறப்பால் உயர்ந்தோர். மறை ஒத எமக்கே அதிகாரம் உண்டென்றனர். இதைக் கேட்ட இவர் தம்மிடம் இருந்த நாயை மறை ஓதுவிக்க மறையோர் வெட்கிச் சென்றனர் (அபி.சிந்.).

**காளிந்தம்**[1] *kāḷindam,* பெ.(n.) ஒரு நறுமணப் பண்டம் (திவா.); cardamom (செ.அக.).

**காளிந்தம்**[2] *kāḷindam,* பெ.(n.) பாம்பு (அக.நி.); snake (செ.அக.).

**காளிந்தாகிதம்** *kāḷindāgidam,* பெ.(n.) தில்லை மரம்; tiger's milk spurge - *Excoecaria agallocha* (சா.அக.).

**காளிந்திமர்த்தனன்** *kāḷindi-marttaṉaṉ,* பெ.(n.) தனது கலப்பைக் கருவியால் யமுனையின் ஆணவத்தை அடக்கிய பலராமன்; Balarāmā, as having tormented the river Jumna by turning her course with his plough (செ.அக.).

*[காளிந்தி + அமர்த்தனன்.]*

**காளிம்பன்** *kāḷimbaṉ,* பெ.(n.) தொண்டை நாட்டில் திருவேங்கடத்துக்கு அருகில் இருந்த ஒரு பெருந்தகை (பிரபு.); a patron who lived near Tiru-vēṅgaḍam (அபி.சிந்.).

**காளியண்ணப்புலவர்** *kāḷi-y-aṇṇa-p-pulavar,* பெ. (n.) திருச்செங்கோடெனும் சிவதலத்திற்கு அருகில் உள்ள மண்டகப்பாளி என்னும் ஊரில் இருந்தவரும் திருப்பூந்துறை புராணம் பாடியவருமான புலவர்; a poet author Tiruppūnduṟaipuraṇam (அபி.சிந்.).

*[காளி + அண்ணன் + புலவர்.]*

இவர் குலத்தால் கருணீகர். திருச்செங்கோட்டுச் சிற்றம்பலக் கவிராயரின் மாணவர்.

**காளிரம்** *kāḷiram,* பெ.(n.) மணித்தக்காளி; fox-grape - *Solanum nigrum* (சா.அக.).

**காளிராத்திரி** *kāḷi-rāttiri,* பெ.(n.) **காளாராத்திரி** பார்க்க; see *kāḷā-rāttiri* (சா.அக.).

**காளினி** *kāḷiṉi,* பெ.(n.) **காளினியம்** பார்க்க; see *kāḷiṉiyam* (செ.அக.).

**காளினியம்** *kāḷiṉiyam,* பெ.(n.) கத்தரிச் செடிவகை (மலை.) (பதார்த்த.); brinjal, egg-plant - *Solanum melongena* (செ.அக.).

**காற்கருணை** *kāṟ-karuṇai,* பெ.(n.) கருணைக் கிழங்கு; elephant yam - *Typhonium orixense* (சா.அக.).

*[காரல் + கருணை.]*

**காற்கவசம்** *kāṟ-kavašam,* பெ.(n.) மிதியடி, செருப்பு (பதார்த்த.1457, தலைப்பு); sandals (செ.அக.).

*[கால் + கவசம்.]*

**காற்கவசமிடு-தல்** *kāṟ-kavašam-iḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. காலுக்கு மேற்சோடு போடல்; wearing stockings as a protection against cold. 2. செருப்புப் போடுதல்; wearing shoes (சா.அக.).

*[கால் + கவசம் + இடு-தல்.]*

**காற்காய்ப்பு** *kāṟ-kāyppu,* பெ.(n.) உள்ளங் கால் அல்லது பாதத்தின் வேறு இடங்களில் தோல் உராய்தலினால் ஏற்படும் காய்த் தடிப்பு; callousness of the skin of the sole or the skin of other part of the foot (சா.அக.).

*[கால் + காய்ப்பு.]*

**காற்குளசு** *kāṟ-kuḷāšu,* பெ.(n.) 1. பாதத்தின் உள்ளே அசையும் எலும்புகளின் கூட்டம்; the inward juncture of the moveable bones in the feet. 2. கணைக்காற் பொருத்து; the in-step proper with its 7 bones - *Tarsus* (சா.அக.).

*[கால் + குளசு.]*

**காற்குளசெலும்பு** *kāṟ-kuḷašelumbu,* பெ.(n.) பாதத்தின் உட்பக்கமுள்ள அசையும் எலும்புகள் அதாவது புறங்காலெலும்பு; bones of the in-step; the middle of the foot or part between the toes and the ankle - *Meta tarsus* (சா.அக.).

*[கால் + குளசு + எலும்பு.]*

**காற்கோடகி** *kāṟ-kōḍagi,* பெ. (n.) கக்கரிக்காய்; cucumber (சா.அக.).

*[காற் + கோடகி.]*

**காற்கோடல்** *kāṟ-kōḍal,* பெ.(n.) படிகக்கல் அல்லது கடல் வண்ணக் கல்; beryl - *Aquamarina.*

*[கால் + கோடல்.]*

பச்சையாக இருக்கும் இக்கல் பாம்புக் கடியால் ஏற்பட்ட நஞ்சினைத் தீர்க்கும். இது வண்ணத்திலும், குணத்திலும், அமைப்பிலும் பைம்மணி (மரகதம்)யை ஒத்ததாய் இருந்தாலும் அதன் அளவிற்கு வண்ணமாய் இராது (சா.அக.).

**காற்சப்பைநழுகு-தல்** *kāṟ-cappai-naḻugu-,* 5 செ.கு.வி.(v.i.) காற்சப்பை எலும்பு இடத்தை விட்டுப் பெயர்தல்; dislocation of the hip-bone (சா.அக.).

*[கால் + சப்பை + நழுகு-தல்.]*

**காற்சிகம்** *kāṟšigam,* பெ.(n.) நாயுருவி; Indian burr - *Achyranthes aspera* (சா.அக.).

**காற்சிராய்** *kāṟ-širāy,* பெ.(n.) காற்சட்டை; trousers.

*[கால் + சிராய்.]*

**காற்சிலந்தி** *kāṟ-šilandi,* பெ.(n.) காலில் வரும் சிலந்திப் புண்; ulceration of the leg (சா.அக.).

*[கால் + சிலந்தி.]*

**காற்சீப்பு** *kāṟ-šippu,* பெ.(n.) இடுப்புச் சந்தெலும்பு; hip bone (செ.அக.).

*[கால் + சீப்பு.]*

**காற்பாசம்** *kāṟpāšam,* பெ.(n.) பருத்தி; Indian cotton plant (செ.அக.).

**காற்புற்று** *kāṟ-puṟṟu,* பெ.(n.) பாதம் வீங்கிப் பிறகு வெடித்துப் புரையுண்டாக்கும் ஒரு புற்று நோய்; a peculiar swelling of the foot in which the tubercles beneath the skin burst and leave sinuses (சா.அக.).

*[கால் + புற்று.]*

**காற்றட்டி** *kāṟṟaṭṭi*, பெ.(n.) முட்டிக்கால் தட்டி; a knock-kneed person (சா.அக.).

*[கால் + தட்டி.]*

**காற்றறிவிக்கும்கருவி** *kāṟṟaṟivikkum-karuvi*, பெ. (n.) காற்று அடிக்கின்ற திசையை அறிவிக்கும் கருவி; an instrument.

*[காற்று + அறிவிக்கும் + கருவி.]*

**காற்றாட** *kāṟṟāḍa*, வி.அ. (adv.) காற்றுப்படும் படி; காற்றை நுகரும்படி; for an airing. *கடற்கரைப் பக்கம் காற்றாடப் போய் வரமுடியவில்லை (உ.வ.). மொட்டை மாடியில் காற்றாடப் படுத்துக் கிடந்தேன் (உ.வ.).*

*[காற்று + ஆட.]*

**காற்றாடப்போடு-தல்** *kāṟṟāḍa-p-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) நிழலில் உலர்த்தல்; drying in the shade by exposing to the breeze (சா.அக.).

*[காற்று + ஆட + போடு-,]*

**காற்றாடமூலை** *kāṟṟāḍa-mūlai*, பெ.(n.) காற்று படாத ஒதுக்கிடம்; an ill-ventilated secluded place (சா.அக.).

*[காற்று + ஆடா + மூலை.]*

**காற்றாடி** *kāṟṟāḍi*, பெ.(n.) 1. ஒரு சட்டத்தின் மீது துணி அல்லது காகிதம் ஒட்டப்பட்டு வால் போன்ற நீளமான பகுதி சேர்க்கப்பட்டு நூலின் மூலமாகக் காற்றில் பறக்க விடப்படும் ஒரு விளையாட்டுப் பொருள்; பட்டம்; kite. 2. நறுக்கிய இரு ஓலைத் துண்டுகளை ஒன்றன் மீது ஒன்றாக வைத்து அதன் நடுப்பகுதியில் முள் போன்றவற்றால் குத்தி ஒரு குச்சியுடன் இணைத்துக் காற்றில் சுழலவிடும் சிறுவர் விளையாட்டுப் பொருள்; a kind of pinwheel. 3. மின் விசிறி; electric fan.

*[காற்று + ஆடி.]*

**காற்றாலை** *kāṟṟālai*, பெ.(n.) காற்றின் இயக்கத்தைக் கொண்டு மின்சாரம் உருவாக்கம் செய்யவோ, இயந்திரங்கள் இயக்கவோ பயன்படும் அமைப்பு; windmill.

*[காற்று + ஆலை.]*



**காற்றிமிர்** *kāṟṟimir*, பெ.(n.) 1. காலின் திமிர்; numbness of the leg. 2. மரத்துப் போன காலடி; numbness of the feet (சா.அக.).

*[கால் + திமிர்.]*

**காற்றிரு-த்தல்** *kāṟṟiru-*, 3 செ.கு.வி.(v.i.) காலின் எலும்பு நழுகலை அல்லது நரம்புப் பிசகைச் சரி செய்தல்; setting right the dislocated bone or the sprain (சா.அக.).

*[கால் + திருத்து.]*

**காற்றுகறுப்பு** *kāṟṟu-kaṟuppu*, பெ.(n.) பேய், பிசாசு முதலியவை; evil spirits. *ஏதோ காற்றுகறுப்பு அடித்து விட்டதாக வேப்பிலை அடித்து மந்திரித்தார்கள்.*

*[காற்று + கறுப்பு.]*

**காற்றுச்சிகிச்சை** *kāṟṟu-c-cigiccai*, பெ.(n.) காற்றைக் கொண்டு நோய்களைச் சரி செய்தல்; the therapeutic employment of air - *Air-cure* (சா.அக.).

*[காற்று + சிகிச்சை.]*

**காற்றுச்சேட்டை** *kāṟṟu-c-cēṭṭai,* பெ.(n.) பேய் பிசாசுகளினால் ஏற்படும் தீங்கு; mischief of evil spirits (சா.அக.).

*[காற்று + சேட்டை.]*

**காற்றுப்புகா** *kāṟṟu-p-pugā,* பெ.எ.(adj.) காற்றுட் புகாத; impermeable to air; air-tight (சா.அக.).

*[காற்று + புகா.]*

**காற்றுப்புகாபுட்டி** *kāṟṟu-p-pugā-puṭṭi,* பெ.(n.) காற்று நுழையாதபடி தடையிட்ட குப்பி; air-tight corked bottle (சா.அக.).

*[காற்று + புகா + புட்டி.]*

**காற்றுப்புசி-த்தல்** *kāṟṟu-p-puši-,* 4 செ.கு.வி. (v.i.) காற்றை உணவாக உட்கொள்ளுதல்; living on air; eat to air. *இதை ஒகி (யோகி)கள் செய்வார்கள்* (சா.அக.).

*[காற்று + புசி-,]*

**காற்றுவாக்கில்** *kāṟṟuvākkil,* வி.அ.(adv.) நேரடியாகக் கேள்விப்படாமல் பிறர் சொல்லி அறிதல்; செவி வழிச் செய்தியாக அறிதல்; by word of mouth hearsay. *அவனுக்கு வேலை போய் விட்டது என்பதை காற்றுவாக்கில் கேள்விப் பட்டேன் (உ.வ.).*

*[காற்று + வாக்கில்.]*

**காற்றுவாக்கு** *kāṟṟu-vākku,* பெ.(n.) 1. காற்றடிக்கும் திசை; direction of the wind. *"காற்றுவாக்கிலே நின்று" (சீவக.1568, உரை).* 2. காற்றுத் தோன்றும் பக்கம்; leeward, used when a current of offensive effluvia is conveyed by the wind, as from a passing fisherwoman. 3. அசட்டை; neglect of duty. 4. தற்செயல்; mere chance (செ.அக.).

*[காற்று + வாக்கு.]*

**காற்றுவாங்கி** *kāṟṟuvāṅgi,* பெ.(n.) காற்றை வெளிப்படுத்தும் இயந்திரம்; a machine of pumping the air out - *Air-pump* (சா.அக.).

*[காற்று + வாங்கி.]*

**காற்றுள்ள** *kāṟṟuḷḷa,* பெ.எ.(adj.) காற்றடங்கிய; air (சா.அக.).

*[காற்று + உள்ள.]*

**காறற்கருணை** *kāṟaṟ-karuṇai,* பெ.(n.) கருணைக் கிழங்கு; elephant yam with a rancid taste - *Typhonium orixense* (சா.அக.).

*[காறல் + கருணை.]*

**காறற்குறட்டை** *kāṟaṟ-kuṟaṭṭai,* பெ.(n.) சவரிக் கொடி; bitter-ground; round snake gourd - *Trichosanthes palmate.*

*[காறல் + குறட்டை.]*

இதன் இலைகள் அரும்புள்ளன. பூக்கள் பெரிது, வெண்மை நிறமும் நாற்றமும் உள்ளவை. சிகப்பாக உருண்டை வடிவில் அரத்தியின் (ஆப்பிள்) பருமனில் இருக்கும். உலர்ந்தது; கிச்சிலிப்பழம் நிறமுடையது. இதனுள் சதைப்பற்று ஆடும்; கொடி கசக்காது. இதன் வேருக்கு நஞ்சுத் தன்மை உண்டு. இது ஆ நோய்களுக்குப் பயனுள்ளது (சா.அக.).

**காறன்தைலம்** *kāṟaṉ-tailam,* பெ.(n.) ஆளி விதை எண்ணெய்யும், சுண்ணாம்பு நீரும் சேர்ந்த எண்ணெய்; a liniment composed of linseed oil and lime-water - *Carron-oil* (சா.அக.).

*[காறல் + தைலம்.]*

**காறாவெண்ணெய்** *kāṟā-veṇṇey,* பெ.(n.) கருமையான முலைக்காம்புடைய ஆவின் வெண்ணெய்; butter from the milk of black-nippled cow (சா.அக.).

*[கார் + ஆ + வெண்ணெய். காரான்-காறான் (கொ.வ.)]*

**காறித்துப்பு-தல்** *kāṟi-t-tuppu-,* 5 செ.கு.வி. (v.i.) வெறுப்பை வெளிப்படுத்தும் வகையில்

வாயில் உள்ள எச்சிலைத் துப்புதல்; spit out of rancour. *அவனெல்லாம் ஒரு மனிதனா? என்று கூறிவிட்டுக் காறித் துப்பினார்.*

*[காறி + துப்பு-தல்.]*

**காறுபாறாயிரு-த்தல்** *kāṟu-pāṟāy-iru-*, 2 செ.கு.வி. (v.i.) விழிப்பாயிருத்தல்; to keep a strict eye, as upon a person (செ.அக.).

*[காறு + பாறா + இருத்தல்.]*

**காறுபாறுபடி-த்தல்** *kāṟu-pāṟu-paḍi-*, 4 செ.கு.வி. (v.i.) ஒரு செயலைச் செய்வதற் குரிய ஆளுமைப் பண்பைப் பழகுதல்; to learn how to manage business (செ.அக.).

*[காறு - பாறு + படி-,.]*

**கான்புலி** *kāṉ-puli*, பெ.(n.) காட்டுப்பூனை (பிங்.); wild cat (செ.அக.).

*[கான் + பூனை]*

**கான்மிகம்** *kāṉmigam*, பெ.(n.) **கான்மியம்** பார்க்க; see *kāṉmiyam* (செ.அக.).

**கான்மியம்** *kāṉmiyam*, பெ.(n.) மும்மலத்துள் ஒன்றாய் ஏதிலியாய் (அநாதை) உள்ள கன்மலம் (சிசி.2, 39, ஞானப்.); (Šaivā) one of the three eternal obstructive principles which creates bondage for the soul as a result of good and evil deeds (செ.அக.).

*[கருமம்- கன்மம் - கான்மியம்]*

**கான்மிரம்** *kāṉmiram*, பெ.(n.) **காசுமீரம்** பார்க்க; see *kāšumīram*. *"தணிகான்மி நாட்டில்" (திருவிளை.கல்லாணை.7) (செ.அக.).*

*[கான்மி - கான்மிரம்]*

**கானக்கல்** *kāṉa-k-kal*, பெ.(n.) **கானகக்கல்** (சங்.அக.) பார்க்க; see *kāṉaga-k-kal* (செ.அக.).

*[கானகம் + கல்.]*

**கானக்கூபரம்** *kāṉa-k-kūbaram*, பெ.(n.) பச்சைக்கல் வகை (யாழ்.அக.); a variety of green stone (செ.அக.).

*[கான + கூபரம்]*

**கானக்குதிரைமேல்தோல்** *kāṉa-k-kudirai-mēl-tōl*, பெ.(n.) மாம்பட்டை; the bark of a mango tree (சா.அக.).

*[கானம் + குதிரை + மேல் + தோல்.]*

**கானக்குதிரைவிதை** *kāṉa-k-kudirai-vidai*, பெ.(n.) கடம்பமர விதை; the seed of cadamba tree (சா.அக.).

*[கானம் + குதிரை + விதை.]*

**கானகக்கூபரம்** *kāṉaga-k-kūbaram*, பெ.(n.) நாகப் பச்சை; a kind of emerald; a peculiar green stone forming one of the 120 kinds of natural substances.

*[கானகம் + கூபரம்.]*

**கானகக்கோழி** *kāṉaga-k-kōḻi*, பெ.(n.) காட்டுக்கோழி; jungle fowl - *Gallus sonneraii* (சா.அக.).

*[கானகம் + கோழி.]*



**கானககீதம்** *kāṉaga-gītam*, பெ.(n.) கருவண்டு (யாழ்.அக.); black beetle (செ.அக.).

*[கானகம் + கீதம்.]*

**கானகச்சத்துரு** *kāṉaga-c-catturu*, பெ.(n.) வெள்ளீய மணல்; tin-ore (சா.அக.).

*[கானகம் + சத்துரு.]*

**கானகச்சாரி** *kāṉaga-c-cāri,* பெ.(n.) கோங்கு; golden silk cotten - *Cochlospermum gossypium* (சா.அக.).

**கானகச்சூதம்** *kāṉaga-c-cūdam,* பெ.(n.) 1. மாமரம்; the mango-tree - *Mangifera indica.* 2. புளிய மரம்; the tamarind tree - *Tamarindus indica.* 3. புளிப்பு; sourness (சா.அக.).

**கானகத்தில்சிந்துமுட்டாணம்** *kāṉagattil-cindu-muṭṭāṇam,* பெ.(n.) பன்றி முள்; porcupine's spine found scattered in the forest (சா.அக.).

*[கானகத்தில் + சிந்து + முள் + தாணம்.]*

**கானகத்தீதம்** *kāṉaga-t-tīdam,* பெ.(n.) 1. கருவண்டு; black beetle. 2. காட்டின் குளிர்ச்சி; chillness in the forest (சா.அக.).

*[கானகம் + தீதம்.]*

**கானகத்துக்கதிபதி** *kāṉagattu-k-katibadi,* பெ.(n.) 1. தூதுவளை; three-lobed night-shade - *Solanum trilobatum.* 2. அரிமா; lion (சா.அக.).

*[கானகம் + அத்து + அதிபதி.]*

**கானகப்புல்** *kāṉaga-p-pul,* பெ.(n.) காமாட்சிப்புல்; காவட்டம்புல்; citronella - *Andropogon citratis* (சா.அக.).

*[கானகம் + புல்.]*

**கானகமருக்கொழுந்து** *kāṉaga-maruk koḻundu,* பெ.(n.) மணமில்லாத காட்டு மருக்கொழுந்து; forest maid's love without fragrance; southern wood (சா.அக.).

*[கானகம் + மருக்கொழுந்து.]*

**கானகவாட்சி** *kāṉaga-v-āṭci,* பெ.(n.) ஒரு வகைப் பெருமல்லிகை; tuscan jasmine; double-flowered jasmine - *Jasminum sambuc* (சா.அக.).

*[கானகம் + வாட்சி.]*

**கானகன்** *kāṉagaṉ,* பெ.(n.) கழுதை; ass (சா.அக.).

**கானசரம்** *kāṉaśaram,* பெ.(n.) புல்வகை; kaus, a large and coarse grass - *Saccharum sontaneum* (செ.அக.).

*[கான் + சரம்.]*

**கானப்பத்திரம்** *kāṉa-p-pattiram,* பெ.(n.) வில்வம்; Indian bael - *Aegle marmelos* (சா.அக.).

**கானப்பேரெயில்கடந்தஉக்கிரப்பெருவழுதி** *kāṉa-p-pēreyil-kaḍanda-ukkira-p-peruvaḻuti,* பெ.(n.) பாண்டிய மன்னன்; Pāṇḍia king.

*[கானம் + பெரு + எயில் + கடந்த (உக்கரம்) உக்கிரம் + பெருவழுதி.]*

கடைக்கழக மிருத்திய பாண்டியர்களுள் ஒருவன். இவன் முன்பாகத் திருக்குறள் அரங்கேற்றப்பட்டது. அகநானூறு தொகுப்பித்தோன் இவனே. இவனைப் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி என்றும் கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்றும் கூறுவர் (அபி.சிந்.).

**கானமயில்** *kāṉa-ma-y-il,* பெ.(n.) காட்டு மயில்; wild pea-cock (சா.அக.).

*[கானம் + மயில்.]*

**கானமல்லி** *kāṉa-malli,* பெ.(n.) 1. சிறு மல்லிகை; narrow leaved jasmine - *Jasminum triflorum.* 2. காட்டு மல்லிகை; wild jasmine - *Jasminum angustifolium alias J.acuriculatum* (சா.அக.).

*[கானகம் + மல்லி.]*

**கானமவ்வல்** *kāṉa-mavval,* பெ.(n.) **கானமல்லி** பார்க்க; see *kāṉa-malli* (சா.அக.).

*[கானம் + மவ்வல்.]*

**கானமழை** *kāṉa-maḻai,* பெ.(n.) தேன்; honey (சா.அக.).

*[கான + மழை.]*

**கானமுல்லை** *kāṉa-mullai,* பெ. (n.) **கானமல்லி** பார்க்க; see *kāṉa-malli* (சா.அக.).

*[கானம் + முல்லை.]*

**கானயம்** *kāṉa-y-am,* பெ.(n.) காட்டு வெக்காலி மரம்; partidge pea tree - *Anacolosa densiflora* (சா.அக.).

**கானரசம்** *kāṉa-rašam,* பெ.(n.) இசைச் சுவை; sweet charm of music (செ.அக.).

*[கானம் + Skt. இரசம்.]*

**கானல்நீர்** *kāṉal-nīr,* பெ.(n.) வெப்பப் பகுதிகளில் அனல் காற்றால் நீரோடை ஒன்று அருகில் ஓடுவது போல இருக்கும் மாயத் தோற்றம்; பொய்த் தோற்றம்; sight resembling presence of water in a desert; mirage. *திட்டங்கள் நிறைவேறி னால் வறுமை ஒழிப்பு வெறும் கானல்நீர் ஆகாது.*

*[கானல் + நீர்.]*

**கானல்பலா** *kāṉal-palā,* பெ.(n.) காட்டுப் பலா; jungle jack - *Artocarpus hirsuta* (சா.அக.).

*[கானல் + பலா. கானல் = காடு.]*

**கானல்பால்** *kāṉal-pāl,* பெ.(n.) 1. எருக்கம் பால்; milky juice drawn from madar plant. 2. கள்ளிப்பால்; milky juice of euphorbia genus. 3. கூகைநீறு; flour of Indian arrow-root - *Curcuma anguostifolia.* 4. காட்டு எருமையின் பால்; milk of wild buffalo (சா.அக.).

**கானல்மா** *kāṉal-mā,* பெ.(n.) **காட்டு மாம்பழம்** பார்க்க; see *kāṭṭu-māmbaḻam* (சா.அக.).

*[கானல் + மா.]*

**கானல்மிருகம்**[1] *kāṉal-mirugam,* பெ.(n.) 1. காட்டுப் பன்றி; wild boar. 2. மான்; deer (சா.அக.).

*[கானல் + Skt. மிருகம்.]*

**கானல்மிருகம்**[2] *kāṉal-mirugam,* பெ.(n.) கொக்கு மந்தாரை; taper pointed mountain ebony - *Bautinia acuminata.*

*[கானல் + Skt. மிருகம்.]*

**கானல்முருங்கை** *kāṉal-muruṅgai,* பெ.(n.) 1. காட்டு முருங்கை; wild Indian horse radish - *Moringa concanensis.* 2. புனல் முருங்கை; oval-leaved Indigo - *Indigofera trita.* 3. ஆடாதோடை; Malabar winter cherry or Malabar nut shrub - *Adhatoda vesica alias A.pubescens.* 4. மாவிலங்கை; forest small lingam tree - *Crataeva religiosa.* 5. பூனை முருங்கை; jungle moringa - *Ormocarpum sennoides.* 6. பவளப்பூலா; wild moringa or coral berry tree - *Bryonia rhamnoides.* 7. கசப்பு முருங்கை; bitter moringa (சா.அக.).

*[கானல் + முருங்கை.]*

**கானல்வாகியம்** *kāṉal-vāgiyam,* பெ.(n.) சீரகம்; cumin seed - *Cuminum cyminum* (சா.அக.).

**கானலக்கினி** *kāṉal-akkiṉi,* பெ.(n.) 1. சித்தர்கள் உண்ணும் மூலிகைகளுள் ஒன்றான சிவப்புச் சதுரக் கள்ளி; red square-spurge - *Euphorbia antiquorum.* It is one of the drugs generally taken by Siddhars. 2. காட்டுத்தீ; wild-fire. 3. மருந்து செய்வதற்காக இரண்டு விரற் கனமுள்ள 4 அல்லது 5 விறகால் எரிக்கும் நெருப்பு; a big fire used for preparing medicines and got up with 4 or 5 pieces of fuel, each of 2 fingers width - *Conflagration* (சா.அக.).

*[கானல் + அக்கினி]*

**கானலாகினி** *kāṉalāgiṉi,* பெ.(n.) **கானலக்கினி** பார்க்க; see *kāṉal-akkiṉi* (சா.அக.).

**கானலாவனி** *kāṉalāvaṉi,* பெ.(n.) 1. சங்கங் குப்பி; a small-leaved glory tree - *Cleodendron inerme.* 2. சங்கஞ் செடி; four - spined monetia - *Azima tetracantha* (சா.அக.).

*[கானல் + அவனி.]*

**கானவல்லை** *kāṉa-vallai,* பெ.(n.) 1. குரங்கு; monkey. 2. **கானல்முருங்கை** பார்க்க; see *kāṉal-muruṅgai* (சா.அக.).

*[கான + வல்லை.]*

**கானவிந்து** *kāṉa-vindu,* பெ.(n.) மானசோத்ர மலையில் உள்ள கூகை; owl which lived māṉašōtra hill.

**கானற்கன்னி** *kāṉaṟ-kaṉṉi,* பெ.(n.) ஒருவகைக் கொடி (இருப்பவல்); a kind of creeper - *Indian cudweed, Gnaphalium indicum* (சா.அக.).

*[கானல் + கன்னி.]*

**கானற்சலம்** *kāṉaṟ-šalam,* பெ.(n.) **கானனீர்** பார்க்க; see *kāṉaṉīr* (செ.அக.).

*[கானல் + சலம்.]*

**கானற்பால்** *kāṉaṟ-pāl,* பெ.(n.) **கானல்பால்** பார்க்க; see *kāṉal-pāl* (சா.அக.).

*[கானல் + பால்.]*

**கானற்பீலிதம்** *kāṉaṟ-pīlidam,* பெ.(n.) தும்பை; leucas flower (சா.அக.).

*[கானல் + பீலிதம்.]*

**கானனுசேதி** *kāṉaṉu-šēdi,* பெ.(n.) நவ்வல் அதாவது நாவல்; jaumoon or black plum - *Eugenia jambolina* (சா.அக.).

*[கான் + அனுசோதி]*

**கானான்வாழை** *kāṉāṉ-vāḻai,* பெ.(n.) நீர் வாழை; traveller's palm - *Ravenala madagascariensis* (சா.அக.).

*[கானான் + வாழை.]*

**கானான்வேளை** *kāṉāṉ-vēḷai,* பெ.(n.) தைவேளை; a black variety of velai or five leved cleome - *Gynand* (சா.அக.).

*[கானான் + வேளை.]*

**கானிற்குன்று** *kāṉiṟ-kuṉṟu,* பெ.(n.) வைக்கிராந்த நஞ்சு; a mineral poison (சா.அக.).

*[கானில் + குன்று.]*

**கானீனன்** *kāṉīṉaṉ,* பெ.(n.)1. திருமணமாகாத பெண் (கன்னி) பெற்ற மகன் (திவா.); son of an unmarried woman, as Vyāsa, one of 12puttiraṉ. 2. கன்னன் (பிங்.); Karṇā, son of Šūrya by Kunti, born during her maidenhood (செ.அக.).

*[Skt. kānīna> த. கானீனன்.]*

**கிங்கிசாலம்** *kiṅgišālam,* பெ.(n.) வேல மரம்; bobool tree - *Acacia indica* (சா.அக.).

*[கிங்கி + சாலம்.]*

**கிங்கிரா** *kiṅgirā,* பெ.(n.) நந்தியா வட்டம்; common wax -flower - *Tabernae montana coronaria alias Marium coronarium* (சா.அக.).

*[கிங்கி + கிங்கிரா]*

**கிச்சிலிக்கசாயம்** *kiccili-k-kašāyam,* பெ.(n.) **கிச்சிலிக்குடிநீர்** பார்க்க; see *kiccili-k-kuḍi-nīr.*

*[கிச்சிலி + Skt. கசாயம்.]*

**கிச்சிலிக்காடி** *kiccili-k-kāḍi,* பெ.(n.) 1. கிச்சிலிப் புளிப்பு; fermented orange juice. 2. புளி நாரத்தைச் சாற்றைப் புளிக்க வைத்த காடி; acetic acid from bitter orange by the acetous fermentation (சா.அக.).

*[கிச்சிலி + காடி.]*

**கிச்சிலிக்குடிநீர்** *kiccili-k-kuḍi-nīr,* பெ.(n.) நாரத்தைத் தோலினின்று வடித்த குடிநீர்;

tincture of orange peel - *Tinctura auranti* (சா.அக.).

*[கிச்சிலி + குடி + நீர்.]*

**கிச்சிலிச்சாறாயம்** *kiccili-c-cārāyam,* பெ.(n.) கிச்சிலி மது; orange wine (சா.அக.).

*[கிச்சிலி + சாறாயம்.]*

**கிச்சிலித்தோல்** *kiccili-t-tōl,* பெ.(n.) கிச்சிலிப் பழத்தின் தோல்; orange peel (சா.அக.).

*[கிச்சிலி + தோல்.]*

**கிச்சிலித்தோலெண்ணெய்** *kiccili-t-tōlenney,* பெ.(n.) கிச்சிலித் தோலினின்று வடிக்கும் எண்ணெய்; oil from the rind of orange - *Zest* (சா.அக.).

*[கிச்சிலி + தோல் + எண்ணெய்.]*

**கிச்சிலிப்பழம்** *kiccili-p-palam,* பெ.(n.) கொழுஞ்சிப் பழம்; orange fruit - *Citrus aurantium* (சா.அக.).

*[கிச்சிலி + பழம்.]*

**கிச்சிலிப்பாகு** *kiccili-p-pāgu,* பெ.(n.) சர்க்கரைப் பாகில் இட்ட புளிப்பும் கசப்புமுள்ள கிச்சிலி எலுமிச்சை முதலிய ஊறுகாய்; preserves made from bitter and acid fruits such as orange, lemon etc. - *Marmalade* (சா.அக.).

*[கிச்சிலி + பாகு.]*

**கிச்சிலிப்பாணி** *kiccili-p-pāni,* பெ.(n.) கிச்சிலிச் சாற்றுடன் சர்க்கரை இட்டுப் பயன்படுத்தும் குடிநீர்; orange sweet drink; a solution of orange-juice and sugar (சா.அக.).

*[கிச்சிலி + பாணி.]*

**கிச்சிலிப்பாணிதம்** *kiccili-p-pānidam,* பெ.(n.) **கிச்சிலிப்பாணி** பார்க்க; see *kiccili-p-pāni*(சா.அக.).

**கிச்சிலிப்புல்** *kiccili-p-pul,* பெ.(n.) ஒரு நறுமணப் புல்; orange grass - *Andropogonnardus* (சா.அக.).

*[கிச்சிலி + புல்.]*

**கிச்சிலிப்பூக்குடிநீர்** *kiccili-p-pūkkudi-nīr,* பெ.(n.) கிச்சிலிப்பூத் தீ நீரில் சர்க்கரை இட்டு பாகாகக் காய்ச்சிப் பயன்படுத்தும் குடிநீர்; syrup of orange flower - *Syrupus aurantifloris* (சா.அக.).

*[கிச்சிலி + பூ + குடி + நீர்.]*

**கிச்சிலிப்பூத்தண்ணீர்** *kiccili-p-pūttannīr,* பெ.(n.) கிச்சிலிப் பூவை ஊறவைத்து எடுத்த நறுமண நீர்; a fragrant liquid obtained by soaking orange flowers in water (சா.அக.).

*[கிச்சிலி + பூ + தண்ணீர்.]*

**கிச்சிலிப்பூத்தீநீர்** *kiccili-p-püttinīr,* பெ.(n.) கிச்சிலிப் பூச்சாற்றில் இருந்து வாலையிறக்கிய நீர்; water distilled from the juice of orange flowers.

*[கிச்சிலி + பூ + தீ + நீர்.]*

இது மாதவிலக்கு, நரம்புவலி, இழுப்பு இவற்றைக் குணமாக்கும் (சா.அக.).

**கிச்சிலிப்பூப்பாணிதம்** *kiccili-p-pūp pānidam,* பெ.(n.) **கிச்சிலிப்பூக்குடிநீர்** பார்க்க; see *kiccili-p-pūkkudinīr* (சா.அக.).

*[கிச்சிலி + பூ + பாணிதம்.]*

**கிச்சிலிரசம்** *kiccili-rašam,* பெ.(n.) **கிச்சிலிச்சாறு** பார்க்க; see *kiccili-c-cāru.*

*[கிச்சிலி + Skt. ரசம்.]*

**கிச்சிலிச்சாறு** *kiccili-c-cāru,* பெ.(n.) கிச்சிலிப் பழத்தைப் பிழிந்த சாறு; orange-juice (சா.அக.).

*[கிச்சிலி + சாறு.]*

**கிச்சிலிவாழை** *kiccili-vālai,* பெ.(n.) வாழை மரவகை (ரசதாளி); a species of plantain (சா.அக.).

*[கிச்சிலி + வாழை.]*

**கிச்சிலிவூறுகாய்** *kiccili-v-ūrugāy,* பெ. (n.) கிச்சிலிக்காய் அல்லது கிச்சிலிப் பழத் தோலை கறிக்கூட்டுடன் சேர்த்து எண்ணெயில் ஊறப்போட்ட ஊறுகாய்; a seasoned pickled of orange raw fruit or rind of orange ripe fruit prepared by mixing it with condiments and keeping it soaked in gingelly oil (சா.அக.).

*[கிச்சிலி + ஊறுகாய்.]*

**கிச்சிலிவேர்** *kiccili-vēr,* பெ.(n.) 1. சீமைக் கிச்சிலிக் கிழங்கு; orange root or camphor zedoary - *Hedychium spicatum.* 2. கருப்பூரக் கிச்சிலிக் கிழங்கு; orange root or camphor root - *Curcuma zedoaria* (சா.அக.).

*[கிச்சிலி + வேர்.]*

**கிச்சுக்கிச்சுக்காட்டு-தல்** *kiccu-k-kiccu-k-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவருடைய அக்குள், விலாப்புறம் முதலிய இடங்களில் கையால் வருடிச் சிரிப்பு வரும்படிக் கூச்சம் உண்டாக்குதல்; tickle so as to make one laugh.

*[கிச்சு + கிச்சு + காட்டு-தல்.]*

**கிசுகிசு[1]-த்தல்** *kiśu-kiśu-,* 4 செ.கு.வி.(v.i.) பிறர் கேட்காதவாறு ஒருவருடைய காதில் மெதுவாக ஒன்றைச் சொல்லுதல்; கமுக்கமாகப் (இரகசியம்) பேசுதல்; something into the ears tell a secret in whispering voice.

*[கிசு + கிசு-த்தல்.]*

**கிசுகிசு[2]** *kiśu-kiśu,* பெ.(n.) **கிசுகிசுப்பு,** 1 பார்க்க; see *kiśu-kiśuppu, 1.*

**கிசுகிசுப்பு** *kiśu-kiśuppu,* பெ. (n.) 1. ஒருவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றி மறைவாகப் பேசிக் கொள்ளும் பேச்சு; juicy talk about a person's private life. *புது நடிகையைப் பற்றிப் பல கிசுகிசுப்புகள் வரத் தொடங்கி விட்டன.* 2. பிறர் கேட்காதபடியான மெல்லிய ஓசை; whisper; soft voice. *கிசுகிசுப்பான குரலில் கேட்டாள்*

*[கிசு + கிசுப்பு.]*

**கிசோரம்** *kiśōram,* பெ.(n.) ஒரு செடி; an unknown plant (சா.அக.).

**கிட்டல்** *kiṭṭal,* பெ.(n.) நெருங்குகை, பல் கிட்டுகை; close setting of the teeth (சா.அக.).

*[கிட்டு – கிட்டல்]*

**கிட்டிபோடு-தல்** *kiṭṭi-pōḍu-,* 8 செ.கு.வி. (v.i.) 1. கிட்டியில் மாட்டுகை; நெருக்குப் பிடித்தல்; put in a clasp so as to prevent moving. 2. மற்றவர் தனக்குத் தர வேண்டிய வாடகை, வட்டி முதலியவற்றைத் திருப்பித் தருமாறு விடாது நெருக்குதல்; urge in a forcible manner; put the squeeze on. *ஆளைக் கிட்டி போட்டுக் கொடுத்த கடனை வாங்கிவிட்டார்.*

*[கிட்டி + போடு-தல்.]*

**கிட்டிலம்** *kiṭṭilam,* பெ.(n.) செவ்வாம்பல்; அரக்காம்பல்; red variety water-lily (சா.அக.).

**கிட்டினவுறவு** *kiṭṭiṉa-v-uṟavu,* பெ.(n.) நெருங்கிய உறவினர்; near relation, close relationship (செ.அக.).

*[கிட்டு→கிட்டின + உறவு.]*

**கிட்டுமானம்** *kiṭṭu-māṉam,* பெ.(n.) அருகாமை; nearness, proximity, vicinity (செ.அக.).

*[கிட்டு + மானம்.]*

**கிட்டே** *kiṭṭē,* வி.அ.(adv.) 1. அருகில்; பக்கத்தில்; near, closer. *கிட்டே வந்து மெதுவாகப் பேசு (உ.வ.). ஊர்வலம் மிகவும் கிட்டே வந்துவிட்டது (உ.வ.).* 2. வயது, நேரம் போன்றவை குறிப்பிட்ட எண்ணிக்கையை

ஒட்டி வருதல் அல்லது நெருங்குதல்; of time, age around; about.

*[கிட்டு→கிட்ட→கிட்டே.]*

**கிடக்கை** *kiḍakkai,* பெ.(n.) 1. படுத்தபடி கிடக்கை; recumbent posture. 2. கட்டில்; cot; couch. 3. நிலம்; earth. 4. இடம்; place (சா.அக.).

*[கிட - கிடக்கை.]*

**கிடகு** *kiḍagu,* பெ.(n.) இருபத்து நான்கு விரலளவு கொண்ட முழம் (சர்வா.சிற்.27); cubit of 24 finger breaths (செ.அக.).

*[கிட - கிடகு.]*

**கிடங்கல்காவிதிகீரங்கண்ணனார்** *kiḍaṅgal-kāviti-kīraṅ-kaṇṇaṉār,* பெ.(n.) ஒரு புலவர்; a poet.

*[கிடங்கில் + காவிதி +கீரன் + கண்ணன் + ஆர்.]*

இவரது இயற்பெயர் கண்ணனார். கீரன் என்பது தந்தையின் பெயர். காவிதி இவர் பெற்ற பட்டம். (அபி.சிந்.).

**கிடங்கன்பெருமாள்முதலியார்** *kiḍaṅgaṉ-perumāḷ-mudaliyār,* பெ.(n.) ஒரு தமிழ்ப் புலவர் (அபி.சிந்.); a Tamil poet.

*[கிடங்கன் + பெருமாள் + முதலியார்.]*

ஒருமுறை அரசன் இவரை அறம் வளர்ப்பவர் யாவர் எனக் கேட்க இவர் வேளாளரே என்றார். அரசர்கள் இல்லையா எனக் கேட்டதற்கு இவர் பதில் சொல்லாமலிருக்க அரசன் இவரைக் கொலை செய்தான். பின் ஒருமுறை இவ்வரசனது மகனைப் பகைவர் துரத்திவர அவன் கிடங்கன் பெருமாளின் வீட்டில் அடைக்கலம் புகுந்தான். கிடங்கன் பெருமாளின் மகன் தன் மகனை இளவரசன் எனக் காட்டி அரசகுமாரனைக் காத்தான். தந்தையைக் கொன்றதையும் கருதாமல் தன் மகனைக் காத்ததை எண்ணி வேளாளரே அறம் வளர்ப்பவர் எனக் கூறி மன்னன் சிறப்பு செய்தான் (அபி.சிந்.).

**கிடங்கில்காவிதிபெருங்கொற்றனார்** *kiḍaṅgil-kāviti-peruṅ-koṟṟaṉār,* பெ.(n.) கழகக் காலப்புலவர்; a poet in Šaṅgam age.

*[கிடங்கில் + காவிதி + பெரும் + கொற்றனார்.]*

நற்றிணை 364–ஆம் பாடலைப் பாடியவர். கொற்றன் எனப் பலர் இருத்தலின் அவர்களில் இருந்து தனித்துத் தெரிய பெருங்கொற்றனார் எனப்பட்டார். இவர் முல்லைத் திணையைப் பாடுவதில் வல்லவர் (அபி.சிந்.).

**கிடங்கிற்குலபதிநக்கண்ணனார்** *kiḍaṅgiṟ-kulapati-nakkaṇṇaṉār,* பெ.(n.) கழகம் (சங்கம்) மருவிய காலப் புலவர்; the poet who belonged to last ancient Šaṅgam.

*[கிடங்கில் + குலபதி + நக்கண்ணனார்.]*

இவர் பெயர் கண்ணனாராக இருக்கலாம். மற்றைய அடைமொழிகள் இவரது ஊரைக் குறிப்பதாக இருக்கலாம். இவர் குறுந்தொகை 252–ஆம் பாடலைப் பாடியவர் (அபி.சிந்.).

**கிடந்து** *kiḍandu,* வி.அ.(adv.) குறிப்பிட்ட நிலையில் சிக்கி; மாட்டிக் கொண்டு; விடுபட முடியாமல்; having got caught in a specified state with no way out. *வறுமையில் கிடந்து உழல்கிறோம் (உ.வ.). மகனைக் காணோம் என்று நான் கிடந்து தவிக்கிறேன் (உ.வ.).*

*[கிட - கிடந்து.]*

**கிடந்துருளு–தல்** *kiḍanduruḷu-,* 16 செ.கு.வி. (v.i.) படுக்கையில் படுத்து உருளுதல்; rolling in bed; restlessness in bed (சா.அக.).

*[கிடந்து + உருளு–தல்.]*

**கிடப்பில்இரு–த்தல்** *kiḍappil-iru-,* 3 செ.கு.வி. (v.i.) திட்டம், தீர்மானம் போன்றவற்றை செயற்படுத்தாமல் காலம் செல்ல விட்டிருத்தல்; நிறுத்தியிருத்தல்; allow a plan, etc., to be in cold storage. *'இந்தத் திட்டம் மூன்று ஆண்டுகளாகக் கிடப்பில் இருந்து வருகிறது'.*

*[கிடப்பில் + இரு–த்தல்.]*

**கிடப்பில்போடு-தல்** *kidappil-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) திட்டம், தீர்மானம் போன்றவற்றைச் செயற்படுத்தாமல் காலம் செல்ல விடுதல், விட்டு வைத்தல், நிறுத்தி வைத்தல்; put a plan, etc., in cold storage; put on ice. *ஆறுகளை இணைப்பது பற்றிய முடிவு நெடு நாட்களாகவே கிடப்பில் போடப்பட்டுள்ளது.*

*[கிடப்பில் + போடு-தல்.]*

**கிடாம்பிநயினார்** *kidāmpi-nayinār,* பெ.(n.) மணவாள மாமுனிக்கு ஆசிரியர்; teacher of *manavāla-mā-muni* (அபி.சிந்.).

*[கிடாம்பி + நயினார்.]*

**கிடாரங்காய்** *kidāraṅ-kāy,* பெ.(n.) கடாரங்காய்; citron (சா.அக.).

*[கிடாரம் + காய்.]*

**கிடாரமுக்கி** *kidāramukki,* பெ.(n.) ஒரு மூலி; an unknown plant (சா.அக.).

*[கிடாரம் + அமுக்கி.]*

**கிடிபகுட்டம்** *kidiba-kuttam,* பெ.(n.) பன்றித் தோல் போல் கனத்துக் காணும் ஒரு வகைக் குட்ட நோய்; a kind of leprosy characterised by the thickening of the skin like hog's skin, which is often the first manifestation of the diseases.

*[கிடிப + குட்டம்.]*

இதனால் உடம்பு பச்சை நிறம் அடைந்து, நமைச்சல் உண்டாகி, சதை வழுவுண்டு, கொப்புளங்கள் எழும்பி ஊன் வடிந்து நாற்றம் வரும் (சா.அக.).

**கிடுக்கிப்பிடி** *kidikki-p-pidi,* பெ.(n.) விடுபட முடியாதபடி கையாலோ, காலாலோ பிடித்துக் கொள்கிற அல்லது பின்னிக் கொள்கிற ஒரு பிடி; vice-like grip; wrenching hold. *அவனுடைய கிடுக்கிப் பிடியில் இருந்து யாரும் திமிர முடியாது.*

*[கிடுக்கி + பிடி.]*

**கிடுகிடு** *kidu-kidu,* பெ.அ.(adj.) தலைச் சுற்றல் ஏற்படக் கூடிய அளவுக்கு ஆழமுடைய; deep, enogh to cause dizziness. *கிடுகிடு பள்ளம் கிடுகிடு பாதாளம்.*

*[கிடு + கிடு.]*

**கிடுகிடுவென்று** *kidu-kidu-v-enru,* வி.அ. (adv.) 1. ஒரு செயலைச் செய்கையில் தடங்கல் எதுவும் இல்லாமல்; in doing quickly; quickly. *நேரமாகிறது, கிடு கிடுவென்று புறப்படு! (உ.வ.). கிடுகிடு வென்று வேகமாக நடந்தான் (உ.வ.). தேர்வுக்குப் போவதற்கு முன் ஒரு முறை பாடத்தைக் கிடுகிடுவென்று பார்த்துக் கொள்! (உ.வ.).* 2. மிக விரைவாக; indicating price rapidly. *நெல் விலை கிடுகிடுவென்று இறங்கிவிட்டது.*

*[கிடுகிடு + என்று.]*

**கிடைதலை** *kidai-talai,* பெ.(n.) சாகும் காலம் (யாழ்.அக.); moment of death.

*[கிடை + தலை.]*

**கிடைபொருந்தாமை** *kidai-porundāmai,* பெ.(n.) படுக்கையிற் பொருந்தாமை; restlessness in bed as of sick persons (சா.அக.).

*[கிடை + பொருந்தாமை.]*

**கிண்கிண்ணிருமல்** *kiṇkiṇṇirumal,* பெ.(n.) கிண்ணென்று ஓசையெழுப்பும் இருமல்; cough with a metallic sound (சா.அக.).

*[கிண்கிண் + இருமல்.]*

**கிண்ணிக்கருப்பூரம்** *kiṇṇi-k-karuppūram,* பெ.(n.) கருப்பூரத்தைக் கிண்ணி வடிவில் ஊற்றுகை; refind camphor cast in a mould of cup - *Cup-camphor.*

*[கிண்ணி + கருப்பூரம். கிண்ணி = சிறு வட்டில்.]*

**கிண்ணிக்கால்** *kiṇṇi-k-kāl,* பெ.(n.) நாயின் மாறுபட்ட கால்; a deformed leg of a dog (சா.அக.).

*[கிண்ணி + கால்.]*

**கிண்ணித்தைலம்** *kinni-t-tailam,* பெ.(n.) கிண்ணியின் உட்பக்கம் பதங்கம் ஏறும்படி செய்த எண்ணெய்; medicated oil which is prepared by process of sublimation in which the vapour is made to condense again as a deposit on the inner side of a cup or receiver (சா.அக.).

*[கிண்ணி + **Skt.** தைலம்.]*

**கிணற்றுச்சத்தம்** *kiṉaṟṟu-c-cattam,* பெ.(n.) **கிணற்றொலி** பார்க்க; see *kiṉaṟṟoli* (சா.அக.).

*[கிணற்று + **Skt.** சத்தம்.]*

**கிணற்றொலி** *kiṉaṟṟoli,* பெ.(n.) மெலிவான ஓசை; weak or dull sound (சா.அக.).

*[கிணற்று + ஒலி.]*

**கிணீலெனல்** *kiṉīl-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; signifying ringing, tinkling, clinking sound (செ.அக.).

*[கிணில் + எனல்.]*

**கிணுகினி** *kiṉu-kiṉi,* பெ.(n.) உயிர்க் (கிருமிக்) கொல்லி; a remedy which expels worms from animal bodies - *Vermifuge* (சா.அக.).

*[கிணு + கினி.]*

**கிணுகிணுப்பு** *kiṉu-kiṉuppu,* பெ.(n.) காதில் எழும் ஒரு வகை ஒலி; a peculiar tinkling sound of the ear - *Tinnitus aurium* (சா.அக.).

*[கிணு + கிணுப்பு.]*

**கிராய்த்தல்** *kirāy,* 11 செ.கு.வி.(v.i.) சுவர் முதலியவற்றைத் தேய்த்துத் துலக்குதல்; to make level and smooth by rubbing, polishing (செ.அக.).

*[சிராய் – கிராய்.]*

**கிராய்** *kirāy,* பெ.(n.) 1. புற்காடு; turf. 2. கருஞ்சேற்று நிலம்; a kind of soil in agricultural track, black and marshy (செ.அக.).

*[கிறு – கிறாய் – கிராய்.]*

**கிராயடி–த்தல்** *kirāy-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) புற்பற்றை போடுதல்; to turf (செ.அக.).

*[கிராய் + அடித்தல்.]*

**கிராயது** *kirāyadu,* பெ.(n.) செடிவகை; chiretta - *Swertia chirata* (செ.அக.).

**கிருதம்**[3] *kirudam,* பெ.(n.) மரவகை; red Indian laburnum - *Cassia marginata* (செ.அக.).

*[குருதி (மாம்) – கிருதம்.]*

**கிருதிமாசம்** *kirudi-māšam,* பெ.(n.) ஆனைத்திப்பிலி கொடிவகை; elephant-pepper climber - *Scindapsus officinalis* (சா.அக.).

*[கிருதி + மாசம்.]*

**கிருமநிசத்தினி** *kiruma-nišattiṉi,* பெ.(n.) திப்பிலி; long-pepper - *Piper longum* (சா.அக.).

*[கிரும + நிசத்தினி.]*

**கிருந்தி** *kirundi,* பெ.(n.) கஞ்சாங்கோரைச் செடி; a kind of plant - *Ocimum album.*

*[கிரந்தி – கிருந்தி.]*

இது 1–2 அடி உயரமிருக்கும். வீட்டுப் புறக் கடைகளிலும் குப்பைகளிலும் இது முளைத்திருக்கும். இதன் சாற்றைப் பிழிந்து குழந்தைகளுக்கு வரும் செரியாமை, காய்ச்சல், இருமல் இவைகளுக்குக் கொடுப்பார்கள். இது குடல்களுக்கும் இரைப்பைக்கும் வலுவைக் கொடுத்து செரிக்கும் தன்மையைக் கூட்டும் (சா.அக.).

**கிருமியரி** *kirumiyari,* பெ.(n.) வாயு விளங்கத்தி (கொடிவகையி)ன் அரிசி போன்ற மணி; wind - berry pepper-corn (செ.அக.).

*[**Skt.** krmi + hari > த.கிருமியரி.]*

**கிருதவேதனா** *kiruda-vēdaṉā,* பெ.(n.) பேய்ப்பீர்க்கு; wild bitter gourd (சா.அக.).

*[கிருத + வேதனா.]*

**கிருதமாலிகை** *kiruda-māligai,* பெ.(n.) கொன்றை; cassia - *Cassia fistula* (சா.அக.).

*[கிருத + மாலிகை.]*

**கிருதமண்டாது** *kiruda-m-aṇḍātu,* பெ.(n.) சிறு புள்ளடி; unifoliate trefoil - *Hedysarum gangeticum* (சா.அக.).

*[கிருத + மண்டாது.]*

**கிருதாளி** *kirudāḷi,* பெ.(n.) தாளிப்பனை; talipot tree - *Corypha umbraculifera* (சா.அக.).

*[கிரு + தாளி.]*

**கில்லிதாண்டு** *killi-tāṇḍu,* பெ.(n.) கிட்டிப்புள்; tip-cat.

*[கில்லி + தாண்டு.]*

**கிலுங்காகிதம்** *kiluṅgāgidam,* பெ.(n.) நாங்கில் மரம்; Ceylon iron-wood - *Mesua ferrea* (சா.அக.).

**கிழக்கி** *kiḻakki,* பெ.(n.) ஒன்றரை அடி நீளமுள்ள கடல் மீன் வகை (பதார்த்த.941); whiting sea-fish - Olive-green, attaining 1 ft. in length - *Sillago sihama* (செ.அக.).

*[கீழக்கி – கிழக்கி.]*



**கிழக்கோட்டான்** *kiḻa-k-kōṭṭāṉ,* பெ.(n.) வீட்டில் நடக்கும் எல்லாச் செயல்களையும் கவனித்துக் கொண்டிருக்கும் வயதானவரை இகழ்ச்சியாகக் கூறுகை; said contemptuously old hag; old geezer. *அந்தக் கிழக்கோட்டான் தான் எப்போதும் பேசிக் கொண்டு வாசலிலேயே உட்கார்ந்திருக்கும்.*

*[கிழம் + கோட்டான்.]*

**கிழங்குக்கொடி** *kiḻaṅgu-k-koḍi,* பெ.(n.) 1. வள்ளிக் கொடி; creeper of sweet-potato. 2. பிரண்டைக் கொடி; a adamantine creeper (சா.அக.).

*[கிழங்கு + கொடி.]*

**கிழங்குப்பிரண்டை** *kiḻaṅgu-p-piraṇḍai,* பெ.(n.) மணிப்பிரண்டை; bulbous root creeper - *Cissus bifida* (சா.அக.).

*[கிழங்கு + பிரண்டை.]*

**கிழங்குமணி** *kiḻaṅgu-maṇi,* பெ.(n.) **கிழங்குப்பிரண்டை** பார்க்க; see *kiḻaṅgu-p-piraṇḍai* (சா.அக.).

**கிழடுதட்டு-தல்** *kiḻaḍu-taṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) வெளிப்படையாகத் தெரியும் வகையில் முதுமைத் தோற்றம் ஏற்படுதல்; age in a visible way. *பழைய நடிகர் தற்போது கிழடுதட்டிப் போய் பார்க்கவே அருவருப்பாக இருக்கிறார்.*

*[கிழடு + தட்டு-தல்.]*

**கிழத்து** *kiḻattu,* பெ.(n.) ஒரு வகை மீன்; a kind of fish (சா.அக.).

*[கீழ்த்து – கிழத்து.]*

**கிழமரம்** *kiḻa-maram,* பெ.(n.) 1. முதிர்ந்த மரம்; old tree. 2. நாட்சென்ற மரம்; long-standing tree (சா.அக.).

*[கிழம் + மரம்.]*

**கிழார்க்கீரனெயிற்றியார்** *kiḻār-k-kīraṉe-y-iṟṟiyār,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய காலப் புலவர்; the poet who belonged to the last Šaṅgam age (அபி.சிந்.).

*[கிழார் + கீரன் + எயிற்றியார்.]*

**கிழிகடை** *kiḻi-kaḍai,* பெ.(n.) மிக இளப்பம் (யாழ்.அக.); extreme lowness, as of a person or thing (செ.அக.).

*[கிழி + கடை.]*

**கிழிசல்** *kiḻišal,* பெ.(n.) 1. கிழிவு; tear, rent in cloth. 2. கிழிந்தது; that which is torn, tattered garment (செ.அக.).

*[கிழி – கிழிசல்.]*

**கிழியஞ்சட்டி** *kiḻi-y-añ-caṭṭi,* பெ. (n.) மண்ணால் செய்த அகல்; earthen bowl (செ.அக.).

**மறுவ. கார்த்திகை சட்டி**

*[கிழியல் + சட்டி.]*

**கிள்ளவடு** *kiḷḷavaḍu,* பெ.(n.) கரண்டகம் (இலங்.); small metal box for keeping quicklime.

*[கிள்ள + வடு.]*

**கிளபுறம்** *kiḷa-puṟam,* பெ.(n.) காற்றுப் படாத பக்கம்; leeward (செ.அக.).

**கிள்ளாக்கை** *kiḷḷākkai,* பெ.(n.) உண்டியற் சீட்டு (யாழ்.அக.); bill of exchange, hundi (செ.அக.).

*[கிள் – கிள்ளாக்கை.]*

**கிள்ளிமங்கலம்கிழார்** *kiḷḷi-maṅgalam-kiḻār,* பெ. (n.) கடைச் சங்கம் மருவிய புலவர்; the poet who belonged to the last šaṅgam (அபி.சிந்.).

*[கிள்ளி + மங்கலம் + கிழார்.]*

**கிள்ளியெறி–தல்** *kiḷḷi-y-eṟi-,* 3 செ.கு.வி. (v.i.) எண்ணம், நினைவு போன்றவற்றை நீக்குதல்; nip off one's thoughts, memories, etc. *கடந்தகால நிகழ்ச்சிகள் அனைத்தையும் கிள்ளியெறிந்துவிட முயன்றான்.*

*[கிள்ளி + எறி–தல்.]*

**கிள்ளிவளவன்** *kiḷḷi-vaḷavaṉ,* பெ.(n.) புகாரை ஆண்ட சோழ மன்னர்களில் ஒருவர்; one of the Cōḷā king who ruled Pugār. *இவன் கரிகாற்சோழனின் மகனாக இருக்கலாம் (அபி.சிந்.).*

*[கிள்ளி + வளவன்.]*

**கிளட்டன்** *kiḷaṭṭaṉ,* பெ.(n.) ஒரு வகைக் கீரிப்பிள்ளை இனம்; common Indian mungoose - *Indian ichneumon. இது தான் பிடிக்கும் உயிர்களை விழுங்கும் தன்மையது (அபி.சிந்.).*

*[கிள – கிளத்தன்.]*

**கிளா** *kiḷā,* பெ.(n.) 1. களா வகை; a low spreading spiny evergreen shrub - *Carissa spinarum. "தீம்புளிக் களாவொடு துடரி முனையின்".* 2. மரவகை; large bengal current - *Carissa carandas.* 3. களா வகை; small lance-crenate-acute-leaved whortle berry - *Vaccinium nilgherrense.* 4. செடிவகை; whortle berry - *Vaccinium* (செ.அக.).

*[களா – கிளா.]*

**கிளாச்சி** *kiḷācci,* பெ.(n.) புல்வகை; a kind of grass (செ.அக.).

**கிளாசுக்காரன்** *kiḷāšukkāraṉ,* பெ.(n.) 1. கப்பல் வேலையாள்; lascar. 2. மூட்டைகளைத் தைத்து ஒழுங்கு படுத்துபவன்; one who attends to packing of things by stitching, etc. (செ.அக.).

*[U.khatāši> த.கிளாசுக்காரன்.]*

**கிளிச்சிறைப்பொன்** *kiliccirai-p-poṉ,* பெ. (n.) கிளியின் சிறகைப் போன்ற வண்ணமுடைய மாற்றுயர்ந்த பொன்; one of the four varieties of refined gold resembling the colour of a parrot's wing (சா.அக.).

*[கிளி + சிறை + பொன்.]*

**கிளிசமாரீகம்** *kiḷiša-mārigam,* பெ.(n.) மாம்பழ வகை; a kind of mango - *Mangifera indica* (சா.அக.).

**கிளிஞ்சல்** *kiḷiñjal,* பெ.(n.) இரு சம ஓடுகளால் மூடப்பட்டிருக்கிற உடல் அமைப்பை உடைய கடலில் வாழும் உயிரினம். அந்த உயிரினத்தின் ஓடு; oyster or its shell. *கிளிஞ்சலைச் சிலர் உண்கிறார்கள் (உ.வ.). கடற்கரையில் கிளிஞ்சல் பொறுக்கலாம் (உ.வ.).*

*[கிழி – கிளி – கிளிஞ்சல்.]*



**கிளிஞ்சல்சுண்ணாம்பு** *kiḷiñjal-cuṇṇāmbu,* பெ.(n.) கிளிஞ்சலை நீற்றியெடுக்கும் சுண்ணாம்பு; shell lime.

*[கிளிஞ்சல் + சுண்ணாம்பு.]*

**கிளிமூக்குமாங்காய்** *kiḷimūkku-māṅgāy,* பெ. (n.) ஒரு மாமரம்; a mango tree.

*[கிளி + மூக்கு + மாங்காய்.]*

இதில் கிளி மூக்கைப் போன்ற காய் அரிதாகக் காய்க்கும். இலை அரசிலை போல் இருக்கும். பூப்பூத்த பத்தாம் நாள் காய் காய்க்கும். இப்பழத்தை உண்டு வேகமாக ஓடலாம். சித்தர்கள் உடல் இளமைக்காக வெகுநாள் காத்திருந்து இதை உண்பார்கள் (சா.அக.).

**கிளிமூக்குமீன்** *kiḷimūkku-mīṉ,* பெ.(n.) கிளி மூக்கைப் போல் வளைந்த மீன்; parrot-fish - *Dourada* (சா.அக.).

*[கிளி + மூக்கு + மீன்.]*



**கிளிவன்னம்** *kiḷi-vaṉṉam,* பெ.(n.) செடி வகை; a kind of plant (செ.அக.).

**கிளிவாய்க்கால்** *kiḷi-vāykkāl,* பெ. (n.) அணையில் தேங்கும் அதிக நீரைப் பிரித்து மீண்டும் ஆற்றில் போக்குவதற்காக அமைந்த வாய்க்கால்; surplus channel above the head sluice (செ.அக.).

*[கிளி + வாய்க்கால்.]*

**கிளிவிருத்தம்** *kiḷi-viruttam,* பெ.(n.) திரு ஞானசம்பந்தர் காலத்தில் வழங்கி வந்த புத்த நூல்; Buddis't book (அபி.சிந்.).

*[கிளி + விருத்தம்.]*

**கிளிவெட்டுப்பாக்கு** *kiḷi-veṭṭu-p-pākku,* பெ. (n.) பாக்கு வகை (யாழ்.அக.); a kind of are canut (செ.அக.).

*[கிளி + வெட்டு + பாக்கு.]*

**கிளிசோசியம்** *kiḷi-šōšiyam,* பெ. (n.) பரப்பி வைக்கப்பட்டிருக்கும் சீட்டுகளில் ஒன்றைக் கிளியை விட்டு எடுக்கச் செய்து ஒருவருக்குச் சொல்லப்படுகிற கணியம்; a kind of fortune-telling where trained parrots pick out cards containing readings regarding the fortunes of individuals.

*[கிளி + **Skt.** சோசியம்.]*

**கிளுகிளுப்பு** *kiḷu-kiḷuppu,* பெ.(n.) ஆண், பெண் இடையே ஏற்படும் சிலிர்ப்பான உணர்வு; sexual excitement. *அவளுடைய அசைவே அவனுள் கிளுகிளுப்பை ஏற்படுத்தியது.*

*[கிளு – கிளுப்பு.]*

**கிளைநதிகள்** *kiḷai-nadigaḷ,* பெ.(n.) **கிளையாறுகள்** பார்க்க; see *kiḷai-y-āṟugaḷ.*

*[கிளை + நதிகள்.]*

**கிளையாறுகள்** *kiḷai-y-āṟugaḷ,* பெ.(n.) பெரிய ஆற்றில் இருந்து பிரியும் சிற்றாறுகள்; tributary rivers (அபி.சிந்.).

*[கிளை + ஆறுகள்.]*

**கிளைமொழி** *kiḷai-moḻi,* பெ.(n.) இலக்கண அமைப்பு, சொற்கள், உச்சரிப்பு ஆகிய வற்றால் பொது மொழியிலிருந்து அல்லது தரப்படுத்தப்பட்ட மொழியிலிருந்து சில மாறுபாடுகளுடன் ஒரு வட்டாரத்தில் அல்லது ஒரு பிரிவினரால் பேசப்படும் மொழி வகை; dialect.

*[கிளை + மொழி.]*

**கிளைவாய்க்கால்** *kiḷai-vāykkāl,* பெ.(n.) தாய் வாய்க்காலில் இருந்து பிரியும் சிறு வாய்க்கால்; channel branching from the main channel (செ.அக.).

*[கிளை + வாய்க்கால்.]*

**கிறக்கம்** *kiṟakkam,* பெ.(n.) மிகுந்த தூக்கம், குடிபோதை முதலியவற்றால் கண்கள் உள்ளிழுத்துக் கொள்ளும் மயக்க நிலை; stupor; drowsiness; languor. *தூக்கக் கிறக்கம்.*

**கிறக்கு-தல்** *kiṟakku-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவரைத் தூக்கம், காமம் முதலியன நிலைதடுமாறச் செய்தல், மயக்குதல்; induce languor, stupor, etc., *தூக்கம் கிறக்குகிறது.*

**கிறங்கு-தல்** *kiṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒருவர் தூக்கம், குடிபோதை முதலிய வற்றால் நிலை தடுமாறுதல்; மயங்குதல்; be in languor, stupor, etc., *போதைப் பொருள்கள் நரம்பைத் தூண்டிக் கிறங்க வைக்கும். கேட்பவரைக் கிறங்க வைக்கும் கணீரென்ற குரல்.* 2. சோர்வடைதல்; get jaded. *வெயிலில் நடந்து வந்ததால் குழந்தை கிறங்கி போய்விட்டா.*

**கிறீச்சனம்** *kiṟīccaṉam,* பெ.(n.) நோய் வகை (யாழ்.அக.); a disease (செ.அக.).

**கிறுதாசிகம்** *kiṟu-tāšigam,* பெ.(n.) நீர் முள்ளி; water thistle - *Barleria longifolia* (சா.அக.).

**கிறுதுவேதன்** *kiṟudu-vēdaṉ,* பெ.(n.) கொடிவகை; சமையலுக்குப் பயன்படும் காய் காய்க்கும் கொடிவகை (திவா.); sponge gourd, strainer-vine - *Luffa acutangula* (செ.அக.).

**கின்னரப்பறவை** *kiṉṉara-p-paṟavai,* பெ.(n.) இனிய இசைபாடும் பறவை; a bird singing with a sweet voice - *Canary bird* (சா.அக.).

**கின்னரப்பிரமையர்** *kiṉṉara-p-piramaiyar,* பெ.(n.) ஒரு சிவனடியார்; a pious of Šivā.

**கின்னரமிதுனம்** *kiṉṉara-miduṉam,* பெ.(n.) 1. ஆண், பெண்ணாக இணைந்து இரட்டையாகக் காணப்படும் கின்னரப் பறவைகள் (சீவக.657, உரை); a species of bird that goes in pairs. 2. வானுலகில் வாழும் ஒரு வகைக் கடவுளரி (தேவர்களி)ன் ஆண், பெண்ணினை; celestial choristers that go in pairs. *"கின்னர மிதுனங்களுந் தந்தங் கின்னரந் தொடுகிலோ மென்றனரே" (திவ்.பெரியாழ்.3, 6, 5) (செ.அக.).*

*[Skt. kiṉṉara + மிதுனம்.]*

**கின்னரிக்கன்னி** *kiṉṉari-k-kaṉṉi,* பெ.(n.) ஆளி விதை; linseed (சா.அக.).

**கின்னரிச்சுரை** *kiṉṉari-c-curai,* பெ.(n.) உருண்டையான சுரைக்காய்; lute-gourd or calabash climber - *Lagenaric vulgaris.*

*[கின்னரி + சுரை.]*

இதன் ஒடு கின்னரி, வீணை முதலிய தந்தியாலான இசைக்கருவிகளுக்குப் பயன்படும் (சா.அக.).

**கின்னாரப்பெட்டி** *kinnāra-p-petti*, பெ.(n.) ஆர்மோனியம் முதலிய வாத்தியப் பெட்டி; musical instrument, as harmonium, piano (செ.அக.).

*[Skt. kinnāra + பெட்டி.]*



**கீசம்** *kīšam*, பெ.(n.) 1. குரங்கு; monkey. 2. குருவி; chirping bird. 3. நிருவாணம்; nakedness (சா.அக.).

*[கீச்சு – கீசம்.]*

**கீடகம்** *kīdagam*, பெ.(n.) 1. புழு; worm. 2. பூச்சி; insect (சா.அக.).

*[கீள் – கீடகம்.]*

**கீடரி** *kīdari*, பெ.(n.) கந்தகம்; sulphur (சா.அக.).

**கீத்துருணி** *kītturuni*, பெ.(n.) கேந்திப்பூ; a flower (சா.அக.).

*[கீத்து + உருணி.]*

**கீதவம்** *kītavam*, பெ.(n.) சுற்றிலும் முள்ளாலான காய் காய்க்கக் கூடிய செடிவகை (திவா.); thorn-apple - *Datura* (செ.அக.).

*[கீள் + (தோவை) தவம்.]*

**கீரம்** *kīram*, பெ.(n.) விளக்கு (அக.நி.); lamp (செ.அக.).

*[கீள் – கீரம்.]*

**கீரைக்காய்** *kīrai-k-kāy*, பெ.(n.) முள்வெள்ளரி (சூடா.); kakri-melon - *Cucumis melo-utilissimus* (செ.அக.).

*[கீரை + காய்.]*

**கீரைக்கும்மட்டி** *kīrai-k-kummatti*, பெ.(n.) குமட்டிக் கீரை; a variety of greens - *Celosia nodiflora* (சா.அக.).

*[கீரை + கும்மட்டி.]*

**கீல்** *kīl*, பெ.(n.) கருமை நிறங் கொண்ட பூசுங் கீலெண்ணெய்; pitch, tar - *pix liquida* (செ.அக.).

*[U.qir > த. கீல். M. kīl > த. கீல்.]*

**கீல்பூசு-தல்** *kīl-pūšu-*, 4 செ.கு.வி.(v.i.) கீலெண்ணெய் பூசுதல்; to tar (செ.அக.).

*[கீல் + பூசு-,]*

**கீல்வத்தி** *kīl-vatti*, பெ.(n.) கீலெண்ணெய் பூசப்பட்ட திரி; tarred wick (செ.அக.).

*[கீல் + வத்தி.]*

**கீல்வாயு** *kīl-vāyu*, பெ.(n.) உடற்சந்துகளில் உண்டாகும் ஊழை நோய்; rhematism, as in the joints (செ.அக.).

*[கீல் + வாயு.]*

**கீழ்கண்ட** *kīl-kanda*, பெ.அ.(adj.) **கீழ்காணும்** பார்க்க; see *kīl-kānum*

*[கீழ் + கண்ட.].*

**கீழ்க்காணும்** *kīl-k-kānum*, பெ.அ.(adj.) கீழே கொடுக்கப்பட்டுள்ள; அடியில் குறிப்பிடப்பட்ட; the following. *'அந்த வேலைக்கு விண்ணப்பம் வேண்டுபவர்கள் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும்'*

*[கீழ் + காணும்.]*

**கீழ்க்கண்பார்வை** *kīl-k-kan-pārvai*, பெ.(n.) கீழ்ப்பார்வை; down look; a squint or awry look; looking askance (சா.அக.).

*[கீழ் + கண் + பார்வை.]*

**கீழ்ச்சாதி** *kīḻ-c-cādi,* பெ.(n.) இழி குலம் (நன்.226, உரை); low caste (செ.அக.).

**கீழ்த்தாடையெலும்பு** *kīḻ-t-tāḍai-y-elumbu,* பெ.(n.) 1. கீழ் வரிசைப் பற்கள் நிறைந்த கீழ்வாய் எலும்பு; the lower jaw in which the lower teeth are fixed. 2. வில் போல் வளைந்த மோவாய்க்கட்டை எலும்பு; bone of the chin bent like arrow (சா.அக.).

*[கீழ் + தாடை + எலும்பு.]*

**கீழ்ப்பக்கம்** *kīḻ-p-pakkam,* பெ.(n.) 1. கீழாக உள்ள பாகம்; the lower part. 2. உள் பாகம்; the under or inner side of a thing. 3. அடிப்பாகம்; the bottom portion; the under surface (சா.அக.).

*[கீழ் + பாகம்.]*

**கீழ்ப்பல்** *kīḻ-p-pal,* பெ.(n.) கீழ் வரிசைப் பல்; the lower set of teeth (சா.அக.).

*[கீழ் + பல்.]*

**கீழ்வணை** *kīḻ-vaṇai,* பெ.(n.) சிற்றூர் ஆளுவத்தின் கீழ் குமுகாயப் பணி செய்யும் தொழிலாளர்கள்; service of a village department of labour. *"இந்த குணமே நகை புரத்து ஏறின வியாபாரிகளும், வெள்ளாளரும், சங்கரப்பாடியரும், பட்டனவரும் உள்ளிட்ட குடிகளும், தச்சர், கொல்லர், தட்டார், கோவியர் உள்ளிட்ட கீழ் வணைகளும்" (தெ.கல்.தொ.4, கல்.233).*

*[கீழவு + அணை.]*

**கீழ்மூக்கன்** *kīḻ-mūkkaṉ,* பெ.(n.) கற்றாழை; aloe genus (சா.அக.).

*[கீழ் + மூக்கன்.]*

**கீழ்வயிற்றுபாகம்** *kīḻ-vayiṟṟu-pāgam,* பெ.(n.) 1. வயிற்றின் அடிப்பாகம்; the lower abdomen - *Abdominal region.* 2. அடி வயிறு; the lower part of the belly - *Abdomen* (சா.அக.).

*[கீழ் + வயிற்று + பாகம்.]*

**கீழங்கவெலும்பு** *kīḻaṅga-v-elumbu,* பெ.(n.) உடம்பின் கீழ்ப் பகுதி உறுப்புகளின் எலும்புகள்; bones of the organs in the lower region of the body (சா.அக.).

*[கீழ் + அங்க + எலும்பு.]*

**கீழாடை** *kīḻ-āḍai,* பெ. (n.) கூத்து முதலிய வற்றில் ஆண்கள் இடுப்புக்குக் கீழ் அணியும் ஆடை; outer garments worn below the hip by male folk artistes.

*[கீழ் + ஆடை.]*

**கீழே**[1] *kīḻē,* வி.எ.(adv.) தரையில், நிலத்தில்; below; on the ground or floor. *மாடியிலிருந்து பார்த்தால் கீழே செல்பவர் சிறு புள்ளிகளாகத் தெரிவர்.*

**கீழே**[2] *kīḻē,* இ.சொ. (part.) அடியில்; பின்பக்கத்தில்; below; under. *கருவிழி இமைக்குக் கீழ் செருகிற்று. தலையணையின் கீழ் பணம் வைத்திருக்கிறேன் .*

*[கீழ் + கீழே.]*

**கீழரைக்கால்** *kīḻarai-k-kāl,* பெ.(n.) ஒரு பின்னவெண் 1/2560; a fraction (செ.அக.).

*[கீழ் + அரை + கால்.]*

**கீழை** *kīḻai,* பெ.அ.(adj.) கிழக்கத்திய; eastern; oriental. *கீழை நாடுகள். கீழை மொழிகள்.*

*[கீழ் + கீழை.]*

**கீழையகத்தாழ்வான்** *kīḻai-y-agattāḻvāṉ,* பெ.(n.) நாதமுனிகளிடம் பனுவலை இசை யுடன் கேட்ட மாலியர்; a vaiṇavā sage (அபி.சிந்.).

**கீழையூர்சடகோபாதாசர்** *kīḻai-y-ūr-šaḍagōpātāšar,* பெ.(n.) அரிசமய தீபம் என்னும் நூலின் ஆசிரியர்; author of arišamaya-tīpam (அபி.சிந்.).

*[கீழையூர் + சடகோபா + தாசர்.]*

**கீழுறுப்பு** *kīḻ-uṟuppu,* பெ.(n.) 1. உடம்பின் கீழ்ப் பகுதியில் உள்ள உறுப்பு; the organs of the lower region of the body. 2. ஆண் அல்லது பெண் குறி; the genital of the male or female. 3. மல வாயில்; the anus (சா.அக.).

*[கீழ் + உறுப்பு.]*

**கீற்கட்டி** *kīṟ-kaṭṭi,* பெ.(n.) கீலெண்ணெய்யுடன் கலக்கும், மரத்திலிருந்து வடிந்து உறைந்த பால் (பிசின்); pitch (செ.அக.).

*[கீல் + கட்டி.]*

**கீற்பாய்** *kīṟ-pāy,* பெ.(n.) கீலெண்ணெய் பூசின துணி; tarpaulin, tarred canvas (செ.அக.).

*[கீல் + பாய்.]*

**கீனு** *kīṉu,* பெ.(n.) சீமை காண்டாமிருக அரத்தம்; kino (சா.அக.).

**குக்கம்** *kukkam,* பெ.(n.) இந்திரகோபம்; தம்பலப்பூச்சி; cochineal insect - *Coccus cacti* (சா.அக.).

**குக்கிடமண்டபம்** *kukkiḍa-maṇḍapam,* பெ.(n.) காசியில் உள்ள முத்தி மண்டபம்; mutti-maṇḍapam in kāśi (அபி.சிந்.).

*[குக்கிட + மண்டபம்.]*

**குக்கலாதி** *kukkalāti,* பெ.(n.) வாலுளுவை; spindle tree - *Celastrus paniculata* (சா.அக.).

*[குக்கல் + ஆதி.]*

**குக்கிலி** *kukkili,* பெ.(n.) செம்போத்து (யாழ்.அக.); crow pheasant (செ.அக.).

*[குக்கில் – குக்கிலி.]*

**குக்கில்புகை** *kukkil-pugai,* பெ.(n.) குங்கிலியப் புகை; fumes or incense of Indian dammer (சா.அக.).

*[குக்கில் + புகை.]*

**குக்கிற்சூரணம்** *kukkiṟ-śūraṇam,* பெ.(n.) தூளாக உள்ள ஒருவகை மருந்து; a kind of medicinal powder prepared by stuffing a fowl with dammer-resin, calcinating and pulverising it (செ.அக.).

*[குக்கில் + சூரணம்.]*

**குக்குடத்தவரை** *kukkuḍa-t-tavarai,* பெ.(n.) கோழியவரை; west Indian sea-side bean - *Canavelia obtusifolia* (சா.அக.).

*[குக்குடத்து + அவரை.]*

**குகம்** *kugam,* பெ.(n.) 1. மலைக்குகை; cave, cavern. *"மலைக்குகரத்து" (அரிசமய. பக்திசார.37).* 2. சுரங்கம்; cavity, hollow, subterranean passage. *"குகர நீணெறி" (பாரத.வேத்.2) (செ.அக.).*

*[Skt. guha > த. குகம்.]*

**குகன்வேர்** *kukaṉ-v-ēr,* பெ.(n.) வேல மரத்து வேர்; root of acacia tree (சா.அக.).

*[குகன் + வேர்.]*

**குகாவிருட்சம்** *kugā-viruṭcam,* பெ.(n.) மலை மா; hill balsam - *Balsmodendron caudatum* (சா.அக.).

*[குகா + Skt. விருட்சம்.]*

**குகுதன்** *kugudaṉ,* பெ.(n.) பத்து (தச) வகை நாடியுளொன்று; a principal tubular vessel of the human body, one of taśa-nāḍi (செ.அக.).

*[குங்கு – குகு – குகுதன்.]*

**குகுலா[1]** *kugulā,* பெ.(n.) ஒருவகைப் பூண்டு (மலை.); christmas rose, herb - *Helleforus niger.*

*[குகு – குகுலா.]*

**குகுலா[2]** *kugulā,* பெ.(n.) தேனீ; honey bee (செ.அக.).

*[குங்குல் – குகுலா.]*

**குகைநமச்சிவாயமூர்த்திகள்** *kugai-namaccivāya-mūrttigaḷ,* பெ.(n.) திருவண்ணாமலையில் ஒரு குகையில் உள்ளொடுக்கி (நிட்டை)யில் இருந்த சித்தர்; Śiddhar (அபி.சிந்.).

*[குகை + நமச்சிவாயம் + மூர்த்தி.]*

**குகைமறைஞானசம்பந்தநாயனார்** *kugai-maṟai-ñāṉa-śambanda-ṉāyaṉār,* பெ.(n.) சிதம்பரத்தில் இருந்த சிவ ஆசாரியர்; the Śaivā teacher in Chidambaram. *இவர் தமிழில் அருணகிரிபுராணம் பாடியுள்ளார் (அபி.சிந்.).*

**குகைமேனாதத்தி** *kugai-mēṉāda-t-ti*, பெ. (n.) தங்கத்தை (சுவர்ண பேதி) இளக்கச் செய்யும் நீர்மம் (மூ.அ.); a drug which dissolves gold (செ.அக.).

*[குகை + மேல் + ஆதவதி.]*

**குகைவீசம்** *kugai-v-īśam*, பெ.(n.) கல்நார்; asbestos (சா.அக.).

*[குகை + வீசம்.]*

**குங்கியாஇசுதிங்கி** *kuṅgiyā-iśutiṅgi*, பெ. (n.) கப்பற் சதுரப்பாய்களின் கீழ் மூலைகளை மேலிழுப்பதற்குக் கட்டியிருக்குங் கயிறு; (M.Navi.86); clew lines (செ.அக.).

**குங்கிலியக்கலையர்** *kuṅgiliya-k-kalaiyar*, பெ. (n.) சிவனடியார் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் (பெரியபு.); name of a canonized Śivā saint, one of 63 Nayanmars (செ.அக.).

*[குங்கிலியம் + கலையர்.]*

**குங்கிலியன்** *kuṅgiliyaṉ*, பெ.(n.) கள்ளரினத்தார்க்கு வழங்கப்படும் பட்டம்; tittle of kaḷḷar's (அபி.சிந்.).

**குங்குமக்கோவை** *kuṅguma-k-kōvai*, பெ.(n.) செங்கோவை; red bitter melon - *Coccinea indica* (சா.அக.).

*[குங்கும + கோவை.]*

**குங்குமப்பயறு** *kuṅguma-p-payaṟu*, பெ.(n.) பாசிப்பயறு இனத்தைச் சேர்ந்த ஒருவகை சிகப்புப் பயறு; a red variety of the species of green-gram (சா.அக.).

*[குங்கும +பயறு.]*

**குங்குமபாண்டியன்** *kuṅguma-pāṇḍiyaṉ*, பெ.(n.) மதுரையை ஆண்ட வாகுவலய பாண்டியனின் மகன்; son of vāguvalaya-pāṇḍiyaṉ (அபி.சிந்.).

*[குங்கும + பாண்டியன்.]*

**குங்குமவண்ணக்கல்** *kuṅguma-vaṇṇa-k-kal*, பெ.(n.) மஞ்சள் கல்; yellow stone; saffron stone (சா.அக.).

*[குங்குமம் + வண்ணம் + கல்.]*

**குச்சகம்** *kuccagam*, பெ.(n.) 1. சடையொட்டிப் புல்; a kind of grass. 2. பற்பாடகம்; fever plant (சா.அக.).

*[குச்சு – குச்சகம்.]*

**குச்சகர்** *kuccagar*, பெ.(n.) கடகம் என்னும் பட்டணத்திலிருந்த முனிவர்; a saint who lived in kaṭagā city.

**குச்சம்** *kuccam*, பெ.(n.) பொருக்கு; flake (செ.அக.).

*[கொச்சு – குச்சு.]*

**குச்சகாதிதம்** *kucca-kātidam*, பெ.(n.) சத்தி சாரணை; spreading hogweed - *Boerhaevia repens* (சா.அக.).

**குச்சதந்திகம்** *kucca-tandigam*, பெ.(n.) வாழை; plantain tree - *Musa sapientum* (சா.அக.).

**குச்சபலம்** *kucca-palam*, பெ. (n.) 1. தேத்தான்; water-clearing nut - *Strichnos potatorum.* 2. கணுப்பாலை; Indian mimusops - *Mimusops hexandra.* 3. கொடி முந்திரி; the vine. 4. முள்ளி; Indian night shade - *Solanum indicum.* 5. கண்டங்கத்திரி; yellow-berried night shade - *Solanum jacquini* (சா.அக.).

*[குச்சம் + பலம்.]*

**குச்சபுட்பம்** *kucca-puṭpam*, பெ.(n.) ஏழிலைப் பாலை; seven - leafed milk plant - *Alstonia scholaris* (சா.அக.).



**குச்சலிர்** *kuccalir,* பெ.(n.) ஒருவகை மரம்; கல்லவி; honey-sweet tree - *Meliosma simplicifolia* (சா.அக.).

**குச்சவகந்தம்** *kuccavakandam,* பெ.(n.) ஒரு தின் கிழங்கு; an esculent root (சா.அக.).

*[குச்சவம் + கந்தம்.]*

**குச்சா** *kuccā,* பெ.(n.) மயில் சிகைப்பூடு; peacock's crest plant - *Actiniopteris dichotoma* (சா.அக.).

*[குச்சம் – குச்சா.]*

**குச்சாகரம்** *kuccāgaram,* பெ.(n.) செந்துவரை; red dholl (சா.அக.).

**குச்சிக்கரும்பு** *kucci-k-karumbu,* பெ.(n.) தட்டைக் கரும்பு, கரும்பின் நுனிப்பகுதி; the top portion of a sugar-cane without juice (சா.அக.).

*[குச்சி + கரும்பு.]*

**குச்சிடுக்கி** *kuccidukki,* பெ.(n.) சங்கு திருகி; cork-screw (சா.அக.).

*[குச்சி + இடுக்கி.]*

**குச்சிப்பட்டை** *kucci-p-pattai,* பெ.(n.) குச்சில் அமைத்த ஒருவகைக் குஞ்சம்; a stick composed of bristles and used for cleaning and brushing (சா.அக.).

*[குச்சி + பட்டை.]*

**குச்சிமஞ்சள்** *kucci-mañjal,* பெ.(n.) மர மஞ்சள்; tree-turmeric - *Coscinium fenestratum* (சா.அக.).

*[குச்சி + மஞ்சள்.]*

**குச்சிமூலிகம்** *kucci-mūligam,* பெ.(n.) ஒரு வகை மூலிகைப் புல்; a kind of club grass - *Scirpus kysoor* (சா.அக.).

*[குச்சி + மூலிகம்.]*

**குச்சிராகிதம்** *kucci-rāgidam,* பெ.(n.) சந்திரகாந்திச் செடி; moon plant (சா.அக.).

**குச்சுபிடித்துக்கட்டல்** *kuccu-pidittu-k-kattal,* தொ.பெ.(vbl.n.) மடித்த துணியில் கட்டுதல்; tying in a folded cloth (சா.அக.).

*[குச்சு + பிடித்து + கட்டல்.]*

**குச்சுவாசம்** *kuccuvāšam,* பெ.(n.) மேல் மூச்சு; dyspnoea (சா.அக.).

**குச்சோ** *kuccō,* பெ.(n.) புங்க மரம்; Indian beech - *Dalbergia arborea* (சா.அக.).

**குசக்கிரம்** *kušakkiram,* பெ.(n.) நாணலின் (தருப்பை) நுனி; the top portion of a sacrificial grass (சா.அக.).

**குசடதச்சன்** *kušada-taccan,* பெ.(n.) எட்டி; nux vomica (சா.அக.).

*[குசடன் + தச்சன்.]*

**குசடம்** *kušadam,* பெ. (n.) வெட்பாலை அரிசி; tellicherry bark - *Hollarbhna antidysentericum alias Nerium antidysentericum* (சா.அக.).

*[குடசம் + குசடம்.]*

**குசத்துவசன்** *kušattu-vašan,* பெ.(n.) 1. சீதையின் தந்தையான சனகனின் தம்பி; brother of Janagan. 2. வேதவதியின் தந்தை; father of vēdavadi.

**குசத்தின்பாதி** *kušattin-pādi,* பெ.(n.) 1. சிறு புள்ளடி; unifoliate trefoil, Hedysarum gangeticum. 2. பற்பாடகம்; sparrow leg; fever plant - *Mollugo cerviana* (சா.அக.).

*[குசம் + அத்து + இன் + பாதி.]*

**குசப்புத்தி** *kuša-p-putti,* பெ.(n.) மடமை, அறிவின்மை; stupidity, dullness, as a term of contempt (செ.அக.).

**குசப்புல்** *kuša-p-pul,* பெ.(n.) நாணல் (தருப்பைப்)புல்; sacrificial grass.

இந்தப் புல்லைப் பூசனையில் இருக்கையாகப் பயன்படுத்துவது உண்டு (சா.அக.).

**குசபுட்பம்** *kuša-putpam,* பெ.(n.) இறப்பை உண்டாக்கும் நச்சுக் கிழங்கு; a poisonous root causing death (சா.அக.).

*[குசம் + புட்பம்.]*

**குசமரம்** *kuša-maram,* பெ.(n.) **குசப்புல்** பார்க்க; see *kuša-p-pul* (சா.அக.).

**குசமுகம்** *kuša-mugam,* பெ.(n.) முலைக் காம்பு; nipple (சா.அக.).

*[குயம் – குசம் + முகம்.]*

**குசர்** *kušar,* பெ.(n.) (பிசிர்) தேவையற்றது; anything extra obtained from shop keeper as a bargain (செ.அக.).

**குசலவதி** *kušalavati,* பெ.(n.) கங்கை யாற்றங்கரையில் உள்ளதும் கோசலத்தில் உள்ளதுமான ஒரு பட்டணம்; a city in Kōšalam (அபி.சிந்.).

*[குசலம் + பதி.]*

**குசவர்** *kušavar,* பெ.(n.) 1. மண்ணால் ஏனங்கள் செய்து சூளை போட்டுப் பிழைப்பவர்; potter. 2. **குயவர்** பார்க்க; see *kuyavar.*

*[குய் (சுடுதல்) – குயவர் – குசவர்.]*

**குசேலர்** *kušēlar,* பெ.(n.) கண்ணனுடன் படித்த பார்ப்பன நண்பர்; friend of kaṇṇaṉ.

இவர் வறுமையுற்றிருந்த போது இவர் மனைவியார், கண்ணனிடம் சென்று நிலை மையைக் கூறிப் பொருள் பெற்று வருமாறு கூறினர். இவரும் அவலில் தின்பண்டம் செய்து கொண்டு கண்ணனைக் காணச் சென்றார். கண்ணனும் இவரிடம் நலம் பாராட்டி அவர் கொண்டு வந்த அவலில் ஒரு பிடி உண்டார். மற்றொரு பிடி எடுக்கையில் கண்ணனின் மனைவி அவரைத் தடுக்கவே, கண்ணனும் உண்ணாது குசேலருக்கும் ஒன்றும் கொடுக்காமல் அனுப்பி வைத்தார். வருத்தத்துடன் வீடு வந்த குசேலர் அங்கிருந்த பெருஞ்செல்வத்தைக் கண்டு வியந்து மகிழ்ந்தார் (அபி.சிந்.).

**குஞ்சகம்** *kuñjagam,* பெ.(n.) குன்றிமணி; the berry of abrus precatorius (சா.அக.).

*[குஞ்சம் – குஞ்சகம்.]*

**குஞ்சகாரம்** *kuñja-kāram,* பெ.(n.) புளி நரளைக் கிழங்கு; for-grape - *Cissus carnosa* (சா.அக.).

*[குஞ்ச + காரம்.]*

**குஞ்சணம்** *kuñjaṇam,* பெ.(n.) சிவதை; Indian jalap - *Ipomaea turpethum* (சா.அக.).

**குஞ்சப்புல்** *kuñja-p-pul,* பெ.(n.) காட்டுக் கேழ்வரகு; cluster grass; wild raggy - *Eleusine indica.*

*[குஞ்சம்+ புல்.]*

(இதன் அடித்தண்டு நேராக இருக்கும். தவசம் உண்பதற்குப் பயன்படாது) (சா.அக.).

**குஞ்சரக்கோடு** *kuñjara-k-kōḍu,* பெ.(n.) யானைக் கொம்பு; elephant's tusk (சா.அக.).

*[குஞ்சரம் + கோடு.]*

**குஞ்சரகரணம்** *kuñjara-karaṇam,* பெ.(n.) கரசை என்னுங் காலக்கரணம்; karašai, a division of time. *'குஞ்சரகரண மென்னார்' (பறாளை.பள்ளு.24) (செ.அக.).*

*[குஞ்சரம் + கரணம்.]*

**குஞ்சரசுரபி** *kuñjara-šurabi,* பெ.(n.) செவ்வந்தி; chamomile - *Chrysanthemum Caronarium* (சா.அக.).

**குஞ்சரபிப்பிலி** *kuñjara-pippili,* பெ.(n.) யானைத் திப்பிலி; elephant - pepper (சா.அக.).

**குஞ்சரபுட்பி** *kuñjara-putpi,* பெ.(n.) கருங்கொடி; common delight of the woods - *Hiptage madablota* (சா.அக.).

**குஞ்சரமேற்புல்லுருவி** *kuñjara-mēṟ-pulluruvi,* பெ.(n.) அத்திமேற் புல்லுருவி; a parasite grown on the fig tree (சா.அக.).

*[குஞ்சரம் + மேல் + புல்லுருவி.]*

**குஞ்சரத்தானம்** *kuñjara-t-tāṉam,* பெ.(n.) யானைகளைப் பழக்கும் திறந்த வெளி (யானைச்செண்டு வெளி); open space for training elephants. *'குஞ்சரத்தானத்து நின்றோர் குறுகி' (பெருங்.வத்தவ.4,48) (செ.அக.).*

*[குஞ்சரம் + தானம்.]*

**குஞ்சரன்** *kuñjaraṉ,* பெ.(n.) 1. அனுமான் என்னும் குரங்கின் பாட்டனும், அஞ்சனா தேவியின் தந்தையுமான ஒரு வானரன்; a monkey grandfather of Haṉumāṉ. 2. காசிப முனிவர், கத்துருவின் குமரன்; son of saint Kāšipāand katru (அபி.சிந்.).

**குஞ்சராகிதம்** *kuñjarāgidam,* பெ.(n.) சங்கங் குப்பி; smooth volkamerica - *Cleodendron inerme* (சா.அக.).

**குஞ்சலகக்கம்** *kuñjalakkam,* பெ.(n.) தாமரைத் தாது; pollen of lotus (சா.அக.).

*[குஞ்சலம் + கக்கம்.]*

**குஞ்சலம்** *kuñjalam,* பெ.(n.) பெரும்பாலும் பெண்கள் சடையில் இணைத்துத் தொங்கவிடும் கயிற்றில் இணைக்கப்பட்ட நூல் கொத்து அல்லது துணிப்பந்து போன்ற ஒப்பனைப் பொருள்; tassel mostly tied to the end of a woman's plaited leeuy.

மறுவ. குஞ்சம்.

**குஞ்சா** *kuñjā,* பெ.(n.) குன்றிமணி; crab's eye (சா.அக.).

*மறுவ. குறுகுஞ்சி.*

*[குஞ்சு – குஞ்சா.]*

**குஞ்சிக்காய்** *kuñjikkāy,* பெ.(n.) சீரகம்; cumin seed - *Cuminum cyminus* (சா.அக.).

*[குஞ்சி + காய்.]*

**குஞ்சிகம்** *kuñjigam,* பெ.(n.) 1. குருந்த மரம்; Indian wild lime - *Atlantia monophylla.* 2. குன்றி; crab's eye - *Abrus precatorius* (சா.அக.).

*[குஞ்சி – குஞ்சிகம்.]*

**குஞ்சி-த்தல்** *kuñji-,* 4 செ.கு.வி.(v.i.) ஒற்றைக் காலில் நிற்றல்; standing on one foot or tip-toe (சா.அக.).

**குஞ்சிதம்** *kuñjidam,* பெ.(n.) 1. செண்பகம்; champauk - *Michelia Champaca.* 2. வளைந்தது; that which is curved or crooked. 3. ஒற்றைக் காலில் நிற்கை; standing on one foot. 4. வளைவு; crooked or contracted. 5. வழி தெரியாது நாளத்தைஅறுக்கை; an unskinful way of opening the vein (சா.அக.).

*[கொஞ்சி – குஞ்சிதம்.]*

**குஞ்சிதாமியம்** *kuñji-tāmiyam,* பெ.(n.) சங்கஞ் செடி; four-spined monetia - *Monetia tetracantha* (சா.அக.).

**குஞ்சிப்பூ** *kuñji-p-pū,* பெ.(n.) குங்குமப்பூ; English saffron flower - *Crocus sativus* (சா.அக.).

*[குஞ்சி + பூ.]*

**குஞ்சிப்பூரம்** *kuñji-p-pūram,* பெ.(n.) ஆமணத்தி (கோரோசனை); bezoar especially the concretion found in a cow (சா.அக.).

**குஞ்சுகுழந்தை** *kuñju-kuḻandai,* பெ.(n.) கைக்குழந்தை; பெரிய குழந்தை; baby and child (சா.அக.).

*[குஞ்சு + குழந்தை.]*

**குஞ்சுகுழுமன்** *kuñju-kuḻumaṉ,* பெ.(n.) பலவகை அகவையில் உள்ள குழந்தைகளின் கூட்டம்; a number of children of different ages (சா.அக.).

*[குஞ்சு + குழுமன்.]*

**குஞ்சுகுளுவான்** *kuñju-kuḷuvāṉ,* பெ.(n.) வெவ்வேறு அகவையில் உள்ள குழந்தைகள்; a group of children of different ages; a gathering of kids. *கல்யாண மண்டபம் குஞ்சு குளுவான்களின் சத்தத்தால் அதிர்ந்தது.*

*[குஞ்சு + குளுவான்.]*

**குஞ்சுங்குழுமானும்** *kuñjuṅ-kuḻumāṉum,* பெ.(n.) 1. பூச்சித் திரள்; swarm of insects. 2. பல அகவையிலுள்ள குழந்தைகளின் கூட்டம்; a group of children of different ages. *"குஞ்சுங் குழுமானுமாக வீடு கலகலவென்றிருக்கின்றது" (செ.அக.).*

*[குஞ்சு + குழுமான் + உம்.]*

**குஞ்சுங்குழுவும்** *kuñjuṅ-kuḻuvum,* பெ.(n.) **குஞ்சுங்குழுமானும்** பார்க்க; see *kuñjuṅ-kuḻumāṉum* (செ.அக.).

**குட்கரம்** *kuṭkaram,* பெ.(n.) வேலிப்பருத்தி; hedge-cotton - *Daemia extensa* (சா.அக.).

*[குட்கரம் = வெண்மை.]*



**குட்சுரகாண்டம்** *kuṭšura-kāṇḍam,* பெ.(n.) வெள்ளைக் கரும்பு; white-coloured sugar-cane (சா.அக.).

**குட்டகண்டு** *kuṭṭa-kaṇḍu,* பெ.(n.) பேயத்தி; devil fig - *Ficus hispida* (சா.அக.).

**குட்டகந்தம்** *kuṭṭa-kandam,* பெ.(n.) கொம்புப்பாகல்; palgal bitter gourd - *Trichosanthes dioeca* (சா.அக.).

**குட்டகந்தி** *kuṭṭa-kanti,* பெ. (n.) வெள்ளி லோத்திரப் பட்டை; the fragrant bark of wood-apple tree - *Feronia elephantum; Lodhra bark* (சா.அக.).

*[குட்டம் + கந்தி.]*

**குட்டக்கனிபலா** *kuṭṭa-k-kaṉi-palā,* பெ. (n.) 1. கருப்புத் தக்காளிச் செடி; a black tomatto plant. 2. மிளகுத் தக்காளி; mad apple - *Solanum melongena* (சா.அக.).

*[குட்டம் + கனி + பலா.]*

**குட்டக்கினம்** *kuṭṭakkiṉam,* பெ.(n.) 1. குட்டத்தைத் தீர்க்கும் பூடு; plant curing leprosy. 2. குட்டத்தைத் தீர்க்கும் மருந்து; a remedy for leprosy. 3. பேயத்தி; wild fig - *Ficus oppositifolia.* 4. காட்டுச்சீரகம்; wild cumin - *Vernonia anthelmintica* (சா.அக.).

**குட்டக்கினி** *kuṭṭakkiṉi,* பெ.(n.) 1. கருங்காலி; black sundra tree - *Acacia catechu typica alias Diospyros melanoxylon.* 2. தான்றிக்காய்; belleric myrobalan (சா.அக.).

**குட்டங்கொள்ளு–தல்** *kuṭṭaṅ-koḷḷu-,* 16 செ.கு.வி.(v.i.) குட்ட நோயால் தாக்கப்படல்; to be attacked with leprosy (சா.அக.).

*[குட்டம் + கொள்ளு–தல்.]*

**குட்டசூதனம்** *kuṭṭa-šūdaṉam,* பெ.(n.) 1. குட்டம் தெளிதல்; subduing leprosy. 2. கொன்றை மரம்; cassia tree - *Cathartocarpus fistula* (சா.அக.).

**குட்டணம்** *kuṭṭaṇam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin - *Nigella sativa* (சா.அக.).

**குட்டத்தக்காளி** *kuṭṭa-t-takkāḷi,* பெ.(n.) சிறு தக்காளி; black-berried solanum - *Solanum nigrum* (சா.அக.).

*[குட்டம் + தக்காளி.]*

**குட்டநாசனம்** *kuṭṭa-nāšaṉam,* பெ.(n.) கடுகு வகை (பிங்.); white mustard.

**குட்டநாசனி** *kuṭṭa-nāšaṉi,* பெ.(n.) 1. கருப்பு அகரம் என்னும் மருந்துவகை; a kind of drug. 2. வெள்ளைக் கிலுகிலுப்பை; white flowered crotolaria - *Cratolaria verrucosa.* 3. தகரை; ring worm plant - *Cassia tora.* 4. காட்டுச் சீரகம்; wild cumin - *Vernonia authlmintica.* 5. குட்டத்தை அழிக்கும் மருந்து; any medicine curing leprosy (சா.அக.).

*[குட்டம் + நாசனி.]*

**குட்டநோய்கடியகாரா** *kuṭṭa-nōy-kaḍiya-kārā,* பெ. (n.) குட்ட நோயைத் தீர்க்கும் கருப்பரிசி; a kind of black rice said to cure leprosy (சா.அக.).

*[குட்டநோய் + கடியகாரா.]*

**குட்டப்பாண்டுநாசனி** *kuṭṭa-p-pāṇḍu-nāšaṉi,* பெ.(n.) கருமருது; இரும்பிலி; black satinwood - *Maba buxifolia* (சா.அக.).

*[குட்டை + பாண்டு + நாசனி.]*

**குட்டம்போக்கி** *kuṭṭam-pōkki,* பெ.(n.) 1. வெண்கடுகு; white mustard. 2. குட்டத்தைப் போக்கும் மருந்து; that which cures leprosy. 3. பாற்சோற்றி; caoutchouc plant - *Euphorbia cattimandu.* 4. சுரபுன்னை; soora poon - *Ochrocarpus longifolius* (சா.அக.).

*[குட்டம் + போக்கி.]*

**குட்டமிடு–தல்** *kuṭṭam-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பள்ளந் தோண்டுதல்; to dig out. *"குட்டமிட்டிடந்தான் காணும்" (ஈடு, 10, 6, 4).*

*[குட்டம் + இடு–தல்.]*

**குட்டல்** *kuṭṭal,* தொ.பெ.(vbl.n.) தலையிற் குட்டல்; cuffing on the head (சா.அக.).

*[குட்டு – குட்டல்.]*

**குட்டவிசர்த்தி** *kuṭṭa-viśartti,* பெ.(n.) வெட்டிவேர்; khus khus root - *Andropogon aromaticus* (சா.அக.).

**குட்டவிரணம்போக்கி** *kuṭṭa-viraṇam-pōkki,* பெ.(n.) சேங்கொட்டை; marking nut - *Semecarpus anacardium* (சா.அக.).

**குட்டாம்** *kuṭṭām,* பெ.(n.) பெருங்காயம்; asa-foetida (சா.அக.).

**குட்டாரி** *kuṭṭāri,* பெ.(n.) கந்தகம்; sulphur (சா.அக.).

*[குட்டு – குட்டாரி.]*

**குட்டிக்கழுதை** *kuṭṭi-k-kaḻudai,* பெ.(n.) கழுதைக் குட்டி; the young of an ass (சா.அக.).

*[குட்டி + கழுதை.]*

**குட்டிக்கானாங்கெளிறு** *kuṭṭi-k-kāṉāṅ-keḷiṟu,* பெ.(n.) கெளிற்று மீன் குஞ்சு; the young of a cat-fish (சா.அக.).

*[குட்டி + கானாம் + களிறு.]*

**குட்டிகம்** *kuṭṭigam,* பெ.(n.) ஓரிலைத் தாமரை; single leaf lotus.

**குட்டிகாதக்காளி** *kuṭṭigā-takkāḷi,* பெ.(n.) **குட்டித்தக்காளி** பார்க்க; see *kuṭṭi-t-takkāḷi* (சா.அக.).

*[குட்டிக்காய் + தக்காளி]*

**குட்டிச்சாத்தி** *kuṭṭi-c-cātti,* பெ.(n.) ஒரு பெண் தெய்வம்; a female spirt (சா.அக.).

**குட்டித்தேவி** *kuṭṭi-t-tēvi,* பெ.(n.) விளாமரம்; wood apple tree (சா.அக.).

*[குட்டி + தேவி]*

**குட்டிநரை** *kuṭṭi-narai,* பெ.(n.) இளமையில் ஏற்படும் நரை; premature gray hair (சா.அக.).

**குட்டிப்பனை** *kuṭṭi-p-paṉai,* பெ. (n.) பனையைச் சுற்றிலும் முளைக்கும் சிறு பனை; small stunted palmyra young ones growing at the bottom of a main tree (சா.அக.).

*[குட்டி + பனை.]*

**குட்டிப்பாடித்தி** *kuṭṭi-p-pāḍitti,* பெ.(n.) சிற்றரத்தை; lesser galangal - *Alpinia galanga* (சா.அக.).

*[குட்டி + பாடித்தி.]*

**குட்டிப்பிலா** *kuṭṭi-p-pilā,* பெ.(n.) 1. குட்டிப் பலா; small jack tree - *Artocarpus integrifolius.* 2. பேய் முன்னை; charcoal tree - *Sponia wight.* 3. பிராய் மரம்; paper tree - *Streblus asper.* 4. குற்றிப் பலா; stunted jack - *Epicarpurus orientalis* (சா.அக.).

*[குட்டி + பலா.]*

**குட்டிப்பை** *kuṭṭi-p-pai,* பெ.(n.) விலங்கின் வயிற்றில் குட்டியின் மேல் மூடிக் கொண்டு இருக்கும் பிண்டப் பை; foetal membranes in animals filled with liquor amni which dilates the mouth of the womb (சா.அக.).

*[குட்டி + பை.]*

**குட்டியச்சம்** *kuṭṭi-y-accam,* பெ.(n.) இளம் அகத்திச் செடி; young sesbane plant - *Sesbania grandiflora* (சா.அக.).

**குட்டியழிவு** *kuṭṭi-y-aḻivu,* பெ. (n.) கருவிற்கு ஏற்படும் கேடு; abortion (சா.அக.).

*[குட்டி + அழிவு.]*

**குட்டிமரம்** *kuṭṭi-maram,* பெ.(n.) சணல்; Indian hemp - *Crotolaria juncea* (சா.அக.).

**குட்டிவாசுகி** *kuṭṭi-vāśugi,* பெ.(n.) சப்பாத்துக் கள்ளி; prickly pear - *Opuntia monocantha* (சா.அக.).

**குட்டிவிலாங்கு** *kutti-vilāṅgu,* பெ. (n.) கடலில் பொரிக்கப்பட்டு முட்டையினின்று வெளிவந்தவுடன் ஆறுகளுக்கு வந்து சேரும் ஒரு வகை விலாங்கு மீன்; a kind of river-fish or Eel fish - *Elve.*

*[குட்டி + விலாங்கு.]*

இது பாம்பைப் போல் நீளமாகவும், பழுப்பு நிறமாகவும் உள்ளது. உணவுக்குப் பயன்படுவது (சா.அக.).

**குட்டிவிளாதிதம்** *kutti-viḷādidam,* பெ.(n.) சருகு மஞ்சள்; dried turmeric (சா.அக.).

**குட்டுவன்கண்ணன்** *kuttuvaṉ-kaṇṇaṉ,* பெ. (n.) கடைக்கழகக் காலத்துப் புலவர்களில் ஒருவர்; one of the poets who belonged to the last Šaṅgam.

*[குட்டுவன் + கண்ணன்.]*

இவர் பெயர் கண்ணனாக இருக்கலாம். இவர் சேரர் குடியினராதலின் குட்டுவன் கண்ணன் எனப்பட்டார் (அபி.சிந்.).

**குட்டுவன்கீரனார்** *kuttuvaṉ-kīraṉār,* பெ.(n.) ஆய் என்னும் வள்ளலைப் பாடிய புலவர்; the poet who celebrated to āy (அபி.சிந்.).

*[குட்டுவன் + கீரன் + ஆர்.]*

**குட்டுவன்சேரல்** *kuttuvaṉ-šēral,* பெ.(n.) சேர மன்னன்; cērā king.

*[குட்டுவன் + சேரல்.]*

**குட்டைக்கால்** *kuttai-k-kāl,* பெ. (n.) 1. குள்ளமான கால்; short leg. 2. உறுப்புக் கேடான கால்; deformed leg (சா.அக.).

*[குட்டை + கால்.]*

**குட்டைக்கை** *kuttai-k-kai,* பெ. (n.) 1. குறைந்த கை; short arm. 2. உறுப்புக் கேடான கை; deformed arm (சா.அக.).

*[குட்டை+ கை.]*

**குட்டைச்சுருட்டை** *kuttai-c-curuttai,* பெ.(n.) ஒருவகைப் பாம்பு; a kind of coiled snake - *Oligodon subgriseus* (சா.அக.).



**குட்டையிடுக்கி** *kuttai-y-iḍukki,* பெ.(n.) 1. சிற்றரத்தை; lesser galangal - *Alpinia galanga.* 2. கோட்டம் (கோஷ்டம்); Arabian costus - *Costus speciosus.* 3. பயிரின் களை; corn weed. 4. கற்றாழை; aloe genus (சா.அக.).

*[குட்டை + இடுக்கி.]*

**குட்டையைக்குழப்பு-தல்** *kuttaiyai-k-kuḻappu-,* 5 செ.கு.வி.(v.i.) தெளிவு ஏற்படுத்துவதற்குப் பதிலாகக் குளறுபடி செய்தல்; add to the confusion; muddle up. *ஏற்கனவே இங்கே எல்லாம் குழப்பமாக இருக்கிறது, மேலும் குட்டையைக் குழப்பாதே*

*[குட்டையை + குழப்பு-தல்.]*

**குடக்கோஇளஞ்சேரலிரும்பொறை** *kuḍa-k-kō-iḷañcēralirumporai,* பெ. (n.) பெருங் குன்றூர்க்கிழாரால் பாடப்பெற்ற சேர மன்னன்; a Cēraking.

*[குடக்கோ + இளம் + சேரம் + இரும்பொறை.]*

**குடகபாலை** *kuḍaga-pālai,* பெ.(n.) 1. வெட்பாலை; conessi or tellicherry bark - *Nerium nti-dysentericum.* 2. கொடிப் பாலை; cotton milk plant - *Dregea volubilis;* twining swallow-wort -

*Asclepias volubilis.* 3. ஊசிப்பாலை; needle-leaved swallow-wort - *Oxystelma esculentum* (சா.அக.).

*[குடகம் + பாலை.]*

**குடகுகிச்சிலி** *kuḍagu-kiccili,* பெ.(n.) குடகு நாட்டில் விளையும் கிச்சிலி; coorge orange - *Citrus aurantium nobilis* (சா.அக.).

*[குடகு + கிச்சிலி.]*

**குடகுவெட்பாலை** *kuḍagu-v-eṭpālai,* பெ.(n.) தலைச்சேரியில் விளையும் வெட்பாலை; tellicherry bark (சா.அக.).

*[குடகு + வெட்பாலை.]*

**குடச்சைலம்** *kuḍa-c-cailam,* பெ.(n.) மலைப்புரசு; hill palaus - *Butea frondosa* (சா.அக.).

**குடசோ** *kuḍašō,* பெ.(n.) குடசபாலை பார்க்க; see *kuḍaša-pālai* (சா.அக.).

**குடநாசனி** *kuḍa-nāšaṉi,* பெ.(n.) வெண்கடுகு; white mustard - *Brassica alba alias Sinapis alba* (சா.அக.).

**குடபலை** *kuḍabalai,* பெ.(n.) 1. மணித் தக்காளி; black-berried nigrum. 2. கடம்பு மரவகை; oak - *Carcua arborea.* 3. இலந்தை; jujube. 4. களர்வா; tooth-brush tree - *Salvadora persica* (சா.அக.).

**குடபுலவியனார்** *kuḍa-pulavi-y-aṉār,* பெ.(n.) பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடிய தமிழ்ப் புலவர்; Tamil poet, who celebrated *Pāṇḍiyaṉ-neḍuñjeḻiyaṉ* (அபி.சிந்.).

*[குட + புலவியன் + ஆர்.]*

**குடம்** *kuḍam,* பெ.(n.) 1. கொச்சி நாடு; kocci nāḍu. 2. கண்ணன் குடங் கொண்டாடிய கூத்து; pot dancing who performed by kaṇṇaṉ.

**மறுவ. கரகாட்டம்**

கண்ணனின் பேரனான அநிருத்தனை பாணாசுரன் சிறையிட்டான். அப்பொழுது பாணாசுரனின் பட்டணத்தில் கண்ணன் மாழையாலும், மண்ணாலும் செய்த குடம் கொண்டு கூத்தாடினான் (அபி.சிந்.).

**குடமது** *kuḍa-madu,* பெ.(n.) 1. குடத்தில் வைத்த கள்; toddy secured in pots. 2. குடத்தில் புளிக்க வைத்த கள் அல்லது சாராயம்; toddy, arrack or anyother liquor fermented in a water-pot (சா.அக.).

*[குடம் + மது.]*

**குடமுழுக்கு** *kuḍa-muḻukku,* பெ.(n.) புதிதாகக் கட்டிமுடிக்கப்பட்ட கோவில், புதுப்பிக்கப்பட்ட கோவில் இவைகளின் கோபுரக் கலசத்துக்கும், மூலவருக்கும் செய்யும் நீராட்டு விழா; pouring the sanctified water over the temple structure at the time of installation.

*[குடம் + முழுக்கு.]*

**குடராசன்** *kuḍa-rāšaṉ,* பெ.(n.) ஒரு வகைப் பூரான்; a kind of centipede (சா.அக.).

**குடல்காய்-தல்** *kuḍal-kāy-,* 1 செ.கு.வி.(v.i.) பட்டினியாய் இருத்தல்; starving (சா.அக.).

*[குடல் + காய்-தல்.]*

**குடல்கொழு-த்தல்** *kuḍal-koḻu-,* 4 செ.கு.வி.(v.i.) குடலில் கொழுப்பு பற்றுதல்; bowels growing fat (சா.அக.).

*[குடல் + கொழு-த்தல்.]*

**குடல்பற்று** *kuḍal-paṟṟu,* பெ.(n.) குடல் தொடர்பு connection, with the bowels (சா.அக.).

**குடல்பிடுங்கு-தல்** *kuḍal-piḍuṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) குடலைக் களைதல்; disembowelling (சா.அக.).

*[குடல் + பிடுங்கு-தல்.]*

**குடல்மடிப்பு** *kuḍal-maḍippu,* பெ.(n.) வயிற்றுக்குள் இருக்கும் குடலின் மடிப்புகள்; intestinal folds (சா.அக.).

*[குடல் + மடிப்பு.]*

**குடல்வாங்கு-தல்** *kuḍal-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குடலைப் பிடுங்கி வெளியெடுத்தல்; removing the entrails from the body - *Exenterate.* 2. குடல் தட்டுதல்; tapping the bowels by massage. 3. குடல் பிடுங்கல்; removing the entrails or the viscera; eviscerating (சா.அக.).

*[குடல் + வாங்கு-தல்.]*

**குடல்வாயு** *kuḍal-vāyu,* பெ.(n.) 1. குடலிறக்கம்; rupture, scrotal hernia. 2. விரை ஊதை (விரைவாதம்); inflammation of the testis - *Orchitis.*

**குடலற்ற** *kuḍalaṟṟa,* பெ.எ.(adj.) உள்ளே சதைப் பற்றில்லாத; pithless (சா.அக.).

*[குடல் + அற்ற.]*

**குடலிசிவு** *kuḍališivu,* பெ.(n.) குடலை இழுத்துப் பிடிப்பது போல் உண்டாகும் வலி; cramps or the spasm of the bowels (சா.அக.).

*[குடல் + இசிவு.]*

**குடலியக்கம்** *kuḍali-y-akkam,* பெ.(n.) குடல் அசைவு; குடல் புழுக்கள் போல் நெளியும் தன்மை; the worm like movement of the intestines for carrying the contents from one section of the colon to the other - *Intestinal peristalsis* (சா.அக.).

*[குடல் + இயக்கம்.]*

**குடலுக்குரிய** *kuḍalukkuriya,* பெ.எ.(adj.) குடல் தொடர்பான; relating to bowels (சா.அக.).

*[குடலுக்கு + உரிய.]*

**குடலுப்பிசம்** *kuḍaluppišam,* பெ.(n.) 1. குடல் பருத்துக் காணல்; enlargement of the bowels. 2. வயிற்றுப்புசம்; distension of the abdomen (சா.அக.).

*[குடல் + உப்பிசம்.]*

**குடலுள்வாங்கு-தல்** *kuḍaluḷ-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) குடலின் ஒரு பகுதி மற்றொரு பகுதியில் அடங்கல்; the invagination of a portion of the intestines into the adjacent part - *Intussusception* (சா.அக.).

*[குடல் + உள் + வாங்கு-தல்.]*

**குடலுறுப்பு** *kuḍaluṟuppu,* பெ.(n.) வயிற்றுள் இருக்கும் குடலைச் சார்ந்த உறுப்புகள்; abdominal viscera or entrails (சா.அக.).

*[குடல் + உறுப்பு.]*

**குடலெடுத்துவிடல்** *kuḍaleḍuttu-viḍal,* தொ.பெ.(vbl.n.) 1. குடலைப் பிடுங்கி வெளியே எடுத்தல்; pulling and drawing out the entrails or viscera - *Embowelling.* 2. குடல் தட்டுதல்; tapping the bowels by massage (சா.அக.).

*[குடல் + எடுத்து + விடல்.]*

**குடலேற்றம்** *kuḍalēṟṟam,* பெ.(n.) 1. குழந்தைகளுக்குக் குடல் பிசகி இடத்தை விட்டு மாறுவதால் ஏற்படும் நோய்; spasm or derangement of the intestines especially in children. 2. வயிற்றிரைச்சல்; the gurgling noise of the belly (சா.அக.).

*[குடல் + ஏற்றம்.]*

**குடலைப்பற்றியநோய்** *kuḍalai-p-paṟṟiya-nōy,* பெ.(n.) 1. பொதுவாகக் குடலுக்கு ஏற்படும் நோய்கள்; disease in general of the intestines. 2. வயிற்றுவலி; intestinal colic (சா.அக.).

மறுவ. குடல்நோய்

*[குடலை + பற்றிய + நோய்.]*

**குடலைப்பற்று-தல்** *kuḍalai-p-paṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) குடலைத் தாக்குதல்; affecting or attacking the bowels (சா.அக.).

*[குடலை + பற்று-தல்.]*

**குடலைப்புரட்டு-தல்** *kuḍalai-p-puraṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) கக்கும்படிக் குடலைப் புரட்டுதல்; affection of the bowels as to feel a vomiting sensation (சா.அக.).

*[குடலை + புரட்டு-தல்.]*

**குடலைமுறுக்கு-தல்** *kuḍalai-muṟukku-,* 5 செ.கு.வி.(v.i.) குடலைப் புரட்டுதல்; a twisting sensation of the bowels from various causes so as to feel nauseous (சா.அக.).

*[குடலை + முறுக்கு-தல்.]*

**குடலைமூடியசவ்வு** *kuḍalai-mūḍiya-šavvu,* பெ.(n.) குடற்சவ்வு; a membrane enveloping the intestines (சா.அக.).

*[குடலை + மூடிய + சவ்வு.]*

**குடலோடல்** *kuḍalōḍal,* பெ.(n.) வயிற்றுப் போக்கு; having a loose motion of the bowels (சா.அக.).

*[குடல் + ஓடல்.]*

**குடவயம்** *kuḍavayam,* பெ.(n.) பெருந் தக்காளி; edible winter cherry - *Pysalis peruviana* (சா.அக.).

**குடவரைக்கோயில்** *kuḍavarai-k-kōyil,* பெ.(n.) மலைச் சரிவை அல்லது பாறையைக் குடைந்து சிற்பங்கள் செதுக்கிய மண்டபம் போன்ற அமைப்பு; rock-cut temple

*[குடவரை + கோயில்.]*



**குடவன்பருவதம்** *kuḍavaṉ-paruvadam.* பெ.(n.) பித்தளை மலை; mountain containing brass (சா.அக.).

*[குடவன் + Skt. பருவதம்.]*

**குடவாயில்நல்லாதனார்** *kuḍavāyil-nallādaṉār.* பெ.(n.) பெருஞ்சாத்தனைப் பாடிய தமிழ்ப் புலவர்; the Tamil poet who celebrated peruñjāttaṉ (அபி.சிந்.).

*[குடவாயில் + நல் + ஆதன்.]*

**குடற்கொழுப்பு** *kuḍaṟ-koḻuppu.* பெ.(n.) வயிற்றைக் குடத்தைப் போல் பருக்கச் செய்யும் குடலின் மேற் சவ்வில் காணப்படும் அதிகக் கொழுப்பு; excess of fat of the omentum which gives rotundity to the abdomen (சா.அக.).

*[குடல் + கொழுப்பு.]*

**குடற்கோளாறு** *kuḍaṟ-kōḷāṟu,* பெ.(n.) குடலுக்கு ஏற்படும் பலவகைக் குற்றங்கள்: intestinal disorders arising form various causes (சா.அக.).

*[குடல் + கோளாறு.]*

**குடற்சல்லி** *kuḍaṟ-calli,* பெ.(n.) குடல் துளை(துவாரம்); holes or perforation occurring in the intestines (சா.அக.).

*[குடல் + சல்லி.]*

**குடற்சுண்ணம்** *kuḍaṟ-šuṇṇam,* பெ.(n.) நஞ்சுக் கொடியினின்று செய்யும் ஒரு வகைச் சுண்ண மருந்து; an alkaline compound prepared or extracted from the naval-cord of children (சா.அக.).

*[குடல் + சுண்ணம்.]*

**குடற்சுருள்** *kuḍaṟ-curuḷ,* பெ.(n.) குடல் மடிப்பு; intestinal fold (சா.அக.).

*[குடல் + சுருள்.]*

**குடற்புண்** *kuḍaṟ-puṇ,* பெ.(n.) 1. பல காரணியங்களினால் குடலில் ஏற்படும் புண்; ulceration of the bowels due to various

causes, as tuberculosis, typhoid, syphilis etc., 2. சிறுகுடலுக்கு ஏற்படும் புண்; duodenal ulcer (சா.அக.).

[குடல் + புண்.]

**குடற்புளிப்பு** *kudar-pulippu,* பெ.(n.) வயிற்றுப் புளிப்பு; acidity of the stomach (சா.அக.).

[குடல் + புளிப்பு.]

**குடற்பெருக்கு** *kudar-perukku,* பெ.(n.) 1. குடலில் அதிகமாகக் கொழுப்பு பிடிப்பதால் குடல் பருத்தல்; enlargement of the intestines due to undue formation of fat. 2. குடலில் காற்று தங்குவதால் உப்பிக் காணுதல்; distension of bowels with gas or air in the testines - *Flatulence* (சா.அக.).

[குடல் + பெருக்கு.]

**குடற்றிமிர்** *kudarrimir,* பெ.(n.) 1. குடல் இயக்கம் வலிமை இழக்கை; மலக்கட்டு; constipation. 2. குடல் உணர்ச்சியற்று இருக்கை; numbness or inactivity of the bowels - *Torpor intestinum* (சா.அக.).

[குடல் + திமிர்.]

**குடற்றொடர்** *kudarrodar,* பெ.(n.) குடலின் தொடர்ச்சி; that portion of the alimentary canal either above or below the region of the intestines (சா.அக.).

[குடல் + தொடர்.]

**குடாசுரன்** *kudāšuran,* பெ.(n.) ஒரு அரக்கன்; a giant.

[குட + அசுரன்.]

**குடாநாடு** *kudā-nādu,* பெ.(n.) மூன்று பக்கமும் நீர் சூழ்ந்த நிலம் (தீப கற்பம்) (இலங்.); peninsula. *'யாழ்ப்பாணக் குடாநாடு'.*

**மறுவ. தீவக்குறை (தீபகற்பம்)**

[குடவு – குடா + நாடு.]

**குடிகெடுத்தவுவர்க்காரம்** *kudi-kedutta-v-uvarkkāram,* பெ. (n.) கல்லுப்பு; sea-salt (சா.அக.).

**குடிசன்னாகம்** *kudi-šānnāgam,* பெ.(n.) கரிசலாங்கண்ணி; bee plant or eclipse plant - *Eclipta alba alias E.prostata alias verbesina alba* (சா.அக.).



**குடிசைத்தொழில்** *kudišai-t-tolil,* பெ.(n.) மின்சாரத்தின் தேவையும், இயந்திரங்களின் உதவியும் இல்லாமல் வீட்டில் இருப்பவர்கள் உதவியுடன் வீட்டிலேயே செய்யப்படும் சிறு தொழில்; cottage industry

[குடிசை + தொழில்.]

**குடித்தனக்காரர்** *kudittanakkārar,* பெ.(n.) வீட்டில் வாடகைக்குக் குடியிருப்பவர்; tenant.

**குடித்தொகை** *kudi-t-togai,* பெ.(n.) மக்கள் தொகை (இலங்.); population

[குடி + தொகை.]

**குடிதாங்கிமுதலியார்** *kudi-tāngi-mudaliyār,* பெ. (n.) ஒரு வள்ளல்; a patron. (அபி.சிந்.)

[குடி + தாங்கி + முதலியார்.]

**குடித்தைலம்** *kudi-t-tailam,* பெ.(n.) 1. உள்ளுக்குக் குடிக்கக் கொடுக்கும் எண்ணெய்; a medicated oil taken or adoministered internally. 2. ஆமணக்கு எண்ணெய்; caster oil (சா.அக.).

[குடி + Skt. தைலம்.]

**குடிநீர்த்திரவியம்** *kuḍinīr-t-tiraviyam,* பெ.(n.) காய்ச்சிய மருந்துக் குடிநீர் (கஷாயச் சரக்குகள்) (பைஷஜ.); ingredients of a tincture (செ.அக.).

*[குடிநீர் + **Skt.** திரவியம்.]*

**குடிபெயர்-தல்** *kuḍi-peyar-,* 4 செ.கு.வி. (v.i.) ஓர் இடத்தை விட்டு வேறோர் இடத்துக்கு வாழச் செல்லுதல்; migrate. *நிலத்தை இழந்த உழவர்கள் நகர்ப்புறத்திற்குக் குடிபெயர்ந்து வருகிறார்கள் .*

*[குடி + பெயர்-தல்.]*

**குடிமகன்** *kuḍi-magaṉ,* பெ.(n.) முடி திருத்தாளன்; barber (அபி.சிந்.).

**குடிமம்** *kuḍimam,* பெ.(n.) துத்தம்; blue vitriol (சா.அக.).

**குடிமிக்குயவன்** *kuḍimi-k-kuyavaṉ,* பெ.(n.) நான்முகனின் தலைமுடியில் பிறந்தவன்; the person who born in nāṉmugā's hair (அபி.சிந்.).

**குடிமிராசி** *kuḍi-mirāši,* பெ.(n.) தலைமுறை, தலைமுறையாக வரும் நிலவுரிமை; right or privilege of a hereditary occupant (செ.அக.).

**குடிமுழுகு-தல்** *kuḍi-muḻugu-,* 5 செ.கு.வி. (v.i.) கேடு விளைதல்; அழிவு ஏற்படுதல்; be lost; be desperate. *ஒரு வேளை சாப்பிடாவிட்டால் குடிமுழுகி விடாது!*

*[குடி + முழுகு-தல்.]*

**குடிமைப்பொருள்** *kuḍimai-p-poruḷ,* பெ.(n.) அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான அரிசி, எண்ணெய் போன்ற பொருள்கள்; civil supplies. *குடிமைப் பொருள் வாணிபக் கழகம்*

*[குடிமை + பொருள்.]*

**குடியமர்த்து-தல்** *kuḍi-y-amarttu-,* 5 செ.கு.வி. (v.i.) புதியதாக ஓர் இடத்தில் தங்கி வாழச் செய்தல்; குடியேற்றுதல்; settle in a place or country. *புயலால் வீடு இழந்தவர்கள் ஏதிலியர் முகாமில் இப்போது குடியமர்த்தப் பட்டுள்ளனர்.*

*[குடி + அமர்த்து-தல்.]*

**குடியரசுத்தலைவர்** *kuḍi-y-arašu-t-talaivar,* பெ.(n.) குடியரசு அரசியல் அமைப்பில் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளும் தலைவர் அல்லது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுவ (நிருவாக)த் தலைவர்; President of a republic.

*[குடியரசு + தலைவர்.]*

**குடியுரிமை** *kuḍi-y-urimai,* பெ.(n.) 1. ஒரு நாட்டில் தங்குவதற்கான அரசு தரும் உரிமை (அங்கீகாரம்); citizenship. *சில நாடுகளில் பிறந்து சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தாலே குடியுரிமை கிடைத்து விடுகிறது.* 2. ஒரு நாட்டுக் குடிமகனுக்கு உள்ள உரிமை; rights of a citizen. *மக்களின் குடியுரிமையை மதிக்க வேண்டிய கடமை அரசுக்கு உண்டு.* 3. ஒரு வீட்டில் குடியிருப்பதற்கான தகுதி; rights of tenancy. *வாடகை வீட்டுக்கு முன்பணம் செலுத்திய நாளிலிருந்தே ஒருவர் அந்த வீட்டுக்குக் குடியுரிமை பெறுவார்.*

*[குடி + உரிமை.]*

**குடியெழுப்பு-தல்** *kuḍi-y-eḻuppu-,* 5 செ.கு.வி. (v.i.) மக்களை, வாழும் இடத்தை விட்டு வேறு இடத்துக்குப் போகச் செய்தல்; evacuate. *காவலர்களால் மக்கள் ஊரைவிட்டு குடியெழுப்பப்பட்டனர்.*

*[குடி + எழுப்பு-தல்.]*

**குடிராகதி** *kuḍirā-kati,* பெ.(n.) கோழியவரை; cock-bean - *Canavaiia obtusifolia* (சா.அக.).

**குடிலகண்டகம்** *kuḍila-kaṇḍagam,* பெ.(n.) கருங்காலி மரம்; black sundra tree -

*Acacia catechu typica alias Diospyras melanoxylon.*

**மறுவ.** உடுக்கை மரம்

இம்மரம் 20–30 அடி உயரம் இருக்கும். கிளைகள் முள்ளுள்ளவை. இதன் இலைகள் சுணையாயும் பால் ஒதனை மரத்தின் பாலைப் போன்றும் இருக்கும். இம்மரம் சிலசமயம் முள் இல்லாமலும் இருக்கும். சிறிய மஞ்சள் நிறமுள்ள பூ உடைய இம்மரத்தில் இருந்து பிசின் எடுக்கலாம் (சா.அக.).

**குடிலகாவிதம்** *kuḍila-kāvidam,* பெ.(n.) சடைக்குறண்டி; a thorny shrub - *Lepidagathis scariosa* (சா.அக.).

**குடிலி** *kuḍili,* பெ.(n.) 1. செம்பல்லிப்பூடு; an unknown lizard plant used by the Siddhars for rejuvenation. 2. நீலஞ்சோதி; another unknown plant used by the Siddhars for rejuvenation (சா.அக.).

*[குடில் – குடிலி.]*

**குடீரம்** *kuḍiram,* பெ.(n.) 1. குடிசை; hut, cottage. 2. இலை வேய்ந்த குடில் (பர்ணசாலை); hermitage (செ.அக.).



**குடுகு** *kuḍugu,* பெ.(n.) 1. தேங்காய் முதலியவற்றாலான குடுவை; coconut or other hard shell used as a vessel. 2. கரகம் (கமண்டலம்); earthen or wooden pitcher of an ascetic. 3. இடக்கை யென்னும் தோற்கருவி (சிலப்.3, 27, உரை); a hand drum. 4. வீணையின் உறுப்பு; belly of a lute (செ.அக.).

*[குடு – குடுகு.]*

**குடுகுடுவென்று** *kuḍu-kuḍu-venṟu,* வி.அ.(adv.) குறுகிய எட்டு வைத்து வேகமாக உருண்டு வருவது போல; with short quick steps as if rolling down. *கலியாண வீட்டில் அவர் குடுகுடுவென்று ஓடி ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.*

*[குடுகுடு + என்று.]*

**குடுகுடுகிழம்** *kuḍu-kuḍu-kiḻam,* பெ.(n.) நடப்பதற்கே தட்டுத்தடுமாற வேண்டிய தள்ளாத நிலையில் இருக்கும் ஆள்; tottering old man or woman. *ஏதத்தை (விபத்தை) வேடிக்கை பார்க்கப் பொடியனி லிருந்து குடுகுடுகிழம் வரை எல்லோரும் வந்துவிட்டார்கள்.*

*[குடுகுடு + கிழம்.]*

**குடும்பஅட்டை** *kuḍumba-aṭṭai,* பெ.(n.) உணவுப் பொருள்கள், மண்ணெண்ணெய் முதலியவற்றை முறையான விலைக்குப் பெற அரசால் குடும்பத்திற்கு ஒன்று என்ற வீதத்தில் வழங்கப்படும், உறுப்பினர்களின் எண்ணிக்கை, வருமானம் முதலியவை பதிவு செய்யப்பட்ட பங்கீட்டு அட்டை; ration card

*[குடும்பம் + அட்டை.]*

**குடும்பக்கட்டுப்பாடு** *kuḍumba-k-kaṭṭuppāḍu,* பெ.(n.) கருத்தடை, அறுவை மருத்துவம் முதலியவற்றின் மூலம் குழந்தைகளைக் குறைவாகப் பெற்றுக் கொள்ளும் குடும்பத் திட்டம்; planned family; family planning

*[குடும்பம் + கட்டுப்பாடு.]*

**குடும்பத்தியாச்சியம்** *kuḍumbattiy-ācciyam,* பெ.(n.) இல்லற வாழ்வை முற்றும் துறந்து வாழும் துறவு வாழ்க்கை; renunciation of family ties, as an ascetic (செ.அக.).

**குடும்பப்பிரதிட்டை** *kuḍumba-p-piradiṭṭai,* பெ.(n.) நிலையழிந்த குடும்பத்தை நிலை நிறுத்தல்; maintaining or stabilising a family by rescuing it from distress (செ.அக.).

*[குடும்பம் + **Skt.** பிரதிட்டை.]*

**குடுவிதிப்பாளம்** *kuḍuvidi-p-pāḷam,* பெ.(n.) இலுப்பை மரம்; south Indian mahua - *Bassia longifolia* (சா.அக.).

**குடேசி** *kuḍēśi,* பெ.(n.) கற்றாழை; Indian aloe - *Allooe officinalis* (சா.அக.).

**குடேரசம்** *kuḍēraśam,* பெ.(n.) வெண் துளசி; white basil (சா.அக.).

**குடைக்காவலன்** *kuḍai-k-kāvalaṉ,* பெ.(n.) 1. சிற்றரத்தை; lesser galangal - *Alpinia galanga.* 2. சேனைக் கிழங்கு; elephant-foot yam - *Amorphophallus campanulatus* (சா.அக.).

*[குடை + காவலன்.]*

**குடைச்சி** *kuḍaicci,* பெ.(n.) சிறுகீரை; pig-greens - *Amaranthus campestris* (சா.அக.).

*[குடை – குடைச்சி.]*

**குடைச்சிணுங்கி** *kuḍai-c-ciṇuṅgi,* பெ.(n.) கொடிச் சிணுங்கி; a sensitive creeper of the mimosa genus (சா.அக.).

**குடைசாய்–தல்** *kuḍai-śāy-,* 1 செ.கு.வி.(v.i.) மாட்டு வண்டி போன்ற வண்டிகள் ஒரு பக்கமாகவோ, தலைகீழாகவோ விழுதல்; of bullock cart, vehicles overturn. *காளைகள் மிரண்டதால் வண்டிக் குடை சாய்ந்து உருண்டது. சீராகப் போய்க் கொண்டிருந்த வாழ்க்கை குடை சாய்ந்து விட்டது*

*[குடை + சாய்–தல்.]*

**குடைச்சொருகி** *kuḍai-c-corugi,* பெ.(n.) செந்நாவி; red aconite (சா.அக.).

*[குடை+ சொருகி.]*

**குடைப்பாலி** *kuḍai-p-pāli,* பெ.(n.) மடையன் சாம்பிராணி; false copaiba - *Hardwickia pinnata* (சா.அக.).

**குடைப்பறவை** *kuḍai-p-paṟavai,* பெ.(n.) காக்கை போன்ற உருவம் கொண்ட பறவை; the bird which look like a crow.

*[குடை + பறவை.]*

இது தென்அமெரிக்காவில் அமேசான் ஆற்றங்கரையில் உள்ளது. இதன் தலைமீது வளர்ந்துள்ள கொண்டையிறகு குடை போன்று விரிக்கக்கூடியதாய் இருக்கிறது. இதன் கழுத்தில் அலைதாடி போன்று இறகுகள் அடுக்கி வைக்கப்பட்டது போல் வளர்ந்திருக்கும். பூச்சி, புழுக்களைத் தின்று உயிர் வாழ்கிறது (அபி.சிந்.).

**குடைமரம்** *kuḍai-maram,* பெ.(n.) வேலமரம்; குடைவேல்; umbrella thorn-babool - *Acacia planifrous alias A.Latronum* (சா.அக.).

**குடைமல்லிகை** *kuḍai-malligai,* பெ.(n.) 1. செண்டு மல்லிகை; Arabian jasmine - *Jasminum sambac.* 2. கூடல் மல்லிகை; shining trifoliata jasmine - *Jasminum calophyllum* (சா.அக.).

*[குடை + மல்லிகை.]*

**குடையிப்பி** *kuḍai-y-ippi,* பெ.(n.) கடலில் பாறைகளைத் துளைக்கும் சிப்பி; a genus of marine mollusc which pierces rocks, woods etc. - *Pholas* (சா.அக.).

*[குடை + இப்பி.]*

**குடையின்பருவதம்** *kuḍaiyiṉ-paruvadam,* பெ.(n.) பித்தளை; brass (சா.அக.).

**குடையூதை** *kuḍai-y-ūdai,* பெ.(n.) குடைச்சலை உண்டாக்கும் வளி வகை; neuralgic pain (சா.அக.).

*[குடை + ஊதை.]*

**குடைராட்டினம்** *kuḍai-rāṭṭiṉam,* பெ.(n.) பொருட்காட்சி, திருவிழா நடக்கும் இடங்களில் பெரிய குடை போன்ற அமைப்பின் கீழ்த்தொங்கவிடப்பட்ட பல வடிவ இருக்கைகளில் சிறுவர் ஏறிச் சுற்றி வரும் விளையாட்டுக் கருவி; meerrry-go-round.

*[குடை + ராட்டினம்.]*

**குடைவாய்வு** *kuḍai-vāyvu,* பெ.(n.) **குடையூதை** பார்க்க; see *kuḍai-y-ūdai* (சா.அக.).

**குடைவிருத்தி** *kuḍai-virutti,* பெ.(n.) திருவிழாக் காலங்களில் இறைவனுக்குக் குடைபிடிப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட மானியம்; grant of land for holding the ornamental umbrella over the village deity during festivals (செ.அக.).

*[குடை + **Skt.** விருத்தி.]*

**குடோச்சம்** *kuḍōccam,* பெ.(n.) கஞ்சாங்கோரை; white-basil - *Ocimum album.*

**குடோரமுட்சி** *kuḍōra-muṭci,* பெ.(n.) வெள்ளைக் கழற்கொடி; a white variety of kaḻaṟ-koḍi (சா.அக.).

**குடோரிமண்** *kuḍōri-maṇ,* பெ.(n.) தூய்மையான மண்; pure alkaline earth (சா.அக.).

*[குடோரி + மண்.]*

**குண்டச்சம்பா** *kuṇḍa-c-cambā,* பெ.(n.) உருண்டைச் சம்பா நெல்; a species of round paddy (சா.அக.).

*[குண்டு + சம்பா.]*

**குண்டசன்** *kuṇḍašaṉ,* பெ.(n.) திருதராட்டிரன் குமரன்; son of Tirudarāṭṭiraṉ (அபி.சிந்.).

**குண்டபேதி** *kuṇḍa-pēti,* பெ.(n.) திரிதராட்டிரன் குமரன்; son of Tiridarāṭṭiraṉ (அபி.சிந்.).

*[குண்டம் + பேதி.]*

**குண்டர்** *kuṇḍar,* பெ.(n.) 1. பொதுச் சொத்துக்களுக்குக் கேடு விளைவித்தல்; ஆட்களை அடித்துப் பயமுறுத்துதல்; கலவரம் செய்கை போன்ற மக்களுக்குத் தீங்கு விளைவிக்கும் செயல்களைச் செய்யும் ஆள்; hooligan; in India 'goonda'. *குண்டர் தடுப்புக் காவல் சட்டம்.*

**குண்டலம்பாலை** *kuṇḍalam-pālai,* பெ.(n.) ஒரு (கற்ப) மூலிகை; a rejuvenating drug.

*[குண்டம் + பாலை.]*

இது 23 பெரிய மூலிகைகளில் ஒன்று (சா.அக.).

**குண்டலபோகி** *kuṇḍala-pōgi,* பெ.(n.) துரியோதனன் தம்பி; brother of Duri-y-ōtaṉaṉ (அபி.சிந்.).

**குண்டலபோசன்** *kuṇḍala-pōšaṉ,* பெ.(n.) **குண்டலபோகி** பார்க்க; see *kuṇḍala-pōgi* (அபி.சிந்.).

**குண்டலரதன்** *kuṇḍala-rataṉ,* பெ.(n.) துரியோதனன் தம்பி; brother of Duri-y-ōdaṉaṉ (அபி.சிந்.).

**குண்டலிகா** *kuṇḍalikā,* பெ.(n.) சம்பங்கோரை; a kind of sedge-grass (சா.அக.).

*[குண்டலிகம் – குண்டலிகா.]*

**குண்டலிங்கம்** *kuṇḍaliṅgam,* பெ.(n.) மலாக்கா நறும்புகைத்தி; malacca benzoin - *Styrax benzoin* (சா.அக.).

**குண்டலித்தாய்** *kuṇḍali-t-tāy,* பெ.(n.) 1. சத்தி; the universal. 2. துர்க்கை; the goddess Durga (சா.அக.).

*[குண்டலி + தாய்.]*

**குண்டலியா** *kuṇḍaliyā,* பெ.(n.) சீந்தில்; moon creeper - *Menispermum Cordi; Folium* (சா.அக.).

*[குண்டலி + ஆள்.]*

**குண்டற்கச்சி** *kundar-kacci,* பெ.(n.) தென்னை வகைகளுள் ஒன்று (பதார்த்த.71); a kind of coconut (செ.அக.).

**குண்டன்** *kundan,* பெ.(n.) 1. காசிப முனிவர் மனைவி கத்துருவின் குமரன்; son of katru and saint kāšipā. 2. திருதராட்டிரன் மகன்; son of Tirudarāṭṭiran. 3. ஒரு சிவ கணத்தவன்; a celestial host of Šivā (அபி.சிந்.).

*[குண்டு + அன்.]*

**குண்டாதி** *kundāti,* பெ.(n.) பீ நாறிச் சங்கு; smooth volkameria - *Cleodendron inerme* (சா.அக.).

**குண்டானி** *kundāni,* பெ.(n.) கொம்மட்டிக் கொடி; mortar-flower bindweed - *Ipomaca bracteata* (சா.அக.).

*[குண்டலி – குண்டானி.]*

**குண்டில்** *kundil,* பெ.(n.) முதுகு; backside, the region of the spine.

**குண்டினபுரம்** *kundina-puram,* பெ.(n.) விதர்ப்ப நாட்டுத் தலைநகரம் ; an ancient capital of Vidarpā (அபி.சிந்.).

*[குண்டினம் + புரம்.]*

**குண்டுக்கட்டாக** *kundu-k-kaṭṭāga,* வி.அ. (adv.) கழுத்தையும், காலையும் ஒன்று சேர்த்துப் பந்து போல் சுருட்டி; bundling someone up. *அவனைக் குண்டுக்கட்டாகத் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள்.*

*[குண்டு + கட்டாக.]*

**குண்டுகட்பாலியாதனார்** *kundukaṭ-pāli-y-ātanār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a Šaṅgam poet.

*[குண்டுகண் + பாலி + ஆதனார்.]*

இவர் இயற்பெயர் ஆதன். ஊர் பாலி. ஆழ்ந்த கண் உடையவராதலால் குண்டுகணென்று அடைமொழி கொடுக்கப்பட்டார் போலும். இவர் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிப் பரிசில் பெற்றவர். இவர் பாடியதாக புறநானூற்றில் (387) ஒரு பாடலும், நற்றிணையில் (220) ஒரு பாடலும் காணப்படுகின்றன (அபி.சிந்.).

**குண்டுக்கழுதை** *kundu-k-kaludai,* பெ.(n.) ஆண் கழுதை; he-ass (சா.அக.).

**குண்டுக்காயம்** *kundu-k-kāyam,* பெ.(n.) வெடி குண்டு பட்டதனால் உண்டான புண்; gun-shot wound (சா.அக.).

*[குண்டு + காயம்.]*

**குண்டுச்சட்டி** *kundu-c-caṭṭi,* பெ.(n.) உருண்டை வடிவச் சட்டி வகை (பாத்திரம்); a small round bottomed vessel. *குண்டுச்சட்டிக்குள் குதிரை ஓட்டுவது போல!*

*[குண்டு + சட்டி.]*

**குண்டுப்பூக்கொன்றை** *kundu-p-pū-k-konrai,* பெ.(n.) கொன்றை வகை; sulphur flowered senna - *Cassia glauca* (செ.அக.).

*[குண்டு + பூ + கொன்றை.]*

**குண்டும்குழியும்** *kundum-kuliyum,* பெ.(n.) சிறு பள்ளங்கள்; potholes. *சாலை குண்டும் குழியுமாக இருக்கிறது. குண்டும் குழியுமான பாதை.*

*[குண்டும் + குழியும்.]*

**குண்டுமல்லி** *kundu-malli,* பெ.(n.) அதிக இதழ்களைக் கொண்ட, பெரிய அளவுடைய மல்லிகை வகை; arabian jasmine.

*[குண்டு + மல்லி.]*

**குண்டுமாணிக்கம்** *kundu-māṇikkam,* பெ.(n.) தூம்புர வாலி; safflower - *Carthamus tinctorius* (சா.அக.).

*[குண்டு + மாணிக்கம்.]*

**குண்டுமிளகாய்** *kundu-miḷāgāy,* பெ.(n.) குட மிளகாய்; bell-pepper - *Capsicum grosum* (சா.அக.).

*[குண்டு + மிளகாய்.]*

**குண்டுரோசனை** *kundu-rōšaṉai,* பெ.(n.) நறுமணமும், உருண்டை வடிவுமுள்ள ஒருவகை மருந்துக் கிழங்கு (மலை.); an odoriferous root growing in circular masses (செ.அக.).

**குண்டூர்க்கூற்றம்** *kundūr-k-kūṟṟam,* பெ. (n.) சேரநாட்டின் ஒரு பகுதி; one of the parts of Šēra-nāḍu (அபி.சிந்.).

*[குண்டூர் + கூற்றம்.]*

**குண்டெறிதல்** *kunderidal,* தொ.பெ.(vbl.n.) மாழையிலான குண்டை எறியும் விளையாட்டுப் போட்டி; shotput.

*[குண்டு + எறிதல்.]*

**குண்டேந்தி** *kundēnti,* பெ.(n.) மலைதாங்கி; wound plant - *Šida carpinifolia* (சா.அக.).

*[குண்டு + ஏந்தி.]*

**குண்டோசனை** *kundōšaṉai,* பெ.(n.) **குண்டுரோசனை** பார்க்க; see *kundu-rōšaṉai* (செ.அக.).

**குண்டோதினி** *kundōdiṉi,* பெ.(n.) நிறைந்த மடியுள்ள மாடு; a cow with a full udder (சா.அக.).

**குண்ணம்** *kuṉṉam,* பெ.(n.) பெருமருது; Indian birth wort - *Aristolochia indica* (சா.அக.).

*[குண் – குண்ணம்.]*

**குண்ணிச்செடிச்சி** *kuṉṉi-c-cedicci,* பெ.(n.) தொழு கண்ணி; a medicinal plant - *Hedysarum gyrans* (சா.அக.).

*[குண்ணி + செடிச்சி.]*

**குண்டைத்தூக்கிப்போடு–தல்** *kundai-t-tūkki-p-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) அதிர்ச்சி தரும் செய்தியைக் கூறுதல்; disclose a shocking news; drop a bombshell. *வேலையை விட்டு விட்டேன் என்று ஒரு குண்டைத்தூக்கிப் போட்டான்.*

*[குண்டை + தூக்கி + போடு–தல்.]*

**குண்ணுவர்** *kuṉṉuvar,* பெ.(n.) தாராபுரம், காங்கேயம், பழனிமலை முதலிய இடங்களில் பயிரிடும் குடிமக்கள்; the peasents who cultivate in Tārāpuram, Kāṅgēyam, Palaṉi-malai.

*[குண் – குண்ணுவா.]*

இவர்கள் தங்களை வேளாளர் என்பர். கோயம்புத்தூர் மாவட்டத்தில் உள்ள குண்ணூரி லிருந்து வந்ததால் இப்பெயர் பெற்றனர். பெரிய குண்ணுவர், சிறிய குண்ணுவர் என இருவகை உண்டு (அபி.சிந்.).

**குணக்கம்** *kuṇakkam,* பெ.(n.) குருந்த மரம்; a species of wild lime - *Atlantia racemosa* (சா.அக.).

**குணக்காரி** *kuṇakkāri,* பெ.(n.) குன்றிமணி; jeweller's bead (சா.அக.).

**குணக்குமணல்** *kuṇakku-maṇal,* பெ.(n.) வெள்ளி மணல்; silver ore (சா.அக.).

*[குணக்கு + மணல்.]*

**குண்டகன்** *kundagaṉ,* பெ.(n.) சிவ கணத்தவரில் ஒருவர்; one of the celestial host of Šivā (அபி.சிந்.).

*[குண்டு – குண்டகன்.]*

**குண்டக்கிரியா** *kunda-k-kiriyā,* பெ.(n.) இசைப்பண்ணில் ஒரு வகை (பரத.இராக.56); a specific melody-type (செ.அக.).

**குணச்சித்திரம்** *kuṇa-c-cittiram,* பெ.(n.) 1. கதை, நாடகம் முதலியவற்றின் மாந்தர்; portrayal of a character in a story, etc. *இந்தச் சிறுகதையில் வரும் குணச்சித்திரங்களை வாழ்க்கையில் சந்தித்த உணர்வு ஏற்படுகிறது.* 2. கதை மாந்தர்க்கு உரியதாகக் காட்டப்படும் குண விளக்கம்; characterization. *கதை மாந்தர்களின் குணச்சித்திரம் சிறப்பாக அமைந்திருக்கிறது.*

*[குணம் + சித்திரம்.]*

**குணசலி** *kuṇašali,* பெ.(n.) வல்லாரை; Indian penny-wort - *Hydrocotyle asiatica* (சா.அக.).



**குணசாலினி** *kuṇa-šāliṉi,* பெ.(n.) தனபதி என்னும் வணிகரின் மனைவி; wife of merchant Taṉapadi (அபி.சிந்.).

**குணசுபாவம்** *kuṇa-šubāvam,* பெ.(n.) இயல்பான குணம்; natural disposition (சா.அக.).

*[குணம் + **Skt.** சுபாவம்.]*

**குணத்தி** *kuṇatti,* பெ.(n.) 1. வல்லாரை; Indian penny wort - *Hydrocotyle asiatica.* 2. சிவகரந்தை; fever toolsy - *Sphoeranthus amaranthoides* (சா.அக.).

*[குணம் – குணத்தி.]*

**குணத்தித்தரு** *kuṇatti-t-taru,* பெ.(n.) வேலிப்பருத்தி; hedge-twiner (சா.அக.).

**குணந்துல்லியம்** *kuṇantulliyam,* பெ.(n.) வெண்பாதிரிப்பூ; white coloured fragrant trumpet flower - *Stereospermum chelonoides* (சா.அக.).

*[குணம் + துல்லியம்.]*

**குணநலன்** *kuṇa-nalaṉ,* பெ.(n.) ஒருவரின் நல்ல இயல்பு; of a person positive qualities. *வியக்கத்தக்க குணநலன்கள் கொண்டவர்.*

*[குணம் + நலன்.]*

**குணநிவர்த்தி** *kuṇa-nivartti,* பெ.(n.) நாரத்தை; bitter orange - *Citrus aurantium* (சா.அக.).

**குணபரன்** *kuṇa-paraṉ,* பெ.(n.) பல்லவர்களில் ஒருவன்; a king who belonged to Pallavās.

*சோழ நாட்டை ஆண்டு திருச்சிராப்பள்ளி மலை மேல் உள்ள சிவன் கோவிலைப் புதுப்பித்தவன். இவனுக்குப் புருடோத்தமன், சத்துருமல்லன், சத்திய சந்தன் எனவும் பெயர் உண்டு (அபி.சிந்.).*

**குணமாயிரு–த்தல்** *kuṇamā-y-iru-,* 3 செ.கு.வி. (v.t.) நலமாய் இருத்தல்; being in sound health; to be well - conditioned (சா.அக.).

*[குணமாய் + இரு–த்தல்.]*

**குணமாலை** *kuṇa-mālai,* பெ.(n.) சீவக சிந்தாமணி நாயகன் சீவகனின் மனைவியரில் ஒருத்தி; one of the wive's of Šīvagaṉ in Šīvaga-Šintāmaṇi (அபி.சிந்.).

**குணரஞ்சிதம்** *kuṇa-rañjidam,* பெ.(n.) மனோரஞ்சிதம்; cupid's plant - *Artabotrys odoratissimus* (சா.அக.).

**குணருத்திரர்** *kuṇa-ruttirar,* பெ.(n.) குணதத்துவ நிலையராய் வெட்டவெளியில், அழிக்குந் தொழிலைச் செய்யும் சிவன் (உருத்திரர்) (சதாசிவ.77); the Lord of relative destruction who functions in the region of Kuṇa-tattuva (செ.அக.).

*[குணம் + **Skt.** உருத்திரர்.]*

**குணலாகிதம்** *kuṇa-lāgidam,* பெ.(n.) சம்பங்கிப் பூ; Champauk - *Michelia Champaka* (சா.அக.).

**குணவியது** *kuṇaviyadu,* பெ.(n.) மேன்மையானது; that which is superior. *"குணவியது ஒன்று உட்பட நிறை" (தெ.இ.க. II, 431) (செ.அக.).*

**குணனைவில்லாக்கினோன்** *kuṇaṉai-villākkiṉōṉ,* பெ.(n.) துரிசு; blue vitriol - *Copper sulpphate* (சா.அக.).

**குணாதிசயம்** *kuṇādišayam,* பெ.(n.) **குணாம்சம்** பார்க்க; see *kuṇāmšam.*

*[குணம் + அதிசயம்.]*

**குணாதீதம்** *kuṇādīdam,* பெ.(n.) ஒழுக்கங் கடந்தது; that which is absolute above all attributes, as referring to god (செ.அக.).

*[குணம் + **Skt.** அதீதம்.]*

**குணாநிதிபாண்டியன்** *kuṇā-nidi-pāṇḍiyaṉ,* பெ. (n.) ஒரு பாண்டிய மன்னன்; a Paṇḍiyā king.

மறுவ. சுந்தரபாண்டியன்

**குணாம்சம்** *kuṇāmšam,* பெ.(n.) 1. குணச் சிறப்பு; predominant characteristics. *அவருடைய இந்தக் குணாதிசயத்தை எல்லோரும் அறிந்திருப்பார்கள். தாத்தா வினுடைய குணாதிசயங்களை யாரால் மாற்ற முடியும்?* 2. ஒன்றிற்கே உரித்தான பண்பு; characteristic feature. *வெளிநாட்டு வங்கி என்பதற்கான எல்லா குணாதிசயங்களும் இருந்தன.*

*[குணம் + **Skt.** அம்சம்.]*

**குணாலங்கிருதன்** *kuṇālaṅgirudaṉ,* பெ.(n.) நற்குணங்களைத் தன்னிடத்தே கொண்டவன்; one adorned with good qualities (செ.அக.).

**குணிகார்க்கியர்** *kuṇi-kārkkiyar,* பெ.(n.) கார்க்கிய குலத்தில் தோன்றியவர்; one who came from Kārkkiya line age (அபி.சிந்.).

**குத்தகைதார்** *kuttagaidār,* பெ.(n.) நிலக்குத்தகை (கவுல்) வாங்குபவன்; contractor, leasee (செ.அக.).

**குத்தகைதாரர்** *kuttagaitārar,* பெ.(n.) குத்தகைக்கு எடுப்பவர்; leasee.

*[குத்தகை + தாரர்.]*

**குத்தன்** *kuttaṉ,* பெ.(n.) எமனிடம் உள்ள கணக்கனான சித்திரகுத்தன்; accountant of Lord yamā (அபி.சிந்.).

**குத்திட்டு** *kuttiṭṭu,* வி.எ. (adv.) 1. உட்காரும் போது குத்துக்காலிட்டு; squat while sitting. *கணப்புக்கு அருகில் குத்திட்டு உட்காந்து கொண்டான்.* 2. நெட்டுக்குத்தாக வளையாமல் நீட்டிக் கொண்டு; erect; straight. *தாடி முள்முள்ளாகக் குத்திட்டு நின்றது.*

*[குத்து + இடு.]*

**குத்திடு-தல்** *kuttiḍu-,* செ.கு.வி. (v.i.) பார்வை, கவனம் முதலியன ஒருவரின் மேல், ஒன்றில் நிலைத்தல்; வெறித்தல்; attention etc., get fixed on. *உயிர் பிரியும் நேரத்தில் கண் குத்திட்டது. கவனம் பாட்டின் மேல் குத்திட்டு நிலைத்தது.*

*[குத்து + இடு-தல்.]*

**குத்துக்கோல்** *kuttu-k-kōl,* பெ.(n.) தாக்கும் ஆயுதமாகப் பயன்படுத்தும் கூர்மையான முனை உடைய கம்பு; pointed pole used as a weapon. *கையில் குத்துக்கோல், அரிவாள் ஆயுதங்களுடன் பத்து பேர் புறப்பட்டார்கள்.*

*[குத்து + கோல்.]*

**குத்துமதிப்பு** *kuttu-madippu,* பெ.(n.) முறையாகக் கணக்கிடாத மதிப்பீடு; தோராயம்; rough estimate; approximate value. *அறுபது கலம் நெல் என்று எப்படிச் சொல்கிறாய்? எல்லாம் ஒரு குத்து மதிப்புதான். குத்துமதிப்பாகச் சொன்னால் இந்த வீடு முப்பதாயிரம் பெறும்.*

*[குத்து + மதிப்பு.]*

**குத்துயரம்** *kuttuyaram,* பெ. (n.) முக்கோணத்தில் அடிப்பக்கத்தையும் மேல் முனையையும் இணைக்கும் செங்குத்துக் கோடு; attitude in a triangle.

*[குத்து + உயரம்.]*

**குதப்பு-தல்** *kudappu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. உள்ளாக மெல்லாமலே வாயை அசைத்தல்; eating with the lips close - *Mumble.* 2. மெல்லுதல்; masticating. 3. உதப்புதல்; chewing food to increase the saliva and prepare for swallowing and digestion; stuffing the mouth with food (சா.அக.).

*[குது – குதப்பு.]*

**குதப்பியவுணவு** *kudappiya-v-uṇavu*, பெ. (n.) விழுங்குவதற்கு முன் உள்ள மென் உணவு; the food after mastication and just before deglutition - *Alimentary bolus* (சா.அக.).

*[குதப்பிய + உணவு.]*

**குதம்பேய்ச்சித்தர்** *kudam-pēy-c-cittar*, பெ. ள(n.) பதினெண் சித்தர்களில் ஒருவர்; one of eighteen Šiddās.

*[குதம்பை + பேய்+சித்தர்.]*

**குதமகாயம்** *kudama-kāyam*, பெ.(n.) வெங்காயம்; onion (சா.அக.).

**குதனம்** *kudaṉam*, பெ.(n.) 1. அசட்டை; negligence, carelessness, slovenliness. 2. துப்புரவின்மை; filthiness. 3. திறமையின்மை; want of dexterity; clumsiness, awkwardness (செ.அக.).

*[குது – குதனம்.]*

**குதனாசனம்** *kudaṉāšaṉam*, பெ.(n.) பெருங்காயம்; asafoetida - *Ferula asafoetida* (சா.அக.).

**குதிகள்ளம்** *kudi-kaḷḷam*, பெ.(n.) குதிப்பிளவை; boil or abscess on the heel (செ.அக.).

*[குதி + கள்ளம்.]*

**குதிகால்** *kudi-kāl*, பெ.(n.) 1. உள்ளங்காலின் பின்பக்கம்; the hind most part of the foot. 2. காற்குதி; heel of the foot (சா.அக.).

*[குதி + கால்.]*

**குதிகால்வலி** *kudi-kāl-vali*, பெ.(n.) 1. குதிகால் நோவு; pain in the heel - *Talalgia.* 2. குதிகாலை அழுந்த வைக்கும் போது தோன்றும் வலி; pain caused by pressure on the heel - *Painful heel* (சா.அக.).

*[குதிகால் + வலி.]*

**குதிகால்வாதம்** *kutikāl-vādam*, பெ.(n.) 1. குதிகால் ஊன்றுவதற்கு முடியாமல் இருக்கும் ஒரு நரம்பு தொடர்பான ஒரு நோய்; a disease of the heel rendering one unable to rest on the heel owing to excessive neuralgic pain - *Pododynia.* 2. முன்னங்காலில் நின்று பிறகு குதிகாலை ஊன்ற முடியாமல் வலி கொள்ளும் நரம்பு நோய்; pain experienced in raising the toes and suddenly bringing the heels to this ground - *Heel jar* (சா.அக.).

*[குதி + கால் + வாதம்.]*

**குதிகால்வெடிப்பு** *kutikāl-veḍippu*, பெ.(n.) குதிகாலில் ஏற்படும் பித்தம் அல்லது பனியினாற் காணும் வெடிப்பு; crack or fissure of th heel arising from the bilious condition of the system or frost-bite (சா.அக.).

*[குதிகால் + வெடிப்பு.]*

**குதிகாலெலும்பு** *kuti-kāl-elumbu*, பெ.(n.) குதிகால் உள்ளாக இருக்கும் எலும்பு; heel bone - *Calcaneum; Oscalcis* (சா.அக.).

*[குதிகால் + எலும்பு.]*

**குதிங்கால்வெட்டி** *kutiṅgāl-veṭṭi*, பெ.(n.) ஏமாற்றுக்காரன்; cheet, deceiver (செ.அக.).

*[குதிகால் + வெட்டி.]*

**குதிபோடு-தல்** *kudi-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) மகிழ்ச்சியைக் காட்டும் வகையில் துள்ளிக் குதித்தல்; jumb about; frolic.

*உன்னையும் கூட்டிக்கொண்டு போகிறேன் என்றதும் குழந்தை குதி போட்டது. அவள் இருக்கும் இடத்தில் குறும்பும் கும்மாளமும் குதிபோடும்.*

*[குதி + போடு-தல்.]*

**குதியைப்பாதி** *kudiyai-p-pādi,* பெ.(n.) வெட்டி வேர்; khus khus root - *Andropogon muricatus* (சா.அக.).

**குதிரைகொல்லி** *kutirai-kolli,* பெ.(n.) 1. ஒருவகைப் புன்செய்ப் பயிர்; poor man's horse-tail millet - *Panicum verticillatum.* 2. கொடி வகை; purple wreath - *Petracea volubilis* (செ.அக.).

**மறுவ. குதிரைவாலி**

*[குதிரை + கொல்லி.]*

**குதிரைகொடுத்தல்** *kudirai-koḍuttal,* பெ. (n.) சிறுவர் விளையாட்டில் வென்றோரைத் தோற்றார் முதுகிற் சுமக்கை (யாழ்.அக.); the penalty of the defeated person carrying the victor on his back, in children's play (செ.அக.).

*[குதிரை + கொடுத்தல்.]*

**குதிரைசத்தி** *kutirai-šatti,* பெ.(n.) ஓர் இயந்திரத்தின் இயங்கும் ஆற்றலை அளவிடப் பயன்படுத்தும் அலகு; a measurement used to estimate the power, called one horsepower, two horse power and so on (க்ரியா.).

*[குதிரை + சத்தி.]*

**குதிரைசதை** *kutirai-šadai,* பெ.(n.) ஆடு சதை;தொங்கும் சதை; calf muscle.

*[குதிரை + சதை.]*

**குதிரைச்சாரி** *kutirai-c-cāri,* பெ.(n.) குதிரையின் சுற்றியோடும் கதி; circuitous course of a horse (செ.அக.).

**குதிரைத்தறியனார்** *kudirai-t-taṟiyaṉār,* பெ.(n.) ஒரு கடைக்கழகப்புலவர்; a poet, belonged to sangam era.

*[குதிரை + தறியனார்.]*

இவர் பாலைத் திணையைப் பாராட்டிப் பாடியுள்ளார்.

**குதிரைத்திறன்** *kudirai-t-tiṟaṉ,* பெ.(n.) **குதிரைசத்தி** பார்க்க; see *kutirai-šatti.*

*[குதிரை + திறன்]*

**குதிரைநிலை** *kutirai-nilai,* பெ.(n.) குதிரைகளைக் கட்டி வைக்கும் இடம் (இலாயம்) (சினேந்.174); place where horses are kept, stable (செ.அக.).

**மறுவ. குதிரைக்கொட்டில்**

*[குதிரை + நிலை.]*

**குதிரைப்பயிரி** *kudirai-p-payiri,* பெ.(n.) பூடு (சாரணை) வகை; dog milk-grass - *Trianthema crystallina* (செ.அக.).

*[குதிரை + பயிரி.]*

**குதிரைப்பற்பாடாணம்** *kudirai-p-paṟ-pāšāṇam,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison, one of 32 (செ.அக.).

**குதிரைப்பால்** *kutirai-p-pāl,* பெ.(n.) குதிரையின் பால்; horse's milk.

*[குதிரை + பால்.]*

இது உடம்பிற்கு வலிமையை உண்டாக்கும். எளிதில் செரிக்கக் கூடியது. உடம்பிற்கு வெப்பமானது. சுவைக்கத் துவர்ப்பாய் இருக்கும் (சா.அக.).

**குதிரைப்பிடுக்கு** *kutirai-p-piḍukku,* பெ.(n.) குதிரைப் பிடுக்கன் என்னும் செடி; horse almond - *Sterculia foetida.*

*[குதிரை + பிடுக்கு.]*

இதன் காய்கள் நீள நீளமாய்த் தொங்குவதால் பார்வைக்கு அழகாக இருக்கும். ஆகவே இது தோட்டம், அரண்மனை, சோலைகளில் வைத்து வளர்க்கப்படும். இம்மரத்தின் இலை வலிமையையும், வியர்வையையும் உண்டாக்கும். இதன் விதைகள் கறுப்பாயும், நீளமாயும் இருக்கும்.

இதன் பூ கெட்ட நாற்றம் வீசுமாதலால் இதற்குப் 'பீநாறி' என்று ஒரு பெயரும் உண்டு. இதற்குச் சிறுநீரை வடிக்கும் குணமும் உண்டு. ஆகவே சிறுநீர் தொடர்பான நோய்களுக்குப் பெரிதும் பயன்படும் (சா.அக.).

**குதிரைப்பீசன்** *kutirai-p-pīšaṉ,* பெ.(n.) 1. உயரமாய் வளர்ந்த மரம்; any tree rising to great height; any tall majestic tree. 2. ஒரு முள் மரம்; camel tree; camel thistle - *Echinops echinatus* (சா.அக.).

*[குதிரை + பீசன்.]*

**குதிரைமலை** *kutirai-malai,* பெ.(n.) தென் கன்னடத்தில் உள்ள குதிரை மூக்கு மலை; hill in south-kaṉṉaḍā (அபி.சிந்.).

**குதிரையோடு-தல்** *kutirai-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவர் தனக்குப் பகரமாக மற்றொருவரைத் தேர்வு எழுத வைத்து ஆள் மாறாட்டம் செய்தல் (இலங்.); write an examination by praxy. *அவன் குதிரையோடித்தான் தேர்வில் வெற்றி யடைந்தான்.*

*[குதிரை + ஓடு-தல்.]*

**குதிரைவாவிகம்** *kudirai-vāvigam,* பெ.(n.) கோரைப்புல்; koray grass (சா.அக.).

*[குதிரை + வாவிகம்.]*

**குதிரைவாற்புல்** *kudirai-vāṟ-pul,* பெ.(n.) குதிரைவாலிப்புல்; ஒட்டுப்புல்; horse tail grass, panicum brizoides (சா.அக.).

*[குதிரை + வாற் + புல்.]*

**குதுகுலிப்பு** *kudukulippu,* பெ.(n.) 1. மிகு மகிழ்ச்சி; ecstasy; rapture. 2. மயிர்ச் சிலிர்ப்பு; hair standing on ends - *Horripillation* (சா.அக.).

*[குது + குலிப்பு.]*

**குத்தல்குடைச்சல்** *kuttal-kuḍaiccal,* பெ. (n.) 1. காற்றினால் ஏற்படும் நரம்பு வலி; piercing and boring pain in the course of the nerves due to aggravated condition of air. 2. மூட்டு வலி; pain experienced in rheumatism (சா.அக.).

*[குத்தல் + குடைச்சல்.]*

**குத்தாலகம்** *kuttālagam,* பெ.(n.) 1. பருத்தி; cotton - *Gossypium herbaceum.* 2. காட்டாத்தி; திருவாத்திச் செடி; holy mountain ebony - *Bauhinia tomentosa.* 3. கடுகு ரோகிணி; black hellebore - *Helleborus niger* (சா.அக.).

**குத்தாலிகம்** *kuttāligam,* பெ.(n.) குடமிளகாய்; bell pepper - *Capsicum grosum* (சா.அக.).

**குத்திக்குத்தியிருமுதல்** *kutti-k-kutti-y-irumudal,* தொ.பெ.(vbl.n.) புகைந்து இருமுகை; caughing often due to irritation (சா.அக.).

*[குத்திக்குத்தி + இருமுதல்.]*

**குத்து-தல்** *kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. துளித் துளியாய் விடுதல்; pouring in drops as into the ear or eye. 2. எண்ணெய்க் குத்தல்; letting oil in drops. 3. கத்தியால் குத்தல்; stabbing with a knife. 4. நுழைத்தல்; the act of thrusting. 5. கையாற் குத்தல்; giving a blow with the fist. 6. துளை செய்தல்; pricking; boring as ear. 7. இடித்தல்; pounding as of rice. 8. அலகு குத்தல்; hook swinging. 9. பறித்தல்; plucking (சா.அக.).

**குத்துக்காரன்சம்மட்டி** *kuttukkāraṉ-šammaṭṭi,* பெ.(n.) செடிவகை; a herbaceous plant (சா.அக.).

*[குத்துக்காரன் + சம்மட்டி.]*

**குத்துச்சீந்தில்** *kuttu-c-cīntil,* பெ.(n.) சீந்திற் செடி; a species of moon-creeper (சா.அக.).

*[குத்து + சீந்தில்.]*

**குத்துச்செடிகண்டங்கத்திரி** *kuttu-c-cedi-kandan-kattiri,* பெ.(n.) குத்தாக முளைக்கும் பாப்பார முள்ளிச் செடி; Brahminmully growing in clusters - *Solanum indicum* (சா.அக.).

*[குத்துச்செடி + கண்டங்கத்திரி.]*

**குத்துசாதம்** *kuttu-šadam,* பெ.(n.) 1. பிடி சோறு; a grasp-ful of boiled rice. 2. கையினால் எடுக்கும் அளவு கொண்ட சோறு; handful of boiled rice (சா.அக.).

*[குத்து + சாதம்.]*

**குத்துநாம்பழம்** *kuttunām-palam,* பெ.(n.) பேரீச்சம் பழம்; wild date fruit - *Phoenix acaulis* (சா.அக.).

*[குத்துநாம் + பழம்.]*

**குத்துப்பாகல்** *kuttu-p-pāgal,* பெ.(n.) நிலப்பாகல்; ground pagal - *Momordica humilis* (சா.அக.).

*[குத்து + பாகல்.]*

**குத்துப்பிடாரி** *kuttu-p-pidāri,* பெ.(n.) வனதேவிச் செடி; an unknown plant (சா.அக.).

*[குத்து + பிடாரி.]*

**குத்துவல்லாரை** *kuttu-vallārai,* பெ.(n.) மலை வல்லாரை; a species of Indian penny wort - *Hydrocotyle asiatica* (சா.அக.).

*[குத்து + வல்லாரை.]*

**குந்தரம்** *kundaram,* பெ.(n.) ஒரு புல்; a kind of grass (சா.அக.).

**குந்தலிக்கம்** *kundalikkam,* பெ.(n.) வெள்ளைப்போள மரத்தின் பிசின் (யாழ்.அக.); myrrh-resin - *Gummi resina myrrha* (செ.அக.).

**குந்தலிங்கம்** *kundalingam,* பெ.(n.) மரவகை; benzoin tree - *Styrax benzoin* (செ.அக.).

**குந்தவிளக்கம்** *kunda-vilakkam,* பெ.(n.) வெள்ளைப் போளம்; white myrrh or women's bole - *Balsomdendra myrrh* (சா.அக.).

*[குந்தம் + விளக்கம்.]*

**குந்தலீகம்** *kundalīgam,* பெ.(n.) முண்டினி மரம்; an unknown tree said to possess occult virtues (சா.அக.).

**குந்தளை** *kundaļai,* பெ.(n.) ஒரு தெய்வ மங்கை; a deity women.

**குந்தா** *kundā,* பெ.(n.) 1. துமுக்கியின் அடி; stock of a gun. 2. கப்பலின் பின்பக்கம்; stern of a vessel (செ.அக.).

*[குந்தல் (மரம்) – குந்தா.]*

**குந்திகறையான்** *kundi-karaiyān,* பெ.(n.) பச்சோந்தி; green-lizard - *Chameleon* (சா.அக.).



**குந்திபுதல்வன்** *kundi-pudalvan,* பெ.(n.) பாண்டவர்களுள் மூத்தவனான தருமன் (குந்தியின் புதல்வன்) (சூடா.); son of kundi, daruma (செ.அக.).

*[குந்தி + புதல்வன்.]*

**குந்திபுரி** *kundi-puri,* பெ.(n.) தற்போதுள்ள குவாலியர் நகரம்; recent kuwāliyar city (அபி.சிந்.).

*[குந்தில் – குந்திலி + புரி.]*

**குந்திபோசன்** *kundi-pōšan,* பெ.(n.) இடைய (யாதவ)மன்னன்; yātavā king.

பாரதப் போரில் முதல் நாளில் அசுவத்தாமனுடன் போர் புரிந்தான். இவனே குந்தியை வளர்த்தவன் (அபி.சிந்.).

**குந்திரிகம்** *kundirigam,* பெ.(n.) 1. பெரிய மரவகை; salai tree - *Indian olibanum - Boswellia serrata typica.* 2. மர வகைகளுள் ஒன்று; konkani resin - *Boswellia serrataglabra* (செ.அக.).

**குந்தேசிகம்** *kundēšigam,* பெ.(n.) கோபுரக் கள்ளி; a kind of spurge tree; tower spurge (சா.அக.).

**குநகம்** *kunagam,* பெ.(n.) நகத்திற் காணும் நோய்; a disease of the nails (சா.அக.).

**குப்பஅஞ்சனா** *kuppa-añjanā,* பெ.(n.) நெற்பொலியின் மதிப்பு; estimate of the produce of a field after the crop is gathered in, but before it is measure (செ.அக.).

*[குப்பல் + அஞ்சனா.]*

**குப்புற** *kuppuṟa,* வி.அ.(adv.) முகம், வயிற்றுப் பகுதி, மார்பு ஆகியவை தரையைப் பார்த்தபடி; கவிழ்ந்து; பெட்டி, கூடை முதலியவை தலைகீழாக; of a person face downwards; on one's belly; of objects upside down. *குப்புற படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். பழக்கூடை குப்புறச் சரிந்து கிடந்தது*

*[குப்பு + உறு.]*

**குப்புறத்தள்ளு-தல்** *kuppuṟa-t-taḷḷu-,* 5 செ.கு.வி.(v.i.) முகம் கீழ் நோக்கித் தள்ளுதல்; throwing down upon the face (சா.அக.).

*[குப்புற + தள்ளு.]*

**குப்பென்று** *kuppeṉṟu,* வி.அ.(adv.) (குறிப்பிட்ட) அந்த நேரத்தில் அதிகமாக; sweat breaking out; gushingly in a flush. *தன் மேல் திருட்டுக் குற்றம் சாட்டப் பட்டதைக் கேட்டு அவனுக்குக் குப்பென்று வியர்த்தது. வெட்கத்தால் முகம் குப்பென்று சிவந்தது.* 2. ஒரேடியாகத் திரண்டு வருவது போல்; of smell, smoke in a sudden whiff. *சாக்கடையிலிருந்து நாற்றம் குப்பென்று அடித்தது. சமையல்கட்டிலிருந்து ஏதோ தாளிக்கும் மணம் குப்பென்று மூக்கைத் துளைத்தது.*

*[குப்பு + என்று.]*

**குபேரகம்** *kubēragam,* பெ.(n.) சின்னிமரம்; Indian shrubby copper leaf.

**குபையம்** *kupaiyam,* பெ.(n.) சிறுபுள்ளடி; a species of ticktrefoil.

**குப்பைக்கூடை** *kuppai-k-kūdai,* பெ.(n.) குப்பை போடுவதற்கான கூடை வடிவப் பொருள்; waste paper basket; dustbin

*[குப்பை + கூடை.]*

**குப்பைக்கூளம்** *kuppai-k-kūḷam,* பெ.(n.) தேவையற்றவை, செத்தை முதலியன; sweepings, rubbish (செ.அக.).

**குப்பைக்கோழியார்** *kuppai-k-kōḻiyār,* பெ.(n.) ஒரு புலவர்; a poet, lived in the Šaṅgam age.

*[குப்பை + கோழி + ஆர்.]*

இவர் தாம் பாடிய குறுந்தொகையில் குப்பைக் கோழியின் தனிப்போரினைத் தலைவி நோய்க்கு உவமித்த சிறப்பால் இப்பெயர் பெற்றார் எனக் கருதுவர். இவர் பெண்பாலராக இருக்கலாம் (அபி.சிந்.).

**குப்பைகொட்டு-தல்** *kuppai-koṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) சொல்பவர் நோக்கிலும், கேலியாகவும் பயனற்ற வேலையில் பங்கு பெறுதல்; பயனற்ற ஒரே வேலையைச் செய்தல்; jocularly take part in an unproductive work; do the same suseless job again and again. *நீயும் அந்த*

*அலுவலகத்தில் தான் குப்பை கொட்டினாய் இவ்வளவு நாள் கதை எழுதிக் குப்பைக் கொட்டியது போதும்!*

*[குப்பை + கொட்டு-தல்.]*

**குப்பைத்தொட்டி** *kuppai-t-toṭṭi,* பெ.(n.) 1. குப்பை போடுவதற்காக வீட்டுக்கு வெளியே அல்லது தெருவில் வைத்திருக்கும் கற்காரையால் (சிமெண்ட்) செய்த தொட்டி போன்ற அமைப்பு; dustbin; garbase can. 2. குப்பைக் கூடை; waste paper basket

*[குப்பை + தொட்டி.]*

**குப்பைமேனி** *kuppai-mēṉi,* பெ.(n.) இலை தண்டோடு சேரும் இடத்தில் சிறுசிறு காய்கள் காய்க்கும் ஒரு வகைச் செடி; Indian acalypha.

*[குப்பை + மேனி.]*



**குப்பைமேனிக்கீரை** *kuppai-mēṉi-k-kīrai,* பெ.(n.) குப்பையில் வளரும் ஒரு வகைக் கீரை; rubbish plant - *Acalypha indica* (சா.அக.).

*[குப்பை + மேனி + கீரை.]*

**குப்பையணை-தல்** *kuppai-y-aṇai-,* செ.கு.வி.(v.i.) குப்பையைச் சேர்த்தல்; resorting to a dung-hill gather the clutters (சா.அக.).

*[குப்பை + அணை-.]*

**குபக்கினம்** *kupakkiṉam,* பெ.(n.) தகரை; ring worm plant - *Cassia tora* (சா.அக.).

**குபசுபா** *kupa-šubā,* பெ.(n.) எட்டி; nux-vomica - *Strychnos nux-vomica* (சா.அக.).

*[குப + சுபா.]*

**குபம்** *kupam,* பெ.(n.) 1. கோட்டம்; Arabian coatus - *Costus speciosus.* 2. தழும்பு; scar; cicatrix (சா.அக.).

**குபயம்** *kupayam,* பெ.(n.) சிறுபுள்ளடி; unifoliate tick-trefoil - *Desmonium latifolium* (சா.அக.).

**குபலம்**[1] *kubalam,* பெ.(n.) வலிமை இன்மை; weakness (செ.அக.).

**குபலம்**[2] *kubalam,* பெ.(n.) இழப்பு; loss, detriment (செ.அக.).

*[Skt. ku-phala > த.குபலம்.]*

**குபீர்** *kubīr,* பெ.அ.(adj.) பீறிட்டு வரும்; எதிர்பாராத; a fit of ; burst of; sudden. *குபீர்ச் சிரிப்பு குபீர்ப் பாய்ச்சல்.*

**குபீரிடு-தல்** *kupīriḍu-,* 20 செ.கு.வி.(v.i.) அரத்தம் வேகமாகப் பாய்தல்; flowing forcible or gushing out in streams; spurting as of blood (சா.அக.).

*[குபீர் + இடு-தல்.]*

**குபேரகம்** *kubēragam,* பெ.(n.) ஒரு வகைச் செடி (மூ.அ.); Indian shrubby copper leaf - *Acalypha fruticosa* (செ.அக.).

**குபேரசம்பத்து** *kubēra-sambattu,* பெ.(n.) செல்வத்தின் அரசனான குபேரனுக்குரியது போன்ற பெருஞ்செல்வம்; immense wealth, as that of kubēra (செ.அக.).

*[குபேரன் + சம்பத்து.]*

**குபேரம்** *kubēram,* பெ.(n.) கோட்டம்; Arabian costus - *Costus speciosus alias C.arabicus* (சா.அக.).

**குபேராட்சி** *kubērāṭci,* பெ.(n.) 1. கொடிப் புன்கு; hog-creeper - *Derris scandens.* 2. பாதிரி; trumpet flower tree - *Bignonia Chelonoides* (சா.அக.).

**குபீரென்று** *kubīrenṟu,* வி.அ.(adv.) திடீரென்று; like a flash or shot; suddenly. *தூங்கிக் கொண்டிருந்தவன் யாரோ தொட்டவுடன் குபீரென்று எழுந்து உட்கார்ந்தான்; குபீரென்று கண்களில் நீர் ததும்பியது*

*[குபீர் + என்று.]*

**குபுகுபுவென்று** *kubu-kubu-v-enṟu,* பெ.(n.) திடீரென்று பெருக்கெடுத்தாற் போல்; வேகமாகவும், மிகுதியாகவும், தொடர்ச்சி யாகவும்; of water etc., gushing out; of smoke vigorously puffing out. *தோண்டிய இடத்தில் குபுகுபுவென்று தண்ணீர் பெருகியது. அடுப்பிலிருந்து புகை குபுகுபுவென்று வந்தது.*

**குபையம்** *kubaiyam,* பெ.(n.) செடிவகை (பதார்த்த.366); scabrous ovate uniifoliate tick-trefoil - *Desmodium latifolium* (செ.அக.).

**கும்பகர்ணன்** *kumba-karṇaṉ,* பெ.(n.) அதிக நேரம் ஆழ்ந்து தூங்குபவன்; one who sleeps soundly for long hours. *அவன் சரியான கும்பகர்ணன், இடி இடித்தாலும் கேட்காது*

*மறுவ.குடக்கோ*

**கும்பகம்** *kumbagam,* பெ.(n.) கற்றாழை; aloes. 2. தொட்டிப்பாடாணம்; a prepared arsenic.

*[கும்பு = கும்பகம்.]*

**கும்பக்கிருதம்** *kumpa-k-kirutam,* பெ.(n.) நூற்றி பத்து ஆண்டு சென்ற நெய்; clarified butter 110 years old (சா.அக.).

*[கும்பம் (பானை) + **Skt.** கிருதம்.]*

**கும்பகம்**[1] *kumbagam,* பெ.(n.) பூரித்த காற்றை உள்ளே நிறுத்தும் இருக்கை (பிராணாயாம) வகை; retention, holding in of breath, suspension of breath, a part of pirāṇāyāṉam. *"ஆறுதல் கும்பகம்" (திருமந்.568) (செ.அக.).*

*[கும்பு – கும்பகம்.]*

*[**Skt.** kumbhaka > த. கும்பகம்.]*

**கும்பகம்**[2] *kumbagam,* பெ.(n.) 1. கற்றாழை; aloe genus. 2. சாலாங்க பாடாணம்; a kind of native arsenic. 3. தொட்டி பாடாணம்; another kind of native arsenic. 4. பாதிரிப்பூ; trumpet flower - *Bignonia suovalens.* 5. மருதம்; box myrtle - *Myrica sapida.* 6. இரப்பையைப் பற்றிய ஒரு கண்ணோய்; a disease of the eye lids (சா.அக.).

**கும்பகலசம்** *kumba-kalaśam,* பெ.(n.) சடங்கு நாட்களில், நூல் சுற்றி மந்திரத்தால் தூய்மை செய்து தவசக் குவியலின் மீது வைக்கும் மந்திரக் குடம்; pot of water used on ceremonial occasions, usually wound round with thread, placed on a heap of grain and purified by mantras (செ.அக.).

*[கும்பம் + கலசம்.]*

**கும்பகவிம்பம்** *kumbagavimbam,* பெ.(n.) தொட்டிப் பாடாணம் (யாழ்.அக.); a prepared arsenic (செ.அக.).

**கும்பகாம்போதி** *kumba-kāmbōdi,* பெ.(n.) பண் வகைகளுள் ஒன்று; a musical mode (செ.அக.).

*[கும்பம் + **Skt.** காம்போதி.]*

**கும்பகாரன்** *kumba-kāraṉ,* பெ.(n.) மட்பாண்டங்கள் செய்வோன் (குயவன்) (திவா.); potter (செ.அக.).



**கும்பகோணம்** *kumbakōṇam,* பெ.(n.) பழங்காலத்தில் திருக்குடந்தை என வழங்கப்பட்டு, தற்போது தமிழகத்தின் தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைந்துள்ள ஓர் ஊர்; kumbakonam, a place of pilgrimage in Thanjavur district in Tamilnadu (செ.அக.).

*மறுவ. குடவாயில்*

**கும்பங்கொட்டு-தல்** *kumbaṅ-goṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. துர்க்கைக்கு வேண்டுதல் செலுத்துகை; to perform a ceremoney to Durgāon recovery from small-pox or in fulfilment of a vow. 2. பெருந்தீனி கொடுத்தல்; to feed a glutton (செ.அக.).

*[கும்பம் + கொட்டு-தல்.]*

**கும்பச்சுரை** *kumba-c-curai,* பெ.(n.) கொடியில் காய்க்கும் சுரைக்காய் வகைகளுள் ஒன்று; a round gourd (செ.அக.).

*[கும்பம் + சுரை.]*

**கும்பசம்பவன்** *kumba-šambavaṉ,* பெ.(n.) 1. அகத்தியன் என்னும் துறவி (குடத்தி னின்று பிறந்தவன்); Agattyan, one who ancient priest in the country. *"கும்பசம்பவனுக்குபதேச நிகழ்த்தினானால்" (குற்றா.தல.புராணவா.19).* 2. துரோணன்; Drōṇa (செ.அக.).

*[கும்பம் + சம்பவன்.]*

**கும்பசலம்** *kumba-šalam,* பெ.(n.) மந்திரித்த குடத்து (கலச) நீர்; water in the sacred pot, sprinkled on people or sipped by them, believed to possess mystic virtues (செ.அக.).

*[கும்பம் + சலம்.]*

**கும்பசன்** *kumbašaṉ,* பெ.(n.) **கும்பசம்பவன்** பார்க்க (பிங்.); see *kumba-šambavaṉ* (செ.அக.).

**கும்பஞ்சரி-தல்** *kumbañ-cari-,* 3 செ.கு.வி. (v.i.) **கும்பஞ்சாய்** பார்க்க; see *kumbañjāy* (செ.அக.).

*[கும்பம் + சரி-தல்.]*

**கும்பஞ்சாய்-தல்** *kumbañ-cāy-,* செ.கு.வி. (v.i.) இறப்பின் போது தலை சாய்ந்து விழுதல்; to droop, as the head just at the point of death (செ.அக.).

*[கும்பம் + சாய்-தல்.]*

**கும்பஞ்சான்** *kumbañcāṉ,* பெ.(n.) கொடி வகை; Indian jalap - *Ipomaea turpethum* (செ.அக.).

**கும்பஞ்செய்-தல்** *kumbañ-cey,* 1 செ.கு.வி.(v.i.) 1. இறந்தோரைப் புதைக்கும் இடத்தின் மேல் மண்ணைக் குவித்து வைக்கை; to make a mound over a grave. 2. பிணத்தைப் புதைத்தல்; to inter the dead, especially such as have died of cholera (செ.அக.).

*[கும்பம் + செய்-.]*

**கும்பதட்சிணை** *kumba-daṭcciṇai,* பெ.(n.) மந்திர குடத்தில் இடும் காசு; coin put into the sacred pot of water (செ.அக.).

*[கும்பம் + Skt. தட்சிணை.]*

**கும்பதீபம்** *kumba-dībam,* பெ.(n.) குடவடிவான வழிபாட்டு விளக்கு (பரத. ஒழிபி.42); pot shaped temple lamp used in worship (செ.அக.).

*[கும்பம் + **Skt.** தீபம்.]*

**கும்பந்தம்** *kumpandam,* பெ.(n.) வெண் கருங்காலி; whitist black wood - *Dyospyros oocarpa* (சா.அக.).

**கும்பநிறுத்து-தல்** *kumba-niṟuttu-,* 5 செ.கு.வி.(v.i.) மந்திரக்குடம் நிறுவுகை; to set up, with mantras, a pot of water, on ceremonial occasions (செ.அக.).

*[கும்பம் + நிறுத்து-தல்.]*

**கும்பாண்டன்** *kumpāṇḍaṉ,* பெ.(n.) 1. பாணாசுரன் அமைச்சர்களில் ஒருவன்; minister of pāṇāšuraṉ. 2. யசோதையின் தம்பி; brother of yašōdai.

**கும்பப்பிளவை** *kumba-p-piḷavai,* பெ.(n.) மேல் முதுகில் தோன்றும் பிளவை; carbuncle on the upper part of the back (செ.அக.).

*[கும்பம் + பிளவை.]*

**கும்பம்போடு-தல்** *kumbam-pōḍu-,* செ.கு.வி.(v.i.) **கும்பங்கொட்டு** பார்க்க; see *kumbaṅ-koṭṭu* (செ.அக.).

*[கும்பம் + போடு-.]*

**கும்பமுனி** *kumba-muṉi,* பெ.(n.) அகத்திய முனிவர்; sage agaštiyā, as pitcher-born. *"கும்பமுனி கும்பிடுந் தம்பிரானே" (திருப்பு.57) (செ.அக.).*

*[கும்பம் + முனி.]*

**கும்பமெடு-த்தல்** *kumbameḍu-,* 4 செ.கு.வி.(v.i.) சிற்றூர் தேவதைக்காக நீர்ப் பூங்குடம் (கரகம்) எடுக்கை; to carry in procession sacred water pot for a village deity (செ.அக.).

*[கும்பம் + எடு-த்தல்.]*

**கும்பயோனி** *kumba-yōṉi,* பெ.(n.) **கும்பசம்பவன்** பார்க்க; see *kumba-šambavaṉ. "கும்பயோனி திருவருள் கூர்ந்து" (உபதேசகா.விபூதி.145) (செ.அக.).*

*[கும்பம் + **Skt.** யோனி.]*

**கும்பவத்திரம்** *kumba-vattiram,* பெ.(n.) மந்திரக் குடத்திற்குக் கட்டும் புதிய ஆடை; the new cloth tied round the sacred pot of water (செ.அக.).

*[கும்பம் + வத்திரம். **Skt.**வஸ்த்திரம் > த. வத்திரம்.]*

**கும்பவிம்பம்** *kumba-vimbam,* பெ.(n.) தொட்டி பாடாணம்; a kind of prepared arsenic (சா.அக.).

*[கும்பம் + விம்பம்.]*

**கும்பளம்** *kumbaḷam,* பெ.(n.) 1. சாம்பற் பூசணி; ash pumpkin - *Cucurbita indica.* 2. இலைப்பாசி; species of duckweed - *Lemna obeordata.* 3. குமிழ்; kandahar tree. 4. நீர்வெட்டி; shining melon feather foil - *Glochidion zeylanicum* (சா.அக.).

*[கும்பம் + கும்பளம்.]*

**கும்பளமோசு** *kumbaḷa-mōšu,* பெ.(n.) ஒரு வகைக் கருவாடு; tunny fish cut and dried, brought from the maldives (செ.அக.).

**கும்பளிக்காய்** *kumbaḷi-k-kāy,* பெ.(n.) தீவக்குறையில் (தீபகற்பத்தில்) விளையும் பருத்த தேங்காய்; a round big cocoanut imported to india from the islands of Maldives and Nicobars (சா.அக.).

*[கும்பளி + காய்.]*

**கும்பத்தாபனம்** *kumba-t-tābaṉam,* பெ.(n.) மந்திரக் குடம் நிறுவுகை; setting up a pot of water for worship (செ.அக.).

*[கும்பம் + **Skt.** தாபனம்.]*

**கும்பாபிடேகம்** *kumbābiḍēgam,* பெ.(n.) கோவில்களில் நிலைகோள் (பிரதிஷ்டை)

செய்வதற்கும், துப்புரவு (சுத்தி) செய்வதற்கும் உரிய நடப்பு; ceremony of consecration or purification in a temple (செ.அக.).

மறுவ. குடமுழுக்கு

*[கும்பம் + Skt.அபிஷேகம்.]*

**கும்பாலத்தி** *kumbālatti,* பெ.(n.) இறைவனுக்கு முன் எடுக்கும் குட விளக்கு; light placed on a pot used in temple worship. *"கும்பாலத்திக்குத் திரி பரிமாறி" (கோயிலொ.66) (செ.அக.).*

*[கும்பம் + ஆலத்தி.]*

**கும்பிட்டுக்கட்டு-தல்** *kumbiṭṭu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) தழுவிக் கொள்ளுதல் (யாழ்.அக.); to enfold in a close embrace (செ.அக.).

*[கும்பு + இடு- + கட்டு-தல்.]*

**கும்பிடுசிப்பி** *kumbiḍu-šippi,* பெ.(n.) ஒரு வகைக் கடற் சிப்பி; a well known bi-valve shell fish or mollusc living in the sea.

*[கும்பிடு + சிப்பி.]*

**கும்பிநசம்** *kumbi-našam,* பெ.(n.) பாம்பு (பிங்.); snake (செ.அக.).

**கும்பினி** *kumbiṉi,* பெ.(n.) **கும்பினியார்** பார்க்க; see *kumbiṉiyār* (செ.அக.).

*[E.Company > த. கும்பினி.]*

**கும்பீடு** *kumbīḍu,* பெ.(n.) மதிப்புரவின் (மரியாதை செலுத்தும்) பொருட்டு கைகுவித்து வணங்குதல்; to join hands in worship; to make obeisance with the hands joined and raised (செ.அக.).

**கும்போதரன்** *kumbōdaraṉ,* பெ.(n.) சிவகணத்தவன்; celestial host of Šivā (அபி.சிந்.).

**கும்போவச்சம்** *kumbō-vaccam,* பெ.(n.) குடசபாலை பார்க்க; see *kuḍaša-pālai* (சா.அக.).

**கும்மிடிசட்டிவேளாளர்** *kummiḍi-šaṭṭi-vēḷāḷar,* பெ.(n.) வேளாளரின் இறப்பின் போது நெருப்புச் சட்டி கொண்டு உடன் செல்வோர்; people of vellalar who carries the fire pot, and accompany with the corpse in the funeral procession.

**குமட்டல்** *kumaṭṭal,* பெ.(n.) வாந்தியெடுக்கும் உணர்வாக வயிற்றைப் புரட்டல்; nausea; retching. *சாப்பாட்டைப் பார்த்தாலே குமட்டுகிறது. குமட்டலை ஏற்படுத்தும் நாற்றம்.*

*[குமட்டு + அல்.]*

**குமதி**[1] *kumadi,* பெ.(n.) அறிவு கெட்டவன், அறிவில்லாதவன்; a perverse intellect, evil-minded person. *"குமதியாயினும்... பேர்சுமதியென்பரால்" (சேதுபு.கலிசம்பு.18) (செ.அக.).*

**குமதி**[2] *kumadi,* பெ.(n.) இந்திரனால் கொல்லப்பட்ட ஓர் அரக்கி; a giant, who was killed by Indira (அபி.சிந்.).

**குமர்ப்பிள்ளை** *kumar-p-piḷḷai,* பெ.(n.) குமரி; virgin (சா.அக.).

**குமரகம்** *kumaragam,* பெ.(n.) மாவிலங்கை வகை; a species of garlic-pear - *Crataeva religiosa-nurvala* (செ.அக.).

**குமரகுருதாசசுவாமிகள்** *kumara-kurutāša-šwamigaḷ,* பெ.(n.) யாழ்ப்பாணத்தைச் சார்ந்த ஒரு துறவி; a hermit who belonged to yāḻppāṇam.

இவரைப் பாம்பன் சுவாமிகள் என்பர். சிவனியத்தில் வல்லவர். நாலாயிரப் பிரபந்த விசாரம், சைவசமய சரபம் எனும் நூல் இயற்றியவர் (அபி.சிந்.).

**குமரன்மாலிகம்** *kumaraṉ-māligam,* பெ.(n.) பிராய் முட்டி; rose-coloured sticky mallow - *Pavonia zeylanica* (சா.அக.).

**குமரனுடமனைவிமூலம்** *kumaraṉuḍa-maṉaivi-mūlam,* பெ.(n.) வள்ளிக் கிழங்கு; sweet potato creeper - *Ipomaea batatus* (சா.அக.).

**குமரனோசிகம்** *kumaraṉōśigam,* பெ.(n.) பிள்ளை மருது; flowering murdah - *Terminalia paniculata* (சா.அக.).

**குமரிக்காவிகம்** *kumari-k-kāvikam,* பெ.(n.) சிவப்புக் கற்றாழை; red aloe (சா.அக.).

*[குமரி + காவிகம்.]*

**குமரிருட்டு** *kumariruṭṭu,* பெ.(n.) வைகறைக்கு முன் தோன்றும் இருள்; darkness before dawn (செ.அக.).

**மறுவ.** விடியல்

*[குமரி + இருட்டு.]*

**குமராகு-தல்** *kumarāgu-,* 5 செ.கு.வி.(v.i.) பெண் பருவமடைதல்; of girls come of age; attain puberty. *மகள் குமராகி விட்டாள்.*

**மறுவ. சமைதல்**

*[குமர் + ஆகு-தல்.]*

**குமாரசரசுவதி** *kumāra-šarašuvati,* பெ.(n.) ஒரு புலவர்; a poet (சா.அக.).

இவர் விசயநகரத்து அரசர் கிருட்டிணதேவராயர் காலத்தவராக இருக்கலாம். அவரைப் புகழ்ந்து இப்புலவர் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**குமாரதாரிகை** *kumāra-tārigai,* பெ.(n.) திருவேங்கடத்தில் உள்ள தூய நீர்த்துறை (தீர்த்தம்); sacred bath-ghate in tiruvēṅgaḍam(அபி.சிந்.).

**குமாரதேவர்** *kumāra-tēvar,* பெ.(n.) கன்னட நாட்டு மன்னன்; king who ruled kaṉṉaḍanāḍu.

*[குமார + தேவர்.]*

**குமாரபிரமசாரி** *kumāra-piramašāri,* பெ.(n.) குமரக் கடவுள் சினத்துடன் தங்கிய கிரவுஞ்ச(கிரி) மலை; kiravuñjagiri mountain, which God Kumaraṉstayed with anger.

**குமாரவனம்** *kumāra-vaṉam,* பெ.(n.) மலைமகளுக்கென்று உள்ள காடு; the district forest of Malai-magaḷ.

**குமரு** *kumaru,* பெ.(n.) இளம்பெண்; குமரி; unmarried young girl. *குமருகளாகச் சேர்ந்து கிணற்றில் தண்ணீர் எடுக்கச் செல்கிறார்கள்*

*[குமரி – குமரு.]*

**குமார்க்கம்** *kumārkkam,* பெ.(n.) தீ நெறி; wrong course, evil ways (செ.அக.).

**குமாரபோசனம்** *kumāra-bōšaṉam,* பெ.(n.) பூணூல் அணிவிக்கும் சடங்கில் காயத்திரி நல்லுரை (உபதேசம்) செய்வதற்கு முன் அச்சடங்கு பெறும் மாணவனுக்கு, உடனொத்த சில மணமாகாதவர் (பிரம்மசாரி)களோடு அளிக்கும் உணவு; feast given to a Brahman boy along with some bachelors just before his initiation to Brahmanhood (செ.அக.).

**குமாரராசா** *kumāra-rāšā,* பெ.(n.) கோமகன், இளவரசன், அரசகுமாரன் (இராசபுத்திரன்); prince (செ.அக.).

**குமாரவர்க்கம்** *kumāra-varkkam,* பெ.(n.) குலம்; lineage, progeny (செ.அக.).

**குமிட்டிக்காளான்** *kumiṭṭi-k-kāḷāṉ,* பெ.(n.) மரக்காளான்; mushrooms growing on trees (சா.அக.).

*[குமிட்டி + காளான்.]*

**குமிட்டிக்கீரை** *kumiṭṭi-k-kirai,* பெ.(n.) ஒரு வகைக் கறிக்கீரை; a kind of vegetable green - *Celosia nodiflora* (சா.அக.).

*[குமிட்டி + கீரை.]*

**குமிதிகம்** *kumidigam,* பெ.(n.) மரவகை; teak - *Tectona grandis* (செ.அக.).

**குமிழிஞாலார்நப்பசலையார்** *kumiḻi-ñāḻār-nappaŝalaiyār,* பெ.(n.) கடைச் சங்கப் பெண்பால் புலவர்; a poetess who belonged to the last saṅgam era.

*[குமிழி + ஞாழல் + ஆர் + நட்பசலை + ஆர்.]*

**குமிழியிடு-தல்** *kumiḻi-y-iḍu-,* 18 செ.கு.வி. (v.i.) 1. நீரில் குமிழி தோன்றுதல்; bubble. *பாறைகளுக்கு இடையில் நீர் குமிழியிட்டுச் சுழன்று கொண்டிருந்தது.* 2. ஒருவரிடத்தில் மகிழ்ச்சி, உற்சாகம் முதலியன பெருகுதல்; happiness, enthusiasm, etc., bubble up. *எனக்கும் சொற்களில் குமிழியிட்டது.*

*[குமிழ் + இடு-தல்.]*

**குமுசியார்** *kumuŝiyār,* பெ.(n.) பிரெஞ்சு ஆட்சியின் காவல்துறைத் தலைவர்; french commissioner of police (செ.அக.).

**குமுதசகாயன்** *kumuda-ŝagāyan,* பெ.(n.) **குமுதநாதன்** பார்க்க (பிங்.); see *kumuda-nādan* (செ.அக.).

**குமுதநாதன்** *kumuda-nādan,* பெ.(n.) அல்லிப் பூவுக்குத் தலைவனாகக் கருதப்படும் நிலவு; moon, Lord of the water-lily. *"காமக்கருத்தாக் குமுதநாதன் கங்குல் வரக்கண்டும்" (தனிப்பா.i, 334, 40) (செ.அக.).*

*[குமுதம் + நாதன்.]*

**குமுதப்பிரியா** *kumuda-p-piriya,* பெ.(n.) பண் வகைகளுள் ஒன்று; a musical mode (செ.அக.).

*[குமுதம் + பிரியா.]*

**குமுதபாந்தவம்** *kumuda-pāndavam,* பெ.(n.) கற்பூரம்; camphor (சா.அக.).

**குமுதர்** *kumudar,* பெ.(n.) மதுர கவியாழ் வாராகப் பிறந்தவர் (அவதரித்தவர்); one who incarnation to Madurakavi (அபி.சிந்.).

**குமுதவதி** *kumudavati,* பெ.(n.) 1. விமரிசன் எனும் வேட்டுவ அரசனின் மனைவி; wife of a hunter's king vimarīŝan. 2. இராம பிரானின் மகனான குசனை மணந்த நாக கன்னிகை; wife of a Rāma's son kuŝan. 3. விந்தியமலையில் தோன்றி ஓடும் ஆறு; a river, origin from vindiya-malai.

**குமுதவல்லி** *kumuda-valli,* பெ.(n.) திருமங்கையாழ்வாரின் மனைவி; wife of Tirumaṅgai-y-āḻvār (அபி.சிந்.).

**குமுணன்** *kumuṇan,* பெ.(n.) குமணன் என்னும் மன்னன்; king kumaṇan.

தொண்டை நாட்டைச் சேர்ந்த இம்மன்னன் பெரிய கொடையாளி. இவன் தன் தம்பி அமணனுக்கு நாட்டை ஆளக் கொடுத்து விட்டு காட்டில் வேடுவனைப் போல் வாழ்ந்து வந்தான். அப்பொழுது ஒப்பில்லாமணி எனும் புலவர் குமணனைப் பாடிப் பரிசில் பெறச் சென்று அவனில்லாமையால் வருந்தினார். இவன் தம்பி தன் தமயனின் தலை கொணர்வோர்க்கு ஆயிரம்பொன் தருவதாக அறிவித்திருந்தான். இப்புலவர் காட்டில் குமணனைக் கண்டு தன் நிலை கூற, குமணனும் தன் தலையைத் தரமுன் வந்தான். புலவர் தடுத்து அமணனிடம் பேசி மீண்டும் அரச பதவியைக் குமணனுக்கே அளித்தார் (அபி.சிந்.).

**குமுறவெடி-த்தல்** *kumuṟa-veḍi-,* 4 செ.கு.வி.(v.i.) அதிரும்படி இடித்தல்; pounding forcibly in a mortar (சா.அக.).

**குமைச்சல்** *kumaiccal,* பெ.(n.) மனப் புழுக்கம்; of emotions state of being pent-up.

*[குமை – குமைச்சல்]*

**குமைந்துபோ-தல்** *kumaindu-pō,* 8 செ.கு.வி.(v.i.) 1. புழுக்கமாய் இருத்தல்; to be close as the air; sultry. 2. குழையும்படி வேகுதல்; being over; boiled as to become slimy. 3. சோர்வடைதல்; getting fainted (சா.அக.).

*[குமைந்து + போ-தல்.]*

**குய்யபீசம்** *kuyya-pīšam,* பெ.(n.) கற்பூரப் புல்; lemon grass - *Andropogon schoenanthes* (சா.அக.).

**குயபீசகம்** *kuyapīšagam,* பெ.(n.) எட்டிமரம்; nux-vomica tree (சா.அக.).

**குய்யோமுறையோவென்று** *kuyyō-muṟaiyō-v-eṉṟu,* வி.எ.(adv.) தன்னளவில் அந்நயம் (அநியாயம்) என்று நினைப்பதை அல்லது ஏதத்தை (ஆபத்தை) அறிந்து உரத்த குரலில் முறையிடுதல்; complaining loudly about what one thinks is unjust; aising alarm in danger. *உள்ளதைச் சொல்கிறாயா இல்லையா? என்று கேட்டுக் கம்பை ஓங்கியதும் பையன் குய்யோ முறையோவென்று கத்தத்தொடங்கி விட்டான்.*

*[குய்யோ + முறையோ + என்று.]*

**குயிலாலுவம்** *kuyi-l-āluvam,* பெ.(n.) இமயமலைக்கு அருகில் உள்ள சிவத்தலம்; sacred place near by Himālāyā (அபி.சிந்.).

*[குயில் +ஆலுவம்.]*

**குயவன்கைவழித்தமண்** *kuyavaṉ-kai-vaḻitta-maṇ,* பெ.(n.) மிகவும் மெல்லிய களிமண்; a very fine clay sticking to the hand of a potter at work (சா.அக.).

*[குயவன் + கை + வழித்த + மண்.]*

**குயவன்வீட்டுமண்** *kuyavaṉ-viṭṭu-maṇ,* பெ.(n.) குயவன் களிமண்; potter's clay (சா.அக.).

*[குயவன் + வீட்டு + மண்.]*

**குயில்மூக்கெலும்பு** *kuyil-mūkkelumbu,* பெ.(n.) முதுகின் அடிப் பகுதி எலும்பு; coxcyx bone, which is situated in the lower extremity of the back bone. it is so called from its resemblance to koel's back (சா.அக.).

*[குயில் + மூக்கு + எலும்பு.]*

குயிலின் மூக்கைப் போன்றுள்ளதால் இப்பெயர் பெற்றது.

**குயிலெனமரம்** *kuyileṉa-maram,* பெ.(n.) கடம்ப மரம்; common cadamba tree.

*[குயில் + என + மரம்.]*

இம்மரம் நிழலுக்காகப் பயிரிடப்படும். இதன் பட்டையைக் காய்ச்சலுக்கும், வலிமைக்கும் பயன்படுத்துவதுண்டு. சீனத்தில் இதைக் குளிர்க் காய்ச்சல், காற்றுப் பிடிப்பு, குண்டிக்காய் வலி முதலிய நோய்களுக்குப் பயன்படுத்துவார்கள் (சா.அக.).

**குயிற்கண்டிகை** *kuyiṟ-kaṇḍigai,* பெ.(n.) பாற்குறண்டி; milk corandy - *Lepidagathis pungens* (சா.அக.).

**குரக்கு** *kurakku,* பெ.எ.(adj.) 1. குரங்கு; monkey. 2. குரங்கினுடைய; of or belonging to a monkey (சா.அக.).

**குரக்குகை** *kurakkugai,* பெ.(n.) குரக்கு நோய் (வாதம்) பிடித்த கை; arms affected by cramps due to weakness, cold, etc. *"குரக்குக் கைகொடு கூழ் துழாவி" (ஈடு, 9, 2, 4) (செ.அக.).*

**குரக்குபிடி-த்தல்** *kurakku-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) கை, கால் முதலியவற்றில் எதிர்பாராமல் குத்தி இழுப்பது போன்ற தசை வலி உண்டாகுதல்; suffer muscle pull or sprain; suffer cramps. *காலில் குரக்கு பிடித்து விட்டது.*

*[குரக்கு + பிடி-த்தல்.]*

**குரக்குமுகம்** *kurakku-mugam,* பெ.(n.) குரங்கு முகம்; monkey-face (சா.அக.).

*[குரக்கு + முகம்.]*

**குரகச்சின்னம்** *kuraga-c-cinnam,* பெ.(n.) திலக மரம்; country cinnamon - *Cinnamomum iners* (சா.அக.).

**குரங்கிரத்தம்** *kurangirattam,* பெ.(n.) 1. குரங்கினுடைய அரத்தம்; monkey's blood. 2. பூவந்தி மரம்; soapnut tree - *Sapindus emarginata* (சா.அக.).

*[குரங்கு + அரத்தம் - குரக்கரத்தம் → குரக்கிரத்தம்.]*

**குரங்குகடியன்** *kurangu-kadiyan,* பெ.(n.) குரங்கு அல்லது அணிலால் முனையில் தீண்டப்பட்டுப் பழுதுற்ற தேங்காய்; a coconut injured at the top, as by a monkey or squirrel (செ.அக.).

*[குரங்கு + கடியன்.]*

**குரங்குகா** *kurangukā,* பெ.(n.) முசுமுசுக்கை இலை; leaf of bristle - *Mukia scabrella alias Bryonia scabra* (சா.அக.).

*[குரங்கு + உகா.]*

**குரங்குகை** *kurangu-kai,* பெ.(n.) மெலிந்த கை; the wasting of the muscles of the hand - *Ape-hand* (சா.அக.).

*[குரங்கு + கை.]*

**குரங்குடாப்பு** *kurangu-tāppu,* பெ.(n.) கதவு, பலகணி மேல் மழை, வெயில்களைத் தடுக்க அமைக்கும் மறைப்பு; projection over a window or door for protection from sun and rain (செ.அக.).

*[குரங்கு + E. Top. டாப்பு.]*

**குரங்குமஞ்சணாத்தி** *kurangu-mañjanātti,* பெ.(n.) ஒரு வகை நுணா; a kind of dyeing mulberry (சா.அக.).

*[குரங்கு + மஞ்சணாத்தி.]*



**குரங்குமஞ்சள்விதை** *kurangu-mañjal-vidai,* பெ.(n.) சாப்பிர விதை; butter seed; monkey turmeric tree-seed.

*[குரங்கு + மஞ்சள் + விதை.]*

இதில் இருந்து சாயம் இறக்கப்படும். இவ்விதை வெள்ளை நோய்க்குச் சிறந்த மருந்து. காய்ச்சலுக்கும் மருந்தாகக் கொடுக்கலாம் (சா.அக.).

**குரங்குமார்க்கம்** *kurangu-mārkkam,* பெ.(n.) குதிரை நடையுள் ஒன்றான வானரகதி; a particular pace of the horse. *"கூறரு மல்லமார்க்கமயின்மார்க்கங் குரங்குமார்க்கம்" (திருவாலவா.28, 58) (செ.அக.).*

*[குரங்கு + மார்க்கம்.]*

**குரங்குமுசு** *kurangu-mušu,* பெ.(n.) முசுமுசுக்கை; leaf of bristle bryony - *Mukia scabrella alias* (சா.அக.).

*[குரங்கு + முசு.]*

**குரண்டநாசினி** *kuranda-nāšini,* பெ.(n.) பருத்திச் செடி; country cotton plant - *Gossypium herbaceum* (சா.அக.).

**குரந்திகம்** *kurandigam,* பெ.(n.) செந்நாயுருவி; red Indian burr - *Achyranthes aspera* (சா.அக.).

**குரநாசம்** *kura-nāšam,* பெ.(n.) வெங்காயம்; onion (சா.அக.).

**குரபகம்** *kurabagam,* பெ.(n.) சிகப்பு வாடா மல்லிகை; red amaranth (சா.அக.).

**குரபம்** *kurabam,* பெ.(n.) 1. எள்; seasamum. 2. ஒரு பூடு; a kind of barleria (சா.அக.).

**குரம்பு** *kurambu,* பெ.(n.) 1. நீரைத் தேக்கி வைக்கும் அணைக்கட்டு; artificial bank, dam, causeway, bund. 2. ஆற்றிலிருந்து பாசனக் கால்வாய்களுக்கு நீரைத் திருப்பும் அணை; dam of sand, brushwood, loose stones, etc., running out from the banks of a river diagonally for a distance upstream, to turn the water into an irrigation channel. 3. வரப்பு; ridge in a rice field or garden. *"மாநீர்க் குரம்பெலாம் செம்பொன்" (கம்பரா.நாட்டுப்.2).* 4. எல்லை; boundary, limit. *"குரம்பெழுந்து குற்றங் கொண்டேறார்" (நாலடி.153) (செ.அக.).*

*[குரை – குரம்பு.]*

**குரமேனிகம்** *kura-mēnigam,* பெ.(n.) கோழிக்காற் பூடு; fowl's leg plant (சா.அக.).

**குரல்காட்டு-தல்** *kural-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) 1. அழைத்தற் பொருட்டுக் குறிப்பொலி காட்டுதல்; to call a person by hemming and hawking. 2. பறவையொலித்தல்; to crow, as a cock; to screech, as an owl. 3. பெருஞ்சத்தமிடுதல்; to cry aloud, whoop, roar, bellow. 4. பதில் தரும் முறையில் குரல் எழுப்புதல்; கூப்பிடுதல்; respond to a call; call. *சீக்கிரம் வந்து விடுகிறேன் என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடினார். நீங்கள் ஒரு குரல் கொடுத்தால் போதும்ழு நான் வந்து விடுகிறேன்.* 5. எதிர்த்துக் கருத்து தெரிவித்தல்; raise one's voice against something; voice one's protest. *அந்நயத் (நியாயத்)தை எதிர்த்துக் குரல் கொடுக்க ஒரு சிலரே முன்வருவார்கள்.* 6. திரைப்படத்தில் தம் சொந்தக் குரலில் பேசாத நடிகர்களுக்குப் பிறர் தம் குரல் தந்து பேசுதல்; in films dub in voice. *பலருக்கும் இவரே குரல் கொடுக்கிறார்.*

*[குரல் + கொடு-த்தல்.]*

**குரல்வளம்** *kural-vaḷam,* பெ.(n.) பலவகை ஏற்ற இறக்கங்களை எளிதாகவும், இனிமையாகவும் காட்டக்கூடிய குரலின் செழுமை; range of voice; voice culture. *அவருடைய குரல்வளம் வியக்கத்தக்கது.*

*[குரல் + வளம்.]*

**குரல்வாக்கு** *kural-vākku,* பெ.(n.) மன்றத்தில் எதிராடல் (விவாதம்) முடிந்ததும் தீர்மானிக்கப்பட வேண்டியதை ஆதரித்து அல்லது எதிர்த்து உறுப்பினர்கள் வாய்மொழியாகத் தெரிவிக்கும் வாக்கு; voting by saying `yes' or `no'; voice vote.

*[குரல் + வாக்கு.]*

**குரல்வளைத்தாபனம்** *kuralvaḷai-t-tābanam,* பெ.(n.) குரல் வளையி (கண்டத்தி)ல் உண்டாகும் ஒரு வகை நோய் (இங்.வை.231); laryngitis (செ.அக.).

*[குரள்வளை + **Skt.**தாபனம்.]*

**குரலெழுப்பு-தல்** *kural-eḻuppu-,* 5 செ.கு.வி. (v.i.) எதிர்த்துக் கருத்துத் தெரிவித்தல்; raise one's voice against something; voice one's protest. *அநீதியை எதிர்த்துக் குரல் கொடுக்க ஒரு சிலரே முன்வந்தார்கள்.*

*[குரல் + எழுப்பு-தல்.]*

**குரலோசை** *kural-ōśai,* பெ.(n.) குரலின் ஓசை; vocal sound; voice (சா.அக.).

*[குரல் + ஓசை.]*

**குரவரம்** *kuravaram,* பெ.(n.) நச்சறுப்பான் கொடி; Indian ipecacuanha - *Tylophora asthmatica* (செ.அக.).

**குரவளை** *kuravaḷai,* பெ.(n.) 1. ஓசை பிறப்பதற்காக மூச்சுக் குழலின் மேல் அந்தத்தோடு தொடங்கி, கழுத்தின் முன் மேற்பகுதியில் மூச்சுக் குழலுக்கும், அடி நாவுக்கும் இடையில் புடைத்திருக்கும் குழாய் பெட்டியைப் போன்ற உறுப்பு; a short tubular box, opening above idnto the pharynx and below into the top of the trachea, with vocal chords for production of sound - *Larynx.* 2. மிடறு; trachea (சா.அக.).

மறுவ. குரல்வளை

*[குரல் + வளை.]*

**குரவிக்கோணிகம்** *kuravi-k-kōṇigam,* பெ.(n.) புளித்தகரை; a sour ringworm plant - *Cassia tora* (சா.அக.).

*[குரவி + கோணிகம்.]*

**குராசானி** *kurāšāṇi,* பெ.(n.) **குராசானியோமம்** பார்க்க (மூ.அ.); see *kurāšāṇi-yōgam* (செ.அக.).

**குராசானியோமப்பத்திரி** *kurāšāṇi-y-ōma-p-pattiri,* பெ.(n.) குராசானி இலை; the leaf of the khorassan omum plant (சா.அக.).

**குராசானியோமம்** *kurāšāṇi-y-ōmam,* பெ.(n.) குராசானி என்னும் ஓமமுண்டாகும் ஒருவகைப் பூடு; black henbane - *Hyoscyamus niger* (செ.அக.).

**குராமசனம்** *kurāmašaṇam,* பெ.(n.) நில வேம்பு; ground neem - *Justicia Paniculata* (சா.அக.).

**குரிச்சி** *kuricci,* பெ.(n.) நாற்காலி; chair (செ.அக.).

**குரிசு** *kurišu,* பெ.(n.) **குருசு** பார்க்க; see *kurušu* (செ.அக.).

**குருகன்வெட்டு** *kurugaṇ-veṭṭu,* பெ.(n.) பழைய காசு வகை (பணவிடு.135); an ancient coin (செ.அக.).

**குருக்கினாதம்** *kurukkiṇādam,* பெ.(n.) சங்கிலை; four-spined monetia - *Azima tetracantha* (சா.அக.).

**குங்குமபாடாணம்** *kuṅguma-pāḍāṇam,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை (மூ.அ.); a prepared arsenic, one of 32 (செ.அக.).

*[குங்குமம் + பாடாணம்.]*

**குசத்தலி** *kušattali,* பெ.(n.) இரேவதன் என்னும் ஞாயிறு (சூரிய) குல மன்னன் ஆண்ட நாடு; the city where ruled by king *Irevātaṉ* (செ.அக.).

**குசேசியம்** *kušēšiyam,* பெ.(n.) செந்தும்பை; red leucas flower (சா.அக.).

**குஞ்சிகாரர்** *kuñjikārar,* பெ.(n.) சேலம் மாவட்டத்திலுள்ள வேளாண் குடியினர் (உழுது பயிரிடும் இனத்தவர்); the peasants in Šēlam district (அபி.சிந்.).

**குட்டவ்வை** *kuṭṭavvai,* பெ.(n.) ஒரு பெண் சிவப்பற்றாளர்; a Siva Diety.

**குடக்கா** *kuḍakkā,* பெ.(n.) கோபுரப்பூடு; tower plant (சா.அக.).

**குடலண்டவிருத்தி** *kuḍalaṇḍa-virutti,* பெ.(n.) **குடல்வாயு** பார்க்க (பைஷஜ); see *kuḍal-vāyu* (செ.அக.).

**குடவாடிகம்** *kuḍavāḍigam,* பெ.(n.) சடாமாஞ்சில்; valerian root - *Valeriana jatamansi* (சா.அக.).

*[குட + வாடிகம்.]*

**குடாக்கு** *kuḍākku,* பெ.(n.) 1. புகைப்பதற்குப் பயன்படும் குழாய்; hookah. 2. புகையிலை, பாகு, பழம், சந்தனம் இவற்றைச் சேர்த்துத் திரட்டிய குழாய் மருந்து; ball made of tobacco, treacle, plantain and sandal, used in a hookah (செ.அக.).



*[Mhr. guḍākū > த. குடாக்கு. U.gurākū > த.குடாக்கு.]*

**குடீசகம்** *kuḍīšagam,* பெ.(n.) நான்கு வகையான துறவுகளுள் மிக எளிதானதும், தன் புதல்வர் அல்லது சுற்றத்தாரால் உண்டி முதலியன பெற்று இலை வேய்ந்த குடிலில் வசித்தற்குரியதுமான துறவு (சன்னியாசம்); a kind of asceticism, the lowest of four orders of Šaṉṉiyāšam, which permits the ascetic to get his meals through his sons or relations, though living separately in a hermitage. *"பட்டதுயர் கெடுங் குடீசகம்" (கைவல்.சந்தே.158) (செ.அக.).*

*[Skt.kuṭīcaka > த.குடீசகம்.]*

**குடீசகன்** *kuḍīšagaṉ,* பெ.(n.) நான்கு வகையானத் துறவிகளுள் கடைசியானவனாய்த் தன் புதல்வர் அல்லது சுற்றத்தாரால் உண்டி முதலியன பெற்று இலை வேய்ந்த குடிலில் வசிக்குந் துறவி; an ascetic who lives in a hermitage and is fed by his sons or relations, the lowest of four kinds of Šaṉṉiyāši (செ.அக.).

**குண்டாலரோகம்** *kuṇḍāla-rōgam,* பெ.(n.) தலையிலுண்டாகும் செவ்வாப்புக் கட்டி (பைஷஜ.); tumour in the head (செ.அக.).

*[குண்டு→குண்டாலம் + Skt. ரோகம்.]*

**குதாதோசம்** *kudā-tōšam,* பெ.(n.) சித்தா மல்லி; short-tubed arabian jasmine - *Jasminum sambuc* (சா.அக.).

**குதானத்திகம்** *kudāṉattigam,* பெ.(n.) சம்பங்கி; champauk - *Michelia Champaca* (சா.அக.).

**குநர்ச்சகம்** *kunarccakam,* பெ.(n.) சிறு காஞ்சொறி; small leaved climbing nettle-mercury - *Tragia involucrata* (சா.அக.).

**குபையாதீதம்** *kupai-y-ātītam,* பெ.(n.) கோரைப்புல்; sedge grass (சா.அக.).

**குபோதகம்** *kupōtagam,* பெ.(n.) மஞ்சள் செவ்வந்தி; chinese flower or Indian Chamomile - *Chrysanthenum Coronarium* (சா.அக.).

**குபோதகி** *kupōtagi,* பெ.(n.) பசலை; Malabar night shade - *Baselia Cordifolia* (சா.அக.).

**கும்பளா** *kumbaḷā,* பெ.(n.) மீன் வகை; black rock-cod, silvery-grey, attaining 30 in. in length - *Sparus berda* (செ.அக.).



**கும்பளிமௌலி** *kumbaḷi-mauli,* பெ.(n.) மலைச் சூலி; a kind of cedar tree - *Cedrela toona* (சா.அக.).

**குமுதகி** *kumutagi,* பெ.(n.) வெள்ளாம்பல்; white Indian water lily - *Nymphaea Pubescens* (சா.அக.).

*[குமுதம் – குமுதகி.]*

**குர்ணாப்பட்டை** *kurṇā-p-paṭṭai,* பெ.(n.) ஒளியுள்ள ஒரு வகை மெல்லிய வண்ணத்தகடு (விறலிவிடு.530); foliated tinsel (செ.அக.).

*[குருணை + பட்டை.]*

**குருக்கேத்திரம்** *kurukkēttiram,* பெ.(n.) 1. **குருசேத்திரம்** பார்க்க; see *kuru sēttiram. "குளியீருளங் குருக்கேத்திரம் கோதாவிரி குமரி" (தேவா.1154, 6).* 2. காற்று மண்டலத்திலுள்ள குய்யதராட்டகபுவனத்தில் ஒன்று (சி.போ.பா.2, 3); a world in the aerial regions, one of *kuyyada-rāṭṭaga-buvaṉam* (செ.அக.).

**குருகந்தகம்** *kuru-kandagam,* பெ.(n.) மயில்; pea-cock, *Pavo cristatus* (சா.அக.).

**குருகுதி** *kuru-kuti,* பெ.(n.) பசு முருங்கை; tender drum-stick or moring (சா.அக.).

**குருகுலக்கல்வி** *kurukula-k-kalvi,* பெ.(n.) குருவின் இல்லத்தைக் கல்விக்கூடமாகவும், வாழ்விடமாகவும் கொண்டு பெறும் கல்வி; formerly learning by living with the teacher. *இன்றும் சில இடங்களில் குருகுலக் கல்வி முறை வழக்கத்தில் இருக்கிறது*

*[குருகுலம் + கல்வி.]*

**குருங்கடியாள்** *kuruṅgaḍiyāḷ,* பெ.(n.) தாளகம்; orpiment (சா.அக.).

**குருச்சிகம்** *kuruccigam,* பெ.(n.) உறைக்குற்றிய பால்; coagulated milk (சா.அக.).

**குருசந்திரயோகம்** *kuru-šandira-yōgam,* பெ.(n.) வியாழனும், நிலவும் (சந்திரனும்) ஓர் ஓரையில் (இராசியிற்) கூடுவது (சங்.அக.); conjunction of jupiter and moon (செ.அக.).

*[குரு + சந்திரயோகம்.]*

**குருசம்பாவனை** *kuru-šambāvaṉai,* பெ.(n.) ஆசிரியருக்கு மாணவர்கள் செய்யும் மரியாதை; honour or present offered to the preceptor (செ.அக.).

*[குரு + சம்பாவனை.]*

**குருசாங்கலம்** *kuru-šāṅgalam,* பெ.(n.) பாஞ்சால நாட்டிற்குத் தெற்கில் உள்ள நாடு; the city in South *Pāñjālā.*

**குருசேடம்** *kuru-šēḍam,* பெ.(n.) ஆசிரியர் குடித்த பின் கலத்தில் எஞ்சிய தேவுணா (பிரசாதம்); leavings of a guru's food (செ.அக.).

**குருசேத்திரம்** *kuru-šēttiram,* பெ.(n.) பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கு மிடையே போர் நடந்த தில்லி நகரின் அருகிலுள்ள நிலம்; a plain near Delhi, scene of the great battle between the Kauravāš and Pāṇdavāšmentioned in the Mahābārada (செ.அக.).

*[குரு + சேத்திரம்.]*

**குருஞ்சேபகம்** *kuruñ-cēbagam,* பெ.(n.) மலை எருக்கு; mountain madar plant (சா.அக.).

**குருட்டடியாக** *kuruṭṭaḍiyāga,* வி.எ.(adv.) **குருட்டாம்போக்காக** பார்க்க; see *kuruṭṭām-bōkkāga.*

**குருட்டடியாய்** *kuruṭṭaḍiyāy,* வி.அ.(adv.) தற்செயலாய்; by chance (சா.அக.).

*[குருட்டு + அடியாய்.]*

**குருட்டாம்போக்காக** *kuruṭṭām-pōkkāga,* வி.அ.(adv.) **குருட்டாம்போக்கான** பார்க்க; see *kuruṭṭāmpōkkāṉa. "குருட்டாம் போக்காகச் சொன்ன பதில் சரியாக இருந்தது"*

**குருட்டாம்போக்கான** *kuruṭṭām-pōkkāṉa,* பெ.அ.(adj.) முன் எண்ணம் (யோசனை) இல்லாமல், முன் எண்ணம் இல்லாத; blindly, blind. *குருட்டாம் போக்கான முடிவு.*

*[குருட்டாம் + போக்கான.]*

**குருட்டாம்போக்கில்** *kuruṭṭām-pōkkil,* பெ.(n.) **குருட்டாம்போக்கான** பார்க்க; see *kuruṭṭām-pōkkāṉa. 'குருட்டாம்போக்கில் நான் எடுத்த சீட்டுக்குப் பரிசு விழுந்தது'*

**குருட்டாம்போக்கு** *kuruṭṭām-pōkku,* வி.அ./ பெ.அ. (adv./adj.) **குருட்டாம் போக்கான** பார்க்க; see *kuruṭṭāmpōkkāṉa.*

**குருட்டுவாக்கில்** *kuruṭṭu-vākkil,* து.வி. (adv.) தற்செயலாய்; by chance (செ.அக.).

*[குருட்டு + வாக்கில்.]*

**குருடுபற்று-தல்** *kuruḍu-paṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) எண்ணெய் இல்லாமல் விளக்குத் திரி கருகி ஒளி குறைகை (இலங்.); of lamps become dim due to the burning of the wick for want of oil. *விளக்கு குருடு பற்றி மங்கியது.*

*[குருடு + பற்று-தல்.]*

**குருத்துஞாயிறு** *kuruttu-ñāyiṟu,* பெ.(n.) குருத்தோலைகளுடன் இயேசுவின் புகழ் பாடிக் கொண்டாடப்படும் திருவிழா; ஈஸ்டர் திருவிழாவுக்கு முந்திய ஞாயிற்றுக் கிழமை; palm sunday

**மறுவ.** குருத்தோலைஞாயிறு

*[குருத்து + ஞாயிறு.]*

**குருத்துரோகம்** *kuru-t-turōgam,* பெ.(n.) ஆசிரியனுக்கு இரண்டகம் செய்கை; treachery towards one's Guru (செ.அக.).

*[குரு + **Skt.** துரோகம்.]*

**குருத்தெலும்பு** *kuruttelumbu,* பெ.(n.) காதுமடல், மூக்கின் முன்பகுதி முதலிய வற்றில் இருப்பது போன்று, மடங்கக் கூடிய மென்மையான எலும்பு; cartilage. *ஒவ்வொரு மூட்டிலும் குருத்தெலும்பு இருக்கும்*

*[குருத்து + எலும்பு.]*

**குருதிநீர்** *kuruti-nīr,* பெ.(n.) அரத்த நீர்; blood-plasma - *Liquro sanguinia* (சா.அக.).

*[குருதி + நீர்.]*

**குருநாடு** *kuru-nāḍu,* பெ.(n.) அத்தினாபுரத்தில் அடங்கிய ஒரு நாடு; a city in Attiṉā-puram.

**குருபத்திரகம்** *kuru-pattiragam,* பெ.(n.) வெள்ளீயம்; tin (சா.அக.).

*[குரு + பத்திரகம்.]*

**குருபதாருசம்** *kurupatārušam,* பெ.(n.) செவ்விறகு; red wood used as fuel in calcination of metals (சா.அக.).

**குருபற்பமாங்குங்குணத்தி** *kuru-paṟpamākkuṅ-kuṇatti,* பெ.(n.) வெள்ளை நீர் முள்ளி; white flowered water thistle plant - *Hygrophila spinosa* (சா.அக.).

**குருபூசை** *kuru-pūšai,* பெ.(n.) குருவம் (தீட்சை) தந்த குருவிற்கு அவர் முத்தி அடைந்த நாளில் மாணாக்கர்களால் நடத்தப் படும் பூசனை; worship offered by the disciples to their Guru, who initiated them into a religious order, on his death anniversary (

*[குரு + பூசை.]*

**குரும்பாலை** *kuumpālai,* பெ.(n.) நிலப்பனை; ground palm - *Curculigo Orchioides* (சா.அக.).

**குரும்பைகுத்து-தல்** *kurumbai-kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) தென்னங் குரும்பையைப் பறித்தல்; to pluck young coconuts (செ.அக.).

*[குரும்பை + குத்து-தல்.]*

**குருமடம்** *kuru-maḍam,* பெ.(n.) குரு ஆவதற்கு உரிய பயிற்சி பெறும் இடம்; seminary.

*[குரு + மடம்.]*

**குருமபட்டி** *kuruma-paṭṭi,* பெ.(n.) 1. காதின் உள்ளே சேரும் அழுக்கு; a thick viscous substance secrated by the glands of the ear, Ear-wax. 2. தென்னை, பனை இவைகளின் இளங்காய்; immature fruit of coconut palmyra etc. 3. இளநீர்; tender coconut with only water inside. 4. பெருங்குரும்பை; 5. புற்றாஞ்சோறு; the comb of white ant's nest. 6. சொரி குரும்பை அல்லது மிளகு சம்பா; a kind of chamba paddy (சா.அக.).

**குருமலியம்** *kuru-maliyam,* பெ.(n.) அசோக மரம்; wing leaved Asoka tree - *Saraca Indica alias Jonesia asoka* (சா.அக.).

**குருமாணவன்** *kuru-māṇavaṉ,* பெ.(n.) குரு ஆவதற்குரிய பயிற்சி பெறுபவன்; seminarian.

*[குரு + மாணவன்.]*

**குருமார்** *kurumār,* பெ.(n.) சீக்கிய மதத்தின் முதன்மைக் குரு அல்லது தலைவர்; head priest or leader of Sikh religious institutions.

*[குரு + மார்.]*

**குருமுகம்** *kuru-mugam,* பெ.(n.) 1. அம்மை வார்த்த முகம்; pox-pitted face. 2. குருக்கள் எழும்பிய முகம்; face full of pimples. 3. சிறிய முகம்; small face (சா.அக.).

*[குரு + முகம்.]*

**குருமுறை** *kuru-muṟai,* பெ.(n.) 1. சவர்க்காரம்; soap. 2. கோடாசொரி (வைப்புப் பாடாண வகை); a prepared arsenic (செ.அக.).

*[குரு + முறை.]*

**குருமேசினம்** *kuru-mēšiṉam,* பெ.(n.) இதிரக் கிழங்கு, காட்டுக் கருணைக் கிழங்கு; the wild yam root - *Dracontium Polyphillum alias Arun lyratum* (சா.அக.).

**குருராட்சம்** *kuru-rāṭcam,* பெ.(n.) ஆந்தை; owl (சா.அக.).

**குருலிங்கசங்கமம்** *kuru-liṅga-šaṅgamam,* பெ.(n.) ஆசாரியனும், சிவமும் திருக் கூட்டமும்; aggregate of the spiritual guru, Šiva's emblem and the devotees of Šiva (செ.அக.).

**குருவானவர்** *kuruvāṉavar,* பெ.(n.) ஆயர் தரும் பணிகளை நிறைவேற்ற நியமிக்கப் பட்டவர்; priest (க்ரியா.).

*[குரு + ஆனவர்.]*

**குருவிக்காதி** *kuru-v-ikkāti,* பெ.(n.) பச்சைக் கருப்பூரம்; crude camphor (சா.அக.).

*[குருவி + காதி.]*

**குருவித்தலைப்பைத்தியக்காரன்** *kuruvi-t-talai-p-paittiyakkāraṉ,* பெ.(n.) மூடன்; idiot, weak-headed or hare-brained person (செ.அக.).

**குருவித்தாலா** *kuruvi-t-tālā,* பெ.(n.) மொச்சை; Indian bean - *Dolichosguens* (சா.அக.).

*[குருவி + தலை.]*

**குருவிருட்சம்** *kuru-viruṭcam,* பெ.(n.) 1. அரச மரம்; peepul tree. 2. மணமுள்ள மரம்; any fragrant tree (சா.அக.).

**குருவிருந்ததுறை** *kuruvirunda-tuṟai,* பெ.(n.) மதுரைக்கு அருகில் உள்ள ஊர்; the town near by Madurai. *குருவித் துறையென இக்காலத்தில் வழங்கப்படுகிறது (அபி.சிந்.).*

**குருவிவாலான்** *kuruvi-vālāṉ,* பெ.(n.) பெருநெல் வகை; a large kind of bearded paddy (செ.அக.).

மறுவ. குதிரை வாலி, குதிரை வாலான்.

**குருவைநம்பி** *kuruvai-nambi,* பெ.(n.) ஒரு குயவர்; a potter.

**குரூடகம்** *kurūḍagam,* பெ.(n.) 1. கல்லுப் பனை, மலைப்பனை, தொட்டிப்பனை; palmyra growing on hills; hill palmyra - *Borassus flabellifer.* 2. ஆண்பனை; male palmyra - *Borrasus flabelliformis* (சா.அக.).

**குரூப்புகை** *kurūppugai,* பெ.(n.) நறுமணப் புகை; a very fragrant smoke (சா.அக.).

**குரூபதேசம்** *kurūbadēšam,* பெ.(n.) மாணாக்கனுக்கு ஆசிரியர் கூறும் அறிவுரை; religious instructions to a disciple by his guru (செ.அக.).

*[குரு →குரூ +* **Skt.** *உபதேசம்.]*

**குரூரமாவு** *kurūra-māvu,* பெ.(n.) கொல்ல மாவு; penni-nerved cinnamon - *Machilus macrantha* (சா.அக.).

*[குரூர + மாவு.]*

**குரைக்கல்** *kurai-k-kal,* பெ.(n.) இதளை; Indian wild olive - *Olea dioica* (சா.அக.).

**குரோட்டுபலம்** *kurōṭṭu-palam,* பெ.(n.) 1. நாட்டு வாதுமை; Indian almond - *Terminalia catappa.* 2. அக்ரோட்டு மரம்; walnut tree - *Juglams regia alias Jovis glans* (சா.அக.).

**குரோதபரணி** *kurōta-paraṇi,* பெ.(n.) கண்டங் கத்திரி; prickly night shade - *Solanum jacquini* (சா.அக.).

**குரோதவல்லம்** *kurōta-vallam,* பெ.(n.) ஒரு கோரை; a variety of cyperus (சா.அக.).

**குல்மமூலம்** *kulma-mūlam,* பெ.(n.) 1. இஞ்சி; ginger, zingiber offinale. 2. குன்மத்தினால் எழுந்த மூலம்; piles as a result of dyspeptic trouble (சா.அக.).

**குல்மால்பண்ணு-தல்** *kulmāl-paṇṇu-,* செ.கு.வி.(v.i.) 1. புரட்டு செய்தல்; to cheat. 2. குழப்பஞ் செய்தல்; to create a hubbub (செ.அக.).

*[கோல்மால்பண்ணு-தல் → குல்மால் பண்ணு-தல்.]*

**குல்லகி** *kullagi,* பெ.(n.) பூலாச்செடி; black money shrub - *Phyllanthus multiflorus* (சா.அக.).

**குல்லரிச்சோறு** *kullari-c-cōṟu,* பெ.(n.) கற்றாழைச் சோறு; aloe pulp (சா.அக.).

*[குல்லரி + சோறு.]*

**குல்லையம்** *kullaiyam,* பெ.(n.) கருங்குவளை; black water lily; blue lotus or blue nelumbo - *Monochoria vaginalis alias Ponteb deria vaginalis* (சா.அக.).

*[குல்லை + அம்.]*

**குல்லோசிதம்** *kullōšitam,* பெ.(n.) பூனைக்காஞ்சொறி; cowhage - *Tragia cannabina* (சா.அக.).

**குலச்சங்கு** *kula-c-caṅgu,* பெ.(n.) முட்சங்கு; a speicies of conch with thorn, like lotus (சா.அக.).

*[குல் - குல்ல -குல+ சங்கு.]*



**குலச்சுமார்** *kulaccumār,* பெ.(n.) **குலச்சுமால்** பார்க்க; see *kulaccumāl* (செ.அக.).

*[குலம் +* **Skt.** *சுமார்.]*

**குலச்சுமால்** *kula-c-cumāl,* பெ.(n.) களத்திற் விற்குந் தவசம்; grain sold on the threshing floor (செ.அக.).

*[குலம் + **Skt.** சுமால்.]*

**குலசிரேட்டன்** *kula-širēṭṭaṉ,* பெ.(n.) குடியிற் பிறந்தவருள் புகழ் மிக்கவன்; illustrious son of a family (செ.அக.).

*[குல;ம + **Skt.** சிரேட்டன்.]*

**குலசேகரபாண்டியன்** *kulašēgara-pāṇḍiyaṉ,* பெ.(n.) 1. மதுரையை ஆட்சிச் செய்த பாண்டியருள் ஒருவன்; a Paṇḍiya king who ruled Madurai. 2. பால்வண்ண நாதர் என்னும் மற்றோர் பெயருடைய பாண்டியன்; another name of Pāl-vaṇṇam. 3. மணவூராண்ட பாண்டியன்; a king who ruled Maṇa-v-ūr. 4. வங்கிய குலசேகர பாண்டியன் குமரன்; son of Vaṅgiya-kulacēgara-pāṇḍiyaṉ.

*[குலசேகரன் + பாண்டியன்.]*

**குலசேகரவரதுங்கராமபாண்டியன்** *kulašēgara-varatuṅga-pāṇḍiyaṉ,* பெ.(n.) வாயு சம்மிதையைத் தமிழில் செய்த பாண்டியன்; author of Vāyu-šammidai (அபி.சிந்.).

**குலசுவேதகன்** *kula-šuvēdagaṉ,* பெ.(n.) குறட்டைப்பழம்; pulp of the bitter snake-gourd, a powerful purgative (செ.அக.).

**குலஞ்சம்** *kulañjam,* பெ.(n.) அரத்தை; galangal - *Alpinia galanga* (சா.அக.).

**குலடன்** *kulaḍaṉ,* பெ.(n.) தத்தெடுத்து வளர்க்கும் மகன்; adopted son (செ.அக.).

**குலதீவிதிராட்சை** *kula-tīvi-tirāṭcai,* பெ.(n.) நல்ல இனமான உயர்ந்த கொடி முந்திரி; vine of superior quality (சா.அக.).

**குலதேவதை** *kula-dēvadai,* பெ.(n.) ஒரு குலத்தார் தலைமுறை, தலைமுறையாக வழிபட்டு வருங் கடவுள்; family deity. *"நினையாந் தொழத்தக்க குல தேவதையாய் வழிபட்டு" (சிவப்.பிரபந்.பின்.சிற்றிற்.6) (செ.அக.).*

*[குலம் + தேவதை.]*

**குலநாசகம்** *kula-nāšagam,* பெ.(n.) ஒட்டகம்; camel (சா.அக.).

**குலப்பசிமாது** *kulappaši-mādu,* பெ.(n.) சீந்திற் கொடி; moon-creeper - *Meniapermum cordifolium* (சா.அக.).



**குலபதிநாயனார்** *kulapati-nāyaṉār,* பெ.(n.) கடைச்சங்கப் புலவருள் ஒருவர் (திருவள்ளுவ மாலை); a Šaṅgam poet.

**குலபருவதம்** *kula-paruvadam,* பெ.(n.) எண் வகை மலைகள்; chief mountain-ranges in jambudvipa, eight in number.

*[குலம் + **Skt.**பருவதம்.]*

அவை : இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் (பிங்.) (செ.அக.).

**குலபாகலகம்** *kula-pālagam,* பெ.(n.) சூரத்து நிலாவாரை; tinnelvelly senna - *Cassia angustifolia* (சா.அக.).

**குலபுத்திரன்** *kula-puttiraṉ,* பெ.(n.) மாசி பத்திரி; Indian absinth - *Artemesia indica alias A.vulgaris* (சா.அக்.).

**குலபூடணபாண்டியன்** *kulapūḍa-pāṇḍiyaṉ,* பெ.(n.) பாண்டிய மன்னர்களுள் ஒருவன்; a Pāṇḍiyā king.

**குலமர்ச்சம்** *kula-marccam,* பெ.(n.) வெள்ளுள்ளி; garlic (சா.அக.).

**குலவஞ்சனாதி** *kula-vañjaṉāti,* பெ.(n.) வெட்டி வேர்; khus khus root (சா.அக.).

**குலவிருத்தியை** *kula-viruttiyai,* பெ.(n.) மருத்துவச்சி (யாழ்.அக.); midwife (செ.அக.).

*[குலம் + **Skt.**விருத்தியை.]*

**குலவுக்கரசி** *kulavu-k-karaši,* பெ.(n.) சூழ்ப்பிராய்; demon tree - *Streblus asper* (சா.அக.).

**குலவுரி** *kulavuri,* பெ.(n.) 1. சந்தன மரம்; sandal wood tree - *Santalum albus.* 2. செஞ்சந்தனம் (பிங்.); red sandal - *Pterocarpus santalinus* (செ.அக.).

*[குலம் + உரி.]*

**குலத்தன்** *kulattaṉ,* பெ.(n.) நற்குலத்தோன்; man of good family or birth (செ.அக.).

*[குலம் + **Skt.** அத்தன்.]*

**குலாசலம்** *kulāšalam,* பெ.(n.) **குலபருவதம்** பார்க்க; see *kula-paruvadam* (செ.அக.).

*[குலம் + **Skt.**அசலம் → குலசலம் → குலாசலம்.]*

**குலாசாரம்** *kulā-šāram,* பெ.(n.) குலவொழுக்கம்; established or time-honoured custom or usage of a family or caste (செ.அக.).

*[குலம் + **Skt.** அசாரம் – குலசாரம் → குலாசாரம்.]*

**குலாசாரியன்** *kulāšāriyaṉ,* பெ.(n.) குல ஆசாரியன் (குரு); family preceptor or priest (செ.அக.).

*[குலம் + ஆசாரியன் – குலாசாரியன்.]*

**குலாட்டு** *kulāṭṭu,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy. 2. உற்சாகம்; enthusiasm (செ.அக.).

*[குலவு + ஆட்டு.]*

**குலாதனி** *kulādaṉi,* பெ.(n.) ஒருவகைப் பூண்டு (மலை.); christmas rose, herb - *Helleforus niger* (செ.அக.).

**குலாதிக்கன்** *kulādikkaṉ,* பெ.(n.) குலத்தின் முதன்மையானவன்; cheif man of the family (செ.அக.).

*[குலம் + ஆதிக்கன் – குலதிக்கன் → குலாதிக்கன்.]*

**குலிகா** *kulikā,* பெ.(n.) பூசணிக் கொடி (பறங்கிக்காய்); pumpkin creeper (சா.அக.).

**குலிகாயம்** *kuli-kāyam,* பெ.(n.) நீர் வாழ் உயிரி; an aquatic animal (சா.அக.).

**குலிசத்துருமம்** *kuliša-t-turumam,* பெ.(n.) ஒரு வகைக் கள்ளி; a kind of opuntia tree (சா.அக.).

*[குலிசம் + துருமம்.]*

**குலிலேசம்** *kuli-lēšam,* பெ.(n.) கருங்கொள்; black gram - *Rynchosia genus* (சா.அக.).

**குலிங்கன்** *kuliṅgaṉ,* பெ.(n.) துரியோதனனின் அமைச்சன்; minister of turi-y-ōtaṉaṉ (அபி.சிந்.).

**குலீனன்** *kulīṉaṉ,* பெ.(n.) உயர் குலத்தில் பிறந்தவன் (திவா.); man of noble birth (செ.அக.).

**குலுக்கல்**[1] *kulukkal,* பெ.(n.) 1. வண்டி மேடு பள்ளத்தில் ஏறி இறங்குவதால் அல்லது ஏதேனும் தடையால் தூக்கிப் போடுகை, ஆட்டம்; of vehicles jolt, jerking. *மாட்டு வண்டியில் உட்கார முடியாத அளவுக்குக் குலுக்கல்! பேருந்து ஒரு குலுக்கலுடன் நின்றது.* 2. அருவருப்பான உடல் அசைவு;

flirtatious body gesture. *அவளுடைய குலுக்கலும் தளுக்கு நடையும்.*

*[குலுங்கல் – குலுக்கல்.]*

**குலுக்கல்**[2] *kulukkal,* பெ.(n.) எண்கள் அச்சடிக்கப்பட்ட சீட்டுகளை விற்றுச் சிலவற்றைப் பரிசுக்கு உரியதாகத் தேர்ந் தெடுக்கை; draw of lottery tickets. *ஒவ்வொர வெள்ளிக்கிழமையும் குலுக்கல் நடைபெறும்.*

*[குலுங்கல் – குலுக்கல்.]*

**குலேசபாண்டியன்** *kulēša-pāṇḍiyaṉ,* பெ.(n.) ஒரு பாண்டிய மன்னன்; a Pāṇḍiyā king.

**குலேநீலோபர்** *kulē-nīlōpar,* பெ.(n.) வெண் தாமரைப் பூ; white lotus flower - *Nelumbium speciosum* (சா.அக.).

**குலை–த்தல்** *kulai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நாய் கடித்ததால் வெறி ஏறி நாய் போல் குரைத்தல்; barking like a dog as in hydrophobia. 2. குழறிப் பேசல்; talking in a confused manner (சா.அக.).

*[குரைத்தல் – குலைத்தல். (பே.வ.)]*

**குலைக்கீசம்** *kulai-k-kīšam,* பெ.(n.) ஆட்டுலா மரவகை; a kind of tree (சா.அக.).

**குலைவயிறு** *kulai-vayiṟu,* பெ.(n.) ஈரலடி; the bottom portion of the liver adjoining the stomach (சா.அக.).

*[குலை + வயிறு.]*

**குலோத்துங்கபாண்டியன்** *kulōttuṅga-pāṇḍiyaṉ,* பெ.(n.) ஒரு பாண்டிய மன்னன்; a Pāṇḍiyā king (அபி.சிந்.).

*[குலம் + அத்து + துங்கன் + பாண்டியன்.]*

**குலோத்துங்கன்**[1] *kulōttuṅgaṉ,* பெ.(n.) இராசேந்திரச் சோழனின் பெயரன்; grandson of Rājēṉdira-c-cōḻaṉ.

*[குலம் + அத்து + துங்கன்]*

இவன் தாய் வழியில் சோழன். தந்தை வழியில் சாளுக்கியன். அநபாயன், அபயன், கரிகாலன், ஜயதரன் எனும் பெயர்களும் இவனுக்குண்டு. பெரியபுராணம், தண்டியலங்காரம், கலிங்கத்துப் பரணி, முதலிய சிற்றிலக்கியங்களில் இவனைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது. அம்மங்கை என்னும் பெண்ணும், குந்தவை என்னும் தமக்கையும் இருந்தனர். தனது தளபதி கருணாகரத் தொண்டைமானின் உதவியுடன் கலிங்க நாட்டை வென்றான். திரிபுவன சக்கரவர்த்தி, சுங்கம் தவிர்த்த சோழன், பேரம்பலம் பொன் வேய்ந்த சோழன் முதலிய பட்டங்கள் உடையவன். ஒட்டக்கூத்தரிடம் கல்வி பயின்ற இவன் சிறந்த சிவபத்தன். பாடல் இயற்றுவதில் வல்லவன். திருநீற்றுச் சோழன் எனும் இவன் பெயரில் தென்னாட்டில் ஓர் ஊர் உள்ளது (அபி.சிந்.).

**குலோமிசை** *kulōmišai,* பெ.(n.) மருந்திற்குப் பயன்படும் பொருட்களைத் தரும் செடிவகை; sweet flag - *Acorus Calamus* (செ.அக.).

**குவசிமரம்** *kuvaši-maram,* பெ.(n.) ஒரு ஐரோப்பிய நாட்டு மரம்; jamaica quassia - *Qussia excelsa* (சா.அக.).

**குவசிவேம்பு** *kuvaši-vēmbu,* பெ.(n.) இமய மலையில் உள்ள ஒரு வகை வேம்பு; a kind of Himalayan quassia - *Brucea quassioides* (சா.அக.).

**குவட்டிலுற்பவித்தகூர்மை** *kuvaṭṭiluṟ-pavitta-kūrmai,* பெ.(n.) தொட்டி பாடாணம்; a mineral poison probably red arsenic (சா.அக.).

**குவலயம்**[1] *kuvalayam,* பெ.(n.) உலகம்; the earth, world. *"குவலயமிசைக் குப்புற்று" (கந்தபு.தாரக.51) (செ.அக.).*

**குவலயம்**[2] *kuvalayam,* பெ.(n.) 1. வெள்ளாம்பல் (திவா.); white Indian water lily - *Nymphaea lotus alba.* 2. நீலோற்பலம், குவளை வகை; blue nelumbo - *Pontederia monochoria vaginalis. "குவலயத் திருமலர்" (சூடா.).* 3. கொடி வகைகளில் ஒன்றான

செங்குவளை; purple Indian water-lily - *Nymphacu odorata* (செ.அக.).

*[குவளம் – குவலயம்.]*

**குவலயாநந்தம்** *kuvalayā-nandam,* பெ.(n.) ஒப்பனை கலை பற்றிய இலக்கணம்; a rhetorical grammer.

*[குவளையன் + நந்தம்.]*

**குவானாகோ** *kuvāṉākō,* பெ.(n.) கடம்பை இனத்தைச் சேர்ந்த விலங்கு; a animal which belonged to kaḍambai lineage.

இது கூட்டமாக வாழும். நான்கு அடி உயரம் கொண்ட இது அமெரிக்காவில் உள்ளது. இவை தங்களில் ஏதாவதொன்று இறந்தால் ஒன்று கூடும் என்பர் (அபி.சிந்.).

**குவிகம்** *kuvigam,* பெ.(n.) இலுப்பை மரம்; South Indian mahua - *Bassia longifolia* (சா.அக.).

**குவிஞ்சு** *kuviñju,* பெ.(n.) சீமை மாதுளை; the fruit of a tree allied to the pear and apple - *Qince* (சா.அக.).

**குவிப்பு** *kuvippu,* பெ.(n.) சேர்ந்து ஒன்றாகிக் காணும் நிலை; piling up. *எல்லைப் பகுதியில் படைக் குவிப்பு. ஆறுகளால் அடித்து வரப்பட்ட வண்டல் மண் குவிப்பே இந்தச் சிறு தீவு*

*[குவி – குவிப்பு.]*

**குவிமுனை** *kuvi-muṉai,* பெ.(n.) **குவிமையம்** பார்க்க; see *kuvimaiyam*.

**குவிமையம்** *kuvi-maiyam,* பெ.(n.) ஒளிக் கதிர்கள் ஊடகத்தின் வழியாகச் சென்று மறுபுறத்தில் அல்லது எதிர்ப்புறத்தில் ஒரு சிறு புள்ளியாகக் குவியும் இடம்; principal focus; focal point.

*[குவி + மையம்.]*

**குவைனா** *kuvaiṉā,* பெ.(n.) கொய்னா; quinine (சா.அக.).

**குழகுழப்பு** *kuḻa-kuḻappu,* பெ.(n.) பிசு பிசுப்போடு குழைவாக இருக்கும் தன்மை; sticky and slimy nature. *விரலில் பசையின் குழகுழப்பு, குழகுழப்பான நீர்மம்.*

*[குழ + குழப்பு.]*

**குழந்தைக்காரி** *kuḻandaikkāri,* பெ.(n.) தாய்ப்பால் கொடுக்கும் கைக்குழந்தை உடையவள்; a mother who has a nursing baby. *குழந்தைக்காரி பட்டினி கிடக்கக் கூடாது.*

**மறுவ.** கைப்பிள்ளைக்காரி, பச்சை உடம்புக்காரி.



**குழந்தைமுதலியார்** *kuḻandai-mudaliyār,* பெ.(n.) திருக்குற்றாலத்தில் வாழ்ந்த தமிழ்க்கவி; Tamil poet who lived in *Tiru-k-kuṟṟālam.*

*[குழந்தை + முதலி + ஆர்.]*

இவர் வீரராகவர் பிள்ளைத் தமிழை இயற்றியவர் (அபி.சிந்.).

**குழம்பாய்ப்போ–தல்** *kuḻambāy-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) மலம் இளகி நீராய்க் கழிதல்; semf-solid or watery fecal discharge (சா.அக.).

**மறுவ.** வயிறோட்டம்

*[குழம்பாய் + போ–தல்.]*

**குழம்புபதம்** *kuḻambu-padam,* பெ.(n.) மருந்தெண்ணெய்ப் பதங்களுள் ஒன்று; a

stage in the preparation of medicinal oil, one of marundenney-p-patam (செ.அக.).

**குழம்புப்பாகு** *kuḷambu-p-pāgu,* பெ.(n.) தடித்த பாகு; thick syrup (சா.அக.).

*[குழம்பு + பாகு.]*

**குழல்புட்டு** *kuḷal-puṭṭu,* பெ.(n.) **குழாய்ப் புட்டு** பார்க்க; see *kuḷay-p-puṭṭu* (க்ரியா.).

**குழல்விளக்கு** *kuḷal-viḷakku,* பெ.(n.) உட்புறம் ஒளிரும் வேதியற் பொருள் பூசப்பட்ட நீண்ட குழாய் அமைப்புடைய வெண்ணிற ஒளி தரும் மின் விளக்கு; neon (tube) light. *பெரும்பாலான வீடுகளில் குழல் விளக்குகளையே வைத்திருக்கிறார்கள்.*

*[குழல் + விளக்கு.]*

**குழற்றத்தனார்** *kuḷaṟṟattaṉār,* பெ.(n.) கடைக்கழகக் காலப் புவர்களில் ஒருவர்; the poet who belonged to the last Šaṅgam.

*[குழல் + தத்தனார்.]*

இவர் பெயர் தத்தன். குழல் என்பது புல்லாங் குழலைக் குறிக்குஞ் சொல்லாக இருத்தல் கூடும். தலைவன் தலைவியுடன் இல்லறம் புரிதலைச் செவிலியின் கூற்றில் இவர் அமைத்திருப்பது படித்து இன்புறற் பாலது.

*"கானங் கோழிக் கவர்குரற் சேவல்*
*ஒண்பொறி யெருத்திற் றண்சிதர் உறைப்பப்*
*புதனீர் வாரும் பூநாறு புறவிற்*
*சீறூரோளே மடந்தை வேறூர்*
*வேந்துவிடு தொழிலொடு செலினும்*
*சேந்துவரல் அறியாது செம்மல் தேரே"*

*(குறுந்.242).*

**குழலூசி** *kuḷalūši,* பெ.(n.) பீச்சாங் குழலின் முனையூசி (கால்.வி.66); injecting needle at the end of a syringe (செ.அக.).

*[குழல் + ஊசி.]*

**குழவல்லம்** *kuḷa-vallam,* பெ.(n.) முருங்கை; drumstick-tree - *Moringa pterogospermum* (சா.அக.).

*[குழை + வல்லம்.]*

**குழாய்த்தண்ணீர்** *kuḷāy-t-taṇṇīr,* பெ.(n.) குழாயினின்று வரும் குடித் தண்ணீர்; drinking water (சா.அக.).

*[குழாய் + தண்ணீர்.]*

**குழாய்ப்புட்டு** *kuḷāy-p-puṭṭu,* பெ.(n.) குழாய் போன்ற நீண்ட கழுத்துடைய ஏனத்தில் அரிசி மாவை அடைத்து ஆவியில் வேகவைத்துச் செய்யும் புட்டு; dish prepared by filling a long-tube like structure with rice flour and steaming it

*[குழாய் + புட்டு.]*

**குழிகை** *kuḷigai,* பெ.(n.) உள்ளங்கை; palm of the hand (சா.அக.).

*[குழி + கை.]*

**குழித்தறி** *kuḷi-t-taṟi,* பெ.(n.) குழியில் கால்மிதிகளைக் கொண்ட தறி; loom having treadles in a pit.

*[குழி + தறி.]*

**குழிப்பறங்கி** *kuḷi-p-paṟaṅgi,* பெ.(n.) கோடைப்பூசணி; a species of pumpkin cultivated in summer (சா.அக.).

*[குழி + பறங்கி.]*

**குழியாடி** *kuḷi-y-āḍi,* பெ.(n.) உட்புறம் குழிவான அரைக்கோள வடிவத்தில் எதிரொளிக்கும் பரப்பைக் கொண்ட ஆடி; concave mirror or lens

*[குழி + ஆடி.]*

**குழியுரல்** *kuḷi-y-ural,* பெ.(n.) உரல் வகை; a kind of mortar (செ.அக.).

*[குழி + உரல்.]*



**குழுகூலி** *kuḻu-kūli,* பெ.(n.) களவு போனதை மீட்டுக் கொடுப்பதற்காகப் பொருட்குரியவர் கொடுக்கும் பொருளில் இடைநின்று அக்காரியத்துக்கு உதவிய சிற்றூர் காவற் காரனுக்குரிய பங்கு; share of money paid to the village watchman for acting as intermediary and restoring the stolen property to the owner (செ.அக.).

மறுவ. துப்புக்கூலி

*[குழு + கூலி.]*

**குழுதி** *kuḻudi,* பெ.(n.) கிரகப் பூச்சி; a kind of insect (சா.அக.).

**குழுமம்** *kuḻumam,* பெ.(n.) 1. ஒரு நோக் கத்தைக் குறிப்பிட்டு அதை நிறைவேற்றச் சில அமைப்புகள் ஒன்று சேர்ந்து தனி நெறிமுறைகளை அமைத்து உருவாக்கம் ஓர் அமைப்பு; corporation. 2. ஒருவரே முடிவுகளை மேற்கொள்ளாமல் தொடர்புடைய வர்கள் ஒரு குழுவாகச் சேர்ந்து கலந்தாய்ந்து முடிவுகளை மேற்கொள்ள அமைக்கப்படும் குழு; council. 3. குறிப்பிட்ட நோக்கத்துக்காக அமைக்கப்படும் ஒரே துறையைச் சேர்ந்தவர் களின் குழு; a body of professionals, etc.

**குழைக்காடு** *kuḻai-k-kāḍu,* பெ.(n.) 1. நாட்டுப்புறம்; country, as distinct from city. 2. காட்டுப்புறம்; jungle, as distinct from cultivated tract (செ.அக.).

*[குழை + காடு.]*

**குழைசாந்து** *kuḻai-šāndu,* பெ.(n.) கட்டடம் பூசுதற்கு உதவும் கலவைச் சாந்து; softened mortar, as used in rough plastering (செ.அக.).

*[குழை + சாந்து.]*

**குள்ளக்குறுக்கம்** *kuḷḷa-k-kuṟukkam,* பெ.(n.) மிகவும் குட்டை; verys short in stature (சா.அக.).

*[குள்ளம் + குறுக்கம்.]*

**குளக்கரையில்வசித்தசத்தி** *kuḷakkarayil-vašitta-šatti,* பெ.(n.) சத்தி சாரணை; spreading hogweed - *Boerhavia repens* (சா.அக.).

**குளக்கோடன்** *kuḷa-k-kōṭṭaṉ,* பெ.(n.) ஒரு மன்னன்; a king. இவன் திருக்கோணை மலையில் பல திருப்பணிகள் செய்தான். இவன் குமாரன் குளங்கோட்டன் (அபி.சிந்.).

*[குளம் + கோடு + அன்.]*

**குளகச்செய்யுள்** *kuḷaga-c-ceyyuḷ,* பெ.(n.) பல பாட்டாய் ஒரு வினை கொண்டு முடிவது (தண்டி.3); combination of three or more stanzas having a single finite verb, dist. fr. muṭṭakam.

*[குளகம் + செய்யுள்]*

**குளங்கந்தம்** *kuḷaṅ-kandam,* பெ.(n.) நஞ்சுப் பாலை; a kind of milky plant (சா.அக.).

*[குளம் + கந்தம்.]*

**குளத்துநண்டு** *kuḷattu-naṇḍu,* பெ.(n.) குளத்தில் வாழும் நண்டு; pond-crab - *Potamon* (சா.அக.).

*[குளத்து + நண்டு.]*



**குளத்தட்டி** *kuḷa-t-taṭṭi,* பெ.(n.) மீன் பிடிக்க இடும் சிற்றணை; small dam across a channel, with a row of split bamboos in it, put up in fishing (செ.அக.).

*[குளம் + தட்டி.]*

**குளத்துப்பாசி** *kuḷattu-p-pāśi,* பெ.(n.) குளத்தில் படரும் பாசி; moss or weed in tank water (சா.அக.).

*[குளத்து + பாசி.]*

**குளத்துப்புட்பம்** *kuḷattu-p-puṭpam,* பெ.(n.) குளத்தில் வளரும் தாமரை, அல்லி முதலியன; lotus, nymphae etc., growing in tanks (சா.அக.).

*[குளத்து + புட்பம்.]*

**குளப்பாய்வு** *kuḷa-p-pāyvu,* பெ.(n.) ஏரிப்பாசனம் (பணவிடு.24); tank irrigation (செ.அக.).

*[குளம் + பாய்வு.]*

**குளம்பனார்** *kuḷambaṉār,* பெ.(n.) கழகக்காலப் புலவர்; Šaṅgampoet.

குளம்பு என்னும் ஊரினராதலின் குளம்பனார் எனப்பட்டார். இது ஊர் பற்றி வந்த பெயர். இவர் குறிஞ்சித்திணை குறித்துப் பாடியுள்ளார். நற்றிணையில் 288ஆம் பாடல் இவருடையதே (அபி.சிந்.)

*"அருவி யார்க்கும் அணங்குடை*
*நெடுங்கோட்டு*
*ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்*
*பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்*
*குன்ற நாடன் பிரிவிற் சென்று*
*நன்னுதல் பரந்த பசலைகண்டு அன்னை*
*செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇக்*
*கட்டிற் கேட்கும் ஆயின் வெற்பில்*
*ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்*
*குறுகிளி கடிகஞ் சென்றும்இந்*
*நெடுவேள் அணங்கிற் றெனுங்கொல்*
*அதுவே" (நற்.288).*

**குளம்பாதாயனார்** *kuḷam-pātāyaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a Šaṅgampoet.

*[குளம் + பாதாயன்+ஆர்.]*

புறநானூறு 253ம் பாடலைப் பாடியவர். இவர் பாடிய புறப்பாடலில் வளையல் களைந்த மகளிர் கைகளுக்குப் பட்டை நீங்கிய மூங்கிலை உவமையாகக் கூறியுள்ளார். இவர் குளம்பாதயானார் என்றும் குறிக்கப்படுகிறார்.

*"என்றிறத் தவலங் கொள்ளல் இனியே*
*வவ்வார் கண்ணி இளையர் திளைப்ப*
*நகாஅலென வந்த மாறே யெழாநெற்*
*பைங்கழை பொதிகளைந் தன்ன விளப்பின்*
*வளையில் வறுங்கை ஓச்சிக்*
*கிளையு ளொய்வலோ கூறுநின் னுரையே"*
*(புறநா.253).*

**குளப்பாலையிலை** *kuḷappālai-y-ilai,* பெ.(n.) கசப்பு வெட்பாலை இலை; leaves of bitter oleander - *Holarrhena anti-dysenterica* (சா.அக.).

*[குளப்பாலை + இலை.]*

**குளப்பாலைவிதை** *kuḷappālai-vitai,* பெ.(n.) கசப்பு வெட்பாலை விதை; seeds of bitter oleander (சா.அக.).

*[குளப்பாலை + விதை.]*

**குளவன்** *kuḷavaṉ,* பெ.(n.) முருகக் கடவுள்; God Murugaṉ. *"குளவன் வீற்றிருந்த வளர்புகழ்க் குன்றமும்" (வீரவனப்பு. திருநாட்.23). (செ.அக.).*

*[குழவன் – குளவன்.]*

**குளவாம்பல்** *kuḷa-v-āmbal,* பெ.(n.) குளத்தில் முளைக்கும் ஆம்பல்; white Indian water-lily found in tanks - *Nymphaea lotus* (சா.அக.).

*[குளம் + ஆம்பல்.]*

**குளவார்** *kuḷavār,* பெ.(n.) குடியானவர்களோடு தனித்தனியாகச் செய்து கொள்ளும் நிலவரித் (தீர்வை) திட்டம்; settlement made with ryots individually (செ.அக.).

**குளாஞ்சி** *kuḷāñji,* பெ.(n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree (செ.அக.).

**குளிக்காமலிரு-த்தல்** *kuḷikkāmaliru-,* 2 செ.கு.வி.(v.i.) கருவுறுதல்; கருப்பம் தரித்தல்; be in the family way. *உன் மகள் குளிக்காமலிருக்கிறாளா? எத்தனை மாதம்?.*

**மறுவ.** முழுகாமலிருத்தல்

*[குளிக்காமல் + இரு-த்தல்.]*

**குளிகாசித்தி** *kuḷigā-šitti,* பெ.(n.) குளிகை (இரச மாத்திரை) முதலியவற்றால் பெறக் கூடியதாகக் கருதும் வானத்தில் பறக்கும் மன ஆற்றல்; the power of flying through the air at an enormous speed believed to be acquired by means of mercurial or other pills (செ.அக.).

*[குளிகை + சித்தி.]*

**குளிகோமணம்** *kuḷi-kōmaṇam,* பெ.(n.) நீர்ச்சீலை (லங்கோடு); a kind of loin-cloth (செ.அக.).

*[குளி + கோமணம். கோவணம் → கோமணம்.]*

**குளிசதோசம்** *kuḷiša-dōšam,* பெ.(n.) கருப்பமாதலை வேண்டும் பெண்கள் நீருட் குளித்தெடுத்த சங்கினைக் கட்டிக் கொள்ளும் பொழுது எதிர்ப்பட்ட குழந்தைகளுக்கு வரும் ஒரு நோய் (சீவரட்.221); a child's ailment believed to be the result of encountering a woman when an amulet is fastened on her for favouring pregnancy (செ.அக.).

*[குள்→குளி→குளிசம் + **Skt.** தோசம்.]*

**குளிசை** *kuḷišai,* பெ.(n.) மாத்திரை (இலங்.); tablet, pill. *ஒரு குளிசை விழுங்கு, தலைவலி உடனே குணமாகும்.*

*[குள் – குளிசை.]*

**குளிதேவதாரி** *kuḷi-tēvatāri,* பெ.(n.) சுனை உள்ள தேவதாரி மரம்; a kind of bristly deodar - *Erythroxylon genus* (சா.அக.).

**குளிதோசம்** *kuḷi-dōšam,* பெ.(n.) மாத விலக்கான பெண் குளித்த பின் வெறும் வயிற்றோடு பார்த்தலால் குழந்தைக்கு உண்டாவதாகக் கருதப்படும் தீட்டு (தோசம்) (பாலவா.117, தலைப்பு); malignant influence on an infant of being looked at by a woman wtih an empty stomach on her bath after menstruation (செ.அக.).

*[குள்→ குளி + **Skt.**தோசம்.]*

**குளிந்தம்** *kuḷindam,* பெ.(n.) சரசுவதி ஆற்றங்கரையில் உள்ள நாடு; a city on the bank of river Šarašvati (அபி.சிந்.).

**குளிந்தன்** *kuḷindaṉ,* பெ.(n.) ஒரு மன்னன்; a king (அபி.சிந்.).

**குளியல்அறை** *kuḷiyal-aṟai,* பெ.(n.) குளிப்பதற்குப் பயன்படுத்தும் அறை; room for taking bath (க்ரியா.).

*[குளியல் + அறை.]*

**குளிர்கிறாகம்** *kuḷir-kiṟāgam,* பெ.(n.) திலக மரம்; peacock flower fence - *Adenanthera pavonia* (சா.அக.).

**குளிர்கொள்ளு-தல்** *kuḷir-koḷḷu-,* 16 செ.கு.வி.(v.i.) 1. குளிர்ச்சி அடைதல்; becoming chill. 2. குளிரால் வருந்தல்; suffering from cold (சா.அக.).

*[குளிர் + கொள்ளு-தல்.]*

**குளிர்சாதனம்** *kuḷir-šādaṉam,* பெ.(n.) வீடு, பேருந்து முதலியவற்றின் உட் பகுதியைக்

குளிர்ச்சியாக இருக்கச் செய்வதற்கு உரிய கருவி; air-conditioner.

[குளிர் + Skt.சாதனம்.]

**குளிர்சாதனவசதி** *kuḷir-šādaṉa-vašati*. பெ.(n.) வீடு, பேருந்து முதலியவற்றின் உட்பகுதியைக் குளிர்ச்சியாக இருக்கச் செய்யும் கருவி பொருத்தப்பட்ட ஏற்பாடு; facility of air-conditioning. *தணுப்பு ஏந்து உடைய பெட்டிகள் கோடைக் காலத்தில் இரயிலில் இணைக்கப்படும்.*

[குளிர் + Skt.சாதனம் + Skt. வசதி.]

**குளிர்பதனப்பெட்டி** *kuḷir-padaṉa-p-peṭṭi*, பெ.(n.) மிகக் குறைந்த வெப்ப நிலையில் உணவு, காய்கறிகளை வைத்துப் பாதுகாக்க உதவும் பெட்டி போன்ற கருவி; refrigerator; deep freeze; freezer.

[குளிர் + பதனம் + பெட்டி.]

**குளிர்ந்தபரிமளம்** *kuḷirnda-parimaḷam*, பெ.(n.) 1. இனிய நறுமணம்; cool pleasant scent. 2. சீதாங்கபாடாணம் என்னும் பிறவிப் பாடாண வகை; animal poison (செ.அக.).

[குளிர்ந்த + பரிமளம்.]

**குளிர்பானம்** *kuḷir-bāṉam*, பெ.(n.) குளிர வைக்கப்பட்ட பருகம் (பானம்); cool drink(s); bottled soft drink kept in cold storage.

[குளிர் + பானம்.]

**குளிர்ந்தபூமி** *kuḷirnda-būmi*, பெ.(n.) குளிர்ச்சி மிகுந்த நாடு; cold country (செ.அக.).

[குளிர்ந்த + Skt. பூமி.]

**குளிர்ந்துகொல்லி** *kuḷirndu-kolli*, பெ.(n.) நயவஞ்சகன்; honey tongued villan, person with a fair exterior but a foul interior (செ.அக.).

[குளிர்ந்து + கொல்லி.]

**குளிர்நீர்** *kuḷir-nīr*, பெ.(n.) 1. குளிர்ந்த நீர்; chill water; cold water. 2. குளிர வைத்த நீர்; boiled and cooled water. 3. இள வெந்நீர்; luke warm water. 4. பனிக்கட்டி நீர்; பனி நீர்; ice water.

[குளிர் + நீர்.]

**குளிர்ந்தகாற்று** *kuḷirnda-kāṟṟu*, பெ.(n.) தண்ணென்று அடிக்கும் காற்று; cold blast chill breeze (சா.அக.).

[குளிர்ந்த + காற்று.]

**குளிர்ந்தகொல்லி** *kuḷirnda-kolli*, பெ.(n.) சிங்கி நஞ்சு; a kind of killing poison (சா.அக.).

**குளிர்ந்தரத்தம்** *kuḷirnda-rattam*, பெ.(n.) உறைந்த அரத்தம்; clotted blood (சா.அக.).

[குளிர்→குளிர்ந்த + அரத்தம்.]

**குளிர்பொறுக்காமை** *kuḷir-poṟukkāmai*, பெ.(n.) குளிர் தாங்காமை; extreme sensitiveness to cold; intolerance of cold (சா.அக.).

[குளிர் + பொறுக்காமை.]

**குளிர்மாதி** *kuḷir-māti*, பெ.(n.) கொத்தமல்லி; coriander (சா.அக.).

**குளிர்மையான** *kuḷirmaiyāṉa*, பெ.எ.(adj.) குளிர்ச்சியான; chilly (சா.அக.).

**குளிரீகம்** *kuḷirīgam*, பெ.(n.) பூவரசு; portia tree - *Thespesia pepulnae* (சா.அக.).

**குளிரூட்டும்நிலையம்** *kuḷirūṭṭum-nilaiyam*, பெ.(n.) பால், இறைச்சி முதலியவற்றைப் பக்குவப்படுத்தி குளிர்ச்சியடையச் செய்யும் நிலையம்; cold storage station where milk, meat, etc., are kept.

[குளிர் + ஊட்டும் + நிலையம்.]

**குளுகுளுவென்று** *ku/u-ku/u-v-enru*, வி.அ. (adv.) குளிர்ச்சியாக; pleasantly cool. *"காற்று குளுகுளுவென்று வீசுகிறது".*

*[குளுகுளு + என்று.]*

**குளுத்திப்பூச்சி** *ku/utti-p-pūcci*, பெ.(n.) பிள்ளையார் எறும்பு (இலங்.); a kind of black ant with a painless sting.

*[குளுத்தி + பூச்சி.]*

**குளுவான்** *ku/uvān*, பெ.(n.) குஞ்சு என்பதோடு இணைந்து வரும் சொல்; a word which occurs in combination with kuñju.

**குளுத்தி** *ku/utti*, பெ.(n.) 1. குளிர்ச்சி (சீதளம்); coolness, cold, coldness. 2. குளுமைப் படுத்தல் (சைத்தி யோபகாரம்) (சீவக.1810, உரை); the act of cooling, refreshing with cordials, fans, etc. 3. இனிமையானது; that which is sweet, gratifying or pleasing. 4. மரத்துப்போய் சில்லிடுகை; numbness, frigidity, as in death. *"உடலில் குளிர்ச்சி கண்டுவிட்டது" (செ.அக.).*

*[குளிர்ச்சி→குளுத்தி.]*

**குளுத்திமருந்து** *ku/utti-marundu*, பெ.(n.) சூட்டைக் குளிர்விக்கச் செய்யும் மருந்து; cooling medicine (செ.அக.).

*[குளுத்தி + மருந்து.]*

**குற்குலு** *kurkulu*, பெ.(n.) ஒரு வகைப் பெரு மரம்; konkani resin - *Boswellia serrata glabra. "குற்குலுத்தாவ முற்றெழுந்தகுய்" (சேதுபு. கந்தமா.67) (செ.அக.).*

**குற்சிதம்** *kuršidam*, பெ.(n.) அருவருப்பானது (திவா.); that which is deformed, disgusting, loathing (செ.அக.).

**குற்சை** *kuršai*, பெ.(n.78) 1. அருவருப்பு; abhorrence, loathing, disgust. 2. ஒன்பது வகைச் சுவைகளுள் ஒன்றாகிய இளிவரலென்னும் அருவருப்புச் சுவை (திவா.); sentiment of disgust, one of nava-rašam (செ.அக.).

**குற்றஉணர்வு** *kurra-uṇarvu*, பெ.(n.) குற்றம் செய்ததை உணர்த்தும் மனநிலை; feeling of guilt. *குற்ற உணர்வு மனத்தில் முள்ளாகத் தைத்தது.*

*[குற்றம் + உணர்வு.]*

**குற்றக்குறிப்பாணை** *kurra-k-kurippāṇai*, பெ.(n.) ஒரு பணியாளர் செய்ததாகக் கூறப்படும் குற்றங்களைப் பட்டியலிட்டு அவர் தனது மறுப்பைத் தெரிவிக்க வாய்ப்பு அளிக்கும் நோக்கில் அலுவலகத்தால் அனுப்பப்படும் கடிதம்; charge memo.

*[குற்றம் + குறிப்பாணை.]*

**குற்றப்பிரிவு** *kurra-p-pirivu*, பெ.(n.) குற்றங்களைப் புலனாய்வு செய்வதற்கு என்று தனியாக அமைக்கப்பட்டிருக்கும் காவல் துறையின் பிரிவு; crime branch of the police force.

*[குற்றம் + பிரிவு.]*

**குற்றம்சாட்டு-தல்** *kurram-šāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. குற்றமாகக் கருதும் செயல், சட்டம் புரிந்ததை (நடவடிக்கை எடுப்ப தற்காக) அறிவித்தல்; charge some one with an offence; accuse. *புகை வண்டியைக் கவிழ்க்க முயன்றதாகச் சிலர் குற்றம் சாட்டப்பட்டுக் கைது செய்யப் பட்டுள்ளனர்.* 2. வரைமுறைகளுக்குப் புறம்பாக நடந்து கொண்ட தவற்றை ஒருவர் மேல் போடுதல்; find fault with; blame something on some one. *நடந்த தவற்றுக்கு என்னைக் குற்றம் சாட்டுவது போலப் பேசினார்கள். நான் மிகவும் விட்டுக் கொடுத்து விட்டதாகக் குற்றம் சாட்டாதே!.*

*[குற்றம் + சாட்டு-தல்.]*

**குற்றச்சாத்து** *kurra-c-cāttu,* பெ.(n.) **குற்றப்பத்திரிகை** பார்க்க; see *kurra-p-pattirigai* (செ.அக.).

*[குற்றம் + சாத்து.]*

**குற்றம்சுமத்து-தல்** *kurram-šumattu-,* 5 செ.கு.வி. (v.i.) **குற்றம்சாட்டு-** பார்க்க; see *kurram-šāttu.*

**குற்றம்சொல்-தல்** *kurram-šol-,* 13 செ.கு.வி. (v.i.) விரும்பத்தகாதது நடந்ததற்கு ஒருவரைப் பொறுப்பாக்குதல்; குறை கூறுதல்; blame some one. *நீயே சரி பார்த்து விட்டு பிறகு என்னைக் குற்றம் சொல்வது ஏன்?*

*[குற்றம் + சொல்-தல்.]*

**குற்றப்பத்திரிகை** *kurra-p-pattirigai,* பெ. (n.) முறை மன்றத்தில் ஒருவன் மீது குற்றத்தின் விளத்(விவரத்)தைக் காட்டிப் படிக்கப்படும் ஆவணம்; charge sheet (செ.அக.). *மேனாள் (முன்னாள்) அமைச்சர்கள் மீது சொத்து குவிப்பு வழக்கில் முறை மன்றத்தில் இன்று குற்றப்பத்திரிகை நகல் வழங்கப்பட்டது.*

*[குற்றம் + பத்திரிகை.]*

**குற்றமற்றபற்பம்** *kurramarra-parpam,* பெ. (n.) தூய்மையான துகள்; pure metallic oxide (சா.அக.)

*[குற்றம் + அற்ற + பற்பம்.]*

**குற்றவியல்** *kurraviyal,* பெ.(n.) குற்றங்களைப் பற்றிய அறிவியல் அடிப்படையிலான விளக்கம்; criminology.

*[குற்றம் + இயல்.]*

**குற்றுயிராய்க்கிட-த்தல்** *kurru-y-irāy-k-kida-,* 3 செ.கு.வி. (v.i.) மிகவும் இக்கட்டான (ஆபத்தான) நிலையில் கிடத்தல்; lying half-dead or nearly dead, critical stage (சா.அக.).

*[குற்றுயிராய் + கிட-த்தல்.]*

**குற்றுயிரும்குறையுயிருமாக** *kurru-y-irum-kurai-y-uyirumāga,* வி.அ.(adv.) உடலை விட்டு உயிர் போகிற நிலை; of one grievously hurt trembling on the verge of death. *கத்தியால் வெட்டுப்பட்டவன் குற்றுயிரும் குறையுயிருமாகக் கிடக்கிறான்.*

*[குற்றுயிரும் + குறை + உயிருமாக.]*

**குற்றுடைவாள்** *kurrudaivāl,* பெ.(n.) திருமேனிகளின் இடைப்பட்டிகையில் செருகி ஒப்பனை செய்வதற்குரியதாகப் பொன்னால் செய்யப்பெறும் உடைய வாள்; short scimitar. *"குற்றுடைவாள் ஆசும் கண்டமும் பொன்கட்டிற்று ஒன்று" (தெ.இ.கல்.தொ.22, கல்.46).*

*[குறு (குற்று)+ உடைவாள்.]*



**குற்றுவேலம்** *kurru-vēlam,* பெ.(n.) கருவேல்; black babool - *Acacia arabica* (சா.அக.).

*[குற்று + வேலம்.]*

**குறக்கம்** *kurakkam,* பெ.(n.) நாணல்; reed, bulrush - *Saccharum spontaneum* (சா.அக.).

*[குறக்கு – குறக்கம்.]*

**குறகுளம்** *kura-kulam,* பெ.(n.) ஒருவகை மரம் (வெள்ளிலோத்திரம்); the iodh tree - *Symplocos racemosa* (சா.அக.).

*[குறகுள் – அம்.]*

**குறங்கொன்றகம்** *kuraṅ-konṟagam,* பெ.(n.) பெரு முத்தக் காசு, அதாவது பெருங்கோரைக் கிழங்கு; the root of a big variety of koray grass - *Cyperus rotundus* (சா.அக.).

*[குறும் – கொன்றகம்.]*

**குறஞ்சனம்** *kurañjaṉam,* பெ.(n.) வெண்காரம் என்னும் மருந்துச் சரக்கு வகை (மூ.அ.); borax.

*[குறு + அஞ்சனம்.]*

**குறட்டைக்கிழங்கு** *kuraṭṭai-k-kiḻaṅgu,* பெ.(n.) சவரிக் கிழங்கு; bulbous root of *kuraṭṭai* (சா.அக.).

*[குறட்டை + கிழங்கு.]*

**குறட்டைப்பழம்** *kuraṭṭai-p-paḻam,* பெ.(n.) சவரிப்பழம்; shavari fruit (சா.அக.).

*[குறட்டை + பழம்.]*

**குறத்திசன்னி** *kuratti-šaṉṉi,* பெ.(n.) 1. கறுப்புக் குண்டு மணி; a black bead of the plant of rhynchosia genus. 2. கறுப்புக் குன்றி மணி; crab's eye plant - *Abrus precatorius melanospermus* (சா.அக.).

*[குறத்தி + சன்னி.]*

**குறல்** *kural,* பெ.(n.) பாதிரி மரம்; trumpet flower tree - *Stercospermum chelonides* (சா.அக.).

*[குறு – குறல்.]*

**குறவர்கள்** *kuravargaḷ,* பெ.(n.) இந்தியா முழுவதும் வாழும் பரந்து செல் இனத்தவர்; a sect of gypsy caste who live in India.

*[குறம் (குன்று) – குறவர் + கள்.]*

**குறவன்குடைந்தகாது** *kuravaṉ-kuḍaiṉda-kādu,* பெ.(n.) துளையிடப்பட்ட காது; lobe of the ear perforated with a punch (சா.அக.).

*[குறவன் + குடைந்த + காது.]*

**குறாசம்** *kurāšam,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida - *Ferula asafoetida* (சா.அக.).

*[குறு – அசம்.]*

**குறிகக்காய்ச்சல்** *kuriga-k-kāyccal,* தொ.பெ. (vbl.n.) 1. குழம்பாய்க் காய்ச்சுதல்; boiling anything into a thick consistence. 2. சுண்டக் காய்ச்சுதல்; boiling down a liquid as decoction (சா.அக.).

*[குறு + காய்ச்சல்.]*

**குறிகநறுக்கல்** *kuriga-narukkal,* தொ.பெ. (vbl.n.) சிறுசிறு துண்டுகளாய் (பொடியாய்) நறுக்குதல்; cut into small pieces (சா.அக.).

*[குறுக + நறுக்கல்.]*

**குறிகவரிதல்** *kuriga-v-aridal,* தொ.பெ. (vbl.n.) பொடியாய்க் கத்தி கொண்டு அரிதல்; cutting into very small or minute pieces (சா.அக.).

*[குறு + அரிதல்.]*

**குறிகவிடித்தல்** *kuriga-v-iḍittal,* தொ.பெ. (vbl.n.) தூளாகும்படிச் செய்தல்; reducing to fine powder; pulverising (சா.அக.).

*[குறுக + இடித்தல்.]*

**குறிகன்னி** *kuri-kaṉṉi,* பெ.(n.) சிறு துவரை; a small kind of dholl - *Dolichos genus* (சா.அக.).

*[குறு – கன்னி.]*

**குறிகு** *kurigu,* பெ.(n.) 1. குறிஞ்சா; clustered gaetnera - *Hiptage madablota.* 2. குறுக்கத்தி; glossy long leaved, fig - *Ficus tjakela.* 3. கல்ஆல்; stone banyan tree - *Ficus infextoria* (சா.அக.).

*[குறுஞ்சி – குறுகு.]*

**குறிகொள்ளு-தல்** *kuri-kollu-,* 16 செ.கு.வி. (v.i.) 1. அடையாளத்தைப் பெற்றிருத்தல்; posessing symptoms as in diseases (சா.அக.).2. மனதில் இருத்துதல்; to have in mind, to take in the consideration.

*[குறி + கொள்ளு-தல்.]*

**குறிசுடு-தல்** *kuri-šudu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. குறி தவறாமல் துமுக்கியால் சுடுதல்; to shoot without missing the mark. 2. மாட்டுக்குச் சூடு வைத்தல்; to brand marks upon cattle (செ.அக.).

*[குறி + சுடு-.]*

சிற்றூர்களில் ஊர் மாடுகளை மந்தையாக ஓட்டிச் சென்று மேய விடுவதற்கு ஊர் பொது ஆள் ஒருவர் அமர்த்தப்படுவார். தத்தம் மாடுகளை இனங் காண்பதற்கு மாட்டின் மீது சூடு வைத்து அடை யாளப்படுத்துவர்.

**குறிஞ்சிகா** *kuriñjigā*, பெ. (n.) பூவந்திக் கொட்டை; soap-nut (சா.அக.).

**மறுவ.** பூந்திக்கொட்டை

**குறிஞ்சிக்கருப்பொருள்** *kuriñji-k-karu-p-poruḷ*, பெ. (n.) குறிஞ்சி நிலத்தின் தன்மையும் மலைபடு பொருள்களும்; nature and properties peculiar to a hilly tract and its soil (சா.அக.).

*[குறிஞ்சி + கரு + பொருள்]*

குறிஞ்சி நிலத்தின் கருப்பொருள்கள் :

தெய்வம் – முருகக் கடவுள்

உயர்ந்தோர் –பொருப்பன், குறவன், குறத்தி

தாழ்ந்தோர் – கானவர்

புள் – கிளி, மயில்

விலங்கு – அரிமா, புலி

ஊர் – சிறுகுடி

நீர் – அருவி, சுனை

பூ – காந்தள், வேங்கை

மரம் – சந்தனம், தேக்கு

உணவு – மூங்கிலரிசி, திணை

பறை – தொண்டகம்

யாழ் – குறிஞ்சியாழ்

பண் – குறிஞ்சி

தொழில் – வெறியாடல், தினைகாத்தல் கிழங்ககழ்தல்.

**குறிஞ்சிக்கல்நார்** *kuriñji-k-kal-nār*, பெ.(n.) மலையில் விளையும் கல்நார்; mountain fibrous asbestos - *Mountain flax* (சா.அக.).

*[குறிஞ்சி + கல் + நார்.]*

**குறிஞ்சித்தேன்** *kuriñji-t-tēn*, பெ.(n.) 12 ஆண்டுகளுக்கு ஒரு முறைப் பூக்கும் குறிஞ்சி மலரிலிருந்து தேனீக்கள் திரட்டும் மிகத் தித்திப்பான தேன் (காடுபடு தேறல்; sweet) wild or mountain honey (சா.அக.).

**மறுவ.** மலைத்தேன்

*[குறிஞ்சி + தேன்.]*

**குறிஞ்சிநிலம்** *kuriñji-nilam*, பெ.(n.) மலையும் மலை சார்ந்த நிலமும்; hilly tract (அபி.சிந்.).

*[குறிஞ்சி + நிலம்.]*

**குறித்த** *kuritta*, பெ.அ.(adj.) பற்றிய; concerning; regarding. *ஆசிரியர்களுக்கு ஊதிய உயர்வு குறித்த அறிவிப்பு இன்னும் சில நாட்களில் வெளியிடப்படும். சுற்றுப்புறச் சூழ்நிலைப் பாதுகாப்பு குறித்த கருத்தரங்கு இன்று துவங்குகிறது.*

*[குறி – குறித்த.]*

**குறிதளர்ச்சி** *kuri-taḷarcci*, பெ.(n.) ஆண் குறி எழுச்சியின்மை; inability to have an erection of the penis - *Impotentia erigendi* (சா.அக.).

*[குறி + தளர்ச்சி.]*

**குறிப்பாக** *kurippāga*, வி.அ.(adv.) முதன்மை யாக, சிறப்பாக; particularly; more specifically; especially. *நாட்டு மக்களின், குறிப்பாக கிராம மக்களின் உடல் நலத்தைக் கருத்தில் கொண்டு இத்திட்டம் துவங்கப் பட்டிருக்கிறது.*

*[குறிப்பு + ஆக]*

**குறிப்பிட்ட** *kurippiṭṭa*, பெ.அ.(adj.) 1. தேர்ந் தெடுத்த; selected; specified. *குறிப்பிட்ட*

*சில துறைகளுக்கு மட்டுமே இந்தச் சட்டம் பொருந்தும். குறிப்பிட்ட ஆட்கள் மட்டுமே தலைவரைச் சந்திக்க அனுமதிக்கப் படுவார்கள்.* 2. முன்பே தீர்மானிக்கப்பட்ட நேரம், காலம் முதலியவை; of time, period appointed. *குறிப்பிட்ட நேரத்தில் தான் மருத்துவரை நீங்கள் பார்க்க முடியும். குறிப்பிட்ட தேதியில் விண்ணப்பம் வந்து சேர வேண்டும்.*

**குறிப்பிடு-தல்** *kurippidu-,* 20 செ.கு.வி.(v.i.) ஏதேனும் ஒரு காரணம் கருதிச் சுட்டிக் காட்டுதல்; make a specific mention of indicate. *தற்கால எழுத்தாளர்களில் யார் சிறந்தவர் என்று நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்?* 2. தெரிவித்தல்; mention; point out. *நீங்கள் வெளியூர் செல்ல இருப்பதை ஏன் உங்கள் கடிதத்தில் குறிப்பிடவில்லை? தமிழ் வளர்ச்சிக்கு அனைவரும் பாடுபட வேண்டும் என்று அவர் தன் பேச்சின் போது குறிப்பிட்டார்*

*[குறிப்பு + இடு-தல்.]*

**குறிப்புமொழிகள்** *kurippu-moligal,* பெ.(n.) குறிப்பாகப் பொருளுரை நிற்கும் மொழிகள்; a word indicating a meaning by implication. *அவையாவன; ஒன்றொழி பொதுச் சொல், விகாரம், தகுதி, ஆகுபெயர், அன்மொழித் தொகை, முதற்குறிப்பு, தொகைக் குறிப்பு, வினைக் குறிப்பு, பிறவுமாம் (அபி.சிந்.).*

**குறிப்பெடு-த்தல்** *kuri-p-pedu-,* 4 செ.கு.வி. (v.i.) பேச்சு, பாடம், எதிராட்டு (விவாதம்) முதலியவற்றில் காணப்படும் முதன்மையான செய்திகளைச் சுருக்கமாக எழுதுதல்; take notes; take down; note down. *பத்திரிகை நிருபர் முதலமைச்சரின் பேச்சைக் குறிப் பெடுத்துக் கொண்டிருந்தார். கட்டுரைக் காகப் பல்வேறு புத்தகங்களைப் படித்துக் குறிப்பெடுத்திருக்கிறேன்.*

*[குறிப்பு + எடு-த்தல்.]*

**குறியாகஇரு-த்தல்** *kuriyāga-iru-,* 3 செ.கு.வி.(v.i.) மிகுந்த கருத்துடன் தீவிரமாக இருத்தல்; முனைப்பாக இருத்தல்; be intent on; be keen on. *பணம் சேர்த்து விட வேண்டும் என்பதிலேயே குறியாக இருந்தான். முன்னேறுவதில் குறியாக இரு!*

*[குறியாக + இரு-த்தல்.]*

**குறியிறையார்** *kuri-y-iraiyār,* பெ.(n.) கடைக் கழக காலத்து வாழ்ந்த பெண்பாற் புலவர்; a poetess who belonged to the last Šaṅgam. *இவர் தாம் பாடிய குறுந்தொகைப் பாடலில் 'குறியிறைப் புதல்வர்' எனக் கூறியிருத்தலால் இவருக்கு இப்பெயர் வந்தது (அபி.சிந்.).*

*முழந்தாள் இரும்பிடிக் கயந்தலைக் குழவி*
*நறவுமலி பாக்கத்துக் குறமகள் ஈன்ற*
*குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி*
*முன்னாள் இனிய தாகிப் பின்னால்*
*அவர்தினை மேய்தந் தாங்குப்*
*பகையா கின்றவர் நகைவிளை யாட்டே*

*(குறுந்.394).*

**குறியீட்டெண்** *kuri-y-itten,* பெ.(n.) பொருள்களின் விலை, வாழ்க்கைத் தரம் முதலியவற்றைக் கடந்த கால நிலையோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்காகப் பயன்படுத்தப் படும் விழுக்காடு (சதவிகித) அடிப்படை யிலான எண்முறை; price index.

*[குறியீடு + எண்.]*

**குறுக்கும்நெடுக்குமாக** *kurukkum-nedukkumāga,* வி.அ.(adv.) ஒரே திசையில் இல்லாமல் மாறி மாறி; இங்குமங்குமாக; up and down; here and there. *அவர் கூடத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண் டிருந்தார்.*

*[குறுக்கும் + நெடுக்குமாக.]*

**குறுகிய** *kuṟugiya*, பெ.அ.(adj.) 1. பரப்பளவில் அல்லது காலத்தில் குறைந்த; narrow; short. *குறுகிய சாலை, குறுகிய சந்து, குறுகிய காலப்பயிர்.* 2. தனக்குத் தெரிந்ததை மட்டும் அளவுகோலாகக் கொண்ட; parochial; narrow. *குறுகிய நோக்கம், குறுகிய கண்ணோட்டம்*

**குறுகுத்தாளி** *kuṟuguttāḷi*, பெ.(n.) தாளி வகைகளுள் ஒன்று (மலை.); hairy leaved creamy white bindweed - *Ipomaea gemella* (செ.அக.).

*[குறுகு + தாளி.]*

**குறுங்கால்** *kuṟuṅgāl*, பெ.(n.) குள்ளங்கால்; short leg (சா.அக.).

*[குறு + கால். குறுங்கால் = நீளங்குறைந்த கால்]*

**குறுங்கீரனார்** *kuṟuṅgīraṉār*, பெ.(n.) கடைக் கழகப் புலவர்களில் ஒருவர்; one of the poets who belonged to the last Tamil academy.

உடலின் குறுமை பற்றி, குறுமுனி, குறுவழுதி என்பவற்றைப் போல இவர் பெற்றார் போலும். இவர் பாடியதாகக் குறுந்தொகை 382ஆம் பாடல் காணப்படுகிறது.

*"தண்துளிக் கேற்ற பைங்கொடி முல்லை*
*முகைதலைத் திறந்த நாற்றம் புதல்மிசை*
*பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல*
*வம்புப் பெய்யுமால் மழையே வம்பன்று*
*காரிது பருவம் ஆயின்*
*வாரா ரோநம் காத லோரே" (குறுந்.382).*

**குறுங்குடிமருதனார்** *kuṟuṅkuḍi-marutaṉār*, பெ. (n.) கடைக் கழகக் கால புலவர்; the poet who belonged to the last Šaṅgam age.

*[குறுங்குடி + மருதனார்.]*

இவரது இயற்பெயர் மருதனார். குறுங்குடியாகிய பாண்டிநாட்டு மாலிய (விஷ்ணு) தலம் இவருடைய ஊர். இவர் அகநானூற்றில் ஒரு பாடலும் (4), குறுந்தொகையில் ஒரு பாடலும் (344) பாடியுள்ளார். இவ்விருபாடலும் முல்லைத் திணையைப் பற்றியே பாடியுள்ளார். குறுந்தொகையில் இவர் பாடிய பாடலில் இருந்து "மாலை காலத்தில் வீடு திரும்பும் தாய்ப்பசுவின் வண்ணனை" படித்து மகிழத்தக்கது.

*"நோற்றோர் மன்ற தோழி திண்ணெனத்*
*தூற்றுந் துவலைப் பனிக்கடுந் திங்கட்*
*புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு*
*நிலந்தூங் கணல வீங்குமுலைச் செருத்தல்*
*பால்வார்பு குழவி உள்ளி நிரையிறந்*
*தூற்வயிற் பெயரும் புன்கண் மாலை*
*அரும்பெறற் பொருட்பிணிப் போகிப்*
*பிரிந்துறை காதலர் வரக்காண் போரே" (குறுந்.344).*

**குறுங்கை** *kuṟuṅgai*, பெ.(n.) 1. பூடுவகை; conehead, shrub - *Strobilanthes.* 2. குறிஞ்சிச் செடி வகை; square-branched conehead - *Strobilanthes Kunthianus* (செ.அக.).

**குறுங்கோழியூர்க்கிழார்** *kuṟuṅ-kōḻiyūr-kiḻār*, பெ.(n.) கழகக்காலத் தமிழ்ப் புலவர்; Tamil poet, lived in the Šaṅgam era.

*[குறுங்கோழி + ஊர் + கிழார்.]*

இவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பாடியுள்ளார். இவர் ஊர் குறுங்கோழி. இவர் வேளாண் குடியினர். இவர் பாடியதாக புறநானூற்றில் மூன்று பாடல்கள் (17, 20, 22) காணப்படுகின்றன.

*"இருமுந்நீர்க் குட்டமும்*
*வியன்ஞாலத் தகலமும்*
*வளிவழங்கு திசையும்*
*வறிதுநிலைஇய காயமும், என்றாங்*
*கவையளந் தறியினு மளத்தற் கரியை*
*அறிவு மீரமும் பெருங்க ணோட்டமும்*
*சோறு படுக்குந் தீயொடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது*
*பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே*
*திருவிலல்லது கொலைவில் லறியார்*
*நாஞ்சி லல்லது படையு மறியார்*
*திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்*

*பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு*
*வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது*
*பகைவ ருணா வருமண் ணினையே*
*அம்புதுஞ்சுங் கடியரணால்*
*அறந்துஞ்சுஞ் செங்கோலையே*
*புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்*
*விதுப்புற வறியா வேமக் காப்பினை*
*அனையை யாகன் மாறே*
*மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே" (புறநா.20).*

ஆசிரியர் குறுங்கோழியூர்கிழார் இப் பாட்டின்கண் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் செங்கோலாட்சியின் செம்மையைப் புகழ்ந்து "செம்மலே, நீ அறம் துஞ்சும் செங்கோலையுடையை; அதனால் நின்னாட்டவர் புதுப்புள் வரினும் பழம்புள் போகினும் நடுக்கம் சிறிதும் இலராய் இன்பத்திலே திளைத் திருக்கும் செம்மைப்பண்பு கருதி நின்னுயிர்க்கு ஏதேனும் ஏதம் வருமோ வென எண்ணி அன்பால் அஞ்சியிருக்கின்றனர்காண்" எனப் பாடுகிறார்.

**குறுந்தாளி** *kuṟundāḷi,* பெ.(n.) சிறுதாளி; hairy-leaved creamy white bindweed - *Ipomaea oscura alias Convolvulus gemellus* (சா.அக.).

*[குறும் + தாளி.]*

**குறுநாவல்** *kuṟu-nāval,* பெ.(n.) பொதுவாக, அளவில் சிறுகதையை விடப் பெரியதும் புதினத்தைவிடச் சிறியதுமான இலக்கிய வகை; short novel.

*[குறு + நாவல்.]*

**குறும்பா** *kuṟumpā,* பெ.(n.) ஐந்து அடியில் நகைச்சுவைத் தன்மை கொண்ட செய்யுள் வடிவம் (இலங்.); humourous five line verse with a rhyme-scheme - *limerick.*

*[குறு+ பா.]*

**குறும்பர்** *kuṟumbār,* பெ.(n.) மலையாளத்தார்; Malayalees, People of Kerala (சா.அக.).

*[குறும்பு (மலை) + ஆர்.]*

**குறும்பர்நாடு** *kuṟumbār-nāḍu,* பெ.(n.) கேரளநாடு; மலையாள நாடு; the modern Malabar (சா.அக.).

*[குறும்பர் + நாடு.]*

**குறும்புள்** *kuṟum-puḷ,* பெ.(n.) காடை; quail (சா.அக.).

*[குறு + புள்.]*



**குறுவழுதியார்** *kuṟu-vaḻutiyār,* பெ.(n.) கடைச் சங்கம் மருவிய புலவர்; the poet who belonged to the last Šaṅgam (அபி.சிந்.).

*[குறு + வழுதி.]*

**குறுவிசனம்** *kuṟu-višaṉam,* பெ.(n.) தேவையில்லாமல் மிகுதியாகக் கவலை கொள்ளுகை; gloomy state of mind, melancholy (செ.அக.).

*[குறு + Skt. விசனம்.]*

**குறுவிசாரம்** *kuṟu-višāram,* பெ.(n.) **குறுவிசனம்** பார்க்க; see *kuṟu-višaṉam* (செ.அக.).

*[குறு + Skt. விசாரம்.]*

**குறுவியர்வை** *kuṟu-viyarvai,* பெ.(n.) சிறு அளவாக உண்டாகும் வியர்வை; slight or moderate perspiration (சா.அக.).

*[குறு + வியர்வை.]*

**குறுவிழி** *kuṟu-viḻi,* பெ.(n.) அரைக் கண்; partially closed eyes (சா.அக.).

*[குறு + விழி.]*

**குறுவைநோய்** *kuṟuvai-nōy,* பெ.(n.) ஆடு, மாடுகளுக்கு உண்டாகும் தொண்டை நோய் அல்லது தொண்டை அடைப்பன்; malignant sore-throat in cattle (சா.அக.).

*[குறுவை + நோய்.]*

**குறைக்கண்ணுறங்கு-தல்** *kuṟai-k-kaṇṇuṟaṅgu-,* 9 செ.கு.வி. (v.i.) 1. கண் சொருகல்; sleeping lightly. 2. அரைக்கண் தூக்கம் கொள்ளல்; being half sleep; sleeping with eyes partially closed somnolescent (சா.அக.).

மறுவ. அரைத்தூக்கம்

*[குறை + கண் + உறங்கு.]*

**குறைகூறு-தல்** *kuṟai-kūṟu-,* 9 செ.கு.வி. (v.i.) குற்றம் சாட்டுதல்; குற்றம் சொல்லுதல்; find fault with; criticize; blame. *எல்லாவற்றுக்கும் ஏன் ஆசிரியர்களையே குறை கூற வேண்டும்? ஒருவர் மீதும் நான் குறை கூற விரும்பவில்லை.*

*[குறை + கூறு-தல்.]*

**குறைந்த** *kuṟainda,* பெ.அ.(adj.) அதிகம் இல்லாத, போதுமானதாக இல்லாத, சிறியளவு; not high; low; insufficient. *குறைந்த வாடகை. மேட்டூர் அணைக்கு குறைந்த அளவு நீர் வருகின்றது.*

**குறைந்தஅளவு** *kuṟainda-aḷavu,* பெ.(n.) மேலும் குறைக்க முடியாத அளவு; minimum. *குறைந்த அளவு ஆயிரம் பேர்களாவது கல்யாணத்திற்கு வருவார்கள்.*

**குறைந்தபட்சம்** *kuṟainda-paṭcam,* பெ.(n.) **குறைந்தஅளவு** பார்க்க; *see kuṟainda-aḷavu*

*[குறைந்த + Skt. பட்சம். த. அளவு.]*

**குறைந்தது** *kuṟaindadu,* பெ.(n.) குறைந்த அளவு; minimum. *இந்த வேலைக்குக் குறைந்தது நான்கு ஆண்டு பயிற்சி உள்ளவர் தேவை. குறைந்தது ஆறு மணி நேரமாவது தூங்க வேண்டும்.*

**குறைப்பாடு** *kuṟai-p-pāḍu,* பெ.(n.) குறைவு; defect; deficiency (சா.அக.).

*[குறைபடு – குறைப்பாடு.]*

**குறைப்பிரசவம்** *kuṟai-p-pirašavam,* பெ.(n.) தொடக்க மாதங்கள் கழிந்த பின் கருப் பையில் இருக்கும் கரு குழந்தையாக முழு வளர்ச்சியடைவதற்கு முன்பு வெளிப்படுகை, பத்து மாதத்தில் குழந்தை முழுவளர்ச்சி யடைவதற்கு முன்பே குறைவான மாதத்தில் கரு வெளியேறுகை; miscarriage after the initial months of pregnancy.

*[குறை + **Skt.** பிரசவம்.]*

**குறைப்பிராணன்** *kuṟai-p-pirāṇaṉ,* பெ.(n.) எப்பொழுதேனும் உயிர் பிரியும் என்றிருக்கும் நிலை (குற்றுயிர்); life almost extinct (செ.அக.).

மறுவ. தொண்டைக்கும் நெஞ்சுக்கும் இழுத்திக் கிடத்தல்.

*[குறை + **Skt.** பிராணன்.]*

**குறைப்பு** *kuṟaippu,* பெ.(n.) எண்ணிக்கையில் குறைகை; reduction. *படைக் குறைப்பு செய்யுமாறு வல்லரசுகளை உலக நாடுகள் கேட்டுக் கொண்டன.*

**குறைவயது** *kuṟai-vayadu,* பெ.(n.) குறுகிய வயது; short life as opposed to long life (சா.அக.).

*[குறை + வயது.]*

**குறைவலி** *kuṟai-vali,* பெ. (n.) 1. பிள்ளைப் பேற்றின் போது காணும் குறைந்த வலி; weak pain in labour. 2. நோயின் போது காணும் குறைந்த வலி; slight pain felt in diseases (சா.அக.).

*[குறை + வலி.]*

**குறைவுபடு-தல்** *kuraivu-padu-,* 20 செ.கு.வி. (v.i.) குறைவாக இருத்தல்; falling short, shortage (சா.அக.).

*[குறைவு + படு-தல்.]*

**குன்றத்தூர்** *kunrattūr,* பெ.(n.) பெரிய புராணம் இயற்றிய சேக்கிழார் பிறந்த ஊர்; birth place of Šēkkilār. *இவ்வூர் தொண்டை நாட்டிலுள்ளது (அபி.சிந்.).*

*[குன்றம் + அத்து + ஊர்.]*

**குன்றத்தூர்முதலியார்** *kunrattūr-mudaliyār,* பெ. (n.) சேக்கிழாரின் தந்தை; father of Šēkkilār (அபி.சிந்).

**குன்றம்பூதனார்** *kunram-pūdanār,* பெ.(n.) கடைக் கழக காலத்துப் புலவர்; the poet who belonged to the last Šangam. *இவர் பரிபாடலில் பாண்டி நாட்டு முருகனின் தலமாகிய திருப்பரங்குன்றத்தை மிக வருணித்திருத்தலின் இவர்க்கு இப்பெயர் வந்திருக்கலாம் (அபி.சிந்.).*

*[குன்றம் + பூதன் + ஆர்.]*

**குறோகணத்தி** *kurō-kanatti,* பெ.(n.) 1. காக்கணம்; mussell-shell creeper - *Clitoria ternatea.* 2. கொடிக் காட்டான்; sky blue blind weed; smaller morning glory - *Ipomaea hederacea* (சா.அக.).

*[குறு + உகணம் + அத்தி.]*

**குன்மசூலை** *kunma-šūlai,* பெ. (n.) செரியாமை யால் உண்டாகும் வயிற்று வலி முதலிய நோய் வகைகள் (இங்.வை.); chronic dyspepsia; glandular enlargement in the abdomen, as of the mesenteric gland, causing indigestion, colic and emaciation (செ.அக.).

*[குன்மம் + சூலை.]*

**குன்மநித்திரிஞ்சம்** *kunma-nittirińjam,* பெ.(n.) இலைக்கள்ளி; மான் செவிக்கள்ளி; leafy tree, spurge - *Euphorbia nereifolia* (சா.அக.).



**குன்மப்புரட்டு** *kunma-p-purattu,* பெ.(n.) செரியாமையால் வாந்தியுண்டாகும் வயிற்று நோய் வகை; chronic dypepsia, acute pain attending the kunmam disease causing vomiting (செ.அக.).

*[குன்மம் + புரட்டு.]*

**குன்மவல்லி** *kunma-valli,* பெ.(n.) கொடிக்கள்ளி; moon-creeper - *Sarcostemma viminale* (சா.அக.).

*[குன்ம + வல்லி.]*

**குன்மவலி** *kunma-vali,* பெ.(n.) செரியாமை காரணமாக வயிற்றில் உண்டாகும் உளைச்சல்; colic pains or gripes consequent on chronic dyspepsia (செ.அக.).

*[குன்மம் + வலி.]*

**குன்மவாயு** *kunma-vāyu,* பெ. (n.) செரியா மையுடன் இணைந்து வரும் காற்று (வாயு) நோய்த் துன்பம்; flatulency connected with chronic dyspepsia (செ.அக.).

*[குன்மம் + **Skt.** வாயு.]*

**குன்றத்தில்நயந்தசத்தி** *kunrattil-nayanda-šatti,* பெ.(n.) தாலம்ப பாடாணம்; a kind of native arsenic (சா.அக.).

**குன்றத்துச்சித்தி** *kunrattu-c-citti,* பெ.(n.) தாலம்ப பாடாணம் என்னும் பிறவி நஞ்சு வகை; a mineral poison (செ.அக.).

**குன்று-தல்** *kuṉṟu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. மேனி குன்றல்; being diminished in lustre or beauty. 2. குறைதல்; decreasing or diminishing. 3. மெலிதல்; being reduced or emaciated. 4. மனம் வாடுதல்; being dispirited in mind. 5. வளர்ச்சியடையாமை; being stunted in growth. 6. துன்பத்தால் மெலிவுறல்; growing weak with pain, grief, anguish etc. (சா.அக.).

**குன்றியனார்** *kuṉṟiyaṉār*, பெ.(n.) ஒரு புலவர்; a poet, of sangam age whose pen name couldnot be comprehend by any.

*[குன்றியன் + ஆர்.]*

இவரது பெயர்க் காரணம் விளங்கவில்லை. குறுந்தொகையில் மேலைக் கடற்கரைத் தொண்டியைச் சிறப்பித்து பாடியமையால் இவர் சேர நாட்டவர் எனக் கொள்ளலாம். இவர் பாடியனவாக நற்றிணையில் இரண்டு (கக௭, உ௩௪௭), குறுந்தொகையில் ஆறு, அகத்தில் இரண்டெனப் பத்துப் பாடல்கள் கிடைத்துள்ளன (அபி.சிந்.).

**குன்றூர்க்கிழார்மகனார்கண்ணத்தனார்** *kuṉṟūr-k-kiḻār-magaṉār-kaṇṇattaṉār*, பெ.(n.) ஒரு புலவர்; a poet of Śaṅgam age belonging to Vellala Community.

*[குன்றூரர் + கிழார் + மகனார் + கண்ணத்தன் + ஆர்.]*

இவர் நற்றிணை ௩௩௨ ஆம் பாட்டில் குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார் (அபிசிந்.).

**குனா** *kuṉā*, பெ.(n.) குற்றம்; fault, crime (செ.அக.).

*[U.gunāh > த. குனா.]*

**குனாசகம்** *kuṉāśagam*, பெ.(n.) உடலில் பட்டால் தினவுண்டாகக் கூடிய இலையைக் கொண்ட ஒரு செடி வகை (மலை.); small climbing nettle, which cause itching in the body - *Tragia involucrata-Cannabina* (செ.அக.).

**குனாசம்** *kuṉāśam*, பெ.(n.) குன்றி என்னும் செடிவகை (மலை.); a plant called crab's eye - *Abrus precatorius* (சா.அக.).

**குனிந்த** *kuṉinda*, பெ.எ.(adj.) தலை முன் பக்கம் கவிழ்ந்த; with the head bent downward and forward (சா.அக.).

*[குனி-குனிந்த]*

**குனிந்ததலை** *kuṉinda-talai*, பெ.(n.) 1. கவிழ்ந்த தலை; bent head. 2. கீழ்ப் பார்வை; downward look. *'இந்தப் பெண் குனிந்த தலை நிமிராமல் நடந்து செல்லும் இயல்புடையவள்'.*

*[குனிந்த + தலை.]*

**குனிந்தபார்வை** *kuṉinda-pārvai*, பெ.(n.) கீழ்ப் பார்வை; downward look (சா.அக.).

*[குனிந்த + பார்வை.]*

**குனிந்தமுதுகு** *kuṉinda-mudugu*, பெ.(n.) கூன்; hunch-back (சா.அக.).

*[குனிந்த + முதுகு.]*

**குனிப்பம்** *kuṉippam*, பெ.(n.) ஆடல்; dance. *'கொம்பனைய மாதர் குனிப்பமிட' (சொக்க.உலா.73).*

*[குனி + குனிப்பம்.]*

**குனிப்பு** *kuṉippu*, பெ.(n.) செய்யுள் சந்த வகை; a peculiar rhythem in verse. *"அணியுடன்றபரி பரியுடன்றகரி கரியுடன்றகொடி" (செ.அக.).*

*[குழிப்பு→குளிப்பு→குனிப்பு.]*

**குனு** *kuṉu*, பெ.(n.) கடம்பை (கடமான்) போன்ற காட்டு விலங்கு; a wild animal which look like a kaḍampai.

*[குன் - குனு]*

இதன் கொம்புகள் நீண்டு வளைந்து மேலெழுந்திருக்கும். கழுத்தில் பிடரி மயிருண்டு. நான்கு அடி உயரம் கொண்டது. ஆப்பிரிக்கக் காடுகளில் அதிகம் காணப்படுகிறது (அபி.சிந்.).

**குனைபுல்மேய்-தல்** *kunai-pul-mēy-*, 2 செ.கு.வி. (v.i.) ஆழமாகக் கருத்தூன்றி படிக்காமல், மேலெழுந்தவாறு படித்தல்; to have a cursory or superficial study (செ.அக.).

மறுவ. நுனிப்புல் மேய்-தல்

*[குனை + புல் + மேய்-தல்.]*

**குனைவண்டு** *kunai-vandu,* பெ.(n.) பருத்தியில் விழும் பூச்சி வகை; a cotton pest (செ.அக.).

*[குனை + வண்டு.]*

**கூக்குரலாய்செய்-தல்** *kūkkuralāy-šey-*, 2 செ.கு.வி. (v.i.) வெளிப்படையாக அல்லது எல்லோரும் அறியும்படிச் செய்தல்; making no secret of one's doing (சா.அக.).

*[கூக்குரலாய் + செய்-தல்.]*

**கூச்சீரிடம்** *kūccīridam,* பெ.(n.) திருநாமப்பாலை; hill lotus, smilax macrophylla (சா.அக.).

*[குச்ச + சீரிடம்.]*

**கூட்டணி** *kūttani,* பெ.(n.) தனித்தனியான அணிகள் ஒரு திட்டத்தை அல்லது சில கொள்கைகளை மேற்கொண்டு இணைந்து செயற்பட வகுக்கப்பட்ட அமைப்பு; front of individual units or parties to work with a common programme. *ஊதிய உயர்வுக்கான ஆசிரியர் கூட்டணியின் வேலை நிறுத்தம் இன்னும் தொடர்கிறது. மூவேந்தர் கூட்டணி வைத்திருந்தனர் எனக் காரவேலனின் அத்திகும்பா கல்வெட்டு கூறுகிறது.*

*[கூட்டு + அணி.]*

**கூட்டத்தொடர்** *kūtta-t-todar,* பெ.(n.) ஒரு நாட்டின் சட்டசபை, மக்களவை (பாராளுமன்றம்) முதலியவற்றில் குறிப்பிட்ட காலம் வரை உறுப்பினர்கள் நாள்தோறும் கூடும் கூட்டம்; session of parliment, etc. *நாடாளு மன்றத்தின் மழைக்காலக் கூட்டத் தொடர் தொடங்கியது.*

*[கூட்டம் + தொடர்.]*

**கூட்டமைப்பு** *kūttamaippu,* பெ.(n.) ஒன்றுக்கு மேற்பட்ட கழகங்(சங்கங்)களின் இணைப்பு; association of more than one union, etc.; federation. *தொழிற்சங்கக் கூட்டமைப்பு இன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் மேற்கொண்டது.*

*[கூட்டு + அமைப்பு.]*

**கூட்டறிக்கை** *kūttarikkai,* பெ.(n.) நாடுகள் அல்லது அமைப்புகள் ஒன்றாகச் சேர்ந்து விடுக்கும் அறிக்கை; joint communique. *தீவிரவாதத்தை ஒடுக்க இந்தியாவும், அமெரிக்காவும் இணைந்து கூட்டறிக்கை ஒன்று வெளியிடப்பட்டுள்ளது.*

*[கூட்டு + அறிக்கை.]*

**கூட்டி** *kūtti,* பெ.(n.) 1. சேவல்; cock fowl. 2. புன்னை மொக்கு; the bud of common poon tree - *Calophyllum inophyllum.* 3. மருளி; an unknown plant. 4. கூட்டிக் கொடுப்போன்; bawd; pander (சா.அக.).

*[கூட்டு – கூட்டி.]*

**கூட்டிக்கொண்டுசெல்-தல்** *kūtti-k-kondu-šel-*, 3 செ.கு.வி. (v.i.) இருக்கிற இடத்திலிருந்து வேறு இடத்திற்கு அழைத்துக் கொண்டு செல்லுதல்; take along; bring along. *கடற்கரைக்குக் குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு சென்றேன்.*

*[கூட்டி + கொண்டு + செல்-தல்.]*

**கூட்டியரை-த்தல்** *kūtti-y-arai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மருந்துகள் சரியாகக் கலக்கும்படி அரைத்தல்; grinding medicine so that the ingredients are properly mixed up. 2. சேர்க்க வேண்டியதைச் சேர்த்து அரைத்தல்; grinding with the required or necessary ingredients (சா.அக.).

*[கூட்டி + அரை-த்தல்.]*

**கூட்டுச்சேராக்கொள்கை** *kūṭṭu-c-cērā-k-koḷgai,* பெ.(n.) வல்லரசு நாடுகளுடன் சேராமல் தனித்துச் செயற்படுவதைக் கடைபிடிக்கும் கொள்கை; principle of non-alignment.

*[கூட்டு + சேரா + கொள்கை.]*

**கூட்டுச்சேராநாடு** *kūṭṭu-c-cērā-nāḍu,* பெ.(n.) வல்லரசு நாடுகளுடன் சேராமல் நடுநிலைக் கொள்கை மேற்கொள்ளும் நாடு; non-aligned country.

**மறுவ.** அணிசேரா நாடு

*[கூட்டு + சேரா + நாடு.]*

**கூட்டுச்சொல்** *kūṭṭu-c-col,* பெ.(n.) தனிப் பொருளைத் தரும் இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சொற்களின் கூட்டு; compound word.

*[கூட்டு + சொல்.]*

**கூட்டிவாசி-த்தல்** *kūṭṭi-vāši-,* 4 செ.கு.வி. (v.i.) எழுத்துக் கூட்டிப் படித்தல்; to read letter by letter, to spell out words (செ.அக.).

M. ḷūṭṭivāyikka > த. கூட்டிவாசி

*[கூட்டி + **Skt.** வாசி-.]*

**கூட்டிவிப்பனாதி** *kūṭṭi-v-ippaṉāti,* பெ.(n.) மொச்சைக்காய்; country bean - *Dolichos* (சா.அக.).

**கூட்டுப்பண்ணை** *kūṭṭu-p-paṇṇai,* பெ.(n.) பலர் ஒன்று சேர்ந்து கூட்டுறவு முறையில் ஆளுவ (நிர்வாக)ம் செய்து மிகு ஊதிய (லாப)த்தைத் தக்கவாறு பிரித்துக் கொள்ள அமைத்த வேளாண்பண்ணை; co-operative farm. *நம் நாட்டிற்குத் தேவை கூட்டுப் பண்ணை வேளாண்மை.*

*[கூட்டு + பண்ணை.]*

**கூட்டுப்பெருங்காயம்** *kūṭṭu-p-peruṅgāyam,* பெ. (n.) பிற பொருள்களைக் கலந்து செய்த பெருங்காயம்; compound asafoetida manufactured for cooking purpose.

*[கூட்டு + பெருங்காயம்.]*

**கூட்டுமார்பு** *kūṭṭu-mārbu,* பெ.(n.) மேல் எழும்பிய மார்பு; a prominent medium ridge in the brest bone known as pigeon or chicken breast; keeled-breast - *Pectus carinatum* (சா.அக.).

*[கூட்டு + மார்பு – கூட்டுமார்பு = கூடுபோல் அமைந்த மார்பு.]*

**கூட்டுமெழுகு** *kūṭṭū-meḻugu,* பெ.(n.) பிசுபிசுப்பான பல பொருட்களைக் கூட்டிச் செய்த மெழுகு; a wax prepared by mixing several sticky, tenacious or resinous substances (சா.அக.).

*[கூட்டு + மெழுகு.]*

**கூட்டுவணிகம்** *kūṭṭu-vaṇigam,* பெ.(n.) பலர் கூடிச் செய்யும் வணிகம்; joint concern partnership in trade.

*[கூட்டு + வணிகம்.]*

**கூட்டுவர்த்தகம்** *kūṭṭu-varttagam,* பெ.(n.) **கூட்டுவியாபாரம்** பார்க்க; see *kūṭṭu-viyābāram* (செ.அக.).

*[கூட்டு + **Skt.** வர்த்தகம்.]*

**கூட்டுவாணிகம்** *kūṭṭu-vāṇigam,* பெ.(n.) **கூட்டுவணிகம்** பார்க்க; see *kūṭṭu-vaṇigam.*

*[கூட்டு + வாணிகம்.]*

**கூட்டுவியாபாரம்** *kūṭṭu-viyābāram,* பெ.(n.) **கூட்டுவணிகம்** பார்க்க; see *kūṭṭu-vaṇigam.*

*[கூட்டு + **Skt.** வியாபாரம்.]*

**கூட்டுறவுச்சங்கம்** *kūṭṭuṟavu-c-caṅgam,* பெ.(n.) பலர் ஒன்றிணைந்து உருவாக்கிய குழுமம்; co-operative society (செ.அக.).

*[கூட்டுறவு + **Skt.** சங்கம்.]*

**கூடக்குறைய** *kūḍa-k-kuṟaiya,* வி.அ.(adv.) 1. எடுத்துக் கொண்ட அளவிலிருந்து அல்லது எண்ணிக்கையிலிருந்து அதிகமாக வேறு படாமல் இருத்தல்; a little more or a little less; settle for more or less. 2. பேச்சில் சற்று எல்லை மீறுதல்; transgressing a little. *பெரியவர் கூடக் குறைய பேசிவிட்டாலும் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்.*

**கூடகண்மி** *kūḍa-kaṇmi,* பெ. (n.) வெண்தகரை; white ringworm plant - *Cassia tora* (சா.அக.).

**கூடகோபுரம்** *kūḍa-kōpuram,* பெ.(n.) பல நிலைகளை உடைய கோபுரம்; temple tower with many tiers. *மாடமாளிகை கூடகோபுரம் எல்லாம் வரலாற்றுச் சின்னங்கள்.*

*[கூட்டு + கோபுரம்.]*

**கூடசதுர்த்தம்** *kūḍa-šadurttam,* பெ.(n.) செய்யுளின் நான்காம் அடியிலுள்ள எழுத்துகள் யாவும் ஏனைய மூன்றடிகளுள்ளும் மறைந்து நிற்குமாறு பாடப்பெறுஞ் சித்திரகவி (தண்டி.95); stanza of four lines in which the letters constituting the last line are all found among those of the first three lines (செ.அக.).

*[கூடம் + **Skt.** சதுர்த்தம்.]*

**கூடசித்திரி** *kūḍa-šittiri,* பெ.(n.) சதுரக்கள்ளி; square-spurge - *Euphorbia antiquorum alias E.quadrangularis* (சா.அக.).

*[கூடம் + சித்திரி.]*

**கூடணை** *kūḍaṇai,* பெ.(n.) மயில்தோகைக் கண்; eye of the pea-cock's feather (சா.அக.).

*[கூடு + அணை.]*

**கூடப்பிறந்த** *kūḍa-p-piṟanda,* பெ.அ.(adj.) 1. ஒரே பெற்றோருக்குப் பிறந்த; உடன்பிறந்த; born of the same parents; related by blood, siblings, consanquity. *இவர் உன் பெரியப்பா பையனா? இல்லை, என் உடன்பிறந்த சகோதரன். நான் உன்னை உடன்பிறந்த சகோதரனாகவே கருதுகிறேன்.* 2. பிறந்ததிலிருந்தே உள்ள; இயல்பாகவே அமைந்த; in born. *ஏழைக்கு உதவுவது என்பது அவருக்கு கூடப்பிறந்த குணம்.*

*[கூட + பிறந்த.]*

**கூடபதம்** *kūḍa-padam,* பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

*[கூட + பதம்.]*



**கூடபலம்** *kūḍa-palam,* பெ.(n.) 1. இலந்தை; jujube tree - *Zizyphus jujuba.* 2. நீர் நிலை; water tank (சா.அக.).

*[கூட + பலம்.]*

**கூடபுட்பம்** *kūḍa-puṭpam,* பெ.(n.) 1. இலுப்பை; South Indian mahua - *Bassia longifolia.* 2. மகிழ மரம்; ape flower tree - *Mimusoo elengi* (சா.அக.).

*[கூடம் + புட்பம்.]*

**கூடபுருசன்** *kūḍa-purušaṉ,* பெ. (n.) 1. ஒற்றன்; spy. 2. கள்ள நாயகன்; clandestine lover (செ.அக.).

*[கூடு – கூட + புருசன்.]*

**கூடமைதுனம்** *kūḍa-maiduṉam,* பெ.(n.) காகம்; crow (சா.அக.).

**கூடயந்திரம்** *kūḍa-y-andiram,* பெ.(n.) 1. மறைவாக அமைத்த பொறி; secret trap. 2. வலை; net (செ.அக.).

**கூடரணம்** *kūḍaraṇam,* பெ.(n.) பொன், வெள்ளி, இரும்புகளால் செய்யப்பட்டனவும், சிவனால் எரிக்கப்பட்டனவும் விண்ணில் திரிந்தனவுமான மூன்று நகரங்கள்; the three aerial cities of gold, silver and iron burnt by Šivā. *"அழலுணச் சீறிய கூடரணம்" (பு.வெ.5, 1) (செ.அக.).*

*[கூடம் + **Skt.** அரணம்.]*

**கூடல்சங்கமம்** *kūḍal-šaṅgamam,* பெ.(n.) துங்கபத்திரை ஆறும் கிருட்டிணா ஆறும் கூடும் இடம், சாளுக்கிய நாட்டின் தென்பகுதி, விசயராசேந்திர சோழனும் சாளுக்கிய மன்னன் ஆகவ மல்லனும் போரிட்ட இடங்களுள் ஒன்று; confluence or junction of the Tuṅgabadrā and the Krisṇā. *"கூடல் சங்கமத்து ஆகவமல்லன் மகனாகிய விக்கலன் சிங்களன் என்றிவர் தம்மோடு எண்ணில் சாமந்தரைவென்று" (தெ.கல்.தொ.3, 1, பக்.33).*

*[கூடல் + **Skt.** சங்கமம்.]*

**கூடலூர்ப்பல்கண்ணனார்** *kūḍalūr-p-pal-kaṇṇaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a Šaṅgam poet.

*[கூடலூர் + பல்கண்ணனார்.]*

இவர் நீர் நாட்டின் கணுள்ள கூடலூரினராக இருத்தல் வேண்டும். மருதத் திணையில் பாணனை மறுத்துக் கூறும் துறையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். நற்றிணை 200, 380 பாடல்களைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

*கண்ணி கட்டிய கதிர அன்னன்*
*ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி*
*யாறுகிடந் தன்ன அகனெடுந் தெருவில்*
*சாறென நுவலும் முதுவாய்க் குயவ*
*இதுவும் ஆங்கண் நுவன்றிசின் மாதோ*
*ஆம்பல் அமன்ற தீம்பெரும் பழனத்துப்*
*பொய்கை ஊர்க்குப் போவோம் ஆகிக்*
*கைகவர் நரம்பிற் பனுவற் பாணன்*
*செய்த அல்லல் பல்குவ வையெயிற்று*
*ஐதகல் அல்குல் மகளிர் இவன்*
*பொய்பொதி கொடுஞ்சொல் ஓம்புமின் எனவே*
*(நற்.200).*

**கூடவர்த்தாகி** *kūḍa-varttāgi,* பெ.(n.) பெருவழுதலை; a big variety of brinjal plant - *Solanum indicum* (சா.அக.).

*[கூட + வர்த்தாகி.]*

**கூடவற்சை** *kūḍa-v-arṡai,* பெ.(n.) தவளை; frog (சா.அக.).

**கூடவே** *kūḍavē,* இ.சொ.(part.) மேலும்; அதனோடு; along with besides. *வறுமையை அகற்றுவதற்கு வேலைவாய்ப்பு அளிக்க வேண்டும், கூடவே கல்விப் பெருக்கத்தையும் உண்டாக்க வேண்டும்.*

*[கூட + வ் + ஏ.]*

**கூடற்கிழார்** *kūḍaṟ-kiḻār,* பெ.(n.) குன்றத்தூரில் இருந்த வேளாண் குலத்தவர்; a farmer who lived in kuṉṟattūr (அபி.சிந்.).

*[கூடல் + கிழார்.]*

**கூடற்சங்கமம்** *kūḍaṟ-šaṅgamam,* பெ.(n.) துங்கபத்திரை ஆறு, கிருட்டிணா ஆற்றுடன் கூடும் இடம்; confluence or junction of the Tuṅgabatra and Kriṭṭiṇa. *"குந்தளரைக் கூடற்சங்கமத்து வென்றே" (கலிங்.புதுப்.193)*

*[கூடல் + **Skt.** சங்கமம்.]*

**கூடா-தல்** *kūḍā-,* 6 செ.கு.வி.(v.i.) 1. உயிர் நீங்கிய வெற்றுடம்பாதல்; becoming a lifeless body. 2. இறத்தல்; dying (சா.அக.).

*[கூடு + ஆதல்.]*

**கூடாகயம்** *kūḍā-kayam,* பெ.(n.) வெண் மிளகாய்; white chilli - *Capsicum frutescesns* (சா.அக.).

*[கூடு + ஆகயம்.]*

**கூடாது** *kūḍātu,* கு.வி.எ.(adv.) 1. ஒரு செயலைச் செய்யத் தடை விதிக்கும் சொல்; a prohibitive; not allowed to do something; order one not to do something. *தேர்வு முடியும் வரை நீ விளையாடப் போகக் கூடாது. இந்த மாத்திரையைத் தொடர்ந்து சாப்பிடக் கூடாது.* 2. செய்த செயலைச் செய்திருக்க வேண்டியதில்லை என்பதைத் தெரிவிக்கும் சொல்; a form of disapproval; shout not do or have done. *நீ அம்மாவிடம் அப்படிச் சண்டை போட்டிருக்கக் கூடாது.*

*[கூடு + ஆ +து.]*

**கூடிய** *kūḍiya,* இடை.(part.) ஒன்றோடு இணைந்திருக்கிற; சேர்ந்த; having in addition; with. *கணவனோடு கூடிய மனைவி.*

*[கூடு + இ + அ.]*

**கூடியவிரைவில்** *kūḍiya-viraivil,* வி.அ. (adv.) மிகக் குறுகிய காலத்தில்; at the earliest, in the immediate future. *கூடிய விரைவில் தேர்தல் நடக்கும்.*

*[கூடிய + விரைவில்.]*

**கூடிலி** *kūḍili,* பெ.(n.) புலால் தின்போன் (பிங்.); flesh eater (செ.அக.).

*[கூடு + இலி.]*

**கூடுபரிலை** *kūḍubarilai,* பெ.(n.) ஒரு பிசின் மரம்; west India copal - *Hymenaea Courbaril* (சா.அக.).

*[கூடு + பரி + இலை.]*

**கூடும்** *kūḍum,* வி.மு.(adv.) கூற்றை ஏற்றுக் கொள்வதற்கான வாய்ப்பு ஓரளவுக்காவது இருக்கிறது என்பதைத் தெரிவிக்கப் பயன்படுத்தும் ஒரு வினைமுற்று; a predicate form expressing the idea of likelihood or a possibility; may; might; could. *அவன் சொல்வது உண்மையாக இருக்கக் கூடும்.*

**கூடுமானவரையில்** *kūḍumāṉa-varaiyil,* வி.அ.(adv.) ஒன்றைச் செய்வதில் எந்த அளவு முடியுமோ அந்த அளவு; as far as possible; to the extent possible. *அவர் எனக்குக் கூடுமானவரை உதவி செய்தார். கூடுமானவரையில் எல்லோரோடும் ஒத்துப் போக வேண்டும்.*

*[கூடும் + ஆன + வகையில்.]*

**கூடைச்சாதம்** *kūḍai-c-cādam,* பெ.(n.) திருமண நடப்பில் மாப்பிள்ளை வீட்டார் தம் வீடு செல்லும்பொழுது அவர்களுக்குப் பெண் வீட்டார் அனுப்பும் சோறு முதலிய தின்பண்டம்; basketfuls of food and dainties presented by the bride's people to the bridegroom's party when the latter depart homeward (செ.அக.).

*[கூடை + சாதம்.]*

**கூடைகட்டி** *kūḍai-kaṭṭi,* பெ.(n.) வன்னியர் அல்லது பள்ளியின மக்களில் ஒரு வகையினர்; one the divisions of vanniyar or paḷḷi.

*[கூடை + கட்டி]*

**கூடைதட்டிப்பறம்பு** *kūḍai-taṭṭi-p-paṟambu,* பெ.(n.) மதுரையிலுள்ள ஓர் ஊர்; a town, in Madurai.

*[கூடை + தட்டி + பறம்பு.]*

இது திருப்பரங்குன்றத்திற்கு வடக்கே பூதங்கண்ட குளத்திற்குத் தென்கிழக்கே உள்ளது, கூடையும் தட்டிகளும் செய்த இடமாகலாம்.

**கூடைநாற்காலி** *kūḍai-nāṟkāli,* பெ.(n.) கூடை போன்ற அமைப்பில் செய்த ஒரு வகை நாற்காலி; chair with a basket-like seat.



[கூடை + நாற்காலி.] padam.

**கூடைப்பந்து** *kūḍai-p-pandu,* பெ.(n.) இரு அணியினராகப் பிரிந்து ஆடுகளத்தின் இரு புறமும் அமைக்கப்பட்டிருக்கும் கம்பத்தில் உள்ள கூடை போன்ற வளையத்தினுள் பந்தை போடும் விளையாட்டு; basket ball.

*[கூடை + பந்து.]*



**கூண்டில்ஏற்று-தல்** *kūṇḍil-ēṟṟu-,* 5 செ.கு.வி.(v.i.) உசாவ (விசார)ணைக்காக முறைமன்றத்தில் நிறுத்துதல்; put some one in the dock; bring one to the witness box for trial. *ஒழுங்காக வாடகைப் பாக்கியைத் தராவிட்டால் கூண்டில் ஏற்றிவிடுவேன்.*

*[கூண்டில் + ஏற்று-தல்.]*

**கூண்டோடு** *kūṇḍōḍu,* வி.அ. (adv.) இனம், உறவு அனைத்தோடும்; பூண்டோடு; in entirety; root and branch. *இனச் சண்டையில் கூண்டோடு அழிந்த குடும்பங்கள் உண்டு.*

*[கூண்டு + ஒடு.]*

**கூத்தடி-த்தல்** *kūttaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) விரும்பத்தகாத முறையில் ஆர்ப்பாட்டமாக நடந்து கொள்ளுதல்; create a noisy scene; behave in an unruly way. *குடித்துவிட்டு வந்து கூத்தடிக்கிறான் .*

*[கூத்து + அடி-த்தல்.]*

**கூத்தன்குதம்பை** *kūttaṉ-kudambai,* பெ. (n.) 1. காட்டுச் செவ்வந்தி; Indian wild chamomile - *Pyrethrumindicum.* 2. தேராத் தாழை; a kind ofscrew-pine. 3. மூக்குத்திக் கொடி; pointed or blunt leaved hogweed - *Boerhaavia rependa alias B. Verticillata* (சா.அக.).

*[கூத்தன் + குதம்பை.]*

**கூத்தியாள்** *kūttiyāḷ,* பெ.(n.) வைப்பாட்டி; derogatorily mistress; concubine. *காலம் முழுவதும் கூத்தியாள் வைத்திருந்தார்.*

*[கூத்து + ஆள்.]*

**கூத்தனூரப்பன்** *kūttaṉūrappaṉ,* பெ.(n.) கிருட்டிணதேவராயர் காலத்து இருந்த தமிழ்க்கவி; the poet who belonged to the kiruṭṭiṇa-tēvarāyā period (அபி.சிந்.).

*[கூத்தனூர் + அப்பன்.]*

**கூதனம்** *kūdaṉam,* பெ.(n.) இடக்கர்ச் சொல் (திவா.); indecent, obscene, terms (செ.அக.).

**கூதேகம்** *kūdēgam,* பெ.(n.) வேர்ப்பலா; trunk jack fruit - *Atrocarpus integrifolia* (சா.அக.).

**கூந்தல்வர்த்தனம்** *kūndal-varttaṉam,* பெ.(n.) கரிசாலை; eclipse plant - *Eclipta prostata* (சா.அக.).

*[கூந்தல் + வர்த்தனம்.]*

**கூந்தல்வாலி** *kūndal-vāli,* பெ. (n.) 1. குதிரைவாலிச் சம்பா; horse tail paddy.

2. குதிரைவாலிச் சாமை; horse tail millet - *Panicum verticillatum alias P.crusgalli.* 3. குதிரைவாலிப் புல்; horse tail grass - *Panicum brizoides.* 4. குதிரை வாலைப் போன்ற பூடு வகை; equisetacae family of plants - *Horse-tails* (சா.அக.).

*[கூந்தல் + வாலி. வால்→வாலி.]*

**கூந்தல்வீரிகம்** *kūndal-vīrigam,* பெ.(n.) **கெண்டைக்காரி** பார்க்க; see *keṇḍai-k-kāri* (சா.அக.).

*[கூந்தல் + வீரிகம்.]*

**கூந்தற்றைலம்** *kūndaṟ-tailam,* பெ.(n.) தலை மயிரை வளர்க்கும் எண்ணெய்; hair oil - *Pomatum* (சா.அக.).

*[கூந்தல் + **Skt.** தைலம்.]*

**கூப்பரம்** *kūpparam,* பெ.(n.) முழங்கை; elbow (சா.அக.).

**கூபக்கண்ணன்** *kūba-k-kaṇṇaṉ,* பெ.(n.) மாவலிச் சக்கரவர்த்தியின் வழி வந்த வாணனின் நண்பன்; vāṇaṉa's friend who came from Māpāli-c-cakkaravatti's dynasty (அபி.சிந்.).

*[கூபம் + கண்ணன்.]*

**கூம்பரிட்டம்** *kūm-bariṭṭam,* பெ.(n.) 1. ஆமை ஓடு; the shell of a tortoise. 2. ஆமணக்கு; castor plant (சா.அக.).

**கூம்பாதிரி** *kūmbādiri,* பெ.(n.) 1. ஒரு வகைப் பாதிரிப் பூ மரம்; a kind of trumpet-flower. 2. பூவத்தி அல்லது கொழும்பு மரம்; Ceylon oak - *Sehleichera trijuga* (சா.அக.).

*[கூம்பு + பாதிரி.]*

**கூமாகியம்** *kūmāgiyam,* பெ.(n.) தேற்றாங்கொட்டை; water clearing nut - *Strychnos Potatorum* (சா.அக.).

**கூர்கண்** *kūr-kaṇ,* பெ.(n.) பார்வை கூர்மையாக உள்ள கண்; sharp eyes (சா.அக.).

*[கூர் + கண்.]*

**கூர்சிட்டு** *kūr-šiṭṭu,* பெ.(n.) **கூறுச்சிட்டு** பார்க்க; see kūṟu-ciṭṭu (செ.அக.).

**கூர்ச்சை** *kūrccai,* பெ.(n.) தருப்பைப் புல்; sacrifical grass (சா.அக.).

**கூர்ச்சேகரம்** *kūr-c-cēgaram,* பெ.(n.) தென்னை (பிங்.); coconut palm - *Cocos nucifera* (செ.அக.).

**கூர்த்த** *kūrtta,* பெ.அ.(adj.) **கூர்ந்த** பார்க்க; see *kūrnda. கூர்த்த மதி உடையவர்.*

*[கூர் – கூர்த்த.]*

**கூர்ந்து** *kūrndu,* வி.அ.(adv.) முழுக் கவனத்தையும் செலுத்தி உற்று; keenly; intently; with rapt attention. *நாட்டிற்கு எதிரான செயல்களை அரசு கூர்ந்து கவனித்து வருகிறது.*

*[கூர் – கூர்ந்து]*

கவனி, பார், நோக்கு, கேள் போன்ற வினைகளுடன் வரும் சொல்.

**கூர்மக்கெருடமூலி** *kūrma-k-keruḍa-mūli,* பெ.(n.) வெள்ளை நாயுருவி; a Indian burr - *Achyranthes aspera* (சா.அக.).

**கூர்மசம்மாரமூர்த்தி** *kūrma-šammāra-mūrtti,* பெ.(n.) சிவனின் திருவுரு; figure of Šiva.

*[கூர்ம + சம்மாரம் + மூர்த்தி.]*

ஆமை (கூர்மம்) தோற்றரவு (அவதாரம்) கொண்ட திருமாலின் பெருமிதம் அடக்கி, ஆமையுருவின் ஓட்டினைப் பெயர்த்து மார்பணியாகக் கொண்ட சிவனது திருவுரு (அபி.சிந்.).

**கூர்மதாசர்** *kūrma-tāšar,* பெ.(n.) ஒரு திருமால் பக்தர்; a devotee of Tirumal (அபி.சிந்.).

*[கூர்மம் + தாசர்.]*

**கூர்மத்துவாதசி** *kūrma-t-tuvādaši,* பெ.(n.) ஆனி மாதத்துத் துவாதசியில் கடைபிடிக்கும்

ஒரு நோன்பு; a fast on the 12th lunar day of the Tamil month Aṉi (செ.அக.).

*[கூர்ம + Skt. துவாதசி.]*

**கூர்மபுராணம்** *kūrma-purāṇam,* பெ.(n.) பதினெண் தொன்ம (புராண)ங்களுள், திருமால் ஆமைத் தோற்றம் கொண்ட பொழுது கூறிய தொன்மம் (புராணம்); a chief toṉma, narrated by tirumal, in his incarnation as tortoise, one of patiṉeṉ-toṉmam. 2. வடமொழியிலிருந்து அதிவீரராம பாண்டியன் செய்யுள் வடிவில் தமிழிலியற்றிய நூல்; a metrical translation of the above in Tamil by Adivirarāma Pāṇḍiyaṉ (செ.அக.).

*[கூர்ம + Skt. புராணம்.]*

**கூர்மயோகம்** *kūrma-yōgam,* பெ.(n.) ஒருவன் பிறக்குங் காலத்தில், அவனுக்கு உயர்ந்த நிலையைக் கொடுக்குமாறு கோள்கள் சேர்ந்திருக்கும் ஒரு ஓகம் (யோகம்) (சங்.அக.); a peculiar conjunction of planets at the time of one's birth indicative of great success in life (செ.அக.).

*[கூர்ம + Skt. யோகம்.]*

**கூர்மன்** *kūrmaṉ,* பெ.(n.) பத்து வகையான காற்றுகளுள் இமைத்தல், விழித்தல்களைச் செய்யும் காற்று (பிங்.); the vital air of the body which causes closing and opening of eyelids, one of ten type of airs (செ.அக.).

*[கூர் – கூர்மன்.]*

**கூர்மாண்டர்** *kūrmāṇḍar,* பெ.(n.) நிரய (நரக) உலகங்களுக்குத் தலைவர்; Lord of hells. *"பாரிடப் படையுடைக் கூர்மாண்டர்" (திருவிளை.திருமணப்.82).*

*[கூர் + மாண்டர்.]*

**கூர்மாதனம்** *kūrmādaṉam,* பெ.(n.) 1. கால் மடித்து உட்காருகை; squating on the floor with the legs crossed. 2. உள்ளொடுக்கத்தின்போது (அனுஷ்டானாதிகளுக்கு) பயன்படுத்துவதும், ஆமையின் வடிவமாக அமைந்ததுமான இருக்கை வகை; wooden seat in the form of a tortoise or with the figure of tortoise on it, used for meditation. *"வில்வாதியினாற் செய்க..... கூர்மாதனம்" (சைவச.பொது.57) (செ.அக.).*

*[கூர்மம் + ஆதனம்.]*

**கூர்மாநந்தர்** *kūrmā-nandar,* பெ.(n.) ஓக பயிற்சியுடையவன்; follower of the yoga system of philosophy; adept in yogic practices (அபி.சிந்.).

**கூர்மமூர்த்தி** *kūrma-mūrtti,* பெ.(n.) திருமாலின் தோற்றரவு (அவதாரம்); incarnation of Tirumāl (அபி.சிந்.).

*[கூர்ம + மூர்த்தி.]*

**கூரத்தாண்டாள்** *kūrattāṇḍāḷ,* பெ.(n.) கூரத்தாழ்வார் மனைவி; wife of Kurattāḻvār (அபி.சிந்.).

*[கூரத்து + ஆண்டாள்.]*

**கூரத்தாழ்வார்** *kūrattāḻvār,* பெ.(n.) ஆழ்வார்களில் ஒருவர்; one of the devotees of Tirumal.

*[கூரத்து + ஆழ்வார்.]*

மறுபெயர் : வச்ச சின்னமிச்ரர், நடையாடு பதஞ்சலி, யதீந்திர சரணன்.

இவர் சோழனால் கண்ணிழந்து திருவரங்கத்தில் இருந்து பெருமாளை வழிபட்டு உடையவர் கால் நீர் பெற்று திருநாட்டுக்கு எழுந்தருளினார் (அபி.சிந்.).

**கூர்மையாளன்** *kūrmai-y-āḷaṉ,* பெ.(n.) சவர்க்காரம்; soap (சா.அக.).

*[கூர்மை + ஆளன்.]*

**கூரண்டம்** *kūrandam,* பெ.(n.) 1. கூர்மையான முட்டை; oval shaped egg. 2. பருத்த பிடுக்கு; enlarged scrotum (சா.அக.).

*[கூர் + அண்டம்.]*

**கூரன்புல்** *kūran-pul,* பெ.(n.) வரகு; little millet (சா.அக.).

*[கூரன் + புல்.]*

**கூராசாகிகம்** *kūrā-šākigam,* பெ.(n.) தேயிலை; tea (சா.அக.).

**கூராம்பாய்ச்சி** *kūrām-pāycci,* பெ.(n.) மண் கொத்துவதற்குப் பயன்படுத்தும் மரக்கருவி; a kind of pointed wooden shovel for grubbing up the earth (செ.அக.).

*[கூர் + ஆம் + பாய்ச்சி.]*

**கூரான்** *kūrān,* பெ.(n.) ஒரு வகைப் பூடு; an unknown plant (சா.அக.).

*[கூர் – கூரான்.]*

**கூரியசிரசு** *kūriya-širašu,* பெ.(n.) 1. கூர்மையான தலை; cone head; tower head. 2. உள்ளங்கால், உள்ளங்கையின் மேற்பாகம்; the upper part of the palm of the hand and the sole of the feet (சா.அக.).

*[கூரிய + **Skt.** சிரசு.]*

**கூரியசேகரம்** *kūriya-sēgaram,* பெ.(n.) தென்னை; coconut tree (சா.அக.).

**கூரைக்கணக்காயனார்** *kūrai-k-kaṇakkāyaṇār,* பெ.(n.) கடைக்கழகம் மருவிய புலவர்; the poet who belonged to the last Šangam (அபி.சிந்.).

**கூலபிந்து** *kūla-bindu,* பெ.(n.) மரவகை (சங்.அக.); strychnine-tree - *Strychnos nux-vomica* (செ.அக.).

**கூலசிங்கி** *kūla-šingi,* பெ.(n.) சிறுவழுதலை; Indian night shade - *Solanum indicum* (சா.அக.).

*[கூலி + சிங்கி.]*

**கூலிப்பட்டாளம்** *kūli-p-paṭṭāḷam,* பெ.(n.) **கூலிப்படை** பார்க்க; see *kūli-p-paḍai.*

*[கூலி + பட்டாளம்.]*

**கூலிப்படை** *kūli-p-paḍai,* பெ.(n.) பணத்திற்காக அடிதடி, கொலை முதலியன செய்யுமோர் கூட்டத்தினர்; mercenary force.

*[கூலி + படை.]*

**கூவகம்** *kūvagam,* பெ.(n.) நேர் வாளம்; true croton oil plant - *Croton tigilium* (சா.அக.).

**கூவதிரை** *kūva-tirai,* பெ.(n.) கடுகுரோகிணி; black heelebore - *Helleborus niger* (சா.அக.).

*[கூவ + திரை.]*

**கூவமூரிகம்** *kūva-mūrigam,* பெ.(n.) நாங்கில்; a plant of mesuagenus (சா.அக.).

*[கூவ + மூரிகம்.]*

**கூவலம்** *kūvalam,* பெ.(n.) 1. பல நிறமுடைய ஆம்பற் பூ; Indian water-lily of varied colours. 2. துவரை; dholl - *Dolichos* (சா.அக.).

*[கூவல் – கூவலம்.]*

**கூவத்துநாரணன்** *kūvattu-nāraṇaṇ,* பெ.(n.) கூவத்தில் புலவர்க்கும், மற்றோர்க்கும் வாரி வாரி கொடுத்து வந்த பெருஞ் செல்வந்தன்; a wealthy person, who patronized the poets, and the poors near village of koovam.

*[கூவத்து + நாரணன்.]*

**கூவழிஞ்சல்** *kūvaḻiñjal,* பெ.(n.) கொடியழிஞ்சல்; alangium creeper as distinguished from its tree (சா.அக.).

*[கூவ + அழிஞ்சில்.]*

**கூவளம்** *kūvaḷam,* பெ.(n.) கருங்குவளை; blue nelambo (சா.அக.).

*[குவளம் – கூவளம்.]*

**கூவனை** *kūvaṉai,* பெ.(n.) நல்ல பாம்பு; cobra (சா.அக.).

**கூவன்மைந்தன்** *kūvaṉ-maindaṉ,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவருள் ஒருவர்; the poet who belonged to the last Šaṅgam.

*[கூவல் + மைந்தன்.]*

இவர் பெயர் மைந்தன் என்றிருக்கக் கூடும். குறுந்தொகையில் இவர் பாடிய 'கூவற்குரலான்' எனும் வரியால் இப்பெயர் வந்தது எனக் கருதலாம் (அபி.சிந்.).

**கூவா**[1] *kūvā,* பெ.(n.) 1. **கூகை** பார்க்க; see *kūgai.* 2. ஆந்தை; owlet. 3. ஒரு வகைப் பருந்து; a species of kite. 4. கோட்டான்; a large owl - *Bubo bengalensis.*

*[கூகை – கூவா (கொ.வ.).]*

**கூவா**[2] *kūvā,* பெ.(n.) 1. கூவாமா; a farinaceous substance procured from the root of Indian arrow-root plant. 2. மாங்காய் இஞ்சி; mango ginger. 3. நிலச் சம்பங்கி; ground champauk. 4. கற்பூரக் கிச்சிலிக் கிழங்கு; long zedoary (சா.அக.).

*[கூவம் + மா.]*

**கூவாக்கட்டு** *kūvā-k-kaṭṭu,* பெ.(n.) அம்மைக் கட்டு, பொன்னுக்குவீங்கி (இலங்.); mumps (க்ரியா.).

*[கூவா + கட்டு.]*

**கூவாச்சாவல்** *kūvā-c-cāval,* பெ.(n.) இளஞ் சேவல்; young cock (சா.அக.).

*[கூவா + சாவல்.]*

**கூவுசுணங்கன்** *kūvu-cuṇaṅgaṉ,* பெ.(n.) நாய்க்குட்டி மரம்; an unknown tree (சா.அக.).

*[கூவு + சுணங்கன்.]*

**கூழ்ப்பாண்டம்** *kūḻ-p-pāṇḍam,* பெ.(n.) 1. சாம்பற் பூசணி; ash-coloured pumpkin or summer squash - *Cucurbita alba.* 2. பெருங்காயம்; asafoetida. 3. கூழ்ப் பானை; porridge pot; pap-pot (சா.அக.).

*[கூழ் + பாண்டம்.]*

**கூழ்வற்றல்** *kūḻ-vaṟṟal,* பெ.(n.) உப்பும், உறைப்பும் சேர்த்த அரிசி மாவுக் கூழைத் துணியில் சிறிது சிறிதாக ஊற்றி அல்லது அச்சால் பிழிந்து காயவைத்து எடுத்து வேண்டும் போது பொரித்துப் பயன்படுத்தும் துணை உணவு வகை; slightly salted and spiced rice flour paste distributed on a cloth in thick drops or squeezed through a press, left to dry and collected to be fried

*[கூழ் + வற்றல்.]*

**கூழங்கைத்தம்பிரான்** *kūḻaṅgai-t-tambirāṉ,* பெ. (n.) தொண்டை மண்டலத்துக் காஞ்சியில் இருந்த வேளாளர்; the peasent who live in Kāñji.

இவர் இலக்கிய, இலக்கணங்களில் வல்லவர். சில தனிப் பாடல்களும், சித்தி விநாயகர் இரட்டை மணிமாலையும் இயற்றியுள்ளார் (அபி.சிந்.).

**கூழன்கல்** *kūḻaṉ-kal,* பெ.(n.) வழவழப்பான சிறு கல்; pudding stone; loose pebbles especially those on the sea-shore; shingle (சா.அக.).

**மறுவ.** கூழாங்கல்

*[கூழன் + கல்.]*

**கூழிக்கொற்றன்** *kūḻi-k-koṟṟaṉ,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவர்களில் ஒருவர்; one of the poets who belonged to the last Šaṅgam (அபி.சிந்..).

**கூழைக்கும்பிடு** *kūḻai-k-kumbiḍu,* பெ.(n.) காரியம் நிறைவேற்றுவதற்காக உடலை நெளித்துக்கொண்டு போடும் கும்பிடு;

bowing servilely. *கூழைக் கும்பிடு போட்டே வேலை வாங்கி விட்டான்.*

*[கூழை + கும்பிடு.]*

**கூளிவாசமூலி** *kūḷivāša-mūli,* பெ.(n.) கருமத்தை; black dhatura (சா.அக.).

*[கூளிவாச(ம்) + மூலி.]*



**கூளைக்கல்** *kūḷai-k-kal,* பெ.(n.) செங்கல்; brick (சா.அக.).

*[கூளை + கல்.]*

**கூற்கேவு** *kūṟ-kēvu,* பெ.(n.) கடுகு; mustard (சா.அக.).

*[கூற் + கேவு.]*

**கூறம்**[1] *kūṟam,* பெ.(n.) 1. பாகல்; balsam pear - *Momordica Charantia.* 2. நவாச்சாரம்; chloride of ammonia. 3. சுரை; bottle gourd - *Cucurbita lagenaria.* 4. கொடிப் பாலை; cotton milk plant - *Dregea volubilis;* twining swallow wort - *Asclepias volubilis.* 5. ஊசிப் பாலை; needle-leaved swallow wort - *Oxystelina esculentum.* 6. வெட்பாலை; conessi or tellicherry bark - *Nerium anti - dysentericum* (சா.அக.).

**கூறம்**[2] *kūṟam,* பெ.(n.) ஆமை; tortoise; turtle (சா.அக.).

*[குறு – கூறம்.]*

**கூறல்**[1] *kūṟal,* பெ.(n.) 1. நாகபாடாணம்; a kind of prepared arsenic. 2. இறகு; feather (சா.அக.).

*[குறு – குறல் – கூறல்.]*

**கூறல்**[2] *kūṟal,* பெ.(n.) ஆமை; tortoise; turtle (சா.அக.).

*[குறு + கூறல்.]*

**கூறாகிவேம்பு** *kūṟāgi-vēmbi,* பெ.(n.) நில வேம்பு; ground neem - *Justiela Paniculata* (சா.அக.).

*[கூறாகி + வேம்பு.]*

**கூற்றங்குமரனார்** *kūṟṟaṅ-kumaraṉār,* பெ.(n.) சங்கப் புலவர்களுள் ஒருவர்; a poet, belong to Šaṅgamage.

முகம்புகு கிளவி பாடியவரில் ஒருவர். நற்றிணை 244ஆம் பாடலில் குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கூறுகம்** *kūṟugam,* பெ.(n.) எள்; a kind of gingelly seed (சா.அக.).

**கூறுச்சீட்டு** *kūṟu-c-cīṭṭu,* பெ.(n.) பங்கு ஆவணம் (பாகப் பிரிவினைப் பத்திரம்); deed of partition (செ.அக.).

*[கூறு + சீட்டு.]*

**கூனத்தை** *kūṉattai,* பெ.(n.) ஏலம்; cardamon (சா.அக.).

**கூனம்** *kūṉam,* பெ.(n.) ஏலரிசி; seeds of cardamon (சா.அக.).

**கூனயிக்குடையாள்** *kūṉaiyi-k-kuḍaiyāḷ,* பெ.(n.) 1. இலைக்கள்ளி, கள்ளி வகை; five-tubercled spurge - *Euphorbia nerifolia.* 2. கானாங்கள்ளி; spiral five-tubercled spurge - *Euphorbia nivulia* (சா.அக.).

**கூனலன்**[1] *kūṉalaṉ,* பெ.(n.) 1. நத்தை; snail. 2. நாரை; carmorant, stork (சா.அக.).

**கூனலன்**[2] *kūṉalaṉ,* பெ.(n.) கூனில்லாதவன்; one free from crookedness (சா.அக.).

**கூனலாயிரு-த்தல்** *kūṉalāi-y-iru-,* 3 செ.கு.வி. (v.i.) முதுகு வளைந்து இருத்தல்; being crooked; being hunch, baeked (சா.அக.).

*[கூனலாய் + இரு-த்தல்.]*

**கூனற்கிழவி** *kūṉaṟ-kiḻavi,* பெ.(n.) முதுகு வளைந்த கிளவி; an old woman with a crooked back (சா.அக.).

மறுவ. கூனி

*[கூனல் + கிழவி.]*

**கூனிக்குறுகு-தல்** *kūṉi-k-kuṟugu-,* 3 செ.கு.வி. (v.i.) முதுகு வளைந்து உடம்பு சிறுத்தல்; becoming hunched - backed and short in stature (சா.அக.).

*[கூனி + குறுகு-தல்.]*

**கூனிக்கெண்டை** *kūṉi-k-keṇḍai,* பெ.(n.) சிறு கெண்டை மீன்; small crap fish - *Cyprinus fimbriatus* (சா.அக.).

*[கூனி + கெண்டை.]*



**கூனிதாரன்** *kūṉidāraṉ,* பெ.(n.) கொலையாளி; killer, murderer (செ.அக.).

**கூனிப்பார்-த்தல்** *kūṉi-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) குனிந்து பார்த்தல்; looking at a thing stooping (சா.அக.).

*[கூனி + பார்-த்தல்.]*

**கூனிமிர்-த்தல்** *kūṉimir-,* 3 செ.கு.வி.(v.i.) முதுகின் வளைவை நிமிர்த்தல்; to correct the hunch on the back (சா.அக.).

*[கூன் + நிமிர்-த்தல்.]*

**கெக்கரிசம்** *kekkarišam,* பெ.(n.) செங்கழுநீர் (சித்.அக.); red Indian water-lily (செ.அக.).

**கெங்குபட்டர்** *keṅgu-paṭṭar,* பெ.(n.) தருமன் காட்டில் கரந்துறைந்த போது வைத்துக் கொண்ட பெயர்; name which Taruman christened himself, when he dwelt in the forest (அபி.சிந்.).

**கெசம்** *kešam,* பெ.(n.) யானை; elephant. *"கெசதுரக முதலான சதுரங்கம்" (தாயு.சித்தர்.6) (செ.அக.).*

*[Skt. gaja > த. கெசம்.]*

**கெசகன்னம்** *keša-kaṉṉam,* பெ.(n.) 1. காதாட்டும் கல்வி (வித்தை); elephant's ear, term used to denote the art of moving or waving one's in imitation of the elephant. 2. பெரு முயற்சியால் ஆக வேண்டிய செயல்; a task involving stupendous effort, Herculeam task.

**கெசகன்னிவாழை** *keša-kaṉṉi-vāḻai,* பெ.(n.) மொந்தன் வாழை (சித்.அக.); abyssinian banana (செ.அக.).

**கெசகோழகன்** *keša-kōḻagaṉ,* பெ.(n.) ஒரு வானர வீரன்; monkey soldier (அபி.சிந்.).

**கெசபூகம்** *keša-pūgam,* பெ.(n.) துவரை (சித்.அக.); dholl (செ.அக.).

**கெசமாமுட்டி** *kešamā-muṭṭi,* பெ.(n.) மரவகை (மலை.); strychnine tree - *Strychnos nux-vomica* (செ.அக.).

**கெசராசினி** *keša-rāšiṉi,* பெ.(n.) பூலா (சித்.அக.); black-berried feather foil (செ.அக.).

**கெசாசைநா** *kešāšaiņā,* பெ.(n.) கரிசலாங்கண்ணி (பிங்.); a plant growing in wet places - *Eclipta alba* (செ.அக.).

**கெசாசனை** *kešāšaņai,* பெ.(n.) அரசு (யாழ்.அக.); pipal tree (செ.அக.).

**கெட்டகேட்டுக்கு** *keṭṭakēṭṭukku,* வி.அ. (adv.) இகழ்ச்சியாக இருக்கும் மோசமான நிலை; a term used derisively to contrast what one desires with what one deserves. *இந்த ஊர் கெட்டகேட்டுக்கு விளையாட்டு அரங்கம் வேறா?.*

**கெட்டான்** *keṭṭāņ,* வி.மு.(adv.) சிறந்த எடுத்துக்காட்டையும் மிஞ்சும் வகையில் ஒன்று இருப்பதாகக் கூறும்போது சிறந்த எடுத்துக்காட்டே தன்மையில் குன்றிவிட்டது என்பதைத் தெரிவிக்கப் பயன்படுத்துவது; when the thing compared excels the best example it is used to indicate that the original is devalued; go one better than the best; outdo. *உன் திருடன் ஒப்பனை (வேஷம்) நன்றாக உள்ளது. உண்மைத் திருடன் கெட்டான்!.*

*[கெடு + ஆன்.]*

**கெட்டியாக** *keṭṭiyāga,* வி.அ.(adv.) நழுவி வந்து விடாதபடி; இறுக்கி; உறுதியாக; tightly; firmly. *முடிச்சைக் கெட்டியாகப் போடு. குழந்தை பயந்துபோய் என் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது.*

**கெட்டுவிடு-தல்** *keṭṭu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கிளை விடுதல்; to sent out branches; to ramify, branch out (செ.அக.).

*[கெட்டு + விடு-தல்.]*

**கெடி** *keḍi,* பெ.(n.) பயணத்தின் போது எருது, குதிரைகளை மாற்றும் இடம்; a location in a journey, where the horses or bulls of carriages are changed (செ.அக.).

**கெடுதோசி** *keḍu-tōši,* பெ.(n.) தீ வினையோன் (படுபாவி); heinous sinner, a term of reproach. *மாண்டா ருயிரளிக்கு மாமருந்தை வேரோடு கீண்டெறி வாரிந்தக் கெடுதோசிக ளென்பார்' (இரஷ.சரி.322) (செ.அக.).*

**கெண்டகாரணி** *keṇḍa-kāraņi,* பெ.(n.) 1. சீவகமூலி; moon-creeper *Menispermum Cordifolium.* 2. சிவதை; turpeth root - *Lpomasea turpethum* (சா.அக.).

**கெண்டபேரண்டபட்சி** *keṇḍa-pēraṇḍa-paṭci,* பெ.(n.) இருதலைப் பறவை; a monstrous and mythical two headed bird represented as holding an elephant or a serpent in its beak and in its claws (சா.அக.).

*[கண்டம் → கெண்டம் + பேரண்டம் +* ***Skt.*** *பட்சி.]*

**கெண்டைக்காரி** *keṇḍai-k-kāri,* பெ.(n.) உரோம வேங்கை; East Indian Kino alias Indian dragon's blood - *Pterocarpus marsupium* (சா.அக.).

**கெணை** *keņai,* பெ.(n.) 1. கரும்பு; sugarcane - *Saccharum officinarum.* 2. கணநோய்; a kind of a trophy in children due to rickets or tabes mesenterica. 3. திப்பிலிக் கட்டை; the root of long-pepper, piper longum. 4. திரண்ட வடிவு; cylinderical shape. 5. கால்நடைகளுக்கு ஏற்படும் நோய்; a disease attacking cattle (சா.அக.).

*[கணு + கெணை.]*

**கெத்தமார்** *kettamār,* பெ.(n.) புளிப்புத் தன்மை கொண்ட மிகப் பெரிய காய்களை யுடைய மாவகை; a mango tree that bears very big fruits sour in taste (செ.அக.).

*[கெத்து + மார்.]*

**கெந்தகக்கோலி** *kendaga-k-kōli,* பெ.(n.) தூம்பிரவாலி; an unknown plant (சா.அக.).

**கெந்தககற்பம்** *kendaga-karpam,* பெ.(n.) வில்வம்; bael tree - *Crataeva religiosa* (சா.அக.).

*[கந்தக + கற்பம்.]*

**கெந்தகத்தைத்தைலமாக்கி** *kendagattai-t-tailamākki,* பெ.(n.) 1. காட்டுக்கருணை; a species of forest elephant-yam referred to in the siddhars science. 2. இரும்பிலி; box leaved satin ebony - *Maba buxifolia.* 3. ஒட்டொட்டி; a kind of grass with prickly seeds which stick to the clothes - *Desmochacta attopurpurea.* 4. சங்கங் குப்பி; smooth volkameri - *Cleodendron inerme.* 5. பேய்க் கடலை; bitter bengal gram (சா.அக.).

*[கந்தகத்தை – கெந்தகத்தை +* ***Skt.*** *தைலம் + ஆக்கி.]*

**கெந்தகநரணி** *kendaga-narani,* பெ.(n.) பேரரத்தை; greater galangal - *Alpinia galangal* (சா.அக.).

**கெந்தகமாஞ்சில்** *kendaga-māñjil,* பெ.(n.) **கெந்தகமாஞ்சிலி** பார்க்க; see *kendaga-māñjili* (சா.அக.).

**கெந்தகமிஞ்சிதம்** *kendaga-miñjidam,* பெ.(n.) நாகதாளிக் கள்ளி; many sined prickly pear - *Opuntia spinosissima* (சா.அக.).

**கெந்தசாரஞ்சம்** *kenda-šārañjam,* பெ.(n.) சந்தனம்; sandal (சா.அக.).

**கெந்தபுட்பபத்திரி** *kenda-putpa-pattiri,* பெ.(n.) துளசி; holy basil - *Ocimum sanctum* (சா.அக.).

**கெந்தபொடி** *kenda-podi,* பெ.(n.) குளியலுக்குப் பயன்படுத்தும் ஒருவகை நறுமணப் பொடி; aromatic powder used in bath. *"மடவா யுன்றனுக்குக் கெந்த பொடியேன்" (தனிப்பா.1, 88, 173) (செ.அக.).*

*[கந்தம்→கெந்தம் + பொடி.]*

**கெந்தரசம்** *kenda-rašam,* பெ.(n.) நறும் பிசின்; fragrant resin (சா.அக.).

*[கெந்தம் +* ***Skt.*** *ரசம்.]*

**கெந்தரத்தியாதி** *kendarattiyāti,* பெ.(n.) சிவப்புச் செவ்வந்தி அல்லது சிவப்புச் சாமந்தி; red chamomile - *Chrysanthemum indicum* (சா.அக.).

**கெந்தனம்** *kendanam,* பெ.(n.) ஒரு வகைப் பூடு (மலை.); coromandal gendarussa - *Justicia procumbens* (செ.அக.).

*[கந்து – கந்தனம் – கெந்தனம்.]*

**கெந்தனாகுலியம்** *kendanā-kuliyam,* பெ.(n.) கருப்பு மிளகுச் செடியின் வேர் (செவ்வியம்); root of black pepper plant - *Piper nigrum* (சா.அக.).

*[கந்தனம் + குலியம்.]*

**கெந்தனோபிதம்** *kendanōbidam,* பெ.(n.) பரம்பை; Indian mesquit or Arjuna's penance tree - *Prosopis spicigera* (சா.அக.).

**கெந்தாளியாட்சி** *kendāli-y-ātci,* பெ.(n.) பாலிருள் செடி; a kind of plant (சா.அக.).

**கெந்தாளிரோகம்** *kendāli-rōgam,* பெ.(n.) செரியாமையால் ஏற்படக்கூடிய வயிற்று வலி முதலிய வயிறு குறித்த நோய் (குன்ம நோய்); gastritis (செ.அக.).

*[குந்து + கெந்து கெந்தாளி +* ***Skt.*** *ரோகம்.]*

**கெந்திகபாளை** *kendiga-pālai,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை (சித்.அக.); worm killer (செ.அக.).

**கெந்தியதைசுத்தியாக்கி** *kendi-yadai-šutti-y-ākki,* பெ.(n.) ஆற்று முள்ளங்கி; சுவற்று முள்ளங்கி; wild country radish, wall radish - *Blumea aurita* (சா.அக.).

**கெந்திரதூதிசம்** *kendira-tūdišam,* பெ.(n.) பெரு வழுதலை; brinjal of a larger species - *Solanum indicum* (சா.அக.).

**கெந்திவிருட்சம்** *kendi-viruṭcam,* பெ.(n.) முன்னை; sbinous fire brand teak - *Premna integrifolia* (சா.அக.).

*[கந்தி + விருட்சம்.]*

**கெந்திவிருட்சோகம்** *kendi-viruṭcōgam,* பெ.(n.) முன்னை மரப்பொது (சங்.அக.); fire brand teak - *Premna* (செ.அக.).

**கெபூரமயம்** *kepūra-mayam,* பெ.(n.) கொடி மாதுளை; lemon citron - *Limonimedica* (சா.அக.).

**கெராசி** *kerāši,* பெ.(n.) பூலா; a tall plant of the phyllanthus genus (சா.அக.).

**கெருடக்காந்தகம்** *keruḍa-k-kāndagam,* பெ.(n.) செம்பருந்து; red kite - *Haliastur indus* (சா.அக.).

*[கருட + காந்தகம்.]*

**கெருடக்கிழங்கு** *keruḍa-k-kiḻangu,* பெ.(n.) கொல்லன் கோவைக் கிழங்கு; ஆகாச கருடன் கிழங்கு; demon root; sky - root - *Corallocarpus epigea* (சா.அக.).

*[கருடன் + கிழங்கு.]*

**கெருடவாகனப்பூடு** *keruḍa-vāgaṉa-p-pūḍu,* பெ. (n.) கோபுரந் தாங்கி பூடு; coromandel chiretta - *Andrographis echioides* (சா.அக.).

**கெருடாபதி** *keruḍā-pati,* பெ.(n.) விஷ்ணு காந்தி; Vishnu basil; Vishnu plant - *Evolvulus alsinoides* (சா.அக.).

*[கலுழன் → கருடன் → கெருடன் + பதி.]*

**கெலிபிடி–த்தல்** *keli-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) பயம் உண்டாதல்; getting afraid or shocked (சா.அக.).

*[கிலி – கெலி + பிடி.]*

மறுவ. கிலிபிடித்தல்.

**கெவுதவாரனி** *kevuda-vāraṉi,* பெ.(n.) வெள்ளைக் காக்காணம்; white mussell shell creeper, *Clitorea ternatea* (சா.அக.).

*[கவுத + வாரனி.]*

**கெவுதும்பா** *kevu-tumbā,* பெ.(n.) 1. பூ கவிழ்ந்துள்ள ஒரு வகைத் தும்பைச் செடி; stooping toombay flower, *Leucas Procumbens alias Nepata Indica.* 2. மலைத் தும்பை; hill toombay, *Phlomis biflora* (சா.அக.).

*[கவிழ் + தும்பை.]*

**கெவுராசிகம்** *kevurāšigam,* பெ.(n.) 1. துளசி; holy basil, *Ocimum sanctum.* 2. கடுகு; mustard (சா.அக.).

*[காவு + ராசிகம்.]*

**கெவுனகம்** *kevuṉagam,* பெ.(n.) கணங்கன் மரம்; an unknown tree supposed to possess high virtues (சா.அக.).

**கெளிற்றுமீன்** *keḻiṟṟu-mīṉ,* பெ.(n.) கெளிறு; a kind of tumy or cat fish (சா.அக.).

*[கெளிறு + மீன்.]*

சிற்றூர்களில் ஏரி, குளம், குட்டை, கண்மாய் போன்ற நீர்நிலைகளில் இவ்வகை கெளிற்று மீன்கள் காணப்படுகிறது.



**கெளிற்றுமுள்ளி** *keḷiṟṟu-muḷḷi,* பெ.(n.) கெளிற்று மீனைப் பிடித்தற்குரிய தூண்டில்; tackle used in catching *keḷiṟṟu-mīṉ* (செ.அக.).

**கேக்குவிரை** *kēkku-virai,* பெ.(n.) சீமைச் சோம்பு செடிவகை; caraway (செ.அக.).

**கேக்கைசி** *kēkkaiśi,* பெ.(n.) தாழை; screwpine tree, *Pandanus odoratissimus* (சா.அக.).

**கேசநாகுலி** *kēśanāguli,* பெ.(n.) 1. இருசுவர் சற்பாட்சி எனும் மூலிகை; a plant said to be used in complaints arising from germs. 2. ஒரு வகை நாணற் புல்; a kind of plant (சா.அக.).

*[கேசம் + நாகுலி.]*

**கேசரமாகயம்** *kēśara-māgayam,* பெ.(n.) மகிழ மரம்; ape-flower tree, *Mimusops elengi* (சா.அக.).

**கேசராசம்** *kēśa-rāśam,* பெ.(n.) 1. கடார நாரத்தை; bigarada orange or seville orange, *Citrus aurantium.* 2. பொற்றலை; Ceylon verbesina. 3. கையாந்தகரை; eclipse plant, *Eclypta Prostrata* (சா.அக.).

*[கேசம் + ராசம்.]*

**கேசராமிலம்** *kēśa-rāmilam,* பெ.(n.) புளி மாதுளை; sour pomegranate, *Punica granatum* (சா.அக.).

*[கேசரம் + அமிலம்.]*

**கேசருகாசம்** *kēśaru-kāśam,* பெ.(n.) சிறுநீலி; a small species of indigo plant, *Indigofera tinctoria* (சா.அக.).

**கேசரோமம்** *kēśa-rōmam,* பெ.(n.) பூனைக் காலி; velvet bean, Mucana pruriens (சா.அக.).

*[கேசம் + ரோமம்.]*

**கேசவரிட்டம்** *kēśa-variṭṭam,* பெ.(n.) பூவா மரம்; a tree bearing no flowers (சா.அக.).

**கேசாகம்** *kēśāgam,* பெ.(n.) மகிழம்பூ; ape-flower; West Indian medlar, *Mimusps elengi* (சா.அக.).

**கேசாம்பு** *kēśāmbu,* பெ.(n.) வெட்டி வேர்; khus khus root, *Andropogon aromatcus* (சா.அக.).

**கேசாரங்கம்** *kēśārangam,* பெ.(n.) செவ்வந்தி; Indian Chamcmile, *Authemis nobilis* (சா.அக.).

**கேசாரிசம்** *kēśāriśam,* பெ.(n.) ஒரு வகை நாரத்தை; bitter orange, *Citrus aurantium* (சா.அக.).

**கேட்டித்தடி** *kēṭṭi-t-taḍi,* பெ.(n.) தாற்றுக் கோல்; staff or rod for driving oxen, ox-goad (செ.அக.).

*[கிட்டி + தடி.]*

**கேடாய்-த்தல்** *kēḍāy-,* 4 செ.கு.வி.(v.i.) பங்கு பிரித்தல்; to separate, effect a partition, divide (செ.அக.).

*[கின் - கீள் - கீடாய் - கேடாய்]*

**கேட்பாரில்லாமல்** *kēṭpārillāmal,* வி.அ.(adv.) **கேட்பாரற்று** பார்க்க; see *kēṭpāraṟṟu.* தெருவில் கேட்பார் இல்லாமல் ஒரு பை கிடந்தது.

*[கேட்பார் + இல்லாமல்.]*

**கேட்பாரற்று** *kēṭpāraṟṟu,* வி.அ.(adv.) கவனிப்பதற்கோ கண்காணிப்பதற்கோ உரிமை கொண்டாடுவதற்கோ யாரும் இல்லாத நிலை; without anyone to care for or claim or oversee. *கேட்பாரற்று ஊர் சுற்றித் திரிகிறாயே .*

*[கேட்பார் + அற்று.]*

**கேடயம்** *kēḍayam,* பெ.(n.) பெற்ற வெற்றி, புரிந்த அருவினை (சாதனை) முதலிய செய்தி

பொறித்த தட்டு வடிவ ஒப்பனைப் பரிசு; a memento in the form of a shield awarded to a winner or one who has done something meritorious. *போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குக் கேடயம் வழங்கப்பட்டது.*

*[கிருகு - கிடயம் - கேடயம்.]*

**கேடிலியப்பப்பிள்ளை** *kēḍiliyappa-p-piḷḷai,* பெ.(n.) தாயுமானவரின் தந்தை; father of *tāyumāṉavar* (அபி.சிந்.).

*[கேடு + இலி + அப்பன் + பிள்ளை.]*

**கேத்திரம்** *kēttiram,* பெ.(n.) 1. நற்பேறு பெற்ற இடம்; sacred place, shrine, any place of pilgrimage. *"ஞானமிக்களிக்குங் கேத்திரத்தின்" (திருவானைக். மூர்த்.4).* 2. விளைநிலம்; land, field (செ.அக.).

*[கேந்திரம் -கேத்திரம்.]*

**கேத்து** *kēttu,* பெ.(n.) வயல்; field (செ.அக.).

*[செய் (வயல்) = செய்தது - கேத்து.]*

**கேத்துவாரி** *kēttu-vāri,* பெ.(n.) புன்செய் விளைவில் குடியானவனும், அரசும் அவரவர்க்குரிய பகுதியைப் பிரித்துக் கொள்ளும் முன் கோயில்களுக்குக் கொடுக்கும் பாகம்; portion taken as temple-revenue from the gross produce of dry lands, before a division of the yield is effected between the ryot and Government (செ.அக.).

*[கேத்து+ வாரி.]*

**கேதம்விசாரி-த்தல்** *kēdam-visāri-,* செ.கு.வி.(v.i.) நடந்த துயரத்தைக் குறித்து வினவுகை; to condole with mourners (செ.அக.).

**மறுவ.** துக்கம் விசாரித்தல்

*[ஏதம்→ கேதம் + Skt. விசாரி-த்தல்.]*

**கேதுபுட்பம்** *kēṭ-puṭpam,* பெ.(n.) சாவை உண்டாக்கும் ஒரு நச்சுக் கிழங்கு; a poisonous root causing death (சா.அக.).

**கேதுவசம்** *kēdu-vašam,* பெ.(n.) இழுப்பு நோய்களைக் கட்டுப்படுத்தி, உடற்சூட்டைத் தணிக்கும் ஒரு வகைக் கொடி; a creeper found everywhere which is useful for urinary diseases and rheumatism, It is used as a Laxative and audorific.

*[கேது + வசம்.]*

இதில் மூன்று வகை உண்டு. அவை:
1. சிறுகட்டுக் கொடி (Coagulating variety);
2. பெருங்கட்டுக் கொடி (Broom Creeper);
3. கருங்கட்டுக்கொடி (Cocculus Villosus).

**கேந்தகம்** *kēndagam,* பெ.(n.) ஒரு வகைப் பூடு (மலை.); coromandel gendarussa (செ.அக.).

**கேந்துவாலிகம்** *kēndu-valigam,* பெ.(n.) புகையிலை; tobacco (சா.அக.).



**கேமசரி** *kēmašari,* பெ.(n.) சீவகன் மனைவியருள் ஒருத்தி; one of his wifes of Šīvakāṉ (அபி.சிந்.).

**கேமாசிகம்** *kēmāšigam,* பெ.(n.) பிரப்பங் கிழங்கு; water-rattan root, *Calamus rotang* (சா.அக.).

**கேலிவிருட்சம்** *kēli-viruṭcam,* பெ.(n.) கடம்பு; kadambu tree, *Eugenia racemosa* (சா.அக.).

**கேவலசுழுத்தி** *kēvala-šuļutti*, பெ.(n.) முத்தி (கேவல) நிலைக்குச் செல்லும் பொழுதும் அதன் கணின்று மீளும் பொழுதும் ஆதன் நிற்கும் நிலைகளுள் ஒன்றாகிய பொறிகள் செயலற்று உறங்கும் (சுழுத்தி) நிலை; the Šuļutti condition of the embodied soul on its way to, and from kēvalakkiḍai (செ.அக.).

*[கேவலை + சுழுத்தி.]*

**கேவலசைதந்யம்** *kēvala-šaidanyam*, பெ.(n.) ஆதன் அறிவு வடிவமாக உள்ள நிலை; condition of soul when it becomes one with the supreme knowledge. *"கேவல சைதந்யமாகிய ஆத்மாவினிடம்" (சித்.சிகா.197, 2, உரை) (செ.அக.).*

*[கேவலம் + Skt. சைதந்யம்.]*

**கேவு-தல்** *kēvu-*, செ.கு.வி.(v.i.) 1. மூச்சுத் திணறல்; breathing with difficulty as in whooping cough. 2. செருமி அழுவுதல்; crying, as a child seeking breath. 3. மூச்சு திக்குமுக்காடல்; gasping for breath or go groaning as a dying person (சா.அக.).

*[ஏவு + கேவு.]*

**கேழ்த்த** *kēļtta*, பெ.எ.(adj.) 1. நிறங் கொண்ட; bright hued. *"கேழ்த்த வடித்தாமரை" (திவ்.இயற்.3, 96).* 2. மிகுந்த; abundant. *"கேழ்த்த சீரான்" (திவ்.திருவாய்.3, 1, 7) (செ.அக.).*

*[கேழ் – கேழ்த்த.]*

**கேழ்வு** *kēļvu*, பெ.(n.) தோணிக் கூலி; freight (செ.அக.).

*[கேழ் – கேழ்வு.]*

**கேள்விக்குறி** *kēļvi-k-kuri*, பெ.(n.) 1. கேள்வித் தொடர் (வாக்கியம்) என்பதை உணர்த்த இடப்படும் கொக்கி வடிவக் குறி, கேள்வியை உள்ளடக்கிய முகக் குறி (பாவனை); in punctuation question mark gesture expressive of the desire to know the cause or possible reasons for something. *கூடி நின்ற கூட்டத்தைப் பார்த்து விட்டு ஒரு கேள்விக்குறியோடு என்னை நோக்கினார்.* 2. மனத்தில் தொக்கி நிற்கும் கேள்வி அல்லது ஐயம் (சந்தேகம்); question in one's mind; question mark over something. *இந்தத் திட்டம் குறித்த காலத்திற்குள் முடிவடையுமா என்பது கேள்விக்குறியாகத்தான் இருக்கிறது*

*[கேள்வி + குறி.]*

**கேள்விஞானம்** *kēļvi-ñāṉam*, பெ.(n.) ஒரு துறையில் முறையாகப் பயிற்சி பெறாமல், கேட்பதால் பெறும் அறிவு; knowledge gained through observation and hearing (க்ரியா.).

*[கேள்வி + Skt. ஞானம். ஞானம் = த. அறிவு.]*

**கேள்விநரம்பு** *kēļvi-narambu*, பெ.(n.) காது கேட்பதற்குக் காரணமான நரம்பு; nerve responsible for hearing (சா.அக.).

*[கேள்வி + நரம்பு.]*

**கேள்விமேற்கொடி** *kēļvi-mēṟ-koḍi*, பெ.(n.) கருங்குன்றி மணி; crab's-eye plant - *Abrus precatorius melanospermus* (சா.அக.).

**கேள்வு**[1] *kēļvu*, பெ.(n.) மூச்சத் திணறுகை; to breathe heavily; to gasp for breath, as a dying person.

*[கேள் – கேள்வு.]*

**கேள்வு**[2] *kēļvu*, பெ.(n.) 1. கடுகு வகை (பிங்.); white mustard. 2. தோணி முதலியவற்றில் ஏற்றுதற்குரிய கூலி; charge for transporting goods by sea; freight (செ.அக.).

தெ., ம., து., கேவு.

**கேளவிபந்தம்** *kēļavi-pandam*, பெ.(n.) கடலாத்தி; falcate trumpet flower, *Dolichandrone faicata* (சா.அக.).

*[கேளவி + பந்தம்.]*

**கேளாஒலி** *kēlā-oli,* பெ.(n.) காதினால் உணர முடியாததும் புதுக் கருவிகளால் பதிவு செய்யக் கூடியதுமான ஒலி; ultrasound.

*[கேள்→கேளா + ஒலி.]*

**கேளிருள்ரத்தினம்** *kēliruḷ-rattiṉam,* பெ.(n.) மாணிக்கம்; a kind of superior ruby (சா.அக.).

*[கேள் + இருள் + Skt.ரத்தினம்.]*

**கேளிவிலாசம்** *kēḷi-vilāšam,* பெ.(n.) வேடிக்கையான காலப்போக்கு; pastime, amusement (செ.அக.).

*[கேலி→கேளி + Skt. விலாசம்.]*

**கேற்று** *kēṟṟu,* பெ.(n.) சிறு நங்கூரம்; light anchor used in warping (செ.அக.).

*[சிறு – சிற்று – கேற்று.]*

**கேனங்கொண்டவன்** *kēṉaṅ-koṇḍavaṉ,* பெ. (n.) கிறுக்கன்; a lunatic (சா.அக.).

மறுவ. கோட்டி.

*[கேனம் + கொண்டவன்.]*

**கைக்கட்டிக்கொண்டு** *kaikkaṭṭi-k-koṇḍu,* வி.அ.(adv.) தடுக்கவோ, எதிர்க்கவோ செய்யாமல் சும்மா இருத்தல்; பேசாமல்; doing nothing at the time when one could intervene. *கலவரம் நடந்த போது காவலர்கள் கைகட்டிக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தார்களா? அவன் என்னை அடித்த போது நீ கைகட்டிக் கொண்டுதானே இருந்தாய்?.*

*[கை + கட்டி + கொண்டு.]*

**கைக்கட்டு**[1] *kai-k-kaṭṭu,* பெ. (n.) 1. கைகளைக் கட்டிக் கொள்கை; folding the hands. 2. கைகளில் அடிபட்டாலோ, முறிவு ஏற்பட்டாலோ மருத்துவரால் கட்டப்படும் கட்டு; bandage.

*[Ma. Kaikeṭṭu > த. கைக்கட்டு]*

*[கை + கட்டு ம. கைகெட்டு > த. கைக்கட்டு.]*

**கைக்கட்டு**[2] *kai-k-kaṭṭu,* பெ.(n.) மகளிர் கையில் அணியும் அணி வகை; ornament for the arm or waist of a women (செ.அக.).

*[Tu. Kaikaṭṭu > த. கைக்கட்டு]*

*[கை + கட்டு.]*

**கைக்கடிகாரம்** *kai-k-kaḍigāram,* பெ.(n.) மணிக்கட்டில் கட்டிக் கொள்ளும் பொழுது (நேரம்) காட்டும் கருவி; wrist watch.

*[கை + கடிகாரம்.]*

**கைக்குள்போடு-தல்** *kaikkuḷ-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) தன் விருப்பப்படி நடந்து கொள்வதற்காக, கண்காணிக்கும் அதிகாரம் உடைய நபரையோ அமைப்பையோ தன் வயப்படுத்துதல்; have someone in one's pocket. *மேலதிகாரியைக் கைக்குள் போட்டுக் கொண்டு தன் விருப்பப்படி ஆடுகிறான். தன் பணத்தால் ஊரையே கைக்குள் போட்டுக் கொண்டான்*

*[கைக்குள் + போடு-தல்.]*

**கைக்குறிநூல்** *kai-k-kuṟi-nūl,* பெ.(n.) கைவரை பார்க்கும் நூல்; palmistry; chiromancy (சா.அக.).

*[கை + குறி + நூல்.]*

**கைக்கோடாலி** *kai-k-kōḍāli,* பெ.(n.) சிறு கோடாலி; hatchet (செ.அக.).

*[கை + கோடாலி.]*



**கைகட்டி** *kaikaṭṭi,* வி.அ.(adv.) மிகவும் பணிந்து போகை; most humbly; cap in hand. *மன்னர் சிலர் ஆங்கிலேயர்களுக்குக் கைகட்டி வேலை செய்தனர்*

*[கை + கட்டி.]*

**கைகட்டிக்கிட-த்தல்** *kaikaṭṭi-k-kiḍa-,* 3 செ.கு.வி. (v.i.) நோயாளியின் இரண்டு கைகளையும் கட்டி படுக்கையிற் சேர்த்தல்; letting the patient lie on a cot witt the hands tied together or sometimes to a cot (சா.அக.).

*[கை + கட்டி + கிட-.]*

**கைகட்டிக்கொள்ளு-தல்** *kai-kaṭṭi-k-koḷḷu-,* 16 செ.கு.வி.(v.i.) 1. கைகளைக் குறுக்கே கட்டிக் கொள்ளல்; joining the arms across, a sign of respect (சா.அக.).

*[கைகட்டி + கொள்ளு-தல்]*

**கைகட்டு-தல்** *kai-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. இரண்டு கைகளைக் குறுக்காக மடித்தல்; putting or folding the hands across. 2. முறிந்த கைக்குக் கட்டுப் போடல்; bandaging the fractured hand or arm. 3. நோயாளியின் இரண்டு கைகளையும் சேர்த்துக் கட்டல்; tying the hands together (சா.அக.).

*[கை + கட்டு-தல்.]*

**கைகண்டகலை** *kai-kaṇḍa-kalai,* பெ.(n.) தாழ்ந்த மாழைகளைப் பொன்னாக்கும் முயற்சி; alchemy (சா.அக.).

மறுவ. பொன்னாக்கல்

*[கைகண்ட + கலை.]*

**கைகண்டவித்தை** *kai-kaṇḍa-vittai,* பெ.(n.) **கைகண்டகலை** பார்க்க; see *kai-kaṇḍa-kalai* (சா.அக.).

*[கைகண்ட + **Skt.** வித்தை.]*

**கைகலப்பு** *kaikalappu,* பெ.(n.) கையால் ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்ளும் சண்டை; hand-to-hand fight; scuffle. *கூட்டத்தில் கைகலப்பு ஏற்பட்டது.*

*[கை + கலப்பு.]*

**கைகாட்டு-தல்** *kai-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நோயைக் கண்டறிய வேண்டி நாடி பார்ப்பதற்காகக் கையைக் காட்டல்; stretching out the arm for the pulse to be felt. 2. சாடை காட்டுதல்; making gestures as in love. 3. கைவரையைப் பார்த்து கணியம் சொல்லும்படி கையைக் காட்டல்; showing the hand for revealing one's events in life in accordance with palmistry. 4. போகும் திசையை குறித்தல்; to pointout the direction (சா.அக.).

*[கை + கட்டு-தல்.]*

**கைகால்லுதறிநட-த்தல்** *kaikāl-l-udaṟi-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) கை கால் தடங்கல் இல்லாமல் அசைத்து நடத்தல்; walking by moving the hands and legs freely (சா.அக.).

*[கைகால் + உதறிநட-த்தல்.]*

**கைகால்வாதம்** *kai-kāl-vādam,* பெ.(n.) கை, காலுக்கு ஏற்படும் ஊதை வலி; rheumatism of the limbs (சா.அக.).

*[கைகால் + **Skt.** வாதம்.]*

**கைகாலசை-த்தல்** *kai-kāl-asai-,* 4 செ.கு.வி.(v.i.) கை கால் ஆட்டல்; moving the limbs (சா.அக.).

*[கைகால் + அசை-த்தல்.]*

**கைகாலுதைத்துக்கொள்ளு-தல்** *kai-kāl-l-udaittu-k-koḷḷu-,* 16 செ.கு.வி.(v.i.) வலிப்பு நோயால் கையையும், காலையும் உதைத்துக் கொள்ளுதல்; moving the hands and feet alternatively or in quick succession due to tonic or clonic convulsions as in epi-lepsy (சா.அக.).

*[கைகால் + உதைத்து + கொள்ளு-தல்.]*

**கைகொட்டிச்சிரி-த்தல்** *kaikoṭṭi-c-ciri-*, 4 செ.கு.வி. (v.i.) இகழ்ச்சியை வெளிப் படுத்துதல்; laugh at; mock at; deride. *ஊரே கைகொட்டிச் சிரிக்கும் அளவுக்கு நடந்து கொண்டாய்*

*[கை + கொட்டி + சிரி-த்தல்.]*

**கைகோத்துக்கொண்டு** *kai-kōttu-k-koṇḍu*, வி.எ.(adv.) வேறுபாடு இல்லாமல் இணைந்து; hand in hand; hand in glove. *கடத்தல்காரர்கள் கள்ளச் சந்தைக் காரர்களுடன் கைகோத்துக் கொண்டு ஆதாயம் தேடுகிறார்கள்.*

*[கை + கோத்து + கொண்டு.]*

**கைச்சந்திராய்** *kaiccan-tirāy*, பெ.(n.) கசப்புத் தன்மையுடைய செடி வகை; a species of bitter edible plant; Indian chick weed, *Moilugo Parviflora* (சா.அக.).

**கைச்சிகம்** *kaiccikam*, பெ.(n.) பாக்கு மரம்; areca-nut palm (சா.அக.).

**கைச்சிபம்** *kai-c-cibam*, பெ.(n.) சிறு கட்டுக்கொடி; a creeper capable of binding water (சா.அக.).

*[கைச்சி + அம்-.]*

**கைச்சிமிட்டி** *kai-c-cimiṭṭi*, பெ.(n.) ஏமாற்றுக் கலை; sleight of hand trick (சா.அக.).

*[கை + சிமிட்டி.]*

**கைசரம்** *kai-šaram*, பெ.(n.) மகிழம் பூ; ape face flower, *Mimusops elengi* (சா.அக.).

**கைசாடைகாட்டு-தல்** *kai-šāḍai-kāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) சைகை காட்டல்; moving the hand expressive of thought or feeling, as patients do with the cure in attendance (சா.அக.).

*[கை + சாடை + காட்டு-தல்.]*

**கைசிகிச்சை** *kai-šigiccai*, பெ.(n.) கை பாகமாகச் செய்யும் மருத்துவம்; நாட்டு மருத்துவம்; by experience; palliative treatment (சா.அக.).

*[கை + Skt. சிகிச்சை.]*

**கைசுழற்று-தல்** *kai-šuḻaṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) கையை மாற்றி மாற்றிச் சுற்றுதல்; whirling the hand alternatively in quick succession as in exercises for exciting circulation of blood (சா.அக.).

*[கை + சுழற்று-தல்.]*

**கைசூம்பு[1]-தல்** *kai-šūmbu-*, 5 செ.கு.வி.(v.i.) குழந்தைகள் வாயில் விரலை வைத்து சூம்புதல்; sip, suck, mumble, masticate.

*[கை + சூம்பு-தல்.]*

**கைசூம்பு[2]-தல்** *kai-šūmbudal*, பெ.(n.) கை சிறுத்தல்; diminution in the size of the hand.

*[கை + சூம்புதல்.]*

**கைசைகை** *kai-šaigai*, பெ.(n.) கைசாடை; gestures of the hand (சா.அக.).

*[கை + சைகை.]*

**கைடவன்** *kaiḍavaṉ*, பெ.(n.) திருமாலால் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்; an asura slain by Višṇu. *"மதுகைடவரும் வயிறுருகி மாண்டார்" (திவ்.இயற்.3, 66) (செ.அக.).*

**கைடிகம்** *kaiḍigam*, பெ.(n.) 1. மலை எலுமிச்சை; hill lime, *Atlantic monophylla*. 2. கசப்பு நாரத்தை; mountain lime, *Citrus medicalimonum* (சா.அக.).

**கைடிகா** *kaiḍikā*, பெ.(n.) புட்டரிசி; a kind of kangoon rice (சா.அக.).

**கைத்தறி** *kaittaṟi*, பெ.(n.) கையால் இயக்கப்படும் தறி; handloom. *கைத்தறி ஆடைகள். கைத்தறி நெசவாளர்கள்.*



[கை + தறி.]

**கைத்தாங்கலாக** *kai-t-tāṅgalāga,* வி.அ. (adv.) நடக்க முடியாத நிலையில் இருப்பவரைக் கீழே விழாத வகையில் உதவி செய்யும் பொருட்டு (ஆதரவாக)த் தாங்கிப் பிடித்தல்; throwing the hand around a person in a supporting manner. *மயங்கி விழுந்தவரைக் கைத்தாங்கலாக அழைத்துப் போய் வண்டியில் ஏற்றினார்கள்*

*[கை + தாங்கலாக.]*

**கைத்திருத்தம்** *kai-t-tiruttam,* பெ.(n.) கையால் செய்வதில் நேர்த்தியான ஒழுங்கு; deftness in doing something with the hand. *தையல் வேலையானாலும் சமையல் வேலையானாலும் பாட்டியின் கைத்திருத்தம் யாருக்கும் வராது*

*[கை + திருத்தம்.]*

**கைத்தேக்கு** *kai-t-tēkku,* பெ.(n.) சிறு தேக்கு; five creeper, *Cleodendron serratum alias C.Javanicum* (சா.அக.).

*[கை + தேக்கு.]*

**கைதட்டல்** *kai-taṭṭal,* பெ.(n.) வியப்பு, வெறுப்பு, நகைப்பு முதலியவற்றின் குறியாகக் கைதட்டுகை; to clap or strike hands together in token of defiance, triumph, derision, admiration, etc..

*[கை + தட்டல்.]*

**கைதரியம்** *kai-tariyam,* பெ.(n.) 1. வேம்பு; margosa tree, *Melia bukayan.* 2. ஒரு பூடு; a plant, *Myrica sapida* (சா.அக.).

**கைதாகு-தல்** *kaidāgu-,* 6 செ.கு.வி.(v.i.) குற்றம் புரிந்ததாகக் கருதப்படுவர் காவலரால் பிடிக்கப்படுதல்; get arrested, get imprisoned. *சுதந்திரப் போராட்டக் காலத்தில் எங்கள் ஊரில் பலர் கைதானார்கள்*

*[கைது + ஆகு-தல்.]*

**கைதாரம்** *kai-tāram,* பெ.(n.) செந்நெல்; red paddy (சா.அக.).

**கைதேர்ந்த** *kai-tērnda,* பெ.அ.(adj.) கலையில், தொழிலில் திறமையான; adept in craft, a profession etc. *சமையற்கலையில் கைதேர்ந்த ஐந்து பேரால் இந்த விண்மீன் உணவகம் நடத்தப்படுகிறது. படகு ஓட்டுவதில் கை தேர்ந்தவன்.*

*[கை + தேர்ந்த.]*

**கைந்தபழம்** *kainda-paḻam,* பெ.(n.) சோற்றுக் கற்றாழையின் பால்; the juice of aloe-pulp (சா.அக.).

*[கைந்தை + பழம்]*

**கைந்துப்போ-தல்** *kaindu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) களிம்பேறல்; forming verdigris (சா.அக.).

*[கைந்து + போ-தல்.]*

**கைந்நீரு** *kai-n-nīru,* பெ.(n.) மரகதம்; emerald (சா.அக.).

*[கை + நீரு.]*

**கைநிறைய**[1] *kai-niṟaiya,* வி.அ.(adv.) கை கொண்டளவு; handful (சா.அக.).

*[கை + நிறைய.]*

**கைநிறைய**[2] *kai-niṟaiya,* வி.அ.(adv.) தேவைக்கும் அதிகமான; of income, remuneration substantially; more than enough. *கைநிறையச் சம்பளம் வாங்கும் மாப்பிள்ளை. கை நிறையச் சம்பாதிக்கும்போது*

*உனக்கு என்ன குறை?*

*[கை + நிறைய.]*

**கைநீள்-தல்** *kai-nīḷ-*, செ.கு.வி. (v.i.) கட்டுப்பாட்டை மீறி தேவை இல்லாமல் கையால் அடித்தல்; behave intemperately where restraint is needed. *பேச்சு நடந்து கொண்டிருந்த போதே அவன் கைநீண்டு விட்டது.*

*[கை + நீள்-தல்.]*

**கைநொடி-த்தல்** *kai-nodi-*, 4 செ.கு.வி.(v.i.) செல்வ நிலைமை கெடுகை; to be reduced in circumstances, reduced to poverty. *"செட்டியார் கைநொடித்துப் போனார்" (செ.அக.).*

*[கை + நொடி-த்தல்.]*

**கைப்பக்குவம்** *kai-p-pakkuvam*, பெ.(n.) உணவு, மருந்து முதலியவற்றைப் பதமாக்கும் திறமை; hand skill of a person, to estimate the compounding of ingredients in correct form in cooking and in medicine with good aroma.

*[கை + பக்குவம்.]*

**கைப்பந்து**[1] *kai-p-pandu*, பெ.(n.) நடுவில் வலை கட்டிப் பந்தை ஓர் அணியினர் கையால் அடிக்க அதை எதிர் அணியினர் திரும்பிச் செல்லுமாறு அடித்து விளையாடும் தொய்வையால் (ரப்பர்) செய்த விளையாட்டுக் கருவி; valley-ball

*[கை + பந்து.]*



**கைப்பந்து**[2] *kai-p-pandu*, பெ.(n.) ஐந்து வகைக் கசப்புச் சுவை; five kinds of bitter.

*[கைப்பு + ஐந்து.]*

**அவையாவன :** 1. கருநொச்சி; black notchy, *Gendarussa vulgaris*. 2. வேம்பு; neem tree, *Melia azadirachta*. 3. கண்டங்கத்திரி; prickly brinjal, *Solanum xanthocarpum*. 4. சீந்தில்; moon creeperr, *Tinosora coodifoolia*. 5. பேய்ப் புடல்; wild snake gourd, *Trichosanthes cucumerina* (சா.அக.).

**கைப்பரீட்சை** *kai-p-parīṭcai*, பெ.(n.) நாடி பார்க்கை; feeling or examining the pulse (சா.அக.).

*[கை + Skt. பரீட்சை.]*

**கைப்பாவை** *kai-p-pāvai*, பெ.(n.) பாவைக் கூடத்தில் இருப்பது போல் பிறர் இயக்க இயங்கும் நிலை; puppet figuratively. *தீவிரவாதிகள் பிற நாடுகளின் கைப்பாவையாக ஆகிவிடக் கூடாது. எத்தனைக் காலம் இந்த நாடு கொடுங்கோலரின் (சர்வாதிகாரி) கைப்பாவையாக இருக்கும்.*

*[கை + பாவை.]*

**கைபிடித்துத்தூக்குதல்** *kai-piḍittu-t-tūkku-*, 5 செ.கு.வி. (v.i.) ஒருவர் கையைப் பிடித்து எழும்பச் செய்தல்; lifting one by the hand (சா.அக.).

*[கை + பிடித்து + தூக்கு-தல்.]*

**கைப்பிடித்துப்பார்-த்தல்** *kai-p-piḍittu-p-pār-*, 4 செ.கு.வி.(v.i.) 1. நாடி நடையை அறிதல்; feeling the pulse of a patient. 2. உள்ளங் கையின் கைவரையைச் சோதித்தல்; reading the lines of the palm; telling fortunes by examining the palm of the hand. 3. திறமையைச் சோதித்தல்; trying one's ability (சா.அக.).

*[கை + பிடித்து + பார்-.]*

**கைப்பிழைபாடு** *kai-p-piḻaipāḍu*, பெ.(n.)

1. கைத்தவறான குற்றம், கவனக் குறைவால் நிகழ்ந்த குற்றச் செய்கை; accidental mistake, slip of the pen.

*"நாட்டார் வேட்டைக்குப் போன இடத்திலே பள்ளி உழுக்கை நாடாழ்வான் பச்சைப் பள்ளியைக் கைப்பிழை பாடேயெய்ய" (தெ.கல்.தொ.XVII கல்.200). "சம்புரத்திற்கும் பள்ளிசெல்வன் இவ் வூரிருக்கும் பள்ளி வேணாட்டரையனை கைப்பிழையாலெய்து செத்தமையில் கைப்பிழை புகுந்தது இதுக்கு தூணாண்டார் கோயிலிலே அரை விளக்கு வைக்கச் சொல்ல" (தெ.கல்.தொ.7, கல்.68) (கல்.அகர.).*

**கைப்பிரதி** *kai-p-pirati,* பெ.(n.) 1. ஓலைச் சாவடியில் உள்ளதைப் பார்த்து தாளில் எழுதி வைத்த படி (நகல்); handwritten copy of a palm leaf manuscript. 2. கையெழுத்துப் படி (பிரதி); hand written manuscript.

*[கை + பிரதி.]*

**கைப்பொம்மை** *kai-p-pommai,* பெ.(n.) **கைப்பாவை** பார்க்க; see *kai-p-pāvai*

**கைபோட்டிழு-த்தல்** *kai-pōṭṭilu-,* 4 செ.கு.வி.(v.i.) கையை உள்ளே விட்டு இழுத்து வெளிப்படுத்துதல்; pulling out by inserting one's hand as a child from the womb (சா.அக.).

*[கை +போட்டு + இழு-த்தல்.]*

**கைப்பரசன்** *kai-p-parasaṉ,* பெ.(n.) மிக்கக் கசப்புள்ள நீல வேம்பு; ground neem or king of bitter, *Justicia Paniculata* (சா.அக.).

*[கைப்பு + அரசன்.]*

**கைபிசகாக** *kai-piśagāga,* வி.அ.(adv.) தவறுதலாக; absentmindedly, inadvertenly. *எழுதுகோலைக் கைபிசகாக எங்கோ வைத்துவிட்டேன் (க்ரியா.).*

**மறுவ.** கவனக்குறைவாக

*[கை + பிசகாக.]*

**கைபிடித்திழு-த்தல்** *kai-piḍittilu-,* 4 செ.கு.வி. (v.i.) வலியப் புணர்தல்; seducing or ravishing a woman (சா.அக.).

*[கை + பிடித்து + இழு-த்தல்.]*

**கைபிடிபத்திரம்** *kai-piḍi-pattiram,* பெ.(n.) 1. நெருங்கிய நட்பு; intimate friendship, close friendship, mutual confidence. 2. கமுக்கமான (அந்தரங்கமா)ன ஆள்; confidential servant; secret agent (செ.அக.).

*[கை + பிடி + **Skt.** பத்திரம்.]*

**கைமீறு-தல்** *kai-mīṟu-,* 5 செ.கு.வி.(v.i.) கரணியம், சிக்கல் முதலியவை கட்டுப் பாட்டுக்கு உட்படாத அல்லது சமாளிக்க முடியாத நிலையை அடைதல்; problems that exceed beyond a limit to solve. *வீட்டுச் சிக்கல் கைமீறிப் போய் விடுமோ என்று பயப்படுகிறேன்*

*[கை + மீறு-தல்.]*

**கைமுழுத்தம்** *kai-muḷuttam,* பெ. (n.) கடையில் முதல் விற்பனை (பேணி) (இலங்.); first sale of the day for cash payment as soon as the shop opens. *கடைக்காரர் இன்றைக்கு நீங்கள் தான் கைமுழுத்தம் என்றார்*

*[கை + முளுத்தம்.]*

**கைமுறி-த்தல்** *kai-muṟi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கையை ஒடித்தல்; breaking or causing fracture of the arm. 2. நெட்டி முறித்தல்; wringing the hands. 3. வருத்தத்தால் கையைப் பிசைந்து கொள்ளல்; manifesting grief by convulsive clasping of the hands (சா.அக.).

*[கை + முறி-த்தல்.]*

**கைமுறி-தல்** *kai-muri-*, 3 செ.கு.வி.(v.i.) கை தற்செயலாய் ஒடிதல்; fracture of arm or hand occuring accident ally (சா.அக.).

*[கை + முறி-தல்.]*

**கையங்கண்ணனார்** *kaiyan-kannanār*, பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவர்; the poet who belonged to the last Šangam (அபி.சிந்.).

*[கை + அம் + கண்ணன் + ஆர்.]*

**கையனார்** *kaiyanār*, பெ.(n.) யாப்பிலக்கண ஆசிரியர்களில் ஒருவர்; a Tamil scholar who wrote a treatise on prosody.

*[கையன் + ஆர்.]*

இவர் யாப்பிலக்கண நூலாசிரியர். அமுதசாகரர் செய்த காண்டிகையுரையில் இவர் செய்த யாப்பியற் சூத்திரம் ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது (அபி.சிந்.).

**கையாலாகத்தனம்** *kaiyā-l-āgāttanam*, பெ.(n.) எதிர்த்துச் செயற்பட முடியாத வலிமை குறைவான நிலை; இயலாமை; impotence. *தன்னைத் திட்டினவனைப் திட்டாமல் இருந்த தன் கையாலாகாத் தனத்தை நினைத்துக் குமைந்தான்*

*[கையால் + ஆகாத்தனம்.]*

**கையாலாகாத** *kaiyālāgāda*, பெ.அ.(adj.) தேவையான வகையில் செயல்பட இயலாத; impotent; helpless. *எதிர்க்காமல் அடங்கிப் போவதால் என்னைக் கையாலாகாத ஆள் என்று நினைத்து விட்டான்.*

*[கையால் + ஆகாத.]*

**கையாற்பிசை-தல்** *kai-y-ār-pišai-*, 3 செ.கு.வி.(v.i.) 1. கையினால் சதை அழுந்த அமுக்கி விடல்; shampooing; massaging. 2. மாவு முதலியவற்றைக் கையால் பிசைதல்; to mingle; mix with the hand.

*[கையால் + பிசை-தல்.]*

**கையில்பிடித்துக்கொடு-த்தல்** *kaiyil-piḍittu-k-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) பெண்ணை ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுத்தல்; give a girl in marriage to some one; marry off a girl. *தங்கையை யாராவது ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்த பின்பு தான் நான் எனது திருமணத்தைப் பற்றி சிந்திக்க முடியும்*

**மறுவ.** மணம் முடித்துக் கொடுத்தல்.

*[கையில் + பிடித்து + கொடு-த்தல்.]*

**கையிலாதம்** *kaiyilādam*, பெ.(n.) எண் வகை மலைகளுள் ஒன்றும், சிவன் வாழும் இடமுமான மலை (அஷ்டப். திருவரங்கத்தந். 23); mount kailas, the abode of Šiva, one of aṣṭa-kula-parvatam (செ.அக.).

**கையுங்களவுமாக** *kaiyum-kaḷavumāga*, வி.அ.(adv.) குற்றம் அல்லது தவறு செய்யும் அதே நேரத்தில்; red-handed. *தேங்காய் திருடியவன் கையும் களவுமாக மாட்டிக் கொண்டான்.*

*[கையும் + களவுமாக.]*

**கையும்மெய்யுமாக** *kaiyim-meyyumāga*, வி.அ.(adv.) **கையுங்களவுமாக** பார்க்க; see *kaiyum-kaḷavumāga.*

*[கையும் + மெய்யுமாக.]*

**கையுள்** *kaiyuḷ*, பெ.(n.) 1. கையின் உட் பக்கம்; inner side of arm or hand. 2 உள்ளங்கை; the palm (சா.அக.).

*[கை + உள்.]*

**கையெழுத்தாகு-தல்** *kaiyeḷuttāgu-*, 7 செ.கு.வி.(v.i.) ஒப்பந்தம் முதலியவை ஒப்பளிக்கப்பட்டதற்கு அடையாளமாக அவற்றில் கையெழுத்திடப்படுதல்; of deeds, agreement get signed or executed. *ஒப்பந்தம் கையெழுத்தாகி நாற்பத்தெட்டு மணி நேரத்தில் போர் நிறுத்தப்பட்டது.*

*[கை + எழுத்து + ஆகு-தல்.]*

**கையெழுத்துஇயக்கம்** *kai-y-eḻuttu-eyakkam,* பெ.(n.) கோரிக்கை அல்லது வேண்டுகோள் போன்றவற்றுக்காக ஆதரவாளர் பலரிடமிருந்தும் கையெழுத்து வாங்கும் இயக்கம்; a campaign canvassing for subscription to a petition, etc.

*[கை + எழுத்து + இயக்கம்.]*

**கையெறிகுண்டு** *kai-y-eṟi-kuṇḍu,* பெ.(n.) கையால் வீசி வெடிக்கச் செய்யும் குண்டு; hand grenade

*[கை + எறி + குண்டு.]*

**கையைப்பிசை-தல்** *kai-y-ai-p-piśai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. இக்கட்டான சூழலில் செய்வதறியாது கலங்குதல் அல்லது திகைத்தல்; be in a fix; be in a quandary. *மகளின் திருமணத்திற்குப் பணம் கிடைக் காமல் கையைப் பிசைந்து கொண்டிருந்தார்.* 2. தயக்கம், குழப்பம் முதலியவற்றைக் காட்டும் குறிப்பாகக் கையை நெரித்தல்; wring one's hands as an indication of helplessness, confusion, etc. *கையைப் பிசைந்து கொண்டிருந்தால் எப்படிக் காரியம் நடக்குமா?*

*[கையை + பிசை-தல்.]*

**கையைவிட்டு** *kaiyai-viṭṭu,* வி.அ.(adv.) தேவை (அவசியம்) இல்லையென்றாலும் விரைவை (அவசரத்தை) முன்னிட்டு; though not necessary from one's own pocket.

*[கையை + விட்டு.]*

**கைரதம்** *kairadam,* பெ.(n.) 1. ஒரு பாம்பு; a serpent. 2. ஒரு வகைச் சந்தன மரம்; a kind of sandalwood. 3. ஒரு வகைப் பூடு; a plant, *Agathotes Chirayata* (சா.அக.).

*[கைரம் - கைரதம்.]*

**கைரம்** *kairam,* பெ.(n.) காத்திகைக் கிழங்கு; November flower, *Methonica superba* (சா.அக.).

*[கய் - கை - கைரம்.]*

மறுவ. கலப்பைக் கிழங்கு

**கைரலம்** *kairalam,* பெ.(n.) **கைரவி** பார்க்க; see *kairavi* (சா.அக.).

**கைரலி** *kairali,* பெ.(n.) வாயு விளங்கம்; wind-berry climber, *Embelia ribes* (சா.அக.).

**கைரவம்** *kairavam,* பெ.(n.) அல்லி மலர் (திவா.); Indian water-lily, *Nymphaea lotus* (செ.அக.).

**கைரவாலி** *kaira-vāli,* பெ.(n.) புளிச்சைக் கீரை; sour greens, *Hibiscus Cannabinus* (சா.அக.).

*[கைரம் + வாலி.]*

**கைரவாவிகம்** *kaira-vāvigam,* பெ.(n.) புளிச்சைக்கீரை (சித்.அக.); flax (செ.அக.).

**கைரவி** *kairavi,* பெ.(n.) 1. வெந்தயம்; fenugreek, *Trigonella fenugraceum.* 2. சந்திரகாந்திப் பூ; moon-flower (சா.அக.).

**கைராட்டினம்** *kai-rāṭṭiṉam,* பெ.(n.) **கைராட்டை** பார்க்க; see *kai-rāṭṭai* (க்ரியா.).

**கைராட்டை** *kai-rāṭṭai,* பெ.(n.) கையால் சுற்றி இயக்கி நூல் நூற்கும் கருவி; a hand-operated spinning wheel

*[கை + ராட்டை.]*



**கைராத்தாசாமி** *kai-rāttā-šāmi*, பெ.(n.) 1. பிச்சைக்காரன்; begger. 2. ஒன்றுக்கும் உதவாதவன்; a good for nothing person (செ.அக.).

மறுவ: கையாலாகாதவன்

**கைராத்தினாம்** *kai-rāttiṉām*, பெ.(n.) அறக்கொடை; charitable endowment (செ.அக.).

*[கை + ராத்தினாம்.]*

**கைராதம்** *kai-rādam*, பெ.(n.) நில வேம்பு; ground neem, *Justica paniculata* (சா.அக.).

**கைரிகம்**[1] *kairigam*, பெ.(n.) பொன்னூமத்தை (சித்.அக.); purple stramony (செ.அக.).

**கைரிகம்**[2] *kairigam*, பெ.(n.) 1. காவி வண்ணம் ஊட்டப்பட்ட கல் (பிங்.); red ochre. 2. பொன் (சது.); gold (செ.அக.).

**கைரியம்** *kairiyam*, பெ.(n.) 1. நரி; jackal. 2. பொன்; gold. 3. கல்மதம்; bitumen (சா.அக.).

**கைரோகம்** *kairōgam*, பெ.(n.) கையில் ஏற்படும் நோய்கள்; diseases of the hands (சா.அக.).

*[கை + Skt. ரோகம்.]*

**கைலாசசட்டைநாதர்** *kailāša-šaṭṭai-nādar*, பெ.(n.) தமிழில் மருத்துவநூல் சிலவற்றை இயற்றிய சட்டைமுனி என்னும் சித்தர்; Šiddar author of some medical treatises in Tamil (சா.அக.).

*[கைலாசம் + சட்டை + நாதர்.]*

**கைலேஞ்சி** *kailēñji*, பெ.(n.) கைக்குட்டை (இலங்.); handkerchief

**கைவசப்படுத்து-தல்** *kaivaša-p-paḍuttu-*, 5 செ.கு.வி. (v.i.) தன் பிடிக்குக் கீழ் கொணடு வருதல்; தன் வயப்படுத்துதல்; take control of; seize. *வீட்டை அடுத்த புறம்போக்கு நிலத்தைக் கைவசப்படுத்திக் கொண்டார்.*

*[கை + வசம் + படுத்து-தல். வயம்->வசம்.]*

**கைவிசேடம்** *kai-višēḍam*, பெ.(n.) 1. கை படுவதனால் உண்டாவதாகக் கருதும் நன்மை; luckiness associated with one's hand. *"மருத்துவர்க்கோ சயங் கைவிசேடந் தன்னிலே" (அறப்.சத.33).* 2. பரிசு; present (செ.அக.).

*[கை + Skt. விசேடம்.]*

**கைவிட்டுப்போ-தல்** *kaviṭṭu-p-pō-*, 8 செ.கு.வி.(v.i.) தன் வயமாக வேண்டியது நீங்குதல், தப்பிப் போதல், நழுவுதல்; slip out of one's hands. *அந்த வேலை கைவிட்டுப் போய்விட்டது. இந்த வாய்ப்பும் கைவிட்டுப் போகாமல் இருக்க வேண்டும்.*

*[கை + விட்டு + போ-தல்.]*

**கைவிடு-தல்** *kai-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) தன்னிடம் ஒன்றை எதிர்பார்ப்பவரை ஏமாற்றம் அடையச் செய்தல்; விட்டு நீங்குதல்; let some one down; desert; forsake. *உங்களைத்தான் நம்பியிருக் கிறேன். என்னைக் கைவிட்டு விடாதீர்கள். இந்த முறையும் மழை நம்மைக் கைவிட்டு விடுமோ?.*

*[கை + விடு-தல்.]*

**கைவியர்வை** *kai-viyarvai*, பெ.(n.) கையில் அடிக்கடி உண்டாகும் வியர்வை; frequent perspiration of the hands (சா.அக.).

*[கை + வியர்வை.]*

**கைவியளம்** *kai-viyaḷam*, பெ.(n.) கைவிசேடம் பார்க்க; see *kai-višēḍam* (செ.அக.).

**கைவிளங்கம்** *kai-viḷaṅgam*, பெ.(n.) வாய் விளங்கம்; wild berry, *Embelia ribes* (சா.அக.).

*[கை + விளங்கம்.]*

**கைவித்தாரம்** *kai-vittāram,* பெ.(n.) ஒப்பனை; decoration (செ.அக.).

*[கை + Skt. வித்தாரம்.]*

**கைவீசிநட-த்தல்** *kai-viši-naḍa-,* 3 செ.குன்றாவி.(v.i.) கைகளை தாராளமாய் ஆட்டி நடத்தல்; swimming the arms freely while walking (சா.அக.).

*[கை + வீசி + நட-த்தல்.]*

**கைவைத்தியம்** *kai-vaittiyam,* பெ.(n.) சிறு நோய்த் துன்பங்கள் நீங்க மருத்துவர் உதவி இல்லாமல் வீட்டிலேயே செய்து கொள்ளும் மரபுவழி வந்த மருத்துவ முறை; home remedy.

**மறுவ.** கைமருத்துவம்

*[கை + Skt. வைத்தியம். வைத்தியம் = மருத்துவம்.]*

**கொக்கரக்கோ** *kokkarakkō,* பெ.(n.) 1. சேவல் எழுப்பும் உரத்த சத்தம்; cock-a-doodle-doo. 2. முருகக் கடவுள்; Murugan.

*[கொக்கர் + கோ ஒலிக்குறிப்பு.]*

**கொக்கறை** *kokkaṟai,* பெ.(n.) பனை, தெங்கு முதலியவற்றின் வற்றியுலர்ந்த இளமடல்; dried integument of the palmyra flower (செ.அக.).

*[குங்கு – குக்கு – கொக்கு – கொக்கறை.]*

**கொக்கிதேவர்** *kokki-tēvar,* பெ.(n.) சிவனிய (வீரசைவ) அடியவர்களில் ஒருவர்; a devotee of Lingayat sect of saivaism.

*[கொக்கி + தேவர்.]*

இவர் நந்தவனம் வைத்திருந்தார். அல்லமர் இவரிடம் வந்து நந்தவனத்தின் ஒருபுறம் தோண்டக் கட்டளையிட்டு அதில் ஒரு மனநோன்பி(யோகி) இருப்ப காட்டினார். அவரிடம் இவர் குருவம் (தீட்சை) பெற்றார் (அபி.சிந்.).

**கொக்கிறகுப்பூ** *kokkiṟagu-p-pū,* பெ.(n.) வெள்ளை மந்தாரை; shrub by white mountain ebony; crane's feather, *Bauhinia acuminata* (சா.அக.).

*[கொக்கு + இறகு + பூ.]*

**கொக்கும்பதரி** *kokkum-patari,* பெ.(n.) இலந்தை மரம்; a small thorny tree known as the common jujube, *Zizyphus jujuba* (சா.அக.).

**கொக்குமரம்** *kokku-maram,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

*[கொக்கு + மரம்.]*

**கொக்குமாநிறம்** *kokku-mā-niṟam,* பெ.(n.) சிலைமான் கல்; a kind of stone, *Agate* (சா.அக.).

*[கொக்கு + மா + நிறம்.]*

**கொங்கணதூபம்** *koṅgaṇa-tūbam,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம்; white dammer; cocony resin (சா.அக.).

**கொங்கணிவர்மன்** *koṅgaṇi-varmaṉ,* பெ.(n.) கொங்கு நாட்டவரை வெற்றி கொண்டு அந்நாட்டிற்குக் கொங்கு நாடெனப் பெயரிட்டவன்; oen who has christened the name Koṅgu, after conquering it.

*[கொங்கணி + வருமன்.]*

**கொங்காணியர்** *koṅgāṇiyar,* பெ.(n.) கொண்காணத்தில் இருந்து வந்து குடியேறியவர்கள்; the migrated people who came from koṅgāṇam.

*[கொண்கானம் – கொங்காணம் + இயர்.]*

இவர்களில் பார்ப்பனர்கள் கடை வைத்து பிழைப்பர். கொங்காணி கடைமக்கள் (சூத்திரர்) குடுமிக்காரர் எனப்படுவர் (அபி.சிந்.).

**கொங்காரகி** *koṅgāragi,* பெ.(n.) பிடங்கு நாறி; fire-brand teak, *Premna tomentosa* (சா.அக.).

**கொங்காரமம்** *koṅgāramam,* பெ.(n.) குங்கும மரம்; a tree called arnoto, *Bixa orellana* (சா.அக.).

*[கொங்கு + ஆரமம்.]*

**கொங்காரமாசு** *kongāra-māśu,* பெ.(n.) பிண்ணாக்குக் கீரை; lew's malilow, *Corchorus capuslous alias C.Clitorus* (சா.அக.).

**கொங்குவேளிர்** *kongu-vēḷir,* பெ.(n.) சிற்றரசர்களில் ஒருவரான கொங்குநாட்டு வேளாளன்; one of the petty king in Kongu-vēḷḷār.

*[கொங்கு + வேளிர்.]*

பெருங் கொடையாளியாகிய இவரது ஊர் கொங்கு நாட்டு விசயமங்கலம். அடியார்க்கு நல்லார் இவரது கொங்கு வேண்மாக்கதையைப் பாராட்டி யுள்ளார். பேராசிரியரும் இவரது நூலை எடுத் தாண்டுள்ளாராதலின் இவர் காலத்தால் முற்பட்ட வராவார். இவர் சமண சமயத்தவராக இருக்கலாம் (அபி.சிந்.).

**கொங்கைக்கட்டி** *kongai-k-kaṭṭi,* பெ.(n.) முலைக் கட்டி; mammary abscess (சா.அக.).

*[கொங்கை + கட்டி.]*

**கொச்சிக்கால்** *kocci-k-kāl,* பெ.(n.) யானைக் கால்; elephantiasis of the leg cochin leg (சா.அக.).

*[கொச்சி + கால்.]*

**கொச்சிலச்சி** *koccilacci,* பெ.(n.) ஒரு வகைச் சிற்றிலைப் புல்; ring worm killer, *Xyris indica.*

*[கொச்சி + இலைச்சி]*

இது ஒரு அடி உயரமும் மஞ்சள் நிறப் பூவும் உடையது. மலையாளத்தில் இது ஒரு சிறந்த மூலிகையென்று கருதுவார்கள். இதன் சாற்றைக் காடியில் கலந்து சிரங்கு, மேகப்படை முதலியவை களுக்குத் தடவலாம். இலையையும் வேரையும் எண்ணெயிலிட்டுக் காய்ச்சி குட்டத்திற்குத் தடவலாம் (சா.அக.).

**கொச்சைப்படுத்து-தல்** *koccai-p-paḍuttu-,* 5 செ.கு.வி.(v.i.) இழிவுபடுத்துதல்; vulgaize. *தமிழை என்றும் கொச்சைப்படுத்திப் பேச வேண்டாம்.*

*[கொச்சை + படுத்து-தல்.]*

**கொச்சைவார்த்தை** *koccai-vārttai,* பெ.(n.) திரிவுற்றுத் தெளிவில்லாத சொற்கள்; vulgar words (சா.அக.).

*[கொச்சை + Skt. வார்த்தை.]*

**கொச்சைவீச்சம்** *koccai-viccam,* பெ.(n.) 1. ஆட்டுப் பால் நாற்றம்; smell of sheep's milk. 2. பால் முதலியவற்றின் முடை நாற்றம்; stink smell of milk, mother's milk, etc (செ.அக.).

*[கொச்சை + வீச்சம்.]*

**கொசுவத்தி** *kośu-vatti,* பெ.(n.) பற்ற வைத்தால் புகை எழுப்பிக் கொசுக்களை விரட்டும் வேதியியல் சுருள்; mosquito coil made of chemicals that produces smoke to keep off mosquitoes.

*[கொசு + வத்தி. பத்தி→வத்தி.]*

**கொஞ்சிநட-த்தல்** *koñji-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) களிப்புடன் நடத்தல்; walking at easy pace (சா.அக.).

*[கொஞ்சி + நட-த்தல்.]*

**கொஞ்சிப்பேசல்** *koñji-p-pēśal,* பெ.(n.) குழந்தையைப் போல் பேசுகை; talking like a child; prattling; talking from lust as woman (சா.அக.).

*[கொஞ்சி + பேசல்.]*

**கொஞ்சிவஞ்சி** *konji-vañji,* பெ.(n.) கும்பாதிரி பெரிய மரவகை; lac tree, *Schleichera trijuga* (செ.அக.).

*[கொழுஞ்சி + வஞ்சி]*

**கொட்டணைக்காய்** *koṭṭaṇai-k-kāi,* பெ.(n.) உப்பெடுக்கும் ஒரு கடற்கரைப் பூடு; a seashore plant of the species of cranberry from which salt is extracted (சா.அக.).

*[கொட்டணை + காய்.]*

**கொட்டம்பலவனார்** *kottambalavanār,* பெ.(n.) ஒரு புலவர்; a poet, of the Šangam age (சா.அக.).

*[கொட்டு + அம்பலவன் + ஆர்]*

**கொட்டரி** *kottari,* பெ.(n.) வாணாசுரனின் தாய்; mother of Pānašuran.

*[குட்டாளி – கொட்டரி]*

கண்ணனுடன் வாணாசுரன் போர் செய்த பொழுது, வாணாசுரன் இறக்கும் பொழுதில் ஆடை களைந்து மத்தியில் இருந்து போரைத் தடுத்தாள் (அபி.சிந்.).

**கொட்டாங்கச்சித்தைலம்** *kottāṅ-kacci-t-tailam,* பெ.(n.) தேங்காய் ஓட்டை எரிப்பதனால் அதில் இருந்து எடுக்கும் கருஞ்சிவப்பு நிறமான எண்ணெய்; a black or brown paint obtained by burning the cocoanut shell (சா.அக.).

*[கொட்டாம் + கச்சி + தைலம்.]*

**கொட்டாம்பிளி** *kottāmbili,* பெ.(n.) உளி மேல் அடிக்கும் ஆய்தம்; beatet, wooden mallet (செ.அக.). கொட்டாப்புளி பார்க்க; see *kuttappuli*

*[கொட்டு – கொட்டாப்பு + உளி.]*

**கொட்டாவிகொள்ளு-தல்** *kottāvi-kollu-,* 16 செ.கு.வி.(v.i.) **கொட்டாவி விடு-தல்** பார்க்க; see *kottāni-vidu-* (சா.அக.).

*[கோட்டு + ஆவி + கொள்.]*

**கொட்டாவிவிடு-தல்** *kottāvi-vidu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. வாயால் நெட்டுயிர்த்தல்; the act of yawning, *Oscecto.* 2. களைத்தல்; being exhausted or wearied. 3. இறத்தல்; dying (சா.அக.).

*[கோட்டாவி + விடு-தல்.]*

**கொட்டான்கரந்தை** *kottān-karandai,* பெ.(n.) நாறு கரந்தை; Indian globe thistle, *Sphoeranthus indicus* (சா.அக.).

*[கொட்டானி (கொட்டை) + கரந்தை.]*

**கொட்டான்சிலை** *kottān-šilai,* பெ.(n.) வாகை மரம்; common sirissa, *Albizzia lebbek* (சா.அக.).

*[கொட்டான் (கொட்டை) + சிலை.]*

**கொட்டு-தல்** *kottu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கொடுக்கினால் கொட்டுதல்; stinging as by a scorpion. 2. வார்த்தல்; pouring as water or any liquid. 3. பல்லி பலுக்குதல்; chirping as of a lizard. 4. பல் கொட்டுதல்; falling or dropping as of tooth (சா.அக.).

*[கொடு – கொட்டு.]*

**கொட்டுக்கொட்டென்று** *kottu-k-kottenru,* வி.எ.(adv.) சிறிதும் கண்ணயராமல்; தூக்கத்தின் அறிகுறி சிறுதும் இல்லாமல்; wide awake. *இரவு முழுக்கக் கொட்டுக் கொட்டென்று விழித்துக் கதை படித்துக் கொண்டிருந்தான்.* 2. ஒரே இடத்தில் ஒரு வேலையும் செய்யாமல் சலிப்புடன் இருத்தல்; remaining unoccupied suggestive of boredom. *வீட்டில் எவ்வளவு நேரம் நான் கொட்டுக் கொட்டென்று உட்கார்ந்திருப்பது?*

*[கொட்டு + கொட்டு + என்று.]*

**கொட்டுச்சிறுக்கி** *kottu-c-cirukki,* பெ.(n.) பிள்ளை பெறா மலடி; a barren woman (சா.அக.).

**கொட்டுமரம்** *kottu-maram,* பெ.(n.) ஆடையை வண்ணக் கலவையி(சாயத்தி)ல் தோய்த்து அடிக்குங் கட்டை; dyer's block for beating cloth and fixing colours (செ.அக.).

*[கொட்டு + மரம்.]*

**கொட்டுவாய்க்கடுப்பு** *kottu-vāy-k-aduppu,* பெ. (n.) நச்சு உயிரிகள் கடித்த இடத்தில் ஏற்படும் கடுநோய் அல்லது எரிவு; intense

irritation or burning pain at the spot bitten by poisonous insects or reptiles (சா.அக.).

*[கொட்டு + வாய் + கடுப்பு.]*

**கொட்டைகட்டு-தல்** *koṭṭai-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. இலுப்பைக்காய் வைத்துச் சூதாடுதல்; to gamble with mahua seeds. 2. நாய்ப்புலி என்னும் ஒரு வகை ஆட்டத்தில் புலியைக் கட்டுகை; to checkmate the tiger in the game of nāy-p-puli (செ.அக.).

*[கொட்டை + கட்டு-தல்.]*

**கொட்டைப்பாமிரம்** *koṭṭai-p-pāmiram,* பெ.(n.) கொட்டைக் கரந்தை; Indian globe thistle, *Sphoeranthus indicus* (சா.அக.).

*[கொட்டை + பாமிரம்.]*

**கொட்டையவரை** *koṭṭai-y-avarai,* பெ.(n.) கொட்டை முத்தின அவரை; a species of bean with matured seed or in which the seed portion alone is edible (சா.அக.).

*[கொட்டை + அவரை.]*

**கொட்டையாகாசி** *koṭṭai-y-āgāśi,* பெ.(n.) ஒரு வகைப் பூடு; round-leaved moonseed, *Cocculus macrocarpus* (சா.அக.).

*[கொட்டை + (ஆகாயம் ) ஆகாசி.]*

**கொட்டையாசாசி** *koṭṭai-y-āšāši,* பெ.(n.) ஒரு வகைக் கொடி; a kind of creeper; glaucous-backed round leaved moonseed, *Cocculus macrocarpus* (செ.அக.).

*[கொட்டை + ஆகு + ஆசி.]*

**கொடசபாலை** *koḍasa-pālai,* பெ.(n.) 1. வெட்பாலை; conessi or tellicherry bark, *Nerium anti-dysentericum.* 2. கொடிப் பாலை; cotton milk plant, *Dregea volubilis;* twining swallor wort, *Asclepias volubilis.* 3. ஊசிப்பாலை; needle-leaved swallow-wort, *Oxystelma esculentum* (சா.அக.).

*[குடசம் + பாலை.]*

**கொடசாலம்** *koḍa-šālam,* பெ.(n.) வெந்தோன்றி; November flower plant, *Gloriosa superba* (சா.அக.).

*[குடசம் + ஆலம்.]*

**கொடரி** *koḍari,* பெ.(n.) எழுத்தாணிப்பூடு (சித்.அக.); style plant (செ.அக.).

*[குடு - குடரி - கொடரி.]*

**கொடாலகம்** *koḍālagam,* பெ.(n.) வெண்காந்தள் செடிவகை (மலை.); white species of Malabar glory lily, *Gloriosa superba* (செ.அக.).

*[குடு + ஆலகம்.]*

**கொடி**[1] *koḍi,* பெ.(n.) கருப்பையிலிருக்கும் குழந்தைக்கு உணவு சென்றடையும் கொப்பூழ்க் கொடி; umbilical cord .

மறுவ. நஞ்சுக்கொடி

*[கொடு (வளைவு) - கொடி.]*

**கொடி**[2] *koḍi,* பெ.(n.) 1. ஒரு நாட்டின், ஒரு குழுவின் சின்னம் பதித்துக் கம்பத்தில் பறக்க வசதியாக வெட்டிய துணி; சட்டை முதலியவற்றில் குத்திக் கொள்ள வசதியாக வெட்டப்பட்ட சிறு துண்டுத்தாள்; flag; standard. 2. நிறங்களின் வழியாக ஒன்றைத் தெரிவிப்பதற்கு அளவாக வெட்டிய துணி; flag to signify something through its colour. *பச்சைக் கொடி. வெள்ளைக் கொடி*

*[கொடு - கொடி.]*

**கொடிக்கடமை** *koḍi-k-kaḍamai,* பெ.(n.) வரி வகை (தெ.கல்.தொ.330); a tax (செ.அக.).

*[கொடி + கடமை.]*

**கொடிக்காய்வகை** *koḍi-k-kāy-vagai,* பெ.(n.) கொடியில் காய்க்கும் காய் வகைகள்; creeper vegetables.

அவையாவன : 1. கலியாணப் பூசிணிக் காய்; ash pumpkin, *Cucurbita pepo*. 2. பறங்கிக் காய்; sweet gourd, *Cucurbitea maxima*. 3. கும்மட்டிக்காய்; bitter apple; *Citrullus colocynthis*. 4. சுரைக்காய்; bottle gourd, *Lagenaria vulgaris*. 5. வெள்ளரிக்காய்; cucumber, *Cucumis satives*.6. கொட்டை யவரைக்காய்; China bean, *Dolichor genus*. 7. மொச்சைக்காய்; country bean; *Lablab*. 8. பீர்க்கங்காய்; luffa gourd, *Luffa acutangula*. 9. புடலங்காய்; snake, *Mochosanthes anguina*. 10. பாகற்காய்; balsam gourd, *Momordica charantia*. 11. அதளக்காய்; sour gourd, *Cucurbita genus*. 12. தூதுளங்காய்; prickly shoonday, *Solanum trilobatum*. 13. கொடி வழுதுணைக்காய்; Indian night, shade, *Solanum indicum*. 14. பயற்றங்காய்; kidney bean. 15. கோவைக்காய்; Indian caper, *Cephalendra india*. 16. மிளகுக்காய்; green pepper fruit, *Piper nigrum* (சா.அக.).

*[கொடி + காய் + வகை.]*

**கொடுக்கி** *koḍukki*, பெ.(n.) 1. கதவை யடைக்க இடும் இரும்புப் பட்டை; hooked bar for fastening doors. 2. அணிகலனின் பூட்டு; clasp of an ornament. 3. தேட் கொடுக்கியெனும் சிறு செடிவகை (யாழ்.அக.); turnsole, *Heliotropium indicum*. 4. செடி வகை; tiger's claw, *Martynia diandra* (செ.அக.).

*[கொடு – கொடுக்கி.]*

**கொடுக்குமதி** *koḍukku-madi*, பெ.(n.) கொடுக்க வேண்டியது; debt, what is due (செ.அக.).

*[கொடு – கொடுக்கு + மதி.]*

**கொடிக்கொற்றான்** *koḍi-k-koṟṟāṉ*, பெ.(n.) 1. முடக்கொத்தான்; palsy curer, *Cardiospermum hadlicacabum*. 2. கொத்தான்; green thread creeper, *Cassytha filiformis* (சா.அக.).

*[கொடி + கொற்றான்.]*

**கொடிகட்டிப்பற–த்தல்** *koḍikaṭṭi-p-paṟa-*, 3 செ.கு.வி.(v.i.) மிகுந்த செல்வாக்கோடு இருத்தல்; live in great prosperity; flourish. *இந்தக் குடும்பம் அந்த காலத்தில் கொடிகட்டிப் பறந்தது.*

*[கொடி + கட்டி + பற–த்தல்.]*

**கொடிஞாழன்மாணிபூதனார்** *koḍi-ñāḻaṉ-māṇi-pūtaṉār*, பெ.(n.) கடைக் கழகத்துப் புலவருள் ஒருவர்; a poet who belongs to the last Tamil academy (அபி.சிந்.).

*[கொடி + ஞாழன் + மாணி + பூதன் + ஆர்.]*

**கொடிதிருப்பு–தல்** *koḍi-tiruppu-*, 5 செ.கு.வி.(v.i.) பெண் கொண்ட குடும்பத்தில் பெண் கொடுத்தல்; to give a girl in marriage to a member of a family from which a girl has been taken in marriage (செ.அக.).

*[கொடி + திருப்பு–தல்.]*

**கொடிநடு** *koḍi-naḍu*, பெ.(n.) தண்டுவடத்தின் நடுவே ஓடுவதாகச் சொல்லப்பட்ட ஒரு காணாப் பாதை; a subtle passage supposed to be running in the centre of the spinal cord (சா.அக.).

*[கொடி + நடு.]*

**கொடிநவ்வல்** *koḍi-navval*, பெ.(n.) படர் நாவல்; a species of jaumoon creeper, *Jambolana* (சா.அக.).

*[கொடி + நவ்வல்.]*

**கொடிநாக்கி** *koḍi-nākki*, பெ.(n.) படர்நெல்லி; a rare plant (சா.அக.).

*[கொடி + நாக்கி.]*

**கொடிப்பால்** *koḍi-p-pāl*, பெ.(n.) 1. சிறு பெண்ணின் முலைப்பால்; the breast milk of a girl or young woman. 2. கொடியின் பால்; the milky juice of creeper. 3. கொடி ஆட்டின் பால்; goat's milk (சா.அக.).

*[கொடி + பால்.]*

**கொடிப்பூண்டு** *kodi-p-pūṇḍu,* பெ.(n.) கொடி; any creeping plant; creeper (சா.அக.).

*[கொடி + பூண்டு.]*

**கொடிபடருதல்** *kodi-padarudal,* தொ.பெ. (vbl.n.) கொடி சூழ்தல்; spreading of creeper (சா.அக.).

*[கொடி + படரு-தல்.]*

**கொடிமங்கலத்துவாதுளிநற்சேந்தனார்** *kodi-maṅgalattuvāduḷi-naṟšēndaṉār,* பெ.(n.) கடைக் கழகம் மருவிய புலவர்; the poet who belonged to the last Šaṅgam era (அபி.சிந்.).

*[கொடிமங்கலம் + அத்து + வாதுளி + நல் + சேந்தன் + ஆர்]*

இவர் ஊர் கொடிமங்கலமாக இருக்க வேண்டும்.

**கொடிமாகிதம்** *kodi-māgidam,* பெ. (n.) நெருஞ்சில்; caltropes, *Tribulus terrestrisa* (சா.அக.).

*[கொடி + மாகிதம்.]*

**கொடிமுகாக்கினி** *kodi-mugākkiṉi,* பெ.(n.) நெல்லி; gooseberry tree, *Phyllanthus emblica* (சா.அக.).

*[கொடி + முகம் + அக்கினி.]*

**கொடிமுடிபர்வதம்** *kodi-mudi-parvadam,* பெ.(n.) வெள்ளி மலை; mountain containing silver ore (சா.அக.).

*[கொடிமுடி + Skt. பர்வதம்.]*

**கொடிமுறுக்கம்** *kodi-muṟukkam,* பெ.(n.) கொடிப் பலாசம்; a species of palaus climber, *Butea superba* (சா.அக.).

*[கொடி + முறுக்கம்.]*

**கொடிய** *kodiya,* பெ.அ.(adj.) 1. உயிருக்கு ஊறு விளைவிக்கக் கூடிய; likely to cause danger to life; cruel. *இந்தக் காட்டில் சிங்கம், புலி போன்ற கொடிய மிருகங்கள் இருக்கின்றன. கொடிய கொலையாளிகள் இருவர் கைது செய்யப்பட்டனர்.* 2. பொறுத்துக் கொள்ள முடியாத அளவுக்கு வருந்துகை; கடுமையான; மிகுந்த; causing unbearable strain; terrible; severe. *கொடிய குளிர்காற்று வீசியது. கொடிய வற்கடகம் (பஞ்சம்) தலைவிரித்தாடியது.*

*[கொடு – கொடிய.]*

**கொடியநற்குணி** *kodiya-naṟkuṇi,* பெ.(n.) கருநொச்சி; black notchy, *Vitex trifolia* (சா.அக.).

*[கொடிய + நல் + குணி.]*

**கொடியவிடகாரி** *kodiya-vidakāri,* பெ.(n.) சீந்தில்; moon creeper, *Menispermum cordifolium* (சா.அக.).

*[கொடிய + விடத்தாரி.]*

**கொடியவிடத்தி** *kodiya-v-idatti,* பெ.(n.) மருதாணி; fragrant naildye, *Lawsonia alba alias Lawsonia spinosa* (சா.அக.).

*[கொடிய + விடத்தி.]*

**கொடியவிடம்** *kodiya-vidam,* பெ.(n.) 1. சீதங்க பாடாணம்; a mineral poison. 2. பொல்லாத நஞ்சு; virulent poison (சா.அக.).

*[கொடிய + விடம்.]*

**கொடியிலைவகை** *kodi-y-ilai-vagai,* பெ.(n.) பல வகையான செடிகளின் இலை; a variety of creeper leaves.

1. தூதுளையிலை; leaf of three- lobed night shade, *Solanum trilobatum.* 2. பறங்கியிலை; leaf of sweet gourd, *Cucurbita maxima.* 3. சுறையிலை; leaf of bottle-gourd, *Lagenaria vulgaris.* 4. பேய்ச்சுரையிலை; leaf of wild bottle-ground, *Pepo lagenarius.* 5.பாகவிலை; leaf of country bean creeper, *Dolichos albus.* 6. அவரையிலை; leaf of country bean creeper,

*Dolichos albus.* 7. காராமணியிலை; leaf of crow gram, *Vigna catiang.* 8. கொடிக் குறிஞ்சாயிலை; leaf of small Indian ipecacuanna, *Gymnema sylvestre.* 9. கறிப்லையிலை; leaf of edible paulay, *Mimusops Kanki.* 10. ஊசிப்பாலையிலை; leaf of needle paulay, *Periploca esculentum.* 11. கோவையிலை; leaf of India coccinia, *Cephandra indica.* 12. முசுமுசுக்கையிலை; leaf of rough bryony, *Mukia scabrella.* 13. கோழியவரையிலை; leaf of fowl's bean, *Canavalia cusiformis.* 14. முயற்காதிலை; rabbit's ear leaf. 15. கழற்சியிலை; leaf of bonduc nut creeper, *Caesalpinia bonducella.* 16. வெண்கழற்சியிலை; leaf of white bonduc creeper, *Guilandia bonducella.*17. வரிக் கும்மட்டியிலை; leaf of striped colocynth gourd, *Cucumis colocynthis.*18. சிறுபூனைக் காயிலை; leaf of whitish passion flower, *Passiflora foetida.* 19. வேலிப் பருத்தியிலை; hedge cotton leaf, *Daemia extensa.* 20. துராயிலை; leaf of king of herbs, *Fumaria parviflora.* 21. செந்துராயிலை; red variety of tura-y-ilai. 22. நச்சுமூங்கியிலை; poison bamboo leaf, *Asiatic poison bulb, Crinum asaticum.* 23. சதாப்பிலை; leaf of Indian rue, *Ruta graveolens.* 24. கடற்பாலையிலை; leaf of ocean dryer, *Convolvuls nervosus.* 25. நொச்சியிலை; leaf of five leaved chaste tree, *Vitex negundo.* 26. தழுதாழையிலை; wind killer, *Cleodendron Phlomoides* (சா.அக.).

*[கொடி + இலை + வகை.]*

**கொடியீச்சன்** *koḍi-y-īccaṉ,* பெ.(n.) சீமை ஈச்சன்; common Indian fern, *Cycas circinalis* (சா.அக.).

*[கொடி + ஈச்சன்.]*

**கொடியூர்கிழார்மகனார்நெய்தற்றத்தனார்** *koḍiyūr-kiḻār-magaṉār-neytaṟṟattaṉār,* பெ. (n.) கடைக்கழகப் புலவரில் ஒருவர்; one of the poet who belonged to the last Šaṅgam.

*[கொடியூர் + கிழார் + மகனார் + நெய்தல் + தத்தன் + ஆர்.]*

இவர் இயற்பெயர் தத்தர். நெய்தல் நிலத்தைச் சார்ந்தவர். தந்தையின் பெயர் கொடியூர்க்கிழார். இவர் வேளாளர் (அபி.சிந்.). அகநானூறு 243ம் பாடலைப் பாடியுள்ளார்.

**கொடிவிருட்சம்** *koḍi-viruṭcam,* பெ.(n.) கொடிக்கள்ளி; creeping milk hedge or moon creeper, *Sacrastemmal brevistigma alias Asclepias acids* (சா.அக.).

*[கொடி + Skt. விருட்சம்.]*



**கொடிவேர்வகை** *koḍi-v-ēr-vagai,* பெ.(n.) முக்கியமான கொடியின் வேர்; important roots of creeper's.

*[கொடி + வேர் + வகை.]*

1. நாகமல்லி வேர்; snake jasmine root, *Rhinacanthus communis.* 2. காட்டு மல்லிகை வேர்; wild jasmine root, *Jasminum angustifolium.* 3. சிறுகுறிஞ்சா வேர்; small Indian ipecacuanha root, *Gymnema sylvestre.* 4. பேய்ச்சுரை வேர்; wild bottle gourd root. 5. முசுமுசுக்கை வேர்; bristly bryony root, *Mukia scabrella.* 6. வெண்காக்கட்டான் வேர்; black or blue mussell - shell creeper root, *Clitorea ternatea.* 7. கருங்காக்கட்டான் வேர்; black or blue mussell - shell creeper root, *Clitorea ternatea.* 8. கொடிவேலி வேர்; hedge-creeper root, *Plumbago zeylanica.* 9. பெருமருந்து வேர்; Indian birth wort-root, *Aristolochia indica.* 10. பெருங்காஞ்சொறி வேர்; climbing nettle root, *Tragia involucrate.* 11. சிறுகாஞ்சொறிவேர்; small climbing nettle root, *Tragia involucrata.* 12. கருங்காஞ்சொறி வேர்; black climbing nettle root, *Tragia involucrata.* 13. பச்சைத் திப்பிலி வேர்;

green long pepper plant root, *Piper longum.* **14.** இன்புறா வேர் அல்லது சாய வேர்; chay root or dye root, *Piper longum.* **15.** நன்னாரி வேர்; Indian sarsaparilla root, *Hemidesmus indicus.* **16.** கொஞ்சி வேர்; opal orange tree root, *Glycosmis pentaphylla.* **17.** குன்றி வேர்; jeweller's head root, *Abrus precatorius.* **18.** நுணா வேர்; ach root, *Morinda citrifolia.* **19.** கொழும்பு வேர்; columbo root, *Jateorrhiza columba.* **20.** கீரி புரண்டான் வேர்; Indian snake root, *Ophiorrhiza mungos* (சா.அக.).

**கொடுப்பனவு** *koḍuppaṉavu,* பெ.(n.) கொடுக்க வேண்டிய தொகை (இலங்.); amount to be paid to some one. *அவருக்குக் கொடுப்பனவு எவ்வளவு என்று பார்த்துச் சொல்.*

**மறுவ.** நிலுவை (பாக்கி)

*[கொடு – கொடுப்பன + உ.]*

**கொடுப்பினை** *koḍuppiṉai,* பெ.(n.) கொடுத்து வைத்தது; ஆகூழ், நற்பேறு (அதிர்ஷ்டம்); destiny. *எங்களுக்குப் பிள்ளை இல்லை. எங்களுடைய கொடுப்பினை அவ்வளவுதான்.*

*[கொடு →கொடுப்பினை.]*

**கொடும்** *koḍum,* பெ.அ.(adj.) கொடிய; கடுமையான; terrible. *கொடும் பாலைவனம்; கொடு நோய்.*

*[கொடு + ம்.]*

**கொடுவாட்கத்தி** *koḍu-vāṭ-katti,* பெ.(n.) அறுக்க பயன்படுத்தும் ஒரு வளைந்த கத்தி; a curved knife used in surgery (சா.அக.).

*[கொடுவாள் + கத்தி.]*

**கொடுவிடத்தி** *koḍu-viḍatti,* பெ.(n.) மருதாணி; prickly lawsonia, *Lawsonia spinosa* (சா.அக.).

*[கொடு + விடத்தி.]*

**கொடுவிடம்** *koḍu-viḍam,* பெ. (n.) **1.** கொல்லுந் தன்மை கொண்ட நஞ்சு; fatal poison, venom. **2.** வெள்ளைப் பாடாணம்; a mineral poison (செ.அக.).

*[கொடு + **Skt.** விடம்.]*

**கொடையெலும்பு** *koḍai-y-elumbu,* பெ.(n.) குடையெலும்பு அதாவது உள் வளைந்த எலும்பு; bone with an inward curvature; incurved bone (சா.அக.).

*[கொடை + எலும்பு.]*

**கொண்கானாங்கிழான்** *koṇkāṉāṉ-kiḻāṉ,* பெ.(n.) கொண்கான நாட்டு மன்னன்; king of koṇkāṉā-nāḍu. *மோசிகீரனாரால் பாடப்பட்ட கடைக் கழக மன்னன் (அபி.சிந்.).*

*[கொண்கானம் + கிழான்.]*

**கொண்டக்காரன்** *koṇḍa-k-kāraṉ,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலைஞரில் ஒரு வகுப்பினன் (யாழ்.அக.); a sub-caste of fishermen community (செ.அக.).

*[கொண்டை + காரன்.]*

**கொண்டங்கட்டிப்பாய்ச்சு–தல்** *koṇḍaṅkaṭṭi-p-pāyccu-,* 5 செ.கு.வி. (v.i.) அணை கட்டி மேட்டு நிலத்தில் நீர் பாய்ச்சுதல்; to irrigate a field on a high level by damming a river or channel and forming a small reservoir (செ.அக.).

*[குண்டம்–கொண்டம் + கட்டி + பாய்ச்சு–தல்.]*

**கொண்டச்சாணி** *koṇḍa-c-cāṇi,* பெ.(n.) படுவங்கீரை (யாழ்.அக.); a kind of herb (செ.அக.).

*[கொண்டை + சாணி.]*

**கொண்டல்மேகம்** *koṇḍal-mēgam,* பெ.(n.) கொண்டற் சிலை; a species of black stone.

*[கொண்டல் + மேகம்.]*

இதனால் கற்பூரம் செம்பாகும் (சா.அக.).

**கொண்டித்தொழு** *koṇḍi-t-toḻu,* பெ.(n.) பட்டிமாட்டை அடைக்குந் தொழுவம்; cattle-pound (செ.அக.).

*[கொண்டி + தொழு.]*

**கொண்டிரு-த்தல்** *koṇḍiru-*, 5 செ.கு.வி. (v.i.) தோற்றம், நடத்தை முதலியவற்றில் ஒருவரைப் போலிருத்தல் ஒத்திருத்தல்; look like; take after. *குழந்தை யாரைக் கொண்டிருக்கிறது? அப்பாவையா? அம்மாவையா?* (இ.வ.).

*[கொண்டு + இரு-த்தல்.]*

**கொண்டுகட்டுவியாபாரம்** *koṇḍukaṭṭu-viyābāram*, பெ.(n.) பொருட்களின் விலை குறைவான போது கொஞ்சம் கொஞ்சமாக வாங்கி விலையேறின காலத்தில் விற்கை; trading a articles bought cheap in retail and stored up awaiting a favourable market (செ.அக.).

*[கொண்டு + கட்டு + **Skt.** வியாபாரம்.]*

**கொண்டுகூட்டுப்பொருள்கோள்** *koṇḍu-kūṭṭu-p-poruḷkōḷ*, பெ.(n.) செய்யுளில் பலவடியிலும் தொடுக்கப்பட்டச் சொற்களைப் பொருளுக்குத் தக்கபடி கூட்டிப் பொருள் கொள்ளல்; mode of constructing a stanza in which words are appropriatly transposed to arrive at the proper meaning, one of eight. *கோப்பு மொழிகளை ஏற்புழியிசைப்பது கொண்டு கூட்டே (நன்.418).*

*[கொண்டு + கூட்டு + பொருள்கோள்.]*

**கொண்டுசெல்(லு)-தல்** *koṇḍu-šel-*, 13 செ.கு.வி.(v.i.) ஆளுமை செய்தல் (நிர்வகித்தல்); to be able to manage. *எனக்கு இனிமேற் கொண்டு செல்லாது (செ.அக.).*

*[கொண்டு + செல்(லு)-தல்.]*

**கொண்டுவா-தல்** *koṇḍu-vā-*, 18 செ.கு.வி. (v.i.) 1. ஒருவரை அழைத்து வருதல்; ஒன்றை எடுத்து வருதல்; வரவழைத்தல்; bring some one or something. *நோயாளியை முன்னரே என்னிடம் கொண்டு வந்திருக்கலாம் என்றார் மருத்துவர். நான சொன்ன புத்தகங்களைக் கொண்டு வந்தாயா?* 2. சிக்கல், தீர்மானம் முதலியவற்றை முன்வைத்தல்; சட்டத்தை ஏற்படுத்துதல்; bringing a problem to one's attention; move motion; enact law. *சின்னச் சின்னச் சிக்கல்களையெல்லாம் என்னிடம் கொண்டு வராதீர்கள் என்று கூறிவிட்டார் அதிகாரி. எதிர்க்கட்சியினர் கொண்டு வந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம் தோற்றுப் போயிற்று. மதுவிலக்குச் சட்டம் கொண்டு வரக் கோரிப் பெண்கள் மன்றம் ஆர்ப்பாட்டம் நடத்தியது.*

*[கொண்டு + வா-தல்.]*

**கொண்டுவிடு-தல்** *koṇḍu-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) ஒருவரை ஓர் இடத்திற்கு அழைத்துச் செல்லுதல்; ஒருவரை இட்டுச் சென்று ஒன்றில் விடுதல்; take some one to a place; lead some one into something. *கீழே விழுந்து கிடந்தவரை அவரது வீட்டில் கொண்டு போய் விட ஏற்பாடு செய்தோம். ஆராயாமல் எடுக்கும் முடிவு உன்னைச் சிக்கலில் மாட்டி விடும்.*

*[கொண்டு + விடு-தல்.]*

**கொண்டைஊசி** *koṇḍai-ūši*, பெ.(n.) பெண்கள் போட்டிருக்கும் கொண்டை அல்லது பின்னல் அவிழாதபடி செருகும் இரு பகுதியாக வளைக்கப்பட்ட மெல்லிய கம்பி; u-shaped hairpin to keep the hair-do intact.

*[கொண்டை + ஊசி.]*

**கொண்டைக்கடலை** *koṇḍai-k-kaḍalai*, பெ.(n.) வறுத்தோ, அவித்தோ பயன்படுத்தும் உருண்டை வடிவத்தில் இருக்கும் பழுப்பு நிறப் பருப்பு; cluster-seed, bengal gram; chick-pea.

*[கொண்டை + கடலை.]*

**கொண்டைகட்டி** *kondai-katti,* பெ.(n.) திருமணத்தின் போது தலைமயிரைக் கொண்டையாக முடிக்கும் வேளாள வகையினர்; a sub-sect of vēḷāḷās who dress their hair in large coil on the head during marriage (செ.அக.).

*[கொண்டை + கட்டி.]*

இவர்கள் குடுமிக்குப் பதிலாக சிகையைக் கொண்டைபோல் கட்டியிருந்தால் இப்பெயர் பெற்றனர். குறும்பரசனிடம் இருந்த பழக்கத்தால் கொண்டை பெற்றிருந்தனர் என்பர். முடிதிருத்தாமல் தங்கள் சிகையைத் தொடாது கொண்டை கட்டிக் கொண்டிருந்தவராதலின் இப்பெயர் பெற்றனர் என்பர் (அபி.சிந்.).

**கொண்டைகிருட்டி** *kondai-kirutti,* பெ.(n.) கொண்டலாத்தி (யாழ்.அக.); hoopoe, a crested bird (சா.அக.).

*[கொண்டை + கிருட்டி.]*

**கொண்டைச்சாணிக்கிழங்கு** *kondai-c-cāṇi-k-kiḻaṅgu,* பெ.(n.) நஞ்சறுப்பான் கிழங்கு; a creeper used an antidote for poison, Asclepias prolifera (சா.அக.).

*[கொண்டை + சாணி + கிழங்கு.]*

**கொண்டைச்சி** *kondaicci,* பெ.(n.) 1. கொண்டையை அசைக்கும் ஓர் குருவி; mountain bulbul with crust erected at will-lxos monticolons alias pycnonotus haemorhous. 2. சிவப்புக் கொண்டலாத்தி; red-whiskered bulbul, Otocompsa jocosa. 3. கொண்டைக் குருவி; crested bird-Lxos caper. 4. பெருங் கொண்டலாத்தி அல்லது புழுக்கொத்தி; a large kind of crested bird; houp-upupa epops (சா.அக.).

*[கொண்டை + ஆச்சி.]*

**கொண்டைச்சீனிக்கிழங்கு** *kondai-c-cīṉi-k-kiḻaṅgu,* பெ.(n.) 1. நஞ்சறுப்பான்; a creeper used as an antidote for poison, *Asclepias prolifera.* 2. நாய்ப்பாலை; Indian ipecacuanha, *Asclepias asthmatica.* 3. கழுதைப் பாலை; common Indian ipeca cuanha, *Tylophora asthmatica* (சா.அக.).

*[கொண்டை + சீனி + கிழங்கு.]*

**கொண்டைச்சுத்தியல்** *kondai-c-cuttiyal,* பெ.(n.) தட்டார் கருவிகளுள் ஒன்று; goldsmith's or brazier's hammer (செ.அக.).

*[கொண்டை + சுத்தியல்.]*

**கொண்டைதிருகி** *kondai-tirugi,* பெ.(n.) கதவுக்குடுமி செருகும் துளை; hole in the sill into which the corner-pin of a door is fitted (செ.அக.).

*[கொண்டை + திருகி.]*

**கொண்டையிற்கைபோடு-தல்** *kondaiyir-kai-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) பெண்ணின் மயிர் பிடித்து இழுத்து அவமதித்தல்; outraging a woman by handling the lock or tuft of hair on her head; pulling a woman by her hair (சா.அக.).

*[கொண்டையில் + கை + போடு-தல்.]*

**கொண்டலாத்திக்குருவி** *kondalātti-k-kuruvi,* பெ. (n.) மீன்குத்திப் பறவையினத்தைச் சேர்ந்த ஒரு பறவை; a bird, which main pray is fish.



*[கொண்டை + ஆலாத்தி + குருவி.]*

இதன் தலையில் அழகிய கொண்டை ஒன்று உண்டு. அந்தக் கொண்டையை அது களிப் படைந்திருக்கையில் விரித்தும், குவித்தும் விளையாடும். இது செம்மை கலந்த மஞ்சள் நிறமுள்ளது. இதன் தோகையிலும், இறக்கையிலும் வெண்மையான வரிகளுமுடையது. மரங்களிலும், நிலத்திலும் பூச்சிப் புழுக்களைத் தோண்டியுண்ணுமாறு இதன் மூக்கு நீண்டுடிருக்கும். இது கோடை காலத்தில் நீண்ட தூரம் பயணம் செய்து மழைக் காலத்தில் திரும்பும் தன்மையது (அபி.சிந்.).

**கொண்டோசனக்கிழங்கு** *koṇḍōšaṉa-k-kiḻaṅgu*, பெ.(n.) திப்பிலி மூலம்; root of long pepper.

*[கொண்டோசனம் + கிழங்கு.]*

இது மணமாகவும் சிவப்பாகவும் இருக்கும் (சாஅக.).

**கொண்ணை** *koṉṉai*, பெ.(n.) கொன்றை; common cassia Indian laburnam, Cassia fistula alias c.rhombifolia

*[கொன்றை – கொண்னை – கொண்ணை (கொ.வ.).]*

வகைகள்: 1. இராகத்துக் கொன்றை; red Indian laburnam, *Cassia margiuata*. 2. ஈசன்தார்க் கொன்றை; gold flower tree. 3. எருமைக் கொன்றை; sumatra senna, *Cassia siamea* 4. கருங்கொன்றை; sumatra senna, *Cassia siamea* 5. காக்கொன்றை; black senna. 6. காட்டுக்கொன்றை; wild kondray; venezula soap bark tree, *Pithecolobium bigeminum*. 7. குண்டு பூக் கொன்றை; globe-flowered cassia, *Cassia glauca* 8. குளோப்பூக் கொன்றை; globe-flowered cassia, *Cassia glauca*. 9. சரக்கொன்றை; common cassia. 10. சிவப்புக் கொன்றை; red Indian laburnam, *Cassia margiuata* 11. சிறுகொன்றை செடிக்கொன்றை; cassia plant, *Cassia arborescens*. 12. சிறு மயிற் கொன்றை; false peacock flower, *Caesalpinia pulcherrima* 13. சீமைக் கொன்றை; red Indian laburnam, *Cassia margiuata* 14. சூரத்துக் கொன்றை; surat cassia, *Cassia surattensis*. 15. செம்மயிற் கொன்றை; red pea-cock flower, *Poinciana regia*. 16. செழு மலர்க் கொன்றை; large flower cassia, *Cassia florida*. 17. சொறிக் கொன்றை; rough cassia. 18. நரிக் கொன்றை; red Indian laburnam, *Cassia margiuata*. 19. நொச்சிக் கொன்றை; mottled ebony, *Diospyros Kanjilali*. 20. பிரம்புக் கொன்றை; cassia plant, *Cassia arborescesns*. 21. புலி நகக் கொன்றை; cassia with re-curved prickles, *Caesalpinia ligulata*. 22. புளினைக் காய் கொன்றை; prickly brasiletto climber, *Wagtea spicata*. 23. (1) பெருங் கொன்றை; the same as cara-k-konrai. (2) இயல்வாகை; unarmed brasiletto, *Peltophorum ferugineum*. 24. பெருமயிர்க் கொன்றை; royal peacock flowers, poincian regia. 25. பொன்மாற் கொன்றை; yellow pea-cock flower, *Caesalpinia pulcherrima*. 26. மஞ்சட் கொன்றை; yellow kondray, *Cassia sulpeurea alias Senna sumutrana*. 27. மந்தாரக் கொன்றை; dull-flower cassia, *Cassia*. 28. மாம்பழக் கொன்றை; mango cassia. 29. மயிற் கொன்றை; peacock laburnam, *Caesalpinia pulcherrima alias Poinciana regia*. 30. மல்லங் கொன்றை; shingle tree, *Acrocarpus fraxinifolius*. 31. மலைக் கொன்றை; deccany senna, *Cassia montana*. 32. முட் கொன்றை; prickly cassia, *Caesalpinia scandens*. 33. வரிக்கொன்றை; stripped-kondray, *Cassia emarginata*. 34. வெண்மயிற் கொன்றை; creamy pea-cock flower, *Poinciana elata* (சா.அக.).

**கொணர்–தல்** *koṇar-*, 13 செ.கு.வி. (v.i.) கொண்டு வருதல்; bring. சான்றிதழ்களைக் கொணரும்படி தலைமையாசிரியர் மாணவ னிடம் கூறினார். வெளி மாநிலத் திலிருந்து சென்னை நகருக்கு குடிநீர் கொணரும் திட்டம் நிறைவேறியது.

*[கொள் – கொணர்.]*

**கொணிசல்** *koṇišal*, பெ.(n.) கோணல்; bend, curve (செ.அக.).

*[கொணிசல் – பேச்சுவழக்கு.]*

**கொத்தப்பியர்** *kottappiyar*, பெ.(n.) இந்தியாவை ஆட்சிபுரிந்த பழம்பெரும் அரசக் குடும்பத்தினர்; the dynasty who ruled India (அபி.சிந்.).

**கொத்தமல்லிச்செடி** *kottamalli-c-cēḍi,* பெ.(n.) மணத்திற்காக குழம்பில் சேர்த்துக் கொள்ளப்படும் கொத்த மல்லி செடி; coriander, *Coriandrum sativum* (சா.அக.).

*[கொத்தமல்லி + செடி.]*

**கொத்தமல்லித்தூள்** *kotta-malli-t-tūḷ,* பெ.(n.) கறிக்குப் போடுவதற்காக இடித்த கொத்தமல்லித்தூள்; powder of dried coriander seeds used in curries and confectionaries (சா.அக.).

*[கொத்த + மல்லி + தூள்.]*

**கொத்தமல்லிவகுரி** *kottamalli-vaśūri,* பெ.(n.) கொப்புளிப்பான் என்னும் அம்மை வகை; chicken - pox or measles (செ.அக.).

*[கொத்தமல்லி + **Skt.** வகுரி.]*

**கொத்தவால்** *kottavāl,* பெ.(n.) நகரங்கள், சிற்றூர்கள் முதலியவற்றின் காவல் தலைவன்; chief police officer for a city or town, superintendent of markets (செ.அக.).

*[கோட்டை + வாள்.]*

**கொத்தவரங்காய்** *kottavaraṅgāy,* பெ.(n.) சற்று நீளமாகவும், தட்டையாகவும், வெளிர்ப்பச்சை நிறமாகவும் இருக்கும் காய்கறி; cluster beans. *கொத்தவரங்காய் வற்றல். கொத்தவரங்காய் போல் இருக்கிறான்*

*[கொத்து + அவரங்காய். அவரைக்காய் → அவரங்காய்.]*

**கொத்தவாற்சேவகன்** *kottavāṟ-śēvagaṉ,* பெ. (n.) கொத்தவாலெனுங் காவற் தலைவனின் கீழ் வேலை பார்க்கும் காவலாள்; police constable under a kottavāl (செ.அக.).

*[கோட்டை + ஆள் + சேவகன்.]*

**கொத்தான்கொடி** *kottāṉ-koḍi,* பெ.(n.) ஆகாசவல்லிக் கொடி; air plant or air-creeper; leafless creeper or thread creeper, *Cassytha filiformis* (சா.அக.).

*[கொத்தான் + கொடி.]*

**கொத்திப்போடல்** *kotti-p-pōḍal,* தொ.பெ. (vbl.n.) பறவைகள் அலகுகளால் கொத்துதல்; picking up with the beak (சா.அக.).

*[கொத்தி + போடல்.]*

**கொத்து-தல்** *kottu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பாம்பு கடித்தல்; biting as by a snake. 2. கறி கொந்துதல்; chopping as of meat. 3. பறவை மூக்கினால் மோதல்; striking with the beak as by birds. 4. இரை கொத்தி எடுத்தல்; picking up grains as by birds (சா.அக.).

*[கொல் – கொத்து.]*

**கொத்துக்கூலி** *kottu-k-kūli,* பெ. (n.) 1. வேளாண் தொழில்களின் பொருட்டுக் கொடுக்குங் கூலி; wage for the various forms of agricultural work. 2. கொத்தர்க்குக் கொடுக்குங் கூலி; wage for masonry work (செ.அக.).

**மறுவ.** கொத்தனார்கூலி

*[கொத்து + கூலி.]*

**கொத்துக்கோரை** *kottu-k-kōrai,* பெ.(n.) கோரை வகைகளுள் ஒன்று; wet-land sedge, *Cyperus compressus* (செ.அக.).

*[கொத்து + கோரை.]*

**கொத்துமலி** *kottu-mali,* பெ.(n.) ஒரு வகைச் செடி (திவா.); coriander, *Coriandrum sativum* (செ.அக.).

*[கொத்து + மலி.]*

**கொதி-த்தல்** *koti-,* 4 செ.கு.வி.(v.i.) 1. காய்ச்சல் காய்தல்; to be suffering from fever; being attacked wtih fever. 2. வெப்பங் கொள்ளல்; getting heated in the system. 3. தண்ணீர் முதலியன

காய்ந்து பொங்குதல்; over-flowing of water etc. by its being boiled. 4. வயிறு வழுக்குதல் அல்லது வழுவுதல்; fluxing or flowing from the bowls as in dysentery or diarrhoea. 5. மிகச் சினத்தல்; growing extremely angry. 6. மகவை இழத்தலினால் தாய்க்கு வயிற்றில் ஏற்படும் குழப்பம்; a peculiar stirring sensation felt or experienced by the mother in the stomach on the loss of her child. 7. நீர் ஆவியாகக் கிளம்பல்; turning of a liquid into a gaseous state (சா.அக.).

*[குய் – கொய் – கொதி.]*

**கொதித்தைலம்** *kodi-t-tailam,* பெ.(n.) முத்துக்கொட்டை முதலியவற்றை இடித்து நீரிற் கொதிக்க வைத்து இறக்கும் எண்ணெய் (பைஷஜ.3); medicinal oil prepared by boiling pounded castor-beans, etc., in water (செ.அக.).

*[கொதி + **Skt.** தைலம்.]*

**கொதிப்பெடு-த்தல்** *kodippedu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உடம்பு சூடாதல்; getting heated in constitution. 2. சினத்தால் வெப்புக் கொள்ளல்; getting hot or violent through anger (சா.அக.).

*[கொதிப்பு + எடு-த்தல்.]*

**கொதுக்கொதுக்கென்றுபோ-தல்** *kotu-k-kotu-k-kenṟu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) செரியாமையினால் அடிக்கடி சிறு அளவாக மலங் கழிதல்; going to stool often in small quantities or having looseness of bowels, due to indigestion (சா.அக.).

*[கொது + கொது + என்று + போ-தல்.]*

**கொந்தராத்து** *kondarāttu,* பெ.(n.) ஒப்பந்தம் (இலங்.); contract. *ஊரையே கொந்தராத்து எடுத்தது போல் பேசுகிறார்.* (கொ.வ.)

*[E. contract - த. கொந்தராத்து]*

**கொந்தறிவாள்** *kondaṟivāḷ,* பெ.(n.) சதையிற் குத்தி அறுக்கும் கத்தி; a surgical knife or instrument with a handle used for puncturing before cutting through the skin (சா.அக.).

*[கொந்து + அரிவாள்.]*

**கொந்தினஇறைச்சி** *kondiṉa-v-iṟaicci,* பெ.(n.) நன்கு பொடிப்பொடி துண்டாக வெட்டின இறைச்சி; meat chopped into minute pieces, *Mince-meat; Hash* (சா.அக.).

மறுவ. கொத்துக்கறி

*[கொந்தின + இறைச்சி.]*

**கொப்பரகேசரிவன்மர்** *koppara-kēšari-vaṉmar,* பெ.(n.) ஒரு சோழ மன்னன்; a Cōḻāking.

மறுவ. பராந்தகன், வீரநாராயணன்.

*[கோ + பரகேசரி + வருமன்.]*

இவர் மதுரை, ஈழம் முதலிய நாடுகளை வென்றார். ஆதித்தச் சோழரின் மகன். இவரின் மனைவி கேரள நாட்டு மன்னனின் மகள் கோக்கிழார் என்பவள். இவருக்கு இராசாதித்தன் கண்டராதித்தன், அரிஞ்சயன் என மூன்று பிள்ளைகள் இருந்தனர் (அபி.சிந்.).



**கொப்பறா** *koppaṟā,* பெ.(n.) நீர் வற்றி உலர்ந்த தேங்காய்; dried coconut-kernel, copra (செ.அக.).

*[கப்பு -கொப்பு+அறை–அறா(கொ.வ.)]*

**கொப்புளத்தாள்** *koppuḷattāḷ,* பெ.(n.) சதையைக் கொப்புளிக்கச் செய்யும் மருந்தூட்டிய தாள்; blistering papper (சா.அக.).

*[கொப்புளம் + தாள்.]*

**கொப்புளிக்குமருந்து** *koppuḷikku-marundu,* பெ. (n.) 1. உடம்பில் கொப்புளத்தை உண்டாக்கும் மருந்து; blistering agent or drug,*sicant.* 2. வாய் கொப்பளிப்பதற்காகப் பயன்படுத்தும் மருந்து நீர்; medicated gargles; a preparation for rinsing the throat with (சா.அக.).

*[கொப்புளிக்கும் + மருந்து.]*

**கொப்பென** *koppeṉa,* வி.எ. (adv.) 1. பொட்டென; quickly. 2. திடீரென; suddenly (சா.அக.).

*[கொப்பு + என.]*

**கொம்பசைப்பசுவின்பால்** *kombašai-p-pašuviṉ-pāl,* பெ. (n.) அசைகின்ற கொம்பையுடைய ஆவினது பால்; milk of the cow having losse horns (சா.அக.).

*[கொம்பு + அசை + Skt. பசுவின் + பால்.]*

**கொம்பால்கிழி-த்தல்** *kombāl-kiḻi-,* 4 செ.கு.வி. (v.i.) விலங்குகள் கொம்பினால் முட்டி சதையைக் கிழித்தல்; tearing the skin by goring with horns as by bull etc. (சா.அக.).

*[கொம்பல் + கிழி-தல்.]*

**கொம்பில்கலைமான்** *kombil-kalai-māṉ,* பெ.(n.) கொம்பு விழுந்த கலைமான்; pollard (சா.அக.).

*[கொம்பு + இல் + கலை + மான்.]*

**கொம்புகொண்டபறவை** *kombu-koṇḍa-paṟavai,* பெ.(n.) பிரேசில், கயானா முதலிய இடங்களில் வாழும் பறவை; a bird where living in Brēziland kayāṉā.

*[கொம்பு + கொண்ட + பறவை.]*

மாலைப் போன்று காணப்படும் இதன் கழுத்தில் சிறகுகளில்லை. முனை வளைந்த நீண்ட அலகு கொண்ட இவற்றின் சிறகுகள் பொன்னிற முடையவை. ஆண் பறவைகளுக்கு மட்டும் நெற்றியில் கொம்பு முளைத்திருக்கும். சதுப்பு நிலங்களில் வசிக்கும். இவை பூச்சி, தவசங்களை உணவாகக் கொள்ளும். கோடை காலத்தில் புதர்களில் மெத்தென்ற சரகு சேர்த்து ஆண்டிற் கொரு முறை முட்டையிட்டு அடை காத்து குஞ்சு பொரிக்கும் (அபி.சிந்.).

**கொம்புசீவு-தல்** *kombu-šīvu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒருவரைச் சண்டை போடுமாறு தூண்டிவிடுதல், சண்டை மூட்டுதல்; incite some one to fight. *கொம்பு சீவும் வேலையை அவனிடம் வைத்துக் கொள்ளாதே.*

*[கொம்பு + சீவு-தல்.]*

**கொம்புள்ளதேரை** *kombuḷḷa-tērai,* பெ.(n.) ஒரு வகை தேரை; a toad with horns, found in South America.

*[கொம்பு + உள்ள + தேரை.]*

இது ஆறு அங்குல நீளமும் பெரிய வாயும், கண்ணிற்கு நேராகப் பெரிய கொம்பு போன்ற உறுப்பும் உடையது. தவளையைப் பிடித்துத் தின்னும். இது தென் அமெரிக்காவில் காணப் படுகிறது (அபி.சிந்.).

**கொம்புள்ளபறவை** *kombuḷḷa-paṟavai,* பெ.(n.) ஒரு வகைப் பறவை; a kind of bird.

*[கொம்பு + உள்ள + பறவை.]*

இது பெரிய வாத்து போன்ற உருவமுடையது. தலையில் கொம்பு போன்ற உறுப்பு கொண்டது. கறுப்பும், வெண்மையும் கலந்த இறகுகளை உடைய இப்பறவை தென் அமெரிக்காவில் உள்ளது (அபி.சிந்.).

**கொம்புள்ளமூக்குப்பறவை** *kombuḷḷa-mūkku-p-paṟavai,* பெ.(n.) ஒரு வகைப் பறவை; a kind of a bird.

*[கொம்பு + உள்ள + மூக்கு + பறவை.]*

இது சென்னை மாவட்டத்தைச் சார்ந்த மேற்குத் தொடர்ச்சிமலைக் காடுகளில் உள்ளது.

பெரிய இறக்கைகளைக் கொண்ட இவற்றின் மூக்கு 10 அங்குல நீளமுடையது. இந்த மூக்கில் மூக்கைப் போன்ற ஓர் உறுப்பு மேல் நோக்கி வளர்ந்திருக்கிறது. சிவந்த நிறமுடைய இவ்வினத்தில் ஒற்றைக் கொம்புடையதும், இரட்டைக் கொம்புடையதும் உண்டு. இதன் கால் நகங்கள் வளைந்தவை. இது உரக்கக் கத்தும் ஒலி 1 மைல் தூரம் கேட்கும். மரப்பொந்தில் கூடு கட்டி அடை காக்கும். பெட்டை அடை காக்கும் கூட்டை மண்ணால் அடைத்து துளை செய்து அதன் வழி இரை கொடுக்கும் (அபி.சிந்.).

**கொம்புள்ளவிரியன்பாம்பு** *kombuḷḷa-viriyaṉ-pāmbu,* பெ.(n.) ஒரு வகைப் பாம்பு; a kind of a snake.

*[கொம்பு + உள்ள + விரியன் + பாம்பு.]*

இது வட அமெரிக்காவில் மணலுள்ள இடங்களில் வாழும். தன் உடல் முழுதும் மணலில் மறைத்து, கண்களை வெளியில் காட்டிக் கொண்டிருக்கும். அதிக நச்சுத் தன்மை கொண்ட இது 30 அங்குல நீளம் உடையது (அபி.சிந்.).

**கொம்புளகரம்** *kombu-ḷagaram,* பெ.(n.) தமிழ் மொழியில் 'ள' என்னும் எழுத்து; பொது ளகரம் (இலங்.); the letter 'ள' in Tamil as distinguished from Širappuḷagaram.

மறுவ. புள்ளிக்கால் ளகரம்; கொம்புளவு

*[கொம்பு + ளகரம்.]*

**கொம்புளவு** *kombuḷavu,* பெ.(n.) கொம்பை முதலிற் கொண்ட எழுத்தாகிய ளகரம்; the letter 'ள' as beginning with the symbol (செ.அக.).

*[கொம்பு + உளவு.]*

**கொம்மட்டிமரிகம்** *kommaṭṭi-marigam,* பெ.(n.) நில வேம்பு; ground neem, *Celastrus Paniculata alias Justicia peniculata* (சா.அக.).

*[கொம்மட்டி + மரிகம்.]*

**கொம்மட்டிவிதை** *kommaṭṭi-vidai,* பெ.(n.) கொம்மட்டிக்காய் விதை; seeds of water-melon (சா.அக.).

*[கொம்மட்டி + விதை.]*

**கொமட்டிவிதை** *komaṭṭi-vidai,* பெ.(n.) சுக்கங்காய் விதை; seeds of bryonia callosa (சா.அக.).

*[கொமட்டி + விதை.]*

**கொய்யின்கீரை** *ko-y-yiṉ-kīrai,* பெ.(n.) அறுகீரை; அறைக் கீரை; a kind of vegetable greens (சா.அக.).

*[கொய்யின் + கீரை.]*

**கொய்னா** *koyṉā,* பெ.(n.) 1. சுரப்பட்டை மரம்; red cinchona bark, a tree, *Cinchona succirubra.* 2. காய்ச்சல் மருந்து; quinine, product of cinchona alkaloids (செ.அக.).

**கொரட்சி** *koraṭci,* பெ.(n.) ஒரு வகை மூலிகைச் செடி; an unknown drug said to be remedy for asthma (சா.அக.).

**கொரநாடு** *koranāḍu,* பெ.(n.) கூறைநாடு, மயிலாடு துறைக்கருகில் சேலைகள் மிகுதியாக நெய்யப்படும் ஓர் ஊர்; a village, near Mayiladuturai noted for the manufacture of sarees (செ.அக.).

*[கூறை + நாடு.]*

**கொராசானி** *korāšāṉi,* பெ.(n.) குரசானி யோமம்; khorassan ajwaun; common henbane, *Hyoscyamus niger* (சா.அக.).

**கொரிக்கம்** *korikkam,* பெ.(n.) எழுத்தாணி போன்ற பூவுள்ள ஒருவகைப் பூண்டு (மலை.); style plant, having a style-like flower, *Launcea pinnatifida* (செ.அக.).

*[கோரு – கோருக்கம்.]*

**கொரிகாமரம்** *korigā-maram,* பெ.(n.) கொறுக்காப்புளி (சித்.அக.); manilla tamarind (செ.அக.).

*[கொரிகா + மரம்.]*

**கொல்[1]** *kol,* பெ.(n.) 1. வருத்தம்; trouble. 2. கொலைத் தொழில்; the act of murder (சா.அக.).

*[குல் – கொல்.]*

**கொல்[2]** *kol,* பெ.(n.) மாழை (உலோகம்); metal (சா.அக.).

**கொல்லன்கம்மாலை** *kollan-kammālai,* பெ.(n.) கொல்லன் உலைக்கூடம்; blacksmith's workshop, smithy (செ.அக.).

*[கொல்லன் + கம்மாலை. கம்மாலை = பித்தளை வேலை செய்யும் இடம்.]*

**கொல்லன்கோவிகம்** *kollan-kōvigam,* பெ.(n.) பின் துடரிப் பூடு; sand binder (சா.அக.).

*[கொல்லன் + கோவிகம்.]*

**கொல்லன்பாகல்** *kollan-pāgal,* பெ.(n.) ஒரு வகைப் பாகல்; a kind of bitter gourd (சா.அக.).

**கொல்லனழிசி** *kollanalici,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்களில் ஒருவர்; a poet who belong to the last Tamil Śaṅgam.

*[கொல்லன் + அழிசி.]*

சோழர் குடியினரான அழிசியினின்று வேறுபடுத்த இவரது இனப் பெயருடைய இவரது பெயருக்கு முன் இட்டனர் (அபி.சிந்.).

**கொல்லாவிரதம்** *kollā-viradam,* பெ.(n.) உயிர்களைக் கொல்லாமையாகிய நோன்பு; vow of abstaining from killing. *"கொல்லாவிரதங் குவலயமெல்லா மோங்க" (தாயு.பராபர.54) (செ.அக.).*

*[கொல்லா + Skt. விரதம்.]*

**கொல்லாவிரதியர்** *kollā-viradiyar,* பெ.(n.) 1. கொல்லாமையை நோன்பாக உடையவர்; those who have vowed to abstain from killing. *"கொல்லாவிரதியர் நேர்நின்ற முக்கட் குருமணியே" (தாயு.பாயப்புலி.22).* 2. சைனர்; Jains (செ.அக.).

*[கொல்லா + Skt. விரதியர்.]*

**கொல்லென்று** *kolleṉṟu,* வி.அ.(adv.) உடனடியாகவும், உரக்கவும் சிரித்தல்; bursting tears, laughter, etc. *கோமாளி வந்ததும் சிறுவர்கள் கொல்லென்று சிரித்தார்கள்.*

**கொல்லைநிலம்** *kollai-nilam,* பெ.(n.) புதரடைந்து கிடக்கும் மேட்டுநிலம்; இதனை நஞ்சையாகவும் திருத்துவர்; sod, which can be reformed for cultivation. *"கொல்லை நிலங்கொண்டு திருத்தியது" (திருவொற்றியூர் கல்வெட்டு) "கொல்லைத் துறை காடு வெட்டி கட்டைப் பறித்து மேடும் பள்ளமும் திருத்தி நீர் நிலமாக" (தெ.கல்., தொ.7, கல்.97) (கல்.அக.).*

**கொல்லைப்புறம்** *kollai-p-puṟam,* பெ.(n.) வீட்டுக்குப் பின்னால் உள்ள இடம்; புறங்கடை; backyard of a house.

**மறுவ.** பொறவாசல், புறக்கடை, புழக்கடை, கடைவாசல்.

*[கொல்லை + புறம்.]*

**கொல்லைப்புறவழி** *kollai-p-puṟa-vaḻi,* பெ.(n.) நேர்மையற்ற முறை; unfair means; back door. *நேர்மையான அரசியல் நடத்துபவர்க்கு கொல்லைப்புற வழி எதற்கு?.*

*[கொல்லை + புறம் + வழி.]*

**கொலுகொலு-த்தல்** *kolu-kolu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கலகலக்க; to become loose, disjointed, rickety, deranged in parts. 2. மட்கிப் போகை; to moulder, crumble into dust, as a dead body. 3. உரையாடலி (வாதத்தி)ல் தோற்கை; to be defeated or discomfited in argument. 4. ஓயாமல் வாய் பேசுகை; to chatter incessantly (செ.அக.).

*[கொலு + கொலு–த்தல்.]*

**கொலுகொலுப்பு** *kolu-koluppu,* பெ.(n.) 1. ஆடம்பரம்; affectation, osteritation, vanity. 2. ஓயாமல் வாய் பேசுகை வாயாடுகை; incessant chattering. 3. கலகலத்துப் பேசுகை; becoming loose or rickety (செ.அக.).

*[கொலு + கொலுப்பு.]*

**கொலுசெழுத்து** *kolu-šeḻuttu,* பெ.(n.) கூட்டெழுத்து; running hand (செ.அக.).

*[கொலுசு + எழுத்து.]*

எழுத்துக்களை ஒன்றோடொன்று பிணைத்து எழுதும் முறை.

**கொலுவிரு-த்தல்** *kolu-viru-,* 3 செ.கு.வி. (v.i.) கொலு மண்டபத்தில் அரசர் அரியணையில் அமர்ந்திருத்தல்; presence of a king in his royal court in a sitting state (சா.அக.).

*[கொலு + இரு-த்தல்.]*

**கொலைப்பசி** *kolai-p-pāši,* பெ.(n.) கடுமையான பசி; state of being famished. *காலையிலிருந்து சாப்பிடவில்லை, கொலைப் பசி எடுக்கிறது.*

*[கொலை + பசி.]*

**கொலைப்பட்டினி** *kolai-p-paṭṭiṉi,* பெ.(n.) எதையும் சாப்பிடாமல் மிகுந்த பசியுடன் இருக்கின்ற நிலை; utter starvation; extreme hunger. *நான்கு நாட்களாக நான் கொலைப் பட்டினி.*

*[கொலை + பட்டினி.]*

**கொலைவிழு-தல்** *kolai-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) கொலை நடத்தல்; result in murder. *நீ மறுபடியும் தகராறு செய்தால் இங்கு ஒரு கொலை விழும் என்று அச்சுறுத்தினார்.*

*[கொலை + விழு-தல்.]*

**கொவ்வைப்பழம்** *kovvai-p-paḻam,* பெ.(n.) கோவைப் பழம்; red fruits of a common creeper found on the hedges.

*[கொவ்வை + பழம்.]*

**கொழிஞ்சினி** *koḻiñjiṉi,* பெ.(n.) நாய் வேளை; dog mustard plant, *Cleome viscosa* (சா.அக.).

மறுவ. இதை நாய்க்கடுகு என்றும் அழைப்பர்.

**கொழிப்பாயாசம்** *koḻi-p-pāyāšam,* பெ.(n.) செந்தொட்டி; scorpion leaf, *Tragia involucrata* (சா.அக.).

**கொழு-த்தல்** *koḻu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உடம்பு தெளிந்து பருத்தல்; becomming fattened. 2. குழம்பாய் இருத்தல்; being of thick consistency. 3. மதத்தல்; becoming sexually excited (சா.அக.).

*[கொள் – கொழு.]*

**கொழுக்கு** *koḻukku,* பெ.(n.) கைப்பிடி உள்ள கோப்பை (இலங்.); cup to drink coffee or tea. *கொழுக்கு நிறைய தேனீர் கொடுத்தார்கள்.*

**கொழுகொழென்று** *koḻu-koḻeṉṟu,* வி.அ. (adv.) மிகுந்த சதைப்பற்றுடன்; chubby. *குழந்தை கொழுகொழுவென்று இருக்கிறது.*

*[கொழு + கொழு + என்று]*

**கொழுச்சி** *koḻucci,* பெ.(n.) 1. நாய்வேளை; dog mustard, *Cleome viscosa.* 2. கொழுஞ்சிச் செடி; zanzibar indigo, *Tephrosia Purpurea alias T.galegioides* (சா.அக.).

**கொழுத்த** *koḻutta,* பெ.அ.(adj.) வருமானம் முதலியவற்றில் மிகுந்த; பெருத்த; huge; big. *கொழுத்த ஊதியம், கொழுத்த வேட்டை.*

*[கொழு – கொழுத்த.]*

**கொழுத்தாடை** *koḻuttāḍai,* பெ.(n.) கரும்பின் நுனிப் பகுதி; head of a sugarcan stalk (செ.அக.).

*[கொழுந்து + ஆடை.]*

**கொழுந்தனார்** *kol̤undaṉār,* பெ.(n.) பொதுவாகக் கணவனின் உடன்பிறந்தான்; குறிப்பாகக் கணவனின் உடன் பிறந்தாருள் இளையவர்; generally husband's brother, especially husband's younger brother.

*[கொழுந்தன் + ஆர்.]*

**கொழுப்புள்ள** *kol̤uppul̤l̤a,* பெ.எ.(adj.) செழுமையான; corpulent (சா.அக.).

*[கொழுப்பு + உள்ள.]*

**கொழுப்பெடு-த்தல்** *kol̤u-p-peḍu-,* 4 செ.கு.வி.(v.i.) உடம்பின் கொழுப்பை நீக்கல்; removing the fat from body (சா.அக.).

*[கொழுப்பு + எடு-த்தல்.]*

**கொழுப்பேறு-தல்** *kol̤uppēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. உடம்பில் கொழுப்பு உண்டாதல்; becoming corpulent or growing excesively fat. 2. திமிர் கொள்ளல்; exhibiting the power of procreation. 3. மதர்த்தல்; becoming sexually excited. 4. உடம்பில் கொழுப்பு அதிகமாதல்; increase of bodily fat (சா.அக.).

*[கொழுப்பு + ஏறு-தல்.]*

**கொழும்புநாதல்** *kol̤umbu-nādal,* பெ.(n.) வெண்ணாவல்; whie jaumon, *Eugenia zeylanica* (சா.அக.).

*[கொழும்பு + நாவல்.]*

**கொழும்புமரம்** *kol̤umbu-maram,* பெ.(n.) பூ மரம்; Ceylon oak, hill trumpet flower or flowering fig, *Schlelchera trijuga alias S.Pubescens.*

**மறுவ.** கூம்பாதிரி, கொஞ்சி அல்லது பூவத்தி (சா.அக.).

*[கொழும்பு + மரம்.]*

**கொழுவு-தல்** *kol̤uvu-,* 5 செ.கு.வி.(v.i.) மாட்டுதல்; தொங்கவிடுதல் (இலங்.); hang something on something. *பையைத் தோளில் கொழுவிக் கொண்டு புறப்பட்டான்*

*[கொழு→கொழுவு→கொழுவு-தல்.]*

**கொள்கலன்** *kol̤kalaṉ,* பெ.(n.) சேமித்து வைக்கப் பயன்படுத்தும் ஏனம்; மாழையினால் செய்த தொட்டி; container for storing.

**கொள்ளைநோயாற்கிட-த்தல்** *kol̤l̤ai-nōyāṟ-kiḍa-,* 3 செ.கு.வி. (v.i.) வயிற்றுப் போக்கு, ஒவ்வாமை, அம்மை, காய்ச்சல் முதலிய நோயால் தாக்கப்பட்டு வருந்தல்; being attacked and afflicted with a pestilential disease as by cholera, small pox, influenza etc. (சா.அக.).

*[கொள்ளை + நோயால் + கிட-த்தல்.]*

**கொள்முதல்நிலை** *kol̤mudal-vilai,* பெ.(n.) பொருளை விற்பனை செய்வதற்காக வாங்கும்போது அதற்குக் கொடுக்கப்படும் விலை; வாங்கிய விலை; procurement price.

*[கொள் + முதல் + விலை.]*

**கொள்வரி** *kol̤-vari,* பெ.(n.) நெல்லாய வகை (தெ.கல்.தொ.4:195); a tax in kind (செ.அக.).

*[கொள் + வரி.]*

**கொள்ளம்பக்கனார்** *kol̤l̤am-pakkaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a poet, who belongs to the Śaṅgam age.

*[கொள்ளம்பாக்கன் + ஆர்.]*

கொள்ளம் என்பது ஒரு ஊர். நற்றிணை 147ஆம் பாடலில் பாக்கம் குறிஞ்சித் திணையைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கொள்ளாதநோய்கொள்ளல்** *kol̤l̤āda-nōy-kol̤l̤al,* 16 செ.கு.வி.(v.i.) 1. குணப்படுத்த முடியாத நோயால் பாதிக்கப்படல்; being seized with an incurable disease. 2. குட்டங் கொள்ளல்; being attacked wtih leprosy (சா.அக.).

*[கொள்ளாத + நோய் + கொள்ளு-தல்.]*

**கொள்ளிச்சட்டி** *kol̤l̤i-c-caṭṭi,* பெ.(n.)

இறந்தவரின் உடலிற்குத் தீ வைக்க எடுத்துச் செல்லும் கங்கு அல்லது எரியும் சுள்ளி வைத்த மண்சட்டி; pot containing live coal or burning sticks carried to the cremation ground for lighting the funeral pyre.

மறுவ. தீச்சட்டி

*[கொள்ளி + சட்டி.]*

**கொள்ளிப்பூடு** *kolli-p-pūdu,* பெ.(n.) புனுகு; civet (சா.அக.).

**கொள்ளிபோடு-தல்** *kolli-pōdu-,* 20 செ.கு.வி.(v.i.) இறந்தவரின் உடலிற்குத் தீ மூட்டுதல்; light a funeral pyre. *தாய்க்குத் தலைமகன் தான் கொள்ளி போட வேண்டும் (பே.வ.).*

*[கொள்ளி + போடு-தல்.]*

**கொள்ளுபானிதம்** *kollu-pāṉidam,* பெ.(n.) சூரிய காந்தி; sun flower, *Helianthus indicus* (சா.அக.).

*[கொள்ளு + பானிதம்.]*



**கொள்பொன்றி** *kolpoṉṟi,* பெ.(n.) தெய்வத் திருமேனிக்குக் காதணியாகச் சாத்தும் பொன் அணிகலன்; golden ear ornament worn for the metal idols. *"திருக்காதில் சாத்தும் கொள் பொற்றிநூல்" (தெ.கல்.தொ.5, கல்.644).*

*[கொள் + பொன்றி.]*

கொள்ளுச் செடியில் பூக்கும் பூப் போன்ற வடிவில் செய்யப் பெறும் காதணிப் பொற்பூ.

**கொளகொளென்று** *kola-koleṉṟu,* பெ.அ. (adj.) கெட்டித் தன்மை குறைந்து நெகிழ்ந்த நிலை; of fruits too soft or nearly rotten. *வெயிலில் பழங்கள் கொளகொள வென்று ஆகிவிட்டன.*

*[கொள + கொள + என்று.]*

**கொளிஞ்சி** *koliñji,* பெ.(n.) கொழுஞ்சிச் செடி; zanzibar indigo, *Tephrosia Purpurea alias T.galegioides* (சா.அக.).

**கொளுக்கட்டைத்தேக்கு** *kolukkaṭṭai-t-tēkku,* பெ. (n.) போதக நாறி மரம்; fire-brand teak, *Premna tomentosa* (சா.அக.).

*[கொளுக்கட்டை + தேக்கு.]*

**கொளுங்குவி** *koluṅguvi,* பெ.(n.) 1. வேலிப் பருத்தி; hedge cotton, *Dacmia extensa.* 2. பன்றி மொத்தை; pig root, *Trapa bisipinosa* (சா.அக.).

**கொளுஞ்சிநாரத்தை** *koluñji-nārattai,* பெ.(n.) கொழிஞ்சி நாரத்தை அதாவது தித்திப்பு நாரத்தை; sweet bigarade orange, *Citrus aurantium bigaradia* (சா.அக.).

*[கொளுஞ்சி + நாரத்தை.]*

**கொளுத்துவெயில்** *koluttu-veyil,* பெ.(n.) தீப் பற்றும் வெயில்; burning or scorching sun (சா.அக.).

*[கொளுத்து + வெயில்.]*

**கொற்றங்கொற்றனார்** *koṟṟaṅ-koṟṟaṉār,* பெ. (n.) கழகக் காலப் புலவர்; a Šaṅgam poet.

*[கொற்றன் + கொற்றன் + ஆர்.]*

வேளாண் மரபினர் நற்றிணை 54-வது பாடலைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கொற்றனார்** *koṟṟaṉār,* பெ.(n.) கழகக்

காலப் புலவர்; a poet who belongs to the Šaṅgamage.

*[கொல் (புதுமை, சிறப்பு) – கொற்றன்.]*

பெரும்பூதனார் என்பவரின் மகனான இவர் வணிகர் குலத்தவர். நற்றிணை 30–ம் பாடலும், குறுந்தொகையில் ஒன்றும், அகத்தில் ஒன்றும் என மூன்று பாடல்கள் இவர் பாடியவைகளாகக் கிடைத்துள்ளன (அபி.சிந்.).

**கொறகர்** *koṟagar,* பெ.(n.) தாழ்ந்த வகுப்பினர்; the lower caste people, base people.

*[குறவர் – கொறகர்.]*

இவர்கள் தென்கன்னடத்தில் வாழ்பவர்கள். காடுகளில் குடிசைகளில் வாழும் இவர்கள் கூடை. முறம் முதலியன கட்டிப் பிழைக்கின்றனர். இவர்களில் சிலர் உழவர்களுக்கு அடிமை செய்து வாழ்வர் (அபி.சிந்.).

**கொறட்டை** *koṟaṭṭai,* பெ.(n.) ஒரு செடி; a plant.

*[குறட்டை – கொறட்டை.]*

**கொறடா** *koṟaḍā,* பெ.(n.) குதிரைச் சவுக்கு; horsewhip, whip, scourge (செ.அக.).

**Port.** Corda, **I.** Koraḍā, **K.** Koraḍē, **M.**Koraṭā, **Tu.** Korḍe> **த.** கொறடா.

**கொறி** *koṟi,* பெ.(n.) 1. ஆடு; Sheep. 2. செம்மறியாடு; a short woolly sheep with twisted horns (சா.அக.).

*[குறி – கொறி.]*

**கொறுக்கைச்சி** *koṟukkaicci,* பெ.(n.) ஒரு வகைப் புல்; a kind of grass.

*[குறுக்கத்தி + கொறன்கச்சி.]*

**கொறுக்கைத்தாரி** *koṟukkai-t-tāri,* பெ.(n.) செங்கத்தாரி; false peacock foot tree, *Nicbuhria linearis* (சா.அக.)

*[கொறுக்கை + தாரி.]*

**கொன்றைக்கொழுந்து** *koṉṟai-k-koḻundu,* பெ.(n.) கடையில் விற்கும் கொன்னைத் தளிர்; cassia buds sold in the bazaar (சா.அக.).

*[கொன்றை + கொழுந்து.]*

**கொன்றையிலை** *koṉṟai-y-ilai,* பெ.(n.) கொன்றை மரத்தின் இலை; cassia flowers.

*[கொன்றை + இலை.]*

இதை கீரையாகச் சமைத்து சாப்பிடுவது உண்டு. இலையை அரைத்து வண்டு கடிக்குப் பூசலாம் (சா.அக.).

**கொன்றைவேய்ந்தன்** *koṉṟai-vēyndaṉ,* பெ.(n.) ஔவையார் இயற்றிய 'கொன்றை வேய்ந்த' என்று தொடங்கும் ஒரு நீதி நூல்; a short moral code in Tamil by Avvaiyar, commencing with Koṉṟaivēynda (செ.அக.).

*[கொன்றை + வேந்தன்.]*

**கொன்றைவேர்ப்பட்டை** *koṉṟai-vēr-p-paṭṭai,* பெ.(n.) கொன்றை வேரில் மேல் பட்டை; root bark of cassia (சா.அக.).

*[கொன்றை + வேர் + பட்டை.]*

**கோக்கம்** *kōkkam,* பெ.(n.) நெல்லி; Indian gooseberry, *Phyllanthus emblica* (சா.அக.).

**கோகநகம்** *kōga-nagam,* பெ.(n.) 1. செந்தாமரை; red lotus. 2. செவ்வாம்பல்; red Indian water-lily. 3. செந்தும்பை; a red variety of leucas (சா.அக.).

**கோகபந்தகம்** *kōga-pandagam,* பெ.(n.) சூரிய காந்தி; sun-flower (சா.அக.).

**கோகம்பளன்** *kōkambaḷaṉ,* பெ.(n.) நரி வயிற்றில் பிறந்த ஒரு முனிவன்; a saint who born in jackal's stomach (அபி.சிந்.).

**கோகருணை** *kō-karuṇai,* பெ.(n.) 1. பெருங் குரும்பை; the unripe fruit of palmyra. 2. எருக்கு; bow-string hemp, *Calotropis gigantea* (சா.அக.).

**கோகிலபட்சம்** *kōkila-paṭcam,* பெ.(n.) 1. கொம்மட்டி மாதுளை; melon lime, citrus medica-medica. 2. கொடி மாதுளை அல்லது துரிஞ்சி; lemon citron, *Citrus medica.* 3. நீர்முள்ளி; water thistle, *Hygrophila spinosa* (சா.அக.).

*[கோகில + பட்சம்.]*

**கோகிலாட்சம்** *kōgilāṭcam,* பெ.(n.) 1. நீர்முள்ளி பூடு வகை; white long-flowered nail dye, *Hygrophila spinosa.* 2. மரவகை (சிலப்ப.16, 25, உரை); citron, a tree, *Citrus medicamedica* (செ.அக.).

**கோகிலாமட்சம்** *kōkilā-maṭcam,* பெ.(n.) வெள்ளை நீர் முள்ளி; white flowered water thistle, *Hygrophila spinosa* (சா.அக.).

**கோகிலோற்சவம்** *kōgiilōṟcavam,* பெ.(n.) மாமரம் (மலை.) (குயிலுக்கு மகிழ்ச்சியை விளைப்பது); mango tree (lit., that which causes festivity to the koels (செ.அக.).

**கோகினி** *kōkiṇi,* பெ.(n.) வெட்பாலை; bitter oleander, *wrightia anti-dysenterica* (சா.அக.).

**கோகுலம்பால்** *kōkulam-pāl,* பெ.(n.) ஆவின் பால்; cow's milk (சா.அக.).

*[கோகுலம் + பால்.]*

**கோகுலாட்டமி** *kōgulāṣṭami,* பெ.(n.) கண்ணன் தோன்றிய ஆவணி மாதத்து எட்டாம் (கிருஷ்ணாஷ்டமி) நாள்; birthday of Šrikrṣṇā (செ.அக.).

**கோகோ** *kō-kō,* பெ.(n.) கோகோ விதை மரம்; chocolate tree, *Theobroma cacao.*

*[கோ + கோ.]*

இவ்விதை அண்ட வடிவாயும், கறுப்பாயும், தோல் உள்ளதாயும் இருக்கும். இது தேயிலை அல்லது குளம்பி (காப்பி)க் கொட்டையைப் போல் குணத்தை உடையது (சா.அக.).

**கோங்கன்** *kōṅgaṉ,* பெ.(n.) ஒரு மன்னன்; a king.

இவன் கோயம்புத்தூர் கருரை ஆண்டவன். இச்சேரனும், கோங்கனும் சேரன் குமரர்கள். தங்கள் நாட்டை இரு வகையாகப் பிரித்துக் கொண்டனர் (அபி.சிந்.).

**கோங்குவேளாளர்** *kōṅgu-vēḷāḷar,* பெ.(n.) வேளாளர்கள்; a kind of peasent's, whose origin is Koṅgu.

இவர்கள் கோங்கு நாட்டிலிருந்து வந்து தென்னாட்டில் பரவியவர்கள். வேளாளர் என்று சொல்லப்பட்டாலும் வேளாண் தன்மை சிறிதும் இல்லாதவர்கள். இவர்களது பழக்க வழக்கங்கள் பெரிதும் மாறுபட்டவை. கணவனுக்கு வயது வருமளவும், மணப்பெண் மாமனுடன் இருப்பது போன்ற சமூகத்திற்கு எதிரான நடைமுறைகள் இவர்களிடம் உண்டு (அபி.சிந்.).

**கோச்சிங்கப்பல்லவன்** *kōcciṅga-p-pallavaṉ,* பெ.(n.) சுந்தரர் காலத்தில் ஆட்சி புரிந்த பல்லவ மன்னன்; a Pallava king who is the contemporary of Sundarar a canonized Siva devotee (அபி.சிந்.).

**கோச்செங்கட்சோழநாயனார்** *kōcceṅgaṭcōḷanāyaṉār,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான சோழகுல அரசன் (பெரியபு.); the Chola king and canonized Šaiva saint, one of 63 (செ.அக.).

*[கோ + செங்கண் + சோழ + நாயனார்.]*

**கோச்செங்கணான்** *kōcceṅgaṉāṉ,* பெ.(n.) **கோச்செங்கட்சோழநாயனார்** பார்க்க; see *kōcceṅgaṭcōḷa-nāyaṉār.* *"செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில்" (திவ்.பெரியதி.6, 6, 1) (செ.அக.).*

*[கோ + செங்கண் + ஆன்.]*

**கோச்செங்குட்டுவன்** *kōc-ceṅguṭṭuvaṉ,* பெ.(n.) ஒரு சேர மன்னன்; a cērāking.

இவனைப் பரணர் பாடி உம்பற்

காட்டுவாரியையும், அவன் மகன் குட்டுவன் சேரலையும் பாடிப் பரிசில் பெற்றார் (அபி.சிந்.).

**கோச்சேரமான்யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை** *kōc-cēramāṉ-yāṉaikkaṭ-cēy-māndarañ-cēralirumpoṟai,* பெ. (n.) ஒரு சேர மன்னன்; a cēra king.

*[கோ + சேரமான் + யானை + கண் + சேய் + மாந்தரன் + சேரல் + இரும்பொறை.]*

கொல்லி மலைக்குத் தலைவன். சோழன் இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளியுடன் போர் செய்தவன். கூடலூர்கிழாரால் பாடப்பெற்றவன். ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்தான் (அபி.சிந்.).

**கோசஞ்சாரபூமி** *kōsañjārabūmi,* பெ.(n.) ஆவினங்களின் மேய்ச்சலுக்கென விடப்பட்ட நிலம்; land allotted for pasturage of cows, land left for granzing (செ.அக.).

*[கோ + Skt. சஞ்சாரபூமி.]*

**கோசணை** *kōšaṇai,* பெ.(n.) பேரொலி (பிங்.); roar, loud noise, tumult (செ.அக.).

**கோசமம்** *kōšamam,* பெ.(n.) சமைய லுக்குகந்த காய் காய்க்கும் பீர்க்கு எனும் கொடி வகை (மலை.); sponge gourd, strainer-vine, *Luffa acutangula* (செ.அக.).

**கோசமாகிகம்** *kōša-mākigam,* பெ.(n.) காடு (வன) மிரட்டி; forest fright ener, a kind of unknown creeper (சா.அக.).

*[கோச + மாகிகம்.]*

**கோசர்ப்பம்** *kō-šarppam,* பெ.(n.) பீர்க்கு; sponge gourd; luffa, *Cucumber acutangularis* (சா.அக.).

*[கோ + சர்ப்பம்.]*

**கோசரங்கம்** *kōšaraṅgam,* பெ.(n.) நாணல்; reed (சா.அக.).

**கோசரதசித்தா** *kōšarada-sittā,* பெ.(n.) தேவதாளி; a kind of luffa, *Luffa eschinata* (சா.அக.).

**கோசலத்தரசன்** *kōšalattarašaṉ,* பெ.(n.) ஒரு மன்னன்; a king.

*[கோசலம் + அத்து + அரசன்.]*

இவனது இயற்பெயர் தெரியவில்லை. பாஞ்சால மன்னன் இவன் மீது படையெடுத்து வந்து இவனை வென்றான். இவனின் மகள் வாசவதத்தையையும், பிற ஆயத்தாரையும் தன் மனைவிகளுக்குப் பணிப்பெண்ணாக்கினான். உதயணன் என்பவன் பாஞ்சாலத்தின் மேல் படையெடுத்து வென்று வாசவதத்தையை மணந்து, மற்றவர்களைத் தன் மனைவிகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தான் (அபி.சிந்.).

**கோசலவளநாடு** *kōšala-vaḷa-nāḍu,* பெ. (n.) ஒரு நாடு; a city.

இந்நாடு செல்வத்திலும், புகழிலும் சிறந்தது. இந்நாட்டிலுள்ளவர்கள் நடுவுநிலைமையிலும், பாத்திரமறிந்து கொடுத்தலினும் சிறந்தவர். இந்நாட்டு சித்திர வேலைக்காரர்கள் மிகவும் புகழ் பெற்றவர்கள் (அபி.சிந்.).

**கோசவதம்** *kōša-vatam,* பெ.(n.) ஒரு பூடு; a plant, *Cucumis utilissimus* (சா.அக.).

*[கோச + வதம்.]*

**கோசவம்** *kōšavam,* பெ.(n.) கோமேதம்; a precious stone, Onyx (சா.அக.).

**கோசன்** *kōšaṉ,* பெ.(n.) சீர்பந்த பாடாணம் எனும் பிறவி நஞ்சு வகை; a mineral poison (செ.அக.).

**கோசன்** *kōšaṉ,* பெ.(n.) ஞாயிறு குலத்து மன்னன்; king of sun dynasty.

இவன் விரல்களில் புழுச் சொரிந்து கொண்டு இருந்தது. ஒருநாள் அயோத்திக்கு அருகில் உள்ள ஞாயிறு நீர்த்துறையில் நீராடி புழு நீங்கித் தூய்மையடைந்தான் (அபி.சிந்.).

**கோசாலை** *kōšālai,* பெ.(n.) இறைவன் வழிபாட்டிற்குரிய பால் பெறுதற்குரிய கோயில்களில் வளர்க்கப் பெறும் ஆக்களுக் கமைந்த கொட்டி. இதனைச் சுரபிச் சாலை, ஆ(பசு) மடம் என்று கூறுவர்; cow stall maintained for the supply of milk to a temple.

*[கோ + சாலை.]*

*"திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் கோவிலுக்கும் பால் அமுது செய்தருளும், பாற் போனகப் பாலுக்கும் குலோத்துங்க சோழன் திருக்கோசாலை பிடையற்கு விட்ட பசு நானூற் றொருபதினால்" (தெ.கல்.தொ.8, கல்54)*

**கோசாதி** *kōšāti,* பெ.(n.) சுக்கு; dry ginger (சா.அக.).

**கோசி** *kōši,* பெ.(n.) விலாமிச்சை வேர்; the root of a fragrant grass (சா.அக.).

**கோசிகுவா** *kōši-kuvā,* பெ.(n.) கறி முன்னை; curry nelli, *Premna esculenta* (சா.அக.).

*[கோசி + குவா.]*

**கோசிலேவா-தல் (கோசிலேவருதல்)** *kō-šilēvā-,* 18 செ.கு.வி.(v.i.) காற்றின் போக்கிலே செல்லும்படி கப்பற்சுக்கானைத் திருப்புதல்; to manage the rudder so as to sail close to the wind (செ.அக.).

**கோசினி** *kōšiṇi,* பெ.(n.) மாமரம்; mango tree (சா.அக.).

**கோசுக்கீரை** *kōšu-k-kīrai,* பெ.(n.) செடிவகை (முட்டைக்கோசு); cabbage, *Brassica oleracea capitata* (செ.அக.).



**கோசுமலி** *kōšumali,* பெ.(n.) ஒருவகைப் பச்சடி; a relish made of pulse and other ingredients (செ.அக.).

**கோசுமாசு** *kōšu-māšu,* பெ.(n.) ஏமாற்று; juggling, deception, hoax (செ.அக.).

*[U.ghōlmāl> த. கோசுமாசு.]*

**கோட்கூச்சவ்வை** *kōṭ-kūccavvai,* பெ.(n.) ஒரு சிவபக்தை; a devotee of Siva.

இவளின் தந்தை சிவதேவசரணர். கோவில் திருப்பணி பொருட்டு வெளியூர் செல்ல நேரிட்டதால் இறைவனுக்குப் பால் உணவு அளிக்கும் பணி இவருக்கு வந்தது. இவரது பத்தியை மெச்சி இறைவன் உணவை உண்டு அருளினார். ஊர் திரும்பிய தந்தை மகள் வெறும் கலத்துடன் வருவது கண்டு சந்தேகிக்க, ஔவை இறைவனை உண்ண வேண்டினாள். தாமதமாவது கண்டு தந்தை ஔவையே குற்றம் செய்தாலென அடிக்க வர சிவன் ஔவையை மார்பில் அணைத்தார். இதனால் சிவனுக்குக் கொப்பிலிங்கமெனப் பெயர் உண்டாயிற்று (அபி.சிந்.).

**கோட்டச்சோதி** *kōṭṭa-c-cōti,* பெ.(n.) ஒளி மரம் (சோதி விருட்சம்); a tree luminous in the dark, found in thick forest (சா.அக.).

**கோட்டம்பலத்துத்துஞ்சியசேரமான்** *kōṭṭambalattu-t-tuñjiya-cēramāṉ,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்; the poet who belonged to the last Šangam age (அபி.சிந்.).

**கோட்டியூர்நல்லந்தையார்** *kōṭṭiyūr-nallandaiyār,* பெ. (n.) கடைக் கழகக்காலப் புலவர்; a poet, belonged to last Šangam era.

*[கோட்டியூர் + நல் + அந்தை + ஆர்.]*

இவர் நற்றிணை 211-ஆம் பாடலில் நெய்தற் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கோட்டுபுட்பம்** *kōṭṭu-puṭpam,* பெ.(n.) கல் தாமரை; dry lotus generally found grow in the crevices of rocks and mountains (சா.அக.).

*[கோட்டு + Skt. புட்பம்.]*

**கோட்டுவாத்தியம்** *kōṭṭu-vāttiyam,* பெ.(n.) தந்தியுள்ள இசைக் கருவி; a kind of stringed musical instrument (செ.அக.).



**கோட்டைவிடு-தல்** *kōṭṭai-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஏமாந்து தவறவிடுதல்; miss or lose something in a silly way. *பணத்தை இப்படிக் கோட்டைவிட்டு விட்டு வந்து நிற்கிறாயே?*

*[கோட்டை + விடு-தல்.]*

**கோட்புலியார்** *kōṭ-puliyār,* பெ.(n.) ஒரு சிவனடியார்; a devotee of Šivā.

*[கோள் + புலி + ஆர்.]*

சிங்கடிவனப்பகை என்னும் தன் இரண்டு பெண்களைச் சுந்தரருக்கு அடிமையாகக் கொடுத்தவர். இவர் கோட்புலி நாயனரினும் வேறுபட்டவர். ஏனெனில் இவரது வரலாற்றில் சுந்தரரைக் குறித்துச் சொல்லப்படவில்லை (அபி.சிந்.).

**கோடகாசுரன்** *kōḍagāšuran,* பெ.(n.) ஒரு அரக்கன்; a giant. *தேவரை வருத்திக் கொண்டிருந்த இவனை சிவன் சூலத்தால் கொன்றார் (அபி.சிந்.).*

**கோடர்** *kōḍar,* பெ.(n.) இருளர்; Irular community who are the inhabitants of hill.

*[கோடு (மலை) + அர்.]*

தோடர்களும் இவர்கள் வகுப்பைச் சார்ந்தவர்களே. தற்பொழுது நீலகிரி மலையில் வாழும் இவர்கள் முதலில் மைசூருக்கடுத்த கொல்லி மலையில் வாழ்ந்தனர். ஆவினை (பசுவை)க் கொலை செய்பவர்களாதலால் இப்பெயர் வந்ததென்பர். கோடகிரி, தொடநாடு முதலிய இடங்களிலுள்ள குடிசைகளில் வாழ்கின்றனர். தமிழும், கன்னடமும் கலந்து பேசும் இவர்கள் அழுகிய இறைச்சியாயினும் உண்பர் (அபி.சிந்.).

**கோடற்கிழங்கு** *kōḍaṟ-kilaṅgu,* பெ.(n.) வெண் காந்தற் கிழங்கு; a bulbous root grown in the summer season (சா.அக.).

*[கோடல் + கிழங்கு.]*

**கோடாகிழங்கு** *kōḍā-kilaṅgu,* பெ.(n.) கோரைக் கிழங்கு; fragrant tuber of *Cyperus rotundus* (செ.அக.).

**கோடாசலக்குளிகை** *kōḍāšala-k-kuḷigai,* பெ.(n.) வயிற்றுப் போக்கைக் கட்டும் மருந்து (பதார்த்த.1215); a medicinal pill for arresting diarrhoea (செ.அக.).

**கோடாசாலை** *kōḍā-šālai,* பெ.(n.) 1. கற்பூர வல்லி; country borage, *Coleus aromaticus alias C.amboynicus.* 2. ஒரு பூடு; a very small plant, *Juatica procumbens.* 3. ஒரு மூலி; a drug, *Rungia repens.* 4. ஆவாரை; tanner's senna, *Cassia auriculata.* 5. சதைக்கரண்டி; a plant that corrodes the skin (சா.அக.).

**கோடி** *kōḍi,* பெ.(n.) இறந்தவரின் உடல் மேல் இடும் அல்லது கைம்பெண்ணிற்குத் தரும் துணி; cloth spread over the dead body or given to the widow (க்ரியா.). *பெண்ணிற்கு பிறந்த வீட்டுக் கோடி போட வேண்டும்.*

*[கோடு – கோடி.]*

**கோடிக்காட்டு-தல்** *kōḍi-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வலியுறுத்திச் சுட்டிக் காட்டுதல்; underline, underscore. *இந்த*

*உடன்படிக்கையை எங்கள் கட்சி ஏற்கவில்லை என்பதைக் கோடிட்டுக் காட்டினோம்.*

*[கோடு + இட்டு + காட்டு-தல்.]*

**கோடிகாசியன்** *kōḍi-kāšiyaṉ,* பெ.(n.) ஒரு அரச குமரன்; a prince. *பாண்டவர்கள் காட்டில் வாழ்ந்த போது தனித்திருந்த பாஞ்சாலியைக் கண்டு ஆசை கொண்டவன் (அபி.சிந்.).*

**கோடிஞ்சிகா** *kōḍiñjigā,* பெ.(n.) கோழிப் பூண்டு; cock's comb, *Celosia cristata* (சா.அக.).

**கோடிமங்கலத்துவாதுளிநற்சேந்தனார்** *kōḍi-maṅgalattu-vātuḷi-naṟcēndaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்களில் ஒருவர்; the poet who belonged to the last Šaṅgamera.

*[கோடிமங்கலம்+ துவாதுளி + நல்+ சேந்தன்.]*

இவர் ஒரு பார்ப்பனர். கோடிமங்கலம் எனும் ஊரைச் சேர்ந்த இவரது பெயர் நற்சேந்தனார் (அபி.சிந்.). அகநானூறு 179, 232 ஆகிய பாடல்களைப் பாடியுள்ளார்.

**கோடீசுவரன்** *kōḍīsuvaraṉ,* பெ.(n.) சொத்தின் மதிப்பு கோடிக் கணக்கில் உள்ளன. மிகப் பெரும் பணக்காரன்; one who is fabulously rich billionaire.

*[கோடி + ஈசுவரன்.]*

**கோடீசுவரி** *kōḍīsuvari,* பெ.(n.) கோடீசுவரன் என்பதன் பெண்பால்; feminine of Koḍīšuvaraṉ.

*[கோடி + ஈசுவரி.]*

**கோடு**[1] *kōḍu,* பெ.(n.) ஒரு பரப்பில் ஒற்றை அளவில் நீளவாக்கில் இருக்கும் பதிவு; line; stripe. *தரையில் குச்சியால் கோடு கிழித்து விளையாட ஆரம்பித்தார்கள். கோடுபோட்ட சட்டை, அணிலின் முதுகில் மூன்று கோடுகள் இருக்கும்.* 2. தோலில் ஏற்படும் சுருக்கம்; wrinkle. *நெற்றியில் கோடு உள்ளது.*

*[கொடு – கோடு.]*

**கோடைவாசத்தலம்** *kōḍai-vāšattalam,* பெ.(n.) கோடை காலத்திலும் குளிர்ச்சியைத் தரும்படியான சூழலைக் கொண்டதாக அமைந்திருக்கும் இடம்; summer resort mostly a hill station.

*[கோடை + வாசத்தலம்.]*

பெரும்பாலும் மலைப்பகுதியில் அமைந்திருக்கும் இடம்.

**கோடைவாசனி** *kōḍai-vāšaṉi,* பெ.(n.) சிறு செருப்படை; a kind of plants.

அறுவடை செய்த வயலிலும், குளக் கரையிலும் படரும் பூண்டு. இதனால் சொறி, சிரங்கு, படை முதலிய நோய்கள் போகும் (சா.அக.).

**கோண்டகாமியம்** *kōṇḍa-kāmiyam,* பெ.(n.) மதி மயக்கிப் பூடு; a plant supposed to cause perplexity of mind when trampled upon (சா.அக.).

**கோணக்கழுத்து** *kōṇa-k-kaḻuttu,* பெ.(n.) 1. பிறவியில் அல்லது வலிப்பினால் வளைந்த கழுத்து; distorted neck either congenital or acquired from fits. 2. சாய்ந்த கழுத்து; wry neck (சா.அக.).

*[கோணல் + கழுத்து.]*

**கோணத்திசை** *kōṇa-t-tišai,* பெ.(n.) இரண்டு திசைகளுக்கு இடைப்பட்ட திசை; the point of the compass between the perpendicular directions.

*[கோணம் + திசை.]*

**கோணதிசை** *kōṇadišai,* பெ.(n.) மூலைத் திசை; intermediate directions between the cardinal points (செ.அக.).

**கோணம்** *kōṇam,* பெ.(n.) இரு கோடுகள் அல்லது இரு பரப்புகள் ஒன்றையொன்று சந்திக்கும் இடத்தில் உள்ள இடைவெளியின் கோண அளவு; angle. இந்தக் கட்டடத்தில் எத்தனைக் கோணங்கள் உள்ளன.

**கோணல்குணங்கல்** *kōṇal-kuṇaṅgal,* பெ.(n.) 1. வளைவு (பிங்.); wryness, obliquity, deflection. 2. கூன் (திவா.); hump, deformity. 3. மாறுபாடு (சூடா.); crookedness, as of mind. 4. மன வுளைச்சல்; uneasiness of mind (செ.அக.).

**கோணாசுவன்** *kōṇā-śuvaṉ,* பெ.(n.) யமன்; God of death (சா.அக.).

**கோணாதித்தியன்** *kōṇātittiyaṉ,* பெ.(n.) கதிரவன்; sun (அபி.சிந்.).

**கோத்திரகம்** *kōttiragam,* பெ.(n.) 1. தொட்டி பாடாணம்; a prepared arsenic. 2. கொடி முந்திரிகை; common grape. 3. நெட்டிப் புல்; sola pith grass, *Aeschynomens aspera.* 4. சிறு வரகு; kora millet; *paspalum scrobiculatum.* 5. மறு பிறப்புக்குக் காரணமான கருமம்; karma determining re-birth. 6. மலை; hill, mountain (சா.அக.).

*[கோணம் + திரகம்.]*

**கோத்திரலாகிகம்** *kōttira-lākigam,* பெ.(n.) முசுட்டை; clove-scented creeper, *Rivea hypocrateriformis* (சா.அக.).

**கோத்திரவம்** *kō-t-tiravam,* பெ.(n.) ஒருவகைத் தவசம் (தானியம்); common millet, *Paspalum scrobiculatum* (செ.அக.).

*[கோ + திரவம்.]*

**கோத்திரவிருட்சம்** *kōttira-viruṭcam,* பெ.(n.) முண்டக மரம்; an unknown tree (சா.அக.).

**கோத்து** *kōttu,* பெ.(n.) படைத்துறை தங்குமிடம்; cantonment (செ.அக.).

**கோதகி** *kōtagi,* பெ.(n.) ஒரு ஆறு; a river (அபி.சிந்.).

**கோதன்னம்** *kōdaṉṉam,* பெ.(n.) ஆவின் கன்று (பிங்.); calf (செ.அக.).

**கோதுமைமால்ட்** *kōtumai-mālt,* பெ.(n.) கோதுமையைத் தண்ணீரில் ஊறப் போட்டு முளைக்கும்படி வைத்து பிறகு எடுத்துலர்த்திய தவசம்; wheat-steeped in water till it germinates and then dried (சா.அக.).

மறுவ. முளைக்கோதுமை

*[கோதுமை + மால்ட். E. மால்ட் > த. குழ்.]*

**கோதுமைமாவு** *kōdumai-māvu,* பெ.(n.) கோதுமையை அரைத்த மாவு; flour obtained by grinding wheat in mills (சா.அக.).

*[கோதுமை + மாவு.]*

**கோதைமலை** *kōtai-malai,* பெ.(n.) சேரன் மலை; a hill of the cēra king.

*[கோதை + மலை.]*

**கோப்பி** *kōppi,* பெ.(n.) 1. திருமாலை வழிபடக் கூடிய ஒருசாரார் நெற்றியிலணிவதும், வெண்மை கலந்த மஞ்சள் நிறமுள்ளதுமாகிய ஒருவகைத் திருமண்; yellowish earth used by certain devotees of visnu for upright sectarian marks. 2. திருமால் பக்தர்களுள் ஒரு வகையினர் கோபி சந்தனத்தால் அணியும் நெற்றிக்குறி; single solid mark with Kōpi-śandaṉam worn by certain devotees of Tirumāl (செ.அக.).

**கோபங்கொண்டார்** *kōbaṅ-koṇḍār,* பெ.(n.) 1 உயரமாய் வளர்ந்த மரம்; any tree rising to a great height; any tall majestic tree. 2. ஒரு முள் மரம்; camel tree; camel thistle, *Echinops echinatus.*

**கோபத்திரம்** *kōpattiram,* பெ.(n.) தாமரை நூல் (மூ.அ.); fibre obtained from lotus stalk (செ.அக.).

**கோபத்திரை** *kōpattirai,* பெ.(n.) வாகை; sirissa, *Albizzia lebbek* (சா.அக.).

**கோபால்** *kō-pāl,* பெ.(n.) ஆவின் பால்; cow's milk (சா.அக.).

*[கோ (மாடு) + பால்.]*

**கோபாலகிருட்டிணதாசன்** *kōpāla-kiruṭṭiṇa-tāśaṉ,* பெ.(n.) ஒரு புலவன்; a poet.

இடையரான இவர் எம்பிரான் சதகம் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கோபாலதாபினி** *kōbaladābini*, பெ.(n.) **கோபாலதாபனம்** பார்க்க; see *kōbāladābanam* (செ.அக.).

**கோபாலதானம்** *kōbālatābanam*, பெ. (n.) நூற்றியெட்டு துணை நூல்க(உபநிடதங்க) ளுள் ஒன்று; an upanišād one of 108 (செ.அக.).

**கோபிகாகிதம்** *kōbi-kāgitam*, பெ.(n.) புன்னை; common poon or alexandiran laured, *Calophyllum inophyllum* (சா.அக.).

**கோபிதாகம்** *kōbi-tāgam*, பெ.(n.) தில்லை மரம்; tiger's milk spurge, *Excoecaria agallocha* (சா.அக.).

**கோபிநாதன்** *kōbi-nādan*, பெ.(n.) கண்ணன் (இடைச்சியர் நாயகன்); Kanna, as the Lord of herdwomen (செ.அக.).

*[கோபி + நாதன்.]*

**கோபிநாமம்** *kōbi-nāmam*, பெ.(n.) திருமால் பக்தர்களில் ஒரு வகையினர், வெண்மை கலந்த மஞ்சள் நிறமுள்ள திருமண்ணால் அணியும் நெற்றிக் குறி; yellowish earth used by certain devotees of Tirumal for upright sectarian marks (செ.அக.).

**கோபிபாலைவனம்** *kōpi-pālaivanam*, பெ.(n.) மத்திய ஆசியாவில் உள்ள பெரிய பாலைவனம்; big desert in central.

இதன் நடுவில் சாமு என்னும் மணல்வெளி உண்டு. இதை மணற்கடல் என்பர். இதன் நீளம் 1200 மைல், அகலம் 50 மைல் (அபி.சிந்.).

**கோபுத்தம்** *kō-puttam*, பெ.(n.) சமுத்திராப் பழம்; white Indian oak, *Barringtonia racemosa* (சா.அக.).

**கோபுரப்பூண்டு** *kōpura-p-pūndu*, பெ.(n.) அடுக்குப் பூடு; a kind of plant (சா.அக.).

*[கோபுரம் + பூண்டு.]*

**கோமரிமோதம்** *kōmari-mōdam*, பெ.(n.) ஓமம்; Omum plant, *Carum copticum or Sison ammi* (சா.அக.).

**கோமாட்சிகம்** *kō-māṭciam*, பெ.(n.) மாட்டு ஈ; gad fly; cattle fly, *Musca domestica* (சா.அக.).

*[கோ + மாட்சிகம்.]*

**கோமாமிசப்பட்சணி** *kō-māmiša-p-paṭcaṉi*, பெ.(n.) மாட்டின் இறைச்சியைத் தின்போன்; one who eats beef (சா.அக.).

*[கோ + மாமிச + பட்சணி.]*

**கோமியம்** *kōmiyam*, பெ.(n.) ஒன்பது (நவ.) வகை மணிகளுள் ஒன்று (சங்.அக.); sardonyx from the Himalayas and the Hindus, one of nava-maṇi (செ.அக.).

**கோமியவண்ணம்** *kōmiya-vaṇṇam*, பெ.(n.) ஆவின் சிறுநீரை நிறத்தை ஒத்த கல் அதாவது கோமேதகம்; one of the gems resembling the colour of cow's urine, *Cinnamon stone* (சா.அக.).

*[கோமியம் + வண்ணம்.]*

**கோமுகாசனம்** *kōmugāšanam*, பெ.(n.) கணுக்கால்களை இடுப்புச் சந்தில் சேர்க்கும் இருக்கை (ஆசன) வகை (ஆவின் முகம் போன்ற இருக்கை); a yogic posture which consists in crossing the ankles and placing them on the hip joints (செ.அக.).

**கோயில்கொள்(ளு)-தல்** *kōyil-kollu-*, 16 செ.கு.வி.(v.i.) வாழும் இடமாகக் கொள்ளுதல்; to take up abode in, inhabit. *"திருக்கடித் தானத்தைக் கோயில் கொண்டான்" (திவ். திருவாய்.8, 6, 5). (செ.அக.).*

*[கோயில் + கொள்.]*

**கோயில்பட்சி** *kō-y-il-paṭci*, பெ.(n.) 1. புறா; pigeon. 2. மயில்; pea-cock (சா.அக.).



[கோயில் + Skt. பட்சி.]

**கோயில்பெருச்சாளி** *kōyil-peruccāḷi,* பெ. (n.) பிறர் சொத்தை உடனிருந்து சிறிது சிறிதாகக் கவர்பவர்; an insider who is a swindler. *அவன் பொதுத்தொண்டு என்ற போர்வையில் திரியும் கோயில் பெருச்சாளி.*

*[கோயில் + பெருச்சாளி.]*

**கோயிற்பிரதிட்டை** *kōyiṟ-pidarittai,* பெ.(n.) 1. கோயில்களில் நிலைகோள் (பிரதிஷ்டை) மற்றும் தூய்மை (சுத்தி) செய்வதற்கும் உரிய நடப்பு குடமுழுக்கு; consecration of a temple causing the deity to take up its abode in the idol. 2. கிறித்தவக் கோயிலின் நிறுவனம் (தாபனம்); establishment of a church (செ.அக.).

*[கோயில் + Skt. பிரதிட்டை.]*

**கோர்த்த** *kōrtta,* பெ.அ.(adj.) மூளையைச் சேர்ந்த; pertaining to the large part of the brain, cerebral (சா.அக.).

**கோரக்கர்மரம்** *kōrakkar-maram,* பெ.(n.) ஆனைப் புளிய மரம்; பப்பரப் புளிய மரம், பூரி மரம், பப்பாரப் புளி, பெருக்க மரம்; elephant tamarind tree (சா.அக.).

**கோரங்காமிகம்** *kōraṅ-kāmigam,* பெ.(n.) நெல்லி; Indian gooseberry, *Phyllanthus emblica* (சா.அக.).

**கோரத்தூடம்** *kōra-t-tūḍam,* பெ.(n.) வரகு; Indian millet, *Panicum milianceum* (சா.அக.).

**கோரல்** *kōral,* பெ.(n.) ஆட்டிற்கும், மானிற்கும் ஒப்பான விலங்கு; an animal, similar to goat and deer.

*[குறள் – குரல் – கோரல்.]*

இது ஆட்டைப் போல் குறுகிய கொம்பை உடையது. இரண்டடி உயரமுள்ள இவை இமய மலையில் வாழ்கின்றன. (அபி.சிந்.).

**கோராகும்பார்** *kōrā-kumpār,* பெ.(n.) திருமால் அடியவர்; devotee of Lord Vishnu.

தோடாகியென்னும் ஊரில் மனைவி, குழந்தையுடன் வாழ்ந்து வந்தார். இடைவிடாது பெருமாளை எண்ணிக் கொண்டிருக்கும் இவர் ஓர் நாள் அறியாது தன் குழந்தையை மண்ணில் மிதித்துக் கொன்றார். இதனால் நடந்த சண்டையில் மனைவி தன்னைத் தீண்ட வேண்டா மென்றாள். மக்கட்பேறுக்காகத் தன் தங்கையை மணம் செய்து வைக்க அவளையும் இவர் தீண்டவில்லை. ஒரு நாள் இவர் அறியாது இரு மனைவியரும் அருகில் துயில, தூக்கத்தில் மனைவியர் மேல்பட்ட கரங்களை வெட்டி எறிந்தார். பின் பண்டரிக்குச் சென்று இறந்த குழந்தை யையும், கைகளையும் திரும்பப் பெற்று, பெருமாளின் ஆணையால் மனைவியருடன் களிப்புற்றிருந்தார் (அபி.சிந்.).

**கோராசுரன்**[1] *kōrāšuran,* பெ.(n.) ஒரு அரக்கன்; a giant.

கொக்கு வடிவம் கொண்டு பிள்ளையாரை விழுங்க வந்து, அவரால் இறந்தவன் (அபி.சிந்.).

**கோராசுரன்**[2] *kōrāšuran,* பெ. (n.) 1. சிவபெருமானால் கொல்லப்பட்ட அசுரன்; an asuran killed by Lord Šiva who was torturing Devas. 2. தேவர்களுக்குத் துன்பம் செய்து சிவனால் கொல்லப்பட்டவன்; (அபி.சிந்.).

**கோரான்** *kōrāḷ,* பெ.(n.) தேவ இனத்தவன்; belonging to celestial abode (அபி.சிந்.).

**கோரான்** *kōrāṉ,* பெ.(n.) சுளுந்து மரவகை; torch tree, *Ixora Parviflora* (செ.அக.).

**கோரைப்படாத** *kōrai-p-paḍāta,* பெ.எ. (adj.) மயிர் முளையாத; of hair not grown as on head; without hair generally said of the head of the fetus (சா.அக.).

*[கோரை + படாத.]*

**கோரைப்பல்** *kōrai-p-pal,* பெ.(n.) கடித்துத் துண்டாக்குவதற்கு ஏதுவாக மேல் தாடையிலும், கீழ் தாடையிலும் உள்ள கூரிய முனையை உடைய பல்; canine tooth

*[கோரை + பல்.]*

**கோரைப்பாசி** *kōrai-p-pāši,* பெ.(n.) பாசி வகை; a species of moss, *Sida humilis* (செ.அக.).

**கோரோசனம்** *kōrōšaṉam,* பெ.(n.) ஆவின் வயிற்றிலிருந்து எடுக்கப்படும் மஞ்சள் நிறமுள்ள நறுமணப் பொருள் (பதார்த்த. 1085); bezoar taken from the stomach of cows (செ.அக.).

மறுவ. ஆன்மணத்தி

**கோலக்கிருதம்**[1] *kōla-k-kirudam,* பெ.(n.) நில வேம்பு; ground neem, *Justicia Paniculata* (சா.அக.).

**கோலகசினி** *kōla-kašiṉi,* பெ.(n.) ஆனைத் திப்பிலி; elephant pepper, *Scindapsis officinalis.*

**கோலகசேபிகம்** *kōla-kašēbigam,* பெ.(n.) மாசிப் பச்சை; green black oak (சா.அக.).

**கோலமூலம்** *kōla-mūlam,* பெ.(n.) திப்பிலி வேர்; root of long pepper, *Piper longum* (சா.அக.).

**கோலாகலம்** *kōlā-kalam,* பெ. (n.) 1. சேதி நாட்டு மலை; hill in cēdi-nāḍu. 2. மத்திய இந்தியாவில் பண்டில்கண்டிலிருந்து மால்வாவைப் பிரிக்கும் மலை; a hill separating in Mālvā from Pandelkandi (அபி.சிந்.).

**கோலாசுரன்** *kōlāšuraṉ,* பெ.(n.) மலை மகளால் கொல்லப்பட்ட ஒரு அரக்கன்; a giant who killed by Malai-magaḷ the goddess of mountain (அபி.சிந்.).

**கோலாவதிதம்** *kōlā-vatidam,* பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; Indian Phyllanthus; niruri, *Phyllanthus niruri* (சா.அக.).

**கோலிகப்பறையன்** *kōliga-p-paṟaiyaṉ,* பெ. (n.) முரட்டுத் துணி நெய்யும் தொழிலாளர் குலத்தினன்; a division of the Pariah caste who weave coarse cloths (செ.அக.).

**கோலிம்** *kōlim,* பெ.(n.) கட்டுக் கொடி; a kind of creeper (சா.அக.).

**கோலியப்பறை** *kōliya-p-paṟai,* பெ.(n.) **கோலிகப்பறையன்** பார்க்க; see *kōliga-p-paṟaiyaṉ* (செ.அக.).

**கோவத்தன்** *kōvattaṉ,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்களில் ஒருவர்; one of the Šaṅgam poet (அபி.சிந்.).

இவர் குறுந்தொகையில் 46, 194 ஆகிய எண்ணுள்ள பாடல்களைப் பாடியவர்.

**கோவரக்கி** *kōvarakki,* பெ.(n.) வெண்வாகை; doon sirrissa tree, *Albezzia procera* (சா.அக.).

*[கோ + அரக்கி.]*

**கோவரங்கப்பதுமராகம்** *kōvaraṅga-p-padumarāgam,* பெ.(n.) பதுமபண் வகை (யாழ்.அக.); a kind of Padumarāgam (செ.அக.).

**கோவரம்** *kōvaram,* பெ.(n.) 1. சந்தனம்; sandalwood, *Santanum album.* 2. சின்ன முத்து; small pustules or measles (சா.அக.).

**கோவரிதகி** *kō-varitagi,* பெ.(n.) 1. வில்வம்; bael tree, Aegle marmelos. 2. பீர்க்கு; gourd plant, *Luffa foetida* (சா.அக.).

**கோவனார்** *kōvaṉār,* பெ.(n.) கடைக்கழகப் புலவர்; Šaṅgam poet (அபி.சிந்.).

*[கோவன் + ஆர்.]*

**கோவா** *kōvā,* பெ.(n.) ஒட்டு மாம்பழ வகை; a grafted mango (செ.அக.).

**கோவாக்கிழங்கு** *kōvā-k-kiḻaṅgu,* பெ.(n.) கோவா நாட்டு உருளைக் கிழங்கு; Goa potato or Goa yam (சா.அக.).

*[கோவா + கிழங்கு.]*

**கோவாதேவதாரு** *kōvā-tēvadāru,* பெ.(n.) கோவா நாட்டில் விளையும் தேவதாரு மரம்; Goa cedar tree; Goa cypress, *Cypresaus glauca* (சா.அக.).

*[கோவா + தேவதாரு.]*

**கோவாவவரை** *kōvā-v-avarai,* பெ.(n.) கோவா பீன்சு அல்லது முறுக்கவரை; square or goa bean, *Psophocarpus teragonolobus* (சா.அக.).

மறுவ. முருங்கை பீன்ஸ்

*[கோவா + அவரை.]*

**கோவிசயநிருபதுங்கவர்மன்** *kō-višaya-nirupatuṅga-varmaṉ,* பெ. (n.) காஞ்சி புரத்தை ஆட்சி புரிந்த பல்லவர்களில் ஒருவன்; one of the Pallavā king who ruled Kāñji-puram (அபி.சிந்.).

**கோவிசு** *kōvišu,* பெ.(n.) முட்டைக்கோசு; cabbage, *Brassica aleracea capitata* (செ.அக.).

**கோவிசுகீரை** *kōvišu-kīrai,* பெ.(n.) கோசு முட்டை; cabbage-domestic colewort, *Brassica oleracea* (சா.அக.).

*[கோவிசு + கீரை.]*

**கோவிந்தை** *kōvindai,* பெ. (n.) சீவக சிந்தாமணி பதுமுகன் மனைவி; wife of Padumugā in Šivaga-Šindāmaṇi (அபி.சிந்.).

**கோவிரதம்** *kōviradam,* பெ.(n.) விடத்தேர்; mint, Mentha crispa (சா.அக.).

**கோவிருடபம்** *kōviruṭabam,* பெ.(n.) எருது; bull (சா.அக.).

**கோவிலார்** *kōvilār,* பெ.(n.) கோவில் வேலை செய்வோர்; one who serve's temple.

*[கோவில் + ஆர்.]*

இவர்கள் பூணூல் அணிந்து தாங்கள் அமைத்த கோவிலில் தாங்களே பூசகராக இருப்பார்கள். கோவில் அடியார் எனவும் கூறப்படுவர். பெண்கள் கோவில் அம்மாமார் எனப்படுவர் (அபி.சிந்.).

**கோவென்று** *kōveṉṟu,* வி.எ. (adv.) வாய்விட்டுப் பலத்த சத்தத்துடன் அழுதல் முதலியன; bevailing. *கணவன் இறந்த செய்தியைக் கேட்டதும் கோவென்று அழுதாள்.*

*[கோ + என்று.]*

**கோவையவரை** *kōvai-y-avarai,* பெ.(n.) முறுக்குப் பீன்சு; goa bean (சா.அக.).

மறுவ. முருங்கை பீன்சு

*[கோவை + அவரை.]*

**கோழிக்கறி** *kōḻi-k-kaṟi,* பெ.(n.) கோழி இறைச்சி; fowl curry (சா.அக.).

*[கோழி + கறி.]*

**கோழிக்காலவரை** *kōḻi-k-kāl-avarai,* பெ.(n.) ஒரு வகை அவரை; a kind of bean so called from its resemblance to fowl's foot (சா.அக.).

*[கோழிக்கால் + அவரை.]*

**கோழிக்குடி** *kōḻi-k-kuḍi,* பெ.(n.) நெட்டி விலங்கு; Indian mast tree, *Polyathia longifolla* (சா.அக.).

*[கோழி + குடி.]*

**கோழிக்கூட்டுப்பழம்** *kōḻi-k-kūṭṭu-p-paḻam,* பெ. (n.) வாழைப் பழ வகை; a species of plantain, as from calicut (செ.அக.).

*[கோழி + கூட்டு + பழம்.]*

**கோழிக்கூடு** *kōḻi-c-cūḍu,* பெ.(n.) கரு நெல்லி; black-berried featherfoil, *Phyllanthus reticulatus* (சா.அக.).

*[கோழி + கூடு.]*

**கோழித்தூக்கம்** *kōḻi-t-tūkkam,* பெ.(n.) குறைந்த நேரமே தூங்கும் தூக்கம்; sleep for a very short time; nap, snooze catnap (க்ரியா.).

*[கோழி + தூக்கம்.]*

**கோழிப்பித்து** *kōḻi-p-pittu,* பெ.(n.) கோழியின் பித்தப் பை; the gall bladder of a fowl (சா.அக.).

*[கோழி + பித்து.]*

**கோழிப்பிராணன்** *kōḻi-p-pirāṇaṉ,* பெ.(n.) வலிமையற்றவ–ன்–ள்–து (கோழி போன்று உயிர் வன்மையற்ற உயிரி); weakling, as a cock (செ.அக.).

**கோழிப்புரை** *kōḻi-p-purai,* பெ.(n.) கோழிகளை அடைத்து வைக்கும் கூண்டு; enclosure for domestic fowls, esp. chicken; pen

மறுவ. கோழிமடம்

*[கோழி + புரை.]*

**கோழிமுட்டைக்கரண்டி** *kōḻi-muṭṭai-k-karaṇḍi,* பெ.(n.) கோழி முட்டை பதியும் அளவு குழியாகச் செய்த கரண்டி; a spoon made hollow so as to hold an egg in it, Egg-spoon (சா.அக.).

*[கோழி + முட்டை + கரண்டி.]*

**கோழிமுட்டைக்கரு** *kōḻi-muṭṭai-k-karu,* பெ.(n.) கோழி முட்டையின் வெள்ளை அல்லது மஞ்சள் கரு; the white or the yellow part of the fowl's egg (சா.அக.).

*[கோழி + முட்டை + கரு.]*

**கோழிமுட்டையகப்பை** *kōḻi-muṭṭai-y-agappai,* பெ.(n.) கோழி முட்டை பதியும் படிக்குப் பள்ளமாகச் செய்த ஓர் அகப்பை; a ladele so shaped as to hild an egg in it (சா.அக.).

*[கோழி + முட்டை + அகப்பை.]*

**கோழியண்டம்** *kōḻi-y-aṇḍam,* பெ.(n.) கோழி முட்டை; fowl's egg (சா.அக.).

*[கோழி + அண்டம்.]*

**கோழியிரத்தமரப்பொடி** *kōḻi-y-iratta-mara-p-poḍi,* பெ.(n.) செம்மரத் தூள்; red saw-dust of red wood (சா.அக.).

*[கோழி + அரத்தம் + மரம் + பொடி.]*

**கோழியுறக்கம்** *kōḻi-y-uṟakkam,* பெ.(n.) கோழியைப் போல் அடிக்கடி உறக்கம் கொண்டெழும் தூக்கம்; light sleep enabling one to wake up frequently like a cock even on slight disturbances (சா.அக.).

*[கோழி + உறக்கம்.]*

**கோழியெச்சம்** *kōḻi-y-eccam,* பெ.(n.) கோழிப்பீ; fowl's dudng (சா.அக.).

*[கோழி + எச்சம்.]*

**கோழியென்றமூலி** *kōḻi-y-eṉṟa-mūli,* பெ.(n.) 1. வாளவரை; sword bean, *Canavalia ensiformis.* 2. பெருங்கோழி யவரை; West Indian sea-side bean, *Canavalia obtusifolia* (சா.அக.).

**கோழிரசம்** *kōḻi-rašam,* பெ.(n.) கோழி வெஞ்சாறு; fowl's soup; cock or hen soup (சா.அக.).

**கோழிவெண்காரம்** *kōḻi-veṇ-kāram,* பெ.(n.) கோழியின் வெண்ணிறமான பீ; fowl's dung of a white colour (சா.அக.).

*[கோழி + வெண் + காரம்.]*

**கோழைக்கட்டுவிழு–தல்** *kōḻai-k-kaṭṭu-viḻu-,* 2 செ.கு.வி.(v.i.) நெஞ்சில் கட்டிய கபம் வெளிப்படுதல்; discharge of phlegm ocllected in the chest (சா.அக.).

*[கோழை + கட்டு + விழு–தல்.]*

**கோழைக்குத்து** *kōḻai-k-kuttu,* பெ.(n.) கோழையால் ஏற்படும் குத்தல் நோய்; acute pain due to accumulation of phlegm in the chest (சா.அக.).

*[கோழை + குத்து.]*

**கோழைகாசம்** *kōḻai-kāšam,* பெ.(n.) ஈளை; humid asthma (சா.அக.).

*[கோழை + Skt. காசம்.]*

**கோழைகோழையாய்விழு-தல்** *kōḻai-kōḻaiyā-y-viḻu-,* செ.கு.வி. (v.i.) மார்பினின்று கபம் வெளிவரல்; issuing of thick phlegm in lumps (சா.அக.).

*[கோழை + கோழையாய் + விழு-தல்.]*

**கோழைநீர்** *kōḻai-nīr,* பெ.(n.) கப நீர்; sputum (சா.அக.).

*[கோழை + நீர்.]*

**கோழைநெஞ்சு** *kōḻai-neñju,* பெ.(n.) 1. கோழை கட்டிய நெஞ்சு; phlegm in the chest; chest accumulated with phlegm. 2. வலிமையற்ற மனம்; timid mind chicked hearted. 3. இளகிய மனம்; sympathetic mind (சா.அக.).

*[கோழை + நெஞ்சு.]*

**கோழைநோய்** *kōḻai-nōy,* பெ.(n.) 1. கோழையால் ஏற்படும் நோய்கள்; phlegmatic diseases. 2. ஈளை; asthma (சா.அக.).

*[கோழை + நோய்.]*

**கோழைமொழிமூர்க்கன்** *kōḻai-moḻi-mūrkkaṉ,* பெ.(n.) தவளை; frog (சா.அக.).

*[கோழை + மொழி + மூர்க்கன்.]*

**கோழையகற்றுதல்** *kōḻai-y-agaṟṟudal,* தொ.பெ.(vbl.n.) கோழையைப் போக்கல்; dephlegmating; removing phlegm (சா.அக.).

*[கோழை + அகற்று-தல்.]*

**கோழையடைப்பு** *kōḻai-y-aḍaippu,* பெ.(n.) நெஞ்சுக் கோழை திரண்டு மூச்சு விடக் கூடாதபடித் தொண்டையை அடைத்தல்; obstruction of respiration due to collections of mucus and phlegm in the passage of throat (சா.அக.).

*[கோழை + அடைப்பு.]*

**கோழையிளக்கி** *kōḻai-y-iḷakki,* பெ.(n.) நெஞ்சில் தங்கி நிற்கும் கோழையை இளக்கும் மருந்து; any drug or medicine rendering the phlegm loose and watery (சா.அக.).

*[கோழை + இளக்கி.]*

மலமிளக்கி என்ற மருந்துப் பொருளைப் போன்று கோழையை இளக்குவதால் இப்பெயர் பெற்றென போலும்.

**கோள்திவசம்** *kōḷ-tivašam,* பெ.(n.) ஒன்பது நாள்; nine days (சா.அக.).

**கோள்பிராது** *kōḷ-pirādu,* பெ.(n.) குறளை கூறுகை; tale bearing (செ.அக.).

மறுவ. கோட்சொல்லுகை

**கோள்மூட்டு-தல்** *kōḷ-mūṭṭu-,* செ.கு.வி. (v.i.) ஒருவரைப் பற்றித் தவறாக மற்றவரிடம் கூறுதல்; இருவரிடைய மனத்தாங்கல் ஏற்படும்படிச் செய்தல்; tell tale against some one. *நீ என்னைப் பற்றி அவனிடம் கோள் மூட்டினாய்?.*

*[கோள் + மூட்டு-தல்.]*

**கோளகசிரிடம்** *kōḷaga-ciriḍam,* பெ.(n.) மாசி பத்திரி; Indian worm-wood, *Artemesia vulgaris* (சா.அக.).

**கோளகாயம்** *kōḷa-kāyam,* பெ.(n.) எழுத்தாணியைப் போல் பூக்களை உடைய ஒரு வகைச் செடி; style plant, *Launea pinnatifida alias Lactuca sarmentosa alias Microhynchus sarmentosus alias Prenanthes sarmentosa* (சா.அக.).

**கோளசாத்திரம்** *kōḷa-šāttiram,* பெ.(n.) உடம்பில் உள்ள கோளங்களைப் பற்றிய நூல்; a treatise on the glandular swelling on any part of the body (சா.அக.).

*[கோளம் + சாத்திரம்.]*

**கோளத்திற்குரிய** *kōḷattiṟkuriya,* பெ.எ. (adj.) கோளத் தொடர்புடைய; relating to a gland, *Adenic* (சா.அக.).

*[கோளத்திற்கு + உரிய.]*

**கோளத்தைப்போன்ற** *kōḷattai-p-pōṉṟa,* பெ.அ.(adj.) கோள வடிவமுள்ள; of the shape of a gland; gland like, *Adeniform* (சா.அக.).

**கோளரங்கம்** *kōḷaraṅgam,* பெ.(n.)

கோள்கள், விண்மீன்கள் முதலியன எவ்வாறு வானில் அமைந்துள்ளன என்பதை விளக்கும் வகையில் உருவாக்கப்பட்ட காட்சியகம்; planetarium.

*[கோள் + அரங்கம்.]*

**கோளவீக்கம்** *kōḷa-vīkkam,* பெ.(n.) கோளத்திற்குக் காணும் வீக்கம்; glandular swelling or enlargement of the gland (சா.அக.).

*[கோளம் + வீக்கம்]*

**கோளாங்கட்டி** *kōḷāṅ-kaṭṭi,* பெ.(n.) ஒரு வகை மண் கட்டி; a mineral compound of silicate found in a lump (சா.அக.).

*[கோளாம் + கட்டி.]*

**கோளிகம்** *kōḷigam,* பெ.(n.) 1. திப்பிலி; long pepper. 2. அத்திமரம்; fig tree (சா.அக.).

**கோளிப்பாசம்** *kōḷi-p-pāšam,* பெ.(n.) பெருங் குறிஞ்சா; scammony swallow wort, *Secamone emetica* (சா.அக.).

*[கோளி + பாசம்.]*

**கோளியால்** *kōḷi-y-āl,* பெ.(n.) ஒரு வகை ஆல்; large-leaved yellow fig, *Ficus callosa* (சா.அக.).

*[கோளி + ஆல்.]*

**கோளியூர்கிழார்மகனார்செழியனார்** *kōḷiyūr-maganār-ceḻiyanār,* பெ.(n.) புலவர்; a poet who belongs to Šaṅgam era.

இவர் வேளாண் குடியினர். நற்றிணை 383ஆம் பாடலைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கோற்பூச்சி** *kōṟ-pūcci,* பெ.(n.) உடம்பினுள்ளே வாழும் அங்கக்கோற் பூச்சி; a round worm found inside the body (சா.அக.).

*[கோல் + பூச்சி.]*

**கோறடம்** *kōṟaḍam,* பெ.(n.) எட்டி மரம்; drug bane; Indian oison tree, *Strychnos nuxvomica*.

*[கோறு – கோறடம்.]*

இது சம உயரம் உள்ளது. இலைகள் மென்மையாயும், பளபளப்பாயும் இருக்கும். 3 முதல் 5 நரம்புகள் மத்தியில் ஓடும். பூக்கள் சிறியவை, வெளிர் பச்சை. திருவனந்தபுரம், கொரநாடு முதலிய இடங்களில் வளரும். காடுகளில் அதிகம் காணப்படும். அடிமரம் குட்டையாகவும், சிறிது வளைந்தும் இருக்கும். கிளைகளில் பட்டை சாம்பல் நிறமாயும், கட்டை கசப்பாயும் இருக்கும் (சா.அக.).



**கோறித்தல்** *kōṟi-t-tal,* பெ.(n.) நில வேம்பு; ground neem tree, *Andrographis paniculata* (சா.அக.).

**கோறைப்படு-த்தல்** *kōṟai-p-paḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வழுவுண்ணல்; sustaining an abrasion or scratch. 2. குழி உண்டாதல்; becoming hollow; forming a cavity (சா.அக.).

*[கோறை + படு-த்தல்.]*

**கோனாட்டுஎறிச்சலூர்மாடலன்மதுரைக் குமரனார்** *kōṉāṭṭu-eṟiccilūr-māḍalaṉ-madurai-k-kumaraṉār,* பெ.(n.) கடைக் கழகப் புலவர்; a poet of sangam age.

சேரமன் குட்டுவன்கோதை முதலியோரைப் பாடியுள்ளார் (அபி.சிந்.).

**கோனார்** *kōṉār,* பெ.(n.) இடையரில் ஒரு வகையர்; sect of people in herdimen community.

மறுவ. கோவலர்.

*[கோ- கோன் + ஆர்.]*

**கோனி** *kōṉi,* பெ.(n.) பூவாது காய்க்கும் மரம்; a tree bearing fruit without showing flowers (சா.அக.).

*[கோலி – கோனி.]*

**கோனியக்கனி** *kōṉiya-k-kaṉi,* பெ.(n.) கோனிப் பூண்டின் பழம்; hemlock fruit (சா.அக.).

*[கோனி + அம் + கனி.]*

**கோனிற்கொடி** *kōṉiṟ-koḍi,* பெ.(n.) கொடிப்புன்கு; hog - creeper, *Derris scandens* (சா.அக.).

*[கோனில் + கொடி.]*

**கோனைவேல்** *kōṉai-vēl,* பெ.(n.) ஒரு வகை வேல்; crooked acacia (சா.அக.).

*[கோனை + வேல்.]*

**கோட்டம்** *kōṭṭam,* பெ.(n.) 1. ஒரு வகை நறுமணச் செடி; costus shrub, *Saussurea lappa.* 2. ஒரு வகைச் செடி; arabian costum, *Costus speciosus.* 3. நறுமணப் பொருளின் ஒரு வகை; putchock (செ.அக.).

**கௌச்சிகர்** *kauccigar,* பெ.(n.) ஒரு முனிவர்; a saint.

இவர் திருமாலை எண்ணி தவம் செய்தார். விருத்தை என்பவளை மணந்து மிருகண்டுவைப் பெற்றனர் (அபி.சிந்.).

**கௌசல்யன்** *kauśalyaṉ,* பெ.(n.) தட்சிண கோசலத்தின் மன்னன்; king of *taṭcina-kōśalam* (அபி.சிந்.).

**கௌசலன்** *kauśalaṉ,* பெ.(n.) மன்னன் அம்சத்துவசன் குமரன்; son of a king amśattuvaśavaṉ.

இவன் கன்னிகாரக்காட்டிற்கு வேட்டைக்குச் சென்று அங்கு ஒரு பொன்மானைக் கண்டு பின்தொடர, அம்மான் மறைந்தது. அவ்விடம் சிறப்பான இடமென்று எண்ணிச் சிவபூசனை செய்தான் (அபி.சிந்.).

**கௌசலை** *kauśalai,* பெ.(n.) 1. யயாதியின் மகனான பூருவின் மனைவி; wife of Pūru. 2. வீமராசன் மகள்; daughter of Vīma-rāśaṉ. 3. மன்னன் மீளியின் மனைவி; wife of a king miḷi (அபி.சிந்.).

**கௌசிகதாரி** *kauśigatāri,* பெ.(n.) குங்கிலியம்; Indian dammer, *Shorea robusta* (சா.அக.).

*[கௌசிக + தாரி.]*

**கௌசிகை** *kauśigai,* பெ.(n.) விசுவாமித்திரரின் தமக்கை; sister of Viśuvāmitirar.

**கௌசிபல்** *kauśi-pal,* பெ.(n.) தென்னை மரம்; coconut tree (சா.அக.).

*[கௌசி + பல்.]*

**கௌஞ்சிகன்** *kauñjigaṉ,* பெ.(n.) பொன் வினைஞன் (யாழ்.அக.); goldsmith (செ.அக.).

**கௌடதம்** *kauḍatam,* பெ. (n.) 1. வெள்ளுள்ளி; garlic. 2. வெட்பாலை; tellicherry bark, *Nerium antidysentericum* (சா.அக.).

**கௌதமநாடி** *kautama-nāḍi,* பெ. (n.) கௌதமரால் தமிழில் செய்யப்பட்ட ஒரு கணிய நூல்; a work an astrology written by sage *kowtama* (சா.அக.).

*[கௌதம + நாடி.]*

**கௌரியச்சம்** *kauri-y-accam,* பெ.(n.) ஒரு பூடு; an unknown plant (சா.அக.).

*[கௌரி + அச்சம்.]*

